தமிழ் تاميلي

# திருமறை அல் குர்ஆனின் இறுதி மூன்று ஜுஸ்உ களுக்கான (தப்ஸீர்) விளக்கம்

இதனுள் ஒவ்வொரு முஸ்லிமுக்கும்

அவசியமான சட்டங்கள் உள்ளடங்கியுள்ளன

www.tafseer.info

திருமறை அல் குர்ஆனின் இறுதி மூன்று ஜுஸ்உ களுக்கான (தப்ஸீர்) விளக்கம்



1012702 - 103033

ISBN : 978-9960-9420-9-4

# تَفسِيرُ العُشرِ الأَخِيرِ

## من القرآن الكريم

# முன்னுரை

بسم الله الرحمن الرحيم

சர்வ புகழும் அல்லாஹ்வுக்கே. ஸலவாத்தும் ஸலாமும் எங்கள் தலைவரும் அன்புக்குரியவருமான அல்லாஹ்வின் தூதர்மீது உண்டவாதாக.

**இஸ்லாமிய சகோதர, சகோதரிகளே! (அல்லாஹ் உங்களுக்கு அருள்புரிவானாக!) நான்கு சட்டங்களைக் கற்றுக்கொள்வது எமது கடமையாகும்.**

❶ **அறிவு.** அதாவது அல்லாஹ்வையும் அவனது நபியையும் இஸ்லாம் மார்க்கத்தையும் அறிவதாகும். அறிவின்றி அல்லாஹ்வை வணங்கக் கூடாது. அவ்வாறு செய்வது வழிகேட்டிலே சேர்த்துவிடும். அது கிறிஸ்தவர்களின் செயலுக்கு ஒப்பானதாகும்.

❷ **அமல்.** யார் அறிந்து அமல் செய்யவில்லையோ அவர் யூதர்களுக்கு ஒப்பாகிவிட்டார். ஏனென்றால் அவர்கள் அறிந்த படி அமல் செய்யவில்லை. அறிவைப் படிக்காதவன் அல்லாஹ்விடத்தில் மன்னிக்கப்பட்டவன் என்ற நம்பிக்கையையூட்டி மனிதனை அறிவைப் படிப்பதை விட்டும் தூரப்படுத்துவது சைத்தானின் தந்திரங்களில் ஒன்றாகும். எவருக்கு அறிவைப் படிக்க சந்தர்ப்பம் இருந்தும் படிக்கவில்லையோ அவர் குற்றவாளியாவார். நூஹ் நபியின் கூட்டத்தினரின் தந்திரம் அவ்வாறே இருந்தது. குற்றத்திலிருந்து தப்புவதற்காக அவர்கள் தங்கள் விரல்களை தங்கள் காதுகளில் போட்டுக்கொண்டு தங்கள் பிடவைகளால் தங்கள் முகத்தை மூடிக்கொண்டனர்.

❸ **அழைப்புவிடுத்தல்.** மார்க்க அறிஞர்களும் அழைப்பாளர்களும் நபிமார்களின் வாரிசுகளே. அல்லாஹ் இஸ்ரவேலர்களை சபித்தான். ஏனென்றால் அவர்கள் “அவர்கள் செய்யும் பாவங்களை விட்டும் ஒருவருக்கொருவர் தடுக்காதவர்களாக இருந்தார்கள். அவர்கள் செய்யக்கூடியதாக இருந்தவை கெட்டதாகும்” அழைப்புவிடுப்பதும் கற்றுக்கொடுப்பதும் பர்ளு கிபாயாவாகும். போதியளவு பகுதியினர் அதைச் செய்தால் யாரும் பாவியாகமாட்டார்கள். அனைவரும் விட்டுவிட்டால் அனைவரும் பாவியாவர்.

❹ **அறிவைத்தேடுவதிலும் அமல் செய்வதிலும் அழைப்புவிடுப்பதிலும் ஏற்படும் கஷ்டங்களைப் பொருத்துக்கொள்ளல்.**

அறியாமையை அகற்றுவதில் பங்கேற்பதற்காகவும், கடமையான அறிவைத் தேடுவதை இலகுபடுத்துவதற்காகவும் சுருக்கமான இந்த நூலில் குர்ஆனின் கடைசி மூன்று ஜுஸ்உகளின் விளக்கத்துடன் மார்க்க அறிவின் முக்கியமாக பகுதிகளை ஒன்று சேர்த்துள்ளோம். முடிந்தளவு சுருக்கமாக இருக்கவேண்டும் என்பதையும், ஹதீஸ்கள் ஸஹீஹானதாக இருக்கவேண்டும் என்பதையும் கவனத்தில் கொண்டுள்ளோம். நாம் பூரணத்துவத்தை அடைந்துள்ளோம் என வாதிடவில்லை. ஏனென்றால் அது அல்லாஹ்வுக்கு மாத்திரம் உரியதாகும். ஆனாலும் இது ஒரு தாழ்மையான முயற்சியாகும். சரியானவை அல்லாஹ்விடமிருந்துள்ளவையாகும். தவறுகள் எங்களிடமிருந்தும் சைத்தானிடமிருந்தும் உள்ளதாகும். அல்லாஹ்வும் அவனது தூதரும் அவற்றை விட்டும் நிரபராதியாகும். நேர்மையான விமர்சனத்தின் மூலம் எங்கள் குறைகளைச் சுட்டிக்காட்டியவர்களுக்கு அல்லாஹ் அருள்புரிவானாக!

இதனைத் தயாரிப்பதிலும், மொழிபெயர்ப்பதிலும், அச்சிடுவிதிலும், விநியோகிப்பதிலும், வாசிப்பதிலும், கற்றுக்கொடுப்பதிலும் பங்கேற்ற அனைவருக்கும் அல்லாஹ் நற்கூலி கொடுப்பானாக. அவர்களது முயற்சியை அங்கீகரிப்பானாக. அவர்களது கூலியைப் பண்மடங்காக்குவானாக. அல்லாஹ்வே மிகவும் அறிந்தவன். ஸலவாத்தும் ஸலாமும் எங்கள் தலைவரும் அன்புக்குரியவருமான அல்லாஹ்வின் தூதர்மீது உண்டவாதாக.


| | | |
|---|---|---|
| | w w w . t a f s e e r . i n f o | |
| | tam@tafseer.info | |


• வஸிய்யத் செய்யப்படவேண்டிய ஒரு பொருள் ஒரு முஸ்லிமிடம் இருந்து அவர் அதற்கான வஸிய்யத்தை எழுதி வைக்காமல் மூன்று இரவுகள் தாமதிப்பது நல்லதல்ல“ (முஸ்லிம்)

இப்னு உமர் (ரலி) அவர்கள் இந்நபிஅமாழியை அறிவித்து விட்டு பினவருமாறு கூறுகிறார்கள் “ இறைதூதர் இதனைச் சொன்னதைக் கேட்டதிலிருந்து எனது வஸிய்யத்தை எழுதி வைக்காமல் நான் ஒரு இரவையேனும் கழித்ததில்லை “

• இமாம் அஹ்மத் இப்னுஹன்பல் (ரலி) கூறுகிறார்கள“ நான் எழுதிய ஒவ்வொரு நபிமொழியையும் நான் அமுல் படுத்தாமல் விட்டதில்லை , ஒருமுறை நபியவர்கள் இரத்தத்தை இழுத்து வெளியே எடுத்துவிட்டு(இரத்த ஓட்டத்தை அதிகரிப்பதற்காகச் செய்யப்படும் ஒரு சிகிச்சை முறை), அந்த சிகிச்சையை அளித்த அபூ தய்பா என்பவருக்கு ஒரு தங்கக்காசு கொடுத்தார்கள் எனப் படித்தேன் ,ஆதலால் என்னிடம் இரத்தம் எடுத்தவருக்கு நானும் ஒரு தங்கக் காசு கொடுத்தேன்“

• இமாம் புஹாரி (ரலி) அவர்கள் சொல்கின்றார்கள் “ புறம் பேசுவது கூடாது என அறிந்ததிலிருந்து நான் யாரைப் பற்றியும் புறம் பேசியது கிடையாது , மறுமை நாளில் ஒருவரும் அவரைப் பற்றி நான் புறம் பேசியதாக முறையிடாத நிலையில் நான் அல்லாஹ்வை சந்திப்பேன் என எதிர்ப்பார்க்கின்றேன” .

• “ஒவ்வொரு தொழுகையின் பின்பும் எவரேனும் ஆயதுல் குர்ஸியை ஓதி வந்தால் அவர் சுவனம் புகுவதற்கு மரணத்தைத் தவிர வேறு எந்தவொரு தடையும் கிடையாது இது ஒரு நபிமொழியாகும் , “ மறதி அல்லது அதுபோன்றதன் காரணமாகவே அன்றி நான் இதை எந்தவொருதொழுகையின் பின்பும் செய்யாமல் விட்டது கிடையாது “ என இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) கூறியதாக தனக்கு செய்தி கிடைத்ததாக இப்னு கைய்யிம் (ரஹ்) அவர்கள் தெரிவிக்கின்றார்கள் .

• அறிவைப்படித்து அதன்படி நடந்தபின் மற்றுமொரு கடமை இருக்கின்றது , அதுவே அல்லாஹ் உங்களுக்குத் தந்த பாக்கியமாகிய அந்த அறிவின் பால் மற்றவர்களை அழைக்கும் பணியாகும் . இதன் மூலம் உங்களுக்குக் கூலியும் மற்றவர்களுக்கு நற்பாக்கியமும் கிடைக்கும் சந்தர்ப்பத்தை நீங்கள் வீணாக்கி விடக்கூடாது .

பின்வரும் நபிமொழிகளைக் கவனியுங்கள் ,

• எவரேனும் ஒரு நல்ல விடயத்தை (மற்றவருக்கு) அறிவித்துக் கொடுத்தால் ( அதன் காரணமாக) அதனை செய்பவருக்குக் கிடைக்கும் கூலியைப் போன்று அவருக்கும் கிடைக்கும் .(முஸ்லிம்)

• உங்களில் சிறந்தவர் அலகுர்ஆனைக் கற்று பிறருக்கும் அதனைக் கற்றுக் கொடுத்தவராவார் .(புஹாரி)

• என்னிடமிருந்து ஒரு வசனத்தையேனும் நீங்கள் (ஏனையோருக்கு) எத்திவையுங்கள.

நீங்கள் எந்தளவு நன்மையான விடயங்களைப் பிரச்சாரம் செய்து மக்கள் மத்தியில் பரப்புகின்றீர்களோ அந்தளவு உங்களுக்கு பெரிய கூலி கிடைப்பதுடன் இவ்வுலக வாழ்விலும் மரணத்தின் பின்பும் நன்மைகள் தொடர்ந்தும் கிடைத்தவண்ணமிருக்கும் , நபியவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள் “ ஒரு மனிதன் மரணித்து விட்டால் மூன்று அமல்களைத் தவிர ஏனைய அவனது சகல அமல்களும் அறுந்துநின்று போய்விடும் , (அவையாவன) நிலையான தர்மம் , தொடர்ந்து பயனளிக்கும் அறிவு , அவனுக்காகப் பிரார்த்தனைப் புரியும் நல்ல பிள்ளை “ (முஸ்லிம்)

## முக்கிய செய்தி

ஒவ்வொரு நாளும் 17 தடவைகளுக்கு மேல் நாம் சூரா பாதிஹாவை ஓதிவருகின்றோம் , அதில் அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளானவர்கள் இன்னும் வழிகெட்டவர்கள் ஆகிய இரண்டு கூட்டங்களை விட்டும் நாம் பாதுகாப்பு தேடுகின்றோம் , ஆனால் எமது செயல்பாடுகளில் அவர்களைப் போன்று நடந்துகொள்கின்றோம் , அதாவது மார்க்கத்தைப் படிக்காமல் அறிவின்றி அமல் செய்கின்றோம் , இதன்மூலம் வழிதவறிய கிறிஸ்தவர்களுக்கு நாம் ஒப்பாகின்றோம் , அல்லது படித்துவிட்டு நாம் அமல்செய்யாமல் இருக்கின்றோம் , இதன் மூலம் கோபத்திற்கு உள்ளான யஹுதிகளுக்கு நாம் ஒப்பாகின்றோம் .

எமக்கும் உங்களுக்கும் வல்ல அல்லாஹ் பயனுள்ள அறிவையும் நல்லமலையும் அளிக்க வேண்டும் எனப் பிரார்த்திக்கின்றோம் .

(அல்லாஹ்வும் அவன் தூதரும் மிக அறிந்தவர்கள்)

# அல்குர்ஆன் ஓதுவதின் சிறப்பு

**அல்குர்ஆனைக் கற்பதற்கும், கற்றுக்கொடுப்பதற்கும், அதனை ஓதுவதற்கும் பல சிறப்புகள் உள்ளன. அவற்றில் சில:**

**கற்றுக்கொடுப்பதின் சிறப்பு:** நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறியுள்ளார்கள் "உங்களில் சிறந்தவர் அல்குர்ஆனைக் கற்று அதனைக் கற்றுக்கொடுப்பவராவார்". (புகாரி)

**அதனை ஓதுவதற்கான கூலி :**
நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். "இறை வேதத்திலிருந்து யார் ஓர் எழுத்தை ஓதுகிறாரோ அவருக்கு அதன் மூலம் ஒரு நன்மை உண்டு. ஒரு நன்மை பத்து மடங்கைக்கொண்டதாகும். (திர்மிதி).

**அல்குர்ஆனைக் கற்பது, அதனை மனனமிடுவது, மற்றும் அதனைத் திறமையாக ஓதுவதின் சிறப்பு :**
குர்ஆனை மனனமிட்டு ஓதுபவர் சங்கை மிகுந்த வானவர்களுடன் இருப்பார். ஒருவருக்கு அது கடினமாக இருந்த போதிலும், கவனமாக அதனை ஓதினால் அவருக்கு இரண்டு கூலிகள் உள்ளன. (புகாரி, முஸ்லிம்).
நபியவர்கள் கூறினார்கள். "குர்ஆன் உடையவருக்கு (மறுமையில்) இவ்வாறு கூறப்படும் "நீர் ஓதுவீராக, உலகில் நீர் முறையாகக் குர்ஆனை ஓதியது போன்று ஓதுவீராக, ஏனெனில் உமது தங்குமிடம் நீர் ஓதும் இறுதி வசனத்தில் உள்ளது" (திர்மிதி).
சில குறிப்புகளில் வந்துள்ளதாக இமாம் கத்தாபி அவர்கள் கூறுகிறார்கள். "குர்ஆனின் வசனங்களின் எண்ணிக்கையானது சுவர்க்கத்தின் படித்தரங்களின் அளவில் உள்ளதாகும். எனவே, குர்ஆனை ஓதுகின்றவர்களுக்குச் சொல்லப்படும் "குர்ஆனின் வசனங்களில் நீர் ஓதிய அளவுக்கு படிகளில் ஏறுவீராக" எனவே யார் குர்ஆனை முழுமையாக ஓதி இருந்தார்களோ அவர்கள் மறுமையில் சுவனத்தின் படித்தரங்களில் மிக உயர்ந்து வீட்டிருப்பார். யார் அல்குர்ஆனில் சில பகுதியை மாத்திரம் ஓதியிருந்தாரோ அவரின் ஏற்றம் அந்த அளவில் இருக்கும். இவ்வாறு அவரின் கூலியின் அளவு அவரின் ஓதலின் அளவிலிருக்கும்.

**குர்ஆனைக் கற்றவரின் பெற்றோருக்குரிய கூலி:** நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: "அல்குர்ஆனை ஓதி அதனைக் கற்று அதன்படி நடந்தவரின் பெற்றோருக்கு மறுமை நாளில் ஒளியினாலான ஒரு கிரீடம் அணிவிக்கப்படும். அதன் பிரகாசம் சூரியனின் பிரகாசத்தைப் போன்றதாகும். அவர்களுக்கு இரு ஆடைகள் அணிவிக்கப்படும். இவ்விரண்டுக்கும் இவ்வுலகும் ஈடாக மாட்டாது. "நாங்கள் ஏன் இவ்வாறு அணிவிக்கப்படுகின்றோம்?" என அவர்கள் கேட்பார்கள் அதற்கு "உங்களின் பிள்ளை குர்ஆனைக் கற்றதனால்" என்று பதில் கூறப்படும். (ஹாகிம்).

**குர்ஆன் உடையவருக்கு மறுமையில் அது பரிந்து பேசும் :** நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "குர்ஆனை ஓதுங்கள், ஏனெனில் அது அவர்களுக்கு மறுமையில் பரிந்து பேசக்கூடியதாகும்" (முஸ்லிம்).
மேலும் கூறினார்கள்: "நோன்பும், அல்குர்ஆனும் அடியானுக்காக மறுமையில் பரிந்து பேசுகின்றன. (அஹ்மத், ஹாகிம்).

**அதனை வாசித்து படிப்பதற்காக ஒன்று கூடியவர்களுக்கான கூலி :**
"எந்த ஒரு கூட்டத்தினர் இறை இல்லங்களில் ஒன்றுகூடி அல்குர்ஆனை வாசித்து, அதனைப் படித்து விளங்குகின்றார்களோ அவர்கள் மீது அமைதி இறங்குகின்றது, இறையருள் அவர்களை மூடிக்கொள்கிறது, வானவர்கள் அவர்களைச் சூழ்ந்து கொள்கின்றனர், அல்லாஹ் அவனிடமுள்ளவர்களிடம் அவர்களை நினைவு கூறுகிறான்" (அபூதாவூத்).

❁ குர்ஆனை ஓதுவதற்கான சில ஒழுங்குகள் உள்ளன. இமாம் இப்னு கஸீர் அவர்கள் அவற்றில் சிலதைக் கூறியள்ளார்கள். வுழூவின்றி அதனைத்தொடுவதையோ, ஓதுவதையோ தவிர்த்தல். ஓதுவதற்கு முன்னர் மிஸ்வாக் செய்து கொள்ளல், நல்லாடைகள் அணிந்திருத்தல், கிப்லாவை முன்னோக்கியிருத்தல், கொட்டாவி வரும் போது ஓதுவதை நிறுத்தல், அவசியமின்றி வேறு ஏதும் பேசுவதற்காக குர்ஆன் ஓதுவதை நிறுத்தாமலிருத்தல், முழுச்சிந்தனையையும் அதில் செலுத்துதல், இறைவாக்குகள் வரும் வசனங்களின் போது அதனை வேண்டுதல், அவனது அச்சமூட்டி எச்சரிக்கை செய்யும் இடங்களின் போது அதனை விட்டும் பாதுகாப்புக் கோருதல், குர்ஆனை விரித்த நிலையில் வைக்காதிருத்தல், அதற்கு மேலால் எதனையும் வைக்காதிருத்தல், அடுத்தவருக்கு இடைஞ்சலாக சப்தமிட்டு ஓதாமலிருத்தல், சந்தைகளிலும் கோசங்களுள்ள இடத்திலும் ஓதாமலிருத்தல்.

❁ **குர்ஆனை எவ்வாறு ஓதவேண்டும்:** நபியவர்களின் ஓதலைப்பற்றி அனஸ்(ரலி) அவர்களிடம் வினவப்பட்டபோது "அவர்கள் அழகாக நீட்டி ஓதுவார்கள், பிஸ்மி...என்பதை ஓதும்போது (உறிய முறையில்) பிஸ்மில்லாவையும், அர்ரஹ்மானையும், அர்ரஹீமையும் நீட்டுவார்கள்" எனக் கூறினார்கள்.

❁ **ஓதுவதற்கான கூலி இரட்டிப்பாகுதல்:** இறைவனுக்காக மனத்தூய்மையுடன் குர்ஆனை ஓதும் அனைவருக்கும் கூலியுண்டு. ஆனால் அவர் ஓதுவதை சிந்தித்து விளங்கி ஓதும்போது அதன் கூலி இரட்டிப்பாகின்றது. அப்போது ஒரு எழுத்துக்குப் பத்து மடங்கு முதல் 700 வரை அதிகரிக்கின்றது.

❁ **இரவு பகல் கொண்ட ஒரு நாளில் ஓதும் அளவு :** நபித்தோழர்கள் அவர்களுக்கென்று தினமும் ஓதுவதற்கு ஒரு அளவை வைத்திருந்தார்கள் ஏழு நாட்களை விடக் குறைவான நாட்களில் ஓதிமுடிப்பதை எவரும் வழமையாக்கிக்கொள்ளவில்லை. மாறாக, மூன்று நாட்களுக்கு குறைவான நாற்களில் ஓதிமுடிப்பது சம்பந்தமாக விளக்கங்கள் நபிமொழியில் வந்துள்ளன. எனவே அன்புக்குரிய சகோதரர்களே! தினமும் குர்ஆனை ஓதுவதில் உனது நேரத்தை செலவிடுவதற்கு நீர் ஆர்வம்கொள். உமக்கென ஒரு அளவை நீர் வைத்துக்கொள். அதனை எவ்வாறான நிலையிலும் விட்டு விடாதே. விட்டு விட்டுச் செய்யும் அதிகமானதை விட, தொடராகச் செய்யும் சொற்பமே சிறந்ததாகும். தூக்கம் அல்லது மறதியால் விடுபட்டதை மறுநாள் ஈடுசெய்து விடு. நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: "எவர் தனது வழமையான ஓதல்கள் அல்லது அதில் சிலதை செய்யாமல் உறங்கி விட்டு மறுநாள் பஜ்ருக்கும், ளுஹருக்கும் இடையில் அதனை நிறைவு செய்து விடுகிறாரோ அவர் அதனை இரவில் ஓதியதைப் போலாகின்றார். (முஸ்லிம்).

எந்த விதத்திலும் குர்ஆனை மறந்து அதனைத் துரந்தவராக நீர் ஆகிவடாதே. அதனைத் துரப்பதென்பது: ஓதாமல் விட்டு விடுதல், அல்லது விளங்கி அறிவதை, அதன்படி நடப்பதை, அதன் மூலம் நோய் நிவாரணி தேடுதலை விடுதல் என்ற அனைத்தையும் உள்ளடக்கியுள்ளன.




## அல்பாத்திஹா

'பாத்திஹா' என்பது ஒவ்வொன்றினதும் ஆரம்பமாகும். அல்குர்ஆன் இவ்வத்தியாயத்தைக் கொண்டு ஆரம்பிக்கப்பட்டுள்ளதால் இதற்கு பாத்திஹா என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது. ஏனெனில் இதைக் கொண்டு தான் குர்ஆனை ஓதுபவரும், எழுதுபவரும் ஆரம்பிக்கின்றார். இது முதலாவது இறங்கிய வசனம் அல்ல. இது மக்கிய்யாவா அல்லது மதனிய்யாவா என்பதில் அறிஞர்களுக்கிடையில் கருத்து வேற்றுமை பேசப்பட்டுள்ளது. இது 'உம்முல் கிதாப்', 'அஸ்ஸப்உல் மஸானீ', 'ஸூரதுல் ஹம்த்', 'ஸூரதுஸ் ஸலாத்', 'அல்வாகியா' போன்ற சிறப்புப் பெயர்களைக் கொண்டு அழைக்கப்படுகின்றது. இதன் சிறப்பை அறிவிக்கும் பல ஹதீஸ்கள் ஹதீஸ் கிரந்தங்களில் பதிவாகியுள்ளன. அபூ ஸஈத் அல் முஅல்லா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்குச் சொன்னார்கள்: "நான் அல்குர்ஆனில் மிகவும் கண்ணியமான ஒரு ஸூராவை உமக்குக் கற்றுத் தருவேன்" எனக் கூறி எனது கையைப் பிடித்துக் கொண்டனர். அவர்கள் பள்ளியிலிருந்து வெளியேற முற்பட்டபோது நான் அவர்களைப் பார்த்து நீங்கள் எனக்கு அல்குர்ஆனில் மிக கண்ணியமான ஒரு ஸூராவைக் கற்றுத் தருவதாகக் கூறினீர்களே" எனக் கேட்டேன். அதற்கு அவர்கள்: "ஆம், அது தான் அல்ஹம்து ஸூரா, மடக்கி ஓதப்படும் ஏழு வசனங்கள், எனக்கு வழங்கப்பட்ட மிக கண்ணியமான குர்ஆன்" என்றனர். (புகாரி)

---

(1) அல்லாஹ்வின் திருநாமத்தைக் கொண்டு ஆரம்பிக்கின்றேன். (அவன்) அளவற்ற அருளாளன். நிகரற்ற அன்புடையோன். (இவ்வசனம் ஆரம்பத்தில் எழுதப்பட்டிருக்கும் ஒவ்வொரு அத்தியாயத்தினதும் முதல் வசனமாகக் கருதப்படுமா? அல்லது பாதிஹாவின் மாத்திரம் முதல் வசனமா? அல்லது எந்த ஒரு அத்தியாயத்திலும் முதல் வசனமாகக் கருதப்படமாட்டாதா? என்பதில் அறிஞர்கள் கருத்து வேற்றுமை கொண்டிருக்கின்றார்கள். ஸூரதுன் நம்லில் இது ஒரு வசனம் என்பது கருத்து வேற்றுமைக்கப்பாற்பட்ட விடயமாகும். 'அல்லாஹ்' என்ற பெயர் அவனுக்கு மாத்திரம் குறிப்பான ஒரு பெயராகும். வேறு எவருக்கும் இதை உபயோகித்தலாகாது.

(2) அகிலத்தாரின் இரட்சகனான அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். (புகழ் என்பது நல்ல விடயங்களுக்காக நாவினால் பாராட்டுவதாகும். அது நாவினால் மாத்திரமே செய்யப்படும். நன்றி என்பது எல்லா உறுப்புக்களாலும் செய்யப்படும் ஒன்றாகும்.

(3) (அவன்) அளவற்ற அருளாளன். நிகரற்ற அன்புடையோன்.

(4) அவன் தீர்ப்பு நாளின் அதிபதி. (கதாதா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: இது அல்லாஹ்வினால் அவனது அடியார்களுக்கு அவர்களின் கிரியைகளுக்கு கூலி வழங்கப்படும் நாளாகும்.)

(5) நாம் உன்னையே வணங்குகிறோம். மேலும் உன்னிடமே உதவி தேடுகிறோம். (வணக்கம் என்பது முழுமையாகக் கீழ்ப்படிந்து பணிவதாகும். இவ்வசனத்தின் கருத்து உன்னைத் தவிர வேறு யாரையும் நாங்கள் வணங்க மாட்டோம். உன்னிடமன்றி வேறு யாரிடமும் உதவி கேட்கமாட்டோம்.

(6) எங்களுக்கு நேரான வழியைக் காட்டுவாயாக. ('ஹிதாயத்' என்ற சொல்லின் கருத்து நேர்வழியைக் காட்டுதல் அல்லது வழிப்பாடுகளுக்கு அனுகூலம் புரிதல் என்பதாகும். நேர்வழியில் இருக்கும் ஒருவர் அல்லாஹ்விடம் நேர்வழியைக் கேட்பதன் கருத்து நேர்வழியை அதிகப்படுத்தித் தரக் கோருவதாகும். இவ்வசனத்தில் நேரான வழி என்பது இஸ்லாம் எனும் நேரிய பாதையாகும்.)

(7) நீ யார் மீது அருள் புரிந்தாயோ அவர்களுடைய பாதையைக் காட்டுவாயாக. (இவர்கள் யார் என்பதை ஸூரதுன் நிஸாவின் 69,70 ஆம் வசனங்களில் அல்லாஹ் குறிப்பிட்டுள்ளான். அவர்கள் நபிமார்களும், ஸித்தீகீன்கள், ஸாலிஹீன்கள் எனப்படும் அல்லாஹ்வின் நல்லடியார்களுமாவர்.) உனது சாபத்துக்குள்ளானவர்களினதோ, வழி தவறியவர்களினதோ பாதையை அல்ல. (சபிக்கப்பட்டவர்கள் யஹூதிகளாவர். ஏனெனில் அவர்கள் அறிவிருந்தும் நேர்வழியைப் பின்பற்றாதவர்கள். வழிதவறியவர்கள் நஸாராக்கள். அவர்கள் ஈஸா(அலை) அவர்களின் விடயத்தில் அறிவின்மையின் காரணமாக வழிதவறினர்.

## அல்-முஜாதலா

1 (நபியே) தன் கணவனைப் பற்றி உங்களுடன் தர்க்கித்து (தனது விடயத்தை) அல்லாஹ்விடம் முறையிட்ட பெண்ணின் வார்த்தைகளை அல்லாஹ் கேட்டுவிட்டான். மேலும் உங்கள் இருவரது வாக்குவாதத்தையும் அல்லாஹ் செவியேற்றுவிட்டான். நிச்சயமாக அல்லாஹ் கேட்பவனாகவும் பார்ப்பவனாகவும் இருக்கின்றான். (ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள் : எல்லா விடயங்களையும் கேட்கும் ஆற்றல் கொண்ட அல்லாஹ் மிக உயர்ந்தவன். ஹவ்லா பின்த் ஸ∴லபா என்ற பெண்மணி நபியவர்களுடன் பேசுவதை நான் கேட்டுக் கொண்டிருந்தேன். அதில் சில விடயங்கள் எனக்குக் கேட்கவில்லை. அப்பெண்மணி நபியவர்களிடம் தனது கணவரைப் பற்றி முறைப்பட்டுக் கொண்டிருந்தாள். அவள் கூறினாள், “அல்லாஹ்வின் தூதரே! எனது கணவர் எனது வாலிபத்தை முழுமையாகப் பயன்படுத்தி விட்டார். நான் எனது வயிற்றை அவருக்கு விரித்துக் கொடுத்தேன். நான் வயது முதிர்வடைந்து பிள்ளை பெறும் சக்தியை இழந்ததும், “நீ எனக்கு எனது தாயைப் போன்றவள்” என்று கூறி விலகிவிட்டார். மேலும் அவள் கூறினாள், “இறைவா! எனது கணவரின் விடயத்தை நான் உன்னிடம் முறையிடுகின்றேன்.” இவ்வாறு தொடர்ந்து அவள் முறையிட்டுக் கொண்டிருக்கும் போது ஜிப்ரீல் (அலை) அவர்கள் இவ்வசனங்களை எடுத்துக் கொண்டு இறங்கினார்கள்.) (அவர் மதீனாவாசிகளில் ஒருவரான அவ்ஸ் பின் ஸாமித் என்பவராகும்).

2 உங்களில் சிலர் தமது மனைவியர்களைப் பார்த்து, “நீங்கள் எனக்கு எனது தாயைப் போன்றவர்கள்” எனக் கூறிவிடுகின்றனர். அவ்வாறு அவர்கள் கூறுவதால் தாய்களாகி விடுவதில்லை. அவர்களைப் பெற்றவர்கள் தான் அவர்களின் தாய்மார்கள். அவர்கள் இவ்வாறு சொல்வதன் மூலமாக வெறுக்கத்தக்கதும் பொய்யுமான வார்த்தைகளையே கூறுகின்றார்கள். நிச்சயமாக அல்லாஹ் மிகவும் மன்னிப்பவன்.

3 இவ்வாறு தமது மனைவியர்களை தமது தாய்மார்களுக்கு ஒப்பாக்கிவிட்டு தமது வார்த்தையிலிருந்து விலகி அவர்களுடன் உடலுறவு கொள்ள முற்படுபவர்கள் அவ்வாறு உடலுறவு கொள்ள முன் குற்றப்பரிகாரமாக ஓர் அடிமையை உரிமையிட வேண்டும். அவ்வாறு செய்யும் படி நீங்கள் இறைவனால் உபதேசிக்கப்படுகின்றீர்கள்.

4 மேலும் (உரிமையிடுவாற்கான அடிமையையோ அல்லது அதனை வாங்குவதற்கான வசதியையோ) பெற்றுக் கொள்ளாதவர்கள் அப்பெண்களுடன் உறவு கொள்ள முன் தொடர்ச்சியாக இரு மாதங்கள் நோன்பு நோற்க வேண்டும். (அங்கீகரிக்கப்பட்ட காரணமின்றி நோன்பை இடையில் நிறுத்தினால் புதிதாக இரு மாதங்கள் தொடர்ந்து நோன்பு நோற்க வேண்டும்). அதற்கும் சக்தி பெறாதவர்கள் அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். (ஒவ்வொருவருக்கும் தலா ஒரு கிலோ, 250 கிராம் அளவு தானியமாகவோ அல்லது சமைத்த உணவாகவோ வழங்க வேண்டும்.) நீங்கள் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் (பரிபூரணமாக) ஈமான் கொள்ளுமுகமாக (இவ்வாறு நாம் தீர்ப்புச் செய்துள்ளோம்.) இவை அல்லாஹ் விதித்த வரம்புகள். (எனவே அவனின் வரம்புகளை தாண்டிச் சென்று உமது மனைவியர்களை உமது தாய்கள் போன்று ஆக்கிக் கொள்ள வேண்டாம்.) மேலும் (அல்லாஹ்வின் வரம்புகளை மீறும்) இறை நிராகரிப்பாளர்களுக்கு நோவினை உள்ள தண்டனை இருக்கின்றது. (அது நரகமாகும்).

5 நிச்சயமாக அல்லாஹ்வையும் அவனது தூதரையும் எதிர்ப்பவர்கள் அவர்களுக்கு முன்பிருந்தவர்கள் இழிவாக்கப்பட்டதைப் போன்று இழிவாக்கப்படுவார்கள். மேலும் இறை நிராகரிப்பாளர்களுக்கு நோவினையுள்ள தண்டனை இருக்கின்றது.

ترتيبها ٥٨ — سُورَةُ المُجَادلَة — آياتها ٢٢

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

قَدْ سَمِعَ اللَّهُ قَوْلَ الَّتِي تُجَادِلُكَ فِي زَوْجِهَا وَتَشْتَكِي إِلَى اللَّهِ
وَاللَّهُ يَسْمَعُ تَحَاوُرَكُمَا ۚ إِنَّ اللَّهَ سَمِيعٌ بَصِيرٌ ﴿١﴾ الَّذِينَ يُظَاهِرُونَ
مِنكُم مِّن نِّسَائِهِم مَّا هُنَّ أُمَّهَاتِهِمْ ۖ إِنْ أُمَّهَاتُهُمْ إِلَّا اللَّائِي
وَلَدْنَهُمْ ۚ وَإِنَّهُمْ لَيَقُولُونَ مُنكَرًا مِّنَ الْقَوْلِ وَزُورًا ۚ وَإِنَّ
اللَّهَ لَعَفُوٌّ غَفُورٌ ﴿٢﴾ وَالَّذِينَ يُظَاهِرُونَ مِن نِّسَائِهِمْ ثُمَّ يَعُودُونَ
لِمَا قَالُوا فَتَحْرِيرُ رَقَبَةٍ مِّن قَبْلِ أَن يَتَمَاسَّا ۚ ذَٰلِكُمْ تُوعَظُونَ
بِهِ ۚ وَاللَّهُ بِمَا تَعْمَلُونَ خَبِيرٌ ﴿٣﴾ فَمَن لَّمْ يَجِدْ فَصِيَامُ شَهْرَيْنِ
مُتَتَابِعَيْنِ مِن قَبْلِ أَن يَتَمَاسَّا ۖ فَمَن لَّمْ يَسْتَطِعْ فَإِطْعَامُ سِتِّينَ
مِسْكِينًا ۚ ذَٰلِكَ لِتُؤْمِنُوا بِاللَّهِ وَرَسُولِهِ ۚ وَتِلْكَ حُدُودُ اللَّهِ ۗ
وَلِلْكَافِرِينَ عَذَابٌ أَلِيمٌ ﴿٤﴾ إِنَّ الَّذِينَ يُحَادُّونَ اللَّهَ وَرَسُولَهُ كُبِتُوا
كَمَا كُبِتَ الَّذِينَ مِن قَبْلِهِمْ ۚ وَقَدْ أَنزَلْنَا آيَاتٍ بَيِّنَاتٍ ۚ وَلِلْكَافِرِينَ
عَذَابٌ مُّهِينٌ ﴿٥﴾ يَوْمَ يَبْعَثُهُمُ اللَّهُ جَمِيعًا فَيُنَبِّئُهُم بِمَا
عَمِلُوا ۚ أَحْصَاهُ اللَّهُ وَنَسُوهُ ۚ وَاللَّهُ عَلَىٰ كُلِّ شَيْءٍ شَهِيدٌ ﴿٦﴾

أَلَمْ تَرَ أَنَّ ٱللَّهَ يَعْلَمُ مَا فِى ٱلسَّمَٰوَٰتِ وَمَا فِى ٱلْأَرْضِ ۖ مَا يَكُونُ
مِن نَّجْوَىٰ ثَلَٰثَةٍ إِلَّا هُوَ رَابِعُهُمْ وَلَا خَمْسَةٍ إِلَّا هُوَ سَادِسُهُمْ
وَلَآ أَدْنَىٰ مِن ذَٰلِكَ وَلَآ أَكْثَرَ إِلَّا هُوَ مَعَهُمْ أَيْنَ مَا كَانُوا۟ ۖ ثُمَّ يُنَبِّئُهُم
بِمَا عَمِلُوا۟ يَوْمَ ٱلْقِيَٰمَةِ ۚ إِنَّ ٱللَّهَ بِكُلِّ شَىْءٍ عَلِيمٌ ﴿٧﴾ أَلَمْ تَرَ إِلَى ٱلَّذِينَ
نُهُوا۟ عَنِ ٱلنَّجْوَىٰ ثُمَّ يَعُودُونَ لِمَا نُهُوا۟ عَنْهُ وَيَتَنَٰجَوْنَ بِٱلْإِثْمِ
وَٱلْعُدْوَٰنِ وَمَعْصِيَتِ ٱلرَّسُولِ وَإِذَا جَآءُوكَ حَيَّوْكَ بِمَا لَمْ يُحَيِّكَ
بِهِ ٱللَّهُ وَيَقُولُونَ فِىٓ أَنفُسِهِمْ لَوْلَا يُعَذِّبُنَا ٱللَّهُ بِمَا نَقُولُ ۚ حَسْبُهُمْ
جَهَنَّمُ يَصْلَوْنَهَا ۖ فَبِئْسَ ٱلْمَصِيرُ ﴿٨﴾ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓا۟ إِذَا
تَنَٰجَيْتُمْ فَلَا تَتَنَٰجَوْا۟ بِٱلْإِثْمِ وَٱلْعُدْوَٰنِ وَمَعْصِيَتِ ٱلرَّسُولِ وَتَنَٰجَوْا۟
بِٱلْبِرِّ وَٱلتَّقْوَىٰ ۖ وَٱتَّقُوا۟ ٱللَّهَ ٱلَّذِىٓ إِلَيْهِ تُحْشَرُونَ ﴿٩﴾ إِنَّمَا ٱلنَّجْوَىٰ
مِنَ ٱلشَّيْطَٰنِ لِيَحْزُنَ ٱلَّذِينَ ءَامَنُوا۟ وَلَيْسَ بِضَآرِّهِمْ شَيْـًٔا
إِلَّا بِإِذْنِ ٱللَّهِ ۚ وَعَلَى ٱللَّهِ فَلْيَتَوَكَّلِ ٱلْمُؤْمِنُونَ ﴿١٠﴾ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ
ءَامَنُوٓا۟ إِذَا قِيلَ لَكُمْ تَفَسَّحُوا۟ فِى ٱلْمَجَٰلِسِ فَٱفْسَحُوا۟ يَفْسَحِ
ٱللَّهُ لَكُمْ ۖ وَإِذَا قِيلَ ٱنشُزُوا۟ فَٱنشُزُوا۟ يَرْفَعِ ٱللَّهُ ٱلَّذِينَ ءَامَنُوا۟
مِنكُمْ وَٱلَّذِينَ أُوتُوا۟ ٱلْعِلْمَ دَرَجَٰتٍ ۚ وَٱللَّهُ بِمَا تَعْمَلُونَ خَبِيرٌ ﴿١١﴾

6 அவர்கள் அனைவரையும் அல்லாஹ் எழுப்பும் (மறுமை) நாளில் அவர்கள் செய்த (மோசமான, மற்றும் பாவமான) விடயங்களை அவர்களுக்கு அறிவித்துக் கொடுப்பான். அல்லாஹ் அவற்றைப் பாதுகாத்து வைத்திருந்தான். அவர்கள் அதை மறந்து விட்டார்கள். அவர்களின் பதிவேடுகளில் அவை பதிவு செய்யப்பட்டிருப்பதை அவர்கள் கண்டு கொள்வார்கள். அல்லாஹ் யாவற்றையும் அறிந்தவன்.

7 நிச்சயமாக அல்லாஹ் வானங்களிலும் பூமியிலுமுள்ளவற்றை அறிவான் (அவனுக்கு எதுவும் மறையாது.) என்பதை நீர் அறியவில்லையா? மூன்று பேர் இரகசியம் பேசும் போது அவன் அவர்களில் நாலாவதாக இருந்து அறிகின்றான். மேலும் அவர்களில் ஐவர் இரகசியம் பேசும் போது அவன் அங்கு ஆறாவதாக இருந்து அறிகின்றான். அதை விடக் குறைந்த எண்ணிக்கையினரோ அல்லது அதிக எண்ணிக்கையினரோ இரகசியம் பேசும் போது அவனும் அவர்களுடன் இருந்து அறிகின்றான். (அவனுக்கு எதுவும் மறைய மாட்டாது.) அவர்கள் எங்கிருந்த போதும் சரியே. பின்பு அவர்கள் (இரகசியமாகப் பேசிய அல்லது)செய்பவற்றை அவர்களுக்கு அறிவித்துக் கொடுப்பான். நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் நன்கு அறிந்தவன்.

8 அவர்களுக்கு இரகசியம் பேசுவதை தடுக்கப்பட்டிருந்தும் தடுக்கப்பட்ட அந்த இரகசியத்தின் பக்கம் மீள்கின்றார்களே அவர்களை நீங்கள் கவனிக்கவில்லையா? (யஹூதிகளைத் தாண்டி மு.்.மின்கள் செல்லக்கூடிய சமயத்தில் யஹூதிகள் அவர்களுக்கிடையில் இரகசியம் பேசிக் கொள்வார்கள். அவர்களுக்கு அதைத் தடுக்கப்பட்டும் அவர்கள் அதைத் தவிர்ந்து கொள்ளவில்லை. எனவே இந்த இறை வசனத்தை அல்லாஹ் இறக்கிவைத்தான்.) அவர்கள் பாவத்தையும் , வரம்பு மீறுதையும் இறைத் தூதருக்கு மாறுசெய்வதையும் இரகசியமாகப் பேசிக் கொள்கின்றார்கள். (நபியே) அவர்கள் உங்களிடத்தில் வந்தால் அல்லாஹ் உமக்கு ஸலாமாகக் கூறாத வார்த்தைகளைக் கொண்டு ஸலாம் கூறுவார்கள். (யஹூதிகள் நபியவர்களிடம் வந்து ‘அஸ்ஸாமு அலைக்கும்’ என்பார்கள். வெளிப்படையில் ஸலாம் போன்று காட்டிக் கொள்வார்கள். உண்மையில் அதன் மூலம் நபியவர்களுக்கு மரணம் ஏற்படவேண்டும் என்றே எதிர்பார்ப்பார்கள். ஏனெனில் ‘ஸாம்’ என்ற வார்த்தை அறபுப் பாசையில் மரணம் என்ற கருத்தையே கொடுக்கும். நபியவர்கள் உங்களுக்கு அது உண்டாகட்டும் எனப் பதில் கூறுவார்கள்.) அவர்கள் அவர்களுக்கிடையில் பேசிக் கொள்வார்கள்: ((முஹம்மத் அல்லாஹ்வின் தூதராக இருப்பின்) நாம் கூறும் வார்த்தைகளுக்காக அல்லாஹ் எம்மைத் தண்டிக்கக் கூடாதா? நரகமே அவர்களுக்குப் போதுமானது. அதில் அவர்கள் நுழைவார்கள். அது மீளும் இடங்களில் மிக மோசமானது.

9 இறை விசுவாசிகளே! நீங்கள் இரகசியம் பேசுவதாக இருந்தால் யஹூதிகளும், நயவஞ்சகர்களும் பேசுவது போன்று பாவங்களையும், வரம்பு மீறுவதையும், இறைத் தூதருக்கு மாறுசெய்வதையும் இரகசியமாகப் பேசவேண்டாம். மாற்றமாக நீங்கள் நன்மைகளையும் பயபக்தியை ஏற்படுத்தும் விடயங்களையும் பேசுங்கள். (நாளை மறுமையில்) உங்களை எவன்பால் ஒன்று திரட்டப்படுமோ அந்த அல்லாஹ்வைப் பயந்து கொள்ளுங்கள்.

10 (இவ்வாறு பாவங்களைக் கொண்டு) இரகசியம் பேசுவது ஷைத்தானின் செயலாகும். அவன் மு.்.மின்களைக் கவலையில் ஆழ்த்துவதற்காக (இவ்வாறு சொல்ல வைக்கின்றான்.) அல்லாஹ்வின் நாட்டமின்றி அவனால் அவர்களுக்கு எந்தத் தீங்கையும் விளைவிக்க முடியாது. இறை விசுவாசிகள் அல்லாஹ்வின் மீதே (தமது எல்லா விடயங்களையும்) பொறுப்புச் சாட்டவும். (அவர்கள் தமது எல்லா விடயங்களையும் அல்லாஹ்விடமே பொறுப்புச் சாட்டுவார்கள். அவனைக் கொண்டே ஷைத்தானை விட்டும்

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓاْ إِذَا نَٰجَيۡتُمُ ٱلرَّسُولَ فَقَدِّمُواْ بَيۡنَ يَدَيۡ نَجۡوَىٰكُمۡ
صَدَقَةٗۚ ذَٰلِكَ خَيۡرٞ لَّكُمۡ وَأَطۡهَرُۚ فَإِن لَّمۡ تَجِدُواْ فَإِنَّ ٱللَّهَ غَفُورٞ رَّحِيمٌ
١٢ ءَأَشۡفَقۡتُمۡ أَن تُقَدِّمُواْ بَيۡنَ يَدَيۡ نَجۡوَىٰكُمۡ صَدَقَٰتٖۚ فَإِذۡ لَمۡ تَفۡعَلُواْ
وَتَابَ ٱللَّهُ عَلَيۡكُمۡ فَأَقِيمُواْ ٱلصَّلَوٰةَ وَءَاتُواْ ٱلزَّكَوٰةَ وَأَطِيعُواْ ٱللَّهَ
وَرَسُولَهُۥۚ وَٱللَّهُ خَبِيرُۢ بِمَا تَعۡمَلُونَ ١٣ ۞ أَلَمۡ تَرَ إِلَى ٱلَّذِينَ تَوَلَّوۡاْ قَوۡمًا
غَضِبَ ٱللَّهُ عَلَيۡهِم مَّا هُم مِّنكُمۡ وَلَا مِنۡهُمۡ وَيَحۡلِفُونَ عَلَى ٱلۡكَذِبِ
وَهُمۡ يَعۡلَمُونَ ١٤ أَعَدَّ ٱللَّهُ لَهُمۡ عَذَابٗا شَدِيدًاۖ إِنَّهُمۡ سَآءَ مَا كَانُواْ
يَعۡمَلُونَ ١٥ ٱتَّخَذُوٓاْ أَيۡمَٰنَهُمۡ جُنَّةٗ فَصَدُّواْ عَن سَبِيلِ ٱللَّهِ فَلَهُمۡ
عَذَابٞ مُّهِينٞ ١٦ لَّن تُغۡنِيَ عَنۡهُمۡ أَمۡوَٰلُهُمۡ وَلَآ أَوۡلَٰدُهُم مِّنَ ٱللَّهِ
شَيۡـًٔاۚ أُوْلَٰٓئِكَ أَصۡحَٰبُ ٱلنَّارِۖ هُمۡ فِيهَا خَٰلِدُونَ ١٧ يَوۡمَ يَبۡعَثُهُمُ
ٱللَّهُ جَمِيعٗا فَيَحۡلِفُونَ لَهُۥ كَمَا يَحۡلِفُونَ لَكُمۡ وَيَحۡسَبُونَ أَنَّهُمۡ عَلَىٰ شَيۡءٍۚ أَلَآ
إِنَّهُمۡ هُمُ ٱلۡكَٰذِبُونَ ١٨ ٱسۡتَحۡوَذَ عَلَيۡهِمُ ٱلشَّيۡطَٰنُ فَأَنسَىٰهُمۡ ذِكۡرَ
ٱللَّهِۚ أُوْلَٰٓئِكَ حِزۡبُ ٱلشَّيۡطَٰنِۚ أَلَآ إِنَّ حِزۡبَ ٱلشَّيۡطَٰنِ هُمُ ٱلۡخَٰسِرُونَ
١٩ إِنَّ ٱلَّذِينَ يُحَآدُّونَ ٱللَّهَ وَرَسُولَهُۥٓ أُوْلَٰٓئِكَ فِي ٱلۡأَذَلِّينَ ٢٠
كَتَبَ ٱللَّهُ لَأَغۡلِبَنَّ أَنَا۠ وَرُسُلِيٓۚ إِنَّ ٱللَّهَ قَوِيٌّ عَزِيزٞ ٢١

பாதுகாப்புத் தேடுவார்கள். காபிர்களின் இந்த இரகசியங்களைப் பொருட்படுத்தமாட்டார்கள். நபியவர்கள் கூறினார்கள்: நீங்கள் மூவர் இருக்கும் சந்தர்ப்பத்தில் இருவர் மாத்திரம் இரகசியம் பேசவேண்டாம். அது மூன்றாவது நபருக்குக் கவலையை ஏற்படுத்தும்.-புகாரி, முஸ்லிம்-)

11 இறை விசுவாசிகளே! சபைகளில் (மற்றவர்களுக்கு) இடம் கொடுத்து உட்காருங்கள் என்று உங்களிடம் சொல்லப்பட்டால் நீங்கள் இடம் கொடுத்து உட்காருங்கள். (கதாதா, முஜாஹித் (ரஹ்) ஆகிய இருவரும் கூறுகின்றார்கள் : நபித் தோழர்கள் நபியவர்களின் சபைகளில் போட்டியிட்டு நெருங்கிக் கொள்வார்கள். எனவே அவர்கள் இடம் கொடுத்து உட்காரும் படி ஏவப்பட்டார்கள். இது முஸ்லிம்கள் ஒன்று சேரும் எல்லா சபைகளுக்கும் பொதுவானது. யார் ஓர் இடத்துக்கு முந்திவிடுகின்றாரோ அவரே அந்த இடத்துக்கு மிகத் தகுதியானவர். இருப்பினும், அவர் மற்றவர்களுக்கு இடம் கொடுத்து உட்காருவார். நபியவர்கள் கூறினார்கள்: ஒருவர் மற்றொருவரை அவருடைய இடத்திலிருந்து எழுப்ப வேண்டாம். எனினும் நீங்கள் இடம் கொடுத்து உட்கார்ந்து கொள்ளுங்கள்.) மேலும் (மார்க்கத்தில் சிறப்பும் கௌரவமும் உள்ளவர்கள் உட்காருவதற்காக) எழுந்திருங்கள் என்று உங்களுக்குச் சொல்லப்பட்டால் நீங்கள் எழுந்திருங்கள். உங்களில் ஈமான் கொண்டு அறிவும் கொடுக்கப்பட்டவர்களுடைய அந்தஸ்துக்களை (இவ்வுலகிலும் மறுமையிலும்) அல்லாஹ் உயர்த்தி விடுவான்.

12 விசுவாசிகளே! நீங்கள் நபியவர்களுடன் இரகசியம் பேச முற்படுவீர்களாயின் நீங்கள் அவ்வாறு செய்வதற்கு முன் தர்மம் செய்யுங்கள். அவ்வாறு நீங்கள் செய்வது உங்களுக்கு சிறந்ததும், தூய்மையானதுமாகும். (இவ்வசனத்தை அல்லாஹ் இறக்கியதும் வழிகேட்டில் இருப்பவர்கள் நபியவர்களுடன் இரகசியம் பேசுவதைத் தவிர்த்துக் கொண்டார்கள். ஏனெனில் அவர்கள் தர்மம் செய்யமாட்டார்கள். தர்மம் செய்யும் வசதியற்ற முஃமின்களும் நபியவர்களுடன் இரகசியம் பேசுவதைத் தவிர்த்தார்கள். அது அவர்களுக்குப் பெரிதும் சிரமமாக இருந்தது. அடுத்த வசனத்தின் மூலம் அல்லாஹ் அவர்களின் சிரமத்தை இலேசாக்கினான்.) நீங்கள் (தர்மத்தைப்) பெற்றுக் கொள்ளவில்லையெனின் அல்லாஹ் மிகுந்து மன்னிப்போனும், அருள் புரிவோனுமாயுள்ளான். (மேற் சொல்லப்பட்ட தர்மத்தைக் கொடுக்க வசதியற்றவர்கள் அதைச் செய்யாமல் நபியவர்களுடன் இரகசியம் பேசுவதில் குற்றமில்லை.)

13 நீங்கள் உங்கள் இரகசியத்திற்கு முன் தர்மம் செய்வதால் (வறுமையைப்) பயப்படுகின்றீர்களா? நீங்கள் அவ்வாறு செய்யாது, அல்லாஹ் உங்களை மன்னித்த நிலையில் நீங்கள் தொழுகையை நிலை நிறுத்துங்கள். மேலும் ஸகாத்தையும் கொடுங்கள். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் அறிந்தவன். (அவன் அவற்றிற்குக் கூலி வழங்குவான். முகாதில் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: இச்சட்டம் அறிமுகப்படுத்தப்பட்டு பத்து நாட்களுள் மாற்றப்பட்டு விட்டது.)

14 (நபியே) நீங்கள் அல்லாஹ்வின் சாபத்துக்குள்ளானவர்களுடன் (யஹூதிகளுடன்) தோழ்மை கொள்ளும் கூட்டத்தினர்களை (முனாபிக்களைக்) காணவில்லையா? அவர்கள் (முனாபிக்கள்) உங்களைச் சார்ந்தவர்களுமல்லர், அவர்களைச் சார்ந்தவர்களுமல்லர். அவர்கள் (நயவஞ்சகர்கள்) அறிந்து கொண்டே (அவர்கள் முஸ்லிம்கள் என்றோ அல்லது யஹூதிகளுடன் அவர்களுக்குத் தொடர்பு இல்லை என்றோ) பொய்ச் சத்தியம் செய்கின்றார்கள்.

15 (அவர்கள் யஹூதிகளை நேசம் கொண்டதற்காகவும், பொயச் சத்தியம் செய்ததற்காகவும்) கடுமையான தண்டனையை அவர்களுக்கு அல்லாஹ் தயார் செய்து வைத்துள்ளான். நிச்சயமாக அவர்கள் செய்யும் வேலை மோசமானது.

لَا تَجِدُ قَوْمًا يُؤْمِنُونَ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ يُوَادُّونَ مَنْ
حَادَّ اللَّهَ وَرَسُولَهُ وَلَوْ كَانُوا آبَاءَهُمْ أَوْ أَبْنَاءَهُمْ
أَوْ إِخْوَانَهُمْ أَوْ عَشِيرَتَهُمْ أُولَٰئِكَ كَتَبَ فِي قُلُوبِهِمُ
الْإِيمَانَ وَأَيَّدَهُمْ بِرُوحٍ مِنْهُ وَيُدْخِلُهُمْ جَنَّاتٍ تَجْرِي
مِنْ تَحْتِهَا الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا رَضِيَ اللَّهُ عَنْهُمْ وَرَضُوا
عَنْهُ أُولَٰئِكَ حِزْبُ اللَّهِ أَلَا إِنَّ حِزْبَ اللَّهِ هُمُ الْمُفْلِحُونَ ٢٢

## سُورَةُ الْحَشْرِ

ترتيبها ٥٩ — آياتها ٢٤

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

سَبَّحَ لِلَّهِ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ وَهُوَ الْعَزِيزُ الْحَكِيمُ
١ هُوَ الَّذِي أَخْرَجَ الَّذِينَ كَفَرُوا مِنْ أَهْلِ الْكِتَابِ مِنْ دِيَارِهِمْ
لِأَوَّلِ الْحَشْرِ مَا ظَنَنْتُمْ أَنْ يَخْرُجُوا وَظَنُّوا أَنَّهُمْ مَانِعَتُهُمْ
حُصُونُهُمْ مِنَ اللَّهِ فَأَتَاهُمُ اللَّهُ مِنْ حَيْثُ لَمْ يَحْتَسِبُوا وَقَذَفَ
فِي قُلُوبِهِمُ الرُّعْبَ يُخْرِبُونَ بُيُوتَهُمْ بِأَيْدِيهِمْ وَأَيْدِي الْمُؤْمِنِينَ
فَاعْتَبِرُوا يَا أُولِي الْأَبْصَارِ ٢ وَلَوْلَا أَنْ كَتَبَ اللَّهُ عَلَيْهِمُ
الْجَلَاءَ لَعَذَّبَهُمْ فِي الدُّنْيَا وَلَهُمْ فِي الْآخِرَةِ عَذَابُ النَّارِ ٣

16 (இறை நிராகரிப்பின் காரணமாக தாம் கொலை செய்யப்படுவதை விட்டும் தம்மைப்) பாதுகாக்கும் ஒரு கேடயமாக அவர்களது சத்தியங்களை அவர்கள் ஆக்கிக் கொண்டார்கள். (கொலை செய்யப்படுவதைப் பயந்து அவர்களுடைய வாயினால் அவர்கள் ஈமான் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய உள்ளங்கள் ஈமான் கொண்டிருக்கவில்லை.) அவர்கள் அல்லாஹ்வின் பாதையை விட்டும் (மக்களைத்) தடுத்தார்கள். எனவே அவர்களுக்கு இழிவை ஏற்படுத்தும் தண்டனை இருக்கின்றது.

17 அவர்களுடைய செல்வங்களும், பிள்ளைகளும் அல்லாஹ்வின் (தண்டனையைத் தடுப்பதில்) அவர்களுக்கு எந்தப் பயனையும் அளிக்க மாட்டார்கள். அவர்கள் நரக வாசிகள். அவர்கள் அதில் நிலையாக இருப்பார்கள்.

18 அல்லாஹ் அவர்கள் அனைவரையும் எழுப்பும் (மறுமை) நாளில் உங்களுக்கு (முன்) சத்தியம் செய்தது போன்று அல்லாஹ்விற்கு (முன்பும்) அவர்கள் சத்தியம் செய்வார்கள். (“அல்லாஹ்வின் மீது ஆணையாக நாம் அவ்வாறு செய்யவில்லை” என்று சத்தியம் செய்வார்கள்.) அவர்கள் (அவ்வாறு பொய்ச் சத்தியம் செய்வதன் மூலமாக தமக்குப் பயனளிக்கும்) ஒரு வேலையில் ஈடுபடுவதாக நினைக்கின்றார்கள்.

19 ஷைத்தான் அவர்களை ஆக்கிரமித்து அல்லாஹ்வின் ஞாபகத்தை அவர்களுக்கு மறக்கடித்து விட்டான். (அதன் காரணமாக அவர்கள் அவனது கட்டளைகளை எடுத்து நடப்பதோடு, அல்லாஹ்வுக்கு வழிப்படுவதையும் விட்டுவிட்டார்கள்.) அவர்கள் ஷைத்தானின் கூட்டத்தினர்கள். அறிந்து கொள்ளுங்கள் நிச்சயமாக ஷைத்தானின் கூட்டத்தினர்கள் நஷ்டமடைந்தவர்கள். (ஏனெனில் சுவனம், நேர்வழி என்பவற்றிற்குப் பதிலாக நரகம், வழிகேடு என்பவற்றை அவர்கள் எடுத்துக் கொண்டார்கள். மேலும் அல்லாஹ்வின் மீதும் அவனது நபியின் மீதும் பொய்யுரைத்து பொய்ச் சத்தியங்களையும் செய்கிறார்கள். அவர்கள் உலகத்திலும், மறுமையிலும் நஷ்டமடைவார்கள்.)

20 நிச்சயமாக அல்லாஹ்வையும், அவனது தூதரையும் விரோதிப்பவர்கள் (இவ்வுலகிலும் மறுமையிலும் அல்லாஹ்வால்) இழிவுபடுத்தப்பட்டவர்களுடன் இருப்பார்கள்.

21 “நானும் எனது தூதர்களும் உறுதியாகவே மிகைத்து விடுவோம்” என அல்லாஹ் (தனது தீர்ப்பில்) தீர்மானித்துள்ளான். நிச்சயமாக அல்லாஹ் சக்தியுள்ளவனும் மிகைக்கக்கூடியவனுமாவான்.

22 (நபியே!) நீங்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொண்ட ஒரு கூட்டத்தினரை, அல்லாஹ்வையும் அவனது தூதரையும் விரோதிப்பவர்களுடன் நேசம் பாராட்டுபவர்களாகக் கண்டு கொள்ள மாட்டீர்கள். (அவ்வாறு அல்லாஹ்வையும் அவனது தூதரையும் விரோதிப்பவர்கள்) அவர்களுடைய பெற்றோர்களாகவோ அல்லது பிள்ளைகளாகவோ, அல்லது சகோதரர்களாகவோ, அல்லது உறவினர்களாக இருப்பினும் சரியே. (அவர்களுடைய ஈமான் அவ்வாறு செய்வதை விட்டும் அவர்களைத் தடுக்கும். உறவு முறைகளைப் பேணுவதை விட ஈமானைப் பேணுவதே பலம் வாய்ந்தது. அல்லாஹ்வையும், அவனது தூதரையும் விரோதிப்பவர்களுடன் நேசம் கொள்ளாத) இவர்களுடைய உள்ளங்களில் (அல்லாஹ்) ஈமானைப் பதித்து (உறுதிப்படுத்தி)விட்டான். மேலும் அவன் தன்னிடமிருந்து வரும் உதவியைக் கொண்டு அவர்களைப் பலப்படுத்தி விட்டான். அவற்றிற்குக் கீழால் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும் சுவர்க்கங்களில் அவர்களை நுழைய வைப்பான். அவர்கள் அவற்றில் நிரந்தரமாக இருப்பார்கள். (அவர்கள் செய்த நற்கிரிகைகளை அவன் அங்கீகரித்து இவ்வுலகிலும், மறுமையிலும் அவனுடைய அருள்களைத் தாராளமாகக் கொடுத்து) அவர்களை அவன் பொருந்திக் கொண்டான். அவர்களும் (அவர்களுக்கு வழங்கப்பட்ட கூலிகளைப் பார்த்து) அவனைப் பொருந்திக் கொண்டார்கள். இத்தகையவர்கள் தான் அல்லாஹ்வின் கூட்டத்தினர்கள். அறிந்து

ذَٰلِكَ بِأَنَّهُمْ شَآقُّوا۟ ٱللَّهَ وَرَسُولَهُۥ ۖ وَمَن يُشَآقِّ ٱللَّهَ فَإِنَّ ٱللَّهَ شَدِيدُ
ٱلْعِقَابِ ﴿٤﴾ مَا قَطَعْتُم مِّن لِّينَةٍ أَوْ تَرَكْتُمُوهَا قَآئِمَةً
عَلَىٰٓ أُصُولِهَا فَبِإِذْنِ ٱللَّهِ وَلِيُخْزِىَ ٱلْفَٰسِقِينَ ﴿٥﴾ وَمَآ أَفَآءَ ٱللَّهُ
عَلَىٰ رَسُولِهِۦ مِنْهُمْ فَمَآ أَوْجَفْتُمْ عَلَيْهِ مِنْ خَيْلٍ وَلَا رِكَابٍ
وَلَٰكِنَّ ٱللَّهَ يُسَلِّطُ رُسُلَهُۥ عَلَىٰ مَن يَشَآءُ ۚ وَٱللَّهُ عَلَىٰ كُلِّ شَىْءٍ
قَدِيرٌ ﴿٦﴾ مَّآ أَفَآءَ ٱللَّهُ عَلَىٰ رَسُولِهِۦ مِنْ أَهْلِ ٱلْقُرَىٰ فَلِلَّهِ وَلِلرَّسُولِ
وَلِذِى ٱلْقُرْبَىٰ وَٱلْيَتَٰمَىٰ وَٱلْمَسَٰكِينِ وَٱبْنِ ٱلسَّبِيلِ كَىْ لَا يَكُونَ
دُولَةًۢ بَيْنَ ٱلْأَغْنِيَآءِ مِنكُمْ ۚ وَمَآ ءَاتَىٰكُمُ ٱلرَّسُولُ فَخُذُوهُ وَمَا
نَهَىٰكُمْ عَنْهُ فَٱنتَهُوا۟ ۚ وَٱتَّقُوا۟ ٱللَّهَ ۖ إِنَّ ٱللَّهَ شَدِيدُ ٱلْعِقَابِ ﴿٧﴾
لِلْفُقَرَآءِ ٱلْمُهَٰجِرِينَ ٱلَّذِينَ أُخْرِجُوا۟ مِن دِيَٰرِهِمْ وَأَمْوَٰلِهِمْ
يَبْتَغُونَ فَضْلًا مِّنَ ٱللَّهِ وَرِضْوَٰنًا وَيَنصُرُونَ ٱللَّهَ وَرَسُولَهُۥٓ ۚ أُو۟لَٰٓئِكَ
هُمُ ٱلصَّٰدِقُونَ ﴿٨﴾ وَٱلَّذِينَ تَبَوَّءُو ٱلدَّارَ وَٱلْإِيمَٰنَ مِن قَبْلِهِمْ
يُحِبُّونَ مَنْ هَاجَرَ إِلَيْهِمْ وَلَا يَجِدُونَ فِى صُدُورِهِمْ حَاجَةً
مِّمَّآ أُوتُوا۟ وَيُؤْثِرُونَ عَلَىٰٓ أَنفُسِهِمْ وَلَوْ كَانَ بِهِمْ خَصَاصَةٌ ۚ
وَمَن يُوقَ شُحَّ نَفْسِهِۦ فَأُو۟لَٰٓئِكَ هُمُ ٱلْمُفْلِحُونَ ﴿٩﴾

கொள்ளுங்கள், நிச்சயமாக அல்லாஹ்வின் கூட்டத்தினர் தான் வெற்றி பெற்றவர்கள். (பத்ர் யுத்த தினத்தில் அபூ உபைதா (ரழி) அவர்களை அவர்களின் தந்தை எதிர்கொள்ள முற்பட்டார். ஆனால் அபூ உபைதா (ரழி) அவர்கள் விலகிச் சென்று கொண்டிருந்தார்கள். பல முறை முற்பட்ட போது அபூ உபைதா (ரழி) அவர்கள் காபிரான தம் தந்தையைக் கொன்று விட்டார்கள். அச்சந்தர்ப்பத்தில் தான் இவ்வசனம் இறங்கியது. (ஹாகிம், தபராணி, இப்னு அபீ ஹாதிம்)

## அல்-ஹஷ்ர்

1 வானங்களிலும், பூமியிலும் உள்ளவை அல்லாஹ்வைத் தூய்மைப்படுத்துகின்றன. அவன் மிகைக்கக் கூடியவனும், அறிவு ஞானமுடையோனுமாவான்.

2 அவனே வேதக்காரர்களில் நிராகரித்தவர்களை (காபிரானவர்களை) முதல் வெளியேற்றத்தில் அவர்களுடைய வீடுகளில் இருந்து வெளியேற்றினான். (அவர்கள் பனுன் நழீர் என்ற பிரிவினர் ஆவர். இஸ்ரவேலர்களுக்கிடையில் ஏற்பட்ட குழப்பங்களின் பின்னணியில் அவர்கள் மதீனாவிற்கு வந்து குடியேறினார்கள். மக்காவின் இணைவைப்பாளர்களுடன் ஒத்துழைக்க மாட்டோம் என்று நபியவர்களுடன் உடன்படிக்கை செய்துவிட்டு அதை மீறினார்கள். எனவே நபியவர்கள் அவர்கள் நாடுகடத்தப்படுவதை ஏற்றுக் கொள்ளும் வரை அவர்களை முற்றுகையிட்டார்கள். இது அவர்களின் முதல் வெளியேற்றம். அவர்களின் கடைசி வெளியேற்றம் உமர் ரழி அவர்களின் ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்தது.) நீங்கள் அவர்கள் வெளியேறுவார்கள் என நினைத்திருக்கவில்லை. (ஏனெனில் அவர்களிடம் கோட்டைகள், சொத்துக்கள், பேரீத்தம் பழத் தோட்டங்கள், ஆட்பலம் என்பன காணப்பட்டன.) அவர்களும் அவர்களுடைய கோட்டைகள் அல்லாஹ்வை விட்டும் (அவனது தண்டனையை விட்டும்) அவர்களைப் பாதுகாக்கும் என எண்ணிக் கொண்டிருந்தனர். அவர்கள் நினைக்காதவாறு அல்லாஹ்வின் தண்டனை அவர்களுக்கு வந்து விட்டது. (இப்படிப்பட்ட ஒரு தண்டனை அவர்களுக்கு வருமென அவர்கள் கற்பனை கூட செய்திருக்கவில்லை.) அல்லாஹ் அவர்களுடைய உள்ளங்களில் கடுமையான பயத்தைப் போட்டுவிட்டான். (நபியவர்கள் கூறினார்கள், ஒருமாதத் தொலைதூர அளவு நான் பயத்தைக் கொண்டு உதவி செய்யப்பட்டுள்ளேன்.) அவர்கள் அவர்களுடைய வீடுகளை அவர்களுடைய கைகளாலும், மு.்.மின்களுடைய கைகளாலும் நாசப்படுத்தினார்கள். (தாம் வெளியேற்றப்படுவதை உறுதியாக அறிந்ததும் மு.்.மின்களை அவர்களுடைய வீடுகளில் வசிக்கவிடக்கூடாது என்பதற்காக வீடுகளுக்கு உள்ளே இருந்து கொண்டு அவற்றை அழிக்க முற்பட்டார்கள். இமாம் ஸுஹ்ரி, உர்வா பின் ஸுபைர் ஆகியோர் குறிப்பிடுகின்றார்கள்: அவர்களுடைய ஒட்டகங்கள் சுமக்குமளவு பொருட்களை அவர்கள் எடுத்துச் செல்ல நபியவர்கள் அனுமதித்தார்கள். அவர்கள் வீடுகளை இடித்து விட்டு நல்ல நிலையில் காணப்பட்ட மரக் குற்றிகளையும், தூண்களையும் எடுத்துச் சென்றார்கள். மு.்.மின்கள் ஏனையவற்றை நாசப்படுத்தினர்.) சிந்தனையுடையவர்களே! நீங்கள் படிப்பினை பெறுங்கள்.

3 அவர்களை (அவர்களுடைய ஊர்களிலிருந்து) வெளியேற்ற வேண்டும் என்ற விதியை அவர்களுக்கு அல்லாஹ் ஏற்படுத்தியிருக்காவிட்டால் உலகத்தில் அவர்களை (பனூ குறைளா என்ற பிரிவினருக்கு நடந்ததைப் போன்று கொலை செய்வதன் மூலமாகவும், சிறைப்படுத்துவதன் மூலமாகவும்) அவர்களை அவன் தண்டித்திருப்பான்.

4 அது அவர்கள் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் விரோதித்துக் கொண்ட காரணத்தினாலாகும். யார் அல்லாஹ்வை விரோதிக்கிறாரோ அல்லாஹ் (அவர்களைத்) தண்டிப்பதில் மிகக் கடுமையானவன்.

5 நீங்கள் அவர்களுடைய பேரீத்தம் பழ மரங்களில் நின்றும் வெட்டியதும் அல்லது (வெட்டாமல்) அவற்றின் வேர்களில் நிற்கக்கூடிய நிலையில் விட்டதும் அல்லாஹ்வின் உத்தரவின் படியாகும். (பனுன் நழீர் யுத்தத்தின் போது சில முஸ்லிம்கள் காபிர்களுக்குக் கோபத்தை ஏற்படுத்துவதற்காக அவர்களுடைய ஈத்தமரங்களை வெட்ட ஆரம்பித்தனர். அப்போது அவர்கள் நபியவர்களைப் பார்த்து "நீர் நல்லதை நாடும் ஒரு நபியென வாதிடுகிறீரல்லவா? மரங்களை வெட்டுவதும் அவற்றை எரிப்பதும் நலவில் உள்ளதா? உமக்கு இறக்கப்பட்ட வேதத்தில் பூமியில் அக்கிரமம் புரிவது அனுமதிக்கப்பட்டுள்ளதா?" என வினவினர். அது முஸ்லிம்களுக்குக் கவலையை ஏற்படுத்தியது. அச்சந்தர்ப்பத்தில் இவ்வசனம் இறங்கியது.) மேலும் அல்லாஹ்வுக்கு வழிப்பட மறுக்கும் கெட்டவர்களை இழிவுபடுத்துமுகமாகவும் (அல்லாஹ் இதைச் செய்தான்.)
6 மேலும் அவர்களிடமிருந்து அல்லாஹ் தனது தூதருக்கு மீட்டுக் கொடுத்தவற்றைப் பெறுவதற்காக நீங்கள் குதிரைகளையோ, ஒட்டகங்களையோ ஓட்டவில்லை. (அதற்காக நீங்கள் யுத்தம் புரியவுமில்லை, சிரமப்படவுமில்லை.)
7 கிராம வாசிகளிடமிருந்து (யுத்தமின்றி) அல்லாஹ் தனது தூதருக்கு மீட்டுக் கொடுத்தவை அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும், அவர்களுடைய (ஹாசிம்,முத்தலிப் குடும்பத்தைச் சேர்ந்தவர்களான) உறவினர்களுக்கும், (தகப்பனை இழந்த சிறார்களான) அநாதைகளுக்கும், ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும் உரியவையாகும். (இது யுத்தம் செய்யப்படாமல் காபிர்களிடமிருந்து முஸ்லிம்களுக்குக் கிடைக்கும் பொருட்களைப் பங்கீடு செய்யும் முறையாகும். இதில் நபியவர்களின் பங்கு அவர்களின் மரணத்தின் பின் முஸ்லிம்களின் பொது நலன்களில் செலவு செய்யப்படும்.) பணக்காரர்களுக்கிடையில் சுற்றிக் கொண்டிருக்கும் பொருட்களாக இவை மாறிவிடாமல் இருப்பதற்காக (இவ்வாறு பங்கீடு செய்யும்படி அல்லாஹ் ஏவியுள்ளான்.) நபியவர்கள் உங்களுக்கு எதைத் தருகின்றார்களோ அதை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள். அவர்கள் உங்களுக்கு எதைத் தடுக்கின்றார்களோ அதைத் தவிர்ந்து கொள்ளுங்கள்.
8 (மக்காவில்) தமது வீடுகளிலிருந்து வெளியேற்றப்பட்ட ஏழைகளுக்கும் (இதில் பங்குண்டு). அவர்கள் (உலகத்தில் அல்லாஹ்வின்) அருளையும் (மறுமையில் அவனின்) பொருத்தத்தையும் எதிர்பார்க்கின்றனர். மேலும் அவர்கள் (காபிர்களுடன் புனிதப் போர் செய்வதன் மூலமாக) அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் உதவி செய்கின்றார்கள். இவர்கள் தான் உண்மையாளர்கள்.
9 இவர்களுக்கு முன்பு (மதீனாவில்) வசித்து ஈமான் கொண்டவர்(களாகிய அன்ஸார்)கள் (மக்கா வாசிகளான) அவர்களிடம் ஹிஜ்ரத் வந்தவர்களை விரும்புகின்றார்கள். (முஹாஜிர்களுக்கு நலவுகள் பல செய்து அவர்களது செல்வங்களிலும், வீடுகளிலும் பங்கு கொடுத்தார்கள்.) அவர்களுக்கு (முஹாஜிர்களுக்கு) கொடுக்கப்படுவனவற்றில் அவர்கள் எந்தத் தேவையையும் கண்டு கொள்ளமாட்டார்கள். (நபியவர்கள் பனுன் நழீர் கூட்டத்தினரிடமிருந்து யுத்தமின்றி பல பொருட்களைப் பெற்றுக்கொண்ட பொழுது அன்ஸார்களை அழைத்து பின்வருமாறு கூறினார்கள்: "நீங்கள் விரும்பினால் பனுன் நழீர்களிடமிருந்து அல்லாஹ் எனக்கு வழங்கியவற்றை உங்களுக்கும், முஹாஜிர்களுக்கும் பங்கு வைப்பேன். அவர்கள் உங்கள் இடங்களில் தொடர்ந்தும் இருப்பார்கள், அல்லது அவர்களுக்கு மட்டும் அவற்றைக் கொடுப்பேன். அவர்கள் உங்கள் இடங்களிலிருந்து வெளியேறிவிடுவார்கள். அதற்கவர்கள் முஹாஜிர்களுக்கு மாத்திரம் வழங்குவதை மனவிருப்பத்துடன் ஒப்புக் கொண்டார்கள்.) அவர்கள் (அன்ஸார்கள் தமக்குத் தேவையிருந்த போதும் தம்மைவிட (மற்றவர்களைத்) தேர்ந்தெடுப்பார்கள். யார் (மார்க்கம் அவர்களுக்கு ஏவியவற்றில் செலவு செய்து) கஞ்சத்தனத்திலிருந்து பாதுகாக்கப்படுகின்றார்களோ அவர்களே வெற்றி பெற்றவர்கள். (கஞ்சத்தனம் உள்ளவர்கள் வெற்றி பெறமாட்டார்கள்.)
10 (ஈமான் கொண்ட நிலையில் இறுதி நாள் வரை) அவர்களுக்குப் பின்னால் வருபவர்கள் (பின்வருமாறு அல்லாஹ்விடம்) பிரார்த்திப்பார்கள்: "எங்கள் நாயனே! எங்களையும் மன்னித்து, இன்னும் ஈமான் கொள்வதில் எங்களை முந்திவிட்ட எமது சகோதரர்களையும் (முஹாஜிர்கள் மற்றும் அன்ஸார்கள்) மன்னிப்பாயாக. ஈமான் கொண்டவர்கள் மீது குரோதத்தை எமது உள்ளங்களில் ஏற்படுத்திவிடாதே." (ஈமான் கொண்டவர்களில் நபித்தோழர்கள் முதன்மையானவர்கள். எனவே அவர்கள் மீது சீஆக்களைப் போன்று குரோதம் கொள்வாராயின் அவர் ஷைத்தானின் தீண்டுதலுக்கு உள்ளாகி பாவியாகி விடுகின்றார். மேலும் அவர்களுக்கு ஏசுவதும், அவர்களைத் தாழ்த்திப் பேசுவதும் குற்றமாகும்.
11 (நபியே!) நீங்கள் நயவஞ்சகர்களைக் கவனிக்கவில்லையா? (அவர்கள் அப்துல்லாஹ் பின் உபைய்யும் அவனது தோழர்களும் ஆவர்.) அவர்கள் வேதக்காரர்களில் காபிராகிவிட்ட அவர்களது சகோதரர்களைப் பார்த்து "நீங்கள் வெளியேற்றப்பட்டால் உங்களுடன் நாங்களும் வெளியேறுவோம்" எனக் கூறுகின்றார்கள். (இவர்கள் பனுன் நழீர் கூட்டத்தினருக்கு "நீங்கள் அங்கிருந்து வெளியேற வேண்டாம். அங்கேயே இருங்கள்." எனத் தகவல் அனுப்பியிருந்தனர்.) மேலும் (அவர்கள் கூறினார்கள்) நாங்கள் உங்கள்

وَالَّذِينَ جَاءُو مِنْ بَعْدِهِمْ يَقُولُونَ رَبَّنَا اغْفِرْ لَنَا
وَلِإِخْوَانِنَا الَّذِينَ سَبَقُونَا بِالْإِيمَانِ وَلَا تَجْعَلْ فِي قُلُوبِنَا
غِلًّا لِلَّذِينَ آمَنُوا رَبَّنَا إِنَّكَ رَءُوفٌ رَحِيمٌ ﴿١٠﴾ أَلَمْ تَرَ إِلَى
الَّذِينَ نَافَقُوا يَقُولُونَ لِإِخْوَانِهِمُ الَّذِينَ كَفَرُوا مِنْ أَهْلِ
الْكِتَابِ لَئِنْ أُخْرِجْتُمْ لَنَخْرُجَنَّ مَعَكُمْ وَلَا نُطِيعُ فِيكُمْ
أَحَدًا أَبَدًا وَإِنْ قُوتِلْتُمْ لَنَنْصُرَنَّكُمْ وَاللَّهُ يَشْهَدُ إِنَّهُمْ لَكَاذِبُونَ
﴿١١﴾ لَئِنْ أُخْرِجُوا لَا يَخْرُجُونَ مَعَهُمْ وَلَئِنْ قُوتِلُوا لَا يَنْصُرُونَهُمْ
وَلَئِنْ نَصَرُوهُمْ لَيُوَلُّنَّ الْأَدْبَارَ ثُمَّ لَا يُنْصَرُونَ ﴿١٢﴾
لَأَنْتُمْ أَشَدُّ رَهْبَةً فِي صُدُورِهِمْ مِنَ اللَّهِ ذَٰلِكَ بِأَنَّهُمْ قَوْمٌ
لَا يَفْقَهُونَ ﴿١٣﴾ لَا يُقَاتِلُونَكُمْ جَمِيعًا إِلَّا فِي قُرًى
مُحَصَّنَةٍ أَوْ مِنْ وَرَاءِ جُدُرٍ بَأْسُهُمْ بَيْنَهُمْ شَدِيدٌ تَحْسَبُهُمْ
جَمِيعًا وَقُلُوبُهُمْ شَتَّىٰ ذَٰلِكَ بِأَنَّهُمْ قَوْمٌ لَا يَعْقِلُونَ ﴿١٤﴾
كَمَثَلِ الَّذِينَ مِنْ قَبْلِهِمْ قَرِيبًا ذَاقُوا وَبَالَ أَمْرِهِمْ وَلَهُمْ عَذَابٌ
أَلِيمٌ ﴿١٥﴾ كَمَثَلِ الشَّيْطَانِ إِذْ قَالَ لِلْإِنْسَانِ اكْفُرْ فَلَمَّا كَفَرَ
قَالَ إِنِّي بَرِيءٌ مِنْكَ إِنِّي أَخَافُ اللَّهَ رَبَّ الْعَالَمِينَ ﴿١٦﴾

விடயத்தில் ஒரு போதும் யாருக்கும் கட்டுப்பட மாட்டோம். உங்களுடன் யுத்தம் புரியப்பட்டால் நிச்சயம் நாங்கள் (உங்கள் எதிரிகளுக்குக் கேடாக) உங்களுக்கு உதவி செய்வோம். (அவர்களுடன் வெளியாகுவதாகவும், அவர்களுக்கு உதவி செய்வதாகவும் அவர்கள் வாக்களிக்கும் விடயத்தில்) நிச்சயமாக அவர்கள் பொய் சொல்கின்றார்கள் என அல்லாஹ் சாட்சி சொல்கின்றான்.

12 அவர்கள் (பனுன் நழீர்) வெளியேற்றப்பட்டால் அவர்களுடன் இவர்கள் வெளியேற மாட்டார்கள். மேலும் அவர்களுடன் யுத்தம் புரியப்பட்டாலும் அவர்களுக்கு உதவி செய்யவும் மாட்டார்கள். (அல்லாஹ் குறிப்பிட்டது போன்று பனுன் நழீர் வெளியேற்றப்பட்ட நேரத்தில் இவர்கள் வெளியேறவுமில்லை. பனூ குரைளாக்களுடனும், கைபர் வாசிகளுடனும் யுத்தம் புரியப்பட்ட போது இவர்கள் உதவி செய்யவுமில்லை.) அவர்களுக்கு இவர்கள் உதவி செய்தாலும் (தோல்வி அடைந்து) பின்வாங்கி ஓடியிருப்பார்கள். பின்பு இவர்கள் (முனாபிக்கள்) எவராலும் உதவிசெய்யப்பட மாட்டார்கள். (அல்லாஹ் அவர்களை இழிவுபடுத்திவிடுவான்.)

13 நிச்சயமாக அவர்கள் தமது உள்ளங்களில் அல்லாஹ்வைப் பயப்படுவதை விட உங்களை மிகவும் பயப்படுகிறார்கள். அது (அவ்வாறு பயப்படுவது) அவர்கள் விளங்காத ஒரு கூட்டத்தினர் என்பதனால்தான். (அவர்களுக்கு விளக்கம் இருக்குமானால் அல்லாஹ் தான் உங்களை அவர்கள் மீது சாட்டியுள்ளான் என்பதை அறிந்து கொள்வார்கள்.)

14 (கோழைத்தனத்தின்) காரணமாக அரண்களால் பாதுகாக்கப்பட்ட கிராமங்களிலோ அல்லது சுவர்களுக்குப் பின்னாலோ அன்றி அவர்கள் அனைவரும் ஒன்றிணைந்து சண்டை செய்யமாட்டார்கள். அவர்களுக்கிடையில் அவர்களுடைய சக்தி கடுமையானது. நீங்கள் அவர்களை ஒன்றாய் இருப்பவர்களாக எண்ணுவீர்கள். அவர்களுடைய உள்ளங்கள் பிரிந்திருக்கின்றன. (அவர்கள் ஒன்றிணைந்து இருப்பதெல்லாம் வெளிப்படையில் மாத்திரம் தான்.) அது (அவ்வாறு பிரிந்திருப்பது) அவர்கள் அறியாத கூட்டத்தினர் என்பதனாலாகும். (அவர்கள் அறிவுள்ளவர்களாக இருப்பின் சத்தியத்தை அறிந்து ஒற்றுமைப்பட்டிருப்பார்கள்.)

15 (அவர்களுக்கு உதாரணம்) இவர்களுக்கு சில காலங்கள் முன்னாலிருந்து (பத்ர் யுத்தத்தின் போது) தமது தீய செயல்களுக்குரிய தண்டனையை அனுபவித்தவர்களைப் போலாகும். (இது பனுன் நழீர்கள் வெளியேற்றப்படுவதற்கு ஆறு மாதங்கள் முன்னர் நடைபெற்றது.) அவர்களுக்கு நோவினையுள்ள தண்டனை உள்ளது.

16 (உதவி செய்யாமல் பின்வாங்கும் விடயத்தில் இந்த முனாபிக்களுக்கு உதாரணமாகிறது:) ஷைத்தானைப் போன்றாகும். அவன் மனிதனைப் பார்த்து நீ (அல்லாஹ்வை) நிராகரித்துவிடு என்று சொன்னான். அவன் நிராகரித்த பொழுது "நான் உன்னை விட்டும் நீங்கிக் கொள்கின்றேன். நான் அகிலத்தாரின் நாயன் அல்லாஹ்வைப் பயப்படுகின்றேன்" எனக் கூறிவிட்டான்.

17 அவர்கள் இருவருடையவும் (ஷைத்தானுடையவும், அவனுக்குக் கட்டுப்பட்ட மனிதனுடையவும்) முடிவாகிறது அவர்கள் இருவரும் நிரந்தரமாக நரகில் இருப்பார்கள். அதுவே அநீதம் இழைப்பவர்களுடைய கூலியாகும்.

18 விசுவாசிகளே! நீங்கள் (உங்களுக்கு ஏவப்பட்டவைகளைச் செய்வதன் மூலமும் தடுக்கப்பட்டவைகளைத் தவிர்ந்து கொள்வதன் மூலமும்) அல்லாஹ்வைப் பயந்து கொள்ளுங்கள். ஒவ்வோர் ஆத்மாவும் நாளை (மறுமை)க்காக (நற்கிரிகைகளில்) எவற்றை முற்படுத்தப்பட்டுள்ளன எனக் கவனித்துப் பார்த்துக் கொள்ளட்டும்.

19 நீங்கள் (அவனது கட்டளைகளை விட்டுவிட்டு) அல்லாஹ்வை மறந்தவர்கள் போன்று இருக்க வேண்டாம். (அவர்கள் அவனை மறந்ததன் காரணமாக தங்களுக்கு

فَكَانَ عَٰقِبَتَهُمَآ أَنَّهُمَا فِي ٱلنَّارِ خَٰلِدَيۡنِ فِيهَاۚ وَذَٰلِكَ جَزَٰٓؤُاْ
ٱلظَّٰلِمِينَ ١٧ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ ٱتَّقُواْ ٱللَّهَ وَلۡتَنظُرۡ
نَفۡسٞ مَّا قَدَّمَتۡ لِغَدٖۖ وَٱتَّقُواْ ٱللَّهَۚ إِنَّ ٱللَّهَ خَبِيرُۢ بِمَا تَعۡمَلُونَ
١٨ وَلَا تَكُونُواْ كَٱلَّذِينَ نَسُواْ ٱللَّهَ فَأَنسَىٰهُمۡ أَنفُسَهُمۡۚ أُوْلَٰٓئِكَ
هُمُ ٱلۡفَٰسِقُونَ ١٩ لَا يَسۡتَوِيٓ أَصۡحَٰبُ ٱلنَّارِ وَأَصۡحَٰبُ
ٱلۡجَنَّةِۚ أَصۡحَٰبُ ٱلۡجَنَّةِ هُمُ ٱلۡفَآئِزُونَ ٢٠ لَوۡ أَنزَلۡنَا هَٰذَا
ٱلۡقُرۡءَانَ عَلَىٰ جَبَلٖ لَّرَأَيۡتَهُۥ خَٰشِعٗا مُّتَصَدِّعٗا مِّنۡ خَشۡيَةِ
ٱللَّهِۚ وَتِلۡكَ ٱلۡأَمۡثَٰلُ نَضۡرِبُهَا لِلنَّاسِ لَعَلَّهُمۡ يَتَفَكَّرُونَ
٢١ هُوَ ٱللَّهُ ٱلَّذِي لَآ إِلَٰهَ إِلَّا هُوَۖ عَٰلِمُ ٱلۡغَيۡبِ وَٱلشَّهَٰدَةِۖ
هُوَ ٱلرَّحۡمَٰنُ ٱلرَّحِيمُ ٢٢ هُوَ ٱللَّهُ ٱلَّذِي لَآ إِلَٰهَ إِلَّا هُوَ
ٱلۡمَلِكُ ٱلۡقُدُّوسُ ٱلسَّلَٰمُ ٱلۡمُؤۡمِنُ ٱلۡمُهَيۡمِنُ ٱلۡعَزِيزُ
ٱلۡجَبَّارُ ٱلۡمُتَكَبِّرُۚ سُبۡحَٰنَ ٱللَّهِ عَمَّا يُشۡرِكُونَ
٢٣ هُوَ ٱللَّهُ ٱلۡخَٰلِقُ ٱلۡبَارِئُ ٱلۡمُصَوِّرُۖ لَهُ ٱلۡأَسۡمَآءُ ٱلۡحُسۡنَىٰۚ
يُسَبِّحُ لَهُۥ مَا فِي ٱلسَّمَٰوَٰتِ وَٱلۡأَرۡضِۖ وَهُوَ ٱلۡعَزِيزُ ٱلۡحَكِيمُ ٢٤

مدنية ٦٠ سُورَةُ ٱلۡمُمۡتَحَنَةِ آياتها ١٣

விமோசனம் அளிக்கும் நற்கிரிகைகளை விட்டும்) அவர்களை அவன் மறக்கச் செய்துவிட்டான். அவர்கள் (அல்லாஹ்வுக்கு வழிப்படாத) பாவிகள்.

20 நரகவாசிகளும், சுவனவாசிகளும் சமமாகமாட்டார்கள். சுவனவாசிகள்தான் வெற்றி பெற்றவர்கள். (தாம் விரும்பும் அனைத்தையும் பெற்றுக் கொள்வார்கள். தாம் வெறுக்கும் அனைத்தை விட்டும் ஈடேற்றம் பெறுவார்கள்.)

21 நாம் இந்தக் குர்ஆனை ஒரு மலையின் மீது இறக்கிவைத்திருந்தால் அல்லாஹ்வின் பயத்தின் காரணமாக பயந்ததாகவும், பிளந்து விடக்கூடியதாகவும் (நபியே) நீர் அதைக் கண்டிருப்பீர். (பெரியதும் உறுதியானதுமான மலைகள் கூட அல்குர்ஆனின் மகிமை, இலக்கிய, இலக்கண வன்மைகள், உள்ளங்களை உருக வைக்கும் உபதேசங்கள் என்பவற்றைக் கண்டு பயந்து பிளந்து விடும்.)

22 அவன் அல்லாஹ் அன்றி வணக்கத்துக்குரிய நாயன் வேறில்லை. அவன் (புலன்களுக்கு) மறைந்தவற்றையும், (அவற்றால்) உணரப்படக் கூடியவற்றையும் அறிந்தவன்.

23 அவனே அல்லாஹ், அவனை விடுத்து வணக்கத்துக்குரிய நாயன் வேறு யாருமில்லை. (அவன்) அரசன், (எல்லாக் குறைகளை விட்டும்) தூய்மையானவன். (தனது அடியார்களுக்கு அநீதத்தை விட்டும்) அபயமளிப்பவன். (அடியார்களின் செயல்களை) கண்காணிப்பவன். (யாவற்றையும்) மிகைப்பவன். அடக்கி ஆள்பவன். (எல்லாக் குறைகளை விட்டும் நீங்கி) பெருமைத் தனத்தை எடுத்துக் கொண்டவன். (பெருமை என்பது அடியார்கள் விடயத்தில் இகழுக்குரிய ஒரு பண்பாக இருந்த போதும் அல்லாஹ்வின் விடயத்தில் புகழுக்குரிய பண்பாகும்.)

24 அவன் அல்லாஹ். (படைப்பினங்களைப்) படைப்பவன், (ஒழுங்கான அமைப்பில்) உண்டாக்குபவன். (படைப்பினங்களை) உருவமைப்பவன். அவனுக்கு அழகிய திருநாமங்கள் இருக்கின்றன. வானங்களிலும் பூமியிலுமுள்ளவை அவனைத் துதிக்கின்றன. அவன் (யாவற்றையும்) மிகைக்கக்கூடியவன், அறிவு ஞானம் மிக்கவன்.

## அல்-மும்தஹினா

1 விசுவாசிகளே! நீங்கள் எனதும், உங்களினதும் விரோதிகளை நேசர்களாக ஆக்கிக் கொள்ள வேண்டாம். (இவ்வசனம் நபியவர்கள் மக்கா வெற்றிக்குத் தயாரான சந்தர்ப்பத்தில் அத்தகவலை மக்காவுக்கு அனுப்ப முயன்ற ஹாதிப் பின் அபீ பல்தஆ என்பவரின் விடயத்தில் இறங்கியது. இவ்வசனம் இறை நிராகரிப்பாளர்களுடன் எவ்வகையிலும் நேசம் கொள்ளக் கூடாது என்பதை அறிவிக்கின்றது. உங்களுக்கிடையில் உள்ள) அன்பின் காரணமாக (நபியின் செய்திகளை) அவர்களுக்கு வழங்குகின்றீர்கள். அவர்களோ உங்களுக்கு வந்திருக்கும் உண்மைகளை (அல்லாஹ், இறைத் தூதர், அல் குர்ஆன், நேர் வழி என்பவற்றை) நிராகரிக்கின்றார்கள். உங்கள் நாயன் அல்லாஹ்வை ஈமான் கொண்டதற்காக (அவனின்) தூதரையும், உங்களையும் வெளியேற்றினார்கள். என்னுடைய பாதையில் யுத்தம் செய்வதற்காகவும், என்னுடைய பொருத்தத்தைத் தேடியதற்காகவும் நீங்கள் வெளியாகி இருந்தால் (என்னுடையவும், உங்களுடையவும் விரோதிகளை நேசர்களாக ஆக்கிக் கொள்ள வேண்டாம். நீங்கள் அவர்களின் மீது கொண்ட அன்பின் காரணமாக) அவர்களுக்கு இரகசியமாக செய்திகளை வழங்குகின்றீர்கள். நீங்கள் மறைக்கும் (செய்திகளை அவர்களுக்குப் பரிமாறுவது போன்ற) விடயங்களையும், மற்றும் பகிரங்கப்படுத்தும் விடயங்களையும் நான் அறிவேன். உங்களில் யாராவது அதைச் செய்வாராயின் அவர் நேரான வழியிலிருந்து தவறிவிட்டார்.

2 அவர்கள் உங்களைக் கண்டு கொள்வார்களாயின் உங்களுக்கு விரோதிகளாகவே இருப்பார்கள். (தமது உள்ளங்களில் உங்கள் மீதுள்ள விரோதத்தை வெளிப்படுத்தி

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ لَا تَتَّخِذُوا۟ عَدُوِّى وَعَدُوَّكُمْ أَوْلِيَآءَ تُلْقُونَ
إِلَيْهِم بِٱلْمَوَدَّةِ وَقَدْ كَفَرُوا۟ بِمَا جَآءَكُم مِّنَ ٱلْحَقِّ يُخْرِجُونَ ٱلرَّسُولَ
وَإِيَّاكُمْ أَن تُؤْمِنُوا۟ بِٱللَّهِ رَبِّكُمْ إِن كُنتُمْ خَرَجْتُمْ جِهَٰدًا فِى سَبِيلِى
وَٱبْتِغَآءَ مَرْضَاتِى تُسِرُّونَ إِلَيْهِم بِٱلْمَوَدَّةِ وَأَنَا۠ أَعْلَمُ بِمَآ أَخْفَيْتُمْ
وَمَآ أَعْلَنتُمْ وَمَن يَفْعَلْهُ مِنكُمْ فَقَدْ ضَلَّ سَوَآءَ ٱلسَّبِيلِ ١ إِن
يَثْقَفُوكُمْ يَكُونُوا۟ لَكُمْ أَعْدَآءً وَيَبْسُطُوٓا۟ إِلَيْكُمْ أَيْدِيَهُمْ وَأَلْسِنَتَهُم
بِٱلسُّوٓءِ وَوَدُّوا۟ لَوْ تَكْفُرُونَ ٢ لَن تَنفَعَكُمْ أَرْحَامُكُمْ وَلَآ أَوْلَٰدُكُمْ
يَوْمَ ٱلْقِيَٰمَةِ يَفْصِلُ بَيْنَكُمْ وَٱللَّهُ بِمَا تَعْمَلُونَ بَصِيرٌ ٣ قَدْ
كَانَتْ لَكُمْ أُسْوَةٌ حَسَنَةٌ فِىٓ إِبْرَٰهِيمَ وَٱلَّذِينَ مَعَهُۥٓ إِذْ قَالُوا۟ لِقَوْمِهِمْ
إِنَّا بُرَءَٰٓؤُا۟ مِنكُمْ وَمِمَّا تَعْبُدُونَ مِن دُونِ ٱللَّهِ كَفَرْنَا بِكُمْ وَبَدَا بَيْنَنَا
وَبَيْنَكُمُ ٱلْعَدَٰوَةُ وَٱلْبَغْضَآءُ أَبَدًا حَتَّىٰ تُؤْمِنُوا۟ بِٱللَّهِ وَحْدَهُۥٓ إِلَّا
قَوْلَ إِبْرَٰهِيمَ لِأَبِيهِ لَأَسْتَغْفِرَنَّ لَكَ وَمَآ أَمْلِكُ لَكَ مِنَ ٱللَّهِ مِن شَىْءٍ
رَّبَّنَا عَلَيْكَ تَوَكَّلْنَا وَإِلَيْكَ أَنَبْنَا وَإِلَيْكَ ٱلْمَصِيرُ ٤ رَبَّنَا لَا تَجْعَلْنَا
فِتْنَةً لِّلَّذِينَ كَفَرُوا۟ وَٱغْفِرْ لَنَا رَبَّنَآ إِنَّكَ أَنتَ ٱلْعَزِيزُ ٱلْحَكِيمُ ٥

விடுவார்கள்.) மேலும் அவர்கள் (அடித்தல் போன்ற) கெடுதிகளின் மூலம் தமது கைகளையும், (ஏசுதல் போன்ற) கெடுதிகளின் மூலம் தமது நாவுகளையும் உங்கள் பால் நீட்டிவிடுவர். இன்னும் நீங்கள் (உங்கள் மார்க்கத்தை விட்டும் திரும்பி) காபிர்களாகுவதை அவர்கள் விரும்புகின்றனர்.

3 (மறுமை நாளில்) உங்கள் உறவினர்களும், பிள்ளைகளும் உங்களுக்குப் பயனளிக்க மாட்டார்கள். (அவ்வாறு பயனளிக்கும் இடத்தில் தான் அவர்களுக்காக வேண்டி காபிர்களுடன் நட்புக் கொள்ள வேண்டும். மாற்றமாக நீங்கள் காபிர்களை விரோதிப்பதும், அவர்களுடன் புனிதப் போர் புரிவதுமே உங்களுக்குப் பயனளிக்கும்.) மறுமை நாளில் (அல்லாஹ்) உங்களுக்கிடையில் பிரித்து விடுவான். (அவனுக்கு வழிப்பட்டவர்கள் சுவனம் நுழைவார்கள். அவனுக்கு மாறு செய்தவர்கள் நரகம் புகுவார்கள்.)

4 இப்றாஹீம் (அலை) அவர்களிலும், அவர்களுடன் இருந்தவர்களிலும் (பின்பற்றத்தக்க) அழகிய முன்மாதிரி உங்களுக்கு இருக்கின்றது. (ஹாதிம் பின் பல்தஆவே! இப்றாஹீம் (அலை) அவர்கள் தமது குடும்பத்தை விட்டும் விலகிக் கொண்டது போல் நீரும் விலகியிருக்கக் கூடாதா?) அவர்கள் தம் கூட்டத்தினரைப் பார்த்து “நாங்கள் உங்களை விட்டும், மேலும் அல்லாஹ் அன்றி நீங்கள் வணங்குபவற்றை (சிலைகளை) விட்டும் நீங்கி விட்டோம். (நாங்கள் உங்களைச் சார்ந்தவர்களுமல்லர், நீங்கள் எங்களைச் சார்ந்தவர்களுமல்லர்.) நாங்கள் உங்களை (உங்கள் மார்க்கத்தை) நிராகரித்து விட்டோம். நீங்கள் அல்லாஹ் ஒருவனை மாத்திரம் வணங்கும் வரை உங்களுக்கும், எங்களுக்கும் இடையில் எப்பொழுதும் விரோதமும், கோபமும் வெளியாகிவிட்டது. (நீங்கள் அதைச் செய்வீர்களாயின் விரோதமும் வெறுப்பும் நட்பாகவும், விருப்பாகவும் மாறிவிடும்)” எனக் கூறினார்கள். இப்றாஹீம் (அலை) அவர்கள் தனது தகப்பனைப் பார்த்து “உங்களுக்காக நான் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருவேன். அல்லாஹ்விடமிருந்து உங்களுக்காக எதையும் நான் உடமையாக்கிக் கொள்ளமாட்டேன்.” என்ற அவர்களுடைய வார்த்தைகளைத் தவிர (அவர்களுடைய மற்ற எல்லா வார்த்தைகளிலும் முன்மாதிரி இருக்கின்றது.)

5 எங்கள் இறைவா! எங்களை இறை நிராகரிப்பாளர்களுக்கு சோதனையாக ஆக்கிவிடாதே. (முஜாஹித் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: அவர்களுடைய கையினாலோ, உன் தண்டனை மூலமாகவோ எங்களைத் தண்டித்து விடாதே. அப்போது அவர்கள்: “இவர்கள் உண்மையான மார்க்கத்தில் இருந்தால் இவர்களுக்கு இத்தண்டனை ஏற்பட்டிருக்காது” எனக் கூறுவார்கள்.) எங்கள் நாயனே! நீ எங்களை மன்னித்துவிடுவாயாக. நிச்சயமாக நீ மிகைக்கக்கூடியவனும், அறிவு ஞானம் உள்ளவனுமாயிருக்கும்.

6 உங்களில் அல்லாஹ்வையும், மறுமை நாளையும் ஆதரவு வைப்பவர்களுக்கு இவர்களில் (இப்றாஹீம் (அலை) அவர்களிலும், அவர்களுடன் இருந்தவர்களிலும்) அழகிய முன்மாதிரி இருக்கின்றது. (இந்த முன்மாதிரி இவ்வுலகிலும், மறுவுலகிலும் அல்லாஹ்விடமிருந்து நன்மைகளை ஆதரவு வைக்கக் கூடியவர்களுக்கே இருக்கின்றது. இந்த முன்மாதிரியை) எவராவது புறக்கணிப்பாராயின் நிச்சயமாக அல்லாஹ் (தனது அடியார்களை விட்டும்) தேவையற்றவனும், புகழ் மிக்கவனுமாகும்.

7 அல்லாஹ் உங்களுக்கும், (மக்கா இணை வைப்பாளர்களான) நீங்கள் விரோதிப்பவர்களுக்குமிடையில் நட்பை ஏற்படுத்தி விடக்கூடும். (அது அவர்கள் இஸ்லாத்தை ஏற்று உங்கள் மார்க்கத்தில் இணையும் பொழுதாயிருக்கும். மக்கா வெற்றிக்குப் பின் அவர்களில் அதிகமானவர்கள் இஸ்லாத்தில் நுழைந்து நல்ல

لَقَدْ كَانَ لَكُمْ فِيهِمْ أُسْوَةٌ حَسَنَةٌ لِّمَن كَانَ يَرْجُوا۟ ٱللَّهَ وَٱلْيَوْمَ ٱلْـَٔاخِرَ
وَمَن يَتَوَلَّ فَإِنَّ ٱللَّهَ هُوَ ٱلْغَنِىُّ ٱلْحَمِيدُ ٦ ۞ عَسَى ٱللَّهُ أَن يَجْعَلَ
بَيْنَكُمْ وَبَيْنَ ٱلَّذِينَ عَادَيْتُم مِّنْهُم مَّوَدَّةً ۚ وَٱللَّهُ قَدِيرٌ ۚ وَٱللَّهُ غَفُورٌ رَّحِيمٌ
٧ لَّا يَنْهَىٰكُمُ ٱللَّهُ عَنِ ٱلَّذِينَ لَمْ يُقَـٰتِلُوكُمْ فِى ٱلدِّينِ وَلَمْ يُخْرِجُوكُم
مِّن دِيَـٰرِكُمْ أَن تَبَرُّوهُمْ وَتُقْسِطُوٓا۟ إِلَيْهِمْ ۚ إِنَّ ٱللَّهَ يُحِبُّ ٱلْمُقْسِطِينَ
٨ إِنَّمَا يَنْهَىٰكُمُ ٱللَّهُ عَنِ ٱلَّذِينَ قَـٰتَلُوكُمْ فِى ٱلدِّينِ وَأَخْرَجُوكُم
مِّن دِيَـٰرِكُمْ وَظَـٰهَرُوا۟ عَلَىٰٓ إِخْرَاجِكُمْ أَن تَوَلَّوْهُمْ ۚ وَمَن يَتَوَلَّهُمْ فَأُو۟لَـٰٓئِكَ
هُمُ ٱلظَّـٰلِمُونَ ٩ يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓا۟ إِذَا جَآءَكُمُ ٱلْمُؤْمِنَـٰتُ
مُهَـٰجِرَٰتٍ فَٱمْتَحِنُوهُنَّ ۖ ٱللَّهُ أَعْلَمُ بِإِيمَـٰنِهِنَّ ۖ فَإِنْ عَلِمْتُمُوهُنَّ مُؤْمِنَـٰتٍ
فَلَا تَرْجِعُوهُنَّ إِلَى ٱلْكُفَّارِ ۖ لَا هُنَّ حِلٌّ لَّهُمْ وَلَا هُمْ يَحِلُّونَ لَهُنَّ ۖ وَءَاتُوهُم
مَّآ أَنفَقُوا۟ ۚ وَلَا جُنَاحَ عَلَيْكُمْ أَن تَنكِحُوهُنَّ إِذَآ ءَاتَيْتُمُوهُنَّ أُجُورَهُنَّ ۚ
وَلَا تُمْسِكُوا۟ بِعِصَمِ ٱلْكَوَافِرِ وَسْـَٔلُوا۟ مَآ أَنفَقْتُمْ وَلْيَسْـَٔلُوا۟ مَآ أَنفَقُوا۟ ۚ
ذَٰلِكُمْ حُكْمُ ٱللَّهِ ۖ يَحْكُمُ بَيْنَكُمْ ۚ وَٱللَّهُ عَلِيمٌ حَكِيمٌ ١٠ وَإِن فَاتَكُمْ
شَىْءٌ مِّنْ أَزْوَٰجِكُمْ إِلَى ٱلْكُفَّارِ فَعَاقَبْتُمْ فَـَٔاتُوا۟ ٱلَّذِينَ ذَهَبَتْ
أَزْوَٰجُهُم مِّثْلَ مَآ أَنفَقُوا۟ ۚ وَٱتَّقُوا۟ ٱللَّهَ ٱلَّذِىٓ أَنتُم بِهِۦ مُؤْمِنُونَ ١١

முஸ்லிம்களானார்கள். ஏற்கனவே இஸ்லாத்தை ஏற்றவர்களுக்கும், இவர்களுக்குமிடையில் மீண்டும் நட்பு ஏற்பட்டது. நபியவர்கள் அபூஸுஃப்யானின் மகள் உம்மு ஹபீபா (ரழி) அவர்களை திருமணம் செய்திருந்தும் அவர் மக்கா வெற்றியின் போது இஸ்லாத்தில் நுழைந்து நபியவர்களை விரோதிப்பதை விட்ட பின்பே நபியவர்கள் அவருடன் நட்புக்கொண்டனர். மார்க்கத்தை நிலை நாட்டு முகமாக மதம் மாறியவர்களுடன் முதன் முதல் போர் தொடுத்தவர் அபூ ஸுஃப்யானே என்ற கருத்தை அலி (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.) அல்லாஹ் (யாவற்றிற்கும்) சக்தி பெற்றவன்.
8 மார்க்க விடயத்தில் உங்களுடன் போராடாமலும், உங்களுடைய வீடுகளிலிருந்து உங்களை வெளியேற்றாமலும் இருப்பவர்களுக்கு (உறவினர்களைச் சேர்ந்து நடத்தல், விருந்தளித்தல், அயல் வீட்டுக் கடமைகளை நிறைவேற்றல் போன்ற) நன்மைகளைச் செய்வதையும் (அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை நிறைவேற்றி) அவர்களுடன் நேர்மையாக நடப்பதையும் அல்லாஹ் தடுக்கமாட்டான். நிச்சயமாக அல்லாஹ் நேர்மையாக நடப்பவர்களை விரும்புகின்றான். (இவ்வசனத்தின் கருத்தாவது: முஸ்லிம்களுக்குக் கெடுதிகள் செய்யாத காபிர்களுக்கு நன்மைகள் செய்வதையும், அவர்களுடன் நேர்மையாக நடப்பதையும் அல்லாஹ் உங்களுக்குத் தடை செய்யமாட்டான்.)
9 நிச்சயமாக அல்லாஹ் மார்க்க விடயங்களில் உங்களுடன் போரிட்டு உங்கள் வீடுகளிலிருந்து உங்களை வெளியேற்றிய (குறைசித் தலை)வர்களையும், உங்களை வெளியேற்றுவதற்கு (அவர்களுக்கு) உதவி செய்த (ஏனைய மக்கா) காபிர்களையும் தோழ்மை கொள்வதையே தடுக்கின்றான். அவர்களுடன் யாராவது தோழ்மை கொள்வாராயின் அவர்கள் அநியாயக்காரர்கள் ஆவர்.
10 விசுவாசிகளே! ஈமான் கொண்ட பெண்கள் காபிர்களிடமிருந்து ஹிஜ்ரத் செய்து உங்களிடத்தில் வந்தால் அவர்களைச் சோதித்துப் பாருங்கள். (நபியவர்கள் ஹுதைபியாவில் காபிர்களுடன் ஓர் உடன்படிக்கை செய்தார்கள். மக்காவிலிருந்து யாரும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு நபியவர்களிடத்தில் வந்தால் அவர்களைத் திருப்பி அனுப்பிவிட வேண்டும் என்பது அதன் நிபந்தனைகளில் ஒன்றாகக் காணப்பட்டது. பெண்கள் அவர்களிடத்திலிருந்து ஹிஜ்ரத் வந்த பொழுது அவர்கள் திருப்பி அனுப்பப்படுவதை அல்லாஹ் தடுத்து அப்பெண்கள் "நாம் ஈமான் கொண்டிருக்கிறோம்" என்று கூறுவதில் எந்தளவு அவர்கள் உண்மை கூறுகின்றார்கள் என்பதைப் பரிசோதிக்கும் படி நபியவர்களுக்குக் கட்டளையிட்டான். அவர்கள் நபியவர்களிடத்தில் "நாம் கணவனை வெறுத்தோ, அல்லது ஓர் ஊரை விட்டு இன்னோர் ஊரின் மீது ஆசை கொண்டோ, அல்லது உலக நலன்களின் பால் ஆசை கொண்டோ வரவில்லை" என சத்தியம் செய்வார்கள்.) அவர்களின் ஈமானின் (உண்மை) நிலையை அல்லாஹ் மிக அறிந்தவன். (அதை உங்களால் அறிய முடியாது. வெளிப்படையில் அவர்கள் உண்மை சொல்கின்றார்களா என்பதை நீங்கள் அறிந்து கொள்வதற்காக அவர்களைச் சத்தியம் செய்ய வையுங்கள். அவர்களின் சத்தியத்தின் பிரகாரம்) அவர்களை நீங்கள் ஈமான் கொண்டவர்கள் என அறிந்து கொள்வீர்களாயின் அவர்களை நீங்கள் காபிர்களான (அவர்களின் கணவர்களிடம்) திருப்பி அனுப்பிவிட வேண்டாம். இப்பெண்மணிகள் அவர்களுக்கு ஹலாலாகவும் மாட்டார்கள். (காபிர்களாகிய) அவர்கள் இவர்களுக்கு ஹலாலாகவும் மாட்டார்கள். (ஏனெனில் ஒரு பெண் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வது அவளை அவளுடைய காபிரான கணவனிடமிருந்து பிரித்து விடுகின்றது.) அவர்கள் (அக்கணவன்மார்கள் செலவு செய்ததை அவர்களுக்கு நீங்கள் கொடுத்து விடுங்கள். (ஹிஜ்ரத் வந்த இப்பெண்களுக்கு அவர்களின் கணவர்களால் கொடுக்கப்பட்ட மஹர்களை நீங்கள் அவர்களுக்குக் கொடுத்து விடுங்கள். இமாம் சாபிஈ (ரஹ்) அவர்கள்

يَٰٓأَيُّهَا ٱلنَّبِيُّ إِذَا جَآءَكَ ٱلْمُؤْمِنَٰتُ يُبَايِعْنَكَ عَلَىٰٓ أَن لَّا يُشْرِكْنَ
بِٱللَّهِ شَيْـًٔا وَلَا يَسْرِقْنَ وَلَا يَزْنِينَ وَلَا يَقْتُلْنَ أَوْلَٰدَهُنَّ وَلَا يَأْتِينَ
بِبُهْتَٰنٍ يَفْتَرِينَهُۥ بَيْنَ أَيْدِيهِنَّ وَأَرْجُلِهِنَّ وَلَا يَعْصِينَكَ
فِى مَعْرُوفٍ فَبَايِعْهُنَّ وَٱسْتَغْفِرْ لَهُنَّ ٱللَّهَ إِنَّ ٱللَّهَ غَفُورٌ رَّحِيمٌ
﴿١٢﴾ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ لَا تَتَوَلَّوْا۟ قَوْمًا غَضِبَ ٱللَّهُ عَلَيْهِمْ
قَدْ يَئِسُوا۟ مِنَ ٱلْءَاخِرَةِ كَمَا يَئِسَ ٱلْكُفَّارُ مِنْ أَصْحَٰبِ ٱلْقُبُورِ ﴿١٣﴾

## سُورَةُ الصَّفِّ

ترتيبها ٦١ — آياتها ١٤

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

سَبَّحَ لِلَّهِ مَا فِى ٱلسَّمَٰوَٰتِ وَمَا فِى ٱلْأَرْضِ وَهُوَ ٱلْعَزِيزُ ٱلْحَكِيمُ
﴿١﴾ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ لِمَ تَقُولُونَ مَا لَا تَفْعَلُونَ ﴿٢﴾
كَبُرَ مَقْتًا عِندَ ٱللَّهِ أَن تَقُولُوا۟ مَا لَا تَفْعَلُونَ ﴿٣﴾ إِنَّ
ٱللَّهَ يُحِبُّ ٱلَّذِينَ يُقَٰتِلُونَ فِى سَبِيلِهِۦ صَفًّا كَأَنَّهُم
بُنْيَٰنٌ مَّرْصُوصٌ ﴿٤﴾ وَإِذْ قَالَ مُوسَىٰ لِقَوْمِهِۦ يَٰقَوْمِ لِمَ
تُؤْذُونَنِى وَقَد تَّعْلَمُونَ أَنِّى رَسُولُ ٱللَّهِ إِلَيْكُمْ فَلَمَّا
زَاغُوٓا۟ أَزَاغَ ٱللَّهُ قُلُوبَهُمْ وَٱللَّهُ لَا يَهْدِى ٱلْقَوْمَ ٱلْفَٰسِقِينَ ﴿٥﴾

கூறுகின்றார்கள்: கணவன்மார்கள் அல்லாத வேறு உறவினர்களுக்கு எந்தப் பகரங்களும் வழங்கப்படமாட்டாது.) நீங்கள் அவர்களுக்குரிய மஹ்ர்களைக் கொடுப்பீர்களாயின் நீங்கள் அப்பெண்களை (இத்தா முடிந்த பின்) திருமணம் செய்து கொள்வதில் உங்களுக்குக் குற்றமில்லை. (ஏனெனில் அவர்கள் இப்பொழுது உங்கள் மார்க்கத்தைச் சேர்ந்தவர்களாக மாறிவிட்டார்கள்.) இறை நிராகரிப்பாளர்களின் விவாக ஒப்பந்தங்களை நீங்கள் பிடித்துக் கொள்ள முற்பட வேண்டாம். (ஆரம்ப காலங்களில் காபிர்கள் தமது பெண்களை முஸ்லிம்களுக்கு திருமணம் செய்து வைப்பார்கள். அதே போன்று முஸ்லிம்களும் அவர்களுக்குத் திருமணம் செய்து வைப்பார்கள். இந்த வசனத்தின் மூலம் இந்த அனுமதி மாற்றப்பட்டுவிட்டது.) மேலும், (உங்கள் பெண்கள் இஸ்லாத்தை விட்டு அவர்களிடம் சென்றால்) நீங்கள் செலவு செய்த (மஹ்ரை) நீங்கள் கேளுங்கள். அவர்கள் செலவு செய்த (மஹ்ரை) அவர்களும் கேட்கட்டும். (விரிவுரையாளர்கள் கூறுகின்றார்கள் : இஸ்லாத்தில் இருந்த பெண்கள் யாரும் அவர்களிடம் சென்றால் அவர்களுக்கு வழங்கப்பட்ட மஹ்ரை காபிர்களிடம் கேட்டுப் பெறப்படும். அதே போன்று அவர்களின் பெண்கள் முஸ்லிம்களிடம் வந்தால் இவர்களிடம் அதைக் கேட்டுப் பெற்றுக் கொள்ளப்படும்.) இது (ஹுதைபியா உடன்படிக்கையின் பின்) அல்லாஹ்வால் செய்யப்பட்ட தீர்ப்பாகும். அவன் உங்களுக்கிடையில் தீர்ப்புச் செய்கின்றான். (இமாம் குர்துபி (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: மஹ்ரைத் திருப்பி வழங்க வேண்டும் என்ற இத்தீர்ப்பு அக்காலத்துக்கு மட்டும் உரியதாகவே இருந்தது. பின்னர் இச்சட்டம் மாற்றப்பட்டுவிட்டது.) அல்லாஹ் மிக அறிந்தவன். அறிவு ஞானமும் உடையவன்.

(11) உங்களுடைய மனைவியர்கள் (இஸ்லாத்தை விட்டும் மதம் மாறி) காபிர்களிடம் செல்வதன் மூலம் (நீங்கள் கொடுத்த மஹ்ர்களில்) ஏதாவது தவறி, நீங்கள் (அவர்களிடமிருந்து கனீமத்களை) பெற்றுக் கொண்டால் மனைவிகளை இழந்தவர்களுக்கு (உங்களுக்குக் கிடைத்த பொருட்களிலிருந்து) அவர்கள் கொடுத்த மஹ்ர்களைக் கொடுத்து விடுங்கள். (இது இணைவைப்போர்கள் அவர்களிடம் வந்த பெண்களின் மஹ்ரை திருப்பிக் கொடுக்காத சந்தர்ப்பத்திலாகும்.) நீங்கள் எந்த அல்லாஹ்வை ஈமான் கொண்டிருக்கின்றீர்களோ அந்த இறைவனைப் பயந்து கொள்ளுங்கள். (உங்களுக்குத் தண்டனையைக் கட்டாயப் படுத்தக்கூடிய எந்தக் காரியத்தையும் செய்யாமல் தவிர்ந்து கொள்ளுங்கள்.)

(12) நபியே! ஈமான் கொண்ட பெண்கள் அல்லாஹ்வுக்கு எந்த ஒன்றையும் இணையாக ஆக்குவதில்லை என்றும், திருடுவதில்லை என்றும், விபச்சாரம் புரிவதில்லை என்றும், ஜாஹிலிய்யாக் காலத்தில் போன்று பெண் பிள்ளைகளை உயிருடன் புதைப்பதன் மூலமாக) அவர்களுடைய பிள்ளைகளைக் கொலை செய்வதில்லை என்றும், அவர்களுக்கிடையில் அவர்கள் புனைந்து விடக்கூடிய அவதூறுகளைச் சொல்வதில்லை என்றும், (ஏனெனில் ஜாஹிலிய்யாக் காலப் பெண்கள் தமது கணவர்களுக்கு இல்லாத பிள்ளைகளை அவர்களுக்குச் சேர்த்து விடுவார்கள். இமாம் பர்ராஉ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: ஒரு பெண் ஒரு பிள்ளையைப் பொறுக்கி எடுத்து விட்டு, தனது கணவனைப் பார்த்து இது நான் உன் மூலம் பெற்றுக் கொண்ட பிள்ளை என்பாள். இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள்: பெண்பிள்ளையைப் பெற்றெடுத்த ஒரு தாய் அதைக் கொடுத்து விட்டு ஓர் ஆண் குழந்தையை எடுத்துக் கொள்வாள்.) மேலும் நன்மையான விடயங்களில் உமக்கு மாறு செய்வதில்லை என்றும் உம்மிடம் வாக்குறுதி அளிக்க வந்தால் அவர்களிடம் அவ்வாக்குறுதியைப் பெற்றுக் கொள்ளுங்கள். மேலும் (அவர்கள் இந்த வாக்குறுதியை அளித்தற்குப் பிரதியாக அவர்களுக்காக

அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கோருங்கள். நிச்சயமாக அல்லாஹ் பாவங்களை மன்னித்து அருள் புரிபவனாயிருக்கும்.
13 விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வின் கோபத்துக்குள்ளாகியிருக்கும் கூட்டத்தினரை நேசம் கொள்ள வேண்டாம். இறை நிராகரிப்பாளர்கள் மண்ணறையில் உள்ளவர்களை எழுப்பும் விடயத்தில் நம்பிக்கை இழந்திருப்பது போன்று அவர்களும் நம்பிக்கை இழந்துள்ளார்கள்.

## அஸ்ஸஃப்

1 வானங்களிலும், பூமியிலுமுள்ளவை அல்லாஹ்வைத் துதி செய்கின்றன. அவன் (யாவற்றையும்) மிகைக்கக்கூடியவன். அறிவு ஞானமுடையவன்.
2 விசுவாசிகளே! நீங்கள் செய்யாததை ஏன் சொல்கின்றீர்கள்? (இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகின்றார்கள்: புனிதப் போர் கடமையாக்கப்பட முன் சிலர், அல்லாஹ் அவனுக்கு மிக விருப்பமான நற்கிரிகையை எமக்கு அறிவித்துத் தந்தால் அதைச் செய்யலாமே எனச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஆனால் அல்லாஹ் அமல்களில் அவனுக்குப் பிரியமானது ஜிஹாத் என அறிவித்த போது சிலர் அதை வெறுத்தனர். அது அவர்களுக்குக் கஷ்டமாகவும் இருந்தது. அச்சந்தர்ப்பத்தில் தான் இவ்வசனம் இறங்கியது.
3 நீங்கள் செய்யாதவற்றைச் சொல்வது அல்லாஹ்விடத்தில் மிக வெறுப்புக்குரியது. (தாம் எதையும் செய்யாமல் தனது வாளினால் யுத்தம் செய்ததாகவும், இன்னின்னவர்களையெல்லாம் தாம் வெட்டியதாகவும் நபியவர்களிடம் வந்து சொல்லக் கூடிய ஒரு கூட்டத்தினரின் விடயத்தில் இவ்வசனம் இறங்கியது என்றும் கூறப்பட்டுள்ளது.)
4 நிச்சயமாக அல்லாஹ் அவனுடைய பாதையில், ஒன்றோடொன்று சேர்ந்திருக்கும் கட்டிடத்தைப் போன்று ஒரே அணியாக இருந்து யுத்தம் புரிகின்றவர்களை விரும்புகின்றான். (அல்லாஹ்வின் பாதையில் யுத்தம் புரிவது அவன் விரும்பும் அம்சங்களில் மிக உயர்வானது. நபியவர்கள் கூறினார்கள்: கருமங்களில் அடிப்படை இஸ்லாம், அதன் தூண் தொழுகை, அதில் உயர்ந்த சிறப்பான பகுதி அல்லாஹ்வின் பாதையில் போர் புரிவதாகும். இப்புனிதப் போரில் விருப்பமுள்ளோர் எந்தச் சந்தர்ப்பத்திலும் தாமதிக்காமல் அதற்கு விடையளிப்பார்கள்.)
5 (அல்லாஹ் அவனுடைய பாதையில் புனிதப் போர் புரிவர்களை விரும்பும் செய்தியைக் கூறி விட்டு மூஸா (அலை), ஈஸா (அலை) ஆகிய இரு தூதர்களைப் பற்றியும் குறிப்பிடுகின்றான்.) மூஸா (அலை) அவர்கள் தனது கூட்டத்தினரைப் பார்த்து நிச்சயமாக நான் உங்களுக்கு அல்லாஹ்வினால் அனுப்பப்பட்ட ஒரு தூதர் என அறிந்திருந்தும் நீங்கள் என்னை ஏன் நோவினைப் படுத்துகின்றீர்கள்? என்று கேட்டதை நினைவு கூறுவீராக. (அல்லாஹ் உங்கள் மீது கடமையாக்கியவற்றிற்கு மாறு செய்வதன் மூலமாகவோ, அல்லது எனக்கு நீங்கள் ஏசுவதன் மூலமாகவோ நீங்கள் என்னை ஏன் துன்புறுத்துகின்றீர்கள்? ‘நபி’ என்பவர் கண்ணியப்படுத்தப்பட வேண்டியவர். நான் உங்கள் மீது அனுப்பப்பட்ட நபி என்பதை நான் உங்களுக்குக் காட்டும் ‘மு.்.ஜிஸத்கள்’ எனும் அத்தாட்சிகள் மூலம் அறிந்தும் இருக்கின்றீர்கள்.) அவர்கள் (அவர்களுடைய நபியைத் துன்புறுத்தி உண்மையை விட்டும்) சாய்ந்த பொழுது அல்லாஹ்வும் (உண்மையான மார்க்கத்தை விட்டும்) அவர்களுடைய உள்ளங்களைச் சாய்த்து விட்டான்.
6 மர்யமின் மகன் ஈஸா இஸ்ரவேலாகளைப் பார்த்து எனக்கு முன்னால் உள்ள தௌராத்தை உண்மைப்படுத்திய நிலையிலும், எனக்குப் பின்னர் ‘அஹ்மத்’ என்ற பெயருடன் வரக்கூடிய ஒரு தூதரைப் பற்றி முன்னறிவிப்புச் செய்யக் கூடிய நிலையிலும் நான் அல்லாஹ்வால் உங்களுக்கு அனுப்பப்பட்ட தூதராயிருக்கும் என்று சொன்னதை நினைவு கூருங்கள். (அல்லாஹ் என்னை ‘இன்ஜீல்’ எனும் வேதத்தைத் தந்து தூதராக அனுப்பியுள்ளான். அது தௌராத்திற்கு மாற்றமான ஒன்றல்ல. மாறாக அது அதை உண்மைப்படுத்துகின்றது. அத்துடன் நான் எனக்குப் பின்னர் வரும் அஹ்மத் என்ற பெயரைக் கொண்ட ஒரு தூதரைப் பற்றியும் நான் உங்களுக்கு முன்னறிவிப்புச் செய்கின்றேன்.) ஈஸா (அலை) அவர்கள் அவர்களிடத்தில் (மு.்.ஜிஸத்கள் எனப்படும்) அத்தாட்சிகளைக் கொண்டு வந்த பொழுது, இது (நீங்கள் கொண்டு வந்திருக்கும் இம் மார்க்கம்) தெளிவான சூனியம் என்றார்கள்.
7 (மார்க்கங்களில் சிறந்ததும், சிறப்பானதுமான) இஸ்லாத்தின் பால் அழைக்கப்படும் பொழுது, அல்லாஹ்வின் மீது பொய்யை புனைந்துரைக்கக்கூடியவனை விட மிகப் பெரிய அக்கிரமக்காரன் யார் இருக்கின்றான்? (சிறந்த மார்க்கத்தின் பால் அழைக்கப்படும் ஒருவர் அல்லாஹ்வின் மீது பொய்யுரைக்காமல் அதை ஏற்றுக் கொள்வதே அவரின் கடமையாகும்.) அல்லாஹ் அக்கிரமம் செய்யும் கூட்டத்தினர்களுக்கு நேர்வழி காட்டமாட்டான்.
8 அவர்கள் தங்களின் வாய்களின் மூலம் அல்லாஹ்வின் ஒளியை அணைக்க முற்படுகின்றனர். (அவர்களின் பொய்யான வார்த்தைகளின் மூலம் இஸ்லாத்தையும், அதன் நேர்வழியையும் தடுக்க முற்படுவது அல்லாஹ்வின் ஜோதியை தமது வாய்களினால் ஊதி அணைக்க முற்படுவதைப் போன்றதாகும். அல்லாஹ் (உலகின் நாலா பாகங்களிலும் இஸ்லாத்தை வெளிப்படுத்தி அதனை உயர்வடையச் செய்வதன் மூலம்) தனது ஒளியைப்

وَإِذۡ قَالَ عِيسَى ٱبۡنُ مَرۡيَمَ يَٰبَنِيٓ إِسۡرَٰٓءِيلَ إِنِّي رَسُولُ ٱللَّهِ إِلَيۡكُم مُّصَدِّقٗا
لِّمَا بَيۡنَ يَدَيَّ مِنَ ٱلتَّوۡرَىٰةِ وَمُبَشِّرَۢا بِرَسُولٖ يَأۡتِي مِنۢ بَعۡدِي ٱسۡمُهُۥٓ أَحۡمَدُۖ فَلَمَّا
جَآءَهُم بِٱلۡبَيِّنَٰتِ قَالُواْ هَٰذَا سِحۡرٞ مُّبِينٞ ٦ وَمَنۡ أَظۡلَمُ مِمَّنِ ٱفۡتَرَىٰ
عَلَى ٱللَّهِ ٱلۡكَذِبَ وَهُوَ يُدۡعَىٰٓ إِلَى ٱلۡإِسۡلَٰمِۚ وَٱللَّهُ لَا يَهۡدِي ٱلۡقَوۡمَ ٱلظَّٰلِمِينَ
٧ يُرِيدُونَ لِيُطۡفِـُٔواْ نُورَ ٱللَّهِ بِأَفۡوَٰهِهِمۡ وَٱللَّهُ مُتِمُّ نُورِهِۦ وَلَوۡ كَرِهَ
ٱلۡكَٰفِرُونَ ٨ هُوَ ٱلَّذِيٓ أَرۡسَلَ رَسُولَهُۥ بِٱلۡهُدَىٰ وَدِينِ ٱلۡحَقِّ لِيُظۡهِرَهُۥ
عَلَى ٱلدِّينِ كُلِّهِۦ وَلَوۡ كَرِهَ ٱلۡمُشۡرِكُونَ ٩ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ هَلۡ أَدُلُّكُمۡ
عَلَىٰ تِجَٰرَةٖ تُنجِيكُم مِّنۡ عَذَابٍ أَلِيمٖ ١٠ تُؤۡمِنُونَ بِٱللَّهِ وَرَسُولِهِۦ وَتُجَٰهِدُونَ
فِي سَبِيلِ ٱللَّهِ بِأَمۡوَٰلِكُمۡ وَأَنفُسِكُمۡۚ ذَٰلِكُمۡ خَيۡرٞ لَّكُمۡ إِن كُنتُمۡ تَعۡلَمُونَ ١١
يَغۡفِرۡ لَكُمۡ ذُنُوبَكُمۡ وَيُدۡخِلۡكُمۡ جَنَّٰتٖ تَجۡرِي مِن تَحۡتِهَا ٱلۡأَنۡهَٰرُ وَمَسَٰكِنَ
طَيِّبَةٗ فِي جَنَّٰتِ عَدۡنٖۚ ذَٰلِكَ ٱلۡفَوۡزُ ٱلۡعَظِيمُ ١٢ وَأُخۡرَىٰ تُحِبُّونَهَاۖ نَصۡرٞ
مِّنَ ٱللَّهِ وَفَتۡحٞ قَرِيبٞۗ وَبَشِّرِ ٱلۡمُؤۡمِنِينَ ١٣ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ كُونُوٓاْ
أَنصَارَ ٱللَّهِ كَمَا قَالَ عِيسَى ٱبۡنُ مَرۡيَمَ لِلۡحَوَارِيِّـۧنَ مَنۡ أَنصَارِيٓ إِلَى ٱللَّهِۖ
قَالَ ٱلۡحَوَارِيُّونَ نَحۡنُ أَنصَارُ ٱللَّهِۖ فَـَٔامَنَت طَّآئِفَةٞ مِّنۢ بَنِيٓ إِسۡرَٰٓءِيلَ
وَكَفَرَت طَّآئِفَةٞۖ فَأَيَّدۡنَا ٱلَّذِينَ ءَامَنُواْ عَلَىٰ عَدُوِّهِمۡ فَأَصۡبَحُواْ ظَٰهِرِينَ ١٤

பூர்த்தியாக்குவான்.

9 அவன் தான் தனது தூதரை நேர்வழியையும், உண்மையான மார்க்கத்தையும் கொடுத்து அனுப்பி வைத்தான். இணைவைப்பாளர்கள் வெறுத்த போதும் (உலகில் காணப்படும்) மற்ற எல்லா மார்க்கங்களை விடவும் அதை மேலோங்கச் செய்வதற்காக (அனுப்பி வைத்தான்.)

10 விசுவாசிகளே! நோவினை உள்ள வேதனையை விட்டும் உங்களைக் காப்பாற்றும் ஒரு கிரிகையை உங்களுக்கு அறிவித்துத் தரட்டுமா?

11 நீங்கள் அல்லாஹ்வையும், அவனது தூதரையும் விசுவாசம் கொள்ளுங்கள். மேலும் அவனது பாதையில் உங்கள் உடமைகளாலும், உயிர்களினாலும் புனித யுத்தம் செய்யுங்கள். நீங்கள் அறிந்தவர்களாக இருப்பின் அது உங்களுக்குச் சிறந்தது. (அல்லாஹ் மேற்கூறப்பட்ட நற்கிரிகைகளை வியாபாரத்திற்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளான். ஏனெனில் வியாபாரத்தில் இலாபமீட்டுவது போன்று இதிலும் அவர்கள் நரகிலிருந்து பாதுகாக்கப்பட்டு சுவனம் நுழைவதன் மூலம் இலாபமீட்டுகின்றனர். ஈமான் கொள்ளுதல், புனிதப் போர் புரிதல், ஆகிய இரண்டிற்கும் அல்லாஹ் வழங்கும் கூலி சுவனமாகும். அது இலாபமளிக்கும் ஒரு வியாபாரம் என்பதை அடுத்து வரும் வசனங்களில் அவன் தெளிவு படுத்துகின்றான்.

12 (நீங்கள் அவ்வாறு விசுவாசம் கொண்டு போர்புரிவீர்களாயின்) அவன் (அல்லாஹ்) உங்களுக்கு உங்கள் பாவங்களை மன்னித்து விடுவான். மேலும் அவற்றிற்குக் கீழால் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும் (சுவனத்தின்) தோப்புக்களிலும், நிரந்தரமான சுவனங்களில் காணப்படும் சிறந்த வசிப்பிடங்களிலும் உங்களை அவன் நுழையச் செய்வான். இது தான் (பாவங்கள் மன்னிக்கப்பட்டு, நிரந்தர சுவனங்களில் நுழைவிக்கப்படுவது) மகத்தான வெற்றியாகும். (அதற்கு மேல் வேறு வெற்றியில்லை.)

13 மேலும் உங்களுக்கு நீங்கள் விரும்பும் இன்னொரு விடயமும் இருக்கின்றது. அது அல்லாஹ்விடமிருந்து வரும் உதவியும், அண்மித்திருக்கும் வெற்றியுமாகும். (குறைஷிக் காபிர்களுக்குக் கேடாக உங்களுக்கு உதவி வழங்குவதும், மக்கா வெற்றியுமாகும். அதா எனும் அறிஞர் அது ரோம், பாரசீக வெற்றியாகும் எனக் குறிப்பிடுகின்றார்.) நீங்கள் இந்நற்செய்திகளை விசுவாசிகளுக்கு அறிவியுங்கள்.

14 விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்விற்கு (அவனது மார்க்கத்திற்குத் தொடர்ந்தும்) உதவி செய்யக்கூடியவர்களாக இருங்கள். ஈஸா (அலை) அவர்கள் (தமது நெருங்கிய சகாக்களான) ஹவாரிய்யீன்களைப் பார்த்து அல்லாஹ்வின் (அவனது மார்க்கத்தின்) பால் எனக்கு உதவி செய்பவர்கள் யார் இருக்கின்றார்கள்? எனக் கேட்ட பொழுது, நாங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்கள் என அவர்கள் கூறினார்கள். (எனவே நீங்களும் அவர்களைப் போன்று உதவியாளர்களாக இருந்து கொள்ளுங்கள். ‘ஹவாரிய்யூன்கள்’ எனப்படுவோர் ஈஸா (அலை) அவர்களின் உதவியாளர்களும், விசுவாசத்துக்குரிய நேசர்களும், அவர்களை முதன் முதல் விசுவாசம் கொண்டவர்களுமாவர். இவர்கள் பன்னிரண்டு பேர்களாவர்.) பனூ இஸ்ரவேலர்களில் ஒரு பிரிவினர் ஈஸா (அலை) அவர்களை ஈமான் கொண்டனர். இன்னொரு பிரிவினர் அவர்களை நிராகரித்து விட்டனர். நாங்கள் விசுவாசிகளை அவர்களுடைய விரோதிகளான (வழிகேட்டில் இருப்பவர்களுக்குக் கேடாக) பலப்படுத்தினோம். எனவே அவர்கள் வெற்றியாளர்களாக மாறிவிட்டனர். (கதாதா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: “விசுவாசிகளே! அல்லாஹ்வின் உதவியாளர்களாக இருந்து கொள்ளுங்கள்” என்ற வசனத்தை விளக்குகையில் அது நடைபெற்று முடிந்துவிட்டது. ‘அகபா’ உடன்படிக்கையின் போது 70 பேர் இஸ்லாத்தை ஏற்று உடன்படிக்கையில் கலந்து கொண்டார்கள். அவர்கள் நபியவர்களுக்கு தமது ஊரில் இடம் கொடுத்தார்கள். மார்க்கம் மேலோங்கும் வரை உதவி செய்தார்கள் (அப்துர் ரஸ்ஸாக்). நபி (ஸல்) அவர்கள் தம்மிடம் வந்து பைஅத்

سُورَةُ الْجُمُعَةِ — ترتيبها ٦٢ — آياتها ١١

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

يُسَبِّحُ لِلَّهِ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ الْمَلِكِ الْقُدُّوسِ الْعَزِيزِ
الْحَكِيمِ ﴿١﴾ هُوَ الَّذِي بَعَثَ فِي الْأُمِّيِّينَ رَسُولًا مِنْهُمْ يَتْلُو
عَلَيْهِمْ آيَاتِهِ وَيُزَكِّيهِمْ وَيُعَلِّمُهُمُ الْكِتَابَ وَالْحِكْمَةَ وَإِنْ كَانُوا
مِنْ قَبْلُ لَفِي ضَلَالٍ مُبِينٍ ﴿٢﴾ وَآخَرِينَ مِنْهُمْ لَمَّا يَلْحَقُوا بِهِمْ
وَهُوَ الْعَزِيزُ الْحَكِيمُ ﴿٣﴾ ذَٰلِكَ فَضْلُ اللَّهِ يُؤْتِيهِ مَنْ يَشَاءُ وَاللَّهُ
ذُو الْفَضْلِ الْعَظِيمِ ﴿٤﴾ مَثَلُ الَّذِينَ حُمِّلُوا التَّوْرَاةَ ثُمَّ لَمْ
يَحْمِلُوهَا كَمَثَلِ الْحِمَارِ يَحْمِلُ أَسْفَارًا بِئْسَ مَثَلُ الْقَوْمِ
الَّذِينَ كَذَّبُوا بِآيَاتِ اللَّهِ وَاللَّهُ لَا يَهْدِي الْقَوْمَ الظَّالِمِينَ ﴿٥﴾
قُلْ يَا أَيُّهَا الَّذِينَ هَادُوا إِنْ زَعَمْتُمْ أَنَّكُمْ أَوْلِيَاءُ لِلَّهِ مِنْ
دُونِ النَّاسِ فَتَمَنَّوُا الْمَوْتَ إِنْ كُنْتُمْ صَادِقِينَ ﴿٦﴾ وَلَا يَتَمَنَّوْنَهُ
أَبَدًا بِمَا قَدَّمَتْ أَيْدِيهِمْ وَاللَّهُ عَلِيمٌ بِالظَّالِمِينَ ﴿٧﴾ قُلْ إِنَّ
الْمَوْتَ الَّذِي تَفِرُّونَ مِنْهُ فَإِنَّهُ مُلَاقِيكُمْ ثُمَّ تُرَدُّونَ
إِلَىٰ عَالِمِ الْغَيْبِ وَالشَّهَادَةِ فَيُنَبِّئُكُمْ بِمَا كُنْتُمْ تَعْمَلُونَ ﴿٨﴾

செய்தவர்களிடம் சொன்னார்கள்: நீங்கள் உங்களிலிருந்து பன்னிரெண்டு பேர்களைத் தெரிவு செய்யுங்கள். அவர்கள் ஈஸா (அலை) அவர்களுக்கு ஹவாரிய்யூன்கள் பொறுப்புதாரிகளாக இருந்தது போன்று பொறுப்புதாரிகளாக இருப்பார்கள் என்று கூறிவிட்டு தெரிவு செய்யப்பட்டவர்களைப் பார்த்துக் கூறினார்கள் : “ஹவாரிய்யூன்கள் ஈஸா (அலை) அவர்களுடைய த.்.வாவிற்கு பொறுப்புதாரிகளாக இருந்தது போன்று நீங்கள் பொறுப்புதாரிகளாக இருந்து கொள்ளுங்கள். நான் எனது கூட்டத்திற்குப் பொறுப்புதாரி”. அதை அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.

## அல்-ஜும்ஆ

1 (யாவற்றிற்கும்) அரசனும், (எல்லாக் குறைகளை விட்டும்) பரிசுத்தமானவனும், (யாவற்றையும்) மிகைப்பவனும், அறிவு ஞானமுடையவனுமான அல்லாஹ்வை வானங்களிலும், பூமியிலுமுள்ளவை துதிக்கின்றன.

2 அவன் தான் உம்மிகளுக்கிடையில் அவர்களில் நின்றுமே ஒரு தூதரை அனுப்பிவைத்தான். (இவ்வசனத்தில் ‘உம்மிய்யீன்’ என்ற பதத்தின் மூலம் அறபு சமூகத்தினரே நாடப்பட்டுள்ளனர். இதில் எழுத்தறிவுள்ளவர்களும், இல்லாதவர்களும் அடங்குவர். அவர்கள் வேதங்கள் கொடுக்கப்பட்டு அவை பற்றிய அறிவுகள் அவர்களுக்கு இல்லை என்ற காரணத்தினாலேயே இச்சொல் அவர்களுக்குப் பிரயோகிக்கப்பட்டுள்ளது. அடிப்படையில் ‘உம்மிகள்’ எனப்படுவோர் எழுதவும், வாசிக்கவும் தெரியாதவர்கள். அறபு மக்களில் அக்காலப் பகுதியில் வாழ்ந்த பெரும்பாலானவர்கள் இந்நிலையிலேயே காணப்பட்டனர்.) அவர் (அந்தத் தூதுவர் எழுதவோ வாசிக்கவோ தெரியாதவராக இருந்த போதும்) அவர்களுக்கு அவனின் (வேதமாகிய அல்குர்ஆனின்) வசனங்களை ஓதிக் காண்பிப்பார். மேலும் அவர்களை (இறை நிராகரிப்பு, பாவங்கள், தீய பண்புகள் போன்றவற்றை விட்டும்) பரிசுத்தப்படுத்துவார். இன்னும் அவர்களுக்கு வேதத்தையும் (அல்குர்ஆனையும்) ஞானத்தையும், (ஸுன்னாவையும்) கற்றுக் கொடுப்பார். (இமாம் மாலிக் (ரஹ்) அவர்கள் ‘அல்கிதாப்’ என்பது எழுத்தறிவையும் ‘அல்ஹிக்மா’ என்பது மார்க்க விளக்கத்தையும் குறிக்கும் எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.) நிச்சயமாக அவர்கள் இதற்கு முன்பு (இணை வைத்தல் போன்ற) தெளிவான வழிகேட்டிலேயே இருந்தார்கள்.

3 மேலும் இதுவரை வந்து சேர்ந்திராத (அவர்களுக்குப் பின் தோன்றக் கூடிய) வேறு பலரையும் அவர் பரிசுத்தப்படுத்துவார். (அவர்கள் நபித் தோழர்களுக்குப் பின் வந்தவர்களும் இறுதி நாள் வரை வரப் போகின்றவர்களுமான முஸ்லிம்களாவர். அபூ ஹுரைரா (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள்: ஸூரதுல் ஜும்ஆ இறங்கிய சந்தர்ப்பத்தில் நாங்கள் நபி (ஸல்) அவர்களிடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தோம். அவர்கள் எமக்கு அதை ஓதிக் காண்பித்தார்கள். ‘இது வரை வந்து சேர்ந்திராத வேறு பலரையும்’ (அவர்கள் பரிசுத்தப்படுத்துவார்கள்.) என்ற வசனத்தை அடைந்த பொழுது ஒருவர் அவர்கள் யார்? எனக் கேட்டார். அதற்கு ஸல்மான் அல் பாரிஸி என்பவர் மீது தமது நபியவர்கள் கையை வைத்து “ஸுரய்யா என்ற நட்சத்திரத்தில் ஈமான் இருந்தாலும் இவர்களைச் சார்ந்த – பாரசீக – சில மனிதர்கள் அதை அடைந்து கொள்வார்கள்” எனக் கூறினார்கள்.) அவன் மிகைக்கக் கூடியவனும் அறிவு ஞானம் உடையோனுமாயிருக்கும்.

4 அது அல்லாஹ்வின் அருளாகும். அவன் தான் நாடியவர்களுக்கு அதைக் கொடுப்பான். அல்லாஹ் பெரும் அருள்கள் உடையவன்.

5 தௌராத்தை அவர்களுக்குச் சுமத்தாட்டப்பட்டு (அதை ஏற்று நடக்கும் படி ஏவப்பட்டு) பின்பு அதைச் சுமந்து கொள்ளாதவர்களுக்கு (அதன் பிரகாரம்

செயல்படாதவர்களுக்கு) உதாரணம்: ஏடுகளைச் சுமக்கும் கழுதையைப் போன்றாகும். (கழுதை தனக்கு மேல் ஏற்றப்பட்டிருப்பது பெறுமதியுள்ள பெரும் புத்தகங்களா? அல்லது அற்பமான பொருட்களா? என்பதை அறியமாட்டாது.) அல்லாஹ்வின் வசனங்களைப் பொய்யாக்கும் கூட்டத்தினரின் உதாரணம் மிக மோசமானது. (இவ்வுதாரணம் தமக்கு வழங்கப்பட்ட தௌராத்தை ஏற்று நடக்காத யஹூதிகளுக்குக் கூறப்பட்டதாகும். இவ்வுதாரணம் மூலம் நபியவர்கள் மிம்பரில் பிரசங்கம் செய்யும் போது வியாபாரக் கூட்டத்தைக் கண்டதும் நபியவர்களை விட்டுச் சென்ற முஸ்லிம்களை அல்லாஹ் எச்சரிக்கை செய்கின்றான். இதே போன்று இமாம் குத்பாப் பிரசங்கம் நிகழ்த்தும் போது பேசுபவனை நபியவர்களும் கழுதைக்கு ஒப்பிட்டுக் கூறி, அவ்வாறு பேசுபவனைப்பார்த்து 'வாய்மூடு' எனக்கூறினால் அவனும் ஜும்ஆவின் பலனை வீணாக்கிவிடுவான் எனக் கூறியுள்ளார்கள்.)

6 (யஹூதிகள் தாம் ஏனைய மனிதர்களை விட சிறந்தவர்கள் என்றும், தாம் மட்டுமே அல்லாஹ்வுடைய நேசர்கள் என்றும், அல்லாஹ்வுடைய மக்கள் என்றும், அவனின் விருப்பத்துக்குரியவர்கள் என்றும் வாதிட்டுக் கொண்டிருந்தனர். அல்லாஹ் அவர்களைப் பார்த்துக் கூறுகின்றான்: நபியே!) நீர் கூறுவீராக: யஹூதிகளே! ஏனைய மனிதர்கள் அன்றி நீங்கள் தான் அல்லாஹ்வுடைய நேசர்கள் என்று நீங்கள் வாதிடுவதாக இருந்தால் நீங்கள் இதில் உண்மையாளர்களாக இருப்பின் மரணத்தை ஆசை கொள்ளுங்கள். (ஏனெனில் தான் சுவனவாதி என்பதை அறிந்தவன் அங்கு போய்ச் சேர்வதற்காக மரணத்தை விரும்புவான்.)

7 அவர்களுடைய கைகள் முற்படுத்திய செயல்களின் (இறை நிராகரிப்பு, பாவங்கள், வேதங்களை மாற்றுதல் போன்றவற்றின்) காரணமாக அதை ஒரு போதும் அவர்கள் விரும்பமாட்டார்கள். அல்லாஹ் அக்கிரமக்காரர்களை அறிந்திருக்கின்றான்.

8 (நபியே!) அவர்களுக்கு நீர் கூறுவீராக. எந்த மரணத்தை விட்டும் நீங்கள் விரண்டோடுகின்றீர்களோ அந்த மரணம் நிச்சயமாக உங்களைச் சந்திக்கும். (நீங்கள் எந்த இடத்திற்குத் தப்பியோடுகின்றீர்களோ அந்த இடத்தில் அது உங்களை அடைந்து கொள்ளும்.) பின் நீங்கள், மறைவானவற்றையும் தெளிவானவற்றையும் அறிந்திருப்பவனின் (அல்லாஹ்வின்) பால் மீட்டப்படுவீர்கள். (அது மறுமையிலாகும்.) எனவே நீங்கள் செய்திருக்கும் (மோசமான செயல்களை) அவன் உங்களுக்கு அறியத்தருவான். (அவற்றிற்குக் கூலியும் வழங்குவான்.)

9 விசுவாசிகளே! வெள்ளிக் கிழமை தினத்தில் தொழுகைக்காக அழைப்பு விடுக்கப்பட்டால் (இந்த அழைப்பு இமாம் மிம்பரில் உட்கார்ந்ததின் பின் சொல்லப்படும் அதானாகும். ஏனெனில் நபியவர்களின் காலத்தில் இந்த அதான் மாத்திரமே காணப்பட்டது. ஜும்ஆவிற்கான முதல் அதான் மதீனா விசாலமானபோது உஸ்மான் (ரழி) அவர்களால் நபித்தோழர்கள் முன்னிலையில் ஏற்படுத்தப்பட்டது.) நீங்கள் அல்லாஹ்வை ஞாபகிப்பதற்காக (குத்பா, தொழுகை என்பவற்றின் பக்கம்) செல்லுங்கள். (குளித்தல், வுழூச் செய்தல், பள்ளிகளை நோக்கிச் செல்லல் போன்ற அதன் காரணிகளிலும் ஈடுபடுங்கள்.) மேலும் வியாபாரத்தை விட்டு விடுங்கள். (ஏனைய தொழில்களும் இவ்வாறாகும். வெள்ளிக் கிழமை முஅஸ்ஸின் அதான் சொல்லி விடுவாராயின் விற்பதோ, வாங்குவதோ ஹலாலாக மாட்டாது.) நீங்கள் அறிந்தவராக இருப்பின் அது உங்களுக்குச் சிறந்தது. (வியாபாரங்கள் போன்றவற்றை விட்டு குத்பா, தொழுகை என்பவற்றிற்குச் செல்வது வியாபாரம் செய்வதை விடச் சிறந்தது.)

10 தொழுகை நிறைவேற்றப்பட்டு விட்டால் (அதை நீங்கள் நிறைவேற்றி முடித்து விடுவீர்களாயின் வியாபாரத்திற்காகவும் வேறு தொழில் நடவடிக்கைகளுக்காகவும்) நீங்கள் பிரிந்து சென்று அல்லாஹ் (வியாபாரத்தின் மூலமாகவும் ஏனைய சம்பாத்தியங்கள் மூலமாகவும் வழங்கும்) அருள்களிலிருந்தும் நீங்கள் தேடிக் கொள்ளுங்கள். மேலும் நீங்கள் (ஈருலக பாக்கியங்களைக் கொண்டும்) வெற்றி பெறு முகமாக (உங்களுடைய வியாபார, தொழில் நடவடிக்கைகளுக்கிடையில்) அல்லாஹ்வை அதிகம் ஞாபகப் படுத்திக் கொள்ளுங்கள். (அவன் உங்களுக்கு ஈருலக நற்பாக்கியங்களுக்கும் வழிகாட்டியதற்காக அவனுக்கு நன்றியும் செலுத்துங்கள்.)

11 (நபியே!) அவர்கள் வியாபாரத்தையோ, அல்லது ஒரு வேடிக்கையையோ கண்டு விடுவார்களாயின் அதன் பக்கம் அவர்கள் கலைந்து சென்று விடுகின்றனர். (நீர் மிம்பரில்) நிற்கும் நிலையில் அவர்கள் உம்மை விட்டுச் சென்றுவிடுகின்றனர். (இவ்வசனம் இறங்கிய சந்தர்ப்பம், மதீனா வாசிகளிடம் வறுமையும், தேவையும் இருந்தது. நபியவர்கள் வெள்ளிக் கிழமை தினம் குத்பாப் பிரசங்கம் செய்து கொண்டிருந்த போது சிரியா போன்ற பிரதேசங்களிலிருந்து ஒரு வணிகக் கூட்டம் வந்தது. மக்கள் அதை நோக்கிச் சென்று விட்டார்கள். பள்ளியில் நபியவர்களுடன் பன்னிரெண்டு பேர் மாத்திரமே எஞ்சியிருந்தனர். அவ்வமயம் இவ்வசனங்கள் இறங்கின. நபியே!) நீர் கூறுவீராக, அல்லாஹ்விடம் இருப்பவை (அவன் வழங்கும் அளப்பரிய கூலியாகிய சுவனம், பள்ளியிலிருந்து குத்பாவைக் கேட்பதை விட்டு நீங்கள் சென்ற) அவ்வியாபாரத்தை விடவும், வேடிக்கையை விடவும் சிறந்தது. அல்லாஹ் உணவளிப்பவனில் மிகச் சிறந்தவன்.

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓاْ إِذَا نُودِيَ لِلصَّلَوٰةِ مِن يَوۡمِ ٱلۡجُمُعَةِ
فَٱسۡعَوۡاْ إِلَىٰ ذِكۡرِ ٱللَّهِ وَذَرُواْ ٱلۡبَيۡعَۚ ذَٰلِكُمۡ خَيۡرٞ لَّكُمۡ إِن كُنتُمۡ
تَعۡلَمُونَ ٩ فَإِذَا قُضِيَتِ ٱلصَّلَوٰةُ فَٱنتَشِرُواْ فِي ٱلۡأَرۡضِ
وَٱبۡتَغُواْ مِن فَضۡلِ ٱللَّهِ وَٱذۡكُرُواْ ٱللَّهَ كَثِيرٗا لَّعَلَّكُمۡ تُفۡلِحُونَ
١٠ وَإِذَا رَأَوۡاْ تِجَٰرَةً أَوۡ لَهۡوًا ٱنفَضُّوٓاْ إِلَيۡهَا وَتَرَكُوكَ قَآئِمٗاۚ قُلۡ
مَا عِندَ ٱللَّهِ خَيۡرٞ مِّنَ ٱللَّهۡوِ وَمِنَ ٱلتِّجَٰرَةِۚ وَٱللَّهُ خَيۡرُ ٱلرَّٰزِقِينَ ١١

## سُورَةُ المُنَافِقُونَ

ترتيبها ٦٣ — آياتها ١١

بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

إِذَا جَآءَكَ ٱلۡمُنَٰفِقُونَ قَالُواْ نَشۡهَدُ إِنَّكَ لَرَسُولُ ٱللَّهِۗ وَٱللَّهُ يَعۡلَمُ
إِنَّكَ لَرَسُولُهُۥ وَٱللَّهُ يَشۡهَدُ إِنَّ ٱلۡمُنَٰفِقِينَ لَكَٰذِبُونَ ١
ٱتَّخَذُوٓاْ أَيۡمَٰنَهُمۡ جُنَّةٗ فَصَدُّواْ عَن سَبِيلِ ٱللَّهِۚ إِنَّهُمۡ سَآءَ مَا كَانُواْ
يَعۡمَلُونَ ٢ ذَٰلِكَ بِأَنَّهُمۡ ءَامَنُواْ ثُمَّ كَفَرُواْ فَطُبِعَ عَلَىٰ قُلُوبِهِمۡ
فَهُمۡ لَا يَفۡقَهُونَ ٣ ۞وَإِذَا رَأَيۡتَهُمۡ تُعۡجِبُكَ أَجۡسَامُهُمۡۖ
وَإِن يَقُولُواْ تَسۡمَعۡ لِقَوۡلِهِمۡۖ كَأَنَّهُمۡ خُشُبٞ مُّسَنَّدَةٞۖ يَحۡسَبُونَ كُلَّ
صَيۡحَةٍ عَلَيۡهِمۡۚ هُمُ ٱلۡعَدُوُّ فَٱحۡذَرۡهُمۡۚ قَٰتَلَهُمُ ٱللَّهُۖ أَنَّىٰ يُؤۡفَكُونَ ٤

## அல்-முனாபிகூன்

(1) உம்மிடத்தில் நயவஞ்சகர்களான முனாபிக்கள் வந்தால் நிச்சயமாக நீர் அல்லாஹ்வின் தூதர் தான் என்று நாம் சாட்சியம் கூறுகின்றோம் என்பார்கள். (அது தமது உள்ளத்தில் இருந்து தான் வருகின்றது என்பதை நபிக்கு உணர்த்தும் முகமாக தமது சாட்சியத்தை உறுதிப்படுத்திக் கூறுவார்கள்.) நிச்சயமாக நீர் அவனின் தூதர் தான் என்பதை அல்லாஹ் அறிவான். நிச்சயமாக நயவஞ்சகர்கள் பொய்யர்கள் என அல்லாஹ் சாட்சி பகர்கின்றான். அவர்களுடைய சாட்சியத்தில் சொன்ன விடயம் உண்மையாக இருந்த போதும் விசுவாசத்துடன் உள்ளத்தால் பூரணமாக அதை ஏற்றுக் கொண்டு அதைச் சொல்வதாக காட்டிக் கொள்ள முற்பட்டார்கள். (அதில் அவர்கள் பொய்யர்கள்).

(2) அவர்கள் தமது சத்தியங்களை (கொலை செய்யப்படுதல், சிறை பிடிக்கப்படுதல் போன்றவற்றிலிருந்து தம்மைப் பாதுகாக்கும்) ஒரு கேடயமாக ஆக்கிக் கொண்டார்கள். மேலும் அல்லாஹ்வின் பாதையை விட்டும் தடுத்தார்கள். (நபித்துவத்தைக் குறை கூறியும், அதில் சந்தேகத்தை ஏற்படுத்தியும் புனிதப் போர், மற்றும் இதர நற்கிரிகைகள் செய்வதை விட்டும் மக்களை அவர்கள் தடுத்தார்கள்.) நிச்சயமாக அவர்கள் செய்யும் இச்செயல் (நயவஞ்சகமும், நேர்வழியினை விட்டு மக்களைத் தடுத்தலும்) மிக மோசமானது.

(3) அது அவர்கள் (நயவஞ்சகத்துடன்) ஈமான் கொண்டு பின்பு அவர்கள் நிராகரித்ததன் காரணத்தினாலாகும். இதன் காரணமாக அவர்களுடைய உள்ளங்களின் பேரில் முத்திரை இடப்பட்டுவிட்டது. (இதன் பின்) அவர்கள் ஈமான் கொள்ளமாட்டார்கள். (தமக்கு எதில் நலவும் நேர்வழியும் இருக்கின்றது என்பதை) அவர்கள் அறியமாட்டார்கள்.

(4) நீங்கள் அவர்களைக் காண்பீர்களாயின் அவர்களுடைய உடம்புகள் உங்களை ஆச்சரியப்படுத்தும். (அவை மிக அழகானவையாகவும், கவர்ச்சியானவையாகவும் காணப்படும்.) அவர்கள் பேசுவார்களாயின் அவர்களின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே இருப்பீர்கள். (அவர்கள் தெளிவாகவும், அழகாகவும், இனிமையாகவும் பேசுவதனால் நீங்கள் அதை உண்மை என நம்பி விடுவீர்கள். அவர்களின் தலைவன் அப்துல்லாஹ் பின் உபைய் மிக அழகாகவும் கவர்ச்சியாகவும் பேசுபவன். கவர்ச்சியான தோற்றம் உடையவன்.) அவர்கள் (மார்க்கத்தில் எந்த விளக்கமும், அறிவும் அற்றவர்களாக இருக்கும் விடயத்தில்) சுவர்களின் மீது சாத்தி வைக்கப்பட்டிருக்கும் மரக்குற்றிகளைப் போன்றவர்கள். (அவர்கள் நல்ல உடம்புகளைப் பெற்றிருந்த போதும் மிகவும் பயந்தவர்கள். அதனால்) வரக்கூடிய ஒவ்வொரு சப்தத்தையும் தமக்குக் கேடானதாக (தண்டனையாக) நினைக்கின்றார்கள். அவர்கள் தான் (உங்கள்) விரோதிகள். அவர்கள் உங்களிடமிருந்து அவர்களுக்குச் சார்பான சந்தர்ப்பங்களைப் பெற்றுக் கொள்வதில் அல்லது உங்களுடைய இரகசியங்களை அறிந்து கொள்வதில்) நீங்கள் எச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள். (ஏனெனில் அவர்கள் காபிர்களின் ஒற்றர்களாகச் செயற்படுகின்றார்கள்.) அல்லாஹ் அவர்களைச் சபிப்பானாக. அவர்கள் எங்ஙனம் உண்மையை விட்டும் திருப்பப்படுகின்றார்கள். (இறை நிராகரிப்பின் பால் சாய்கின்றார்கள்.)

(5) "நீங்கள் வாருங்கள், அல்லாஹ்வின் தூதர் உங்களுக்காகப் பாவமன்னிப்புக் கோருவார்" என்று சொல்லப்பட்டால் (அதைப் பரிகசித்தவர்களாகவும், பாவ மன்னிப்புக் கோருவதைப் புறக்கனித்தவர்களாகவும்) தமது தலைகளை அசைத்து விடுவார்கள். (அவர்கள் ரஸூல் (ஸல்) அவர்களைப் புறக்கனித்து, வராமல்) தடுத்துக் கொள்வதை (நபியே) நீர் காண்பீர். (அவர்கள் நபியவர்களிடத்தில் வருவதையும், பாவ மன்னிப்புக் கோருவதையும் தமக்கு இழிவாகக் கருதினார்கள்.)

(6) நீங்கள் அவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோருவதும், கோராமல் விடுவதும் சமனாகும். (நய வஞ்சகத்திலும் இறை நிராகரிப்பிலும் தொடர்ந்து இருப்பதனால் அது அவர்களுக்குப் பயனளிக்காது.) அல்லாஹ் (நயவஞ்சகத்தில் அவர்கள் இருக்கும்

வரை) அவர்களை மன்னிக்கமாட்டான். (முழுமையாக அவனின் வழிப்பாட்டிலிருந்து விலகி, பாவங்களில் மூழ்கியிருக்கும்) பாவிகளான கூட்டத்தினருக்கு அல்லாஹ் நேர்வழி காட்டமாட்டான். (இதில் நயவஞ்சகர்கள் முதன்மையாக நுழைவர்.)

7 அவர்கள் தான் அல்லாஹ்வின் தூதரிடம் இருப்பவர்களுக்கு (ஹிஜ்ரத் வந்தவர்களில் எளியவர்களுக்கு) அவர்கள் (அவரை விட்டும்) விலகி வரும் வரை எதையும் செலவு செய்ய வேண்டாம் எனக் கூறுகின்றார்கள். வானங்களினதும் பூமியினதும் பொக்கிசங்கள் அவனிடமே இருக்கின்றன. (அவனே இந்த முஹாஜிர்களுக்கு உணவளிப்பவன்.) அவ்வாறிருந்தும் இந்த நயவஞ்சகர்கள் (எல்லாப் பொக்கிசங்களும் அல்லாஹ்விடமே இருக்கின்றன என்பதை) விளங்கிக் கொள்ள மாட்டடார்கள். (அதனால் அல்லாஹ் மு.'.மின்களுக்கு எதையும் தாராளமாகக் கொடுக்க மாட்டான் என நினைக்கின்றார்கள்.)

8 அவர்கள் சொல்கின்றார்கள்: நாங்கள் மதீனாவிற்குத் திரும்பிச் சென்றால் (எங்களில் மிக கண்ணியமுடையவர் மிகத் தாழ்ந்தவரை அதை விட்டும் வெளியேற்றி விடுவார். (இதைச் சொன்னவன் நயவஞ்சகர்களின் தலைவன் அப்துல்லாஹ் பின் உபை என்பவன். 'மிக கண்ணியமானவர்' என்ற வார்த்தையைக் கொண்டு தன்னையும், தன்னைச் சார்ந்தவர்களையும், 'மிகத் தாழ்ந்தவர்' என்ற வார்த்தையைக் கொண்டு அல்லாஹ்வின் தூதரையும் அவருடன் இருப்பவர்களையும் குறிக்கின்றான். ஸைத் பின் அர்கம் (ரழி) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்: நான் நபியவர்களுடன் ஒரு யுத்தத்தில் கலந்து கொண்டிருந்தேன். அங்கு அப்துல்லாஹ் பின் உபை கூறினான்: "நாங்கள் மதீனாவிற்குத் திரும்பிச் சென்றால் எங்களில் மிக கண்ணியம் உள்ளவர் மிகத்தாழ்ந்தவரை மதீனாவை விட்டும் வெளியேற்றிவிடுவார்." நான் நபியவர்களிடத்தில் வந்து இச்செய்தியை அவர்களுக்கு அறிவித்தேன். அப்துல்லாஹ் பின் உபை அப்படி ஏதும் நிகழவில்லை என்று சத்தியம் செய்தான். எனது கூட்டத்தினர் எனக்குக் குறை கூறினார்கள். "நீர் ஏன் இந்த வேலையைச் செய்தீர்" எனக் கேட்டார்கள். நான் கவலையுடன் தூங்கச் சென்றேன். நபியவர்கள் என்னை வரவழைத்து "நீர் உண்மை கூறினீர் என்பதை அறிவித்து அல்லாஹ் வசனத்தை இறக்கிவிட்டான்" என்றார்கள்.

9 விசுவாசிகளே! உங்கள் செல்வங்களும், பிள்ளைகளும் அல்லாஹ்வை ஞாபகிக்கிறதை விட்டும் உங்கள் (கவனத்தைத்)திருப்பி விட வேண்டாம். (அல்லாஹ்வின் கடமைகளைப் புறக்கனித்து செல்வங்களிலும், பிள்ளைகளிலும் கவனம் செலுத்திக் கொண்டிருப்பது நயவஞ்சகர்களின் பண்பாகும். அல்லாஹ் இதை விட்டும் மு.'.மின்களுக்கு எச்சரிக்கை செய்கின்றான். இங்கு அல்லாஹ்வின் ஞாபகம் என்பது அல்லாஹ் விதியாக்கிய கடமைகளைக் குறிக்கும். அவ்வாறு யாராவது செய்தால் (மார்க்கத்தை விட்டு செல்வங்களிலும், பிள்ளைகளிலும் கவனம் செலுத்தினால்) அவர்கள் தான் நஷ்டவாளர்கள்.

10 உங்களில் ஒருவருக்கு மரணம் வருவதற்கு முன் (அதன் காரணிகள் நிகழ்வதற்கு முன்) நாம் உங்களுக்கு அளித்தவற்றில் இருந்து (ஸக்காத் உள்ளிட்ட நல்ல விடயங்களில்) செலவு செய்யுங்கள். அவர் அவ்வாறு செய்யாத விடத்து "எனது நாயனே என்னை ஒரு குறுகிய தவணை வரை பிற்படுத்தமாட்டாயா? நான் தர்மங்கள் செய்து நல்லவர்களில் நின்றும் ஆகிவிடுவேன்." எனக் கூறுவான்.

11 எந்த ஒரு ஆத்மாவையும் அதனுடைய தவணை வந்து (அதன் வாழ்க்கை முடிந்து விட்டால்) அல்லாஹ் பிற்படுத்தமாட்டான். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் மிக அறிந்தவன். (அவனுக்கு எதுவும் மறைய மாட்டாது. அவற்றிற்காக அவன் கூலி வழங்குவான்.)

وَإِذَا قِيلَ لَهُمْ تَعَالَوْا يَسْتَغْفِرْ لَكُمْ رَسُولُ ٱللَّهِ لَوَّوْا رُءُوسَهُمْ
وَرَأَيْتَهُمْ يَصُدُّونَ وَهُم مُّسْتَكْبِرُونَ ﴿٥﴾ سَوَآءٌ عَلَيْهِمْ
أَسْتَغْفَرْتَ لَهُمْ أَمْ لَمْ تَسْتَغْفِرْ لَهُمْ لَن يَغْفِرَ ٱللَّهُ لَهُمْ ۚ إِنَّ
ٱللَّهَ لَا يَهْدِى ٱلْقَوْمَ ٱلْفَٰسِقِينَ ﴿٦﴾ هُمُ ٱلَّذِينَ يَقُولُونَ
لَا تُنفِقُوا۟ عَلَىٰ مَنْ عِندَ رَسُولِ ٱللَّهِ حَتَّىٰ يَنفَضُّوا۟ ۗ وَلِلَّهِ
خَزَآئِنُ ٱلسَّمَٰوَٰتِ وَٱلْأَرْضِ وَلَٰكِنَّ ٱلْمُنَٰفِقِينَ لَا يَفْقَهُونَ
﴿٧﴾ يَقُولُونَ لَئِن رَّجَعْنَآ إِلَى ٱلْمَدِينَةِ لَيُخْرِجَنَّ ٱلْأَعَزُّ
مِنْهَا ٱلْأَذَلَّ ۚ وَلِلَّهِ ٱلْعِزَّةُ وَلِرَسُولِهِۦ وَلِلْمُؤْمِنِينَ وَلَٰكِنَّ
ٱلْمُنَٰفِقِينَ لَا يَعْلَمُونَ ﴿٨﴾ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ لَا تُلْهِكُمْ
أَمْوَٰلُكُمْ وَلَآ أَوْلَٰدُكُمْ عَن ذِكْرِ ٱللَّهِ ۚ وَمَن يَفْعَلْ
ذَٰلِكَ فَأُو۟لَٰٓئِكَ هُمُ ٱلْخَٰسِرُونَ ﴿٩﴾ وَأَنفِقُوا۟ مِن مَّا رَزَقْنَٰكُم
مِّن قَبْلِ أَن يَأْتِىَ أَحَدَكُمُ ٱلْمَوْتُ فَيَقُولَ رَبِّ لَوْلَآ أَخَّرْتَنِىٓ
إِلَىٰٓ أَجَلٍ قَرِيبٍ فَأَصَّدَّقَ وَأَكُن مِّنَ ٱلصَّٰلِحِينَ ﴿١٠﴾ وَلَن
يُؤَخِّرَ ٱللَّهُ نَفْسًا إِذَا جَآءَ أَجَلُهَا ۚ وَٱللَّهُ خَبِيرٌۢ بِمَا تَعْمَلُونَ ﴿١١﴾

## سُورَةُ التَّغَابُنِ

آياتها ١٨

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ
يُسَبِّحُ لِلَّهِ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ
وَهُوَ عَلَىٰ كُلِّ شَيْءٍ قَدِيرٌ ﴿١﴾ هُوَ الَّذِي خَلَقَكُمْ فَمِنْكُمْ كَافِرٌ
وَمِنْكُمْ مُؤْمِنٌ وَاللَّهُ بِمَا تَعْمَلُونَ بَصِيرٌ ﴿٢﴾ خَلَقَ السَّمَاوَاتِ
وَالْأَرْضَ بِالْحَقِّ وَصَوَّرَكُمْ فَأَحْسَنَ صُوَرَكُمْ وَإِلَيْهِ الْمَصِيرُ ﴿٣﴾
يَعْلَمُ مَا فِي السَّمَاوَاتِ وَالْأَرْضِ وَيَعْلَمُ مَا تُسِرُّونَ وَمَا تُعْلِنُونَ وَاللَّهُ
عَلِيمٌ بِذَاتِ الصُّدُورِ ﴿٤﴾ أَلَمْ يَأْتِكُمْ نَبَأُ الَّذِينَ كَفَرُوا مِنْ قَبْلُ
فَذَاقُوا وَبَالَ أَمْرِهِمْ وَلَهُمْ عَذَابٌ أَلِيمٌ ﴿٥﴾ ذَٰلِكَ بِأَنَّهُ كَانَتْ تَأْتِيهِمْ
رُسُلُهُمْ بِالْبَيِّنَاتِ فَقَالُوا أَبَشَرٌ يَهْدُونَنَا فَكَفَرُوا وَتَوَلَّوْا وَاسْتَغْنَى
اللَّهُ وَاللَّهُ غَنِيٌّ حَمِيدٌ ﴿٦﴾ زَعَمَ الَّذِينَ كَفَرُوا أَنْ لَنْ يُبْعَثُوا قُلْ بَلَىٰ وَرَبِّي
لَتُبْعَثُنَّ ثُمَّ لَتُنَبَّؤُنَّ بِمَا عَمِلْتُمْ وَذَٰلِكَ عَلَى اللَّهِ يَسِيرٌ ﴿٧﴾ فَآمِنُوا بِاللَّهِ
وَرَسُولِهِ وَالنُّورِ الَّذِي أَنْزَلْنَا وَاللَّهُ بِمَا تَعْمَلُونَ خَبِيرٌ ﴿٨﴾ يَوْمَ
يَجْمَعُكُمْ لِيَوْمِ الْجَمْعِ ذَٰلِكَ يَوْمُ التَّغَابُنِ وَمَنْ يُؤْمِنْ بِاللَّهِ وَيَعْمَلْ
صَالِحًا يُكَفِّرْ عَنْهُ سَيِّئَاتِهِ وَيُدْخِلْهُ جَنَّاتٍ تَجْرِي مِنْ تَحْتِهَا
الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا أَبَدًا ذَٰلِكَ الْفَوْزُ الْعَظِيمُ ﴿٩﴾

## அத்தகாபுன்

(1) வானங்களிலும், பூமியிலுமுள்ளவை அல்லாஹ்வைத் துதி செய்கின்றன. ஆட்சிகள் அனைத்தும் அவனுக்குரியன. புகழ்களுக்கும் அவனே தகுதியானவன், அவன் எல்லாவற்றிற்கும் சக்தி பெற்றவன்.

(2) அவனே உங்களைப் படைத்தான். உங்களில் இறை நிராகரிப்பாளர்களும் இருக்கின்றனர். இன்னும் உங்களில் மு.மின்களும் இருக்கின்றனர். (காபிரைப் படைத்தவன் அல்லாஹ், மு.்மினையும் படைத்தவன் அவனே. அவர்கள் ஒவ்வொருவருடைய குப்ரும், ஈமானும் அவரவர் செயலாகும். ஒரு மு.்மின் ஈமானைத் தேர்ந்தெடுக்கின்றான். காபிர் இறை நிராகரிப்பைத் தேர்ந்தெடுக்கின்றான். இவை அனைத்தும் இறைவனின் உத்தரவின் பிரகாரமே நடக்கின்றன. அல்லாஹ் கூறுகின்றான்: "அல்லாஹ் நாடாததை உங்களால் நாட முடியாது") நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் பார்த்து அறிந்து கொண்டிருக்கின்றான்.

(3) அவன் வானங்களையும், பூமியையும் உண்மையான (உறுதியான) முடிவைக் கொண்டு படைத்தான். அவனே உங்களுக்கு உருவமைத்தான். மேலும் உங்கள் உருவங்களை மிக அழகானதாக ஆக்கி வைத்தான். நீங்கள் அவன் பக்கமே மீள்வீர்கள். (உங்களை சிறந்ததும், பரிபூரணமானதும், அழகானதுமான உருவங்களில் படைத்துள்ளான். மனிதர்களை விஷேடமான ஒரு உருவமைப்பில் படைத்துள்ளதில் அல்லாஹ்வின் சக்தி, அவனின் ஞானம், வல்லமை என்பவற்றிற்கும் அதே போன்று அவனது உள்ரங்க வடிவமைப்பு, சிந்தனை ரீதியான சக்திகள் என்பவற்றிற்கும் தெளிவான அத்தாட்சிகள் இருக்கின்றன. சிந்திக்கும் திறனுள்ளவர்கள் அதை அறிந்து கொள்வார்கள். அல்லாஹ் கூறுகின்றான்: உறுதி கொள்வோர்களுக்கு பூமியில் அத்தாட்சிகள் இருக்கின்றன. நீங்கள் உங்களைப் பற்றி சிந்தித்துப் பார்க்கக்கூடாதா?)

(4) அவன் வானங்களில் உள்ளவற்றையும், பூமியில் உள்ளவற்றையும் அறிவான். மேலும் அவன் நீங்கள் மறைக்கக் கூடியவற்றையும், பகிரங்கப்படுத்தக் கூடியவற்றையும் அறிவான். மேலும் அல்லாஹ் உள்ளங்களில் உள்ளவற்றையும் அறிபவன்.

(5) உங்களுக்கு முன் இறை நிராகரிப்புச் செய்தவர்களின் செய்திகள் உங்களுக்கு வரவில்லையா? (அவர்கள் சென்றுவிட்ட சமுதாயத்தவர்களாகிய நூஹ் நபியின் கூட்டத்தினரையும் மற்றும் ஆத், ஸமூத் கூட்டத்தினரையும் போன்ற இறை நிராகரிப்புச் செய்தவர்கள். அவர்களின் தூதர்கள் அவர்களை எவ்வாறு ஓர் இறைக் கொள்கையின் பால் அழைத்தார்கள் என்பதைப் பற்றியும் அவர்களைப் பொய்ப்பித்தவர்களை அல்லாஹ் அழித்து அவர்களை நம்பியவர்களை அவன் பாதுகாத்த முறை பற்றியும் அவன் குர்ஆனில் குறிப்பிட்டுள்ளான்.) அவர்கள் அவர்களின் செயலின் தீய பலனை (இவ்வுலகில்) அனுபவித்து விட்டார்கள். அவர்களுக்கு (மறுமையிலும்) நோவினையுள்ள வேதனை இருக்கின்றது.

(6) அது (ஈருலகத் தண்டனை) ஏனெனில் அவர்களின் தூதர்கள் அவர்களிடம் (தெளிவான) அத்தாட்சிகளைக் கொண்டு வந்தார்கள். அவர்கள் "எங்களுக்கு மனிதர்களா நேர்வழி காட்டுவார்கள்?" எனக் கேட்டார்கள். (தூதர்கள் மனிதர்களில் நின்றும் வருவதை ஏற்றுக் கொள்ள மறுத்தார்கள். அவர்கள் (ஈமான் கொள்வதை விட்டும்) நிராகரித்துப் பின்வாங்கி விட்டார்கள். அல்லாஹ் (அவர்களுடைய வழிப்பாடுகளை விட்டும்) தேவையற்றுவிட்டான். அவன் தேவையற்றவன், அவன் புகழுக்குரியவன்.

(7) நிராகரிப்பாளர்கள் தாம் (மறுமையில்) எழுப்பப்படமாட்டார்கள் என நினைத்துக் கொண்டிருக்கின்றார்கள். நபியே நீர் கூறுவீராக: அவ்வாறல்ல, எனது இறைவனின் மீது ஆணையாக நிச்சயமாக நீங்கள் (மரணத்திற்குப் பின்) எழுப்பப்படுவீர்கள். பின்பு நீங்கள் செய்தவற்றை உங்களுக்கு அறிவித்துக் கொடுக்கப்படும். (அதற்காக உங்களுக்குக் கூலி

وَٱلَّذِينَ كَفَرُواْ وَكَذَّبُواْ بِـَٔايَٰتِنَآ أُوْلَٰٓئِكَ أَصۡحَٰبُ
ٱلنَّارِ خَٰلِدِينَ فِيهَاۖ وَبِئۡسَ ٱلۡمَصِيرُ ١٠ مَآ أَصَابَ مِن
مُّصِيبَةٍ إِلَّا بِإِذۡنِ ٱللَّهِۗ وَمَن يُؤۡمِنۢ بِٱللَّهِ يَهۡدِ قَلۡبَهُۥۚ وَٱللَّهُ بِكُلِّ
شَيۡءٍ عَلِيمٞ ١١ وَأَطِيعُواْ ٱللَّهَ وَأَطِيعُواْ ٱلرَّسُولَۚ فَإِن
تَوَلَّيۡتُمۡ فَإِنَّمَا عَلَىٰ رَسُولِنَا ٱلۡبَلَٰغُ ٱلۡمُبِينُ ١٢ ٱللَّهُ لَآ إِلَٰهَ
إِلَّا هُوَۚ وَعَلَى ٱللَّهِ فَلۡيَتَوَكَّلِ ٱلۡمُؤۡمِنُونَ ١٣ يَٰٓأَيُّهَا
ٱلَّذِينَ ءَامَنُوٓاْ إِنَّ مِنۡ أَزۡوَٰجِكُمۡ وَأَوۡلَٰدِكُمۡ عَدُوّٗا
لَّكُمۡ فَٱحۡذَرُوهُمۡۚ وَإِن تَعۡفُواْ وَتَصۡفَحُواْ وَتَغۡفِرُواْ
فَإِنَّ ٱللَّهَ غَفُورٞ رَّحِيمٌ ١٤ إِنَّمَآ أَمۡوَٰلُكُمۡ وَأَوۡلَٰدُكُمۡ
فِتۡنَةٞۚ وَٱللَّهُ عِندَهُۥٓ أَجۡرٌ عَظِيمٞ ١٥ فَٱتَّقُواْ ٱللَّهَ مَا ٱسۡتَطَعۡتُمۡ
وَٱسۡمَعُواْ وَأَطِيعُواْ وَأَنفِقُواْ خَيۡرٗا لِّأَنفُسِكُمۡۗ وَمَن
يُوقَ شُحَّ نَفۡسِهِۦ فَأُوْلَٰٓئِكَ هُمُ ٱلۡمُفۡلِحُونَ ١٦ إِن تُقۡرِضُواْ
ٱللَّهَ قَرۡضًا حَسَنٗا يُضَٰعِفۡهُ لَكُمۡ وَيَغۡفِرۡ لَكُمۡۚ وَٱللَّهُ شَكُورٌ
حَلِيمٌ ١٧ عَٰلِمُ ٱلۡغَيۡبِ وَٱلشَّهَٰدَةِ ٱلۡعَزِيزُ ٱلۡحَكِيمُ ١٨

## سُورَةُ الطَّلَاقِ

ترتيبها ٦٥ — آياتها ١٢

வழங்கப்படும்.) அது (எழுப்புவதும், பின்பு கூலி கொடுப்பதும்) அல்லாஹ்விற்கு எளிதானது.

8 நீங்கள் அல்லாஹ்வையும், அவனது தூதரையும் நாங்கள் இறக்கி வைத்த குர்ஆனையும் ஈமான் கொள்ளுங்கள். (அல்குர்ஆன் ஒரு பிரகாசமாகும். வழிகேடு எனும் இருளிலிருந்து நேர்வழியின் பால் அது வழிகாட்டுகின்றது.) அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை மிக அறிந்தவன்.

9 ஒன்று சேர்க்கப்படும் நாளுக்காக(மறுமை நாள்) அவன் உங்களை ஒன்று சேர்க்கும் தினத்தில் (நீங்கள் செய்தவற்றை உங்களுக்கு அறிவித்துக் கொடுப்பான். அத்தினத்தில் கூலி வழங்குவதற்காக ஒவ்வொரு மனிதனையும், அவனது கிரிகைகளையும், மேலும் ஒவ்வொரு நபியையும், அவரது கூட்டத்தையும், அநியாயம் இழைத்தவனையும், அநியாயம் இழைக்கப்பட்டவனையும், முன்வந்தவர்கள், பின் வந்தவர்கள் அனைவரையும் ஒன்று சேர்ப்பான்.) அது சிலர் இலாபமும் வேறு சிலர் நஷ்டமும் அடையும் நாள். (சத்தியத்தை உடையவர்கள் இலாபமடைந்து, அசத்தியத்திலிருப்பவர்கள் நஷ்டமடைவார்கள். சுவனவாதிகள் அடையும் இலாபத்தை விட சிறந்த இலாபம் எதுவும் இல்லை.) யார் அல்லாஹ்வை விசுவாசித்து நற்கிரிகைகள் செய்கின்றாரோ அல்லாஹ் அவர்களுடைய பாவங்களை மன்னித்து விடுகின்றான்.

10 இறை நிராகரிப்புச் செய்து எங்கள் வசனங்களைப் பொய்யாக்கியவர்கள் அவர்கள் நரக வாசிகள். அதில் அவர்கள் நிலையாக இருப்பார்கள். அது மீளும் இடங்களில் மிக மோசமானது.

11 ஏதாவது ஒரு சோதனை ஏற்பட்டால் அது அல்லாஹ்வின் நாட்டத்தின் படியாயிருக்கும். (அது அல்லாஹ்வின் ஏற்பாட்டின் படியே நடைபெறுகின்றது.) யார் அல்லாஹ்வை விசுவாசிக்கின்றாரோ (இவை அல்லாஹ்வின் ஏற்பாட்டின் படி தான் நடைபெறுகின்றது என்பதை நம்புகின்றாரோ) அல்லாஹ் (அவருக்கு சோதனைகள் ஏற்படும் தருணங்களில் அல்லாஹ்விடமிருந்தே இவை வருகின்றன என்பதை அறிந்து பொறுமை செய்து கொள்ளக் கூடிய) அறிவை அவருடைய உள்ளத்துக்கு வழங்குவான். அல்லாஹ் யாவற்றையும் அறிந்தவன்.

12 நீங்கள் அல்லாஹ்வுக்கு வழிப்படுங்கள். அவனது தூதருக்கும் வழிப்படுங்கள். நீங்கள் (அவ்வாறு வழிப்பட) பின்வாங்குவீர்களாயின் (அதன் குற்றம் உங்களுக்கே. எமது தூதருக்கு அதில் எந்தக் குற்றமுமில்லை.) தெளிவாக எத்தி வைப்பது மாத்திரமே எமது தூதரின் பொறுப்பாகும். (அதை அவர் செய்து விட்டார். வேறு எந்தப் பொறுப்பும் அவருக்கு இல்லை.)

13 அல்லாஹ் ஒருவனைத் தவிர வணக்கத்துக்குரிய நாயன் வேறில்லை.

14 விசுவாசிகளே! உங்களுடைய மனைவியர்களிலும், உங்கள் பிள்ளைகளிலும் உங்களுக்குப் பகைவர்கள் இருக்கின்றார்கள். (அவர்கள் உங்களை நன்மைகளை விட்டும் தடுத்து விடுவார்கள். சிலர் இஸ்லாத்தை ஏற்று மதீனாவுக்கு ஹிஜ்ரத் செல்ல முற்படுகையில் அவர்களின் மனைவியர்களும், பிள்ளைகளும் அவர்களைத் தடுத்து விட்டார்கள். அச்சந்தர்ப்பத்தில் இவ்வசனம் இறங்கியது.) அவர்கள் விடயத்தில் நீங்கள் எச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள். (அவர்களின் பால் உங்களுக்குக் காணப்படும் அன்பு அல்லாஹ்வின் கட்டளைகளை நீங்கள் ஏற்று நடப்பதற்குத் தடையாக அமைந்து விடக்கூடாது.) மேலும் (அவர்களால் உங்களுக்கு இழைக்கப்பட்ட தவறுகளை) மன்னித்து (அவற்றைப்) பொருட்படுத்தாமல் விட்டுவிடுவீர்களாயின் நிச்சயமாக அல்லாஹ் (அவர்களையும், உங்களையும்) மன்னித்து, அருள் புரிவான்.

15 நிச்சயமாக உங்கள் செல்வங்களும், பிள்ளைகளும் சோதனையாகும். (அல்லாஹ்வின் கடமைகளைத் தடுப்பதற்கோ, தடுக்கப்பட்ட முறைகளில் சம்பாதிக்கவோ அவர்கள் உங்களைத் தூண்டி விடலாம்.) அல்லாஹ்விடத்தில் மகத்தான கூலி இருக்கின்றது. (தனது செல்வத்திலும் பிள்ளைகளிலும் ஆசை கொண்டு அல்லாஹ்வை மறந்திடாமல் அவனுக்கு வழிப்பட்டவர்களுக்கு அதை வழங்குவான்.)

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

يَا أَيُّهَا النَّبِيُّ إِذَا طَلَّقْتُمُ النِّسَاءَ فَطَلِّقُوهُنَّ لِعِدَّتِهِنَّ وَأَحْصُوا
الْعِدَّةَ وَاتَّقُوا اللَّهَ رَبَّكُمْ لَا تُخْرِجُوهُنَّ مِنْ بُيُوتِهِنَّ
وَلَا يَخْرُجْنَ إِلَّا أَنْ يَأْتِينَ بِفَاحِشَةٍ مُبَيِّنَةٍ وَتِلْكَ حُدُودُ
اللَّهِ وَمَنْ يَتَعَدَّ حُدُودَ اللَّهِ فَقَدْ ظَلَمَ نَفْسَهُ لَا تَدْرِي لَعَلَّ
اللَّهَ يُحْدِثُ بَعْدَ ذَٰلِكَ أَمْرًا ١ فَإِذَا بَلَغْنَ أَجَلَهُنَّ فَأَمْسِكُوهُنَّ
بِمَعْرُوفٍ أَوْ فَارِقُوهُنَّ بِمَعْرُوفٍ وَأَشْهِدُوا ذَوَيْ عَدْلٍ مِنْكُمْ
وَأَقِيمُوا الشَّهَادَةَ لِلَّهِ ذَٰلِكُمْ يُوعَظُ بِهِ مَنْ كَانَ يُؤْمِنُ
بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ وَمَنْ يَتَّقِ اللَّهَ يَجْعَلْ لَهُ مَخْرَجًا ٢ وَيَرْزُقْهُ
مِنْ حَيْثُ لَا يَحْتَسِبُ وَمَنْ يَتَوَكَّلْ عَلَى اللَّهِ فَهُوَ حَسْبُهُ إِنَّ اللَّهَ
بَالِغُ أَمْرِهِ قَدْ جَعَلَ اللَّهُ لِكُلِّ شَيْءٍ قَدْرًا ٣ وَاللَّائِي يَئِسْنَ
مِنَ الْمَحِيضِ مِنْ نِسَائِكُمْ إِنِ ارْتَبْتُمْ فَعِدَّتُهُنَّ ثَلَاثَةُ أَشْهُرٍ
وَاللَّائِي لَمْ يَحِضْنَ وَأُولَاتُ الْأَحْمَالِ أَجَلُهُنَّ أَنْ يَضَعْنَ حَمْلَهُنَّ
وَمَنْ يَتَّقِ اللَّهَ يَجْعَلْ لَهُ مِنْ أَمْرِهِ يُسْرًا ٤ ذَٰلِكَ أَمْرُ اللَّهِ أَنْزَلَهُ
إِلَيْكُمْ وَمَنْ يَتَّقِ اللَّهَ يُكَفِّرْ عَنْهُ سَيِّئَاتِهِ وَيُعْظِمْ لَهُ أَجْرًا ٥

16 நீங்கள் முடியுமான அளவு அல்லாஹ்வைப் பயந்து கொள்ளுங்கள். (அல்லாஹ்வினதும், அவனது தூதரினதும் கட்டளைகளை) செவியேற்றுக் கட்டுப்படுங்கள். உங்கள் நலவுக்காக (நன்மையான விடயங்களில் உங்களுக்கு அல்லாஹ் அளித்தவற்றிலிருந்து கஞ்சத்தனம் செய்யாமல்) நீங்கள் செலவு செய்யுங்கள். தமது உள்ளத்தின் கஞ்சத் தனத்தை விட்டும் யார் பாதுகாக்கப் படுகின்றார்களோ அவர்களே வெற்றி பெறுபவர்கள்.

17 நீங்கள் அல்லாஹ்வுக்கு அழகிய கடன் கொடுத்தால் (தூய எண்ணத்துடனும், மன விருப்பத்துடனும் நன்மையான விடயங்களில் செலவு செய்வீர்களாயின்) அவன் அதை உங்களுக்குப் பன்மடங்காக்கித் தருவான். (அவன் பத்து முதல் எழுநூறு மடங்கு வரைக்கும் அதை அதிகப்படுத்துவான்.) அத்துடன் (உங்கள் பாவங்களை) உங்களுக்கு மன்னித்து விடுவான்.

18 (அவன்) மறைவானவற்றையும், வெளிப்படையானவற்றையும் அறிந்தவன், (யாவற்றையும்) மிகைக்கக்கூடியவன், ஞானமுடையவன்.

## அத்தலாக்

1 நபியே! நீங்கள் விவாகரத்துச் செய்ய விரும்பின் அவர்கள் இத்தா இருப்பதற்குரிய காலப் பகுதியில் அவர்களை விவாகரத்துச் செய்யுங்கள். (நீங்கள் உங்கள் மனைவியர்களை விவாகரத்துச் செய்ய உறுதி கொள்வீர்களாயின் மாதவிடாயிலிருந்து அவர்கள் சுத்தமாகி அவர்களுடன் தாம்பத்திய உறவு கொள்ள முன் அவர்களை விவாகரத்துச் செய்யுங்கள். இப்னு உமர் (ரழி) அவர்கள் அவர்களுடைய மனைவியை அவர்கள் மாதவிடாயில் இருக்கும்போது விவாகரத்துச் செய்தார்கள். அதை நபியவர்களுக்குக் கூறப்பட்ட பொழுது அவர்கள் கோபமடைந்தார்கள். பின்பு நபியவர்கள் கூறினார்கள்: அப்பெண்ணை மீட்டெடுக்கும் படி அவர்களுக்குச் சொல்லுங்கள். அவள் சுத்தமாகி, மீண்டும் மாதவிடாய் ஏற்பட்டு, மீண்டும் துப்பரவாகும் வரை வைத்துக் கொள்ளவும். அதற்குப் பின் தேவையாயிருந்தால் அவளுடன் உறவுகொள்ள முன் சுத்தமாக உள்ள நிலையில் தலாக் சொல்லவும். அது தான் அல்லாஹ் பெண்களை விவாகரத்துச் செய்வதற்கு ஏவிய காலமாகும்.) நீங்கள் இத்தாவின் காலப் பகுதியை கணக்கிட்டுக் கொள்ளுங்கள். (அது மாதவிடாய்களுக்கிடையிலான மூன்று சுத்தமான காலப் பகுதிகளாகும்.) உங்களுடைய நாயன் அல்லாஹ்வைப் பயந்து கொள்ளுங்கள். (உங்களுக்கு அவன் ஏவிய விடயங்களில் அவனுக்கு மாறு செய்ய வேண்டாம்.) மேலும் (அவர்களுக்குத் தொந்தரவுகள் கொடுத்து அவர்கள் விவாகரத்துச் செய்யப்படக்கூடிய சந்தர்ப்பத்தில் அவர்கள் இருந்த) அவர்களுடைய வீடுகளை விட்டும் அவர்களை நீங்கள் வெளியேற்ற வேண்டாம். மேலும் (அவர்களுடைய இத்தா முடிவடையும் வரை) அவர்கள் வெளியேறவும் வேண்டாம். (ஆனால்) அவர்கள் தெளிவான ஒரு பாவத்தைச் செய்தாலே தவிர. (விபச்சாரம், தனது நாவினால் அங்கிருப்பவர்களுக்குத் தொல்லை கொடுத்தல் போன்ற பாவங்களைச் செய்தால் அன்றி நீங்கள் அவர்களை வெளியேற்ற வேண்டாம்.) இவை அல்லாஹ்வின் வரையறைகளாகும். (இவற்றை அவன் அடியார்களின் மீது விதித்து வைத்துள்ளான். அவற்றைத் தாண்டிச் செல்வது அவர்களுக்கு ஹலாலாகமாட்டாது.) யார் அல்லாஹ்வின் வரையறைகளைத் தாண்டிச் செல்கின்றாரோ அவர் தனக்கே அநியாயம் செய்து கொண்டார். அல்லாஹ் அதற்குப் பின் ஏதாவது ஒன்றை ஏற்படுத்தி விடலாம் என்பதை நீர் அறியமாட்டீர். (இவ்வாறு இத்தா இருக்கக்கூடிய சந்தர்ப்பத்தில் அவர்களின் உள்ளங்களில் மாற்றத்தை ஏற்படுத்தி அவர்கள் மீண்டும் இணையக் கூடிய சந்தர்ப்பத்தை ஏற்படுத்தி விடலாம்.)

2 அவர்களுடைய தவணையை அவர்கள் (அப்பெண்கள்) அடைவார்களாயின் (இத்தா

முடிவடையக்கூடிய காலப் பகுதி நெருங்குமாயின்) அவர்களைச் சிறந்த முறையில் தடுத்து வைத்துக் கொள்ளுங்கள். (மனத் திருப்தியுடன் சிறந்த முறையில் அவர்களுடன் வாழ்வதற்காக அவர்களை நீங்கள் மீண்டும் மீட்டெடுங்கள்.) அல்லது சிறந்த முறையில் அவர்களைப் பிரிந்து விடுங்கள். (இத்தாவை அவ்வாறே முடியவிட்டு அவர்களுடைய உரிமையைக் கொடுத்துப் பிரிந்து கொள்ளுங்கள். அவர்களுக்கு நீங்கள் தொல்லை கொடுப்பதற்காகவோ, அல்லது அநீதி இழைப்பதற்காகவோ அவர்களைத் தொடர்ந்து வைத்துக் கொள்வது ஆகுமாக மாட்டாது.) மேலும் (நீங்கள் அவ்வாறு மீட்டும் அல்லது பிரிந்து விடும் சந்தர்ப்பத்தில்) நேர்மையான இருவர்களைச் சாட்சியாக வைத்துக் கொள்ளுங்கள். (இது பின்னால் பிரச்சினைகளைத் தடுப்பதற்கு உதவியாக அமையும்.) இச்சாட்சியத்தை நீங்கள் அல்லாஹ்வுக்காக (அவனது திருப்தியைப் பெறும் நோக்கில்) நிலை நிறுத்துவீர்களாக. இவ்வாறு, அல்லாஹ்வையும் மறுமை நாளையும் விசுவாசிப்பவர்களுக்கு உபதேசிக்கப்படுகின்றது. (ஏனெனில் அவர்கள் தான் உபதேசம் பெறுவார்கள்.) இன்னும் (அவனது வரையறைகளை ஏற்று) அல்லாஹ்வை யார் பயப்படுகின்றார்களோ அவர்களுக்கு (கஷ்டங்களிலிருந்து) வெளிப்படும் ஒரு வழியை அவன் ஏற்படுத்திக் கொடுப்பான்.

3 மேலும், அவர்களுக்கு அவன் எதிர்பாராத விதத்தில் வாழ்வாதாரங்களை அளிப்பான். (விவாகரத்தின் போதோ அல்லது மீட்டெடுக்கும் போதோ அல்லாஹ்வைப் பயப்படுபவர்களுக்கு இவ்வசதிகளை ஏற்படுத்திக் கொடுப்பான். மாற்றமாக இச்சந்தர்ப்பங்களில் அவனைப் பயப்படாதவர்களுக்கு நெருக்கடிகள் உண்டாகும்.) யார் (தனது கருமங்களில்) அல்லாஹ்வின் மீது முழுமையாகப் பொறுப்புச் சாட்டுகின்றாரோ அவன் அவர்களுக்குப் போதுமானவன். (அவர்களுடைய தேவைகளை அவன் நிறைவேற்றி வைப்பான்.) நிச்சயமாக அல்லாஹ் அவனது கருமங்களை அடைந்து கொள்ளக் கூடியவன். (எந்த ஒன்றும் அவனை இயலாமலாக்கிவிட முடியாது.) திட்டமாகவே அவன் ஒவ்வொன்றுக்கும் ஒரு (குறிப்பிட்ட) பிரமாணத்தை ஏற்படுத்தியிருக்கின்றான். (கஷ்டம், செழிப்பு ஆகிய ஒவ்வொன்றுக்கும் ஓர் அளவை அவன் நிர்ணயித்துள்ளான்.)

4 உங்களுடைய பெண்களில் (தாம் வயது முதிர்வடைந்ததன் காரணமாக) மாதவிடாயை விட்டும் நம்பிக்கை இழந்தவர்கள் அவர்களுடைய இத்தாவில் நீங்கள் சந்தேகிப்பீர்களாயின் (அவர்கள் எவ்வாறு இத்தா இருப்பார்கள் என்பதை நீங்கள் அறியவில்லையாயின்) அவர்களுடைய இத்தாவாகிறது மூன்று மாதங்களாகும். (இதே போன்று தான் அவர்கள் சிறியவர்கள் என்பதனால்) மாதவிடாய் ஏற்படாதவர்கள் (அவர்களுடைய இத்தாவும் மூன்று மாதங்களாகும்.) மேலும் கர்ப்பிணிப் பெண்களின் (இத்தா முடிவடையும்) தவணையாகிறது அவர்களுடைய கர்ப்பத்தை ஈன்றெடுப்பதாயிருக்கும். (அவர்கள் பிள்ளைப் பிரசவம் வரை அவர்கள் இத்தா அனுஷ்டிக்க வேண்டும்.) யார் அல்லாஹ்வைப் பயப்படுகிறார்களோ அவர்களுக்கு (இவ்வுலகில்) அவர்களுடைய கருமங்களில் இலேசை ஏற்படுத்துவான்.

5 அது அல்லாஹ் உங்களுக்கு இறக்கிவைத்த அவனின் கட்டளையாகும். யார் அல்லாஹ்வைப் பயப்படுகின்றார்களோ அவர்களுக்கு அவர்களுடைய பாவங்களை அவன் மன்னித்து விடுவான். மேலும் (நாளை மறுமையில்) அவர்களுடைய கூலியை அவர்களுக்கு மகத்தானதாக ஆக்கி விடுவான்.

6 உங்கள் வசதிக்கேற்ப நீங்கள் வசிக்கும் இடங்களில் அவர்களையும் வசிக்கச் செய்யுங்கள். (ஒரு முறை அல்லது இருமுறை விவாகரத்துச் செய்யப்பட்ட பெண்களுக்கு அவர்கள் இத்தா இருக்கும் காலப் பகுதியில் வதிவிடம் அளிப்பதுடன் உணவு வசதிகளை ஏற்பாடு செய்து கொடுப்பதும் கட்டாயமாகும். மூன்று முறை விவாகரத்துச் செய்யப்பட்ட பெண்ணுக்கு இவற்றைக் கொடுப்பது அவசியமாக மாட்டாது.) நீங்கள் அவர்களுக்கு (வதிவிடத்திலோ, அல்லது உணவு போன்ற விடயங்களிலோ) நெருக்கடி ஏற்படுத்துவதற்காக அவர்களுக்குத் தொல்லை கொடுக்க வேண்டாம். அவர்கள் கர்ப்பிணிப் பெண்களாக இருப்பின் அவர்கள் பிள்ளையைப் பிரசவிக்கும் வரை அவர்களுக்குச் செலவு செய்யுங்கள். (விவாகரத்துச் செய்யப்பட்ட பெண்கள் கர்ப்பிணிகளாக இருப்பின் அவர்களுக்கு வதிவிடமும் ஆகாரச் செலவுகளும் வழங்குவது கட்டாயம் என்பது அறிஞர்களுக்கிடையில் மாற்றுக் கருத்து இல்லாத ஒரு விடயமாகும்.) அதற்குப்பின் (உங்கள் பிள்ளைகளுக்கு) உங்களுக்காக அவர்கள் பாலூட்டினால் அவர்களுக்குரிய கூலிகளை அவர்களுக்குக் கொடுத்து விடுங்கள். (இவை பற்றி நீங்கள் உங்களுக்கிடையில் நேர்மையுடன் கலந்தாலோசித்து முடிவெடுத்துக் கொள்ளுங்கள். குழந்தைகளுக்குப் பால் கொடுத்தல், அதை நிறுத்தல் போன்ற விடயங்களில் பகரா ஸூராவில் 233ம் வசனத்தில் குறிப்பிடப்படுவது போன்று ஆலோசித்தே முடிவெடுத்துக் கொள்ளவும்.) மேலும் (இது விடயத்தில்) உங்களுக்கிடையில் சிரமங்களும் (பிரச்சினைகளும்) ஏற்பட்டால் (கணவன் பாலூட்டுவதற்குரிய கூலியை வழங்க மறுப்பதுடன் அப்பெண்ணும் கூலியின்றி பாலூட்ட மறுத்தால்) வேறொருவள் அப்பிள்ளைக்குப் பாலூட்டுவாள். (பாலூட்டும் செவிலித் தாய் ஒருவரை கணவன் கூலிக்கு அமர்த்துவான்.)

أَسْكِنُوهُنَّ مِنْ حَيْثُ سَكَنتُم مِّن وُجْدِكُمْ وَلَا تُضَآرُّوهُنَّ لِتُضَيِّقُوا۟
عَلَيْهِنَّ ۚ وَإِن كُنَّ أُو۟لَٰتِ حَمْلٍ فَأَنفِقُوا۟ عَلَيْهِنَّ حَتَّىٰ يَضَعْنَ حَمْلَهُنَّ ۚ
فَإِنْ أَرْضَعْنَ لَكُمْ فَـَٔاتُوهُنَّ أُجُورَهُنَّ ۖ وَأْتَمِرُوا۟ بَيْنَكُم بِمَعْرُوفٍ ۖ وَإِن
تَعَاسَرْتُمْ فَسَتُرْضِعُ لَهُۥٓ أُخْرَىٰ ﴿٦﴾ لِيُنفِقْ ذُو سَعَةٍ مِّن سَعَتِهِۦ ۖ
وَمَن قُدِرَ عَلَيْهِ رِزْقُهُۥ فَلْيُنفِقْ مِمَّآ ءَاتَىٰهُ ٱللَّهُ ۚ لَا يُكَلِّفُ ٱللَّهُ نَفْسًا
إِلَّا مَآ ءَاتَىٰهَا ۚ سَيَجْعَلُ ٱللَّهُ بَعْدَ عُسْرٍ يُسْرًا ﴿٧﴾ وَكَأَيِّن مِّن قَرْيَةٍ
عَتَتْ عَنْ أَمْرِ رَبِّهَا وَرُسُلِهِۦ فَحَاسَبْنَٰهَا حِسَابًا شَدِيدًا وَعَذَّبْنَٰهَا
عَذَابًا نُّكْرًا ﴿٨﴾ فَذَاقَتْ وَبَالَ أَمْرِهَا وَكَانَ عَٰقِبَةُ أَمْرِهَا خُسْرًا ﴿٩﴾
أَعَدَّ ٱللَّهُ لَهُمْ عَذَابًا شَدِيدًا ۖ فَٱتَّقُوا۟ ٱللَّهَ يَٰٓأُو۟لِى ٱلْأَلْبَٰبِ ٱلَّذِينَ ءَامَنُوا۟ ۚ
قَدْ أَنزَلَ ٱللَّهُ إِلَيْكُمْ ذِكْرًا ﴿١٠﴾ رَّسُولًا يَتْلُوا۟ عَلَيْكُمْ ءَايَٰتِ ٱللَّهِ مُبَيِّنَٰتٍ
لِّيُخْرِجَ ٱلَّذِينَ ءَامَنُوا۟ وَعَمِلُوا۟ ٱلصَّٰلِحَٰتِ مِنَ ٱلظُّلُمَٰتِ إِلَى ٱلنُّورِ ۚ
وَمَن يُؤْمِنۢ بِٱللَّهِ وَيَعْمَلْ صَٰلِحًا يُدْخِلْهُ جَنَّٰتٍ تَجْرِى مِن تَحْتِهَا
ٱلْأَنْهَٰرُ خَٰلِدِينَ فِيهَآ أَبَدًا ۖ قَدْ أَحْسَنَ ٱللَّهُ لَهُۥ رِزْقًا ﴿١١﴾ ٱللَّهُ ٱلَّذِى خَلَقَ
سَبْعَ سَمَٰوَٰتٍ وَمِنَ ٱلْأَرْضِ مِثْلَهُنَّ يَتَنَزَّلُ ٱلْأَمْرُ بَيْنَهُنَّ لِتَعْلَمُوٓا۟ أَنَّ
ٱللَّهَ عَلَىٰ كُلِّ شَىْءٍ قَدِيرٌ وَأَنَّ ٱللَّهَ قَدْ أَحَاطَ بِكُلِّ شَىْءٍ عِلْمًۢا ﴿١٢﴾

(7) வசதியுள்ளவர் அவரின் வசதியின் அளவுக்கு செலவு செய்யவும். (வசதியுள்ளவர்கள் பாலூட்டும் பெண்களுக்கு தமது வசதிக்கேற்ப கூலி வழங்குமாறு இதில் அல்லாஹ் ஏவுகின்றான்.) யாருக்கு வசதிகள் அளவிடப்பட்டு வழங்கப்பட்டிருக்கின்றதோ அவர்களுக்கு அல்லாஹ் வழங்கியதிலிருந்து செலவு செய்யவும். (வசதி குறைந்தவர்கள் தமது வசதிக்கேற்ப கூலி வழங்க வேண்டும்.) அல்லாஹ் எந்தவொரு மனிதனுக்கும் அவனுக்குக் கொடுத்ததைத் தவிர (வழங்கும் படி) கஷ்டப்படுத்தமாட்டான். (எனவே ஏழைகள் பணக்காரர்கள் போன்று வழங்க வேண்டியதில்லை.) அல்லாஹ் கஷ்டத்திற்குப் பின் இலேசை ஏற்படுத்துவான். (ஏழ்மைக்குப் பின் செல்வத்தை வழங்குவான்.)

(8) அதிகமான கிராமங்கள் (அவற்றில் வாழ்வோர்) அவற்றின் நாயனினதும் (அல்லாஹ்வினதும்), அவர்களின் தூதர்களுடையவும் கட்டளைகளுக்கு (மாறு செய்து) அநியாயம் செய்தார்கள். (அவர்கள் உலகில் செய்த செயல்களுக்காக) நாங்கள் அவர்களை விசாரணை செய்து, அவர்களை நாங்கள் கடுமையாகத் தண்டித்தோம். (இவ்வுலகில் பசி, பஞ்சம், கொலை, உருமாற்றல், பூமியினுள் உள்வாங்குதல் போன்ற தண்டனைகளைக் கொண்டு தண்டித்தோம். மறுமையிலும் மிகக் கடுமையான தண்டனையைக் கொண்டு தண்டிப்போம்.)

(9) அவர்கள் (அக்கிராம மக்கள்) தமது செயல்களின் தீய விளைவை அனுபவித்து விட்டார்கள். (அவர்களுடைய இறை நிராகரிப்பின் தண்டனைகளை அனுபவித்தார்கள்.) அவர்களின் முடிவு நஷ்டமாகவே அமைந்து விட்டது. (உலகிலும், மறுமையிலும் தண்டனையைப் பெற்று தமது செல்வங்கள், குடும்பங்களை இழந்தார்கள்.

(10) அல்லாஹ் அவர்களுக்கு (மறுமையில்) கடுமையான தண்டனையை (நரகை) தயார் செய்துள்ளான். ஈமான் கொண்டு (முஹம்மத் நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றியிருக்கும்) அறிவுடையோரே! நீங்கள் அல்லாஹ்வைப் பயந்து கொள்ளுங்கள். (நீங்கள் உங்களுடைய ஈமானில் உண்மையாளர்களாக இருந்து கொள்ளுங்கள். உங்களுக்கு முன் வாழ்ந்த சமூகங்கள் அநீதி இழைத்தது போன்று நீங்கள் அல்லாஹ்வுக்கு மாறு செய்து அநீதி இழைக்க வேண்டாம். அப்படிச் செய்வீர்களாயின் அவர்களைப் போன்று நீங்களும் தண்டிக்கப்படுவீர்கள்.) அல்லாஹ் உங்களுக்கு உபதேசத்தை இறக்கியுள்ளான். (அது அல்குர்ஆன் ஆகும்.)

(11) (அவ்வுபதேசத்தை எடுத்து வரும்) ஒரு தூதரை உங்களுக்கு அனுப்பி வைத்தான். அவர், ஈமான் கொண்டு நற்கிரிகைகள் புரிந்தவரை வழிகேடுகள் எனும் இருள்களிலிருந்து (நேர்வழி எனும்) பிரகாசத்தின் பால் வெளிப்படுத்தும் நோக்கில் (மார்க்க சட்ட திட்டங்களை) தெளிவு படுத்தும் அல்லாஹ்வின் வசனங்களை உங்களுக்கு ஓதிக் காண்பிப்பார்.

(12) அல்லாஹ், அவன் எத்தகையவனெனில் ஏழு வானங்களையும், அவற்றைப் போன்ற (ஏழு) பூமிகளையும் படைத்தான். (இவ்வசனத்தில் வானங்களைப் போன்று பூமிகளும் ஏழு இருக்கின்றன என அல்லாஹ் குறிப்பிட்டுள்ளான். இதனை பின்வரும் ஹதீஸும் உறுதிப் படுத்துகின்றது. “யாராவது பூமியில் ஒரு சாண் பிரமாணம் அநியாயம் செய்வாராயின் அல்லாஹ் ஏழு பூமிகளிலிருந்து அப்பிரமாணத்தை எடுத்து அவனுக்கு மாலை அணிவிப்பான். -புகாரி, முஸ்லிம்-). நிச்சயமாக அல்லாஹ் யாவற்றிற்கும் சக்தி உள்ளவன் என்பதையும் அவன் (தனது) அறிவால் (எல்லாவற்றையும்) சூழ்ந்து அறிந்து கொண்டான் என்பதையும் நீங்கள் அறிந்து கொள்ளுமுகமாக அவ்வானங்களுக்கு இடையில் நின்றும் (அல்லாஹ்வின்) தீர்மானங்கள் (மழை, இரவு, பகல், கோடை காலம், மாரி காலம் போன்றன) இறங்குகின்றன.

# அத்தஹ்ரீம்

ترتيبها ٦٦ سُورَةُ التَّحْرِيمِ آياتها ١٢

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

يَا أَيُّهَا النَّبِيُّ لِمَ تُحَرِّمُ مَا أَحَلَّ اللَّهُ لَكَ تَبْتَغِي مَرْضَاتَ أَزْوَاجِكَ وَاللَّهُ
غَفُورٌ رَحِيمٌ ﴿١﴾ قَدْ فَرَضَ اللَّهُ لَكُمْ تَحِلَّةَ أَيْمَانِكُمْ وَاللَّهُ مَوْلَاكُمْ
وَهُوَ الْعَلِيمُ الْحَكِيمُ ﴿٢﴾ وَإِذْ أَسَرَّ النَّبِيُّ إِلَىٰ بَعْضِ أَزْوَاجِهِ حَدِيثًا
فَلَمَّا نَبَّأَتْ بِهِ وَأَظْهَرَهُ اللَّهُ عَلَيْهِ عَرَّفَ بَعْضَهُ وَأَعْرَضَ عَنْ بَعْضٍ
فَلَمَّا نَبَّأَهَا بِهِ قَالَتْ مَنْ أَنْبَأَكَ هَٰذَا قَالَ نَبَّأَنِيَ الْعَلِيمُ الْخَبِيرُ
﴿٣﴾ إِنْ تَتُوبَا إِلَى اللَّهِ فَقَدْ صَغَتْ قُلُوبُكُمَا وَإِنْ تَظَاهَرَا عَلَيْهِ
فَإِنَّ اللَّهَ هُوَ مَوْلَاهُ وَجِبْرِيلُ وَصَالِحُ الْمُؤْمِنِينَ وَالْمَلَائِكَةُ
بَعْدَ ذَٰلِكَ ظَهِيرٌ ﴿٤﴾ عَسَىٰ رَبُّهُ إِنْ طَلَّقَكُنَّ أَنْ يُبْدِلَهُ أَزْوَاجًا
خَيْرًا مِنْكُنَّ مُسْلِمَاتٍ مُؤْمِنَاتٍ قَانِتَاتٍ تَائِبَاتٍ عَابِدَاتٍ سَائِحَاتٍ
ثَيِّبَاتٍ وَأَبْكَارًا ﴿٥﴾ يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا قُوا أَنْفُسَكُمْ وَأَهْلِيكُمْ
نَارًا وَقُودُهَا النَّاسُ وَالْحِجَارَةُ عَلَيْهَا مَلَائِكَةٌ غِلَاظٌ شِدَادٌ
لَا يَعْصُونَ اللَّهَ مَا أَمَرَهُمْ وَيَفْعَلُونَ مَا يُؤْمَرُونَ ﴿٦﴾ يَا أَيُّهَا
الَّذِينَ كَفَرُوا لَا تَعْتَذِرُوا الْيَوْمَ إِنَّمَا تُجْزَوْنَ مَا كُنْتُمْ تَعْمَلُونَ ﴿٧﴾

1 நபியே! நீர் ஏன் அல்லாஹ் உமக்கு ஹலாலாக்கியதை ஹராமாக்குகின்றீர்? (நபியவர்கள் ஸைனப் பின்த் ஜஹ்ஷ் என்ற தமது மனைவியிடத்தில் தேன் குடித்து வந்தார்கள். இதைச் சகிக்காத மற்ற இரு மனைவிகளான ஆயிஷா, ஹப்ஸா (ரழி) ஆகியோர் ஸைனப் (ரழி) அவர்களுக்கு விரோதமாக சூழ்ச்சி செய்ய முடிவு செய்தார்கள். நபியவர்கள் அவ்விருவரிடமும் வந்த பொழுது நாம் உம்மிடம் துர்வாடையை நுகர்கின்றோம் என்றனர். நபியவர்கள் இது தேனினால் எனக்கருதி நபியவர்கள் தன் மீது தேனை ஹராமாக்கிக் கொண்டார்கள். அச்சந்தர்ப்பத்தில் அல்லாஹ் இவ்வசனங்களை இறக்கி வைத்தான். நீங்கள் இவ்வாறு அல்லாஹ் ஹலாலாக்கியதை ஹராமாக்கி) உங்கள் மனைவியர்களின் பொருத்தத்தைத் தேடுகின்றீர்கள். அல்லாஹ் (இவ்வாறு நீங்கள் தவறுதலாக ஹராமக்கியதை) மன்னித்து அருள்புரியக் கூடியவன்.

2 உங்கள் சத்தியங்களை நீங்கள் விடுவிப்பதை அல்லாஹ் உங்களுக்குக் கட்டாயமாக்கி விட்டான். (உங்கள் எவருக்கும் அல்லாஹ் ஹலாலாக்கியதை ஹராமாக்க முடியாது. அவ்வாறு யாராவது செய்தால் அவர் ஒரு சத்தியம் பண்ணியவரைப் போன்றாவார். அவர் சத்தியத்தை முறித்தவருக்கு விதியாக்கப்பட்டிருக்கும் குற்றப் பரிகாரத்தைச் செய்து அதற்கு மாறு செய்து கொள்ள வேண்டும். அல்லாஹ் உங்கள் அதிகாரி. (உங்களுக்கு அவன் உதவி செய்பவன்.) மேலும் அவன் (உங்களுக்கு எதில் நன்மை உண்டு என்பதை) அறிந்தவன். இன்னும் தனது (செயல்களிலும் வார்த்தைகளிலும்) ஞானம் மிக்கவன்.

3 நபியவர்கள் தமது மனைவியர்களில் ஒருவருக்கு ஒரு செய்தியை இரகசியமாகச் சொன்ன நேரத்தை நினைவு கூர்ந்து பாருங்கள். (நபியவர்கள் தேன் குடிப்பதை ஹராமாக்கியிருக்கும் செய்தியை ஹப்ஸா (ரழி) அவர்களிடம் கூறிவிட்டு அதை யாரிடமும் கூற வேண்டாம் என்றார்கள். அவர்கள் அதை (ஆயிஷா (ரழி) அவர்களுக்கு) வெளிப்படுத்தி, அல்லாஹ் அவர்களுக்கு அதை அறிவித்துக் கொடுத்த பொழுது அவர்கள் (நபியவர்கள்) அதில் (அந்த இரகசியத்தில்) சிலதை சொல்லிக் காட்டினார்கள். இன்னும் சிலதை அறிவிக்காமல் புறக்கனித்து விட்டார்கள். அவர்கள் (நபியவர்கள்) அம்மனைவிக்கு அதை (அவர்கள் வெளிப்டுத்திய இரகசியத்தில் சிலதை) சொல்லிக் காட்டிய பொழுது அம்மனைவி அவர்களிடம் உங்களுக்கு யார் இதை அறிவித்துத் தந்தார் எனக் கேட்டார்கள்? (யாவற்றையும் ) அறிந்து உணர்ந்துள்ளவன் (அல்லாஹ்) எனக்கு அறியத் தந்தான் என அவர்கள் கூறினார்கள்.

4 (இதில் தொடர்புபட்ட ஆயிஷா, ஹப்ஸா (ரழி) ஆகிய இருவரையும் நோக்கி அல்லாஹ் கூறுகின்றான்: நீங்கள் இருவரும் அல்லாஹ்வின் பால் பாவ மன்னிப்புக் கோருவீர்களாயின் உங்கள் இருவரின் உள்ளங்களும் (நன்மையின் பக்கம்) சாய்ந்து விடும். (நபியவர்கள் மீது ரோசம் கொள்வதிலும் அவர்களுடைய இரகசியத்தை வெளியாக்குவதிலும்) அவர்களுக்கு விரோதமாக நீங்கள் இருவரும் ஒருவருக்கொருவர் ஒத்துழைத்துக் கொள்வீர்களாயின் நிச்சயமாக அல்லாஹ் அவர்களுக்கு உதவி செய்பவன். மேலும் ஜிப்ரீல் (அலை) அவர்களும் நல்லடியார்களாகிய முஃமின்களும் (உதவி செய்து பாதுகாப்பார்கள்.) அதற்குப் பின் (நல்லடியார்களின் உதவிக்குப் பின் அல்லாஹ்வும், ஜிப்ரீல் (அலை)(மும், வானவர்களும் உதவி செய்வார்கள்.)

5 (நபி (ஸல்)அவர்கள் தமது மனைவியர்களை விவாகரத்துச் செய்வாராயின் அல்லாஹ் அவருக்கு அவர்களை விட சிறந்த மனைவிமார்களை கொடுக்கச் சக்தியுள்ளவன் என்பதை அறிவித்துக் கூறுகின்றான்.) அவர் உங்களை விவாகரத்துச் செய்வாராயின் அவருடைய நாயன் உங்களை விடச் சிறந்தவர்களை (இஸ்லாத்தின் கடமைகளை ஏற்றும் ஈமானின் அம்சங்களில் உறுதியும் கொண்டுள்ள)

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ تُوبُوٓاْ إِلَى ٱللَّهِ تَوۡبَةٗ نَّصُوحًا عَسَىٰ رَبُّكُمۡ
أَن يُكَفِّرَ عَنكُمۡ سَيِّـَٔاتِكُمۡ وَيُدۡخِلَكُمۡ جَنَّٰتٖ تَجۡرِي
مِن تَحۡتِهَا ٱلۡأَنۡهَٰرُ يَوۡمَ لَا يُخۡزِي ٱللَّهُ ٱلنَّبِيَّ وَٱلَّذِينَ ءَامَنُواْ
مَعَهُۥۖ نُورُهُمۡ يَسۡعَىٰ بَيۡنَ أَيۡدِيهِمۡ وَبِأَيۡمَٰنِهِمۡ يَقُولُونَ رَبَّنَآ
أَتۡمِمۡ لَنَا نُورَنَا وَٱغۡفِرۡ لَنَآۖ إِنَّكَ عَلَىٰ كُلِّ شَيۡءٖ قَدِيرٞ ٨
يَٰٓأَيُّهَا ٱلنَّبِيُّ جَٰهِدِ ٱلۡكُفَّارَ وَٱلۡمُنَٰفِقِينَ وَٱغۡلُظۡ عَلَيۡهِمۡۚ
وَمَأۡوَىٰهُمۡ جَهَنَّمُۖ وَبِئۡسَ ٱلۡمَصِيرُ ٩ ضَرَبَ ٱللَّهُ مَثَلٗا
لِّلَّذِينَ كَفَرُواْ ٱمۡرَأَتَ نُوحٖ وَٱمۡرَأَتَ لُوطٖۖ كَانَتَا تَحۡتَ
عَبۡدَيۡنِ مِنۡ عِبَادِنَا صَٰلِحَيۡنِ فَخَانَتَاهُمَا فَلَمۡ يُغۡنِيَا عَنۡهُمَا
مِنَ ٱللَّهِ شَيۡـٔٗا وَقِيلَ ٱدۡخُلَا ٱلنَّارَ مَعَ ٱلدَّٰخِلِينَ ١٠
وَضَرَبَ ٱللَّهُ مَثَلٗا لِّلَّذِينَ ءَامَنُواْ ٱمۡرَأَتَ فِرۡعَوۡنَ إِذۡ
قَالَتۡ رَبِّ ٱبۡنِ لِي عِندَكَ بَيۡتٗا فِي ٱلۡجَنَّةِ وَنَجِّنِي مِن فِرۡعَوۡنَ
وَعَمَلِهِۦ وَنَجِّنِي مِنَ ٱلۡقَوۡمِ ٱلظَّٰلِمِينَ ١١ وَمَرۡيَمَ ٱبۡنَتَ
عِمۡرَٰنَ ٱلَّتِيٓ أَحۡصَنَتۡ فَرۡجَهَا فَنَفَخۡنَا فِيهِ مِن رُّوحِنَا
وَصَدَّقَتۡ بِكَلِمَٰتِ رَبِّهَا وَكُتُبِهِۦ وَكَانَتۡ مِنَ ٱلۡقَٰنِتِينَ ١٢

முஸ்லிம்களாகவும், மு.மின்களாகவும் மேலும் (அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும்) முழுமையாக கட்டுப்படக்கூடியவர்களாகவும் (பாவங்களை விட்டும்) பாவ மன்னிப்புக் கோரக் கூடியவர்களுமான, வணக்க வழிபாடுகளில் ஈடுபடக் கூடியவர்களுமான நோன்பு நோற்கக் கூடியவர்களுமான (ஏற்கனவே இன்னொரு கணவனுக்கு வாழ்க்கைப் பட்டதன் காரணமாக) கன்னித் தன்மையை இழந்த அல்லது கன்னித் தன்மை உள்ள பெண்களை அல்லாஹ் அவர்களுக்கு (மனைவிகளாக) மாற்றிக் கொடுக்கப் போதுமானவன்.

6 விசுவாசிகளே! (நான் உங்களுக்கு ஏவியவற்றை செய்வதன் மூலமும் விளக்கியவற்றைத் தவிர்த்துக் கொள்வதன் மூலமும்) நீங்கள் உங்களையும் (அவற்றை ஏவுவதன் மூலம்) உங்கள் குடும்பத்தார்களையும் நரகை விட்டும் பாதுகாத்துக் கொள்ளுங்கள். அதன் எரிபொருள் மனிதர்களும், கற்களுமாகும். (உலகின் நெருப்பு விரகுகளைக் கொண்டு எரிக்கப்படுவது போன்று நரக நெருப்பு மனிதர்களையும் கற்களையும் கொண்டே எரிக்கப்படும்.) அதில் கடுமையானவர்களும் பலம் வாய்ந்தவர்களுமான வானவர்கள் இருக்கின்றார்கள். (நரக வாசிகளுக்கு அவர்கள் இரக்கம் காட்டவே மாட்டார்கள்.) அல்லாஹ் அவர்களுக்கு ஏவியதற்கு (ஒரு போதும்) மாறு செய்யவே மாட்டார்கள். அவர்கள் (அல்லாஹ்வால்) அவர்களுக்கு ஏவப்படுபவற்றை அவர்கள் செய்து கொண்டிருப்பார்கள். (எனவே நரகவாசிகளை வேதனை செய்யும் விடயத்தில் பின்வாங்க மாட்டார்கள்.)

7 (இறை நிராகரிப்பாளர்களை நரகில் தள்ளப்படும் போது அவர்களைப் பார்த்துச் சொல்லப்படும்.) இறை நிராகரிப்பபாளர்களே! நீங்கள் (உலகில் செய்த வேலைகளுக்காக) இன்று மன்னிப்புக் கோர வேண்டாம். நீங்கள் செய்தவற்றிற்காகத் தான் உங்களுக்குக் கூலி வழங்கப்படுகின்றது.

8 விசுவாசிகளே! நீங்கள் தூய்மையான முறையில் (உண்மையாக) அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கோருங்கள். (உண்மையான தௌபா என்பது உள்ளத்தினால் பாவங்களுக்காகக் கவலைப்பட்டு அவற்றிலிருந்து விலகி, அவற்றை மீண்டும் செய்வதில்லை என்ற எண்ணத்துடன் செய்யப்படும் தௌபாவாகும்.) உங்கள் நாயன் உங்கள் பாவங்களை மன்னிக்கப் போதுமானவன். மேலும் அல்லாஹ் நபியவர்களுக்கும், அவர்களுடன் ஈமான் கொண்டிருக்கும் விசுவாசிகளுக்கும் இழிவு ஏற்படுத்தாத நாளில் உங்களை அவற்றிற்குக் கீழால் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும் சுவனங்களில் நுழைவிக்கவும் போதுமானவன். (அவர்கள் சுவனத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் போது) அவர்களின் ஒளிவு அவர்களுக்கு முன்னாலும், அவர்களுக்கு வலப்பக்கமாகவும் சென்று கொண்டிருக்கும். அவர்கள், “எங்கள் இறைவா எங்கள் ஒளிவை எங்களுக்குப் பூரணப்படுத்தி விடுவாயாக. எங்களை மன்னித்து விடுவாயாக. நிச்சயமாக நீ யாவற்றிற்கும் சக்தி பெற்றவன்.” எனக் கூறுவார்கள்.

9 நபியே! நீங்கள் (சண்டையின் மூலம்) இறை நிராகரிப்பாளர்களுடனும் (தண்டனைகளை வழங்குவதன் மூலம்) நயவஞ்சகர்களுடனும் புனிதப் போர்புரிவீராக. (இரு பிரிவினருடனும் நீர் கடும்போக்குடன் நடந்து கொள்வீராக.) அவர்கள் ஒதுங்கும் இடம் நரகமாகும். மீளும் இடங்களில் அது மிக மோசமானது.

10 அல்லாஹ் நிராகரிப்பாளர்களுக்கு நூஹ் (அலை) அவர்களின் மனைவியையும், லூத் (அலை) அவர்களின் மனைவியையும் உதாரணமாகக் குறிப்பிடுகின்றான். அவர்கள் இருவரும் எங்களுடைய நல்லடியார்களில் இருவருக்குக் கீழால் இருந்து அவர்கள் இருவருக்கும் சதிமோசம் செய்து விட்டார்கள். (நூஹ் (அலை) அவர்களின் மனைவி அவர்கள் பைத்தியக்காரர் என்று சொன்னதாகவும் லூத் (அலை) அவர்களின் மனைவி அவர்களின் விருந்தாளிகளை அவர்களின் கூட்டத்தினருக்குக் காட்டிக் கொடுத்ததாகவும்

கூறப்படுகின்றது. அந்நபிகள்) இருவரும் (தமது மனைவியர்) இருவரையும் அல்லாஹ்வின் (தண்டனைகளில்) எதை விட்டும் பாதுகாக்கவில்லை. (அவர்கள் இருவரும் அல்லாஹ்விடத்தில் கண்ணியமானவர்களாக இருந்த போதும் தம்மனைவியர்களை அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து பாதுகாக்க முடியாது.) மேலும் (நரகில்) நுழைபவர்களுடன் நீங்களும் நரகில் நுழைந்து விடுங்கள் என்று அவ்விருவரையும் பார்த்துக் கூறப்பட்டது.

11 விசுவாசிகளுக்கு பிர்அவ்னின் மனைவியை அல்லாஹ் உதாரணமாகக் குறிப்பிடுகின்றான். (அப்பெண்மணி மிகப் பெரிய நிராகரிப்பாளனின் கீழ் இருந்தும் அவனுடைய சக்தி, அடக்குமுறை என்பன அப்பெண்மணியின் ஈமானுக்கு எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை.) அப்பெண் "எனது இறைவா எனக்கு சுவர்க்கத்தில் உன்னிடத்தில் ஒரு வீட்டைக் கட்டுவாயாக. (சுவர்க்கத்தில் உனது நெருக்கத்தைப் பெற்றவர்களுக்குக் கட்டப்படும் இடத்தில் எனக்கும் ஒரு வீட்டைக் கட்டுவாயாக.) மேலும் பிர்அவ்னையும், அவனது (தீய) செயல்களையும் விட்டும் என்னைப் பாதுகாப்பாயாக. இன்னும் (கிப்திக் கோத்திரத்தைச் சேர்ந்த காபிர்களாகிய) அக்கிரமக்காரர்களை விட்டும் என்னைக் காப்பாற்றி விடுவாயாக." என்று சொன்ன நேரத்தை (நபியே) நீர் நினைவு கூறுவீராக.

12 மேலும் தனது அபத்தை (பாவங்களை விட்டும்) பாதுகாத்துக் கொண்ட இம்ரானின் மகள் மர்யமையும் (அல்லாஹ் மு.மின்களுக்கு உதாரணமாகக் குறிப்பிடுகின்றான். அல்லாஹ் உலகில் அவர்களுக்கு கண்ணியம், பாதுகாப்பு என்பவற்றையும் மறுமையில் கௌரவத்தையும் கொடுத்து உலகப் பெண்கள் அனைவரை விடவும் அவர்களை அல்லாஹ் தேர்ந்தெடுத்தான்.) நாங்கள் எங்களுடைய உயிரை அவர்களில் ஊதினோம். (ஜிப்ரீல் (அலை) அப்பெண்ணின் உடம்பில் ஊத அதன் மூலம் ஈஸா (அலை) அவர்களை கர்ப்பத்தில் சுமந்தார்கள்.) அவர்கள் தங்களின் நாயனின் வசனங்களையும் வேதங்களையும் உண்மைப்படுத்தினார்கள். (மார்க்க சட்ட திட்டங்களையும் வானவர் அல்லாஹ்விடமிருந்து அவர்களிடம் கொண்டு வந்த செய்திகள், குறிப்பாக ஈஸா (அலை) அவர்களைப் பற்றிச் சொன்ன செய்திகள், முன்னைய நபிமார்களின் வேதங்கள் என்பவற்றை நம்பினார்கள்.) அப்பெண்மணி (அல்லாஹ்வுக்கு) கட்டுப்பட்டு நடக்கும் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். (அவர்களுடைய குடும்பத்தினர்களும் அல்லாஹ்வின் நல்லடியார்களாவர்.)

ترتيبها ٦٧ — سُورَةُ المُلْك — آياتها ٣٠

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

تَبَٰرَكَ ٱلَّذِى بِيَدِهِ ٱلْمُلْكُ وَهُوَ عَلَىٰ كُلِّ شَىْءٍ قَدِيرٌ ﴿١﴾ ٱلَّذِى خَلَقَ
ٱلْمَوْتَ وَٱلْحَيَوٰةَ لِيَبْلُوَكُمْ أَيُّكُمْ أَحْسَنُ عَمَلًا ۚ وَهُوَ ٱلْعَزِيزُ ٱلْغَفُورُ ﴿٢﴾
ٱلَّذِى خَلَقَ سَبْعَ سَمَٰوَٰتٍ طِبَاقًا ۖ مَّا تَرَىٰ فِى خَلْقِ ٱلرَّحْمَٰنِ مِن
تَفَٰوُتٍ ۖ فَٱرْجِعِ ٱلْبَصَرَ هَلْ تَرَىٰ مِن فُطُورٍ ﴿٣﴾ ثُمَّ ٱرْجِعِ ٱلْبَصَرَ كَرَّتَيْنِ
يَنقَلِبْ إِلَيْكَ ٱلْبَصَرُ خَاسِئًا وَهُوَ حَسِيرٌ ﴿٤﴾ وَلَقَدْ زَيَّنَّا ٱلسَّمَآءَ
ٱلدُّنْيَا بِمَصَٰبِيحَ وَجَعَلْنَٰهَا رُجُومًا لِّلشَّيَٰطِينِ ۖ وَأَعْتَدْنَا لَهُمْ عَذَابَ
ٱلسَّعِيرِ ﴿٥﴾ وَلِلَّذِينَ كَفَرُوا۟ بِرَبِّهِمْ عَذَابُ جَهَنَّمَ ۖ وَبِئْسَ ٱلْمَصِيرُ
﴿٦﴾ إِذَآ أُلْقُوا۟ فِيهَا سَمِعُوا۟ لَهَا شَهِيقًا وَهِىَ تَفُورُ ﴿٧﴾ تَكَادُ تَمَيَّزُ
مِنَ ٱلْغَيْظِ ۖ كُلَّمَآ أُلْقِىَ فِيهَا فَوْجٌ سَأَلَهُمْ خَزَنَتُهَآ أَلَمْ يَأْتِكُمْ نَذِيرٌ ﴿٨﴾
قَالُوا۟ بَلَىٰ قَدْ جَآءَنَا نَذِيرٌ فَكَذَّبْنَا وَقُلْنَا مَا نَزَّلَ ٱللَّهُ مِن شَىْءٍ إِنْ أَنتُمْ
إِلَّا فِى ضَلَٰلٍ كَبِيرٍ ﴿٩﴾ وَقَالُوا۟ لَوْ كُنَّا نَسْمَعُ أَوْ نَعْقِلُ مَا كُنَّا فِىٓ أَصْحَٰبِ
ٱلسَّعِيرِ ﴿١٠﴾ فَٱعْتَرَفُوا۟ بِذَنۢبِهِمْ فَسُحْقًا لِّأَصْحَٰبِ ٱلسَّعِيرِ ﴿١١﴾
إِنَّ ٱلَّذِينَ يَخْشَوْنَ رَبَّهُم بِٱلْغَيْبِ لَهُم مَّغْفِرَةٌ وَأَجْرٌ كَبِيرٌ ﴿١٢﴾

## அல் முல்க்

1 எவன் கைவசம் (இவ்வுலகிலும், மறுமையிலும் வானங்கள், பூமி என்பவற்றின்) ஆட்சி இருக்கின்றதோ அவன் (அல்லாஹ்) உயர்ந்தவனாகிவிட்டான். அவன் எல்லாவற்றிற்கும் ஆற்றல் உடையவன்.

2 அவன் (எத்தகையவன் எனில் உங்களுக்கு மார்க்கத்தை வழங்கி, சட்டதிட்டங்களை ஏவி) உங்களில் நற்கிரிகைகள் செய்வதில் மிகச் சிறந்தவர் யார் என்பதைப் பரிசோதிக்குமுகமாக வாழ்வையும், மரணத்தையும் ஏற்படுத்தினான். (இவ்விரண்டையும் ஏற்படுத்தியதன் நோக்கம் கட்டுப்படுபவர்களையும், பாவிகளையும் வெளிப்படையாக அறிந்து கொள்வதற்காக வேண்டியாகும்.) அவன் மிகைக்கக் கூடியவனும் மிகுந்து மன்னிக்கக்கூடியவனுமாவான்.

3 அவன் தான் ஏழு வானங்களையும் அடுக்கடுக்காய் (ஒன்றின் மேல் ஒன்றாகப்) படைத்தான். அருளாளனாகிய (அல்லாஹ்வின்) படைப்பில் எந்தக் குறையையும் (கோணல்கள், ஒவ்வாமை, முரண்களைக்) கண்டு கொள்ளமாட்டீர்கள். (உங்கள்) பார்வையை வானத்தின் பக்கம் திருப்பி (அவை பிரமாண்டமானவையாகவும், விசாலமானவையாகவும் இருந்த போதிலும்) அவற்றில் ஏதும் ஓட்டைகளை நீங்கள்

காண்கிறீர்களா? எனப் பாருங்கள்.

4 பின்பும் நீங்கள் (ஒன்றுக்கு) இரண்டு விடுத்தங்கள் (உங்கள்) பார்வையைத் திருப்பிப் பாருங்கள். (பல விடுத்தங்களும் பாருங்கள். எந்தக் குறைகளையும் கண்டுபிடிக்க) இயலாததாகவும் இழிவடைந்ததாகவும் (உங்கள்) பார்வை உங்கள் பக்கம் திரும்பி வரும்.

5 நாங்கள் கீழ் வானத்தை விளக்குகளை (நட்சத்திரங்களைக்) கொண்டு அலங்கரித்திருக்கின்றோம். மேலும் அவற்றை (அந்நட்சத்திரங்களை) ஷைதான்களை (விரட்டுவதற்காக எறியப்படும்) எறிகற்களாகவும் ஆக்கியுள்ளோம். (இது நட்சத்திரங்களின் இன்னொரு பயனாகும். கதாதா (ரழி) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்: அல்லாஹ் நட்சத்திரங்களை மூன்று விடயங்களுக்காகப் படைத்துள்ளான். 1. வானத்தை அலங்கரிக்கும் விளக்குகளாகவும் 2. ஷைதான்களை விரட்டுவதற்குரிய எறிகற்களாகவும் 3.கடலிலும் தரையிலும் பாதைகளையும் திசைகளையும் கண்டு பிடித்துக் கொள்வதற்கான அடையாளங்களாகவும் படைத்துள்ளான்.) மேலும் அவர்களுக்கு (ஷைத்தான்களுக்கு அவர்களை) எரிக்கும் தண்டனையையும் நாம் ஏற்பாடு செய்துள்ளோம்.

6 அவர்களுடைய இறைவனை நிராகரித்தவர்களுக்கு நரக வேதனை இருக்கின்றது. அது மீளும் (போகும்) இடங்களில் மிக மோசமானது.

7 (நெருப்பில் விறகை வீசி எறியப்படுவது போன்று) அதில் அவர்களை எறியப்பட்டால் அது கொதித்துக் கொண்டிருக்கும் நிலையில் அதற்கு (கழுதை கத்த ஆரம்பிக்கும் நிலையில் உள்ள சப்தத்தைப் போன்ற) ஒரு சப்தத்தைக் கேட்பார்கள்.

8 (காபிர்களின் மீது கொண்டிருக்கும்) கடும் கோபத்தின் காரணமாக அது துண்டு துண்டாகிவிடுவதற்கு சமீபித்துவிடுகின்றது. அதில் ஒரு கூட்டத்தினர் எறியப்படும் போதெல்லாம் அதன் (அந்நரகத்தின்) பொறுப்புதாரர்(களான வானவர்)கள் கேட்பார்கள், "உங்களிடம் (இந்நரகத்தை) எச்சரிக்கை செய்பவர்கள் வரவில்லையா?"

9 அவர்கள் சொல்வார்கள், "ஆம் (அல்லாஹ்விடமிருந்து தூதர்களாக வரும்) எச்சரிக்கையாளர்கள் வந்தார்கள். (அவர்கள் எங்களுக்குப் பயமூட்டி இந்நரகை எச்சரிக்கை செய்தார்கள். இன்னும் இந்நாளைப் பற்றியும் அறிவித்தார்கள்.) நாங்கள் அவர்களைப் பொய்ப்பித்து (நீங்கள் அறிவிக்கும் மறைவான விடயங்கள், மறுமை பற்றிய செய்திகள் எதையும் உங்களுக்கு அல்லாஹ் வஹியாக அறிவிக்கவில்லை.) அல்லாஹ் உங்களுக்கு எதையும் இறக்கி வைக்கவில்லை. நீங்கள் பெரிய வழிகேட்டிலேயே இருக்கின்றீர்கள்." என (அத்தூதர்களைப் பார்த்துக்) கூறினோம்.

10 மேலும் அவர்கள் சொல்வார்கள்: (செவியேற்று நடக்கும் வகையில்) நாம் கேட்டிருந்தால் அல்லது (படிப்பினை பெற்று திருந்தும் முறையில்) நாம் விளங்கியிருந்தால் நாம் நரகவாதிகளில் நின்றுமாக ஆகியிருந்திருக்க மாட்டோம். (மாறாக நாம் ஈமான் கொண்டு இறைத் தூதர்களைப் பின்பற்றி சுவனம் சென்றிருப்போம்.)

11 (நரகத்துக்குத் தகுதியாவதற்குக் காரணமாக அமைந்த இறை நிராகரிப்பு, தூதர்களைப் பொய்ப்பித்தல் ஆகிய) அவர்களது பாவங்களை அவர்கள் ஒப்புக் கொள்வார்கள். நரகவாதிகளுக்கு (அல்லாஹ்வின் அருளை விட்டும்) தூரம் உண்டாகட்டும்.

12 நிச்சயமாக மறைவிலும் அவர்களுடைய இரட்சகனைப் பயப்படக்கூடியவர்களாகிறவர்கள் அவர்களுக்கு (இறைவனின்) மன்னிப்பும் பெரும் கூலியும் இருக்கின்றது.

13 நீங்கள் வார்த்தைகளை இரகசியமாகச் சொல்லுங்கள். அல்லது அவற்றை சப்தமிட்டுச் சொல்லுங்கள். (அவை அனைத்தையுமே அல்லாஹ் அறிவான். அவனுக்கு எந்த மறைவானதும் மறைய மாட்டாது.) நிச்சயமாக அவன் உள்ளங்களில் உள்ளவற்றையும், (மறைக்கப்பட்டவற்றையும்) அறிந்தவன்.

14 (தனது கையினால் மனிதர்களையும், படைப்பினங்களையும்) படைத்தவன் (இரகசியங்களையும், உள்ளங்களில் மறைக்கப்பட்டவற்றையும்) அறியமாட்டானா? அவன் (உள்ளங்களில் மறைந்திருக்கும்) நுணுக்கமான விடயங்களையும் அறியக் கூடியவன். (இரகசியமான விடயங்களையும்) அறியக் கூடியவன்.

15 அவன் தான் உங்களுக்கு பூமியை (அதில் நடந்து செல்லக் கூடிய விதத்திலும் வசிக்கக்கூடிய அமைப்பிலும்) மென்மையாக ஆக்கித் தந்தான். (உங்களுக்கு வசிக்கவோ, நடக்கவோ முடியாதளவு கடினமாதாக அதை ஆக்கவில்லை. எனவே பூமியின் பல பாகங்களுக்கும் நீங்கள் நடந்து சென்று (அவன் உங்களுக்கு படைத்து வைத்திருக்கும்) அவனது உணவுகளிலிருந்து நீங்கள் புசியுங்கள். (அல்லாஹ் தன் அடியார்களுக்கு பூமியின் வளங்களைப் பயன்படுத்திக் கொள்ளும் அமைப்பில் அதை மென்மையாக்கி அவர்களுக்கு அருள் புரிந்ததைக் குறிப்பிட்டுக் காட்டி விட்டு அவற்றைப் பயன்படுத்தவும் அவன் தூண்டுகின்றான்.) (மண்ணறையிலிருந்து நீங்கள் எழுப்பப்பட்டு) அவன் பக்கமே ஒன்று சேர்க்கப்படுவீர்கள்.

16 (உங்களுக்கு பூமியை மென்மையாக்கி அருள்புரிந்ததன் பின்) வானத்திற்கு மேல் இருப்பவன் (அல்லாஹ் காரூனுக்குச் செய்தது போன்று) உங்களை(யும்) பூமியினுள் உள்வாங்கி விடுவான் என்பதைப் பற்றி நீங்கள் அச்சமற்றிருக்கின்றீர்களா? அவ்வாறு அவன் செய்வான் எனில் (அமைதியாக இருந்த பூமி) உசும்பிக் கொண்டும் நடுங்கிக் கொண்டும் இருக்கும்.

17 (லூத் (அலை) அவர்களுடைய கூட்டத்தினருக்கும், யானைப் படையினருக்கும் அனுப்பியதைப்

وَأَسِرُّوا۟ قَوْلَكُمْ أَوِ ٱجْهَرُوا۟ بِهِۦٓ ۖ إِنَّهُۥ عَلِيمٌۢ بِذَاتِ ٱلصُّدُورِ ﴿١٣﴾ أَلَا
يَعْلَمُ مَنْ خَلَقَ وَهُوَ ٱللَّطِيفُ ٱلْخَبِيرُ ﴿١٤﴾ هُوَ ٱلَّذِى جَعَلَ لَكُمُ
ٱلْأَرْضَ ذَلُولًا فَٱمْشُوا۟ فِى مَنَاكِبِهَا وَكُلُوا۟ مِن رِّزْقِهِۦ ۖ وَإِلَيْهِ ٱلنُّشُورُ
﴿١٥﴾ ءَأَمِنتُم مَّن فِى ٱلسَّمَآءِ أَن يَخْسِفَ بِكُمُ ٱلْأَرْضَ فَإِذَا هِىَ
تَمُورُ ﴿١٦﴾ أَمْ أَمِنتُم مَّن فِى ٱلسَّمَآءِ أَن يُرْسِلَ عَلَيْكُمْ حَاصِبًا ۖ
فَسَتَعْلَمُونَ كَيْفَ نَذِيرِ ﴿١٧﴾ وَلَقَدْ كَذَّبَ ٱلَّذِينَ مِن قَبْلِهِمْ فَكَيْفَ
كَانَ نَكِيرِ ﴿١٨﴾ أَوَلَمْ يَرَوْا۟ إِلَى ٱلطَّيْرِ فَوْقَهُمْ صَٰٓفَّٰتٍ وَيَقْبِضْنَ ۚ مَا
يُمْسِكُهُنَّ إِلَّا ٱلرَّحْمَٰنُ ۚ إِنَّهُۥ بِكُلِّ شَىْءٍۭ بَصِيرٌ ﴿١٩﴾ أَمَّنْ هَٰذَا ٱلَّذِى
هُوَ جُندٌ لَّكُمْ يَنصُرُكُم مِّن دُونِ ٱلرَّحْمَٰنِ ۚ إِنِ ٱلْكَٰفِرُونَ إِلَّا فِى غُرُورٍ
﴿٢٠﴾ أَمَّنْ هَٰذَا ٱلَّذِى يَرْزُقُكُمْ إِنْ أَمْسَكَ رِزْقَهُۥ ۚ بَل لَّجُّوا۟ فِى عُتُوٍّ
وَنُفُورٍ ﴿٢١﴾ أَفَمَن يَمْشِى مُكِبًّا عَلَىٰ وَجْهِهِۦٓ أَهْدَىٰٓ أَمَّن يَمْشِى سَوِيًّا
عَلَىٰ صِرَٰطٍ مُّسْتَقِيمٍ ﴿٢٢﴾ قُلْ هُوَ ٱلَّذِىٓ أَنشَأَكُمْ وَجَعَلَ لَكُمُ ٱلسَّمْعَ
وَٱلْأَبْصَٰرَ وَٱلْأَفْـِٔدَةَ ۖ قَلِيلًا مَّا تَشْكُرُونَ ﴿٢٣﴾ قُلْ هُوَ ٱلَّذِى ذَرَأَكُمْ
فِى ٱلْأَرْضِ وَإِلَيْهِ تُحْشَرُونَ ﴿٢٤﴾ وَيَقُولُونَ مَتَىٰ هَٰذَا ٱلْوَعْدُ إِن كُنتُمْ
صَٰدِقِينَ ﴿٢٥﴾ قُلْ إِنَّمَا ٱلْعِلْمُ عِندَ ٱللَّهِ وَإِنَّمَآ أَنَا۠ نَذِيرٌ مُّبِينٌ ﴿٢٦﴾

போன்று) வானத்திற்கு மேலால் இருப்பவன் (அல்லாஹ்) உங்களுக்குக் கல் மழையை அனுப்புவான் என்பதைப் பற்றி நீங்கள் பயமற்றிருக்கின்றீர்களா? (நீங்கள் இத்தண்டனைகளைக் கண்ணால் காண்பீர்களாயின் எனது எச்சரிக்கை எவ்வாறானது என்பதை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். (அந்நேரத்தில் நீங்கள் அறிவது உங்களுக்குப் பயனளிக்காது.)

18 அவர்களுக்கு முன்னால் இருந்தவர்கள் (முன்னைய நபிமார்களின் கூட்டத்தினர்கள் இவர்களைப் போன்றே) எமது வசனங்களைப் பொய்யாக்கினர். (அவர்களுக்குத் தண்டனை வழங்கி) நான் எச்சரிக்கை விடுத்தது எவ்வாறு இருந்தது?

19 அவர்களுக்கு மேலால் (வானில் தமது இறக்கைகளை) விரித்த நிலையிலும் இன்னும் (அவற்றைச் சேர்த்து) மடித்துக் கொண்டும் (பறக்கும்) பறவைகளை அவர்கள் காணவில்லையா? (அவை தமது இறக்கைகளை விரித்த நிலையிலும், மடித்து உடம்புடன் சேர்த்துக் கொள்ளும் நிலையிலும் (அந்தரத்தில்) அவற்றை அருள் மிகுந்தவனே (அல்லாஹ்வே) தடுத்துக் கொண்டிருக்கின்றான். (அவை தமது இறக்கைகளைப் பயன்படுத்தி மேலெழவும், முன்செல்லவும் முடியுமான அமைப்பில் அவற்றின் இறக்கைகளை அமைத்துள்ள அல்லாஹ்வின் படைப்பு அற்புதமானது.) நிச்சயமாக அவன் யாவற்றையும் பார்த்துக் கொண்டிருப்பவன். (அவனுக்கு எதுவும் மறையாது.)

20 எங்கிலும் ரஹ்மானாகிய (அல்லாஹ்) அன்றி உங்களுக்கு உதவி செய்யும் படையினர் யார் இருக்கின்றார்கள்? (அல்லாஹ் அன்றி அவனின் தண்டனையை விட்டும் பாதுகாப்பவர்கள் யாருமில்லை. அல்லாஹ் தனது அருளாலும் உதவியாலும் உங்களுக்கு உதவி செய்யவில்லையாயின் யார் தான் உங்களுக்கு உதவி செய்வார்கள்?) நிராகரிப்பாளர்கள் (பெரும்)ஏமாற்றத்தில் இருந்து கொண்டிருக்கின்றார்கள். (ஷைத்தான் அவர்களை ஏமாற்றிக் கொண்டிருக்கின்றான்.)

21 அல்லது அவன் தனது ரிஸ்கை (உணவு, மழை போன்ற அருள்களை) தடுத்து நிறுத்திக் கொண்டால் உங்களுக்கு ரிஸ்கை (உணவு, மழை போன்றவற்றை) வழங்குபவர்கள் யார் இருக்கின்றார்கள்? எங்கிலும் அவர்கள் (உண்மையை ஏற்காமல் பெருமை அடிப்பதிலும் (அதை விட்டும் தூரமாவதிலும் மூழ்கிக் கொண்டிருக்கின்றார்கள்.)

22 தன் முகத்தின் மீது குப்புற விழுந்த நிலையில் நடக்கின்றவன் நேர்வழி பெற்றவனா? (அவன் இறை நிராகரிப்பாளன். உலகில் பாவங்களில் முகம் குப்புற வீழ்ந்து இருப்பவனை நாளை மறுமையில் முகம் குப்புற வீழ்ந்த நிலையிலேயே அல்லாஹ் எழுப்புவான்.) அல்லது நேரான வழியில் நிமிர்ந்து நடக்கின்றானே அவன் நேர்வழி பெற்றவனா? (இவன் மு.மினாவான். அல்லாஹ் காட்டிய வழியில் செல்கின்றான். மறுமையிலும் நிமிர்ந்தவனாக எழுப்பப்பட்டு நேரான பாதையில் சென்று சுவனம் புகுவான்.)

23 (நபியே) நீர் கூறுவீராக. அவன் தான் உங்களை (ஆரம்பமாக) உருவாக்கி உங்களுக்கு செவிப்புலனையும் பார்வையையும் ஏற்படுத்தித் தந்தான். நீங்கள் (இந்த அருள்களுக்கு) மிகக் குறைவாகவே நன்றி செலுத்துகின்றீர்கள்.

24 (நபியே) நீர் கூறுவீராக. அவன் தான் பூமியில் உங்களைப் படைத்தான். (நாளை மறுமையில்) அவனளவிலே நீங்கள் (எழுப்பப்பட்டு ஒன்று சேர்க்கப்படுவீர்கள்.)

25 நீங்கள் உண்மையாளர்களாக இருப்பின் இந்த வாக்களிக்கப்பட்ட விடயம் (மறுமை)எப்போது நிகழும் என்று (சொல்லுங்கள் என உங்களைப் பார்த்துக்) கேட்கிறார்கள்.

26 (நபியே) நீர் கூறுவீராக. (அதைப் பற்றிய அறிவு) அல்லாஹ்விடம் மாத்திரமே உண்டு. (அவன் அன்றி வேறு யாரும் அதை அறிய மாட்டார்கள். நான் (உங்களுக்கு நிராகரிப்பையும் மறுமையையும்) எச்சரிக்கை செய்பவன் மாத்திரமே.

27 அதை (அவர்களுக்குரிய தண்டனையை) சமீபித்ததாக அவர்கள் கண்டுகொள்ளும் போது நிராகரித்தோருடைய முகங்கள் (கறு நிறமாகி கவலை படர்ந்து) கெட்டு விடும்.

فَلَمَّا رَأَوْهُ زُلْفَةً سِيٓـَٔتْ وُجُوهُ الَّذِينَ كَفَرُوا وَقِيلَ هَٰذَا الَّذِي
كُنتُم بِهِ تَدَّعُونَ ﴿٢٧﴾ قُلْ أَرَءَيْتُمْ إِنْ أَهْلَكَنِيَ اللَّهُ وَمَن مَّعِيَ
أَوْ رَحِمَنَا فَمَن يُجِيرُ الْكَٰفِرِينَ مِنْ عَذَابٍ أَلِيمٍ ﴿٢٨﴾ قُلْ هُوَ
الرَّحْمَٰنُ ءَامَنَّا بِهِ وَعَلَيْهِ تَوَكَّلْنَا فَسَتَعْلَمُونَ مَنْ هُوَ فِي ضَلَٰلٍ مُّبِينٍ
﴿٢٩﴾ قُلْ أَرَءَيْتُمْ إِنْ أَصْبَحَ مَاؤُكُمْ غَوْرًا فَمَن يَأْتِيكُم بِمَاءٍ مَّعِينٍ ﴿٣٠﴾

ترتيبها ٦٨ — سُورَةُ الْقَلَمِ — آياتها ٥٢

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

نٓ وَالْقَلَمِ وَمَا يَسْطُرُونَ ﴿١﴾ مَا أَنتَ بِنِعْمَةِ رَبِّكَ بِمَجْنُونٍ ﴿٢﴾
وَإِنَّ لَكَ لَأَجْرًا غَيْرَ مَمْنُونٍ ﴿٣﴾ وَإِنَّكَ لَعَلَىٰ خُلُقٍ عَظِيمٍ ﴿٤﴾
فَسَتُبْصِرُ وَيُبْصِرُونَ ﴿٥﴾ بِأَييِّكُمُ الْمَفْتُونُ ﴿٦﴾ إِنَّ رَبَّكَ هُوَ
أَعْلَمُ بِمَن ضَلَّ عَن سَبِيلِهِ وَهُوَ أَعْلَمُ بِالْمُهْتَدِينَ ﴿٧﴾ فَلَا تُطِعِ
الْمُكَذِّبِينَ ﴿٨﴾ وَدُّوا لَوْ تُدْهِنُ فَيُدْهِنُونَ ﴿٩﴾ وَلَا تُطِعْ كُلَّ
حَلَّافٍ مَّهِينٍ ﴿١٠﴾ هَمَّازٍ مَّشَّاءٍ بِنَمِيمٍ ﴿١١﴾ مَّنَّاعٍ لِّلْخَيْرِ مُعْتَدٍ
أَثِيمٍ ﴿١٢﴾ عُتُلٍّ بَعْدَ ذَٰلِكَ زَنِيمٍ ﴿١٣﴾ أَن كَانَ ذَا مَالٍ وَبَنِينَ
﴿١٤﴾ إِذَا تُتْلَىٰ عَلَيْهِ ءَايَٰتُنَا قَالَ أَسَٰطِيرُ الْأَوَّلِينَ ﴿١٥﴾

(அப்பொழுது அவர்களைப் பார்த்துச்) சொல்லப்படும், "இது தான் (நீங்கள் எப்போது வரும் எனக் கேட்டு அவசரப்படுத்தித்) தேடிக் கொண்டிருந்ததாகும்."

28 (நபியே) நீர் கூறுவீராக. (நீங்கள் ஆசை வைப்பது போன்று மரணத்தின் மூலமோ அல்லது கொலை செய்யப்படுவது மூலமோ) என்னையும் என்னுடனிருப்பவர்களையும் அழித்தாலுமோ, அல்லது (நீண்ட ஆயுளைக் கொடுத்து) எங்களுக்கு அருள் புரிந்தாலுமோ நோவினையுள்ள தண்டனையை விட்டும் காபிர்களை யார் பாதுகாப்பார்கள்? என அறிவியுங்கள். (அவர்களைப் பாதுகாக்க யாருமில்லை.)

29 (நபியே) நீர் கூறுவீராக. அவன் (அப்படிக் காப்பாற்றுபவன்) அருளாளன் (அல்லாஹ்) தான். நாங்கள் அவனை விசுவாசிக்கின்றோம். (எங்களின் எல்லா விடயங்களிலும் அவன் மீது நாங்கள் பொறுப்புச் சாட்டியுள்ளோம். தெளிவான வழிகேட்டில் யார் இருக்கின்றார் என்பதை நீங்கள் அறிந்து கொள்வீர்கள்.

30 (நபியே) நீர் கூறுவீராக. (கிணறுகள், ஆறுகள், ஊற்றுக் கண்கள் மூலமாக உங்களுக்கு அருளாகத் தந்த) உங்களுடைய நீர் (அறவே இல்லாது போகும் வகையில்) வற்றிவிடுமானால் அதிகம் கொட்டிடும் தண்ணீரை உங்களுக்கு யார் கொண்டு வருவார்கள்? (அல்லாஹ் அன்றி வேறு யாரும் கொண்டு வரமுடியாது.)

## அல்-கலம்

1 நூன், எழுது கோளின் மீதும் (அதன் மூலம்) அவர்கள் எழுதுபவற்றின் மீதும் சத்தியமாக. (அல்லாஹ் அறிவுகள் மீதும், அவற்றை தெளிவு படுத்தவும், எழுதவும் பயன்படுத்தப்படும் பேனைகள் மீதும் சத்தியம் செய்துள்ளான்.)

2 நீங்கள் (நபித்துவம், தலைமைத்துவம் போன்ற) உங்களுடைய நாயனின் அருள்களின் காரணமாக நீங்கள் பைத்தியம் பிடித்தவர் அல்லர்.

3 (நுபுவ்வத்துடைய பொறுப்புக்களை நீங்கள் சுமந்து பல வகையான இன்னல்களுக்கு முகம் கொடுத்ததன் காரணமாக) உங்களுக்கு இடை நிறுத்தப்படாத கூலி இருக்கின்றது.

4 நிச்சயமாக நீங்கள் மகத்தான குணங்கள் மீது இருக்கின்றீர்கள். (அல்குர்ஆனில் அல்லாஹ் உங்களுக்கு என்ன குணங்களை ஏவியிருக்கின்றானோ அத்தகைய குணங்களில் நீங்கள் இருக்கின்றீர்கள். ஆயிஷா (ரழி) அவர்களிடத்தில் நபியவர்களின் குணங்களைப் பற்றிக் கேட்டபோது, அவர்களின் குணம் குர்ஆனாக இருந்தது எனப் பதிலளித்தார்கள்.

5 (உண்மை வெளியாகி, திரைகள் நீங்கும் சந்தர்ப்பத்தில்) நீங்களும் அறிவீர்கள். அவர்களும் (காபிர்களும்)அறிவார்கள்.

6 உங்களில் யார் (பைத்தியத்தின் மூலம்) சோதனைகளுக்கு ஆளாக்கப்பட்டுள்ளீர்கள் என்பதை (அறிவார்கள். அது மறுமையிலாகும்.) இது முஹம்மத் (ஸல்) அவர்கள் வழி தவறியவராகவும் பைத்தியத்தைக் கொண்டு சோதிக்கப்பட்டும் இருந்தார் என்று சொன்னவர்களுக்கு மறுப்பாகும்.)

7 நிச்சயமாக உங்கள் இரட்சகன் அவனுடைய பாதையை விட்டும் வழி தவறியவர்களை மிக அறிந்தவன். (உண்மையில் வழி கேட்டில் இருப்பவர் யார்? நீங்களா அல்லது உங்களைக் குற்றம் சாட்டும் அவர்களா? என்பதை அவன் மிக அறிந்தவன்.) அவன் நிரந்தரப் பாக்கியத்தின் பால் கொண்டு சேர்க்கும்) நேர்வழி பெற்றவர்களையும் மிக அறிந்தவன்.

8 எனவே பொய்யாக்குபவர்களுக்கு நீங்கள் கீழ்ப்படிய வேண்டாம்.

9 நீங்கள் (அவர்களுடன்) நெகிழ்வுடன் நடப்பதை விரும்புகின்றார்கள். அப்படியாயின் அவர்களும் உங்களுடன் நெகிழ்வுடன் நடப்பார்கள். (நீங்கள் அவர்களுடன் மென்மையாகவும், விட்டுக் கொடுப்புடனும் நடப்பதை அவர்கள் விரும்புகின்றார்கள். அப்படி நீங்கள் நடந்தால் அவர்களும் விட்டுக் கொடுப்பார்கள்.)

10 நீங்கள், அதிகம் சத்தியம் செய்யும் இழிவானவன் எவனுக்கும் கீழ்ப்படிய வேண்டாம்.

11 (அவன் மனிதர்களுடைய) குறைகளை அதிகம் பேசித் திரிபவன். (மேலும்

سَنَسِمُهُۥ عَلَى ٱلْخُرْطُومِ ﴿١٦﴾ إِنَّا بَلَوْنَٰهُمْ كَمَا بَلَوْنَآ أَصْحَٰبَ ٱلْجَنَّةِ إِذْ أَقْسَمُوا۟
لَيَصْرِمُنَّهَا مُصْبِحِينَ ﴿١٧﴾ وَلَا يَسْتَثْنُونَ ﴿١٨﴾ فَطَافَ عَلَيْهَا طَآئِفٌ مِّن رَّبِّكَ
وَهُمْ نَآئِمُونَ ﴿١٩﴾ فَأَصْبَحَتْ كَٱلصَّرِيمِ ﴿٢٠﴾ فَتَنَادَوْا۟ مُصْبِحِينَ ﴿٢١﴾ أَنِ
ٱغْدُوا۟ عَلَىٰ حَرْثِكُمْ إِن كُنتُمْ صَٰرِمِينَ ﴿٢٢﴾ فَٱنطَلَقُوا۟ وَهُمْ يَتَخَٰفَتُونَ ﴿٢٣﴾
أَن لَّا يَدْخُلَنَّهَا ٱلْيَوْمَ عَلَيْكُم مِّسْكِينٌ ﴿٢٤﴾ وَغَدَوْا۟ عَلَىٰ حَرْدٍ قَٰدِرِينَ ﴿٢٥﴾ فَلَمَّا
رَأَوْهَا قَالُوٓا۟ إِنَّا لَضَآلُّونَ ﴿٢٦﴾ بَلْ نَحْنُ مَحْرُومُونَ ﴿٢٧﴾ قَالَ أَوْسَطُهُمْ أَلَمْ أَقُل
لَّكُمْ لَوْلَا تُسَبِّحُونَ ﴿٢٨﴾ قَالُوا۟ سُبْحَٰنَ رَبِّنَآ إِنَّا كُنَّا ظَٰلِمِينَ ﴿٢٩﴾ فَأَقْبَلَ
بَعْضُهُمْ عَلَىٰ بَعْضٍ يَتَلَٰوَمُونَ ﴿٣٠﴾ قَالُوا۟ يَٰوَيْلَنَآ إِنَّا كُنَّا طَٰغِينَ ﴿٣١﴾ عَسَىٰ
رَبُّنَآ أَن يُبْدِلَنَا خَيْرًا مِّنْهَآ إِنَّآ إِلَىٰ رَبِّنَا رَٰغِبُونَ ﴿٣٢﴾ كَذَٰلِكَ ٱلْعَذَابُ وَلَعَذَابُ
ٱلْءَاخِرَةِ أَكْبَرُ لَوْ كَانُوا۟ يَعْلَمُونَ ﴿٣٣﴾ إِنَّ لِلْمُتَّقِينَ عِندَ رَبِّهِمْ جَنَّٰتِ ٱلنَّعِيمِ
﴿٣٤﴾ أَفَنَجْعَلُ ٱلْمُسْلِمِينَ كَٱلْمُجْرِمِينَ ﴿٣٥﴾ مَا لَكُمْ كَيْفَ تَحْكُمُونَ ﴿٣٦﴾ أَمْ
لَكُمْ كِتَٰبٌ فِيهِ تَدْرُسُونَ ﴿٣٧﴾ إِنَّ لَكُمْ فِيهِ لَمَا تَخَيَّرُونَ ﴿٣٨﴾ أَمْ لَكُمْ أَيْمَٰنٌ
عَلَيْنَا بَٰلِغَةٌ إِلَىٰ يَوْمِ ٱلْقِيَٰمَةِ إِنَّ لَكُمْ لَمَا تَحْكُمُونَ ﴿٣٩﴾ سَلْهُمْ أَيُّهُم
بِذَٰلِكَ زَعِيمٌ ﴿٤٠﴾ أَمْ لَهُمْ شُرَكَآءُ فَلْيَأْتُوا۟ بِشُرَكَآئِهِمْ إِن كَانُوا۟ صَٰدِقِينَ ﴿٤١﴾
يَوْمَ يُكْشَفُ عَن سَاقٍ وَيُدْعَوْنَ إِلَى ٱلسُّجُودِ فَلَا يَسْتَطِيعُونَ ﴿٤٢﴾

மனிதர்களுக்கிடையில் குழப்பத்தை ஏற்படுத்தும் நோக்கில்) கோள்களை எடுத்துச் செல்பவன். (‘ஹம்மாஸ்’ எனப்படுபவன் மக்கள் முன்னிலையில் அவர்களின் குறைகளைப் பேசித்திரிபவன். ‘லம்மாஸ்’ எனப்படுபவன் மக்கள் இல்லாத சந்தர்ப்பத்தில் அவர்களின் குறைகளைப் பேசித்திரிபவன்.)

12 (அவன்) நல்ல விடயங்களை அதிகம் தடுப்பவன், வரம்பு மீறுபவன், பாவி.

13 முரட்டுச் சுபாவமுடையவன். இவற்றிற்குப் பின் (தாய், தந்தை அறியப்படாமல்) முறை தவறிப் பிறந்தவன்.

14 அவன் செல்வமும், ஆண் மக்களும் உடையவன் என்பதற்காக (நீங்கள் அவனுக்குக் கீழ்ப் படிந்து விடவேண்டாம்.

15 அவனுக்கு எங்கள் வசனங்களை ஓதிக் காண்பிக்கப்பட்டால் இது முன்னோர்களுடைய ஏடுகள் எனக் கூறிவிடுவான்.

16 நாம் (மறுமையில்) அவனது மூக்கின் மீது அடையாளமிடுவோம். (அவன் நரகம் புக முன்னே அவனது முகத்தை நெருப்பால் கறுப்பாக்கப்படும்.)

17 நிச்சயமாக நாம் (யமனின் ஸன்ஆவிற்குச் சமீபத்திலிருந்த) தோட்டமுடையவர்களைச் சோதித்தது போன்று அவர்களை (மக்கா காபிர்களை நபியவர்களின் பிரார்த்தனைகளின் மூலம் பசியைக் கொண்டும் பஞ்சத்தைக் கொண்டும் சோதித்தோம். (அத்தோட்டம் ஸன்ஆவிற்குச் சற்றுத் தொலைவில் அல்லாஹ்வின் நல்லடியார்களில் ஒருவருக்கு உரிமையாக இருந்தது. அதிலிருந்து அல்லாஹ்வின் கடமைகளை அவர் நிறை வேற்றிக் கொண்டிருந்தார். அவர் மரணித்து அத்தோட்டம் அவர் பிள்ளைகளுக்கு உரிமையானபோது அவர்கள் அதன் கடமைகளைக் கொடுக்க மறுத்துவிட்டனர்.) நாளைக் காலையில் அவற்றின் (பழங்களை) அவர்கள் வெட்டிவிடுவதாக சத்தியம் செய்த நேரத்தில் (அல்லாஹ் அவர்களைச் சோதித்தான்.)

18 (அவ்வாறு சத்தியம் செய்யும் போது) அல்லாஹ் நாடினால் (இன்ஷா அல்லாஹ்) என்று சொல்லவில்லை.

19 (அன்றைய இரவு) அவர்கள் தூங்கிக் கொண்டிருந்த போது அல்லாஹ்விடமிருந்து வந்த சுற்றி (அழிக்கும்) நெருப்பு அத்தோட்டத்தைச் சுற்றி (அழித்துவிட்டது.)

20 எனவே அது (பழங்கள்) வெட்டப்பட்டதைப் போன்று மாறிவிட்டது. (அங்கு எந்தவொரு பழமும் எஞ்சியருக்கவில்லை.)

21 அவர்கள் காலையானதும் ஒருவரையொருவர் அழைத்துச் (சொன்னார்கள்)

22 நீங்கள் (வெட்டி) அறுவடைசெய்வதாயிருந்தால் (ஏழைகள் யாரும் வருவதற்கு முன்) காலையிலேயே உங்கள் பயிர் நிலங்களுக்குச் சென்று விடுங்கள்.

23 அவர்கள் (பிறர் கேட்காமல்) இரகசியமாகப் பேசியவர்களாகச் சென்றார்கள்.

24 இன்று இத்தோட்டத்திற்கு ஏழைகள் யாரும் வந்து விடக்கூடாது. (என இரகசியமாகப் பேசிக் கொண்டு சென்றார்கள்.

25 அவர்கள் தனியாக, சக்தியுடன் பலம் வாய்ந்தவர்களாக (அவர்களின் தோட்டத்திற்கு) காலையிலேயே சென்றார்கள்.

26 அவர்கள் அதை (வித்தியாசமாகக்) கண்ட பொழுது நாங்கள் பாதை தவறிவிட்டோம் என்றார்கள். (அவர்கள் நன்கு அதை உற்று நோக்கி அது அவர்களுடைய தோட்டம் தான் என அறிந்த பொழுது அவர்கள் சொன்னார்கள்.)

27 இல்லை, நாங்கள் பாக்கியம் அற்றவர்களாகிவிட்டோம். (நாம் ஏழைகளுக்கு வழங்காமல் இருக்க முடிவு செய்ததனால் அல்லாஹ் இப்பழங்களை அழித்து எங்களைப் பாக்கியம் அற்றவர்களாக ஆக்கிவிட்டான்.

28 அவர்களில் நேர்மையானவரும், சிறந்தவருமானவர் சொன்னார்: “நீங்கள் ஏழைகளுக்கு இதிலிருந்து வழங்காமல் தடுப்பது அநியாயம் என்று நான் சொல்லவில்லையா? நீங்கள் அல்லாஹ்வைத் துதி செய்யமாட்டீர்களா?”

29 அவர்கள் கூறினார்கள், “நாங்கள் எங்கள் நாயனைத் துதிக்கின்றோம். நாங்கள்

(ஏழைகளின் உரிமைகளைத் தடுத்ததன் மூலம்) அநியாயம் செய்து கொண்டோம்.
30 அவர்கள் சிலர் சிலரை குறை சொல்ல முற்பட்டார்கள்.
31 அவர்கள் கூறினார்கள்: எங்களுக்கு ஏற்பட்ட கேடே! நாங்கள் வரம்புமீறி (அநியாயம் செய்து கொண்டோம்.)
32 எங்கள் இரட்சகன் எங்களுக்கு அதை விடச் சிறந்ததைப் பகரமாக தரப் போதுமானவன். நிச்சயமாக நாங்கள் (நலவுகளையும், மன்னிப்பையும்) எங்கள் நாயனிடமே எதிர்பார்க்கின்றோம்.)
33 தண்டனை அவ்வாறு தான். (தோட்டத்துடையவர்களை நாம் தண்டித்தது போன்று இவ்வுலகில் இறை நிராகரிப்பாளர்களைத் தண்டிப்போம்.) அவர்கள் அறிவார்களாயின் மறுமையின் தண்டனை மிகப் பெரியது. (எனினும் அவர்கள் அறியமாட்டார்கள்.)
34 (அல்லாஹ்வைப்) பயந்தவர்களுக்கு அவர்களுடைய இரட்சகனிடத்தில் சுவனத்தின் தோப்புக்கள் இருக்கின்றன.
35 நாங்கள் முஸ்லிம்களை காபிர்கள் போன்று ஆக்கிவிடுவோமா? (இறை நிராகிப்பாளர்களின் தலைவர்கள் சொன்னார்கள், "மறுமை ஒன்று இருக்குமானால் உலகில் எங்களுக்கும், முஸ்லிம்களுக்குமிடையில் உலக பாக்கியங்களில் வித்தியாசம் இல்லாதது போன்று மறுமையிலும் வித்தியாசம் இருக்கமாட்டாது." அவர்கள் இருவரும் சமனாக மாட்டார்கள். கட்டுப்பட்டவர்களுக்கும், மறுத்தவர்களுக்கும் இடையில் சமப்படுத்துவது நேர்மையாகமாட்டாது.)
36 உங்களுக்கு என்ன நிகழ்ந்திருக்கின்றது? (இவ்வாறு கோணலாக) எவ்வாறு தீர்ப்பளிப்பீர்கள்?
37 அல்லது நீங்கள் அதில் படிக்கும் வேதம் ஒன்று உங்களுக்கு இருக்கின்றதா? (அப்படியிருந்தால் அதில் விசுவாசம் கொண்டவரும், மறுத்தவரும் சமன் என்று சொல்லப்பட்டுள்ளதா?)
38 அதில் (அவ்வேதத்தில்) மறுமையில் உங்களுக்கு நீங்கள் விரும்புபவை எல்லாம் இருக்கின்றன எனச் சொல்லப்பட்டுள்ளதா?
39 அவர்கள் தீர்ப்புச் செய்வது தான் அவர்களுக்கு மறுமையில் உண்டு என எங்களுடன் செய்து கொண்ட, மறுமை வரை (மாற்றப்படாத) உடன்படிக்கைகள் அவர்களிடம் இருக்கின்றதா? (சுவர்க்கம் புகுவார்கள் என்றும் இறுதி நாள் வரை அது மாற்றப்படமாட்டாது என்றும் அல்லாஹ்விடமிருந்து உறுதிகளைப் பெற்றுள்ளார்களா?
40 (அவ்வாறு அவர்கள் பெற்றிருப்பின்) அதற்கு அவர்களில் யார் பொறுப்பாளர்? (என நபியே) நீர் அவர்களிடம் கேட்பீராக.
41 அல்லது (அல்லாஹ்வுடன்) அவர்களுக்கு இணையாளர்கள் இருக்கின்றார்களா? (மறுமையில் முஸ்லிம்களுக்குக் கிடைப்பதை அவர்களுக்கும் பெற்றுத் தருவார்கள் எனக் கருதும் இணையாளர்கள் இருக்கின்றார்களா?) அவர்கள் உண்மையாளர்களாக இருப்பின் அவர்களின் இணையாளர்களை அவர்கள் அழைத்து வரவும்.
42 கெண்டைக் காலை விட்டும் (திரையை) நீக்கப்பட்டு அவர்களை ஸுஜூதின் பால் அழைக்கப்படும் நாளில், அதற்கு அவர்கள் சக்தி பெறமாட்டார்கள். (அபூ ஸஈத் (ரழி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் சொல்லத் தாம் கேட்டதாக அறிவிக்கின்றார்கள்: எங்கள் இறைவன் தனது கெண்டைக் காலை வெளியாக்குவான். அந்நேரத்தில் விசுவாசம் கொண்ட ஆணும், பெண்ணும் ஸுஜூத் செய்வார்கள். உலகில் முகஸ்துதிக்காகவும், புகழுக்காகவும் ஸுஜூத் செய்தவர்கள் எஞ்சியிருப்பார்கள். அவர்கள் அதற்கு முற்படுவார்கள். (அவர்களுடைய முதுகு கனமாகி) ஒரு தட்டுப் போல் மாறிவிடும். -புகாரி-) எனவே காபிர்களும், நயவஞ்சகர்களும் அச்சந்தர்ப்பத்தில் அவர்களின் முதுகுகள் கனமானதன் காரணமாக ஸுஜூது செய்ய முடியாதவர்களாக மாறிவிடுவார்கள். அல்லாஹ் தன் கெண்டைக்காலை வெளிப்படுத்துவது அத்தினத்தின் கடுமையைக் காட்டுவதற்காகவாகும்.)
43 அவர்களை இழிவு (கடுமையான இழிவு, கைசேதம் என்பன) மூடிக் கொள்ளும். அவர்கள் ஆரோக்கியம் உள்ள நிலையில் (உலகில்) ஸுஜூதின் பால் அழைக்கப்பட்டிருந்தார்கள். (இப்றாஹீம் அத்தைமிய்யி கூறுகின்றார்: அதான், இகாமத்தின் மூலம் அழைக்கப்பட்டார்கள். அவர்கள் மறுத்துவிட்டார்கள்.)
44 (நபியே!) நீங்கள் என்னையும், இச்செய்தியை (குர்ஆனை) ப்பொய்யாக்குபவர்களையும் விட்டுவிடுங்கள். (அவர்களைப் பற்றி நீங்கள் சிந்திக்க வேண்டாம். அவர்களை என்பொறுப்பில் விட்டுவிடுங்கள்.) அவர்கள் அறியாத வகையில் அவர்களை நாம் விட்டுப் பிடிப்போம். (அவர்களை நாம் மெதுவாக தண்டனையின் பால் அழைத்துச் செல்வோம்.)
45 (அவர்கள் பாவத்தை மேலும் அதிகரித்துக் கொள்வதற்காக) அவர்களுக்கு நான் அவகாசம் கொடுப்பேன். நிச்சயமாக (அவர்களைத் தண்டிப்பதற்கு) நான் வகுக்கும் திட்டம் உறுதியானது.
46 (அல்லாஹ்வை விசுவாதிப்பதின் பால் அவர்களை அழைப்பதற்கு) அவர்களிடத்தில் நீங்கள் கூலி கேட்கின்றீர்களா? (அவ்வாறு நீங்கள் கேட்டிருந்தால்) அந்தக் கடனால் அவர்கள் பளுவாக்கப் பட்டிருப்பார்கள். (அப்படி நீங்கள் கேட்காத சந்தர்ப்பத்தில் அவர்கள் ஈமான் கொள்ள ஏன் பின்வாங்க வேண்டும்?)
47 அல்லது அவர்களிடம் மறைவான (அறிவு) இருக்கின்றதா? (அவர்கள் அதிலிருந்து உங்களுடன் தர்க்கிப்பதற்கு தமக்குத் தேவையான ஆதாரங்களை எழுதிக் கொள்கின்றார்களா?
48 (நபியே) நீர் உமது இறைவனின் தீர்ப்புக்கு பொறுமை செய்வீராக. நீர் மீனுடையவரைப்

خَٰشِعَةً أَبۡصَٰرُهُمۡ تَرۡهَقُهُمۡ ذِلَّةٞۖ وَقَدۡ كَانُواْ يُدۡعَوۡنَ إِلَى ٱلسُّجُودِ وَهُمۡ سَٰلِمُونَ
٤٣ فَذَرۡنِي وَمَن يُكَذِّبُ بِهَٰذَا ٱلۡحَدِيثِۖ سَنَسۡتَدۡرِجُهُم مِّنۡ حَيۡثُ
لَا يَعۡلَمُونَ ٤٤ وَأُمۡلِي لَهُمۡۚ إِنَّ كَيۡدِي مَتِينٌ ٤٥ أَمۡ تَسۡـَٔلُهُمۡ أَجۡرٗا فَهُم
مِّن مَّغۡرَمٖ مُّثۡقَلُونَ ٤٦ أَمۡ عِندَهُمُ ٱلۡغَيۡبُ فَهُمۡ يَكۡتُبُونَ ٤٧ فَٱصۡبِرۡ
لِحُكۡمِ رَبِّكَ وَلَا تَكُن كَصَاحِبِ ٱلۡحُوتِ إِذۡ نَادَىٰ وَهُوَ مَكۡظُومٞ ٤٨ لَّوۡلَآ
أَن تَدَٰرَكَهُۥ نِعۡمَةٞ مِّن رَّبِّهِۦ لَنُبِذَ بِٱلۡعَرَآءِ وَهُوَ مَذۡمُومٞ ٤٩ فَٱجۡتَبَٰهُ رَبُّهُۥ
فَجَعَلَهُۥ مِنَ ٱلصَّٰلِحِينَ ٥٠ وَإِن يَكَادُ ٱلَّذِينَ كَفَرُواْ لَيُزۡلِقُونَكَ بِأَبۡصَٰرِهِمۡ
لَمَّا سَمِعُواْ ٱلذِّكۡرَ وَيَقُولُونَ إِنَّهُۥ لَمَجۡنُونٞ ٥١ وَمَا هُوَ إِلَّا ذِكۡرٞ لِّلۡعَٰلَمِينَ ٥٢

آياتها ٥٢ — سُورَةُ الحَاقَّةِ — ترتيبها ٦٩

بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

ٱلۡحَآقَّةُ ١ مَا ٱلۡحَآقَّةُ ٢ وَمَآ أَدۡرَىٰكَ مَا ٱلۡحَآقَّةُ ٣ كَذَّبَتۡ ثَمُودُ
وَعَادُۢ بِٱلۡقَارِعَةِ ٤ فَأَمَّا ثَمُودُ فَأُهۡلِكُواْ بِٱلطَّاغِيَةِ ٥ وَأَمَّا
عَادٞ فَأُهۡلِكُواْ بِرِيحٖ صَرۡصَرٍ عَاتِيَةٖ ٦ سَخَّرَهَا عَلَيۡهِمۡ
سَبۡعَ لَيَالٖ وَثَمَٰنِيَةَ أَيَّامٍ حُسُومٗاۖ فَتَرَى ٱلۡقَوۡمَ فِيهَا صَرۡعَىٰ
كَأَنَّهُمۡ أَعۡجَازُ نَخۡلٍ خَاوِيَةٖ ٧ فَهَلۡ تَرَىٰ لَهُم مِّنۢ بَاقِيَةٖ ٨

போன்று (அவசரப்படுவதிலும், கோபமடைவதிலும் யூனுஸ் (அலை) அவர்களைப் போன்று) ஆகிவிட வேண்டாம். அவர் (கவலையும், கோபமும் அடைந்தவராக தமது இரட்சகனை அழைத்த நேரத்தை நினைவு கூர்வீராக. (இந்தக் காபிர்களின் விடயத்தில் அவர்களைப் போன்று அவசரப்பட்டுவிட வேண்டாம்.)

49 (பாவமன்னிப்புக் கோருவதற்கு அனுகூலம் புரிந்து, பின் அதை ஏற்று, பாவமன்னிப்பு வழங்குவதன் மூலம்) அவருடைய நாயன் அவர்களுக்குச் செய்த அருள் அவரை அடையவில்லை எனில் இகழப்பட்ட நிலையில் (பயிர்கள் எதுவும் இல்லாத) வெற்று நிலத்தில் (மீனின் வயிற்றிலிருந்து) வெளியே எறியப்பட்டிருப்பார்கள்.

50 அல்லாஹ் அவர்களை (நுபித்துவத்திற்காகத்) தேர்ந்தெடுத்து அவனது நல்லடியார்களில் நின்றும் ஆக்கினான். (அவர்களை மீண்டும் ஓர் இலட்சம் பேர்களுக்கு அல்லது அதை விட அதிகமானவர்களுக்குத் தூதராக அனுப்பி அவர்கள் அனைவரும் ஈமான் கொண்டார்கள்.)

51 இறை நிராகரிப்பாளர்கள் இவ்வுபதேசத்தை (குர்ஆனைக்) கேட்கும் போது கோபத்தின் காரணமாக அவர்களின் பார்வையினால் உங்களை விழுத்தாட்டிவிட முற்படுகின்றார்கள். மேலும் அவர்கள் உங்களைப் பற்றி 'அவர் பைத்தியக்காரர்' என்று சொல்கின்றார்கள். அது அகிலத்தார்களுக்கு உபதேசமே அன்றி வேறில்லை.

## அல்-ஹாக்கா

1 உண்மையாக நிகழும் (மறுமை) நாளாகிறது,
2 உண்மையாக நிகழக்கூடியது எது ?
3 உண்மையாக நிகழக்கூடியது எது என்பதை (நபியே) உமக்கு எது அறிவித்தது?
4 'ஸமூத்' கூட்டத்தினரும், 'ஆத்' கூட்டத்தினரும் (உள்ளங்களை) திடுக்கிடச் செய்யக்கூடியதை (மறுமையை) ப்பொய்யாக்கினர். (மறுமை நாள் 'காரிஆ' -திடுக்கிடச் செய்யக் கூடியது- என்ற பெயரைக் கொண்டு அழைக்கப்படுகின்றது. ஏனெனில் அது தனது பயங்கரங்களைக் கொண்டு உள்ளங்களைத் திடுக்கிடச் செய்கின்றது.)
5 'ஸமூத்' கூட்டத்தினர் (ஸாலிஹ் (அலை) அவர்களின் கூட்டத்தினர் அவர்களால் சகிக்க முடியாத) ஒரு பெரும் சப்தத்தைக் கொண்டு அழிக்கப்பட்டார்கள்.
6 'ஆத்' கூட்டத்தினர் (இவர்கள் ஹூத் (அலை) அவர்களின் கூட்டத்தினர்.) கடும் குளிருள்ள, பாரிய சேதத்தை விளைவிக்கும் (வேகமாகவும், நீண்ட காலமாகவும் வீசும்) ஓர் காற்றின் மூலம் அழிக்கப்பட்டனர்.
7 அக்காற்றை அவன் அவர்கள் மீது ஏழு இரவுகளும், எட்டுப் பகல்களும் அவர்களைப் பூண்டோடு அழிக்கும் வகையில் அனுப்பி வைத்தான். (இக்காலப் பகுதியில் இடைவிடாது தொடர்ந்து வீசிய காற்று சிறு கற்களை அவர்கள் மீது எறிந்து கொண்டிருந்தது.) அவற்றில் (அவர்களுடைய இடங்களில்) அக்கூட்டத்தினர்கள் அடிப்பாகங்களோடு சாய்ந்து விழுந்திருக்கும் ஈத்த மரங்களைப் போன்று விழுந்து மரணித்திருப்பதைக் கண்டிருப்பீர்கள்.
8 அவர்களில் எஞ்சியிருப்போர் யாரையாவது நீங்கள் கண்டீர்களா? (அவர்களில் யாருமே எஞ்சவில்லை.)
9 மேலும் பிர்அவ்னும், அவனுக்கு முன்னால் வந்தவர்களும், (லூத் (அலை) அவர்களின் கூட்டத்தினரைப் போன்று) தூதர்களைப் பொய்யாக்கியவர்களும் (இணைவைத்தல், பாவங்கள் உட்பட்ட) தவறுகளைச் செய்தார்கள்.
10 அவர்கள் அவர்களுடைய இரட்சகனின் தூதர்களுக்கு மாறு செய்தார்கள். எனவே அவன் (அவர்களின் ஊர்களைத் தலை கீழாகப் பிரட்டுதல், கல்மழை பொழிதல் போன்ற தண்டனைகள் மூலம்) அவர்களைக் கடுமையாகப் பிடித்தான்.
11 நிச்சயமாக நாங்கள், தண்ணீர் அளவு கடந்து (உயர்ந்து) சென்ற போது உங்களை கப்பலில் சுமந்து பாதுகாத்தோம். (நீங்கள் அவ்வமயம் உங்கள் பெற்றோர்களின் முதகெலும்புகளில் இருந்தீர்கள். இங்கு கூறப்பட்டுள்ள கப்பல் நூஹ் வெள்ளத்தின் சமயத்தில்

وَجَآءَ فِرْعَوْنُ وَمَن قَبْلَهُۥ وَٱلْمُؤْتَفِكَٰتُ بِٱلْخَاطِئَةِ ﴿٩﴾ فَعَصَوْا۟ رَسُولَ
رَبِّهِمْ فَأَخَذَهُمْ أَخْذَةً رَّابِيَةً ﴿١٠﴾ إِنَّا لَمَّا طَغَا ٱلْمَآءُ حَمَلْنَٰكُمْ فِى ٱلْجَارِيَةِ
﴿١١﴾ لِنَجْعَلَهَا لَكُمْ تَذْكِرَةً وَتَعِيَهَآ أُذُنٌ وَٰعِيَةٌ ﴿١٢﴾ فَإِذَا نُفِخَ فِى ٱلصُّورِ
نَفْخَةٌ وَٰحِدَةٌ ﴿١٣﴾ وَحُمِلَتِ ٱلْأَرْضُ وَٱلْجِبَالُ فَدُكَّتَا دَكَّةً وَٰحِدَةً ﴿١٤﴾
فَيَوْمَئِذٍ وَقَعَتِ ٱلْوَاقِعَةُ ﴿١٥﴾ وَٱنشَقَّتِ ٱلسَّمَآءُ فَهِىَ يَوْمَئِذٍ وَاهِيَةٌ
﴿١٦﴾ وَٱلْمَلَكُ عَلَىٰٓ أَرْجَآئِهَا ۚ وَيَحْمِلُ عَرْشَ رَبِّكَ فَوْقَهُمْ يَوْمَئِذٍ ثَمَٰنِيَةٌ
﴿١٧﴾ يَوْمَئِذٍ تُعْرَضُونَ لَا تَخْفَىٰ مِنكُمْ خَافِيَةٌ ﴿١٨﴾ فَأَمَّا مَنْ أُوتِىَ
كِتَٰبَهُۥ بِيَمِينِهِۦ فَيَقُولُ هَآؤُمُ ٱقْرَءُوا۟ كِتَٰبِيَهْ ﴿١٩﴾ إِنِّى ظَنَنتُ أَنِّى مُلَٰقٍ
حِسَابِيَهْ ﴿٢٠﴾ فَهُوَ فِى عِيشَةٍ رَّاضِيَةٍ ﴿٢١﴾ فِى جَنَّةٍ عَالِيَةٍ ﴿٢٢﴾
قُطُوفُهَا دَانِيَةٌ ﴿٢٣﴾ كُلُوا۟ وَٱشْرَبُوا۟ هَنِيٓـًٔا بِمَآ أَسْلَفْتُمْ فِى ٱلْأَيَّامِ
ٱلْخَالِيَةِ ﴿٢٤﴾ وَأَمَّا مَنْ أُوتِىَ كِتَٰبَهُۥ بِشِمَالِهِۦ فَيَقُولُ يَٰلَيْتَنِى لَمْ أُوتَ كِتَٰبِيَهْ
﴿٢٥﴾ وَلَمْ أَدْرِ مَا حِسَابِيَهْ ﴿٢٦﴾ يَٰلَيْتَهَا كَانَتِ ٱلْقَاضِيَةَ ﴿٢٧﴾ مَآ أَغْنَىٰ
عَنِّى مَالِيَهْ ۜ ﴿٢٨﴾ هَلَكَ عَنِّى سُلْطَٰنِيَهْ ﴿٢٩﴾ خُذُوهُ فَغُلُّوهُ ﴿٣٠﴾ ثُمَّ ٱلْجَحِيمَ
صَلُّوهُ ﴿٣١﴾ ثُمَّ فِى سِلْسِلَةٍ ذَرْعُهَا سَبْعُونَ ذِرَاعًا فَٱسْلُكُوهُ ﴿٣٢﴾ إِنَّهُۥ
كَانَ لَا يُؤْمِنُ بِٱللَّهِ ٱلْعَظِيمِ ﴿٣٣﴾ وَلَا يَحُضُّ عَلَىٰ طَعَامِ ٱلْمِسْكِينِ ﴿٣٤﴾

நூஹ் (அலை) அவர்களை விசுவாசித்தவர்கள் ஏற்றிச் செல்லப்பட்ட கப்பலாகும்.
12 (நூஹ் (அலை) அவர்களின் கூட்டம் அழிக்கப்பட்ட இச்சம்பவத்தை ((முஹம்மத் (ஸல்) அவர்களின் உம்மத்தாகிய) உங்களுக்கு ஓர் உபதேசமாக நாம் ஆக்குவதற்காகவும், (பாடமிட்டு) பாதுகாக்கும் காதுகள் அதை (பாடமிட்டு) ப்பாதுகாத்து (எத்திவைக்குமுகமாவும் நாம் உங்களுக்கு அதனைக் கூறுகின்றோம்.
13 (மறுமை உண்டாவதற்காக) ஊது குழலில் ஒரு முறை ஊதப்பட்டு,
14 பூமியையும் மலைகளையும் உயர்த்தப்பட்டு அவ்விரண்டையும் ஒரே முறையில் இடிக்கப்பட்டு தூள் தூளாக ஆக்கப்பட்டால்,
15 அந்நாளில், நிகழக்கூடியது (இறுதி நாள்) நிகழ்துவிடும்.
16 மேலும் வானம் பிளந்து விடும். (வானவர்கள் அதிலிருந்து கீழிறங்குவார்கள்.) அந்நாளில் அது பலவீனமானதாகக் காணப்படும்.
17 மேலும் வானவர்கள் அதன் மருங்குகளில் (ஓரங்களில்) காணப்படுவார்கள். (இறைவன் அவர்களுக்கு ஏவியதும் கீழிறங்கி அதில் உள்ளவர்களைச் சூழ்ந்து கொள்வார்கள்.) அத்தினத்தில் உமது நாயனின் அர்ஷை அவர்களுக்கு மேலால் எட்டுப் பேர்கள் சுமந்து கொண்டிருப்பார்கள்.
18 அன்றைய நாளில் நீங்கள் (விசாரணைக்காக அல்லாஹ்விடம் சமர்ப்பிக்கப்படுவீர்கள். உங்களிடமிருந்து மறையக் கூடிய எதுவும் (அவனுக்கு) மறைய மாட்டாது.
19 தனது (செயல்கள் பதிவு செய்யப்பட்ட) பதிவேடு அவனின் வலக்கரத்தில் கொடுக்கப்பட்டவன், “இதோ எனது பதிவேட்டை எடுத்து வாசித்துப் பாருங்கள்.” என தனது பதிவேட்டைப் பார்த்துச் சந்தோஷமடைந்தவனாகக் கூறுவான்.
20 (மேலும் அவன் சொல்வான்.) நான் (மறுமையில்) விசாரணைக்கு முகம் கொடுப்பேன் என்பதை (உலகில்) அறிந்திருந்தேன்.
21 எனவே, அவன் பொருந்திக் கொள்ளக்கூடிய ஒரு வாழ்க்கையில் இருப்பான்.
22 (அவன்) உயர்ந்த சுவனங்களில் இருப்பான்.(அவை அந்தஸ்திலும் இடத்திலும் உயர்ந்தவை. ஏனெனில் அவை வானுக்கு மேலால் காணப்படுகின்றன.)
23 அதில் கொய்யப்படக்கூடிய பழங்கள் சமீபமானவை. (அவற்றின் பழங்கள் நின்ற நிலையில் இருப்போர், உட்கார்ந்திருப்போர், சாய்ந்திருப்போர், ஆகிய எல்லோருக்கும் சமீபமானது.)
24 (அவர்களைப் பார்த்துச் சொல்லப்படும், “நீங்கள் (உலகில்) சென்று போன நாட்களில் (மறுமைக்காக) முற்படுத்தியவற்றின் (நல்அமல்களின் காரணமாக) சந்தோசமாக (தாராளமாக ) உண்ணுங்கள், மேலும் பருகுங்கள்.
25 அவனது (நன்மை, தீமைகள் பதிவு செய்யப்பட்ட) பதிவேடு இடது கையில் கொடுக்கப்பட்டவன் கூறுவான், “எனது பதிவேடு எனக்கு வழங்கப்படாமல் இருந்திருக்க வேண்டாமா!
26 மேலும் எனது விசாரணை எது என்பதை நான் அறியாமல் இருந்திருக்க வேண்டாமா!
27 அது (எனக்கு ஏற்பட்ட மரணம்) முடிவானதாக இருக்கக் கூடாதா?” (அவனது பதிவேட்டில் உள்ள தீய செயல்களையும் அதனால் தனக்குக் கிடைக்கவிருக்கும் தண்டனையையும் அறிந்து, தனக்கு ஏற்பட்ட மரணம் நிரந்தரமானதாக இருக்கக்ககூடாதா என விரும்புவான்.
28 எனது செல்வம் (என்னை விட்டும் அல்லாஹ்வின் தண்டனையைத் தடுத்து) பயனளிக்கவில்லை.
29 (நான் வைத்துக் கொண்டிருந்த) எனது ஆதாரங்கள், (அல்லது எனது பட்டம் பதவிகள்) என்னை விட்டும் அழிந்து விட்டன.
30 (இவ்வாறு அவன் கூறும்போது அல்லாஹ் கூறுவான்:) இவனைப் பிடித்து (இவனுடைய கைகளைக் கழுத்துடன் சேர்த்து விளங்கிடுங்கள்.
31 பின்பு இவனை நரகில் நுழைத்து விடுங்கள்.

فليس له اليوم ههنا حميم ٣٥ ولا طعام إلا من غسلين ٣٦ لا يأكله
إلا الخاطئون ٣٧ فلا أقسم بما تبصرون ٣٨ وما لا تبصرون ٣٩
إنه لقول رسول كريم ٤٠ وما هو بقول شاعر قليلا ما تؤمنون ٤١
ولا بقول كاهن قليلا ما تذكرون ٤٢ تنزيل من رب العالمين ٤٣ ولو
تقول علينا بعض الأقاويل ٤٤ لأخذنا منه باليمين ٤٥ ثم لقطعنا
منه الوتين ٤٦ فما منكم من أحد عنه حاجزين ٤٧ وإنه لتذكرة
للمتقين ٤٨ وإنا لنعلم أن منكم مكذبين ٤٩ وإنه لحسرة على
الكافرين ٥٠ وإنه لحق اليقين ٥١ فسبح باسم ربك العظيم ٥٢

## سورة المعارج

ترتيبها ٧٠ — آياتها ٤٤

بسم الله الرحمن الرحيم

سأل سائل بعذاب واقع ١ للكافرين ليس له دافع ٢ من
الله ذي المعارج ٣ تعرج الملائكة والروح إليه في
يوم كان مقداره خمسين ألف سنة ٤ فاصبر صبرا جميلا ٥
إنهم يرونه بعيدا ٦ ونراه قريبا ٧ يوم تكون السماء كالمهل
٨ وتكون الجبال كالعهن ٩ ولا يسأل حميم حميما ١٠

32 பின்பு எழுபது முழங்கள் நீளமான சங்கிலியில் அவனைக் கோர்த்துவிடுங்கள்.(ஸுஃப்யான் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள் : அச்சங்கிலியை அவனது பின்துவாரத்தினூடாகச் செலுத்தப்பட்டு வாயினூடாக வெளியாக்கி அதில் அவன் கோர்க்கப்படுவான் என்ற ஒரு அறிவிப்பு எங்களுக்குக் கிடைத்தது.)

33 நிச்சயமாக அவன் வழுப்பமான அல்லாஹ்வைக் கொண்டு ஈமான் கொண்டிருக்கவில்லை.

34 மேலும் ஏழைகளுக்கு உணவளிக்கத் தூண்டுபவனாகவும் இருக்கவில்லை.

35 மேலும் இங்கே அவனுக்கு நெருங்கினவர்கள் (உறவினர்கள் அல்லது நண்பர்கள்) யாரும் இருக்கமாட்டார்கள். (அவர்கள் எவரும் இவனுக்குப் பயனளிக்கவோ, அல்லது இவனுக்காக சிபாரிசு செய்யவோ வரமாட்டார்கள். ஏனெனில் அது ஓர் உறவினர் மற்ற உறவினரை விட்டும், ஒரு நண்பன் மற்ற நண்பனை விட்டும் விரண்டோடும் நாளாகும்.)

36 மேலும் அவர்களுக்கு (அவர்களின் உடம்புகளிலிருந்து வழிந்தோடும்) ஊணங்களைத்
தவிர வேறு உணவு கிடையாது.

37 உலகில் பாவிகாளாக இருந்தவர்கள் மாத்திரமே அதைச் சாப்பிடுவார்கள்.

38 நீங்கள் பார்க்கக் கூடியவற்றைக் கொண்டு நான் சத்தியம் செய்கின்றேன்.

39 இன்னும் உங்களால் பார்க்க முடியாதவற்றைக் கொண்டும் (நான் சத்தியம் செய்கின்றேன்.)

40 நிச்சயமாக இது கண்ணியமான ஒரு தூதரின் வார்த்தையாகும். (இது நபி (ஸல்) அவர்களால் ஓதிக்காட்டப்படும் வார்த்தையாகும். அல்லது இதன் கருத்து ஜிப்ரீல் அலை அவர்களால் நபியவர்களுக்குச் சொல்லிக்கொடுக்கப்படும் குர்ஆனாகும்.)

41 (நீங்கள் நினைப்பது போன்று) இது ஒரு கவிஞருடைய வார்த்தையல்ல. (இவ்வசனங்கள் கவிதை வகையைச் சார்ந்ததல்ல.) மிகக் குறைவாகவே நீங்கள் ஈமான் கொள்கின்றீர்கள்.

42 மேலும் (நீங்கள் வாதிடுவது போன்று) இது சாஸ்திரம் கூறுபவனுடைய வார்த்தையுமல்ல. (சாஸ்திரம் என்பது வேறு. அதற்கும் குர்ஆனுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை.) நீங்கள் மிகக் குறைவாகவே உபதேசதம் பெறுகின்றீர்கள்.

43 (இது) அகிலத்தரின் இரட்சகனிடமிருந்து இறக்கப்பட்ட (வேதமாகும்.)

44 அவர் (அத்தூதர்) எங்கள் மீது (நாம் சொல்லாத) சில சொற்களை வசனங்களை இட்டுக் கட்டிச் சொல்வாராயின்,

45 அவருடைய வலக்கரத்தைப் பிடிப்போம்.

46 பின்பு அவருடைய (முதுகுப் பாகத்திலிருந்து இதயத்துடன் தொடர்பு படும் ) உயிர் நரம்பை வெட்டிவிடுவோம். (அவரை நாங்கள் மிகக் கடுமையாக வேதனை செய்வோம்.)

47 (அவ்வாறு நாம் வேதனை செய்யும் தருணத்தில்) அவரை விட்டும் (அவ்வேதனையைத்) தடுப்பவர் யாரும் இருக்கமாட்டார்கள். (இப்படி இருக்கையில் அவர் எம்மீது எவ்வாறு பொய்யுரைப்பார்?)

48 நிச்சயமாக இது (இக்குர்ஆன்) பயபக்தியுடையவருக்கு ஓர் உபதேசமாகும். (அவர்கள் தான் இதன் மூலம் பயனடைவார்கள்.)

49 உங்களில் (இக்குர்ஆனைப்) பொய்யாக்கக் கூடியவர்களும் இருக்கின்றார்கள் என்பதை நாம் அறிவோம். (நாம் அதற்குரிய கூலியை அவர்களுக்கு வழங்குவோம்.)

50 மேலும் நிச்சயமாக இது (இக்குர்ஆன்) நிரகரிப்போருக்கு கைசேதத்தை(யும் கவலையையும்) ஏற்படுத்தக் கூடியது.

51 நிச்சயமாக இது உறுதியான உண்மையாகும்.

52 நீங்கள் கன்னியம் பொருந்திய உமது இறைவனின் திருப்பெயர் கொண்டு துதிப்பீராக.

يُبَصَّرُونَهُمْ يَوَدُّ الْمُجْرِمُ لَوْ يَفْتَدِي مِنْ عَذَابِ يَوْمِئِذٍ بِبَنِيهِ ﴿١١﴾
وَصَاحِبَتِهِ وَأَخِيهِ ﴿١٢﴾ وَفَصِيلَتِهِ الَّتِي تُؤْوِيهِ ﴿١٣﴾ وَمَن فِي الْأَرْضِ
جَمِيعًا ثُمَّ يُنجِيهِ ﴿١٤﴾ كَلَّا إِنَّهَا لَظَىٰ ﴿١٥﴾ نَزَّاعَةً لِّلشَّوَىٰ ﴿١٦﴾ تَدْعُوا
مَنْ أَدْبَرَ وَتَوَلَّىٰ ﴿١٧﴾ وَجَمَعَ فَأَوْعَىٰ ﴿١٨﴾ ۞ إِنَّ الْإِنسَانَ خُلِقَ هَلُوعًا
﴿١٩﴾ إِذَا مَسَّهُ الشَّرُّ جَزُوعًا ﴿٢٠﴾ وَإِذَا مَسَّهُ الْخَيْرُ مَنُوعًا ﴿٢١﴾ إِلَّا
الْمُصَلِّينَ ﴿٢٢﴾ الَّذِينَ هُمْ عَلَىٰ صَلَاتِهِمْ دَائِمُونَ ﴿٢٣﴾ وَالَّذِينَ فِي
أَمْوَالِهِمْ حَقٌّ مَّعْلُومٌ ﴿٢٤﴾ لِّلسَّائِلِ وَالْمَحْرُومِ ﴿٢٥﴾ وَالَّذِينَ يُصَدِّقُونَ
بِيَوْمِ الدِّينِ ﴿٢٦﴾ وَالَّذِينَ هُم مِّنْ عَذَابِ رَبِّهِم مُّشْفِقُونَ ﴿٢٧﴾ إِنَّ عَذَابَ
رَبِّهِمْ غَيْرُ مَأْمُونٍ ﴿٢٨﴾ وَالَّذِينَ هُمْ لِفُرُوجِهِمْ حَافِظُونَ ﴿٢٩﴾ إِلَّا عَلَىٰ
أَزْوَاجِهِمْ أَوْ مَا مَلَكَتْ أَيْمَانُهُمْ فَإِنَّهُمْ غَيْرُ مَلُومِينَ ﴿٣٠﴾ فَمَنِ ابْتَغَىٰ وَرَاءَ
ذَٰلِكَ فَأُولَٰئِكَ هُمُ الْعَادُونَ ﴿٣١﴾ وَالَّذِينَ هُمْ لِأَمَانَاتِهِمْ وَعَهْدِهِمْ رَاعُونَ
﴿٣٢﴾ وَالَّذِينَ هُم بِشَهَادَاتِهِمْ قَائِمُونَ ﴿٣٣﴾ وَالَّذِينَ هُمْ عَلَىٰ صَلَاتِهِمْ يُحَافِظُونَ
﴿٣٤﴾ أُولَٰئِكَ فِي جَنَّاتٍ مُّكْرَمُونَ ﴿٣٥﴾ فَمَالِ الَّذِينَ كَفَرُوا قِبَلَكَ مُهْطِعِينَ
﴿٣٦﴾ عَنِ الْيَمِينِ وَعَنِ الشِّمَالِ عِزِينَ ﴿٣٧﴾ أَيَطْمَعُ كُلُّ امْرِئٍ مِّنْهُمْ
أَن يُدْخَلَ جَنَّةَ نَعِيمٍ ﴿٣٨﴾ كَلَّا إِنَّا خَلَقْنَاهُم مِّمَّا يَعْلَمُونَ ﴿٣٩﴾

## அல்-மஆரிஜ்

1 நிகழும் தண்டனையை கேட்கக் கூடிய ஒருவன் கேட்டுவிட்டான். (நள்ர் பின் ஹாரிஸ் என்பவன் "இறைவா! இது உன்னிடமிருந்து வரும் உண்மையாக இருந்தால் வானத்திலிருந்து எங்களுக்கு கல்மழை பொழியவைப்பாயாக. அல்லது எங்களுக்கு நோவினையுள்ள தண்டனையைக் கொண்டுவருவாயாக." எனப் பிரார்த்தித்தான்.)

2 நிராகரிப்போர்களுக்கு (நிகழும் அத்தண்டனையைத்) தடுப்பவர்கள் யாரும் இல்லை.

3 (மலக்குகள்) அதன் மேல் ஏறிச் செல்லும் ஏணிகளையுடைய அல்லாஹ்விடமிருந்து (அத்தண்டனை நிகழும்.)

4 வானவர்களும், ஜிப்ரீல் (அலை) அவர்களும் அல்லாஹ்வின் பால் (அப்படிகளினூடாக) ஒரு நாளில் உயர்ந்து செல்வார்கள். அதன் அளவு (இவ்வுலக வருடங்களில்) ஐம்பதாயிரம் வருடங்களாகும். (இது அடியார்கள் விசாரணைக்காக மஹ்ஷர் வெளியில் நிற்கும் காலப்பகுதியாகும். அதன் பின் சுவனவாசிகள் சுவனத்திற்கும் நரகவாசிகள் நரகத்திற்கும் சென்று விடுவார்கள்.)

5 (உங்கள் கஷ்டங்களை அல்லாஹ்வைத் தவிர உள்ளவர்களிடம் முறைப்படாமல்) நீங்கள் அழகான முறையில் பொறுமை செய்வீராக.

6 நிச்சயமாக அவர்கள் அதை தூரமானதாக (நடக்க முடியாததாகக்) காண்கிறார்கள்.

7 நாம் அதைச் சமீபமானதாகக் காண்கிறோம்.

8 உருக்கப்பட்ட செம்பைப் போல் வானம் ஆகிவிடும் நாளில் (அது நிகழும்)

9 மேலும் மலைகள் சாயம் போடப்பட்ட பஞ்சு போல் ஆகிவிடும் நாளில் (அது நடைபெறும்.)

10 (அங்கு நிகழும் பயங்கரங்களின் காரணமாக) ஒரு தோழன் அடுத்த தோழனிடம் (எதையும்) கேட்கமாட்டான்.

11 அவர்களுக்கு அவர்களை (நண்பர்களை) காட்டப்படும். (ஒருவர் மற்றவரை அறிந்து கொண்டாலும் அவர் மற்றவரிடம் எதையும் கேட்கவும்மாட்டார். பேசவும் மாட்டார்.) குற்றமிழைத்தவன் அன்றைய நாளின் (மறுமை)தண்டனையிலிருந்து (தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காக) தனது பிள்ளைகளைப் பிணையாகக் கொடுக்க முற்படுவார்கள்.

12 மேலும் அவனது மனைவியையும், சகோதரரையும்

13 (கஷ்டமான சந்தர்ப்பங்களில்) அவனை அரவணைக்கும் (நெருங்கிய) உறவினர்களையும்,

14 இன்னும் பூமியில் உள்ள அனைவரையும் (பிணையாகக் கொடுத்துத்) தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முற்படுவான்.

15 அவ்வாறு செய்ய முடியாது. நிச்சயமாக அது (கொழுந்து விட்டெரியும்) 'லளா' எனும் நரகமாகும்.

16 அது தலையின் தோளை களற்றி விடக்கூடியது.

17 அது (உலகில் உண்மையை விட்டும்) பின்வாங்கிப் புறக்கனித்தவர்களை அழைக்கும்.

18 மேலும் செல்வத்தை ஒன்று திரட்டி (செலவு செய்யாமல்) பைகளிலிட்டு பாதுகாத்தவர்களையும் அது அழைக்கும் .

19 நிச்சயமாக மனிதன் மிகவும் பேராசை கொண்டவனாகவும் பதற்றப்படக் கூடியவனாகவும் படைக்கப்பட்டுள்ளான்.

20 அவனுக்கு ஒரு (வறுமை, நோய் போன்ற) தீமை தொட்டுவிட்டால் அதிகம் பதற்றம் அடைவான்.

21 மேலும் அவனுக்கு (செல்வங்கள் போன்ற) நன்மைகள் ஏற்பட்டால் (அதைச் செலவு செய்யாது) தடுப்பவனாக இருக்கின்றான்.

22 தொழுகையை நிறைவேற்றுபவர்களைத் தவிர, (அவர்கள் அப்பண்புகளில் காணப்படமாட்டார்கள்.)

23 அவர்கள் அவர்களுடைய தொழுகையில் நிலையாக இருப்பார்கள். (தொழுகையை

فَلَآ أُقۡسِمُ بِرَبِّ ٱلۡمَشَٰرِقِ وَٱلۡمَغَٰرِبِ إِنَّا لَقَٰدِرُونَ ٤٠ عَلَىٰٓ أَن نُّبَدِّلَ خَيۡرًا مِّنۡهُمۡ
وَمَا نَحۡنُ بِمَسۡبُوقِينَ ٤١ فَذَرۡهُمۡ يَخُوضُواْ وَيَلۡعَبُواْ حَتَّىٰ يُلَٰقُواْ يَوۡمَهُمُ ٱلَّذِي
يُوعَدُونَ ٤٢ يَوۡمَ يَخۡرُجُونَ مِنَ ٱلۡأَجۡدَاثِ سِرَاعٗا كَأَنَّهُمۡ إِلَىٰ نُصُبٖ يُوفِضُونَ
٤٣ خَٰشِعَةً أَبۡصَٰرُهُمۡ تَرۡهَقُهُمۡ ذِلَّةٞۚ ذَٰلِكَ ٱلۡيَوۡمُ ٱلَّذِي كَانُواْ يُوعَدُونَ ٤٤

## سُورَةُ نُوحٍ

ترتيبها ٧١ — آياتها ٢٨

بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

إِنَّآ أَرۡسَلۡنَا نُوحًا إِلَىٰ قَوۡمِهِۦٓ أَنۡ أَنذِرۡ قَوۡمَكَ مِن قَبۡلِ أَن يَأۡتِيَهُمۡ
عَذَابٌ أَلِيمٞ ١ قَالَ يَٰقَوۡمِ إِنِّي لَكُمۡ نَذِيرٞ مُّبِينٌ ٢ أَنِ ٱعۡبُدُواْ
ٱللَّهَ وَٱتَّقُوهُ وَأَطِيعُونِ ٣ يَغۡفِرۡ لَكُم مِّن ذُنُوبِكُمۡ وَيُؤَخِّرۡكُمۡ
إِلَىٰٓ أَجَلٖ مُّسَمًّىۚ إِنَّ أَجَلَ ٱللَّهِ إِذَا جَآءَ لَا يُؤَخَّرُۚ لَوۡ كُنتُمۡ تَعۡلَمُونَ
٤ قَالَ رَبِّ إِنِّي دَعَوۡتُ قَوۡمِي لَيۡلٗا وَنَهَارٗا ٥ فَلَمۡ يَزِدۡهُمۡ دُعَآءِيٓ إِلَّا
فِرَارٗا ٦ وَإِنِّي كُلَّمَا دَعَوۡتُهُمۡ لِتَغۡفِرَ لَهُمۡ جَعَلُوٓاْ أَصَٰبِعَهُمۡ
فِيٓ ءَاذَانِهِمۡ وَٱسۡتَغۡشَوۡاْ ثِيَابَهُمۡ وَأَصَرُّواْ وَٱسۡتَكۡبَرُواْ ٱسۡتِكۡبَارٗا
٧ ثُمَّ إِنِّي دَعَوۡتُهُمۡ جِهَارٗا ٨ ثُمَّ إِنِّيٓ أَعۡلَنتُ لَهُمۡ وَأَسۡرَرۡتُ
لَهُمۡ إِسۡرَارٗا ٩ فَقُلۡتُ ٱسۡتَغۡفِرُواْ رَبَّكُمۡ إِنَّهُۥ كَانَ غَفَّارٗا ١٠

அதற்குரிய நேரத்தில் தொழுவார்கள். தொழுகையை விட்டும் அவர்களுடைய கவனத்தை எதுவும் திருப்பிவிடமாட்டாது.)

24 மேலும் அவர்களின் செல்வங்களில் அறியப்பட்ட ஒரு பங்குண்டு. (ஸக்காத் போன்ற வழிப்பாடுகளை நிறை வேற்றுவார்கள்.)

25 யாசிப்பவர்களுக்கும், வறியவர்களுக்கும் (பங்குண்டு).

26 இன்னும் அவர்கள் கூலி வழங்கப்படும் (மறுமை) நாளை உண்மை கொள்வார்கள். (அதில் சந்தேகம் கொள்ளவோ, நிராகரிக்கவோ மாட்டர்கள்.)

27 (அவர்கள் வணக்க வழிபாடுகள் செய்திருந்த போதும்) அவர்களுடைய இரட்சகனின் வேதனையைப் பயந்து கொண்டிருப்பார்கள்.

28 நிச்சயமாக அவர்களுடைய இரட்சகனின் வேதனை அச்சமற்று இருக்கப்படக் கூடியதொன்றல்ல (அதை ஒவ்வொருவரும் பயப்படவேண்டும்.)

29 மேலும் அவர்கள் அவர்களுடைய மர்மஸ்தலங்களைப் பாதுகாத்துக் கொள்வார்கள்.

30 அவர்களுடைய மனைவியர்களுக்கும், தமது வலக்கரங்கள் உரிமையாக்கிக் கொண்ட (அடிமை) பெண்களுக்கும் தவிர (வெளியாக்கமாட்டார்கள்.) அவ்வாறு இவர்களுக்கு வெளிப்படுத்தும் சந்தர்ப்பத்தில் நிச்சயமாக இவர்கள் பழிக்கப்படுபவர்கள் அல்லர்.

31 அதற்கப்பால் யாராவது தேடுவாராகில் அவர்கள் வரம்பு மீறியவர்கள்.

32 மேலும் அவர்கள் தமது அமானிதங்களையும், உடன்படிக்கையையும் பேணிக் கொள்வார்கள். (அமானிதங்களில் மோசடி செய்ய மாட்டார்கள், உடன்படிக்கைகளை முறிக்கமாட்டார்கள்.)

33 (உறவினர், தூரமானவர், அல்லது உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற வித்தியாசங்கள் பாராது) அவர்களுடைய சாட்சியங்களை (முறையாக) நிறைவேற்றுவார்கள்.

34 மேலும் அவர்கள் தமது தொழுகையை பேணிப்பாதுகாத்துக் கொள்வார்கள். (தொழுகையை விட்டும் வேறு விடயங்களில் ஈடுபடமாட்டார்கள். அதன் நன்மையை அழித்துவிடும் செயல்களையும் செய்யமாட்டார்கள்.)

35 அவர்கள் (மேற்கூறப்பட்ட பண்புகளையுடையோர்) சுவனங்களில் கண்ணியப் படுத்தப்படுவார்கள்.

36 (நபியே) உங்களுக்கு சூழால் இருக்கும் இறை நிராகரிப்பாளர்களுக்கு என்ன நிகழ்ந்திருக்கின்றது? (உங்களைப் பொய்யாக்கி பரிகாசிப்பதன் பால்) விரைகின்றார்கள்.

37 (நபியவர்களின்) வலப்பக்கமாகவும் இடப்பக்கமாகவும் பல கூட்டங்களாக (ப்பிரிந்து காணப்படுகின்றனர்.)

38 அவர்களில் ஒவ்வொருவரும் அருள்கள் நிறைந்த சுவர்க்கத்தில் நுழைவிக்கப்படுவதை ஆசை வைக்கின்றார்கள்.

39 அவ்வாறல்ல. நிச்சயமாக நாங்கள் அவர்களை அவர்கள் அறிந்ததிலிருந்து படைத்துள்ளோம். (அவர்கள் அறிந்திருக்கும் அருவருப்பான இந்திரியத்திலிருந்து நாங்கள் படைத்தோம். நபி (ஸல்) அவர்கள் இவ்வசனத்தை ஓதிய போது அவர்கள் உள்ளங்கையில் துப்பி அதற்கு மேல் தனது விரலை வைத்துச் சொன்னார்கள்: அல்லாஹ் கூறுகின்றான் “மனிதனே இது போன்றதிலிருந்து உன்னைப் படைத்ததன் பின் நீ என்னை இயலாதவனாக ஆக்க முற்படுகின்றாயா?” -இப்னு மாஜஹ்-)

40 நிச்சயமாக நாங்கள் சக்தியுள்ளவர்கள் என கிழக்குகளினதும், மேற்குகளினதும் இரட்சகனைக் கொண்டு நான் சத்தியம் செய்கின்றேன்.

41 (பாவம் செய்யும் இவர்களை அழித்து விட்டு எமக்குக் கட்டுப்படும்) இவர்களை விடச் சிறந்தவர்களை நாம் பகரமாகக் கொண்டுவர (சக்திபெற்றவர்கள். நாங்கள் அதைச் செய்ய முற்பட்டால்) எங்களை மிகைக்க முடியாது.

42 அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட (மறுமை) நாளை அவர்கள் சந்திக்கும் வரை (அவர்களை வழிகேட்டில்) மூழ்கவும், விளையாடிக் கொண்டிருக்கவும் விட்டுவிடுங்கள்.

43 அவர்கள் (அவர்களுடைய) மண்ணறைகளிலிருந்து விரைவாக வெளியாகும் நாளில்

يُرْسِلِ ٱلسَّمَآءَ عَلَيْكُم مِّدْرَارًا ﴿١١﴾ وَيُمْدِدْكُم بِأَمْوَٰلٍ وَبَنِينَ وَيَجْعَل
لَّكُمْ جَنَّـٰتٍ وَيَجْعَل لَّكُمْ أَنْهَـٰرًا ﴿١٢﴾ مَّا لَكُمْ لَا تَرْجُونَ لِلَّهِ وَقَارًا ﴿١٣﴾
وَقَدْ خَلَقَكُمْ أَطْوَارًا ﴿١٤﴾ أَلَمْ تَرَوْا۟ كَيْفَ خَلَقَ ٱللَّهُ سَبْعَ سَمَـٰوَٰتٍ
طِبَاقًا ﴿١٥﴾ وَجَعَلَ ٱلْقَمَرَ فِيهِنَّ نُورًا وَجَعَلَ ٱلشَّمْسَ سِرَاجًا ﴿١٦﴾
وَٱللَّهُ أَنۢبَتَكُم مِّنَ ٱلْأَرْضِ نَبَاتًا ﴿١٧﴾ ثُمَّ يُعِيدُكُمْ فِيهَا وَيُخْرِجُكُمْ
إِخْرَاجًا ﴿١٨﴾ وَٱللَّهُ جَعَلَ لَكُمُ ٱلْأَرْضَ بِسَاطًا ﴿١٩﴾ لِّتَسْلُكُوا۟ مِنْهَا
سُبُلًا فِجَاجًا ﴿٢٠﴾ قَالَ نُوحٌ رَّبِّ إِنَّهُمْ عَصَوْنِى وَٱتَّبَعُوا۟ مَن لَّمْ يَزِدْهُ
مَالُهُۥ وَوَلَدُهُۥٓ إِلَّا خَسَارًا ﴿٢١﴾ وَمَكَرُوا۟ مَكْرًا كُبَّارًا ﴿٢٢﴾ وَقَالُوا۟
لَا تَذَرُنَّ ءَالِهَتَكُمْ وَلَا تَذَرُنَّ وَدًّا وَلَا سُوَاعًا وَلَا يَغُوثَ وَيَعُوقَ
وَنَسْرًا ﴿٢٣﴾ وَقَدْ أَضَلُّوا۟ كَثِيرًا ۖ وَلَا تَزِدِ ٱلظَّـٰلِمِينَ إِلَّا ضَلَـٰلًا ﴿٢٤﴾
مِّمَّا خَطِيٓـَٔـٰتِهِمْ أُغْرِقُوا۟ فَأُدْخِلُوا۟ نَارًا فَلَمْ يَجِدُوا۟ لَهُم مِّن دُونِ
ٱللَّهِ أَنصَارًا ﴿٢٥﴾ وَقَالَ نُوحٌ رَّبِّ لَا تَذَرْ عَلَى ٱلْأَرْضِ مِنَ ٱلْكَـٰفِرِينَ
دَيَّارًا ﴿٢٦﴾ إِنَّكَ إِن تَذَرْهُمْ يُضِلُّوا۟ عِبَادَكَ وَلَا يَلِدُوٓا۟ إِلَّا فَاجِرًا
كَفَّارًا ﴿٢٧﴾ رَّبِّ ٱغْفِرْ لِى وَلِوَٰلِدَىَّ وَلِمَن دَخَلَ بَيْتِىَ
مُؤْمِنًا وَلِلْمُؤْمِنِينَ وَٱلْمُؤْمِنَـٰتِ وَلَا تَزِدِ ٱلظَّـٰلِمِينَ إِلَّا تَبَارًۢا ﴿٢٨﴾

அவர்கள் நட்டிவைக்கப்பட்டிருக்கும் ஒரு கொடியை நோக்கி விரைவதைப் போன்றிருக்கும்.

44 அவர்களுடைய பார்வைகள் (இழிவடைந்து) பனிந்த நிலையில் (கடுமையான) இழிவு அவர்களை மூடிக் கொள்ளும். அது தான் அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட நாளாகும்.

## நூஹ்

1 அவர்களுக்கு நோவினை உள்ள வேதனை வருவதற்கு முன் நீங்கள் உங்கள் கூட்டத்தினரை எச்சரிக்கை செய்யுங்கள் எனக் கூறி நாம் நூஹ் (அலை) அவர்களை அவரது கூட்டத்தினருக்குத் தூதராக அனுப்பிவைத்தோம். (நூஹ் (அலை) அவர்கள் உலகிற்கு அனுப்பப்பட்ட முதல் தூதர் -ரஸூல்- ஆவார்.)

2 அவர்கள் (தமது கூட்டத்தினரை நோக்கிக்) கூறினார்கள், "எனது கூட்டத்தினரே! நான் உங்களுக்கு தெளிவாக எச்சரிக்கை செய்கின்றேன்.

3 நீங்கள் அல்லாஹ்வை வணங்கி அவனைப் பயந்து கொள்ளுங்கள். மேலும் நீங்கள் எனக்கு வழிப்படுங்கள்.

4 (நீங்கள்) அவ்வாறு செய்வீர்களாயின் அவன் உங்கள் பாவங்களில் ((முந்தியவற்றை) மன்னிப்பான். மேலும் குறிப்பிட்ட ஒரு தவணை வரையும் உங்களை (உங்கள் மரணத்தை) பிற்படுத்திவைப்பான். நிச்சயமாக அல்லாஹ்வின் (குறிப்பிடப்பட்ட) தவணை வந்து விடுமாயின் அதைப் பிற்படுத்தப்படமாட்டாது. நீங்கள் அறிவுள்ளவர்களாக இருப்பின் (அல்லாஹ்வின் தவணை பிற்படுத்தப்படமாட்டாது என்பதை அறிந்து கொள்வீர்கள்.)"

5 அவர் (நூஹ் அலை) கூறினார் : என் இரட்சகனே! எனது கூட்டத்தினரை இரவு பகலாக (உன்னை விசுவாதிப்பதன் பால்) அழைத்தேன்.

6 எனினும் எனது அழைப்பு (எதன் பால் அவர்களுக்கு அழைப்பு விடுக்கப்பட்டதோ அதை விட்டும் மேலும்) தூரமாவதைத்தான் அவர்களுக்கு அதிகப்படுத்தியது.

7 நீ அவர்களை மன்னிக்கு முகமாக (உன்னை விசுவாசித்து உனக்குக் கட்டுப்பட) அவர்களை நான் அழைத்த போதெல்லாம் அவர்கள் (என்னுடைய அழைப்பைக் கேட்காமல் இருப்பதற்காக) அவர்களுடைய விரல்களை அவர்களுடைய காதுகளில் ஆக்கிக் கொண்டார்கள். மேலும் அவர்கள் (என்னைக் காணாமல் இருப்பதற்காக அவர்களுடைய முகங்களை) அவர்களுடைய ஆடைகளினால் மூடிக் கொண்டார்கள். அவர்களுடைய (நிராகரிப்பிலே) தொடர்ந்திருந்து கடுமையாகப் பெருமை அடித்துக் கொண்டார்கள்.

8 பின்பு நான் அவர்களைப் பகிரங்கமாகவும் அழைத்தேன்.

9 மேலும் பகிரங்கமாகவும், (ஒவ்வொருவரையும் தனிமையில் சந்தித்து) இரகசியமாகவும் அழைத்தேன். (பல வித்தியாசமான வழிமுறைகளைக் கையாண்டு அழைத்தார்கள்.)

10 நான் (அவர்களுக்குச் சொன்னேன்:) நீங்கள் இரட்சகனிடம் பாவ மன்னிப்புக் கோருங்கள். நிச்சயமாக அவன் பாவங்களை மிக மன்னிப்பவனாக இருக்கின்றான்.

11 (நீங்கள் அவ்வாறு பாவமன்னிப்புக் கோருவீர்களாயின்) தொடர்ந்து அதிகம் பொழியும் மழையை உங்களுக்கு அனுப்பிவைப்பான். (மழை, இரணம் போன்றவற்றை நாம் பெருவதற்குரிய காரணிகளில் பாவமன்னிப்புக் கோரல் மிக முக்கியமானது என்பதை இவ்வசனம் எமக்கு உணர்த்துகின்றது.)

12 மேலும் செல்வங்களையும் பிள்ளைகளையும் அருள்வான். உங்களுக்கு தோப்புக்களையும் ஆக்கித் தருவான். ஆறுகளையும் தருவான்.

13 உங்களுக்கு என்ன நிகழ்ந்திருக்கின்றது? அல்லாஹ்வுக்குப் பயப்படாமல் (அவனது) கண்ணியத்தை நீங்கள் உணராமல் இருக்கின்றீர்கள்.

14 அவன் உங்களைப் பல கட்டங்களாகப் படைத்தான். (ஆரம்பத்தில் இந்திரியமாகவும், பின்பு இரத்தக்கட்டியாகவும், சதைப் பிண்டமாகவும் படைத்து உங்களைப் பூரணப்படுத்தினான். பின்பு குழந்தைப் பருவம், சிறுபிராயம், வாலிபப் பருவம், வயோதிபம்

எனப் பல கட்டங்களை உங்களுக்கு ஏற்படுத்தினான். இத்தகைய அல்லாஹ்வை
கண்ணியப்படுத்துவதில் எங்கனம் நீங்கள் கவனக்குறைவு செய்ய முடியும்.)
15 அல்லாஹ் ஏழு வானங்களை எவ்வாறு அடுக்கடுக்காகப் படைத்துள்ளான் என்பதை
நீங்கள் காணவில்லையா?
16 மேலும் அவற்றில் பூமிக்கு ஒளி தரக்கூடியதாக (வானத்தில்) சந்திரனையும்
ஆக்கியுள்ளான். இன்னும் சூரியனை (உலகிற்கு) விளக்காகவும் ஆக்கியுள்ளான்.
17 அல்லாஹ்வே உங்களைப் பூமியிலிருந்து சிறந்த முறையில் உருவாக்கினான். (ஆதம்
(அலை) அவர்களை பூமியின் மேற்பரப்பில் இருந்த மண்ணினால் படைத்தான்.
அவர்களுடைய சந்ததியினரை அதன் மேற்பரப்பில் காணப்படும் தாவரங்கள்,
கால்நடைகள் போன்றவற்றை புசிக்கச் செய்து வளர்ச்சியடையச் செய்தான்.)
18 பின்பு அதனுள் (பூமியினுள்) உங்களை மீட்டுவான். (நீங்கள் மரணித்து பூமியினுள்
அடக்கப்பட்டதன் பின் உங்கள் உடம்பு மண்ணாகி அதனுடன் கலந்துவிடும்.) மேலும்
(மறுமையில் எழுப்புவதன் மூலம் மீண்டும்) உங்களை அதிலிருந்து வெளிப்படுத்துவான்.
19 அல்லாஹ் உங்களுக்கு பூமியை விரிப்பாக ஆக்கினான்.
20 அதில் நீங்கள் பல விசாலாமான பாதைகளில் நடந்து செல்லுமுகமாக (இவ்வாறு
விரிப்பாக ஆக்கினான்)
21 நூஹ் (அலை) அவர்கள் சொன்னார்கள்: “என் இறைவா அவர்கள் எனக்கு மாறுசெய்து,
எவர்களுடைய செல்வங்களும் பிள்ளைகளும் அவர்களுக்கு நஷ்டத்தை மாத்திரம்
ஏற்படுத்துமோ அத்தகையோரைப் பின்பற்றி விட்டார்கள். (சிறியவர்கள் தலைவர்களையும்
பணக்காரர்களையும் பின்பற்றிவிட்டார்கள். அவர்களுடைய செல்வங்களும் பிள்ளைகளும்
உலகில் அவர்களுக்கு வழிகேட்டையும் மறுமையில் தண்டனையையும் தான் அதிகப்படுத்திக்
கொடுப்பார்கள்.)
22 மேலும் எனக்கு எதிராக பெரும் சூழ்ச்சி செய்கிறார்கள்.
23 இன்னும் அவர்கள் (தலைவர்கள் சிறியவர்களுக்குச் சொன்னார்கள்,) “நீங்கள்
உங்களுடைய தெய்வங்களை விட்டுவிடவே வேண்டாம். (அவை அவர்களிடம் காணப்பட்ட
உருவச் சிலைகளாகும். இவற்றைத்தான் பின்பு அறபு நாட்டு மக்களும் வணங்கினார்கள்.)
நீங்கள் வத்து, ஸுவா.:., யகூஸ், யஊக், நஸ்ர் ஆகிய தெய்வங்களை விட்டு விட
வேண்டாம்.” (அவை ஆதம் (அலை) அவர்களுக்கும் நூஹ் அலை அவர்களுக்கும்
இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த சில நல்லடியார்களின் பெயர்களாகும். இவர்கள்
அவர்களுடைய வணக்கஸ்தலங்களில் அவர்களை ஞாபகிக்கு முகமாக அவர்களுக்கு
உருவச்சிலைகளை ஏற்படுத்திக் கொண்டார்கள். அவர்களுடைய அடுத்த சந்ததி வந்த
போது இப்லீஸ் அவர்களைப் பார்த்துச் சொன்னான், “உங்கள் முன்னோர் இவற்றைத் தான்
வணங்கினார்கள். நீங்களும் இவற்றையே வணங்குங்கள்.” எனவே இவர்களும் அவற்றை
வணங்கினார்கள். அன்றிலிருந்து தான் சிலை வணக்கம் ஆரம்பித்தது. பின்பு இச்சிலைகள்
அரேபியத் தீபகற்பத்திற்கும் வந்து அவற்றை அரபுக் கோத்திரங்கள் பலவும் வணங்கின.
24 மேலும் அவர்கள் (தலைவர்கள்) அதிகமானவர்களை வழி கெடுத்துவிட்டார்கள். நீ
அக்கிரமக்காரர்களுக்கு நஷ்டத்தையே அதிகப்படுத்துவாயாக.
25 அவர்கள் செய்த பாவங்களின் காரணமாக அவர்கள் (தூபான் வெள்ளத்தின் மூலம்)
மூழ்கடிக்கப்பட்டார்கள். (மறுமையில்) அவர்கள் நெருப்பில் நுழைவிக்கப்படுவார்கள் .
(அது நரக நெருப்பாகும்.) அல்லாஹ் அன்றி அவர்கள் எந்த உதவியாளர்களையும்
பெற்றுக் கொள்ளவில்லை.
26 நூஹ் (அலை) அவர்கள் சொன்னார்கள்: “எனது இறைவா! பூமியில் காபிர்கள்
எவரையும் விட்டுவிடாதே. (அல்லாஹ் வஹ்யின் மூலம் ஏற்கனவே அவர்களை ஈமான்
கொண்டவர்களைத் தவிர வேறு எவரும் ஈமான் கொள்ளமாட்டார்கள் என அவர்களுக்கு
அறிவித்ததன் பின் நம்பிக்கையிழந்து இவ்வாறு பிரார்த்தித்தார்கள். அல்லாஹ்
அவர்களின் பிரார்த்தனையை ஏற்று அவர்களை அழித்துவிட்டான்.)
27 நிச்சயமாக நீ அவர்களை விட்டு வைத்தால் அவர்கள் உனது அடியார்களை
(சத்தியத்தை விட்டும்) வழி கெடுப்பார்கள். மேலும் உனது (அருள்களுக்கு)மிகவும் நன்றி
மறக்கும் கெட்டவர்களையே பெற்றெடுப்பார்கள்.
28 எனது இறைவா! எனக்கும் எனது இரு பெற்றோருக்கும் எனது வீட்டில் மு.:.மினாக
நுழைந்தவர்களுக்கும் விசுவாசிகளான ஆண்கள் பெண்கள் அனைவருக்கும்
(பாவங்களை மன்னிப்பாயாக! மேலும் அக்கிரமக்காரர்களுக்கு அழிவை அன்றி அதிகப்படுத்தி
விடாதே.” (இறுதி நாள் வரை அக்கிரமம் புரியும் அனைவரும் இதில் அடங்குவர்.)

## அல்-ஜின்

1 (நபியே!) நீர் கூறுவீராக. (நிச்சயமாக (நான் ஓதும் குர்ஆனை) ஜின்களில் ஒரு
கூட்டத்தினர் கேட்டுவிட்டனர் என (ஜிப்ரீல் (அலை) மூலமாக) எனக்கு
அறிவிக்கப்பட்டுள்ளது. (அவர்கள் இக்ர.:. ஸூராவைத்தான் கேட்டார்கள் எனக்
கூறப்பட்டுள்ளது. ஜின்களில் நின்றும் இறைத் தூதர்கள் எவரும் அனுப்பப்படவில்லை.
மாறாக மனிதர்களுக்குத் தூதர்களாக அனுப்பப்பட்டவர்களே அவர்களுக்கும் தூதர்கள்.)
அவர்கள் (தமது கூட்டத்தினிடம் திரும்பிச் சென்ற பொழுது) “நிச்சயமாக நாங்கள்

ترتيبها ٧٢ سُورَةُ الْجِنِّ آياتها ٢٨

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

قُلْ أُوحِيَ إِلَيَّ أَنَّهُ اسْتَمَعَ نَفَرٌ مِّنَ الْجِنِّ فَقَالُوا إِنَّا سَمِعْنَا قُرْآنًا
عَجَبًا ﴿١﴾ يَهْدِي إِلَى الرُّشْدِ فَآمَنَّا بِهِ ۖ وَلَن نُّشْرِكَ بِرَبِّنَا أَحَدًا ﴿٢﴾
وَأَنَّهُ تَعَالَىٰ جَدُّ رَبِّنَا مَا اتَّخَذَ صَاحِبَةً وَلَا وَلَدًا ﴿٣﴾ وَأَنَّهُ كَانَ
يَقُولُ سَفِيهُنَا عَلَى اللَّهِ شَطَطًا ﴿٤﴾ وَأَنَّا ظَنَنَّا أَن لَّن تَقُولَ الْإِنسُ
وَالْجِنُّ عَلَى اللَّهِ كَذِبًا ﴿٥﴾ وَأَنَّهُ كَانَ رِجَالٌ مِّنَ الْإِنسِ يَعُوذُونَ بِرِجَالٍ
مِّنَ الْجِنِّ فَزَادُوهُمْ رَهَقًا ﴿٦﴾ وَأَنَّهُمْ ظَنُّوا كَمَا ظَنَنتُمْ أَن لَّن يَبْعَثَ
اللَّهُ أَحَدًا ﴿٧﴾ وَأَنَّا لَمَسْنَا السَّمَاءَ فَوَجَدْنَاهَا مُلِئَتْ حَرَسًا
شَدِيدًا وَشُهُبًا ﴿٨﴾ وَأَنَّا كُنَّا نَقْعُدُ مِنْهَا مَقَاعِدَ لِلسَّمْعِ ۖ فَمَن
يَسْتَمِعِ الْآنَ يَجِدْ لَهُ شِهَابًا رَّصَدًا ﴿٩﴾ وَأَنَّا لَا نَدْرِي أَشَرٌّ أُرِيدَ
بِمَن فِي الْأَرْضِ أَمْ أَرَادَ بِهِمْ رَبُّهُمْ رَشَدًا ﴿١٠﴾ وَأَنَّا مِنَّا الصَّالِحُونَ
وَمِنَّا دُونَ ذَٰلِكَ ۖ كُنَّا طَرَائِقَ قِدَدًا ﴿١١﴾ وَأَنَّا ظَنَنَّا أَن لَّن نُّعْجِزَ
اللَّهَ فِي الْأَرْضِ وَلَن نُّعْجِزَهُ هَرَبًا ﴿١٢﴾ وَأَنَّا لَمَّا سَمِعْنَا الْهُدَىٰ
آمَنَّا بِهِ ۖ فَمَن يُؤْمِن بِرَبِّهِ فَلَا يَخَافُ بَخْسًا وَلَا رَهَقًا ﴿١٣﴾

ஆச்சரியமான ஒரு குர்ஆனைக் கேட்டோம்'' என்று சொன்னார்கள்.

(2) அது நேர்வழியின் பால் வழிகாட்டுகின்றது. எனவே நாங்கள் அதை விசுவாசம் கொண்டு விட்டோம். மேலும் நாங்கள் எங்கள் இறைவனுக்கு எந்த ஒருவரையும் இணையாக ஆக்கமாட்டோம்.

(3) மேலும் நிச்சயமாக எங்கள் இறைவனின் கண்ணியம் உயர்வானது. அவன் மனைவியையோ, பிள்ளைகளையோ எடுத்துக் கொள்ளவில்லை.

(4) இன்னும் நிச்சயமாக எங்களில் மடையர்கள் அல்லாஹ்வின் மீது தகாத (அநியாயத்திலும் இறை நிரகாரிப்பிலும் மிக மோசமான) வார்த்தைகளை சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

(5) மனிதர்களும், ஜின்களும் (அல்லாஹ்வுக்கு இணையானவனும், மனைவியும், பிள்ளைகளும் இருக்கின்றார்கள் என்று சொன்ன நேரத்தில்) அல்லாஹ்வின் பேரில் பொய்யைச் சொல்லமாட்டார்கள் என்றே நாங்கள் நினைத்தோம். (அதனால் அவர்களை நாம் உண்மைப் படுத்தினோம்.)

(6) மேலும் மனிதர்களில் சிலர் ஜின்களில் சிலரைக் கொண்டு பாதுகாப்புத் தேடக் கூடியவர்களாக இருந்துள்ளனர். (அரபிகளில் ஒருவர் ஏதாவது பள்ளத்தாக்குகளில் தங்க வேண்டி ஏற்பட்டால் அவர் சொல்வார், "இப்பள்ளத்தாக்கின் தலைவரைக் கொண்டு -ஜின்களைச்- சேர்ந்தவர்) அவரின் கூட்டத்தின் மடையர்களை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன்.'' பின்பு அவர் காலையாகும் வரை அந்த ஜின்னுடைய பாதுகாப்பில் இருப்பார் எனக் கூறப்பட்டுள்ளது.) அவர்கள் (ஜின்கள்) இவர்களுக்கு (அவர்களிடம் பாதுகாப்புக் கோரிய மனிதர்களுக்கு) கஷ்டத்தை அதிப்படுத்தினார்கள்.

(7) மேலும் நீங்கள் நினைத்தது போன்று அல்லாஹ் எவரையும் (மறுமையில்) எழுப்பமாட்டான் என்று நினைத்திருந்தார்கள்.

(8) நாம் (வழமையாகச் செய்வது போன்று) வானத்தைத் தொட்டு அதன் செய்திகளைத் தேடிப் பார்த்தோம். (களவில் செய்திகளைக் கேட்காமல்) கடுமையாகத் தடுக்கும் பாதுகாவலர்களாலும் (வானவர்களாலும்) தீப்பந்தங்களாலும் நிறைக்கப்பட்டதாக நாம் அதைக் கண்டு கண்டோம். (இப்பாதுகாப்பு முஹம்மத் (ஸல்) அவர்கள் நபியாக அனுப்பப்பட்டதற்குப் பின் ஏற்படுத்தப்பட்டது.)

(9) (வானவர்களின் உரையாடல்களைக் கேட்டு அவற்றை சாஸ்திரம் கூறுபவர்களிடம் சொல்வதற்காக) வானுலகில் சில இடங்களில் நாம் உட்கார்ந்து வந்தோம். இப்பொழுது யாரும் (அவ்வாறு) கேட்பாராயின் அவன் (தனக்காகக்) காத்திருக்கும், (நட்சத்திரங்களில் இருந்து வெளியாகும்) தீப்பந்தங்களைப் பெற்றுக் கொள்வான்.

(10) (அல்லாஹ் வானத்தை இவ்வளவு கடுமையாகப் பாதுகாத்ததன் மூலம்) பூமியில் இருப்பவர்களுக்குத் தீங்கு நாடப்பட்டுவிட்டதா அல்லது அவர்களுடைய நாயன் அவர்களுக்கு நன்மையை நாடிவிட்டானா என்பதை நாம் அறியமாட்டோம். இப்னு ஸைத் (ரஹ்) குறிப்பிடுகின்றார்கள்: இப்லீஸ் இத்தடையின் மூலம் பூமியில் உள்ளவர்களுக்கு ஒரு தண்டனையை இறக்கப்போகின்றானா? அல்லது அவர்களுக்கு ஒரு தூதரை அனுப்பப் போகின்றானா? என்பதை நாம் அறியமாட்டோம்.

(11) (நாங்கள் குர்ஆனைக் கேட்டபின்) எங்களில் (ஈமான் கொண்ட) நல்லடியார்களும் இருந்தார்கள். இன்னும் (ஈமான் கொள்ளாமல்) அதற்கு மாற்றமானவர்களும் இருந்தார்கள். நாங்கள் வித்தியாசமான பல கூட்டங்களாக இருந்தோம். ஸுத் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள் : அவர்களில் முஸ்லிம்கள், யஹூதிகள், கிறிஸ்தவர்கள், நெருப்பு வணங்கிகள் என பல பிரிவினர் காணப்பட்டனர்.

(12) (அல்லாஹ் எங்களைத் தண்டிக்க நாடினால்) அல்லாஹ்வை எங்களால் இயலாதவனாக ஆக்கி விடமுடியாது. மேலும் நாம் விரண்டோடியும் அவனை இயலாமலாக்க முடியாது என்பதை நாம் அறிந்திருந்தோம். (அவன் எங்களைத்

وَأَنَّا مِنَّا الْمُسْلِمُونَ وَمِنَّا الْقَاسِطُونَ ۖ فَمَنْ أَسْلَمَ فَأُولَٰئِكَ
تَحَرَّوْا رَشَدًا ﴿١٤﴾ وَأَمَّا الْقَاسِطُونَ فَكَانُوا لِجَهَنَّمَ حَطَبًا ﴿١٥﴾
وَأَلَّوِ اسْتَقَامُوا عَلَى الطَّرِيقَةِ لَأَسْقَيْنَاهُمْ مَاءً غَدَقًا ﴿١٦﴾ لِنَفْتِنَهُمْ
فِيهِ ۚ وَمَنْ يُعْرِضْ عَنْ ذِكْرِ رَبِّهِ يَسْلُكْهُ عَذَابًا صَعَدًا ﴿١٧﴾ وَأَنَّ
الْمَسَاجِدَ لِلَّهِ فَلَا تَدْعُوا مَعَ اللَّهِ أَحَدًا ﴿١٨﴾ وَأَنَّهُ لَمَّا قَامَ عَبْدُ اللَّهِ
يَدْعُوهُ كَادُوا يَكُونُونَ عَلَيْهِ لِبَدًا ﴿١٩﴾ قُلْ إِنَّمَا أَدْعُو رَبِّي وَلَا أُشْرِكُ
بِهِ أَحَدًا ﴿٢٠﴾ قُلْ إِنِّي لَا أَمْلِكُ لَكُمْ ضَرًّا وَلَا رَشَدًا ﴿٢١﴾ قُلْ إِنِّي
لَنْ يُجِيرَنِي مِنَ اللَّهِ أَحَدٌ وَلَنْ أَجِدَ مِنْ دُونِهِ مُلْتَحَدًا ﴿٢٢﴾ إِلَّا بَلَاغًا
مِنَ اللَّهِ وَرِسَالَاتِهِ ۚ وَمَنْ يَعْصِ اللَّهَ وَرَسُولَهُ فَإِنَّ لَهُ نَارَ جَهَنَّمَ
خَالِدِينَ فِيهَا أَبَدًا ﴿٢٣﴾ حَتَّىٰ إِذَا رَأَوْا مَا يُوعَدُونَ فَسَيَعْلَمُونَ
مَنْ أَضْعَفُ نَاصِرًا وَأَقَلُّ عَدَدًا ﴿٢٤﴾ قُلْ إِنْ أَدْرِي أَقَرِيبٌ
مَا تُوعَدُونَ أَمْ يَجْعَلُ لَهُ رَبِّي أَمَدًا ﴿٢٥﴾ عَالِمُ الْغَيْبِ فَلَا
يُظْهِرُ عَلَىٰ غَيْبِهِ أَحَدًا ﴿٢٦﴾ إِلَّا مَنِ ارْتَضَىٰ مِنْ رَسُولٍ فَإِنَّهُ
يَسْلُكُ مِنْ بَيْنِ يَدَيْهِ وَمِنْ خَلْفِهِ رَصَدًا ﴿٢٧﴾ لِيَعْلَمَ أَنْ قَدْ أَبْلَغُوا
رِسَالَاتِ رَبِّهِمْ وَأَحَاطَ بِمَا لَدَيْهِمْ وَأَحْصَىٰ كُلَّ شَيْءٍ عَدَدًا ﴿٢٨﴾

தண்டித்தால் எங்களால் தப்பிக் கொள்ளமுடியாது என்பதை அறிந்திருந்தோம்.)

13 மேலும் நிச்சயமாக நாம் நேர்வழியை (குர்ஆனைக்) கேட்டபொழுது அதை நாங்கள் விசுவாசம் கொண்டோம். யார் தனது இரட்சகனை விசுவாசிக்கின்றாரோ அவர்கள் (தனது நற்கிரிகைகளில் அல்லது செல்வங்களில்) குறைவையோ அநீதத்தையோ பயப்படமாட்டார்.

14 இன்னும் நிச்சயமாக எங்களில் (விசுவாசம் கொண்ட) முஸ்லிம்களும் இருக்கின்றார்கள். (நேரான பாதையை விட்டும் விலகிச் சென்ற) அக்கிரமக்காரர்களும் இருக்கின்றார்கள். இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர்கள் நேர்வழியைத் தேடிப் பெற்றுக் கொண்டார்கள்.

15 மேலும் அக்கிரமக்காரர்கள் நரகத்தின் எரிபொருள்களாக மாறிவிட்டார்கள். காபிர்களான மனிதர்கள் நரகில் போடப்பட்டு எரிக்கப்படுவது போன்று இவர்களும் எரிக்கப்படுவர்கள்.)

16 இன்னும் அவர்கள் (ஜின்களோ மனிதர்களோ நேர்வழியில் நிலையாக இருப்பார்களானால் அவர்களுக்கு நாம் அதிகமான தண்ணீரை வழங்குவோம்.

17 அதற்கு அவர்கள் (எவ்வாறு நன்றி செலுத்துகின்றார்கள் என்பதை) நாம் சோதித்து (அறிந்து)கொள்வதற்காக (நாம் அதை வழங்குவோம்.) யார் குர்ஆனை (அல்லது உபதேசத்தை) புறக்கனிக்கின்றாரோ அவரை கஷ்டமான வேதனைக்குள் அவன் நுளையவைப்பான்.

18 மேலும் நிச்சயமாக பள்ளிவாயில்கள் அல்லாஹ்வுக்குரியன. (விக்கிரகங்களுக்காகவும், வேறு எவருக்காகவும் கட்டப்பட்டவை அல்ல.) எனவே நீங்கள் அல்லாஹ்வுடன் வேறு யாரையும் அழைக்க வேண்டாம். (அல்லாஹ் மாத்திரம் சக்தி பெற்ற விடயங்களில் நீங்கள் வேறு யாரிடமும் உதவி தேட வேண்டாம். ஏனெனில் பிரார்த்தனை என்பதும் ஒரு வணக்கமாகும்.)

19 இன்னும் நிச்சயமாக அல்லாஹ்வின் அடியார் (நபி (ஸல்) அவர்கள் 'பத்ன் அந்நஹ்லா' என்ற இடத்தில் அல்லாஹ்வை வணங்கி) அவனிடம் பிரார்த்தனை புரிய ஆரம்பித்த போது அவர்கள் (ஜின்கள் குர்ஆனைக் கேட்பதற்காக) ஒருவருடன் ஒருவர் சேர்ந்து நெருங்கி நிற்க முற்பட்டார்கள்.

20 (நபியே!) நீர் கூறுவீராக, "நிச்சயமாக நான் அழைப்பது எனது இரட்சகனை மாத்திரம் தான். அவனுக்கு எந்த ஒன்றையும் இணையாக ஆக்கமாட்டேன்.

21 (நபியே!) நீர் கூறுவீராக: "நிச்சயமாக நான் உங்களுக்கு எந்த ஒரு கெடுதியையும் அல்லது நலவையும் உடந்தையாக்கிக் கொள்ள மாட்டேன்." (இவ்வுலகிலோ, மறுமையிலோ உங்களுக்கு ஏற்படக் கூடிய ஒரு கெடுதியையும் என்னால் தடுக்கவும் முடியாது. உங்களுக்கு ஒரு நலவைத் தரவும் முடியாது.)

22 (நபியே! நீர் கூறுவீராக,) அல்லாஹ்வை (அவன் தண்டனையை) விட்டும் என்னை யாரும் பாதுகாத்திட முடியாது. அவன் அன்றி ஒரு பாதுகாப்பாலனை நான் பெற்றுக் கொள்ளமாட்டேன்.

23 அல்லாஹ்விடமிருந்தும் அவனுடைய தூதுவத்திலிருந்தும் எத்திவைப்பதைத் தவிர (என்னால் எதுவும் செய்ய முடியாது. பிறருக்கு நான் ஏவக்கூடியவற்றை நான் எடுத்து நடக்கின்றேன். அவற்றைச் செய்தால் நான் தப்பிக் கொள்வேன். இல்லையெனில் நானும் அழிந்து விடுவேன்.) யார் அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் (விசுவாசம் கொள்ள மறுத்து) மாறு செய்கின்றார்களோ அவர்களுக்கு நீடூழி காலம் தங்கியிருக்கும் நரகம் இருக்கின்றது.

24 அவர்களுக்கு வாக்களிக்கப்படும் (மறுமையை) அவர்கள் கண்டதும் உதவியாளர்களால் பலவீனமானவர்களும் எண்ணிக்கையால் குறைவானவர்களும் யார் என்பதை அவர்கள் (நிராகரிப்பாளர்கள்) அறிந்து கொள்வார்கள். (விசுவாசிகளா அல்லது காபிர்களா என்பதை அறிந்து கொள்வார்கள்.)

سُورَةُ المُزَّمِّل — ترتيبها ٧٣ — آياتها ٢٠

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

يَٰٓأَيُّهَا ٱلْمُزَّمِّلُ (١) قُمِ ٱلَّيْلَ إِلَّا قَلِيلًا (٢) نِّصْفَهُۥٓ أَوِ ٱنقُصْ مِنْهُ قَلِيلًا
(٣) أَوْ زِدْ عَلَيْهِ وَرَتِّلِ ٱلْقُرْءَانَ تَرْتِيلًا (٤) إِنَّا سَنُلْقِى عَلَيْكَ قَوْلًا
ثَقِيلًا (٥) إِنَّ نَاشِئَةَ ٱلَّيْلِ هِىَ أَشَدُّ وَطْـًٔا وَأَقْوَمُ قِيلًا (٦) إِنَّ لَكَ فِى
ٱلنَّهَارِ سَبْحًا طَوِيلًا (٧) وَٱذْكُرِ ٱسْمَ رَبِّكَ وَتَبَتَّلْ إِلَيْهِ تَبْتِيلًا (٨)
رَّبُّ ٱلْمَشْرِقِ وَٱلْمَغْرِبِ لَآ إِلَٰهَ إِلَّا هُوَ فَٱتَّخِذْهُ وَكِيلًا (٩) وَٱصْبِرْ
عَلَىٰ مَا يَقُولُونَ وَٱهْجُرْهُمْ هَجْرًا جَمِيلًا (١٠) وَذَرْنِى وَٱلْمُكَذِّبِينَ
أُو۟لِى ٱلنَّعْمَةِ وَمَهِّلْهُمْ قَلِيلًا (١١) إِنَّ لَدَيْنَآ أَنكَالًا وَجَحِيمًا (١٢)
وَطَعَامًا ذَا غُصَّةٍ وَعَذَابًا أَلِيمًا (١٣) يَوْمَ تَرْجُفُ ٱلْأَرْضُ وَٱلْجِبَالُ
وَكَانَتِ ٱلْجِبَالُ كَثِيبًا مَّهِيلًا (١٤) إِنَّآ أَرْسَلْنَآ إِلَيْكُمْ رَسُولًا شَٰهِدًا
عَلَيْكُمْ كَمَآ أَرْسَلْنَآ إِلَىٰ فِرْعَوْنَ رَسُولًا (١٥) فَعَصَىٰ فِرْعَوْنُ ٱلرَّسُولَ
فَأَخَذْنَٰهُ أَخْذًا وَبِيلًا (١٦) فَكَيْفَ تَتَّقُونَ إِن كَفَرْتُمْ يَوْمًا يَجْعَلُ
ٱلْوِلْدَٰنَ شِيبًا (١٧) ٱلسَّمَآءُ مُنفَطِرٌۢ بِهِۦ ۚ كَانَ وَعْدُهُۥ مَفْعُولًا (١٨)
إِنَّ هَٰذِهِۦ تَذْكِرَةٌ ۖ فَمَن شَآءَ ٱتَّخَذَ إِلَىٰ رَبِّهِۦ سَبِيلًا (١٩)

25 (நபியே) நீர் கூறுவீராக. உங்களுக்கு வாக்களிக்கப்படும் (மறுமை) சமீபமானதா? அல்லது எனது இரட்சகன் அதற்கு ஒரு தவணையை ஏற்படுத்தி (தாமதப் படுத்தி) விடுவானா? என்பதை நான் அறியமாட்டேன். (மறுமை எப்போது என்பதை அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறியமாட்டார்கள்.)

26 அவன் மறைவானவற்றை அறிந்தவன். தன்னால் மறைக்கப்பட்டவற்றை அவன் யாருக்கும் வெளியாக்கிவிடமாட்டான்.

27 தான் பொருந்திக் கொண்ட ஓர் இறைத்தூதரைத் தவிர (மறைவான அறிவை யாருக்கும் வெளியாக்கமாட்டான். இறைத் தூதர்களில் தான் நாடியவர்களுக்கு மறைவானவற்றில் தான் நாடியளவு வஹ்யின் மூலம் அவன் வெளிப்படுத்திக் கொடுப்பான். அவ்வாறு சில மறைவான விடயங்களை அவர்கள் வஹ்யின் மூலம் அறிந்து கூறுவதை அவர்களுடைய மு.்.ஜிஸாவாகவும் நபித்துவத்தின் அடையாளமாகவும் ஆக்கியிருக்கின்றான். சாஸ்த்திரக்காரர்களுக்கு இவற்றை அறிய முடியாது. அவர்கள் உத்தேசத்தின் அடிப்படையில் அல்லாஹ்வின் மீது பொய்யுரைக்கின்றார்கள். அவர்கள் அவ்வறியை மறுக்கக்கூடியவர்கள்.) நிச்சயமாக அல்லாஹ் அத்தூதருக்கு முன்னாலும், பின்னாலும் (அவரைப்) பாதுகாக்கக்கூடியவர்களை (வானவர்களை) அவர்களுடன் நடக்கச் செய்கின்றான். (அவரிடம் அல்லாஹ் வெளியாக்கிக் கொடுத்த சில மறைவான அறிவுகள் இருக்கின்றன என்பதை அறிந்த ஷைத்தான் அவர்களிடமிருந்து அதைக் கேட்க முயற்சிக்காமல் இருக்கு முகமாக இவ்வாறு ஏற்படுத்தியுள்ளான்.

28 அவர்களின் இரட்சகனின் தூதுகளை அவர்கள் எத்திவைத்து விட்டார்கள் என்பதை அவன் அறியுமுகமாக (அவர்களுக்குப் பாதுகாப்பை ஏற்படுத்தினான்.) மேலும் அவர்களிடம் உள்ள எல்லாவற்றையும் அவன் சூழ்ந்து அறிந்துள்ளான். இன்னும் ஒவ்வொன்றையும் எண்ணிக்கையால் மட்டிட்டு அறிந்துள்ளான்.

## அல்-முஸ்ஸம்மில்

1 போர்த்திக் கொண்டிருப்பவரே! (நபியவர்களுக்கு வஹி ஆரம்பித்த போது அவர்கள் பயந்து விட்டார்கள். அதனால் அவர்கள் தனது ஆடையால் போர்த்திக் கொண்டிருந்தார்கள். இரண்டாவது விடுத்தமும் வானவரின் சப்தத்தைக் கேட்ட போது தனது மனைவியிடம் சென்று தன்னைப் போர்த்திவிடும் படி கூறினார்கள். அச்சந்தர்ப்பத்தில் அல்லாஹ் இவ்வாறு விளித்தான். வஹி தொடர ஆரம்பித்ததும் அவர்களுக்குப் பழக்கம் ஏற்பட்டு பயம் நீங்கி விட்டது.

2 இரவில் சில பாகங்களைத் தவிர இரவின் (ஏனைய பாகங்களில்) நீங்கள் நின்று வணங்குங்கள்.

3 நீங்கள் அதில் (இரவில்) அரைப் பகுதி (நின்று வணங்குங்கள்.) அல்லது அதைவிட சற்று குறைத்துக் கொள்ளுங்கள்.

4 அல்லது அதைவிட (சற்று) கூட்டிக் கொள்ளுங்கள். (அரைப் பகுதி அல்லது மூன்றில் ஒரு பகுதி அல்லது மூன்றில் இரண்டு பகுதியோ தொழுது கொள்ளுங்கள் என்று இறைவன் சொல்வதைப் போல் இருக்கின்றது. ஸ.்.த் பின் ஹிஷாம் என்பவர் குறிப்பிடுகின்றார்: நான் ஆயிஷா (ரழி) அவர்களிடம் நபியவர்களின் இரவு வணக்கத்தைப் பற்றி எனக்கு அறிவித்துத் தரும்படி சொன்னேன். அதற்கு அவர்கள் "நீர் ஸூரதுல் முஸ்ஸம்மிலை ஓதவில்லையா எனக் கேட்டார்கள். நான் "ஆம் ஓதியிருக்கின்றேன்" எனக் கூறினேன். பின்பு அவர்கள் கூறினார்கள்: இந்த அத்தியாயத்தின் ஆரம்பப் பகுதியில் இரவு வணக்கத்தை அல்லாஹ் கட்டாயப்படுத்தினான். நபியவர்களும் தோழர்களும் ஒரு வருட காலம் அவர்களது காற்பாதங்கள் வீங்கும் வரை நின்று வணங்கினார்கள். இவ்வத்தியாயத்தின் கடைசிப் பகுதியை

۞ إِنَّ رَبَّكَ يَعْلَمُ أَنَّكَ تَقُومُ أَدْنَىٰ مِن ثُلُثَيِ ٱلَّيْلِ وَنِصْفَهُۥ وَثُلُثَهُۥ وَطَآئِفَةٌ
مِّنَ ٱلَّذِينَ مَعَكَ ۚ وَٱللَّهُ يُقَدِّرُ ٱلَّيْلَ وَٱلنَّهَارَ ۚ عَلِمَ أَن لَّن تُحْصُوهُ فَتَابَ
عَلَيْكُمْ ۖ فَٱقْرَءُوا۟ مَا تَيَسَّرَ مِنَ ٱلْقُرْءَانِ ۚ عَلِمَ أَن سَيَكُونُ مِنكُم مَّرْضَىٰ
وَءَاخَرُونَ يَضْرِبُونَ فِى ٱلْأَرْضِ يَبْتَغُونَ مِن فَضْلِ ٱللَّهِ ۙ وَءَاخَرُونَ
يُقَـٰتِلُونَ فِى سَبِيلِ ٱللَّهِ ۖ فَٱقْرَءُوا۟ مَا تَيَسَّرَ مِنْهُ ۚ وَأَقِيمُوا۟ ٱلصَّلَوٰةَ وَءَاتُوا۟
ٱلزَّكَوٰةَ وَأَقْرِضُوا۟ ٱللَّهَ قَرْضًا حَسَنًا ۚ وَمَا تُقَدِّمُوا۟ لِأَنفُسِكُم مِّنْ خَيْرٍ تَجِدُوهُ
عِندَ ٱللَّهِ هُوَ خَيْرًا وَأَعْظَمَ أَجْرًا ۚ وَٱسْتَغْفِرُوا۟ ٱللَّهَ ۖ إِنَّ ٱللَّهَ غَفُورٌ رَّحِيمٌۢ ٢٠

## سُورَةُ المُدَّثِّر

ترتيبها ٧٤ — آياتها ٥٦

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَـٰنِ ٱلرَّحِيمِ

يَـٰٓأَيُّهَا ٱلْمُدَّثِّرُ ١ قُمْ فَأَنذِرْ ٢ وَرَبَّكَ فَكَبِّرْ ٣ وَثِيَابَكَ فَطَهِّرْ ٤
وَٱلرُّجْزَ فَٱهْجُرْ ٥ وَلَا تَمْنُن تَسْتَكْثِرُ ٦ وَلِرَبِّكَ فَٱصْبِرْ ٧
فَإِذَا نُقِرَ فِى ٱلنَّاقُورِ ٨ فَذَٰلِكَ يَوْمَئِذٍ يَوْمٌ عَسِيرٌ ٩ عَلَى ٱلْكَـٰفِرِينَ
غَيْرُ يَسِيرٍ ١٠ ذَرْنِى وَمَنْ خَلَقْتُ وَحِيدًا ١١ وَجَعَلْتُ لَهُۥ مَالًا
مَّمْدُودًا ١٢ وَبَنِينَ شُهُودًا ١٣ وَمَهَّدتُّ لَهُۥ تَمْهِيدًا ١٤ ثُمَّ يَطْمَعُ
أَنْ أَزِيدَ ١٥ كَلَّآ ۖ إِنَّهُۥ كَانَ لِـَٔايَـٰتِنَا عَنِيدًا ١٦ سَأُرْهِقُهُۥ صَعُودًا ١٧

அல்லாஹ் ஒரு வருடம் வானத்தில் தடுத்து வைத்திருந்தான். ஒரு வருடத்தின் பின் இரவு நேரத் தொழுகையில் சலுகை வழங்கும் இறுதி வசனங்களை இறக்கி வைத்தான். இரவுத் தொழுகை பர்ளாக இருந்த பின் ஸுன்னத்தாக மாறியது.) குர்ஆனை நீர் தாமதமாக (வேகமின்றி) (அதன் சட்டங்களைப் பேணி) ஓதுவீராக.

5 நிச்சயமாக நாம் உமக்கு பாரமான வார்த்தைகளை (குர்ஆனை) இறக்கி வைப்போம். (அதில் விதியாக்கப்படும் கடமைகள், ஹராம், ஹலால்கள் வரம்புகள் என்பன பாரமானவை. அல்லாஹ்வால் அனுகூலம் புரியப்பட்ட ஒருவரே அவற்றைச் சுமந்து கொள்வார்.)

6 தூக்கத்தின் பின் எழுந்து தொழும் இரவுத் தொழுகை (நாவிற்கும், உள்ளத்திற்கும்) நேர்பாட்டை ஏற்படுத்தும் விடயத்தில் உறுதியானது. மேலும் வார்த்தையால் நேரியதுமாயிருக்கும். (இரவு நேரங்களில் சப்தங்கள் அமைதியாக இருப்பதனால் உள்ளமும் நாவும் ஒன்றுபட்டு ஓத முடியும்.)

7 நிச்சயமாக (நபியே) உங்களுக்கு பகல் நேரத்தில் நீண்ட வேலைகள் இருக்கின்றன. (எனவே இரவில் நீங்கள் தொழுங்கள்.)

8 நீங்கள் உங்கள் நாயனின் பெயரை ஞாபகிப்பீராக. மேலும் (அவனை வணங்குவதன் மூலமும் அவனிடம் இருக்கும் அருள்களைத் தேடுவதன் மூலமும்) அவன் பக்கமே ஒதுங்குவீராக.

9 (அவன்) கிழக்கினதும், மேற்கினதும் இரட்சகன். நீங்கள் அவனையே (உங்கள் விடயங்களில்) பொறுப்புச் சாட்டப்படக் கூடியவனாக ஆக்கிக் கொள்ளுங்கள்.

10 அவர்கள் கூறுபவற்றிற்கு நீர் பொறுமை செய்வீராக. அவர்களை நீர் அழகிய முறையில் வெறுப்பீராக. (அவர்களுக்கு நீங்கள் பிரதி செய்ய முற்பட வேண்டாம்.)

11 நீங்கள் என்னையும், வசதி வாய்ப்புக்களுடன் பொய்யாக்கிக் கொண்டிருப்பவர்களையும் விட்டுவிடுங்கள். (அவர்களின் விடயத்தை நான் பொறுப்பேற்கிறேன். உங்கள் கவனத்தை அவர்களின் பால் திருப்பிக் கொண்டிருக்க வேண்டாம்.) அவர்களுக்கு சிறிது காலம் (அவர்களுடைய தவணை முடிவடையும் வரை) அவகாசம் கொடுங்கள்.

12 நிச்சயமாக எங்களிடத்தில் விலங்குகளும், (எரிந்து கொண்டிருக்கும்) நரகமும் இருக்கின்றன.

13 மேலும் விக்கிக் கொள்ளும் உணவும் இருக்கின்றது. (தொண்டையில் சிக்கி விழுங்கவும் துப்பவும் முடியாமல் விக்கிக் கொள்ளும் உணவு இருக்கின்றது.) மேலும் நோவினையுள்ள வேதனையும் இருக்கின்றது.

14 பூமியும், மலைகளும் கடுமையாக உசும்பி, மலைகள் சரிந்து மணல் குவியல்களாக மாறிவிடும் நாளில் (நோவினை தரும் வேதனை உண்டு.)

15 நிச்சயமாக நாம் பிர்அவ்னுக்கு ஒரு தூதரை அனுப்பியது போல் உங்களுக்கும் உங்களுடைய செயல்களுக்கு (உங்களுக்கு) விரோதமாக சாட்சி சொல்லும் ஒரு தூதரை நாம் அனுப்பி வைத்தோம். (நீங்கள் அவர்களுக்கு மாறு செய்துவிட்டீர்கள்.)

16 பிர்அவ்ன் அத்தூதருக்கு மாறு செய்தான். (அவரை பொய்யாக்கி விசுவாசம் கொள்ள மறுத்தான்.) நாங்கள் அவனை (மூழ்கடிப்பதன் மூலம்) கடுமையாகவே பிடித்தோம்.

17 நீங்கள் (தொடர்ந்து) இறை நிராகரிப்பில் இருப்பீர்களாயின் சிறுவர்களைக்கூட நரைக்கச் செய்துவிடும் ஒரு நாளை (அதன் தண்டனையை) விட்டும் நீங்கள் உங்களை எவ்வாறு காப்பாற்றிக் கொள்வீர்கள். (இது அந்நாளின் பயங்கரம் எவ்வளவு கடுமையானது என்பதை கோடிட்டுக் காட்டுகின்றது.)

18 (மலக்குகள் இறங்குவதற்காக) வானம் அதில் (அந்நாளில்) பிளந்துவிடும். அல்லாஹ்வின் வாக்கு நடந்தேறக் கூடியதாகும்.

19 நிச்சயமாக இவை (இவ்வசனங்கள் மு.மின்களுக்கு) உபதேசமாகும். நாடியவர்கள் (அல்லாஹ்வின் வழிப்பாடுகள் மூலம்) அவனின் நாயனின் பால் ஒரு பாதையை

அமைத்துக் கொள்வார்கள். (சுவனத்தில் அவனது பொருத்தத்தின் பால் கொண்டு சேர்க்கும் ஒரு பாதையை எடுத்துக் கொள்வர்.

20 நிச்சயமாக உமது இரட்சகன் நீங்கள் (அவன் ஏவியவாறு சில சந்தர்ப்பங்களில்) இரவில் மூன்றில் இரண்டு பகுதியை விட சற்றுக் குறைவாகவும், (இன்னும் சிலவற்றில்) அரைவாசிப் பகுதியும், (வேறு சில சந்தர்ப்பங்களில்) மூன்றில் ஒரு பகுதியும் இரவில் நின்று வணங்குகிறீர்கள் என்பதை அறிவான். மேலும் உம்மிடம் இருக்கும் (உமது தோழர்களில்) ஒரு பிரிவினரும் (இவ்வாறு நின்று வணங்குகிறார்கள் என்பதை அறிவான். இரவையும் பகலையும் அவனே ஏற்படுத்துகின்றான். (எனவே நீங்கள் நின்று வணங்கும் பிரமாணத்தை அவன் அறிவான்.) அதை (நின்று வணங்குவதை) உங்களால் முழுமையாகச் செய்ய முடியாது என்பதை அவன் அறிந்து அவன் உங்களை மன்னித்து விட்டான். (மேலும் இரவில் நின்று வணங்குவதை விடுவதற்கும் சலுகை தந்து விட்டான்.) எனவே குர்ஆனில் எது இலகுவாக இருக்கின்றதோ அதை ஓதுங்கள். (இவ்வசனத்தின் மூலம் கட்டாயமாக இரவில் நின்று வணங்க வேண்டும் என்ற சட்டம் மாற்றப்பட்டுவிட்டது.) உங்களில் நோயாளிகள் இருப்பார்கள் என்பதை அவன் அறிவான். (அவர்கள் இரவில் நின்று வணங்க சக்தி பெறமாட்டார்கள்.) மேலும் அல்லாஹ்வின் அருள்களைத் தேடி பயணம் செய்யும் வேறு சிலரும் இருப்பார்கள் (என்பதையும் அவன் அறிந்து கொண்டான். அவர்கள் தம் வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளுமுகமாக வியாபாரம் செய்து இலாபம் ஈட்டுவதற்காகவும், வேறு தொழில்களுக்காகவும் பயணம் செய்வார்கள். அவர்களும் சக்திபெற மாட்டார்கள்.) மேலும் அல்லாஹ்வின் பாதையில் போர் புரியும் வேறு சிலரும் உங்களில் இருக்கின்றார்கள் (என்பதையும் அறிவான்.அவர்களும் சக்தி பெறமாட்டார்கள்.அல்லாஹ் இங்கு இரவு வணக்கம் சிரமமாவதற்குரிய மூன்று காரணிகளைக் குறிப்பிட்டு பொதுவாக எல்லோருக்கும் சலுகை வழங்கியுள்ளான்.) எனவே நீங்கள் அதில் இலகுவான அளவு ஓதுங்கள். மேலும் நீங்கள் (கடமையான) தொழுகையை நிறைவேற்றுங்கள். இன்னும்உங்கள் (சொத்துக்களில் கடமையாகும்) ஸக்காத்தையும் நிறைவேற்றுங்கள். (அவன் விரும்பும் நல்வழிகளில் செலவு செய்து) அல்லாஹ்வுக்கு அழகிய கடன் கொடுங்கள். நன்மைகளிலிருந்து உங்களுக்காக எதையாவது முற்படுத்துவீர்களாயின் அல்லாஹ்விடத்தில் சிறந்ததாகவும், மகத்தான கூலியுடையதாகவும் அவற்றைக் கண்டு கொள்வீர்கள். (நீங்கள் மரணம் வரை பிற்படுத்துவதை விடவும் ஏற்கனவே கொடுத்து விடுவது சிறந்தது.) நீங்கள் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருங்கள். நிச்சயமாக அல்லாஹ் மிகுந்து மன்னிப்பவன். மிகவும் கருணை காட்டுபவன்.

## அல் முத்தஸ்ஸிர்

நபியவர்களுக்கு ஆரம்பமாக வஹி இறங்கியதன் பின் சில நாட்கள் வஹி தாமதித்தது. மீண்டும் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்தார்கள். நபியவர்கள் அவர்களை வானத்துக்கும், பூமிக்கும் இடையில் ஓர் ஆசனத்தில் அமர்ந்திருப்பதைக் கண்டு மயங்கி வீழ்ந்தார்கள். பின் தெளிவடைந்து வீட்டுக்குச் சென்று தண்ணீர் தருமாறு கேட்டு அதை தனது மேனியில் தெளித்துக் கொண்டார்கள். பின் கதீஜா (ரழி) அவர்களைப் பார்த்து என்னைப் போர்த்தி விடுங்கள் என்று கூறினார்கள். அவ்வமயம் இவ்வத்தியாயம் இறங்கியது.

1 போர்த்திக் கொண்டிருப்பவரே!

2 நீங்கள் எழுந்து சென்று (மக்கா வாசிகளுக்கு) எச்சரிக்கை செய்யுங்கள். (அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளவில்லையாயின் அவர்களுக்குத் தண்டனை உண்டு என்று சொல்லுங்கள்.

3 உம்(மைப் படைத்துப் பரிபாலிக்கும்) இரட்சகனைப் பெருமைப்படுத்துவீராக.

4 உங்கள் ஆடைகளை (அசுத்தங்களை விட்டும்) தூய்மையாக்கிக் கொள்ளுங்கள். (கதாதா (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள், “உங்கள் உள்ளத்தை பாவங்களை விட்டும் தூய்மையாக்கிக் கொள்ளுங்கள்.)

5 மேலும் சிலைகளை நீங்கள் வெறுத்து (ஒதுக்கி)விடுங்கள். (அவற்றை நீங்கள் வணங்க வேண்டாம். அது அல்லாஹ்வின் வேதனைக்குரிய காரணமாகும்.)

6 (நுபுவ்வத்தின் சுமைகளை) நீங்கள் அதிகமாகக் கருதி (அதை உமது இறைவனிடம்) சொல்லிக் காட்டிட வேண்டாம். (அல்லது இவ்வசனத்தின் கருத்து நீங்கள் அதிகம் பெறும் நோக்கில் உபகாரம் செய்ய வேண்டாம்.)

7 (உங்களுக்கு ஒரு பெறும் பொறுப்பு கொடுக்கப்பட்டுள்ளது. மக்கள் உம்மை எதிர்ப்பார்கள்.) எனவே உமது இரட்சகனுக்காகப் பொறுமை செய்வீராக.

8 (மறுமை உண்டாவதற்காக)ஊது குழலில் ஊதப்பட்டால்,

9 அந்த நாள், அது கஷ்டமான ஒரு நாளாகும்.

10 இறை நிராகிப்பாளர்களுக்கு அது இலகுவானதாக இருக்க மாட்டாது.

11 (நபியே) நீர் என்னையும் (கர்ப்பத்தில் செல்வமோ பிள்ளைகளோ இல்லாமல்) தனிமையாக நான் அவனைப் படைத்தேனே அவனையும் விட்டுவிடுங்கள். (அவனைத் தண்டிப்பதை என் பொறுப்பில் விட்டுவிடுங்கள. இங்கே குறிப்பிடப்படுபவன் அல் வலீத் பின் முகீரா என்பதாக விரிவுரையாளர்கள் குறிப்பிடுகின்றார்கள்.)

12 மேலும் அவனுக்கு நான் அதிகமான செல்வங்களையும் ஆக்கிக் கொடுத்தேன்.

13 (மக்காவில்) அவன் சமூகத்திலே இருக்கக்கூடிய பிள்ளைகளையும் அவனுக்கு (நாம்

إِنَّهُۥ فَكَّرَ وَقَدَّرَ ﴿١٨﴾ فَقُتِلَ كَيْفَ قَدَّرَ ﴿١٩﴾ ثُمَّ قُتِلَ كَيْفَ قَدَّرَ ﴿٢٠﴾ ثُمَّ نَظَرَ
﴿٢١﴾ ثُمَّ عَبَسَ وَبَسَرَ ﴿٢٢﴾ ثُمَّ أَدْبَرَ وَٱسْتَكْبَرَ ﴿٢٣﴾ فَقَالَ إِنْ هَٰذَآ إِلَّا سِحْرٌ
يُؤْثَرُ ﴿٢٤﴾ إِنْ هَٰذَآ إِلَّا قَوْلُ ٱلْبَشَرِ ﴿٢٥﴾ سَأُصْلِيهِ سَقَرَ ﴿٢٦﴾ وَمَآ أَدْرَىٰكَ
مَا سَقَرُ ﴿٢٧﴾ لَا تُبْقِى وَلَا تَذَرُ ﴿٢٨﴾ لَوَّاحَةٌ لِّلْبَشَرِ ﴿٢٩﴾ عَلَيْهَا تِسْعَةَ عَشَرَ
﴿٣٠﴾ وَمَا جَعَلْنَآ أَصْحَٰبَ ٱلنَّارِ إِلَّا مَلَٰٓئِكَةً ۙ وَمَا جَعَلْنَا عِدَّتَهُمْ إِلَّا فِتْنَةً
لِّلَّذِينَ كَفَرُوا۟ لِيَسْتَيْقِنَ ٱلَّذِينَ أُوتُوا۟ ٱلْكِتَٰبَ وَيَزْدَادَ ٱلَّذِينَ ءَامَنُوٓا۟ إِيمَٰنًا ۙ
وَلَا يَرْتَابَ ٱلَّذِينَ أُوتُوا۟ ٱلْكِتَٰبَ وَٱلْمُؤْمِنُونَ ۙ وَلِيَقُولَ ٱلَّذِينَ فِى قُلُوبِهِم مَّرَضٌ
وَٱلْكَٰفِرُونَ مَاذَآ أَرَادَ ٱللَّهُ بِهَٰذَا مَثَلًا ۚ كَذَٰلِكَ يُضِلُّ ٱللَّهُ مَن يَشَآءُ وَيَهْدِى
مَن يَشَآءُ ۚ وَمَا يَعْلَمُ جُنُودَ رَبِّكَ إِلَّا هُوَ ۚ وَمَا هِىَ إِلَّا ذِكْرَىٰ لِلْبَشَرِ ﴿٣١﴾ كَلَّا
وَٱلْقَمَرِ ﴿٣٢﴾ وَٱلَّيْلِ إِذْ أَدْبَرَ ﴿٣٣﴾ وَٱلصُّبْحِ إِذَآ أَسْفَرَ ﴿٣٤﴾ إِنَّهَا لَإِحْدَى
ٱلْكُبَرِ ﴿٣٥﴾ نَذِيرًا لِّلْبَشَرِ ﴿٣٦﴾ لِمَن شَآءَ مِنكُمْ أَن يَتَقَدَّمَ أَوْ يَتَأَخَّرَ ﴿٣٧﴾ كُلُّ
نَفْسٍۭ بِمَا كَسَبَتْ رَهِينَةٌ ﴿٣٨﴾ إِلَّآ أَصْحَٰبَ ٱلْيَمِينِ ﴿٣٩﴾ فِى جَنَّٰتٍ يَتَسَآءَلُونَ
﴿٤٠﴾ عَنِ ٱلْمُجْرِمِينَ ﴿٤١﴾ مَا سَلَكَكُمْ فِى سَقَرَ ﴿٤٢﴾ قَالُوا۟ لَمْ نَكُ مِنَ
ٱلْمُصَلِّينَ ﴿٤٣﴾ وَلَمْ نَكُ نُطْعِمُ ٱلْمِسْكِينَ ﴿٤٤﴾ وَكُنَّا نَخُوضُ مَعَ
ٱلْخَآئِضِينَ ﴿٤٥﴾ وَكُنَّا نُكَذِّبُ بِيَوْمِ ٱلدِّينِ ﴿٤٦﴾ حَتَّىٰٓ أَتَىٰنَا ٱلْيَقِينُ ﴿٤٧﴾

ஆக்கிக் கொடுத்தோம். தமது தகப்பனிடம் தாராளமான செல்வம் காணப்படுவதால் பொருளீட்டும் நோக்கில் எங்கும் பயணம் செய்யமாட்டார்கள்.)
14 (எல்லாத்துறைகளிலும்) அவனுக்கு வாழ்வில் விரிவை ஏற்படுத்திக் கொடுத்தேன்.
15 பின்பும் நான் அவனுக்கு (செல்வங்களை) அதிகப்படுத்திக் கொடுப்பதை அவன் ஆசை வைக்கின்றான்.
16 இல்லை, (நான் அவ்வாறு செய்ய மாட்டேன்.) நிச்சயமாக அவன் (நாம் நமது நபியின் மீது இறக்கிய ) வசனங்களை மறுக்கக்கூடியவனாக இருக்கின்றான்.
17 நான் (அவனால் சுமக்க முடியாத) கஷ்டமான தண்டனையைக் கொடுத்து அவனைக் கஷ்டப்படுத்துவேன்.
18 நிச்சயமாக அவன் சிந்தித்து (குர்ஆனின் விடயத்தில் ஒரு தீர்ப்பை) ஏற்படுத்திக் கொண்டான்.
19 அவன் சபிக்கப்பட்டுவிட்டான். அவன் எவ்வாறு (குர்ஆனின் விடயத்தில்) ஏற்படுத்திக் கொள்வான்.
20 மீண்டும் அவன் சபிக்கப்பட்டுவிட்டான். அவன் எவ்வாறு ஏற்படுத்துவான்.
21 பின்பு அவன் (குர்ஆனின் விடயத்தில் என்ன முடிவைச் சொல்வான் என) சிந்தித்தான்.
22 (எந்த முடிவும் கிடைக்காததால்) பின்பு (அவன் முகத்தை இறுக்கமாக்கிக் கொண்டான்.)
23 பின் அவன் (ஈமான் கொள்ளாமல்) பின்வாங்கி பெருமை அடித்து விட்டான் .
24 அவன் சொன்னான், “இது (பிறரிடமிருந்து கற்று) பெற்றுக் கொள்ளப்படும் சூனியமே அன்றி வேறில்லை.
25 இது மனிதனுடைய வார்த்தையே அன்றி வேறில்லை.”(அல்லாஹ்வின் வார்த்தையல்ல.)
26 நான் அவனை ‘ஸகர்’ எனும் நரகில் நுழைய வைப்பேன்.
27 ‘ஸகர்’ எனும் நரகம் எது என்பதை உமக்கு எது அறிவித்தது?
28 யாரையும் அது விட்டு விடவோ, எஞ்சி வைக்கவோ மாட்டாது.
29 (அது)மனிதர்களுக்கு (அவர்களின் கண்பார்வைக்கு) தோற்றமளிக்கக் கூடியது . (அல்லது இவ்வசனத்தின் கருத்து மனிதர்களைச் சுட்டுக் கரித்துவிடக் கூடியது.
30 அதற்குப் பொறுப்பாக பதினெட்டுப் பேர்கள் (வானவர்கள்) இருக்கின்றார்கள். (இவ்வசனம் இறங்கியபோது அபூஜஹ்ல் கேட்டான்: “முஹம்மதுக்கு உதவியாளர்கள் பத்தொன்பது பேர்கள் மாத்திரம் தானா இருக்கின்றார்கள்?” உங்களில் நூறு பேர் சேர்ந்து அவர்களில் ஒருவரைப் பிடித்துத் தாக்கிவிட்டு நரகிலிருந்து வெளியாகுவது இயலாத விடயமா? எனக் கேட்டான். அச்சந்தர்ப்பத்தில் பின்வரும் வசனம் இறங்கியது.
31 நரகின் பொறுப்பாளர்களாக நாம் வானவர்களையே ஆக்கியுள்ளோம். (அவர்களுடன் சண்டை செய்ய யார் சக்தி பெறுவார்கள்? அவர்கள் அல்லாஹ்வுக்காகக் கோபப்படுவதில் மிகவும் கடுமையானவர்கள்.) அவர்களில் (பத்தொன்பது பேர் என்ற) எண்ணிக்கையை நிராகரிப்பாளர்களுக்கு சோதனைக்காகவே ஆக்கியுள்ளோம். (அவர்கள் இதைப் பற்றி பேசி மேலும் அவர்களைத் தண்டனைக்குள்ளாக்கும் முகமாகவே இவ்வாறு நாம் செய்தோம்.) வேதம் கொடுக்கப்பட்டவர்கள் (இத்தொகை அவர்களின் வேதங்களில் கூறப்பட்டதற்கு நேர்படுவதால்) உறுதிகொள்ளுமுகமாகவும் மேலும் ஈமான் கொண்டவர்கள் அவர்களுடைய ஈமானை இன்னும் அதிகரித்துக் கொள்வதற்காக வேண்டியும் (நாம் இவ்வாறு செய்தோம்.) மேலும் அவர்களின் உள்ளங்களில் நோய் உள்ளவர்களும் (நயவஞ்சகர்கள்) நிராகரிப்பாளர்களும் (பத்தொன்பது என்ற) இந்த (எண்ணிக்கையின்) உதாரணத்தைக் கொண்டு அல்லாஹ் எதை நாடுகின்றான் என்று கேட்பதற்காகவும் (நாம் இவ்வாறு ஆக்கினோம்.) உமது இரட்சகனின் படைகளை அவனே அன்றி வேறு யாரும் அறியமாட்டார்கள். (நரகத்தின் பொறுப்பாளர்கள் பத்தொன்பது பேராக இருந்தாலும் அவர்கள் ஒவ்வொருவருக்குக் கீழாலும் பல உதவியாளர்கள் காணப்படுகின்றார்கள். அவர்களின் எண்ணிக்கையை அல்லாஹ் அன்றி வேறு யாரும் அறியமாட்டார்கள்.) இது மனிதர்களுக்கு உபதேசமே அன்றி வேறில்லை.

فَمَا تَنفَعُهُمْ شَفَٰعَةُ ٱلشَّٰفِعِينَ ﴿٤٨﴾ فَمَا لَهُمْ عَنِ ٱلتَّذْكِرَةِ مُعْرِضِينَ
﴿٤٩﴾ كَأَنَّهُمْ حُمُرٌ مُّسْتَنفِرَةٌ ﴿٥٠﴾ فَرَّتْ مِن قَسْوَرَةٍۭ ﴿٥١﴾ بَلْ يُرِيدُ
كُلُّ ٱمْرِئٍ مِّنْهُمْ أَن يُؤْتَىٰ صُحُفًا مُّنَشَّرَةً ﴿٥٢﴾ كَلَّا ۖ بَل لَّا يَخَافُونَ
ٱلْـَٔاخِرَةَ ﴿٥٣﴾ كَلَّآ إِنَّهُۥ تَذْكِرَةٌ ﴿٥٤﴾ فَمَن شَآءَ ذَكَرَهُۥ ﴿٥٥﴾
وَمَا يَذْكُرُونَ إِلَّآ أَن يَشَآءَ ٱللَّهُ ۚ هُوَ أَهْلُ ٱلتَّقْوَىٰ وَأَهْلُ ٱلْمَغْفِرَةِ ﴿٥٦﴾

ترتيبها ٧٥ سُورَةُ القِيَامَةِ آياتها ٤٠

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

لَآ أُقْسِمُ بِيَوْمِ ٱلْقِيَٰمَةِ ﴿١﴾ وَلَآ أُقْسِمُ بِٱلنَّفْسِ ٱللَّوَّامَةِ ﴿٢﴾ أَيَحْسَبُ
ٱلْإِنسَٰنُ أَلَّن نَّجْمَعَ عِظَامَهُۥ ﴿٣﴾ بَلَىٰ قَٰدِرِينَ عَلَىٰٓ أَن نُّسَوِّىَ بَنَانَهُۥ ﴿٤﴾ بَلْ
يُرِيدُ ٱلْإِنسَٰنُ لِيَفْجُرَ أَمَامَهُۥ ﴿٥﴾ يَسْـَٔلُ أَيَّانَ يَوْمُ ٱلْقِيَٰمَةِ ﴿٦﴾ فَإِذَا بَرِقَ ٱلْبَصَرُ
﴿٧﴾ وَخَسَفَ ٱلْقَمَرُ ﴿٨﴾ وَجُمِعَ ٱلشَّمْسُ وَٱلْقَمَرُ ﴿٩﴾ يَقُولُ ٱلْإِنسَٰنُ يَوْمَئِذٍ
أَيْنَ ٱلْمَفَرُّ ﴿١٠﴾ كَلَّا لَا وَزَرَ ﴿١١﴾ إِلَىٰ رَبِّكَ يَوْمَئِذٍ ٱلْمُسْتَقَرُّ ﴿١٢﴾ يُنَبَّؤُا۟ ٱلْإِنسَٰنُ
يَوْمَئِذٍۭ بِمَا قَدَّمَ وَأَخَّرَ ﴿١٣﴾ بَلِ ٱلْإِنسَٰنُ عَلَىٰ نَفْسِهِۦ بَصِيرَةٌ ﴿١٤﴾ وَلَوْ أَلْقَىٰ
مَعَاذِيرَهُۥ ﴿١٥﴾ لَا تُحَرِّكْ بِهِۦ لِسَانَكَ لِتَعْجَلَ بِهِۦٓ ﴿١٦﴾ إِنَّ عَلَيْنَا جَمْعَهُۥ
وَقُرْءَانَهُۥ ﴿١٧﴾ فَإِذَا قَرَأْنَٰهُ فَٱتَّبِعْ قُرْءَانَهُۥ ﴿١٨﴾ ثُمَّ إِنَّ عَلَيْنَا بَيَانَهُۥ ﴿١٩﴾

(32) அவ்வாறல்ல, சந்திரன் மீது சத்தியமாக,
(33) அது பின்வாங்கிச் செல்லும் நிலையில் இரவின் மீது சத்தியமாக,
(34) அது பிரகாசிக்கும் நிலையில் காலை நேரத்தின் மீது சத்தியமாக,
(35) நிச்சயமாக அது (ஸகர்) மிகப் பெரிய (சோதனைகளில்) ஒன்றாகும்.
(36) மனிதர்களுக்கு எச்சரிக்கையாக உள்ள (சோதனைகளில் ஒன்றாகும்.)
(37) உங்களில் நாடியவர்களுக்கு (ஈமான் கொள்வதன் மூலம்) முன்னோக்கிச் செல்ல முடியும். அல்லது (நிராகரிப்பதன் மூலம்) பின்செல்லவும் முடியும்.
(38) ஒவ்வொரு ஆத்மாவும் அது தேடிக் கொண்டதைக் கொண்டு பிடிக்கப்படும். (அது நல்லதாயின் காப்பாற்றி விடும். இல்லையாயின் அவரை அழித்துவிடும்.)
(39) (அவர்களது) வலக்கரங்களில் பதிவேடுகள் கொடுக்கப்படுபவர்களைத் தவிர (அவர்களுடைய நன்மைகள் அதிகமாக இருப்பதனால் அவர்களுடைய பாவங்கள் மன்னிக்கப்படும்.)
(40) சுவனங்களில் ஒருவருக் கொருவர் அவர்கள் வினவிக் கொள்வார்கள்.
(41) குற்றவாளிகளைப் பற்றி (ஒருவருக் கொருவர் அவர்கள் வினவிக் கொள்வார்கள்.)
(42) (சுவனவாசிகள் குற்றமிழைத்தவர்களைப் பார்த்துக் கேட்பார்கள்) எது உங்களை 'ஸகர்' என்ற நரகில் கொண்டு சேர்த்தது?
(43) அவர்கள் கூறுவார்கள்: "நாம் தொழுபவர்களாக இருக்கவில்லை.
(44) நாம் எளியவர்களுக்கு உணவளிக்கவுமில்லை.
(45) (பாவங்களிலும், வீண்களிலும்) மூழ்கியிருப்பவர்களுடன் நாங்கள் மூழ்கியிருந்தோம்.
(46) மேலும் தீர்ப்பு நாளை நாங்கள் பொய்யாக்கிக் கொண்டிருந்தோம்.
(47) உறுதியான (மரணம்) எமக்கு வரும் வரை (நாம் இவ்வாறு இருந்தோம்.)"
(48) சிபாரிசு செய்பவர்களின் சிபாரிசு அவர்களுக்குப் பயனளிக்கமாட்டாது.
(49) அவர்களுக்கு என்ன நிகழ்ந்திருக்கின்றது? அவர்கள் இவ்வுபதேசத்தை (உபதேசங்களை உள்ளடக்கியிருக்கும் குர்ஆனைப்) புறக்கனிக்கக்கூடியவர்களாக இருக்கின்றார்கள்.
(50) நிச்சயமாக அவர்கள் விரண்டோடும் கழுதைகளைப் போன்றவர்கள்.
(51) சிங்கத்தைக் கண்டு (விரண்டோடும் கழுதைகளைப் போன்றவர்கள்.)
(52) எனினும் அவர்களில் ஒவ்வொரு மனிதனும் (முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என எழுதப்பட்ட) ஏடுகள் (தனித்தனியாக) வழங்கப்படுவதை விரும்புகின்றார்கள்.
(53) அவ்வாறு நடைபெறாது. எனினும் அவர்கள் மறுமையைப் பயப்பட மாட்டார்கள்.
(54) நிச்சயமாக இது (குர்ஆன்) ஓர் உபதேசமாகும்.
(55) யார் நாடுகின்றாரோ அவர் உபதேசதம் பெறுவார்.
(56) மேலும் அல்லாஹ் (அவர்களுக்கு நேர்வழியை) நாடினாலே அன்றி அவர்கள் உபதேசம் பெறமாட்டார்கள். அவன் (அவனுடைய ஏவல்களைச் செய்து, பாவங்களைத் தவிர்ந்து) பயப்படுவதற்குத் தகுதியானவன். மேலும் (விசுவாசிகளுக்கு அவர்களின் முன்னைய பாவங்களுக்கு) மன்னிப்பு வழங்கவும் தகுதியானவன்.

## அல்-கியாமா

(1) நான் மறுமை நாளைக் கொண்டு சத்தியம் செய்கின்றேன். (மறுமை நாளைக் கொண்டு சத்தியம் செய்வது அதை மகிமைப்படுத்துவதற்காகவாகும்.)
(2) அதிகம் நிந்திக்கும் ஆத்மாவின் மீது சத்தியமாக (விசுவாசிகளை அது தவறிவிட்ட நன்மைகளுக்காகவும், அதிகப்படுத்திவிட்ட பாவங்களுக்காகவும் நிந்தித்துக் கொண்டிருக்கும். )
(3) மனிதன் (அவன் மரணித்து, அவனின் உடம்பு இத்துப் போய் மண்ணோடு மண்ணாகி விட்டதன் பின்) அவனுடைய எலும்புகளை நாங்கள் ஒன்று சேர்த்து (மீண்டும் அவனை

எழுப்பி) விட மாட்டோம் என நினைக்கின்றானா? (அது பிழையான எண்ணமாகும்.)
4 ஆம், (நாம் ஒன்று சேர்ப்போம். நாங்கள்) அவனுடைய விரல்களுக்கிடையில் (உள்ள இடைவெளிகளை நீக்கி ஒட்டகத்தின் பாதத்தைப் போல் ஒன்றினைத்து) சமப்படுத்தவும் சக்தியுள்ளவர்கள். (மாறாக நாங்கள் விரல்களுக்கிடையில் இடைவெளிகளை ஏற்படுத்தி அவற்றில் நரம்புகள், மூட்டுக்களை ஏற்படுத்தி அவனுக்கு நாங்கள் அருள்புரிந்தோம். சில அறிஞர்கள், அல்லாஹ் ஒவ்வொரு மனிதனையும் வித்தியாசமானவனாக ஆக்கியுள்ளான். ஒவ்வொருவருடைய விரலும் மற்றவருடைய விரலை விட்டும் வித்தியாசமானது என்பதை இவ்வசனம் உணர்த்துகின்றது எனக் குறிப்பிட்டுள்ளனர்.
5 எனினும் (மனிதன் கடந்த காலங்களில் ஏற்பட்ட பாவங்களுக்குப் பாவமன்னிப்புக் கோராமல்) தனக்கு முன்னால் (வரும் காலங்களிலும்) பாவம் செய்ய விரும்புகின்றான்.
6 அவன் மறுமை எப்போது (உண்டாகும்)? எனக் கேட்கின்றான். (அதை தூரமான விடயமாகக் கருதியும் பரிகாசித்தும் இவ்வாறு கேட்கின்றான்.)
7 (மறுமையின் பயங்களைக் கண்டு திடுக்கிட்டு) பார்வை உயர்ந்து விட்டால்,
8 மேலும் சந்திரன் அதன் பிரகாசத்தை ((முழுமையாக) இழந்து விடுமானால்,
9 இன்னும் சூரியனையும் சந்திரனையும் (அவ்விரண்டினதும் பிரகாசம் மங்கியதன் பின்) ஒன்று சேர்க்கப்படுமானால் (அதன் பின் இரவு, பகல் மாற்றம் நடைபெறாது.)
10 அத்தினத்தில் மனிதன் (அல்லாஹ்வின் விசாரணை, தண்டனை என்பனவற்றை விட்டும்) எங்கு விரண்டோடுவது? எனக் கேட்பான்.
11 அவ்வாறல்ல. (அந்நாளில் அல்லாஹ்வின் தண்டனையை விட்டும்) பாதுகாக்கக்கூடிய எந்த இடமும் (கோட்டைகளோ, மலைகளோ) இல்லை.
12 அந்நாளில் (எல்லோரும் மீண்டு) தரிபட்டிருப்பது உமது இரட்சகனிடத்திலாகும்.
13 அந்நாளில் அவனவன் முற்படுத்தியவற்றை (அவனது செயல்களை)யும் பிற்படுத்தியவற்றையும் மனிதனுக்கு அறிவித்துக் கொடுக்கப்படும்.
14 இல்லை, மனிதனே அவனைப் பற்றி அறிந்து கொள்வான். (ஈமான், நிராகரிப்பு, கீழ்ப்படிதல், மாறு செய்தல் என்பவற்றில் அவனின் நிலையை அவனே அறிந்து கொள்வான்.)
15 (அவன் தன் குற்றங்களை மறைக்க) தன்பக்க நியாயங்களைக் கூறிய போதும் (அவனுக்கு அவை பயனளிக்காது.)
16 (நபியே) நீர் இதை (குர்ஆனை) விரைவாக மனனமிட்டுக் கொள்ளும் நோக்கில் உமது நாவை உசுப்ப வேண்டாம். (நபி (ஸல்) அவர்கள் தமக்கு ஜிப்ரீல் (அலை) அவர்கள் வஹியை சொல்லி முடிப்பதற்கிடையில் அவர்களும் அதைச் சொல்ல ஆரம்பித்து விடுவார்கள். அதை மனனம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசையினால் அவர்கள் இவ்வாறு செய்தார்கள். அச்சந்தர்ப்பத்தில் இவ்வசனம் இறங்கியது.)
17 நிச்சயமாக (உங்கள் உள்ளத்தில்) அதை ஒன்று திரட்டுவதும் (மனனமிடச் செய்வதும்) அதை (உமது நாவினால்) ஓதவைப்பதும் எமது பொறுப்பாகும்.
18 எனவே நாம் (ஜிப்ரீல் (அலை) மூலமாக உங்களுக்கு) அதை ஓதிக் காட்டினால் நீங்கள் அதை ஓதுவதைச் செவி தாழ்த்திக் கேட்பீராக.
19 பின்பு அதை தெளிவுபடுத்துவதும் எமது கடமையாகும். (அதில் உள்ள ஹலால், ஹராம் போன்ற சட்டங்களைத் தெளிவு படுத்துவதும் எமது கடமை.)
20 எனினும் உண்மையாகவே நீங்கள் இவ்வுலகை விரும்புகின்றீர்கள்.
21 மேலும் மறுமையை விட்டுவிடுகின்றீர்கள்.
22 அன்றைய தினத்தில் சில முகங்கள் அழகானவையாகக் காணப்படும்.
23 (அவை) அவற்றின் இரட்சகனை பார்க்கக்கூடியவையாக இருக்கும். (மறுமையில் அல்லாஹ்வின் நல்லடியார்கள் பௌர்ணமி தினத்தில் சந்திரனைப் பார்ப்பது போன்று பார்ப்பார்கள் என பல ஹதீஸ்கள் அறிவிக்கின்றன.)
24 மேலும் சில முகங்கள் (பிரகாசமின்றி) இறுகிப் போய்க் காணப்படும்.
25 (தமது முதுகெலும்புகளை முறித்து விடும்) ஒரு சோதனை தமக்கு ஏற்படுத்தப்படப் போகின்றது என எண்ணிக் கொண்டிருப்பார்கள்.
26 உண்மையாகவே (அவனது) உயிர் தொண்டைக் குளியை அடைந்து (மரணம் மிக சமீபித்து) விடுமானால்
27 (அவனுக்கு வைத்தியம் செய்து சுகப்படுத்துவதற்காக) மந்திரிப்பவர்கள் யார் இருக்கின்றார்கள்? எனக் கேட்கப்பட்டால், (மந்திரித்தல் போன்றவற்றைக் கொண்டு வைத்தியம் செய்ய முற்படுவார்கள். ஆனால் அது அவனுக்குப் பயனளிக்காது.)
28 இன்னும் அது (அவனது குடும்பம் செல்வங்களை விட்டும்) பிரியும் தருணம் என்பதை அவன் அறிந்து கொண்டால்,
29 இன்னும் ஒரு கெண்டைக் கால் மறு கெண்டைக் காலுடன் பின்னிக் கொள்ளுமானால் (மரணம் மிக நெருங்கும் வேளையில் அவனுடைய இரு கால்களும் இறந்துவிடும். அவனுடைய உடம்பைத் தாங்கி நிற்காது. அவன் மரணித்ததும் மனிதர்கள் அவனது உடம்பைத் தயார் செய்து எடுத்துச் செல்வார்கள். வானவர் அவனது உயிரை) தயார் செய்து எடுத்துச் செல்வார்கள்.
30 அன்றைய நாளில் (உயிர்களை) எடுத்துச் செல்லப்படுவது உமது இரட்சகனின் பாலாகும்.

كَلَّا بَلْ تُحِبُّونَ الْعَاجِلَةَ ﴿٢٠﴾ وَتَذَرُونَ الْآخِرَةَ ﴿٢١﴾ وُجُوهٌ يَوْمَئِذٍ نَّاضِرَةٌ ﴿٢٢﴾
إِلَىٰ رَبِّهَا نَاظِرَةٌ ﴿٢٣﴾ وَوُجُوهٌ يَوْمَئِذٍ بَاسِرَةٌ ﴿٢٤﴾ تَظُنُّ أَن يُفْعَلَ بِهَا فَاقِرَةٌ ﴿٢٥﴾
كَلَّا إِذَا بَلَغَتِ التَّرَاقِيَ ﴿٢٦﴾ وَقِيلَ مَنْ ۜ رَاقٍ ﴿٢٧﴾ وَظَنَّ أَنَّهُ الْفِرَاقُ ﴿٢٨﴾ وَالْتَفَّتِ
السَّاقُ بِالسَّاقِ ﴿٢٩﴾ إِلَىٰ رَبِّكَ يَوْمَئِذٍ الْمَسَاقُ ﴿٣٠﴾ فَلَا صَدَّقَ وَلَا صَلَّىٰ
﴿٣١﴾ وَلَٰكِن كَذَّبَ وَتَوَلَّىٰ ﴿٣٢﴾ ثُمَّ ذَهَبَ إِلَىٰ أَهْلِهِ يَتَمَطَّىٰ ﴿٣٣﴾ أَوْلَىٰ لَكَ
فَأَوْلَىٰ ﴿٣٤﴾ ثُمَّ أَوْلَىٰ لَكَ فَأَوْلَىٰ ﴿٣٥﴾ أَيَحْسَبُ الْإِنسَانُ أَن يُتْرَكَ سُدًى ﴿٣٦﴾
أَلَمْ يَكُ نُطْفَةً مِّن مَّنِيٍّ يُمْنَىٰ ﴿٣٧﴾ ثُمَّ كَانَ عَلَقَةً فَخَلَقَ فَسَوَّىٰ ﴿٣٨﴾ فَجَعَلَ مِنْهُ
الزَّوْجَيْنِ الذَّكَرَ وَالْأُنثَىٰ ﴿٣٩﴾ أَلَيْسَ ذَٰلِكَ بِقَادِرٍ عَلَىٰ أَن يُحْيِيَ الْمَوْتَىٰ ﴿٤٠﴾

## سُورَةُ الْإِنسَانِ

ترتيبها ٧٦ — آياتها ٣١

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

هَلْ أَتَىٰ عَلَى الْإِنسَانِ حِينٌ مِّنَ الدَّهْرِ لَمْ يَكُن شَيْئًا مَّذْكُورًا ﴿١﴾
إِنَّا خَلَقْنَا الْإِنسَانَ مِن نُّطْفَةٍ أَمْشَاجٍ نَّبْتَلِيهِ فَجَعَلْنَاهُ سَمِيعًا
بَصِيرًا ﴿٢﴾ إِنَّا هَدَيْنَاهُ السَّبِيلَ إِمَّا شَاكِرًا وَإِمَّا كَفُورًا ﴿٣﴾
إِنَّا أَعْتَدْنَا لِلْكَافِرِينَ سَلَاسِلَ وَأَغْلَالًا وَسَعِيرًا ﴿٤﴾ إِنَّ
الْأَبْرَارَ يَشْرَبُونَ مِن كَأْسٍ كَانَ مِزَاجُهَا كَافُورًا ﴿٥﴾

31 அவன் (குர்ஆன், தூது போன்றவற்றை) உண்மை கொள்ளவுமில்லை. (அவனது) நாயனை அவன் தொழவுமில்லை. (எனவே அவன் தனது உள்ளத்தினால் விசுவாசம் கொள்ளவுமில்லை. தனது உடம்பினால் நற்கிரிகைகள் செய்யவுமில்லை.)

32 எனினும் அவன் (தூதரைப்) பொய்யாக்கி (விசுவாசம் கொண்டு கீழ்ப்படியாமல்) பின்வாங்கிவிட்டான்.

33 பின்பு அவன் (தன் நடையில் பெருமை கொண்டவனாக) தனது குடும்பத்தாரிடம் சென்று விட்டான்.

34 உனக்கு அழிவு நெருங்கிவிட்டது. அது நெருங்கிவிட்டது.

35 பின்பும் உனக்கு அழிவு நெருங்கிவிட்டது. அது நெருங்கிவிட்டது.

36 (சட்டதிட்டங்களோ, அல்லது விசாரணைகளோ இன்றி) வீணாக அவன் விடப்படுவான் என மனிதன் நினைத்துக் கொண்டிருக்கின்றானா?

37 அவன் (கர்ப்பத்தில்) செலுத்தப்படும் ஓர் இந்திரியத் துளியாக இருக்கவில்லையா?

38 பின்பு அது இரத்தக் கட்டியாக மாறி (அதிலிருந்து அவனைப்) படைத்து சீராக்கினான்.

39 மேலும் அவனிலிருந்து ஆண், பெண் என்ற இரு ஜோடிகளை அமைத்தான்.

40 (இவற்றையெல்லாம் செய்த) அந்த (இறைவன்) மரணித்தவர்களை உயிர்ப்பிக்க சக்தி பெறமாட்டானா? (ஏனெனில் ஆரம்பத்தில் படைப்பதை விட மீட்டெடுப்பது மிக இலகுவானது.

## அத்தஹ்ர்

1 மனிதனின் பேரில் (அவனது தந்தை ஆதம் (அலை) அவர்களைப் படைக்கும் விடயத்தில்) காலத்தில் நின்றும் ஒரு நேரம் வந்துவிட்டது. (அவரது உடம்பில் உயிர் ஊதப்படுவதற்கு முன் அது களிமண்ணாக இருந்து ஒவ்வொரு கட்டமாக மாறி படை கோலம் பூரணமடைவதற்கு நாற்பது வருடங்கள் கழிந்து விட்டன என்பது சில விரிவுரையாளர்களின் கருத்தாகும்.) அவன் (அக்காலப் பகுதியில்) குறிப்பிடப்படும் ஒரு பொருளாக இருக்கவில்லை. (உலகம் படைக்கப்பட்டு பல காலங்கள் கழிந்த பின்பே ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்பட்டார்கள். இதையே இறைவன் இவ்வசனத்தில் குறிப்பிடுகின்றான் என்பது வேறு சிலரின் கருத்தாகும்.)

2 நிச்சயமாக (ஆதமின் சந்ததியினரான) மனிதர்களை (ஆண், பெண் ஆகிய இருபாலரினதும்) கலப்பு இந்திரியத்திலிருந்து நாம் படைத்தோம். (நன்மை தீமை, சட்ட திட்டங்கள் போன்றவற்றைக் கொடுத்து) நாம் அவர்களைச் சோதிக்குமுகமாக (படைத்தோம்.) மேலும் நாம் (அவர்களுக்கு புலன்களை வழங்கி) கேட்கக் கூடியவர்களாகவும், பார்க்கக்கூடியவர்களாகவும் படைத்தோம்.

3 அவன் நன்றியுள்ளவனாக இருந்தாலும் நன்றி மறந்தவனாக இருந்தாலும் நிச்சயமாக நாம் அவனுக்குப் பாதையை அறிவித்துக் கொடுத்துள்ளோம். (நாம் அவனுக்கு நேர்வழி, வழிகேடு, நன்மை பயக்கக்கூடியவை, தீங்கு ஏற்படுத்தக் கூடியவை என்பனவற்றைத் தெளிவுபடுத்தினோம்.)

4 நிச்சயமாக நாம் காபிர்களுக்கு (அவர்களைத் தண்டிக்கு முகமாக) சங்கிலிகளையும் (கழுத்துடன் கைகளைச் சேர்த்து விளங்கிடும்) விளங்குகளையும், (கடுமையாகப் பற்றி எரியும்) நெருப்பையும் தயார் செய்து வைத்துள்ளோம்.

5 நிச்சயமாக நல்லவர்கள் கற்பூரம் போட்டுக் கலக்கப்படும் கிண்ணத்திலிருந்து குடிப்பார்கள்.

6 அவ்வாறு கலக்கப்பட்டது ஓர் ஊற்றுக்கண்ணாகும். அதிலிருந்து அல்லாஹ்வின் அடியார்கள் குடிப்பார்கள். (ஆற்று நீரை அவர்கள் ஓடைகள் வெட்டி ஓடச் செய்வது போல்) அதை ஓடச் செய்வார்கள். (இக்கலவையை அவர்கள் சுவனத்தின் மதுபானத்துடன் கலந்து குடிப்பார்கள்.)

7 (அவர்களுக்கு இக்கூலி வழங்கப்படும். ஏனெனில்) அவர்கள் தமது நேர்ச்சைகளை

عَيْنًا يَشْرَبُ بِهَا عِبَادُ ٱللَّهِ يُفَجِّرُونَهَا تَفْجِيرًا ﴿٦﴾ يُوفُونَ بِٱلنَّذْرِ وَيَخَافُونَ
يَوْمًا كَانَ شَرُّهُۥ مُسْتَطِيرًا ﴿٧﴾ وَيُطْعِمُونَ ٱلطَّعَامَ عَلَىٰ حُبِّهِۦ مِسْكِينًا
وَيَتِيمًا وَأَسِيرًا ﴿٨﴾ إِنَّمَا نُطْعِمُكُمْ لِوَجْهِ ٱللَّهِ لَا نُرِيدُ مِنكُمْ جَزَآءً وَلَا شُكُورًا
﴿٩﴾ إِنَّا نَخَافُ مِن رَّبِّنَا يَوْمًا عَبُوسًا قَمْطَرِيرًا ﴿١٠﴾ فَوَقَىٰهُمُ ٱللَّهُ شَرَّ ذَٰلِكَ
ٱلْيَوْمِ وَلَقَّىٰهُمْ نَضْرَةً وَسُرُورًا ﴿١١﴾ وَجَزَىٰهُم بِمَا صَبَرُوا۟ جَنَّةً وَحَرِيرًا
﴿١٢﴾ مُّتَّكِـِٔينَ فِيهَا عَلَى ٱلْأَرَآئِكِ لَا يَرَوْنَ فِيهَا شَمْسًا وَلَا زَمْهَرِيرًا ﴿١٣﴾
وَدَانِيَةً عَلَيْهِمْ ظِلَـٰلُهَا وَذُلِّلَتْ قُطُوفُهَا تَذْلِيلًا ﴿١٤﴾ وَيُطَافُ عَلَيْهِم بِـَٔانِيَةٍ
مِّن فِضَّةٍ وَأَكْوَابٍ كَانَتْ قَوَارِيرَا۠ ﴿١٥﴾ قَوَارِيرَا۟ مِن فِضَّةٍ قَدَّرُوهَا تَقْدِيرًا ﴿١٦﴾
وَيُسْقَوْنَ فِيهَا كَأْسًا كَانَ مِزَاجُهَا زَنجَبِيلًا ﴿١٧﴾ عَيْنًا فِيهَا تُسَمَّىٰ سَلْسَبِيلًا
﴿١٨﴾ ۞ وَيَطُوفُ عَلَيْهِمْ وِلْدَٰنٌ مُّخَلَّدُونَ إِذَا رَأَيْتَهُمْ حَسِبْتَهُمْ لُؤْلُؤًا مَّنثُورًا
﴿١٩﴾ وَإِذَا رَأَيْتَ ثَمَّ رَأَيْتَ نَعِيمًا وَمُلْكًا كَبِيرًا ﴿٢٠﴾ عَـٰلِيَهُمْ ثِيَابُ سُندُسٍ
خُضْرٌ وَإِسْتَبْرَقٌ وَحُلُّوٓا۟ أَسَاوِرَ مِن فِضَّةٍ وَسَقَىٰهُمْ رَبُّهُمْ شَرَابًا
طَهُورًا ﴿٢١﴾ إِنَّ هَـٰذَا كَانَ لَكُمْ جَزَآءً وَكَانَ سَعْيُكُم مَّشْكُورًا ﴿٢٢﴾ إِنَّا
نَحْنُ نَزَّلْنَا عَلَيْكَ ٱلْقُرْءَانَ تَنزِيلًا ﴿٢٣﴾ فَٱصْبِرْ لِحُكْمِ رَبِّكَ وَلَا تُطِعْ
مِنْهُمْ ءَاثِمًا أَوْ كَفُورًا ﴿٢٤﴾ وَٱذْكُرِ ٱسْمَ رَبِّكَ بُكْرَةً وَأَصِيلًا ﴿٢٥﴾

(நேர்ச்சையின் மூலம் கட்டாயமாக்கிக் கொண்ட தொழுகை, நோன்பு போன்றவற்றை) நிறைவேற்றுவார்கள். மேலும் அவர்கள் அதன் கெடுதி பரந்து விரிந்திருக்கும் ஒரு நாளையும் (மறுமையை) பயப்படுவார்கள். (அதன் கெடுதி வானம் பூமி எல்லாம் நிறைந்திருக்கும். அதனால் தான் வானம் பிளக்கின்றது. நட்சத்திரங்கள் உதிர்ந்து விடுகின்றன. பூமி உசுப்பப்படுகின்றது. மலைகள் இடித்துத் தூளாக்கப்படுகின்றன.)

8 மேலும், அவர்கள் உணவை அதன் மீது விருப்பமும் (தேவையும்) இருந்தும் எளியவருக்கும், அநாதைக்கும், கைதிக்கும் அளிப்பார்கள்.

9 (அவர்கள் சொல்வார்கள்) நாங்கள் அல்லாஹ்வின் பொருத்தத்திற்காகவே உங்களுக்கு உணவளிக்கின்றோம். உங்களிடமிருந்து பிரதியுபகாரத்தையோ, நன்றியையோ நாம் நாடமாட்டோம். (அவர்கள் பிரதிபலனையோ புகழையோ எதிர்பார்க்காமல் உணவளிப்பார்கள்.)

10 (மேலும் அவர்கள் கூறுவார்கள்:) நிச்சயமாக நாம் எமது இரட்சகனிடமிருந்து (முகங்கள்)கடுகடுக்கக் கூடிய நெருக்கடியான ஒரு நாளைப் பயப்படுகிறோம். (அந்நாளின் பயங்கரங்களின் காரணமாக முகங்கள் கடுகடுத்து கண்கள், புருவங்கள் என்பன சுருங்கிவிடும்.)

11 (உலகில் அவ்வாறு பயந்ததன் காரணமாக) அந்நாளின் கெடுதிகளை விட்டும் அல்லாஹ் அவர்களைப் பாதுகாத்துவிட்டான். மேலும் (முகங்கள் கடுகடுப்பதற்குப் பதிலாக) அவர்களுக்கு (முகங்களில்) மலர்ச்சியையும் (உள்ளத்தில்) சந்தோசத்தையும் கொடுத்துவிட்டான்.

12 (உலகில்) அவர்கள் பொறுமை செய்ததன் காரணமாக அவர்களுக்கு சுவர்க்த்தையும் பட்டாடையையும் அவன் கூலியாக வழங்கிவிட்டான்.

13 அதில் அவர்கள் சிம்மாசனங்களில் சாய்ந்தவர்களாக (இருப்பர்) அதில் அவர்கள் உஷ்ணத்தையோ, கடும் குளிரையோ கண்டு கொள்ளமாட்டார்கள்.

14 மேலும் அதன் நிழல்கள் (அவர்களுக்கு) நெருங்கி இருக்கும். இன்னும் அதில் கொய்யப்படும் (பழங்கள்) அவர்களுக்குத் தாழ்த்திக் கொடுக்கப்படும். (அதை நின்ற நிலையிலும், உட்கார்ந்தும், சாய்ந்தும் இலகுவாகக் கொய்து கொள்ளமுடியும். தூரமோ முட்களோ அவற்றைக் கொய்வதற்கு தடையாக அமையமாட்டாது.)

15 மேலும் அவர்களின் மீது வெள்ளிப் பாத்திரங்களையும், குவளைகளையும் பரிமாறப்படும். (பணிவிடையாளர்கள் அவர்களுக்கு இவற்றைப் பரிமாறுவார்கள்.)

16 வெள்ளியினாலான கூஜாக்களையும் (அவர்கள் மீது பரிமாறப்படும். அவர்களின் தேவைக்கேற்ப) அதை அளவிட்டுக்கொள்வார்கள். (அவர்களின் தாகத்தை விட கூடவும் மாட்டாது. குறையவும் மாட்டாது.)

17 அதிலே அவர்களுக்கு (மதுபான) கிண்ணம் புகட்டப்படும். அதில் கலக்கப்படும் பொருள் இஞ்சி ஆகும்.

18 ஸல்ஸபீல் என்றழைக்கப்டும் ஊற்றுக்கண்ணால் அவர்களுக்கு புகட்டப்படும். (ஸல்ஸபீல் என்பது இலகுவாகவும் வேகமாகவும் ஓடக்கூடியது எனப்பொருள்படும்.

19 (இளமையிலும் அழகிலும்) நிரந்தரமாக இருக்கும் சிறுவர்கள் அவர்கள் மீது சுற்றிப் பரிமாறுவார்கள். (அவர்கள் வயது முதிர்வடையவோ மரணிக்கவோ மாட்டார்கள்.)

20 நீங்கள் அவர்களைக் காண்பீர்களாயின் அவர்களை தூவப்பட்ட முத்துக்கள் என நினைப்பீர்கள். (அவர்களின் அழகும், கவர்ச்சியும், தெளிவான நிறமும் முத்துக்களுக்கு ஒப்பானவையாகக் காணப்படும்.)

21 நீங்கள் அங்கே (சுவனத்தின் உள்ளே உள்ளவர்களை நோட்டமிட்டுப்) பார்ப்பீர்களாயின் (சொல்லெனா) இன்பத்தையும் பெறும் அரசாட்சியையும் காண்பீர்.

22 அவர்கள் மேனியைப் பச்சை நிறமான கனமான பட்டாடைகளும், மென்மையான பட்டாடைகளும் (மூடிக் கொண்டிருக்கும்). மேலும் அவர்களுக்கு வெள்ளியினாலான காப்புக்கள் அணிவிக்கப்படும். (ஸூரா பாத்திரில் தங்கக் காப்புக்கள் அணிவிக்கப்படும்

وَمِنَ ٱلَّيۡلِ فَٱسۡجُدۡ لَهُۥ وَسَبِّحۡهُ لَيۡلٗا طَوِيلًا ﴿٢٦﴾ إِنَّ
هَٰٓؤُلَآءِ يُحِبُّونَ ٱلۡعَاجِلَةَ وَيَذَرُونَ وَرَآءَهُمۡ يَوۡمٗا ثَقِيلٗا ﴿٢٧﴾ نَّحۡنُ
خَلَقۡنَٰهُمۡ وَشَدَدۡنَآ أَسۡرَهُمۡۖ وَإِذَا شِئۡنَا بَدَّلۡنَآ أَمۡثَٰلَهُمۡ تَبۡدِيلًا
﴿٢٨﴾ إِنَّ هَٰذِهِۦ تَذۡكِرَةٞۖ فَمَن شَآءَ ٱتَّخَذَ إِلَىٰ رَبِّهِۦ سَبِيلٗا ﴿٢٩﴾
وَمَا تَشَآءُونَ إِلَّآ أَن يَشَآءَ ٱللَّهُۚ إِنَّ ٱللَّهَ كَانَ عَلِيمًا حَكِيمٗا ﴿٣٠﴾
يُدۡخِلُ مَن يَشَآءُ فِي رَحۡمَتِهِۦۚ وَٱلظَّٰلِمِينَ أَعَدَّ لَهُمۡ عَذَابًا أَلِيمَۢا ﴿٣١﴾

## سُورَةُ المُرۡسَلَاتِ

ترتيبها ٧٧ — آياتها ٥٠

بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

وَٱلۡمُرۡسَلَٰتِ عُرۡفٗا ﴿١﴾ فَٱلۡعَٰصِفَٰتِ عَصۡفٗا ﴿٢﴾ وَٱلنَّٰشِرَٰتِ نَشۡرٗا ﴿٣﴾
فَٱلۡفَٰرِقَٰتِ فَرۡقٗا ﴿٤﴾ فَٱلۡمُلۡقِيَٰتِ ذِكۡرًا ﴿٥﴾ عُذۡرًا أَوۡ نُذۡرًا ﴿٦﴾ إِنَّمَا
تُوعَدُونَ لَوَٰقِعٞ ﴿٧﴾ فَإِذَا ٱلنُّجُومُ طُمِسَتۡ ﴿٨﴾ وَإِذَا ٱلسَّمَآءُ فُرِجَتۡ
﴿٩﴾ وَإِذَا ٱلۡجِبَالُ نُسِفَتۡ ﴿١٠﴾ وَإِذَا ٱلرُّسُلُ أُقِّتَتۡ ﴿١١﴾ لِأَيِّ يَوۡمٍ أُجِّلَتۡ
﴿١٢﴾ لِيَوۡمِ ٱلۡفَصۡلِ ﴿١٣﴾ وَمَآ أَدۡرَىٰكَ مَا يَوۡمُ ٱلۡفَصۡلِ ﴿١٤﴾ وَيۡلٞ يَوۡمَئِذٖ
لِّلۡمُكَذِّبِينَ ﴿١٥﴾ أَلَمۡ نُهۡلِكِ ٱلۡأَوَّلِينَ ﴿١٦﴾ ثُمَّ نُتۡبِعُهُمُ ٱلۡأٓخِرِينَ
﴿١٧﴾ كَذَٰلِكَ نَفۡعَلُ بِٱلۡمُجۡرِمِينَ ﴿١٨﴾ وَيۡلٞ يَوۡمَئِذٖ لِّلۡمُكَذِّبِينَ ﴿١٩﴾

என குறிப்பிட்டுள்ளான்.) எனவே அவர்கள் விருப்பிற்கேற்ப இரண்டில் எதையும் தெரிவு செய்யலாம் என்பதே கருத்தாகும்.
(23) மேலும் அவர்களுடைய இரட்சகன் அவர்களுக்கு தூய்மையான பானத்தைப் புகட்டுவான். (அபூ கிலாபா, இப்றாஹீம் அந்நகஈ ஆகியோர் குறிப்பிட்டுள்ளனர் அவர்களுக்கு உணவு வழங்கப்படும். அதன் முடிவில் தூய்மையான பானம் வழங்கப்படும். அவர்கள் அதைப் பருகியதும் அவர்களுடைய வயிறுகள் மெலிந்து விடும். அவர்களுடைய உடம்பிலிருந்து கஸ்தூரி போன்ற ஒரு மணம் வீசிக் கொண்டிருக்கும்.)
(24) நிச்சயமாக இது உங்களுக்குக் கூலியாக ஆகிவிட்டது. இன்னும் உங்கள் முயற்சி நன்றி செய்யப்படக்கூடியதாகவும் இருக்கின்றது.
(25) நிச்சயமாக நாங்கள்(தான்) குர்ஆனை (பிரித்து) இறக்கினோம். (இணைவைப்பவர்கள் கூறுவது போன்று நீங்களாக இதை உருவாக்கவில்லை.)
(26) அல்லாஹ்வின் ஏற்பாட்டிற்கு நீங்கள் பொறுமை செய்து கொள்ளுங்கள். அவர்களில் பாவிக்கோ, அல்லது அதிகம் நிராகரிப்பவர்களுக்கோ நீங்கள் கீழ்ப்படிய வேண்டாம்.
(27) நீங்கள் உங்கள் நாயனின் பெயரை காலையிலும், மாலையிலும் ஞாபகம் செய்யுங்கள்.(பகலின் ஆரம்பத்தில் நீங்கள் தொழுங்கள். ஸுப்ஹுத் தொழுங்கள். இரவின் ஆரம்பத்திலும் தொழுங்கள்.)
(28) நிச்சயமாக இவர்கள் (நிராகரிப்பாளர்கள்) இவ்வுலகை விரும்புகின்றனர். அவர்களுக்குப் பின்னால் பாரம் மிக்க ஒரு நாளை விட்டுவிடுகிறார்கள். (அந்நாளைக்காகத் தயார்களைச் செய்யமாட்டார்கள்.)
(29) நாங்கள் அவர்களைப் படைத்து (நரம்புகள், தசைநார்கள் என்பவற்றின் மூலம்) அவர்களின் படைகோலத்தை உறுதிப் படுத்தினோம்.
(30) நாங்கள் நாடினால் (இவர்களை அழித்துவிட்டு இவர்களுக்குப் பகரமாக இவர்களைவிட மிகக் கட்டுப்பட்டு நடக்கும்) இவர்கள் போன்றவர்களைக் கொண்டுவருவோம்.
(31) நிச்சயமாக இவை உபதேசங்களாகும். யார் நாடுகின்றாரோ அவர் (இவற்றின் மூலம்) தனது நாயனின் பாதையை எடுத்துக் கொள்வார்.

## அல்-முர்ஸலாத்

(1) (மார்க்கத்தில் நல்லவை என) அறியப்பட்டவற்றைக் கொண்டு அனுப்பப்பட்ட(வானவர்)கள் மீது சத்தியமாக.
(2) (அல்லாஹ்வின் கட்டளைகளின் பால்) வேகமாக வீசும் காற்றைப் போன்று விரைந்து செல்லும் வானவர்கள் மீது சத்தியமாக.
(3) (மழை மேகங்களைப்) பரப்பிவிடும் (காற்றுக்கள்) மீது சத்தியமாக.
(4) (சத்தியத்தையும், அசத்தியத்தையும்) பிரித்துக்காட்டும் (இறை வசனங்கள் மீது) சத்தியமாக.
(5) வஹியை (த்தூதர்களுக்கு) க்கொடுக்கும் (வானவர்கள்) மீது சத்தியமாக.
(6) (உம்மத்தினருக்கு) மன்னிப்பை ஏற்படுத்திக் கொடுக்கும் அல்லது (அவர்களுக்கு) எச்சரிக்கை செய்யும் நிலையில் (அவ்வானவர்கள் வஹியை தூதர்களுக்கு வழங்குவார்கள்)
(7) (மேற்குறிப்பிடப்பட்ட விடயங்கள் மீது ஆணையிட்டுக் கூறுகின்றான்). நிச்சயமாக உங்களுக்கு வாக்களிக்கப்படுபவை (மறுமை, விசாரணை, கூலி வழங்கல் போன்றன) நிகழக்கூடியவை.
(8) நட்சத்திரங்களின் ஒளியை மங்கவைக்கப்படுமானல்,
(9) இன்னும் வானங்கள் பிளக்கப்பட்டு, திறக்கப்படுமானால்,
(10) மேலும் மலைகள் துகள்களாக ஆக்கப்படுமானால்,
(11) மேலும் இறைத் தூதர்களுக்கு (சத்தியத்தையும் அசத்தியத்தையும் பிரித்துக்

أَلَمْ نَخْلُقكُّم مِّن مَّآءٍ مَّهِينٍ ﴿٢٠﴾ فَجَعَلْنَٰهُ فِى قَرَارٍ مَّكِينٍ ﴿٢١﴾ إِلَىٰ قَدَرٍ
مَّعْلُومٍ ﴿٢٢﴾ فَقَدَرْنَا فَنِعْمَ ٱلْقَٰدِرُونَ ﴿٢٣﴾ وَيْلٌ يَوْمَئِذٍ لِّلْمُكَذِّبِينَ ﴿٢٤﴾
أَلَمْ نَجْعَلِ ٱلْأَرْضَ كِفَاتًا ﴿٢٥﴾ أَحْيَآءً وَأَمْوَٰتًا ﴿٢٦﴾ وَجَعَلْنَا فِيهَا رَوَٰسِىَ
شَٰمِخَٰتٍ وَأَسْقَيْنَٰكُم مَّآءً فُرَاتًا ﴿٢٧﴾ وَيْلٌ يَوْمَئِذٍ لِّلْمُكَذِّبِينَ ﴿٢٨﴾
ٱنطَلِقُوٓا۟ إِلَىٰ مَا كُنتُم بِهِۦ تُكَذِّبُونَ ﴿٢٩﴾ ٱنطَلِقُوٓا۟ إِلَىٰ ظِلٍّ ذِى ثَلَٰثِ
شُعَبٍ ﴿٣٠﴾ لَّا ظَلِيلٍ وَلَا يُغْنِى مِنَ ٱللَّهَبِ ﴿٣١﴾ إِنَّهَا تَرْمِى بِشَرَرٍ
كَٱلْقَصْرِ ﴿٣٢﴾ كَأَنَّهُۥ جِمَٰلَتٌ صُفْرٌ ﴿٣٣﴾ وَيْلٌ يَوْمَئِذٍ لِّلْمُكَذِّبِينَ ﴿٣٤﴾
هَٰذَا يَوْمُ لَا يَنطِقُونَ ﴿٣٥﴾ وَلَا يُؤْذَنُ لَهُمْ فَيَعْتَذِرُونَ ﴿٣٦﴾ وَيْلٌ يَوْمَئِذٍ
لِّلْمُكَذِّبِينَ ﴿٣٧﴾ هَٰذَا يَوْمُ ٱلْفَصْلِ جَمَعْنَٰكُمْ وَٱلْأَوَّلِينَ ﴿٣٨﴾ فَإِن كَانَ
لَكُمْ كَيْدٌ فَكِيدُونِ ﴿٣٩﴾ وَيْلٌ يَوْمَئِذٍ لِّلْمُكَذِّبِينَ ﴿٤٠﴾ إِنَّ ٱلْمُتَّقِينَ فِى
ظِلَٰلٍ وَعُيُونٍ ﴿٤١﴾ وَفَوَٰكِهَ مِمَّا يَشْتَهُونَ ﴿٤٢﴾ كُلُوا۟ وَٱشْرَبُوا۟ هَنِيٓـًٔۢا
بِمَا كُنتُمْ تَعْمَلُونَ ﴿٤٣﴾ إِنَّا كَذَٰلِكَ نَجْزِى ٱلْمُحْسِنِينَ ﴿٤٤﴾ وَيْلٌ يَوْمَئِذٍ
لِّلْمُكَذِّبِينَ ﴿٤٥﴾ كُلُوا۟ وَتَمَتَّعُوا۟ قَلِيلًا إِنَّكُم مُّجْرِمُونَ ﴿٤٦﴾ وَيْلٌ يَوْمَئِذٍ
لِّلْمُكَذِّبِينَ ﴿٤٧﴾ وَإِذَا قِيلَ لَهُمُ ٱرْكَعُوا۟ لَا يَرْكَعُونَ ﴿٤٨﴾ وَيْلٌ
يَوْمَئِذٍ لِّلْمُكَذِّبِينَ ﴿٤٩﴾ فَبِأَىِّ حَدِيثٍۭ بَعْدَهُۥ يُؤْمِنُونَ ﴿٥٠﴾

காட்டுவதற்காக) நேரம் குறிக்கப்படுமானால் (தீர்ப்பு நாள் உண்டாகிவிடும்.)

12 இந்நிகழ்வுகள் எந்த நாளைக்காக பிற்படுத்தப்படுகின்றன? (அந்நாளில் பயங்கரங்களும், கலவரங்களும் நிறைந்து காணப்படுவதால் அந்நாளைப் பார்த்து அடியார்கள் ஆச்சரியப்படுவர்கள். ஒவ்வொரு இறைத் தூதரும் தமது உம்மத்தினருக்குச் சாட்சி சொல்வதற்காக அவர்களுக்கு இந்நாள் வழங்கப்பட்டுள்ளது.)

13 (சத்தியத்தையும், அசத்தியத்தையும்) வேறு பிரிக்கும் ஒரு நாளைக்காக (இவை அனைத்தும் பிற்படுத்தப்பட்டுள்ளன). (அந்நாளில் சுவனவாசிகளும், நரகவாசிகளும் வேறுபிரிக்கப்படுவார்கள்.)

14 (இவ்வாறு) வேறுபிரித்துக்காட்டும் நாள் எது என்பதை உமக்கு எது அறிவித்துவிட்டது? (அது பயங்கர நிகழ்வாகும். அதை யாராலும் மதிப்பிட முடியாது.)

15 (இறைத் தூதர்களையும், நமது வசனங்களையும்) பொய்யாக்கியவர்களுக்கு அந்நாளில் கேடுதான்.

16 (இவ்வாறு பொய்யாக்கிய) முன்னோர்களை (உலகிலே தண்டனை வழங்கி) நாம் அழித்துவிடவில்லையா?

17 அவர்களுக்கு (அழிக்கப்பட்டவர்களுக்கு) ப்பின் நாம் இறுதியாக வந்தவர்களை (மக்கா காபிர்களை) த்தொடர வைக்கவில்லையா? (மக்கா காபிர்கள் அவர்களைத் தொடர்ந்து வந்து அவர்களும் பொய்யாக்கினார்கள்.)

18 நாம் அவ்வாறு தான் குற்றவாளிகளுக்குச் செய்வோம்.

19 (இறைத் தூதர்களையும், நமது வசனங்களையும்) பொய்யாக்கியவர்களுக்கு அந்நாளில் கேடுதான்.

20 நாம் இழிவான ஒரு நீரிலிருந்து உங்களைப் படைக்கவில்லையா?

21 22 பின் நாம் அறியப்பட்ட ஒரு தவணை வரை (ஒன்பது மாதங்கள் பூர்த்தியாகும் வரை) பாதுகாப்பான ஒரு இடத்தில் (கர்ப்பறையில்) ஆக்கவில்லையா?

23 பின்பு நாமே (அவனின் உறுப்புக்களையும், குணவியல்புகளையும்) ஏற்படுத்தினோம். (நாம்) ஏற்படுத்துபவர்களில் சிறந்தவர்கள்.

24 (இறைத் தூதர்களையும், நமது வசனங்களையும்) பொய்யாக்கியவர்களுக்கு அந்நாளில் கேடுதான்.

25 பூமியை அணைத்து (பாதுகாத்து) க்கொள்ளக் கூடியதாக ஆக்கவில்லையா?

26 (நீங்கள்) உயிருள்ளவர்களாக உள்ள நிலையில் பூமியை (அதன் மேற்பரப்பிலும்) மரணித்த நிலையில் (அதனுள்ளேயும் உங்களை அணைத்துப் பாதுகாத்துக் கொள்ளக் கூடியதாக ஆக்கவில்லையா?)

27 நாம் அதிலே உயர்ந்த மலைகளை ஏற்படுத்தி உங்களுக்கு மதுரமான நீரையும் புகட்டவில்லையா? (இவை எல்லாம் உங்களை மறுமையில் எழுப்புவதைவிட ஆச்சரியமானவை).

28 (இறைத் தூதர்களையும், நமது வசனங்களையும்) பொய்யாக்கியவர்களுக்கு அந்நாளில் கேடுதான்.

29 (அவர்களைப் பார்த்து அந்நாளில் சொல்லப்படும்) நீங்கள் (எத்தண்டனையை) பொய்யாக்கினீர்களோ அதன்பால் நீங்கள் செல்லுங்கள்.

30 (உயர்ந்து) மூன்று கிளைகளாகப் பிரிந்து செல்லும் (நெருப்பின்) நிழலில் (புகையின் கீழ்) நடந்து செல்லுங்கள்.

31 (அது அவர்களுக்கு உலகின் நிழலைப் போன்று உஷ்ணத்தை விட்டும்) நிழல் கொடுக்க மாட்டாது. நரக நெருப்பின் உஷ்ணத்தை விட்டும் அது பாதுகாக்கவும் மாட்டாது.

32 நிச்சயமாக அது மாளிகைகள் போன்று (பிரமாண்டமாக) தீப் பொறிகளை எறிந்து கொண்டிருக்கும்.

33 நிச்சயமாக அது மஞ்சள் நிற ஒட்டகங்களைப் போன்றது.

34 (இறைத் தூதர்களையும், நமது வசனங்களையும்) பொய்யாக்கியவர்களுக்கு அந்நாளில் கேடுதான்.

سُورَةُ النَّبَإِ

اياتها — ترتيبها ٧٨

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

عَمَّ يَتَسَاءَلُونَ ﴿١﴾ عَنِ النَّبَإِ الْعَظِيمِ ﴿٢﴾ الَّذِي هُمْ فِيهِ مُخْتَلِفُونَ ﴿٣﴾
كَلَّا سَيَعْلَمُونَ ﴿٤﴾ ثُمَّ كَلَّا سَيَعْلَمُونَ ﴿٥﴾ أَلَمْ نَجْعَلِ الْأَرْضَ مِهَادًا ﴿٦﴾
وَالْجِبَالَ أَوْتَادًا ﴿٧﴾ وَخَلَقْنَاكُمْ أَزْوَاجًا ﴿٨﴾ وَجَعَلْنَا نَوْمَكُمْ سُبَاتًا
﴿٩﴾ وَجَعَلْنَا اللَّيْلَ لِبَاسًا ﴿١٠﴾ وَجَعَلْنَا النَّهَارَ مَعَاشًا ﴿١١﴾ وَبَنَيْنَا
فَوْقَكُمْ سَبْعًا شِدَادًا ﴿١٢﴾ وَجَعَلْنَا سِرَاجًا وَهَّاجًا ﴿١٣﴾ وَأَنْزَلْنَا
مِنَ الْمُعْصِرَاتِ مَاءً ثَجَّاجًا ﴿١٤﴾ لِنُخْرِجَ بِهِ حَبًّا وَنَبَاتًا ﴿١٥﴾ وَجَنَّاتٍ
أَلْفَافًا ﴿١٦﴾ إِنَّ يَوْمَ الْفَصْلِ كَانَ مِيقَاتًا ﴿١٧﴾ يَوْمَ يُنْفَخُ فِي الصُّورِ
فَتَأْتُونَ أَفْوَاجًا ﴿١٨﴾ وَفُتِحَتِ السَّمَاءُ فَكَانَتْ أَبْوَابًا ﴿١٩﴾ وَسُيِّرَتِ
الْجِبَالُ فَكَانَتْ سَرَابًا ﴿٢٠﴾ إِنَّ جَهَنَّمَ كَانَتْ مِرْصَادًا ﴿٢١﴾ لِلطَّاغِينَ
مَآبًا ﴿٢٢﴾ لَابِثِينَ فِيهَا أَحْقَابًا ﴿٢٣﴾ لَا يَذُوقُونَ فِيهَا بَرْدًا وَلَا شَرَابًا
﴿٢٤﴾ إِلَّا حَمِيمًا وَغَسَّاقًا ﴿٢٥﴾ جَزَاءً وِفَاقًا ﴿٢٦﴾ إِنَّهُمْ كَانُوا
لَا يَرْجُونَ حِسَابًا ﴿٢٧﴾ وَكَذَّبُوا بِآيَاتِنَا كِذَّابًا ﴿٢٨﴾ وَكُلَّ شَيْءٍ
أَحْصَيْنَاهُ كِتَابًا ﴿٢٩﴾ فَذُوقُوا فَلَنْ نَزِيدَكُمْ إِلَّا عَذَابًا ﴿٣٠﴾

35 அவர்கள் யாரும் பேசாத நாளாகும்.
36 அவர்களுக்கு (பேசுவதற்கு) உத்தரவு வழங்கப்பட மாட்டாது. (அவ்வாறு வழங்கப்பட்டால்) அவர்கள் (தப்பிக் கொள்வதற்காக) நியாயங்களை கூற முற்படுவார்கள்.
37 (இறைத் தூதர்களையும், நமது வசனங்களையும்) பொய்யாக்கியவர்களுக்கு அந்நாளில் கேடுதான்.
38 இது (மக்களுக்கு மத்தியில்) தீர்ப்புச் செய்யும் நாளாகும். (அத்தினத்தில் சத்தியமும், அசத்தியமும் தெளிவாகும்.) நாம் (மக்காக் காபிர்களான) உங்களையும், (முன்னைய சமுதாயங்களில் நிராகரித்தவர்களான) முன்னோர்களையும் ஒன்று சேர்த்துள்ளோம்.
39 (எனது தண்டனையிலிருந்து தப்பிக் கொள்வதற்கு) உங்களிடம் ஏதாவது சூழ்ச்சிகள் இருக்குமானால் எனக்கு அச்சூழ்ச்சியைச் செய்யுங்கள்.
40 (இறைத் தூதர்களையும் நமது வசனங்களையும்) பொய்யாக்கியவர்களுக்கு அந்நாளில் கேடுதான்.
41 நிச்சயமாக பயபக்தியுடையோர் (சுவர்க்கத்தின்) நிழல்களிலும், ஊற்றுக்கண்களிலும் இருப்பார்கள்.
42 அவர்கள் விரும்பும் பழங்களையும் (சுவைத்துக் கொண்டிருப்பார்கள்.)
43 (அவர்களைப் பார்த்துச் சொல்லப்படும்.) நீங்கள் செய்தவை (நற்கிரிகை)களின் காரணமாக சந்தோஷமாகப் புசியுங்கள், மேலும் அருந்துங்கள்.
44 நிச்சயமாக நாங்கள் நன்மை செய்தவர்களுக்கு அவ்வாறு தான் கூலி வழங்குவோம்.
45 (இறைத் தூதர்களையும், நமது வசனங்களையும்) பொய்யாக்கியவர்களுக்கு அந்நாளில் கேடுதான்.
46 (உலகில் பாவிகளைப் பார்த்துச் சொல்லப்படும்) நீங்கள் சில காலம் புசித்து இன்பங்களை அனுபவியுங்கள். நிச்சயமாக நீங்கள் குற்றவாளிகள். (அல்லாஹ்வுக்கு இணை வைத்தவர்கள்.)
47 (இறைத் தூதர்களையும் நமது வசனங்களையும்) பொய்யாக்கியவர்களுக்கு அந்நாளில் கேடுதான்.
48 அவர்களிடத்தில் நீங்கள் ருகூஉ செய்து (அல்லாஹ்வைத் தொழுங்கள்) என ஏவப்பட்டால் அவர்கள் ருகூஉ செய்து (தொழமாட்டார்கள்.)
49 (இறைத் தூதர்களையும், நமது வசனங்களையும்) பொய்யாக்கியவர்களுக்கு அந்நாளில் கேடுதான்.
50 குர்ஆனுக்குப் பின் அவர்கள் வேறு எந்த வார்த்தையைக் கொண்டு ஈமான் கொள்ளப் போகின்றார்கள்.

## அந்நபஉ

(நபியவர்கள் உலகிற்கு அனுப்பப்பட்டு ஏகத்துவத்தையும், மறுமையையும் பற்றி மக்களுக்கு அறிவித்து அல் குர்ஆன் வசனங்களை ஓதிக்காட்டியபோது காபிர்கள் "முஹம்மதுக்கு என்ன நிகழ்ந்தது? அவர் சொல்பவை என்ன?" என்று ஒருவருக்கொருவர் கேட்டுக் கொள்ள ஆரம்பித்தார்கள். இச்சந்தர்ப்பத்தில் அல்லாஹ் இவ்வசனங்களை இறக்கிவைத்தான்).
1 அவர்கள் ஒருவருக்கொருவர் எதைப் பற்றிக் கேட்டுக் கொள்கிறார்கள்? (நபி (ஸல்) அவர்கள் இவ்வுலகிற்கு அனுப்பப்பட்டு ஏகத்துவத்துவம், மறுமை என்பனவற்றைக் கூறி அல்குஆனை ஓதிக் காண்பித்த போது அம்மக்கள் "முஹம்மதிற்கு என்ன நிகழ்ந்து விட்டது? அவர் எதைக் கொண்டு வந்துள்ளார்?" என்பன போன்ற கேள்விகளை அவர்களுக்கிடையில் கேட்டுக் கொள்ள ஆரம்பித்தார்கள். அச்சந்தர்ப்பத்தில் அல்லாஹ் இவ்வசனங்களை இறக்கி வைத்தான்.)
2 மகத்துவமிக்க ஒரு செய்தியைப் பற்றி (வினவிக் கொள்கிறார்கள். ஏகத்துவத்தையும்

நபியையும் உண்மைப் படுத்துதல், மறுமையை நம்புதல், போன்ற செய்திகளை அறிவிக்கும் குர்ஆனைப் பற்றி அவர்கள் வினவிக் கொள்கிறார்கள்.)
3 அது எத்தகையது எனில் அவர்கள் அதில் அவர்களுக்கிடையில் கருத்து முரண்பட்டிருக்கிறார்கள். (அது சூனியம், கவி, சாஸ்திரம், முன்னோர்களின் புராணங்கள் என பலவாறு அவர்கள் குர்ஆனைப் பற்றிக் கூறுகின்றார்கள்.)
4 அவ்வாறல்ல. (அவ்வாறு சொல்ல வேண்டாம்) அவர்கள் (பொய்யாக்கியதன் விபரீதத்தை) அறிந்து கொள்வார்கள்.
5 உறுதியாக அவர்கள் (அதை அறிந்து கொள்வார்கள்)
6 பூமியை நாம் விரிப்பாக ஆக்கவில்லையா?
7 (பூமி ஆடாமல் அசையாமல் இருப்பதற்காக) மலைகளை நாம் முளைகளாக ஆக்கவில்லையா?
8 நாம் (உங்களை ஆண்கள்,பெண்கள் என) ஜோடிகளாகப் படைத்தோம்.
9 உங்கள் தூக்கத்தை (உங்கள் உள்ளங்கள் இளைப்பாறும்) ஓய்வாக ஆக்கினோம்.
10 (உங்கள் ஆடை உங்களை மூடிக் கொள்வதைப் போன்று) இரவை(உங்களை மறைக்கும்) ஆடையாக ஆக்கினோம்.
11 மேலும் நாம் பகலை (இரணங்களையும்) வாழ்க்கை வசதிகளையும் தேடிக் கொள்ளும் நேரமாக ஆக்கினோம்.
12 நாம் உங்களுக்கு மேலால் பலம் வாய்ந்த ஏழு வானங்களை அமைத்துள்ளோம்.
13 மேலும் ஒளியை(யும் உஷ்ணத்தையும்) வழங்கும் ஒரு விளக்கையும் ஆக்கினோம்.
14 இன்னும் கருமேகங்களிலிருந்து அதிகம் கொட்டும் தண்ணீரையும் நாம் இறக்கிவைத்தோம்.
15 (அந் நீரிலிருந்து கோதுமை போன்ற) தானியத்தையும் (ஏனைய)தாவரங்களையும் வெளியாக்குவதற்காக (நாம் அதை இறக்கி வைத்தோம்.)
16 (அதனுடைய மரங்கள் ஒன்றுடன் ஒன்று நெருங்கி) அடர்ந்திருக்கும் தோப்புக்களை வெளிப்படுத்துவதற்காகவும் (நாம் தண்ணீரை இறக்கினோம்.)
17 நிச்சயமாக (மக்களுக்கு மத்தியில்) தீர்ப்புச் செய்யும் நாள் (முன்னோர்கள் பின் வந்தவர்கள் அனைவர்களுக்கும் வாக்களிக்கப்பட்டு) நேரம் குறிக்கப்பட்ட ஒரு நாளாகும்.
18 (இஸ்ராபீல்(அலை) அவர்களால்) ஊது குழலில் ஊதப்படும் நாளில் (அது நிகழும். அப்பொழுது) நீங்கள் கூட்டம் கூட்டமாக வருவீர்கள்.
19 மேலும் வானங்கள் (வானவர்கள் இறங்குவதற்காக) திறக்கப்பட்டு அது வாயில்கள் உடையதாக மாறிவிடும்.
20 மேலும் மலைகள் (அவற்றின் இடங்களிலிருந்து) நகர்த்தப்பட்டு புழுதியாக மாறிவிடும்.
21 நிச்சயமாக நரகம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது.(அதன் அதிபதிகள் அதில் வேதனை செய்வதற்காக காபிர்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.)
22 அது அக்கிரமக்காரர்கள் மீளும் இடமாகும்.
23 காலங்கள் நீண்டிருக்கும் வரை (நிரந்தரமாக) அதில் அவர்கள் தங்கியிருப்பார்கள்.
24 அதில் குளிரையோ வேறு எந்தப் பானங்களையோ சுவைக்கமாட்டார்கள்.
25 கடுமையாகக் கொதிக்கும் நீரையும், (நரகவாதிகளின் உடம்பிலிருந்து வடியும்) ஊணத்தையும் தவிர (வேறு எதனையும் சுவைக்கமாட்டார்கள்.)
26 (அல்லாஹ் அவர்களுடைய செயல்களுக்குப்) பொருந்தும் கூலியை வழங்கிவிட்டான். (பாவங்களில் மிகப் பெரியதான இணைவைத்தலை அவர்கள் செய்தார்கள். அல்லாஹ் அவர்களுக்கு மிகப் பெரும் தண்டனையை வழங்கிவிட்டான்.)
27 நிச்சயமாக அவர்கள் விசாரணையை எதிர்பார்க்காதவர்களாக இருந்தார்கள். (அவர்கள் மறுமையைப் பற்றி நம்பியிருக்கவில்லை. எனவே கூலிகளில் ஆசை வைக்கவுமில்லை. விசாரணையைப் பற்றிப் பயப்படவுமில்லை.)
28 மேலும் எங்கள் வசனங்களைப் பொய்யாக்கினார்கள்.
29 நாம் ஒவ்வொரு விடயத்தையும் (லவ்ஹுல் மஹ்பூல் எனும்) ஏட்டில் எழுதிப் பதிவு செய்து வைத்துள்ளோம். (அல்லது இவ்வசனத்தின் கருத்து அவர்கள் செய்யும் ஒவ்வொரு விடயத்தையும் வானவர்களின் ஏட்டில் பதிவு செய்துள்ளோம்.)
30 (அவர்களைப் பார்த்துச் சொல்லப்படும்:) "நீங்கள் அனுபவியுங்கள். நாம் தண்டனையைத் தவிர (வேறு எதையும்) உங்களுக்கு அதிகப்படுத்தமாட்டோம்."
31 நிச்சயமாக பயபக்தியுடையவர்களுக்கு (நரகத்திலிருந்து பாதுகாக்கப்பட்டு சுவனத்தைப் பெற்றுக் கௌ்வதன் மூலம்) வெற்றி பெருதல் இருக்கின்றது.
32 தோப்புக்களும், முந்திரிகைகளும் (அவர்களுக்கு) இருக்கின்றன.
33 மேலும் அவர்களுடைய வயதை ஒத்த அவர்களுடைய மார்பகங்கள் உருண்டு திரண்டிருக்கும் பெண்களும் (அவர்களுக்கு இருக்கின்றார்கள்.)
34 (மதுபானத்தால்) நிறைந்து இருக்கும் கிண்ணமும் (இருக்கின்றது.)
35 அதில் அவர்கள் (பாவமான) வீண் வார்த்தைகளையோ, பொய்ப்பித்தல்களையோ கேட்க மாட்டார்கள்.
36 (இது) உங்கள் இறைவனிடமிருந்து வழங்கப்படும் கூலியாகும். (அவர்களுடைய இறைவன் வாக்களித்த படி) அவர்கள் போதுமென்று சொல்லுமளவு அவனுடைய

إِنَّ لِلْمُتَّقِينَ مَفَازًا ﴿٣١﴾ حَدَآئِقَ وَأَعْنَٰبًا ﴿٣٢﴾ وَكَوَاعِبَ أَتْرَابًا ﴿٣٣﴾ وَكَأْسًا
دِهَاقًا ﴿٣٤﴾ لَّا يَسْمَعُونَ فِيهَا لَغْوًا وَلَا كِذَّٰبًا ﴿٣٥﴾ جَزَآءً مِّن رَّبِّكَ عَطَآءً
حِسَابًا ﴿٣٦﴾ رَّبِّ ٱلسَّمَٰوَٰتِ وَٱلْأَرْضِ وَمَا بَيْنَهُمَا ٱلرَّحْمَٰنِ لَا يَمْلِكُونَ
مِنْهُ خِطَابًا ﴿٣٧﴾ يَوْمَ يَقُومُ ٱلرُّوحُ وَٱلْمَلَٰٓئِكَةُ صَفًّا لَّا يَتَكَلَّمُونَ
إِلَّا مَنْ أَذِنَ لَهُ ٱلرَّحْمَٰنُ وَقَالَ صَوَابًا ﴿٣٨﴾ ذَٰلِكَ ٱلْيَوْمُ ٱلْحَقُّ فَمَن
شَآءَ ٱتَّخَذَ إِلَىٰ رَبِّهِۦ مَـَٔابًا ﴿٣٩﴾ إِنَّآ أَنذَرْنَٰكُمْ عَذَابًا قَرِيبًا يَوْمَ
يَنظُرُ ٱلْمَرْءُ مَا قَدَّمَتْ يَدَاهُ وَيَقُولُ ٱلْكَافِرُ يَٰلَيْتَنِى كُنتُ تُرَٰبًۢا ﴿٤٠﴾

## سُورَةُ النَّازِعَاتِ

ترتيبها ٧٩ — آياتها ٤٦

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

وَٱلنَّٰزِعَٰتِ غَرْقًا ﴿١﴾ وَٱلنَّٰشِطَٰتِ نَشْطًا ﴿٢﴾ وَٱلسَّٰبِحَٰتِ سَبْحًا
﴿٣﴾ فَٱلسَّٰبِقَٰتِ سَبْقًا ﴿٤﴾ فَٱلْمُدَبِّرَٰتِ أَمْرًا ﴿٥﴾ يَوْمَ تَرْجُفُ ٱلرَّاجِفَةُ
﴿٦﴾ تَتْبَعُهَا ٱلرَّادِفَةُ ﴿٧﴾ قُلُوبٌ يَوْمَئِذٍ وَاجِفَةٌ ﴿٨﴾ أَبْصَٰرُهَا
خَٰشِعَةٌ ﴿٩﴾ يَقُولُونَ أَءِنَّا لَمَرْدُودُونَ فِى ٱلْحَافِرَةِ ﴿١٠﴾ أَءِذَا كُنَّا
عِظَٰمًا نَّخِرَةً ﴿١١﴾ قَالُوا۟ تِلْكَ إِذًا كَرَّةٌ خَاسِرَةٌ ﴿١٢﴾ فَإِنَّمَا هِىَ زَجْرَةٌ
وَٰحِدَةٌ ﴿١٣﴾ فَإِذَا هُم بِٱلسَّاهِرَةِ ﴿١٤﴾ هَلْ أَتَىٰكَ حَدِيثُ مُوسَىٰٓ ﴿١٥﴾

கூலிகளை அவன் வழங்கிவிட்டான்.

37 (அவன்) வானங்களினதும், பூமியினதும் அவ்விரண்டிற்கும் இடையில் இருப்பவற்றினதும் நாயன். அருள் மிக்கவன். அவனுடன் பேசுவதற்கு யாரும் சக்தி பெறமாட்டார்கள். (அவனின் உத்தரைவப் பெற்றவர்கள் பேசவும் செய்வார்கள். சிபாரிசும் செய்வார்கள்.)

38 ஜிப்ரீல் (அலை) அவர்களும், ஏனைய வானவர்களும் அணிவகுத்து நிற்கும் நாளையில் யாருக்கு ரஹ்மானாகிய (அல்லாஹ்) உத்தரவு வழங்கி, (உலகில்) உண்மையைச் சொல்லிக் கொண்டிருந்தார்களோ அவர்களைத் தவிர (வேறு எவரும்) பேசமாட்டார்கள்.

39 அது (உண்மையாக நிகழும்) உறுதியான நாளாகும். யார் நாடுகின்றாரோ அவர் (நற்கிரிகைகள் செய்து) அல்லாஹ்விடத்தில் மீளும் (தங்கும்) இடத்தை எடுத்துக் கொள்ளட்டும்.

40 நிச்சயமாக நாம் சமீபத்தில் வரும் ஒரு வேதனையை உங்களுக்கு எச்சரிக்கை செய்கின்றோம். மனிதன் தான் முற்படுத்திய நன்மை தீமைகளைப் பார்வையிடும், மற்றும் நிராகரிப்பாளர் (அவனுக்குத் தயார் செய்து வைத்திருக்கும் தண்டனையைக் கண்டு) நான் மண்ணாக இருந்திருக்கக் கூடாதா என்று சொல்லும் நாளையில் (அவ்வேதனை நிகழும்.)

## அந்நாஸிஆத்

1 (பாவிகளின் உயிர்களைக்) கடுமையாகக் கைப்பற்றும் வானவர்கள் மீது சத்தியமாக,

2 (நல்லடியார்களின் உயிர்களை) மென்மையாக எடுக்கும் வானவர்கள் மீது சத்தியமாக ,

3 (அல்லாஹ்வின் கட்டளைகளை எடுத்துக் கொண்டு பூமியை நோக்கி) வேகமாக இறங்கும் வானவர்கள் மீது சத்தியமாக,

4 (அல்லாஹ்வின் கட்டளைகளை அமுல்படுத்துவதில்) மிகவும் முந்திக் கொள்ளும் வானவர்கள் மீது சத்தியமாக, (நல்லடியார்களின் உயிர்களை எடுத்துக் கொண்டு சுவனத்தின் பால் விரைவதும் இதைச் சார்ந்ததாகும்.)

5 கருமங்களைத் திட்டமிடும் (வானவர்கள்) மீது சத்தியமாக (வானவர்கள் திட்டமிடுவது என்பது அல்லாஹ்வின் சட்டதிட்டங்களை எடுத்துக்கொண்டு பூமிக்கு இறங்குவதும், பூமியில் மழை, காற்று போன்றவற்றை அல்லாஹ்வின் உத்தரவின் படி செயல்படுத்துவதுமாகும்.

6 (பூமியை உசுப்பிவிடக்கூடியது உசுப்பிவிடும் நாளில் (அது முதல் ஸூர் ஊதப்படும் நாளாகும். அதில் ஊதப்பட்டதும் பூமி உசும்பி அதன் மீதுள்ள அனைத்தும் அழிந்து விடும்.

7 அடுத்து வரக்கூடியது (இரண்டாவது ஊதுதல்) அதைத் தொடர்ந்து வரும். (அதன்மூலம் எல்லோரும் எழுப்பப்படுவார்கள்.)

8 (மறுமையின் பயங்கரங்களைக் கண்ணால் கண்டதன் காரணமாக) சில உள்ளங்கள் அந்நாளில் பயந்து கொண்டிருக்கும்.

9 அவர்களுடைய பார்வைகள் (பயத்தின் காரணமாக) கீழ்நோக்கியிருக்கும். (இறை நிராகரிப்பில் மரணித்தவர்கள் இந்நிலையில் காணப்படுவர்.)

10 (நாங்கள் மரணித்ததன் பின்) நாங்கள் (எங்கள் ஆரம்ப நிலைக்கு) மீண்டும் மீட்டப்படுவோமா? என (மறுமையை நிராகரிக்கும்) அவர்கள் கேட்கின்றார்கள்.

11 நாங்கள் இத்துப் போன எலும்புகளாக ஆகியதன் பின்புமா? (மீட்டப்படுவோம் எனவும் கேட்கிறார்கள்.)

12 அவ்வாறெனில் அது (எங்களுக்குக் கவலையையும்) கைசேதத்தையும் ஏற்படுத்தும் ஒரு மீட்டுதல் ஆகும் எனவும் அவர்கள் கூறுகின்றார்கள்.

13 அது (மீட்டியெழுப்பும் அந்த ஸூர் ஊதுதல்) ஒரேயொரு பெரும் சப்தம் தான்.

14 அத்துடன் அவர்கள் (எழுப்பப்பட்டு) பூமியின் மேற்பரப்பில் காணப்படுவர்.

15 திட்டமாகவே மூஸாவின் செய்தி உங்களுக்கு வந்துவிட்டது.

16 (ஸைனா மலை அடிவாரத்தில் உள்ள) துவா எனும் புனிதமான பள்ளத்தாக்கில் அவருடைய (மூஸாவுடைய) நாயன் அவரை அழைத்த நேரத்தை நினைவு கூருங்கள்.

إِذْ نَادَىٰهُ رَبُّهُۥ بِٱلْوَادِ ٱلْمُقَدَّسِ طُوًى ﴿١٦﴾ ٱذْهَبْ إِلَىٰ فِرْعَوْنَ إِنَّهُۥ طَغَىٰ ﴿١٧﴾
فَقُلْ هَل لَّكَ إِلَىٰٓ أَن تَزَكَّىٰ ﴿١٨﴾ وَأَهْدِيَكَ إِلَىٰ رَبِّكَ فَتَخْشَىٰ ﴿١٩﴾ فَأَرَىٰهُ
ٱلْءَايَةَ ٱلْكُبْرَىٰ ﴿٢٠﴾ فَكَذَّبَ وَعَصَىٰ ﴿٢١﴾ ثُمَّ أَدْبَرَ يَسْعَىٰ ﴿٢٢﴾ فَحَشَرَ
فَنَادَىٰ ﴿٢٣﴾ فَقَالَ أَنَا۠ رَبُّكُمُ ٱلْأَعْلَىٰ ﴿٢٤﴾ فَأَخَذَهُ ٱللَّهُ نَكَالَ ٱلْءَاخِرَةِ وَٱلْأُولَىٰٓ
﴿٢٥﴾ إِنَّ فِى ذَٰلِكَ لَعِبْرَةً لِّمَن يَخْشَىٰٓ ﴿٢٦﴾ ءَأَنتُمْ أَشَدُّ خَلْقًا أَمِ ٱلسَّمَآءُ ۚ بَنَىٰهَا
﴿٢٧﴾ رَفَعَ سَمْكَهَا فَسَوَّىٰهَا ﴿٢٨﴾ وَأَغْطَشَ لَيْلَهَا وَأَخْرَجَ ضُحَىٰهَا ﴿٢٩﴾
وَٱلْأَرْضَ بَعْدَ ذَٰلِكَ دَحَىٰهَآ ﴿٣٠﴾ أَخْرَجَ مِنْهَا مَآءَهَا وَمَرْعَىٰهَا ﴿٣١﴾
وَٱلْجِبَالَ أَرْسَىٰهَا ﴿٣٢﴾ مَتَـٰعًا لَّكُمْ وَلِأَنْعَـٰمِكُمْ ﴿٣٣﴾ فَإِذَا جَآءَتِ ٱلطَّآمَّةُ
ٱلْكُبْرَىٰ ﴿٣٤﴾ يَوْمَ يَتَذَكَّرُ ٱلْإِنسَـٰنُ مَا سَعَىٰ ﴿٣٥﴾ وَبُرِّزَتِ ٱلْجَحِيمُ
لِمَن يَرَىٰ ﴿٣٦﴾ فَأَمَّا مَن طَغَىٰ ﴿٣٧﴾ وَءَاثَرَ ٱلْحَيَوٰةَ ٱلدُّنْيَا ﴿٣٨﴾ فَإِنَّ ٱلْجَحِيمَ
هِىَ ٱلْمَأْوَىٰ ﴿٣٩﴾ وَأَمَّا مَنْ خَافَ مَقَامَ رَبِّهِۦ وَنَهَى ٱلنَّفْسَ عَنِ ٱلْهَوَىٰ
﴿٤٠﴾ فَإِنَّ ٱلْجَنَّةَ هِىَ ٱلْمَأْوَىٰ ﴿٤١﴾ يَسْـَٔلُونَكَ عَنِ ٱلسَّاعَةِ أَيَّانَ مُرْسَىٰهَا
﴿٤٢﴾ فِيمَ أَنتَ مِن ذِكْرَىٰهَآ ﴿٤٣﴾ إِلَىٰ رَبِّكَ مُنتَهَىٰهَآ ﴿٤٤﴾ إِنَّمَآ أَنتَ مُنذِرُ
مَن يَخْشَىٰهَا ﴿٤٥﴾ كَأَنَّهُمْ يَوْمَ يَرَوْنَهَا لَمْ يَلْبَثُوٓا۟ إِلَّا عَشِيَّةً أَوْ ضُحَىٰهَا ﴿٤٦﴾

ترتيبها ٨٠ — سُورَةُ عَبَسَ — آياتها ٤٢

17 (அல்லாஹ் அவரைப் பார்த்துச் சொன்னான்:) நீங்கள் பிர்அவ்னிடம் செல்லுங்கள். அவன் (அக்கிரமம் செய்வதில்) எல்லை மீறிச் சென்று விட்டான்.
18 நீங்கள் (அவனிடம்) கேளுங்கள்: உனக்கு (இணைவைத்தல் போன்ற பெரும் பாவங்களை விட்டும்) தூய்மையாகுவதில் ஆர்வம் இருக்கின்றதா?
19 மேலும் உனது இரட்சகனின் பால் நான் உனக்கு வழி காட்டுவதிலும் (ஆர்வம் இருக்கின்றதா?) அப்படியாயின் நீ (இறைவனைப்) பயப்படுவாய்.
20 பின்பு அவனுக்கு மிகப் பெரும் அத்தாட்சிகளை அவர் காட்டினார். (அது அவருடைய தடி அல்லது கையாகும்.)
21 அவன் (மூஸாவையும், அவர் கூறியவற்றையும்) பொய்ப்பித்து மாறு செய்து விட்டான்.
22 பின்பு அவன் (ஈமான் கொள்வதை விட்டும்) பின்வாங்கி அக்கிரமங்கள் செய்வதில்) முயற்சிக்கத் தொடங்கினான்.
23 அவன் (அவனது சூனியக்காரர்களை அல்லது மக்களை) ஒன்று திரட்டி அவன் அழைத்தான்.
24 அவன்: "நான் தான் உங்களுடைய மிக உயர்ந்த நாயன்."எனக் கூறினான்.
25 அல்லாஹ் அவனை மறுமையின் தண்டனைக்காகவும் (நரகம்) இவ்வுலகின் தண்டனைக்காகவும் (மூழ்கடிக்கப்படுதல்) பிடித்துக் கொண்டான்.
26 நிச்சயம் அதில் (பிர்அவன் அழிக்கப்பட்ட வரலாற்றில் அல்லாஹ்வைப்) பயப்படக் கூடியவர்களுக்குப் படிப்பினை இருக்கின்றது.
27 படைப்பதற்கு நீங்களா கடினமானவர்கள் அல்லது வானமா? (மரணத்தின் பின் மீண்டும் உங்களைப் படைப்பது கடினமானதா? அல்லது ஆச்சரியங்கள் பலதும் அமைக்கப்பட்டுள்ள பிரமாண்டமான வானத்தைப் படைப்பது கடினமானதா?) அவன் அதைப் படைத்தான்.
28 (பூமிக்கு) முகடு போல் அவன் அதை உயர்த்தி (அதில் வளைவுகள், கோணங்கள் இன்றி) அதை சீரானதாக ஆக்கினான்.
29 மேலும் அதனுடைய இரவை இருளானதாக ஆக்கி (பகலில்) அதன் பிரகாசத்தை (சூரியன் மூலம்) வெளிப்படுத்தினான்.
30 அதற்குப் பின் (வானத்தை சீர்செய்ததன் பின்) பூமியை அவன் விரிவானதாக ஆக்கினான்.
31 (ஆறுகள், ஊற்றுக் கண்கள் மூலம்) அதன் தண்ணீரையும் (மிருகங்கள் மேய்ந்து சாப்பிடும்) அதன் தாவரங்களையும் வெளிப்படுத்தினான்.
32 மேலும் மலைகளை (பூமிக்கு) முளைகளாக்கி உறுதிப்படுத்தினான்.
33 நீங்களும் உங்கள் கால்நடைகளும் பயன் பெறுவதற்காக (பூமியில் அல்லாஹ் இவற்றை ஏற்படுத்தினான்.)
34 (இரண்டாவது முறை ஊதுகுழல் ஊதப்பட்டு) மிகப் பெரிய சோதனை வந்து சுவனவாதிகள், சுவர்க்கத்திலும், நரகவாதிகள் நரகத்திலும் ஒப்படைக்கப்படும் நேரத்தில்
35 ஒவ்வொரு மனிதனும் அவன் செய்தவற்றை ஞாபகிக்கும் நாளில்
36 மேலும், (அது) பார்க்கக்கூடியவர்கள் (எவருக்கும் மறையாமல்) நரகை வெளியாக்கப்படும் நாளாகும்.
37 (இறை நிராகரிப்பிலும், பாவங்களிலும்) எல்லை மீறிச் சென்று
38 (மறுமையை விட) இவ்வுலகைத் தேர்ந்தெடுத்தவர்கள்,
39 நரகம்தான் அவர்கள் ஒதுங்கும் இடமாகும்.
40 (மறுமையில்) தனது இரட்சகனின் முன் நிற்கப் போவதைப் பயந்து மனோ இச்சைக்கு (அடிமையாகி பாவங்கள் செய்வதை விட்டும்) தன்னைத் தடுத்துக் கொண்டவர்,
41 சுவர்க்கம் தான் அவர்கள் ஒதுங்கும் இடமாகும்.
42 அவர்கள் உங்களிடத்தில் மறுமையைப் பற்றி அது எப்போது வந்தடையும் எனக் கேட்பார்கள்.
43 (நபியே) அதைப்பற்றிய அறிவில் நீர் எதில் இருக்கின்றீர்? (அதைப் பற்றிய எந்த

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ
عَبَسَ وَتَوَلَّىٰ ﴿١﴾ أَن جَاءَهُ الْأَعْمَىٰ ﴿٢﴾ وَمَا يُدْرِيكَ لَعَلَّهُ يَزَّكَّىٰ ﴿٣﴾ أَوْ
يَذَّكَّرُ فَتَنفَعَهُ الذِّكْرَىٰ ﴿٤﴾ أَمَّا مَنِ اسْتَغْنَىٰ ﴿٥﴾ فَأَنتَ لَهُ تَصَدَّىٰ ﴿٦﴾
وَمَا عَلَيْكَ أَلَّا يَزَّكَّىٰ ﴿٧﴾ وَأَمَّا مَن جَاءَكَ يَسْعَىٰ ﴿٨﴾ وَهُوَ يَخْشَىٰ ﴿٩﴾ فَأَنتَ
عَنْهُ تَلَهَّىٰ ﴿١٠﴾ كَلَّا إِنَّهَا تَذْكِرَةٌ ﴿١١﴾ فَمَن شَاءَ ذَكَرَهُ ﴿١٢﴾ فِي صُحُفٍ مُّكَرَّمَةٍ
﴿١٣﴾ مَّرْفُوعَةٍ مُّطَهَّرَةٍ ﴿١٤﴾ بِأَيْدِي سَفَرَةٍ ﴿١٥﴾ كِرَامٍ بَرَرَةٍ ﴿١٦﴾ قُتِلَ الْإِنسَانُ
مَا أَكْفَرَهُ ﴿١٧﴾ مِنْ أَيِّ شَيْءٍ خَلَقَهُ ﴿١٨﴾ مِن نُّطْفَةٍ خَلَقَهُ فَقَدَّرَهُ ﴿١٩﴾ ثُمَّ
السَّبِيلَ يَسَّرَهُ ﴿٢٠﴾ ثُمَّ أَمَاتَهُ فَأَقْبَرَهُ ﴿٢١﴾ ثُمَّ إِذَا شَاءَ أَنشَرَهُ ﴿٢٢﴾ كَلَّا لَمَّا
يَقْضِ مَا أَمَرَهُ ﴿٢٣﴾ فَلْيَنظُرِ الْإِنسَانُ إِلَىٰ طَعَامِهِ ﴿٢٤﴾ أَنَّا صَبَبْنَا الْمَاءَ صَبًّا
﴿٢٥﴾ ثُمَّ شَقَقْنَا الْأَرْضَ شَقًّا ﴿٢٦﴾ فَأَنبَتْنَا فِيهَا حَبًّا ﴿٢٧﴾ وَعِنَبًا وَقَضْبًا ﴿٢٨﴾
وَزَيْتُونًا وَنَخْلًا ﴿٢٩﴾ وَحَدَائِقَ غُلْبًا ﴿٣٠﴾ وَفَاكِهَةً وَأَبًّا ﴿٣١﴾ مَّتَاعًا لَّكُمْ
وَلِأَنْعَامِكُمْ ﴿٣٢﴾ فَإِذَا جَاءَتِ الصَّاخَّةُ ﴿٣٣﴾ يَوْمَ يَفِرُّ الْمَرْءُ مِنْ أَخِيهِ ﴿٣٤﴾
وَأُمِّهِ وَأَبِيهِ ﴿٣٥﴾ وَصَاحِبَتِهِ وَبَنِيهِ ﴿٣٦﴾ لِكُلِّ امْرِئٍ مِّنْهُمْ يَوْمَئِذٍ شَأْنٌ
يُغْنِيهِ ﴿٣٧﴾ وُجُوهٌ يَوْمَئِذٍ مُّسْفِرَةٌ ﴿٣٨﴾ ضَاحِكَةٌ مُّسْتَبْشِرَةٌ ﴿٣٩﴾ وَوُجُوهٌ
يَوْمَئِذٍ عَلَيْهَا غَبَرَةٌ ﴿٤٠﴾ تَرْهَقُهَا قَتَرَةٌ ﴿٤١﴾ أُولَٰئِكَ هُمُ الْكَفَرَةُ الْفَجَرَةُ ﴿٤٢﴾

அறிவும் உமக்குக் கிடையாது.)

44 (அது எப்போது நிகழும் என்பது பற்றிய) முடிவான அறிவு உமது நாயனிடமே இருக்கின்றது. (அதை வேறு எவரும் அறிய மாட்டார்கள்.)

45 நீர் அதைப் பயப்படக் கூடியவர்களுக்கு எச்சரிக்கை செய்பவர் மாத்திரமே.

46 அவர்கள் அதை (தமது கண்களால் காணக்கூடிய நாளில் மண்ணறையில்) ஒரு மாலைப் பொழுதோ, அல்லது ஒரு காலைப் பொழுதோ தங்கியதைப் போன்று (உணர்வார்கள்).

## அபஸ

(நபி(ஸல்) அவர்கள் ஒரு சந்தர்ப்பத்தில் குறைஷித் தலைவர்களுடன் அவர்களை இஸ்லாத்தின் பால் சேர்ப்பதில் ஆசை கொண்டவர்களாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அச்சந்தர்ப்பத்தில் கண் குருடரான நபித் தோழர் அப்துல்லாஹ் பின் உம்மி மக்தூம் (ரழி) அவர்கள் மார்க்கத்தை விளங்கிக் கொள்ளும் நோக்கில் சில கேள்விகளைக் கேட்க ஆரம்பித்தார்கள். இவ்வாறு இடையே குறுக்கிடுவதை விரும்பாத ரஸூல் (ஸல்) அவர்கள் தமது முகத்தை கடுப்பித்து இவர்களைப் புறக்கனித்து விட்டார்கள். அச்சந்தர்ப்பத்தில் இவ்வத்தியாயம் இறங்கியது.)

1 அவர் (தம்முகத்தைக்) கடுப்பித்து (புறக்கனித்து) விட்டார்.

2 குருடர் அவரிடம் வந்ததன் காரணமாக (அவர் தம்முகத்தைக் கடுப்பித்து புறக்கனித்து விட்டார்.)

3 (முஹம்மதே!) எது உமக்கு அறிவித்தது? அவர் (அக்குருடர் உம்மிடத்திலிருந்து கற்று அதன்மூலம் தமது பாவங்களைவிட்டும்) தூய்மை அடையலாம்.

4 அல்லது (உம்மிடமிருந்து படித்தவற்றின் மூலம்) அவர் உபதேசம் பெற்று அவருக்கு அவ்வுபதேசம் பயனிக்கலாம்.

5 உங்கள் (உபதேசத்தை விட்டும்) தேவையற்றிருப்பவர்கள் (குறைஷித் தலைவர்கள்)

6 நீர் (உமது முகத்தினாலும், பேச்சினாலும்) அவர்களை முன்னோக்குகின்றீர்.

7 அவர்கள் (இஸ்லாத்தை ஏற்று, இணைவைத்தல் போன்றவற்றை விட்டும்) தூய்மையாகாமல் இருப்பதால் உமக்குக் குற்றமில்லை. (உங்கள் பொறுப்பு எத்திவைப்பது மாத்திரம்தான். இவ்வாறான காபிர்களைப் பற்றி நீங்கள் கவனம் செலுத்த வேண்டாம்.)

8 (உங்களிடமிருந்து மார்க்கத்தைப் படித்து நேர்வழி பெறும் நோக்கில்) உங்களிடம் விரைந்து வந்தவர்

9 அவரோ அல்லாஹ்வைப் பயப்படுகின்றவர்.

10 நீங்கள் அவர்களைப் புறக்கணித்து (விட்டு இவர்களுடன் பேசுவதில் ஈடுபடுகின்றீர்கள்.)

11 அவ்வாறு நீங்கள் செய்யவேண்டாம். நிச்சயமாக இவை (இவ்வசனங்கள்)உபதேசமாகும்.

12 யார் (உபதேசம் பெற) நாடுகிறாரோ அவர் உபதேசம் பெறுவார்.

13 இவை (அல்லாஹ்விடத்தில்) கண்ணியப்படுத்தப்பட்ட ஏடுகளில் ('லவ்ஹுல் மஹ்பூல்' எனும் பலகையில்) உள்ளவையாகும்.

14 (ஷைத்தான்களின் தொடுதல் போன்றவற்றை விட்டும்) தூய்மையாக்கப்பட்ட (அந்தஸ்து) உயர்த்தப்பட்ட (ஏடுகளில் இருக்கிறது.)

15 (அவை அல்லாஹ்விடமிருந்து வஹீ எடுத்துக் கொண்டுவரும்) தூதர்களான (வானவர்களின்) கைகளில் இருக்கின்றன.

16 (அவ்வானவர்கள் அல்லாஹ்விடம்) கண்ணியமானவர்கள். நல்லடியார்கள்.

17 (நிராகரிக்கும்) மனிதன் சபிக்கப்பட்டுவிட்டான். எது அவனை (இவ்வளவு தூரம் நன்றி மறந்து) நிராகரிக்கக் கூடியவனாக ஆக்கிவிட்டது.

18 அவன்(அல்லாஹ்) அவனை (நிராகரிப்பவனை) எதிலிருந்து படைத்தான்.

19 அவன் இவனை இந்திரியத்தில் இருந்து படைத்து (அவனது உறுப்புக்கள், புலன்கள் மற்றும் அவனது வாழ்வுக்குத் தேவையானவற்றை) நிர்ணயித்தான். (இவ்வாறு

அருவருப்பான நீரிலிருந்து படைக்கப்பட்டு இரண்டு விடுத்தம் சிறுநீர்த் துவாரத்தில் இருந்து வெளியான இம்மனிதன் எவ்வாறு பெருமையடிக்க முடியும்?)
20 பின்பு அவனுக்கு (நன்மையையோ அல்லது தீமையையோ தேடிக் கொள்ளும்) பாதையை இலகுவாக்கிக் கொடுத்தான்.
21 பின்பு அவனை மரணிக்கச் செய்து (அவனை கண்ணியப்படுத்தும் முகமாக) மண்ணறையில் ஆக்கினான். (அவனை மிருகங்களும், பறவைகளும் சாப்பிடும் விதத்தில் பூமிக்கு மேலால் எறியப்படுபவனாக ஆக்கவில்லை).
22 பின்பு அவன் நாடிய நேரத்தில் அவனை (மீண்டும்) எழுப்புவான்.
23 அவன் (அல்லாஹ்) அவனுக்கு ஏவியதை இன்னும் அவன் நிறைவேற்றவில்லை. (சிலர் நிராகரித்தலின் மூலமாகவும் வேறு சிலர் மாறு செய்வதன் மூலமாகவும் அவனுக்குரிய கடமைகளை சீர்குலைத்துவிட்டனர். சிலர் மாத்திரமே அவனுக்குரியவற்றை முழுமையாக நிறைவேற்றியுள்ளனர்.
24 மனிதன் அவனது உணவை (அல்லாஹ் அதை எவ்வாறு படைத்தான் எனப்) பார்க்கட்டும்.
25 நிச்சயமாக நாங்களே தண்ணீரை (வானத்திலிருந்து) மழையாகக் கொட்டினோம்.
26 பின்பு (வித்துக்கள் வெடித்து தாவரங்கள் வெளிப்படுமுகமாக) நாங்கள் பூமியைப் பிளக்கச் செய்தோம். (மிகச் சிறியதாகவும், பலவீனமாகவும் உள்ள அத்தாவரத்தை நிலத்தைப் பிளந்து வெளிவரச் செய்தோம்.)
27 நாங்கள் அதில் (பூமியில் மனிதர்கள் உணவாக உட்கொள்ளும்) தானியத்தையும் வெளியாக்கினோம். (பூமியைப் பிளந்து வெளியாகிய அத்தாவரங்கள் தானியங்களை வெளிப்படுத்தும் காலம்வரை வளரச் செய்தோம்.) மேலும் (கால்நடைகள் உணவாக உட்கொள்ளும்) சிறு புற்பூண்டு போன்ற தாவரத்தையும் வெளியாக்கினோம்.
28 முந்திரி மரங்களையும், மிருகங்கள் சாப்பிடும் முள் மரங்களையும் வெளியாக்கினோம்.
29 மேலும் ஸைத்தூன் மரத்தையும் ஈத்தமரத்தையும் நாங்கள் வெளிப்படுத்தினோம்.
30 (ஈத்த மரங்கள் போன்ற மரங்களினால்) அடர்ந்திருக்கக்கூடிய தோட்டங்களையும் வெளிப்படுத்தினோம்.
31 மேலும் பழங்களையும், (மனிதர்கள் சாப்பிடவோ, பயிரிடவோ செய்யாத)மிருகங்கள் சாப்பிடும் மரங்களையும் நாம் வெளிப்படுத்தினோம்.
32 நீங்களும், உங்கள் கால் நடைகளும் பயன் பெறும் நோக்கில் (இவற்றை நாம் வெளிப்படுத்தினோம்.)
33 (காதுகளைச்) செவிடாக்கும் சத்தம் (இரண்டாவது ஊதுதல்)வரும் நேரத்தில்
34 மனிதன் தனது சகோதரன்,
35 மேலும் அவனது தாய், தகப்பன்,
36 மற்றும் அவனது மனைவி, பிள்ளைகள் ஆகியோரை விட்டும் விரண்டோடக்கூடிய நாளில் (இவர்கள் இவனது மிக நெருங்கிய உறவினர்கள், இவனுடைய இரக்கத்திற்கும், அன்பிற்கும் தகுதியானவர்கள். இவர்களை விட்டுமே இவன் விரண்டோடுவதாயின் அது மிகப் பெரிய பயங்கரத்துக்காகவே அன்றி வேறில்லை.)
37 அந்நாளில் அவர்களில் ஒவ்வொரு மனிதருக்கும் அவரது உறவினர்களை விட்டும் கவனத்தைத் திருப்பிடச் செய்யும் ஒரு விடயம் இருக்கின்றது.
38 அன்றைய தினத்தில் சில முகங்கள் பிரகாசமானவையாக இருக்கும்.
39 அவை சிரித்தவையாகவும், சந்தோஷமானவையாகவும் காணப்படும்.
40 அந்நாளில் மேலும் சில முகங்கள் புழுதி படிந்திருக்கும்.
41 அவற்றை கருமையும் (இருளும்) மூடிக் கொண்டிருக்கும்.
42 அவர்கள் (கரும் முகங்கள் உடையவர்கள்) தாம் நிராகரிப்பாளர்களும் கெட்டவர்களும்.

آياتها ٢٩ — سُورَةُ التَّكْوِيرِ — ترتيبها ٨١

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

إِذَا ٱلشَّمْسُ كُوِّرَتْ ﴿١﴾ وَإِذَا ٱلنُّجُومُ ٱنكَدَرَتْ ﴿٢﴾ وَإِذَا ٱلْجِبَالُ
سُيِّرَتْ ﴿٣﴾ وَإِذَا ٱلْعِشَارُ عُطِّلَتْ ﴿٤﴾ وَإِذَا ٱلْوُحُوشُ حُشِرَتْ
﴿٥﴾ وَإِذَا ٱلْبِحَارُ سُجِّرَتْ ﴿٦﴾ وَإِذَا ٱلنُّفُوسُ زُوِّجَتْ ﴿٧﴾ وَإِذَا
ٱلْمَوْءُۥدَةُ سُئِلَتْ ﴿٨﴾ بِأَيِّ ذَنۢبٍ قُتِلَتْ ﴿٩﴾ وَإِذَا ٱلصُّحُفُ نُشِرَتْ
﴿١٠﴾ وَإِذَا ٱلسَّمَآءُ كُشِطَتْ ﴿١١﴾ وَإِذَا ٱلْجَحِيمُ سُعِّرَتْ ﴿١٢﴾ وَإِذَا ٱلْجَنَّةُ
أُزْلِفَتْ ﴿١٣﴾ عَلِمَتْ نَفْسٌ مَّآ أَحْضَرَتْ ﴿١٤﴾ فَلَآ أُقْسِمُ بِٱلْخُنَّسِ ﴿١٥﴾
ٱلْجَوَارِ ٱلْكُنَّسِ ﴿١٦﴾ وَٱلَّيْلِ إِذَا عَسْعَسَ ﴿١٧﴾ وَٱلصُّبْحِ إِذَا تَنَفَّسَ ﴿١٨﴾
إِنَّهُۥ لَقَوْلُ رَسُولٍ كَرِيمٍ ﴿١٩﴾ ذِى قُوَّةٍ عِندَ ذِى ٱلْعَرْشِ مَكِينٍ ﴿٢٠﴾ مُّطَاعٍ
ثَمَّ أَمِينٍ ﴿٢١﴾ وَمَا صَاحِبُكُم بِمَجْنُونٍ ﴿٢٢﴾ وَلَقَدْ رَءَاهُ بِٱلْأُفُقِ ٱلْمُبِينِ
﴿٢٣﴾ وَمَا هُوَ عَلَى ٱلْغَيْبِ بِضَنِينٍ ﴿٢٤﴾ وَمَا هُوَ بِقَوْلِ شَيْطَٰنٍ رَّجِيمٍ ﴿٢٥﴾
فَأَيْنَ تَذْهَبُونَ ﴿٢٦﴾ إِنْ هُوَ إِلَّا ذِكْرٌ لِّلْعَٰلَمِينَ ﴿٢٧﴾ لِمَن شَآءَ مِنكُمْ أَن
يَسْتَقِيمَ ﴿٢٨﴾ وَمَا تَشَآءُونَ إِلَّآ أَن يَشَآءَ ٱللَّهُ رَبُّ ٱلْعَٰلَمِينَ ﴿٢٩﴾

آياتها ١٩ — سُورَةُ الانفِطَارِ — ترتيبها ٨٢

## அத்தக்வீர்

1 சூரியனை (ஒளியை மங்கச் செய்யப்பட்டு, பந்து வடிவில் அதை ஆக்கப்பட்டு) சுருட்டப்படும் நேரத்தில்,
2 மேலும் நட்சத்திரங்கள் (கழன்று) உதிர்ந்து விழும் நேரத்தில்,
3 மலைகளை (அவை புழுதியாக ஆக்கப்பட்டு) பெயர்க்கப்படும் நேரத்தில்,
4 வயிற்றில் குட்டிகளை சுமந்து கொண்டிருக்கும் ஒட்டகங்கள் (பராமரிப்போர் இன்றி) விடப்படும் நேரத்தில், (இவை அறபு மக்களின் மிகப் பெறுமதி வாய்ந்த செல்வம் என்பதால் அதைக் குறித்துக் கூறப்பட்டுள்ளது. மறுமையின் பயங்கரங்களின் காரணமாக இவை கவனிப்பாரற்றுக் காணப்படும்.
5 வன மிருகங்களை (அவற்றில் சில வேறுசிலதிலிருந்து பழிவாங்கிக் கொள்வதற்காக) எழுப்பப்படும் நேரத்தில்,
6 மேலும் கடல் எரிக்கப்பட்டு (அவை பற்றி எரியும் நெருப்பாக மாறும்) நேரத்தில்,
7 இன்னும் உயிர்கள் இணைக்கப்படும் போது (முஃமின்கள் 'ஹூருல் ஈன்' பெண்களுடனும் காபிர்கள் ஷைதான்களுடன் இணைக்கப்படுவார்கள். ஹஸன் அல் பஸரீ (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்: ஒவ்வொருவரும் அவரது கூட்டத்துடன் சேர்க்கப்படுவார். யஹூதிகள் யஹூதிகளுடனும், நஸாராக்கள் நஸாராக்களுடனும், முஃமின்கள் முஃமின்களுடனும் சேர்க்கப்படுவார்கள்.)
8 மேலும் உயிருடன் புதைக்கப்பட்ட பெண்குழந்தை விசாரிக்கப்படும் நேரத்தில்,
9 அது எக்குற்றத்திற்காகக் கொல்லப்பட்டது என்று,
10 இன்னும் (நன்மை, தீமை பதிவு செய்யப்பட்ட)
11 ஏடுகள் (விசாரணைக்காக) விரிக்கப்படும் நேரத்தில்,
12 மேலும் வானத்தைப் பிளக்கப்படும் நேரத்தில்,
13 இன்னும் நரகத் தீ மூட்டப்படும் நேரத்தில், மேலும் சுவர்க்கத்தை (பயபக்தியுள்ளவர்களுக்கு) நெருக்கமாக்கப்படும் நேரத்தில், (இவை உலக முடிவின் போது நடைபெறும் பன்னிரெண்டு நிகழ்வுகளாகும். முதல் ஆறு விடயங்கள் இவ்வுலகிலும் இறுதி ஆறு விடயங்கள் மறுமையிலும் நடைபெறுபவையாகும்.
14 ஒவ்வொரு ஆத்மாவும் (பதிவேடுகள் விரிக்கப்படும் போது) தாம் கொண்டுவந்த கிரிகைகளை அறிந்து கொள்வார்கள்.
15 (பகல் நேரங்களில் சூரியனின் பிரகாசத்திற்குப் பின்னால்) மறைந்து கொள்ளும் நட்சத்திரங்கள் மீது சத்தியமிடுகிறேன்.
16 (அவற்றின் மண்டலங்களில்) ஓடவும், (அவை மறையும் நேரம் வந்தவுடன்) மறைந்து விடவும் செய்யும் (நட்சத்திரங்கள் மீது நான் சத்தியம் செய்கிறேன்.)
17 அது பின்வாங்கிச் செல்லும் (அதன் இருள் முடிவடையும்) நேரத்தில் இரவின் மீது சத்தியம் செய்கிறேன்.
18 (அதனுடைய தென்றல்களுடன்) அது முன்னோக்கி வரும் நேரத்தில் காலையின் மீது நான் சத்தியம் செய்கிறேன்.
19 நிச்சயமாக இது (குர்ஆன்) கண்ணியமான ஒரு தூதரினால் (சொல்லப்படும்) வார்த்தையாகும். (அவர் ஜிப்ரீல் (அலை) ஆவார்கள்.)
20 அவர் சக்தியுடையவர், அர்ஷ் உடைய (அல்லாஹ்விடத்தில்) பெருமதிப்புமுடையவர்.
21 அங்கே (வானில் வானவர்களினால்) கீழ்ப்படியப்படுபவர், மேலும் நம்பிக்கைக்குரியவர்
22 உங்கள் தோழர் ((முஹம்மத் (ஸல்)) அவர்கள் பைத்தியக்காரர் அல்லர்.
23 திட்டமாகவே ((முஹம்மத் ஸல்) அவர்கள், அவரை (ஜிப்ரீல் (அலை) தெளிவான அடிவானில் கண்டார்கள். (600 இறக்கைகளைக் கொண்ட அவர்களுடைய உண்மையான உருவத்தில் கண்டார்கள். முஜாஹித் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: மக்காவின் கிழக்காகிய அஜ்யாத் பகுதியில் அவர்களைக் கண்டார்கள்.
24 அவர்கள் ((முஹம்மத் (ஸல்)) வானிலிருந்து அவரளவில் வரும் மறைவானவற்றின் பேரில் உலோபித்தனம் செய்பவர் அல்லர். (அவற்றுள் அவர்கள் எதையும் குறைத்துச் சொல்லவும் மாட்டார்கள் அதை அறிவிப்பதில் கவனக் குறைவு செய்யவும் மாட்டார்கள்.)
25 இது (குர்ஆன் வானிலிருந்து செய்திகளைத் திரட்டிக் கொண்டுவரும்) விரட்டப்பட்ட ஷைய்தானின் வார்த்தையல்ல.
26 (தெளிவனா நேர்வழியை விட்டுவிட்டு) நீங்கள் எப்பாதையில் சென்று கொண்டிருக்கின்றீர்கள்?
27 இது (குர்ஆன்) அகிலத்தாருக்கு உபதேசமே அன்றி வேறில்லை.
28 ஏனெனில் உங்களில் (நேர்வழியில்) நிலைத்திருக்க விரும்புகிறவருக்கு (இது உபதேசமாகும்)
29 அகிலத்தாரின் இரட்சகன் அல்லாஹ் நாடினாலேயன்றி (உபதேசம் பெற) நாட மாட்டீர்கள். (அல்லாஹ்வின் நாட்டமின்றி உங்களால் நேர்வழியில் நிலைத்திருக்க முடியாது.)

## அல்-இன்பிதார்

بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

إِذَا ٱلسَّمَآءُ ٱنفَطَرَتۡ ﴿١﴾ وَإِذَا ٱلۡكَوَاكِبُ ٱنتَثَرَتۡ ﴿٢﴾ وَإِذَا ٱلۡبِحَارُ
فُجِّرَتۡ ﴿٣﴾ وَإِذَا ٱلۡقُبُورُ بُعۡثِرَتۡ ﴿٤﴾ عَلِمَتۡ نَفۡسٞ مَّا قَدَّمَتۡ
وَأَخَّرَتۡ ﴿٥﴾ يَٰٓأَيُّهَا ٱلۡإِنسَٰنُ مَا غَرَّكَ بِرَبِّكَ ٱلۡكَرِيمِ ﴿٦﴾ ٱلَّذِي
خَلَقَكَ فَسَوَّىٰكَ فَعَدَلَكَ ﴿٧﴾ فِيٓ أَيِّ صُورَةٖ مَّا شَآءَ رَكَّبَكَ ﴿٨﴾
كَلَّا بَلۡ تُكَذِّبُونَ بِٱلدِّينِ ﴿٩﴾ وَإِنَّ عَلَيۡكُمۡ لَحَٰفِظِينَ ﴿١٠﴾ كِرَامٗا
كَٰتِبِينَ ﴿١١﴾ يَعۡلَمُونَ مَا تَفۡعَلُونَ ﴿١٢﴾ إِنَّ ٱلۡأَبۡرَارَ لَفِي نَعِيمٖ ﴿١٣﴾ وَإِنَّ
ٱلۡفُجَّارَ لَفِي جَحِيمٖ ﴿١٤﴾ يَصۡلَوۡنَهَا يَوۡمَ ٱلدِّينِ ﴿١٥﴾ وَمَا هُمۡ عَنۡهَا بِغَآئِبِينَ
﴿١٦﴾ وَمَآ أَدۡرَىٰكَ مَا يَوۡمُ ٱلدِّينِ ﴿١٧﴾ ثُمَّ مَآ أَدۡرَىٰكَ مَا يَوۡمُ ٱلدِّينِ
﴿١٨﴾ يَوۡمَ لَا تَمۡلِكُ نَفۡسٞ لِّنَفۡسٖ شَيۡـٔٗاۖ وَٱلۡأَمۡرُ يَوۡمَئِذٖ لِّلَّهِ ﴿١٩﴾

1 (வானவர்கள் இறங்குவதற்காக) வானம் பிளந்துவிடும் நேரத்தில்,
2 மேலும் நட்சத்திரங்கள் உதிர்ந்து விழும் நேரத்தில்,
3 கடல்களை ஓடச்செய்யப்பட்டு (அவற்றிற்கிடையிலுள்ள திரைகள் நீக்கப்பட்டு) ஒரே கடலாக மாறும் சந்தர்ப்பத்தில்
4 மண்ணறைகள் பிரட்டப்பட்டு (அதிலிருக்கும் மரணித்தவர்களை வெளியேற்றப்படும் நேரத்தில்)
5 ஒவ்வொரு ஆத்மாவும் (நன்மை தீமைகளில் மறுமைக்காக) அவை முற்படுத்தியவற்றையும், பிற்படுத்தியவற்றையும் அறிந்து கொள்ளும் (பதிவேடுகள் பிரிக்கப்படக்கூடிய சந்தர்ப்பத்தில் அவற்றை அறிந்து கொள்ளும்.)
6 மனிதனே! கொடையாளனாகிய உனது நாயனைப்பற்றி உனக்கு எது ஏமாற்றத்தை ஏற்படுத்தியது? (கொடையாளனாகிய உமது இறைவனை மறுக்கக்கூடியளவு உன்னை ஏமாற்றியது எது? (அவன் அவனைத் தண்டிக்காமல் விட்டதாகும்).
7 (நீ இல்லாமல் இருந்த நிலையில்) அவன் உன்னை (இந்திரியத்திலிருந்து) படைத்து (உனக்கு பார்வை, செவி, புத்தி என்பவற்றைத் தந்து) உன்னை ஒழுங்கமைத்து (உனக்கு அழகிய உருவத்தைத் தந்து) நேரான தோற்றமுள்ளவனாக அவன் ஆக்கினான்.
8 அவன் எந்த உருவில் (உன்னைப் படைக்க) நாடினானோ அந்த உருவில் உன்னை (உனது உடம்பை) பொறுத்தினான். (அவன் தெரிவு செய்த உருவில் படைத்தான். உனது உருவமைப்பை நீ தெரிவு செய்யவில்லை.)
9 (அவ்வாறு அல்லாஹ்வின் விடயத்தில் ஏமாற்றமடைய வேண்டாம்) ஆயினும் கூலி கொடுக்கும் நாளை நீங்கள் பொய்யாக்குகின்றீர்கள்.
10 நிச்சயமாக உங்கள் மீது (உங்கள் செயல்களைப்) பாதுகாத்துப் பதிவு செய்யும் வானவர்கள் சாட்டப்பட்டிருக்கின்றார்கள்.
(அவர்கள்) கண்ணியமானவர்கள். (நீங்கள் செய்பவற்றை) எழுதக்கூடியவர்கள்.
12 நீங்கள் செய்பவற்றை அவர்கள் அறிவார்கள் (அல்லாஹ் கூறுகின்றான் நீங்கள் மறுமையைப் பொய்யாக்குகின்றீகள். அவனோ உங்களை மறுமையில் விசாரணை செய்யுமுகமாக உங்கள் செயல்களைப் பதிவு செய்ய வானவர்களைப் பொறுப்புச் சாட்டியுள்ளான்.)
13 நிச்சமாக நன்மை செய்தவர் இன்பமளிக்கும் (சுவனத்தில்) இருப்பார்.
14 மேலும் நிச்சயமாக பாவிகள் நரகிலிருப்பார்கள்.
15 கூலி வழங்கப்படும் (மறுமை) நாளில் அதில் அவர்கள் நுழைவார்கள்.
16 அவர்கள் அதைவிட்டும் மறையக்கூடியவர்கள் அல்லர். (தப்பிவிடக்கூடியவர்கள் அல்லர்.)
17 கூலி வழங்கப்படும் நாள் எது என்பதை எது உமக்கு அறிவித்துவிட்டது?
18 பின்பும் கூலி வழங்கப்படும் நாள் எது என்பதை எது உமக்கு அறிவித்துவிட்டது?
19 (அது) எந்தவொரு ஆத்மாவும் இன்னோர் ஆத்மாவுக்கு எந்தப்பயனையும் உரிமையாக்கிக் கொள்ளாத நாளாகும். அந்நாளில் கருமங்கள் அனைத்தும் அல்லாஹ்வுக்கு மாத்திரமே உரியது. (அவன் மாத்திரமே தீர்ப்புக்களைச் செய்வான்.)

## அல்-முதப்பிபீன்

سُورَةُ المُطَفِّفِينَ

ترتيبها ٨٣ — آياتها ٣٦

بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

وَيۡلٞ لِّلۡمُطَفِّفِينَ ﴿١﴾ ٱلَّذِينَ إِذَا ٱكۡتَالُواْ عَلَى ٱلنَّاسِ يَسۡتَوۡفُونَ ﴿٢﴾
وَإِذَا كَالُوهُمۡ أَو وَّزَنُوهُمۡ يُخۡسِرُونَ ﴿٣﴾ أَلَا يَظُنُّ أُوْلَٰٓئِكَ أَنَّهُم
مَّبۡعُوثُونَ ﴿٤﴾ لِيَوۡمٍ عَظِيمٖ ﴿٥﴾ يَوۡمَ يَقُومُ ٱلنَّاسُ لِرَبِّ ٱلۡعَٰلَمِينَ ﴿٦﴾

இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: நபியவர்கள் மதீனாவிற்கு வந்த போது மதீனா வாசிகள் அளவை நிறுவையில் மிகவும் மோசடி செய்யக்கூடியவர்களாக இருந்தார்கள். அல்லாஹ் இவ்வத்தியாயத்தை இறக்கிவைத்தான். அதன் பின் அவர்கள் அதை முறையாகச் செய்தார்கள்.
1 (அளவை நிறுவையில்) குறை செய்பவர்களுக்கு கேடு இருக்கின்றது. (சில வேலைகளில் அவர்களில் ஒருவருக்கு இரு அளவைகள் இருந்திருக்கின்றன. ஒன்றால் அளந்து கொடுப்பார்கள். மற்றையதால் அளந்து எடுப்பார்கள்.)

كَلَّآ إِنَّ كِتَٰبَ ٱلْفُجَّارِ لَفِى سِجِّينٍ ﴿٧﴾ وَمَآ أَدْرَىٰكَ مَا سِجِّينٌ ﴿٨﴾ كِتَٰبٌ
مَّرْقُومٌ ﴿٩﴾ وَيْلٌ يَوْمَئِذٍ لِّلْمُكَذِّبِينَ ﴿١٠﴾ ٱلَّذِينَ يُكَذِّبُونَ بِيَوْمِ ٱلدِّينِ ﴿١١﴾
وَمَا يُكَذِّبُ بِهِۦٓ إِلَّا كُلُّ مُعْتَدٍ أَثِيمٍ ﴿١٢﴾ إِذَا تُتْلَىٰ عَلَيْهِ ءَايَٰتُنَا قَالَ أَسَٰطِيرُ
ٱلْأَوَّلِينَ ﴿١٣﴾ كَلَّا ۖ بَلْ ۜ رَانَ عَلَىٰ قُلُوبِهِم مَّا كَانُوا۟ يَكْسِبُونَ ﴿١٤﴾ كَلَّآ إِنَّهُمْ
عَن رَّبِّهِمْ يَوْمَئِذٍ لَّمَحْجُوبُونَ ﴿١٥﴾ ثُمَّ إِنَّهُمْ لَصَالُوا۟ ٱلْجَحِيمِ ﴿١٦﴾ ثُمَّ يُقَالُ
هَٰذَا ٱلَّذِى كُنتُم بِهِۦ تُكَذِّبُونَ ﴿١٧﴾ كَلَّآ إِنَّ كِتَٰبَ ٱلْأَبْرَارِ لَفِى عِلِّيِّينَ
﴿١٨﴾ وَمَآ أَدْرَىٰكَ مَا عِلِّيُّونَ ﴿١٩﴾ كِتَٰبٌ مَّرْقُومٌ ﴿٢٠﴾ يَشْهَدُهُ ٱلْمُقَرَّبُونَ
﴿٢١﴾ إِنَّ ٱلْأَبْرَارَ لَفِى نَعِيمٍ ﴿٢٢﴾ عَلَى ٱلْأَرَآئِكِ يَنظُرُونَ ﴿٢٣﴾ تَعْرِفُ فِى
وُجُوهِهِمْ نَضْرَةَ ٱلنَّعِيمِ ﴿٢٤﴾ يُسْقَوْنَ مِن رَّحِيقٍ مَّخْتُومٍ ﴿٢٥﴾
خِتَٰمُهُۥ مِسْكٌ ۚ وَفِى ذَٰلِكَ فَلْيَتَنَافَسِ ٱلْمُتَنَٰفِسُونَ ﴿٢٦﴾ وَمِزَاجُهُۥ
مِن تَسْنِيمٍ ﴿٢٧﴾ عَيْنًا يَشْرَبُ بِهَا ٱلْمُقَرَّبُونَ ﴿٢٨﴾ إِنَّ ٱلَّذِينَ
أَجْرَمُوا۟ كَانُوا۟ مِنَ ٱلَّذِينَ ءَامَنُوا۟ يَضْحَكُونَ ﴿٢٩﴾ وَإِذَا مَرُّوا۟ بِهِمْ
يَتَغَامَزُونَ ﴿٣٠﴾ وَإِذَا ٱنقَلَبُوٓا۟ إِلَىٰٓ أَهْلِهِمُ ٱنقَلَبُوا۟ فَكِهِينَ ﴿٣١﴾
وَإِذَا رَأَوْهُمْ قَالُوٓا۟ إِنَّ هَٰٓؤُلَآءِ لَضَآلُّونَ ﴿٣٢﴾ وَمَآ أُرْسِلُوا۟ عَلَيْهِمْ
حَٰفِظِينَ ﴿٣٣﴾ فَٱلْيَوْمَ ٱلَّذِينَ ءَامَنُوا۟ مِنَ ٱلْكُفَّارِ يَضْحَكُونَ ﴿٣٤﴾

2 அவர்கள் எத்தகையவர்கள் எனில் அவர்கள் (மற்றவர்களிடமிருந்து தங்களுக்காக பொருட்களை வாங்கும் போது) அளந்து எடுப்பார்களாயின் (அளவையை) பூர்த்தியாக்கி எடுத்துக் கொள்வார்கள்.

3 (மற்றவர்களுக்கு விற்கும் சமயத்தில்) அவர்களுக்கு அளந்து கொடுத்தால் அல்லது நிறுத்துக் கொடுத்தால் குறைத்துவிடுவார்கள்.

4 அவர்கள் எழுப்பப்படுவார்கள் என்பதை அவர்கள் எண்ணிப்பார்க்க மாட்டார்களா?

5 மகத்துவமிக்க ஒரு நாளில் (அவர்கள் எழுப்பப்படுவார்கள் என்பதை அவர்கள் எண்ணிப்பார்க்க மாட்டார்களா? அவர்கள் மறுமையில் எழுப்பப்பட்டு விசாரணை செய்யப்படுவார்கள் என்பதை எண்ணி அவர்கள் இதைத் தவிர்ந்துகொள்ளக் கூடாதா?

6 அகிலத்தாரின் இரட்சகனின் (விசாரணைக்காவும், கூலிக்காவும்) மனிதர்கள் நிற்கும் நாளையில் (அவர்கள் எழுப்பப்படுவார்கள் என்பதை எண்ணிப்பார்க்க மாட்டார்களா?)

7 நிச்சயமாக பாவிகளின் பதிவேடு ஸிஜ்ஜீனில் இருக்கின்றது. (அளவை நிறுவைகளில் குறை செய்வோரும் அதில் அடங்குவர்.)

8 ஸிஜ்ஜீன் என்பது என்ன என்பதை உமக்கு எது அறிவித்தவிட்டது?

9 (அது தீயவர்களின் பெயர்கள்) எழுதப்பட்ட ஒரு ஏடாகும்.

10 அந்நாளில் பொய்ப்பிப்பவர்களுக்குக் கேடுதான்.

11 அவர்கள் எத்தகையவர்கள் எனின் கூலி வழங்கப்படும் (மறுமை) நாளைப் பொய்ப்பிக்கிறார்கள்.

12 அதைப்பாவிகளும், வரம்பு மீறிச் செயல்படுபவர்களுமே பொய்ப்பிப்பார்கள்.

13 அவர்களுக்கு (எமது தூதரின் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது இறக்கப்பட்ட) எமது வசனங்களை ஓதிக்காண்பிக்கப்பட்டால் அவர்கள் முன்னோர்களின் புராணங்கள் (அவர்களின் கட்டுக்கதைகள்) என்பார்கள்.

14 அவ்வாறு சொல்ல வேண்டாம். ஆயினும் அவர்கள் சம்பாதித்துக் கொண்டவை (பாவங்கள்) அவர்கள் இதயத்தின் மேல் துருவாகப் பதிந்து விட்டன. (அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: நபியவர்கள் சொன்னார்கள் ஓர் அடியான் ஒரு பாவத்தைச் செய்தால் அவனின் இதயத்தில் ஒரு கறுப்புப் புள்ளி இடப்படும். அவன் பாவமன்னிப்புக் கோறி பாவத்திலிருந்து விலகிக்கொண்டால் அவனது இதயம் பிரகாசம் அடையும். தொடர்ந்தும் பாவம் புரிந்தால் அப்புள்ளி அதிகரித்து அவனின் இதயத்தை மூடிக் கொள்ளும். அல்லாஹ் குறிப்பிடுவது இதுதான்.

15 நிச்சயமாக அவர்கள் அவர்களுடைய இரட்சகனை (அவனைப் பார்ப்பதை) விட்டும் தடுக்கப்படுவார்கள். (விசுவாசிகள் அல்லாஹ்வைப் பார்ப்பது போன்று இவர்கள் பார்க்கமாட்டார்கள். உலகில் அவர்களுக்கு அவனுடைய ஏகத்துவத்தை தடுத்துவிட்டதைப் போன்று மறுமையில் அவனைப் பார்ப்பதை தடுத்துவிடுவான்.)

16 பின்பு, அவர்கள் நரகில் நுழையக்கூடியவர்கள்.

17 பின்பு, "இதைத் தான் நீங்கள் பொய்யெனக் கூறிக் கொண்டிருந்தீர்கள்" (என அவர்களைப் பார்த்துச்) சொல்லப்படும்.

18 நிச்சயமாக நல்லவர்களின் பதிவேடு இல்லிய்யூன் என்ற (சுவனவாசிகளின்) பதிவேட்டுடன் இருக்கின்றது.

19 இல்லிய்யூன் என்றால் என்ன என்பதை உமக்கு எது அறிவித்தது?

20 (அது அல்லாஹ்விற்கு வழிப்பட்டவர்களின் பெயர்கள்) எழுதப்பட்ட ஒரு ஏடாகும்.

21 (அல்லாஹ்விற்கு) நெருக்கமான (வான)வர்கள் அதனிடத்தில் சமூகமளிப்பார்கள் (மேலும் அதைப் பார்ப்பார்கள்.)

22 நிச்சயமாக நன்மை செய்தவர்கள் சுகந்தரும் சுவனத்தில் இருப்பார்கள்.

23 அவர்கள் (சுவனத்தின்) சிம்மாசனங்களில் இருந்தவாறு (தமக்குத் தயார் செய்யப்பட்டிருக்கும் கண்ணியங்களைப்) பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

24 நீங்கள் அவர்களின் முகத்தில் (அவர்கள் அனுபவிக்கும்) இன்பத்தின் அழகைக்

عَلَى ٱلْأَرَآئِكِ يَنظُرُونَ ﴿٣٥﴾ هَلْ ثُوِّبَ ٱلْكُفَّارُ مَا كَانُوا۟ يَفْعَلُونَ ﴿٣٦﴾

ترتيبها ٨٤ — سُورَةُ ٱلانْشِقَاقِ — آياتها ٢٥

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

إِذَا ٱلسَّمَآءُ ٱنشَقَّتْ ﴿١﴾ وَأَذِنَتْ لِرَبِّهَا وَحُقَّتْ ﴿٢﴾ وَإِذَا ٱلْأَرْضُ مُدَّتْ
﴿٣﴾ وَأَلْقَتْ مَا فِيهَا وَتَخَلَّتْ ﴿٤﴾ وَأَذِنَتْ لِرَبِّهَا وَحُقَّتْ ﴿٥﴾ يَٰٓأَيُّهَا
ٱلْإِنسَٰنُ إِنَّكَ كَادِحٌ إِلَىٰ رَبِّكَ كَدْحًا فَمُلَٰقِيهِ ﴿٦﴾ فَأَمَّا مَنْ أُوتِىَ
كِتَٰبَهُۥ بِيَمِينِهِۦ ﴿٧﴾ فَسَوْفَ يُحَاسَبُ حِسَابًا يَسِيرًا ﴿٨﴾ وَيَنقَلِبُ
إِلَىٰٓ أَهْلِهِۦ مَسْرُورًا ﴿٩﴾ وَأَمَّا مَنْ أُوتِىَ كِتَٰبَهُۥ وَرَآءَ ظَهْرِهِۦ ﴿١٠﴾ فَسَوْفَ
يَدْعُوا۟ ثُبُورًا ﴿١١﴾ وَيَصْلَىٰ سَعِيرًا ﴿١٢﴾ إِنَّهُۥ كَانَ فِىٓ أَهْلِهِۦ مَسْرُورًا ﴿١٣﴾
إِنَّهُۥ ظَنَّ أَن لَّن يَحُورَ ﴿١٤﴾ بَلَىٰٓ إِنَّ رَبَّهُۥ كَانَ بِهِۦ بَصِيرًا ﴿١٥﴾ فَلَآ أُقْسِمُ
بِٱلشَّفَقِ ﴿١٦﴾ وَٱلَّيْلِ وَمَا وَسَقَ ﴿١٧﴾ وَٱلْقَمَرِ إِذَا ٱتَّسَقَ ﴿١٨﴾
لَتَرْكَبُنَّ طَبَقًا عَن طَبَقٍ ﴿١٩﴾ فَمَا لَهُمْ لَا يُؤْمِنُونَ ﴿٢٠﴾ وَإِذَا قُرِئَ
عَلَيْهِمُ ٱلْقُرْءَانُ لَا يَسْجُدُونَ ۩ ﴿٢١﴾ بَلِ ٱلَّذِينَ كَفَرُوا۟ يُكَذِّبُونَ
﴿٢٢﴾ وَٱللَّهُ أَعْلَمُ بِمَا يُوعُونَ ﴿٢٣﴾ فَبَشِّرْهُم بِعَذَابٍ أَلِيمٍ ﴿٢٤﴾
إِلَّا ٱلَّذِينَ ءَامَنُوا۟ وَعَمِلُوا۟ ٱلصَّٰلِحَٰتِ لَهُمْ أَجْرٌ غَيْرُ مَمْنُونٍ ﴿٢٥﴾

கண்டு கொள்வீர்கள். (நீங்கள் அவர்களைப் பார்த்த மாத்திரத்தில் இவர்கள் இன்பங்களை அனுபவிப்பவர்கள் என அறிந்து கொள்வீர்கள்.)

25 (இவர்களுக்கு முன் வேறு எவரும் உபயோகிக்க (முடியாதவாறு) முத்திரையிடப்பட்ட தூய்மையான மதுபானத்திலிருந்து புகட்டப்படுவார்கள்.

26 அதனுடைய இறுதிப் பகுதி கஸ்தூரி வாடை கொண்டதாகும். (அதனைப் பருகியவர் பாத்திரத்திலிருந்து வாயை உயர்த்தினால் அதில் இருந்து கஸ்தூரி வாசம் வீசிக் கொண்டிருக்கும்.) போட்டி போடுபவர்கள் அதில் (இத்தகைய கூலிகளைப் பெற்றுக் கொள்வதில்) போட்டி போடவும்.

27 அதில் (அம் மதுபானத்தில்) கலக்கப்படும் பானம் ‘தஸ்னீம்’ எனப்படும் சுவனத்தின் பானங்களில் மிகச்சிறந்த பானமாகும்.

28 (அது அல்லாஹ்விற்கு) நெருக்கமானவர்கள் குடிக்கும் ஓர் ஊற்றுக் கண்ணாகும்.

29 நிச்சயமாக குற்றமிழைத்தவர்கள் (நிராகரிப்பாளர்கள்) விசுவாசித்தவர்களைப் பார்த்து (பரிகாசித்து) சிரித்திக் கொண்டிருந்தார்கள்.

30 அவர்களைத் தாண்டிச் சென்றால் அவர்களின் கண்களால் சாடை செய்து (பரிகாசிப்பார்கள்.)

31 அவர்கள் (காபிர்கள்) தமது குடும்பத்தாரிடம் திரும்பிச் சென்றால் (தாம் விசுவாசிகளுக்குச் செய்ததைப் பார்த்து) களிப்புற்றவர்களாகச் செல்வார்கள்.

32 அவர்கள் இவர்களை (விசுவாசிகளை) கண்டால் நிச்சயமாக இவர்கள் வழிதவறியவர்கள் எனக் கூறுவார்கள்.

33 இவர்களை (முஸ்லிம்களை) ப்பாதுகாக்கப்பவர்களாக அவர்கள் அனுப்பப்படவில்லை. (அவர்களின் செயல்களைப் பார்த்து அவர்களை நல்வழிப்படுத்தும் பொறுப்பு அல்லாஹ்வால் காபிர்களுக்கு வழங்கப்படவில்லை.)

34 இன்றைய தினத்தில் (மறுமையில்) ஈமான் கொண்டவர் காபிர்களைப் பார்த்துச் சிரிப்பார்கள் (அவர்கள் தண்டிக்கப்படுவதையும் சக்தியற்றுப் போவதையும் பார்த்துச் சிரிப்பார்கள்.)

35 அவர்கள் (சுவனத்தில்) சிம்மாசனங்களில் இருந்தவாறு (காபிர்கள் தண்டிக்கப்படுவதைப்) பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

36 நிராகரிப்பாளர்களுக்கு அவர்கள் செய்தவற்றுக்குத் (தகுதியான கூலி) வழங்கப்பட்டுவிட்டது. (அவர்கள் அன்று முஸ்லிம்களைப் பார்த்துச் சிரித்தார்கள். முஸ்லிம்கள் இன்று காபிர்களைப் பார்த்துச் சிரிப்பார்கள்.)

## அல்- இன்சிகாக்

1 வானம் பிளந்துவிடும் நேரத்தில் (வானம் பிளப்பது இறுதி நாளின் அடையாளங்களில் ஒன்றாகும்.)

2 மேலும் அதனுடைய இரட்சகனுக்கு அது அடிபனியும் நேரத்தில், அவ்வாறு அது கட்டுப்படுவது அதற்குக் கட்டாயப்படுத்தப்பட்ட ஒரு விடயமாகும்.

3 (மலைகள் உடைக்கப்பட்டு) பூமியை (சமப்படுத்தப்பட்டு) விரிவானதாக ஆக்கப்படும் நேரத்தில்,

4 மேலும் அதில் உள்ளவற்றை (மரணித்தவர்களை) வெளியே தள்ளி அது ஒழிந்து விடுமானால்,

5 மேலும் அதனுடைய இரட்சகனுக்கு அது அடிபனியும் நேரத்தில், அவ்வாறு அது கட்டுப்படுவது அதற்குக் கட்டாயப்படுத்தப்பட்ட ஒரு விடயமாகும்.

6 மனிதனே! நிச்சியமாக நீ அல்லாஹ் (வைச் சந்திக்கும்) வரை (நலவில் அல்லது கெடுதியில்) கடுமையாக முயற்சிக்கின்றாய். அதன் பின் நீ (செய்த கிரிகைகளுடன்) அவனைச் சந்திக்கப் போகிறாய்.

7 எவர்களுடைய (நன்மை, தீமை) பதிவேடு வலக்கரத்தில் கொடுக்கப்படுகிறதோ, அவர்கள் (மு.ஃ.மின்கள்)

8 இலகுவான விசாரணையாக அவர் விசாரணை செய்யப்படுவார். (துருவித்துருவி

விசாரணை செய்யப்படாமல் அவர்களின் பாவங்களை எடுத்துக் காட்டப்படும். பின்பு அவர்களை அல்லாஹ் மன்னித்துவிடுவான். ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: விசாரணை யாரிடம் துருவிக் கேட்கப்படுகின்றதோ, அவர் தண்டிக்கப்படுவார். ஆயிஷா (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள்: அல்லாஹ் இலகுவான விசாரணையாக விசாரணை செய்யப்படும் என்று கூறியுள்ளானே எனக் கேட்டேன். அதற்கு நபியவர்கள், அது (அவருடைய பாவங்களை) எடுத்துக்காட்டுவதாகும். யாரிடமாவது மறுமையில் துருவிக் கேட்கப்படுமாயின் அவர் தண்டிக்கப்படுவார். -புகாரி,முஸ்லிம்-)

9 அவர் தன்னுடைய குடும்பத்தாரிடம் (தனக்குக் கிடைத்திருக்கும் கூலியைப் பார்த்து) சந்தோஷமாகச் செல்வார்.

10 எவனுடைய பட்டோலை முதுகுக்குப் பின்னால் கொடுக்கப்பட்டதோ அவன் (காபிர்களும், பாவிகளும்) (ஏனெனில், அவனது வலக்கை முகத்துடன் சேர்த்து விளங்கிடப்பட்டிருக்கும். அவனது இடக்கை பின்னால் காணப்படும்.)

11 அவன் நாசத்தை அழைப்பான். (அவனுடைய நன்மை, தீமை பதிவேட்டை வாசித்ததும் நாசமே!, கேடே! என அழைப்பான்.)

12 மேலும் அவன் நரகில் நுழைவான். (அவன் அதில் நுழைந்து அதன் உஷ்ணத்திற்கு ஈடு கொடுப்பான்.)

13 நிச்சயமாக அவன் (மனோ இச்சையைப் பின்பற்றி பெறுமையும் அடித்தவனாக) தனது குடும்பத்தாரிடம் சந்தோஷமாக இருந்தான்.

14 நிச்சயமாக அவன் (அல்லாஹ்வின் பால்) மீளமாட்டான் என எண்ணிக்கொண்டிருந்தான்.

15 ஆம் (அவன் அல்லாஹ்வின் பால் மீளுவான்.) நிச்சயமாக அவனின் இரட்சகன் அவனைப் பார்க்கிறவனாக இருந்தான். (அவனையும் அவன் செயல்களையும் அறிந்தவன். அவனுக்கு எதுவும் மறையமாட்டாது.)

16 செம்மேகத்தின் மீது சத்தியமாக.

17 இரவின் மீதும், அது தன்பால் ஒன்று சேர்த்துக்கொண்டவற்றின் மீதும் சத்தியமாக.

18 அது பூர்த்தியடைந்து விட்ட நேரத்தில் சந்திரன் மீதும் சத்தியமாக.

19 நீங்கள் நிச்சயமாக ஒரு கட்டத்தின் பின் இன்னொரு கட்டத்திற்கு மாறிமாறிச் செல்வீர்கள். (செல்வம், ஏழ்மை, வாலிபம்,வயோதிபம் போன்ற கட்டங்களுக்கு மாறுவீர்கள்.)

20 அவர்களுக்கு என்ன நிகழ்ந்திருக்கிறது? அவர்கள் ஈமான் கொள்ளாமல் இருக்கின்றார்கள்.

21 மேலும் அவர்களுக்கு குர்ஆனை ஓதிக் காண்பிக்கப்பட்டால் அவர்கள் ஸுஜூது செய்யமாட்டார்கள். (குர்ஆன் ஓதப்படும் சந்தர்ப்பத்தில் அவர்கள் அடிபனிந்து ஸுஜூது செய்வதற்கு என்ன தடை இருக்கின்றது?)

22 என்றாலும், நிராகரித்தவர்கள் (ஏகத்துவம், மறுமை, நற்கூலி, தண்டனை போன்றவற்றை உறுதிப்படுத்தும்) குர்ஆனை பொய்யாக்குகின்றார்கள்.

23 (அவர்களுடைய உள்ளத்தில்) அவர்கள் மறைத்துக் கொண்டிருப்பதை அல்லாஹ் மிக அறிந்தவன்.

24 அவர்களுக்கு நோவினையுள்ள தண்டனை உண்டு என நன்மாராயம் சொல்லுங்கள். (அவர்களைக் கேலிசெய்யும் வகையில் அல்லாஹ் அதை நன்மாராயம் எனக் குறிப்பிட்டுள்ளான்.)

25 விசுவாசம் கொண்டு நல் அமல்கள் செய்தவர்களைத் தவிர (அவர்கள் தண்டிக்கப் படமாட்டார்கள். அவர்களுக்கு அவர்கள் மீது சொல்லிக் காட்டப்படாத கூலி இருக்கின்றது.)

## அல்-புரூஜ்

1 மண்டலங்களுடைய வானத்தின் மீது சத்தியமாக (நட்சத்திரங்களுக்கு பன்னிரண்டு மண்டலங்கள் காணப்படுகின்றன.)

2 மேலும் வாக்களிக்கப்பட்ட நாளின் மீது சத்தியமாக (அது மறுமை நாளாகும்)

3 (படைப்புக்களில் அந்நாளில்) சாட்சி சொல்பவர்களின் மீது சத்தியமாக, (சாட்சி சொல்பவர்களால் அந்நாளில்) சாட்சி சொல்லப்படக் கூடியவற்றின் மீதும் சத்தியமாக

4 அகழிகளையுடையோர் சபிக்கப்பட்டுவிட்டனர். (அவர்கள் காபிரான ஓர் அரசனும் அவனது படையினரும் ஆவர். அவனுடைய பிரஜைகளில் சிலர் விசுவாசம் கொண்ட பொழுது அவர்களுக்காகப் பெரும் கிடங்கைத் தோண்டி அதில் நெருப்பை மூட்டி அதில் அவர்களை எரித்துவிட்டனர். அரசனும், அவனுடைய பரிவாளங்களும் பார்த்துக் கொண்டிருக்கும் நிலையிலேயே அவர்கள் கருகி விட்டனர்.

5 (அது) எரி பொருட்கள் உள்ள நெருப்பு (க்கிடங்காகும்)

6 அவர்கள் அகழிக்கு மேலால் உட்கார்ந்து கொண்டிருக்கும் நிலையில் (சபிக்கப்பட்டுவிட்டார்கள்).

7 (ஈமானை விட்டும் பின்வாங்க மறுத்த சந்தர்ப்பத்தில்) அவர்கள் முஃமின்களை (நெருப்பிலிடச்) செய்த (தண்டனையை)ப் பற்றி (அவர்களே அவர்களுக்கு விரோதமாக) சாட்சியம் சொல்வார்கள். (அவர்களுடைய கைகள், கால்கள், நாவுகள் என்பன சாட்சி சொல்லும்).

8 (எல்லா நிலையிலும்) புகழப்படக்கூடிய (யாவற்றையும்) மிகைக்கக் கூடிய அல்லாஹ்வை

سُورَةُ الْبُرُوجِ — ترتيبها ٨٥ — آياتها ٢٢

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

وَالسَّمَاءِ ذَاتِ الْبُرُوجِ ١ وَالْيَوْمِ الْمَوْعُودِ ٢ وَشَاهِدٍ وَمَشْهُودٍ
٣ قُتِلَ أَصْحَابُ الْأُخْدُودِ ٤ النَّارِ ذَاتِ الْوَقُودِ ٥ إِذْ هُمْ عَلَيْهَا
قُعُودٌ ٦ وَهُمْ عَلَىٰ مَا يَفْعَلُونَ بِالْمُؤْمِنِينَ شُهُودٌ ٧ وَمَا نَقَمُوا
مِنْهُمْ إِلَّا أَنْ يُؤْمِنُوا بِاللَّهِ الْعَزِيزِ الْحَمِيدِ ٨ الَّذِي لَهُ مُلْكُ
السَّمَاوَاتِ وَالْأَرْضِ ۚ وَاللَّهُ عَلَىٰ كُلِّ شَيْءٍ شَهِيدٌ ٩ إِنَّ الَّذِينَ
فَتَنُوا الْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ ثُمَّ لَمْ يَتُوبُوا فَلَهُمْ عَذَابُ جَهَنَّمَ وَلَهُمْ
عَذَابُ الْحَرِيقِ ١٠ إِنَّ الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ لَهُمْ
جَنَّاتٌ تَجْرِي مِنْ تَحْتِهَا الْأَنْهَارُ ۚ ذَٰلِكَ الْفَوْزُ الْكَبِيرُ ١١ إِنَّ بَطْشَ
رَبِّكَ لَشَدِيدٌ ١٢ إِنَّهُ هُوَ يُبْدِئُ وَيُعِيدُ ١٣ وَهُوَ الْغَفُورُ الْوَدُودُ ١٤
ذُو الْعَرْشِ الْمَجِيدُ ١٥ فَعَّالٌ لِمَا يُرِيدُ ١٦ هَلْ أَتَاكَ حَدِيثُ الْجُنُودِ
١٧ فِرْعَوْنَ وَثَمُودَ ١٨ بَلِ الَّذِينَ كَفَرُوا فِي تَكْذِيبٍ ١٩ وَاللَّهُ مِنْ
وَرَائِهِمْ مُحِيطٌ ٢٠ بَلْ هُوَ قُرْآنٌ مَجِيدٌ ٢١ فِي لَوْحٍ مَحْفُوظٍ ٢٢

سُورَةُ الطَّارِقِ — ترتيبها ٨٦ — آياتها ١٧

அவர்கள் விசுவாசித்தார்கள் என்ற காரணத்தைத் தவிர (வேறு எதற்காகவும் அவர்களை) இவர்கள் வேதனை செய்யவில்லை.

9 அல்லாஹ் யாவற்றையும் பார்த்துக் கொண்டிருப்பவன். (இவ்வசனத்தின் மூலம் அந்த கிடங்குடையவர்களுக்கு எச்சரிக்கை செய்வதோடு மு.ஃ.மீன்களுக்கு ஆறுதல் வாக்குமளிக்கிறான்.)

10 நிச்சயமாக விசுவாசிகளான ஆண்களுக்கும் பெண்களுக்கும் (அவர்கள் அவர்களுடைய மார்க்கத்தை விட்டு விடுவதற்காக நெருப்பிலிட்டு வேதனை செய்து) சோதனைகளை ஏற்படுத்தி விட்டு பாவமன்னிப்புக் கோராதவர்கள் அவர்களுக்கு நரக வேதனை இருக்கின்றது. (அவர்களைத் தீயிலிட்டு வேதனை செய்ததனால்) அவர்களுக்கு எரிக்கும் வேதனை உண்டு.

11 நிச்சயமாக விசுவாசம் கொண்டு நற்கிரிகைகள் செய்தவர்களுக்கு அவற்றுக்குக் கீழால் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும் (சுவனத்) தோப்புக்கள் இருக்கின்றன. அதுதான் பெரிய வெற்றியாகும்.

12 நிச்சயமாக உமது இரட்சகன் (அநியாயம் செய்பவர்களையும் அடக்குமுறை உடையோரையும்) பிடிப்பது (பிடிக்கும் முறை மிகக்) கடினமானது.

13 அவன் (படைப்புக்களை இவ்வுலகில்) ஆரம்பமாகவும் படைத்தான். மேலும் (மரணித்ததன் பின் அவர்களை) மீட்டியும் எழுப்புவான்.

14 அவன் (தனது மு.ஃ.மினான அடியார்களின் பாவங்களை) மிகுந்த மன்னிப்பவன். (அவற்றைக் கொண்டு அவர்களை மானபங்கப்படுத்தமாட்டான்) (அவன் நல்லடியார்களை அவன்) மிகுந்து விரும்புபவன்.

15 (மிகவும்) கண்ணியமிக்க அர்ஷையும் உடையவன்.

16 அவன் நாடியதைச் செய்து முடிப்பவன்.

17 (தமது நபிமார்களைப் பொய்யாக்கி அல்லாஹ்வினால் தண்டிக்கப்பட்டவர்களின் செய்தி உங்களுக்கு வந்துவிட்டது.

18 ஆயினும், பிர்அவ்னுடையவும் ஸமூத் கூட்டத்தினருடையவும் (செய்தி உங்களுக்கு வந்துவிட்டது.)

19 எனினும் (மக்கா) நிராகரிப்பாளர்கள் (உம்மையும், நீர் கொண்டுவந்தவற்றையும்) பொய்யாக்குவதிலேயே இருந்து கொண்டிருக்கிறார்கள். (அவர்கள் முன்னையவர்களுக்கு நடந்தவற்றைக் கொண்டு படிப்பினை பெறவில்லை).

20 அல்லாஹ் அவர்களுக்குப் பின்னால் (முன்னையவர்களைத் தண்டித்தது போன்று அவனது தண்டனையால் அவர்களையும்) சூழ்ந்துகொள்ளும் ஆற்றல் உள்ளவன்.

21 எனினும் அது (மிகவும்) கண்ணியமான குர்ஆனாகும். (அவர்கள் சொல்வது போன்று சூனியமோ, சாஸ்திரமோ அல்ல.)

22 (அது ஷைத்தான்களால் தொட முடியாதவாறு அல்லாஹ்வால்) பாதுகாக்கப்பட்டிருக்கும் பலகையில் (எழுதப்பட்டிருந்தது.)

## அத்தாரிக்

1 வானத்தின் மீதும், இரவில் தோன்றக்கூடியதின் மீதும் சத்தியமாக (இரவில் தோன்றக்கூடியது என்பது நட்சத்திரமாகும். அது இரவில் தோன்றி பகலில் மறைந்துவிடுவதனால் அதற்கு இவ்வார்த்தை பிரயோகிக்கப்பட்டுள்ளது.)

2 ‘தாரிக்’ என்றால் என்ன என்பதை உமக்கு எது அறிவித்துவிட்டது?

3 (இருளைத்) துளைத்து பிரகாசத்தை ஏற்படுத்தும் ஓர் நட்சத்திரமாகும்.

4 நிச்சயமாக ஒவ்வொரு ஆத்மாவும் அதற்குப் பாதுகாவளர்கள் இருக்கிறார்கள். (அவர்கள் ஒவ்வொரு மனிதனின் வார்த்தைகளையும், செயற்களையும் பதிவு செய்து பாதுகாக்கும் வானவர்கள் ஆவர்.

5 மனிதன் அவன் எதனால் படைக்கப்பட்டுள்ளான் என்பதைப் பார்க்கவும்.

بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

وَٱلسَّمَآءِ وَٱلطَّارِقِ (١) وَمَآ أَدۡرَىٰكَ مَا ٱلطَّارِقُ (٢) ٱلنَّجۡمُ ٱلثَّاقِبُ (٣) إِن كُلُّ
نَفۡسٖ لَّمَّا عَلَيۡهَا حَافِظٞ (٤) فَلۡيَنظُرِ ٱلۡإِنسَٰنُ مِمَّ خُلِقَ (٥) خُلِقَ مِن مَّآءٖ
دَافِقٖ (٦) يَخۡرُجُ مِنۢ بَيۡنِ ٱلصُّلۡبِ وَٱلتَّرَآئِبِ (٧) إِنَّهُۥ عَلَىٰ رَجۡعِهِۦ لَقَادِرٞ (٨)
يَوۡمَ تُبۡلَى ٱلسَّرَآئِرُ (٩) فَمَا لَهُۥ مِن قُوَّةٖ وَلَا نَاصِرٖ (١٠) وَٱلسَّمَآءِ ذَاتِ ٱلرَّجۡعِ (١١)
وَٱلۡأَرۡضِ ذَاتِ ٱلصَّدۡعِ (١٢) إِنَّهُۥ لَقَوۡلٞ فَصۡلٞ (١٣) وَمَا هُوَ بِٱلۡهَزۡلِ (١٤) إِنَّهُمۡ
يَكِيدُونَ كَيۡدٗا (١٥) وَأَكِيدُ كَيۡدٗا (١٦) فَمَهِّلِ ٱلۡكَٰفِرِينَ أَمۡهِلۡهُمۡ رُوَيۡدَۢا (١٧)

## سُورَةُ الأَعۡلَى

ترتيبها ٨٧ — آياتها ١٩

بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

سَبِّحِ ٱسۡمَ رَبِّكَ ٱلۡأَعۡلَى (١) ٱلَّذِي خَلَقَ فَسَوَّىٰ (٢) وَٱلَّذِي قَدَّرَ فَهَدَىٰ
(٣) وَٱلَّذِيٓ أَخۡرَجَ ٱلۡمَرۡعَىٰ (٤) فَجَعَلَهُۥ غُثَآءً أَحۡوَىٰ (٥) سَنُقۡرِئُكَ
فَلَا تَنسَىٰٓ (٦) إِلَّا مَا شَآءَ ٱللَّهُۚ إِنَّهُۥ يَعۡلَمُ ٱلۡجَهۡرَ وَمَا يَخۡفَىٰ (٧) وَنُيَسِّرُكَ
لِلۡيُسۡرَىٰ (٨) فَذَكِّرۡ إِن نَّفَعَتِ ٱلذِّكۡرَىٰ (٩) سَيَذَّكَّرُ مَن يَخۡشَىٰ (١٠)
وَيَتَجَنَّبُهَا ٱلۡأَشۡقَى (١١) ٱلَّذِي يَصۡلَى ٱلنَّارَ ٱلۡكُبۡرَىٰ (١٢) ثُمَّ لَا يَمُوتُ
فِيهَا وَلَا يَحۡيَىٰ (١٣) قَدۡ أَفۡلَحَ مَن تَزَكَّىٰ (١٤) وَذَكَرَ ٱسۡمَ رَبِّهِۦ فَصَلَّىٰ (١٥)

(6) குதித்து வெளிப்பட்டு (கர்ப்பறையில் கொட்டப்படும்) இந்திரியத் துளியிலிருந்து படைக்கப்பட்டுள்ளான். (அது ஆண், பெண் ஆகிய இருவரின் இந்திரியத்தின் கலவையாகும். ஏனெனில் இருவரின் இந்திரியம் மூலமே மனிதன் படைக்கப்பட்டுள்ளான்.)
(7) அது (அவனுடைய) முதுகெலும்பிலிருந்தும், (பெண்ணுடைய) மார்பெலும்புகளிலிருந்தும் வெளியாகின்றது. (இவ்விரண்டு நீருமின்றி பிள்ளை உருவாகமாட்டாது.)
(8) நிச்சயமாக (அல்லாஹ்) அவனை மீட்டி (எழுப்புவதற்கும்) சக்தி பெற்றவன்.
(9) உள்ளங்கள் சோதிக்கப்பட்டு (அவற்றிலுள்ள நிர்ணயங்களையும், எண்ணங்களையும் வெளியாக்கி அறியப்படும்) நாளையில் (அவன் மீட்கச் சக்திபெற்றவன்.)
(10) (தனக்கு வழங்கப்படும் தண்டனையை விட்டும் பாதுகாத்துக் கொள்ளும்) சக்தியோ, (அவனைப் பாதுகாக்கக் கூடிய) உதவியாளர்கள் எவருமோ அவனுக்கு இருக்கமாட்டார்கள்.)
(11) மழை உடைய வானத்தின் மீது சத்தியமாக
(12) (மரங்களும், தாவரங்களும் முளைப்பதற்கு வசதியாக) பிளந்துவிடக்கூடிய புவியின் மீது சத்தியமாக,
(13) நிச்சயமாக இது (குர்ஆன்) சத்தியத்தையும், அசத்தியத்தையும் பிரித்துக் காட்டும் ஒரு வார்த்தையாகும்.
(14) அது பரிகாசமான (ஒரு வார்த்தை) அல்ல
(15) நிச்சயமாக அவர்கள் (இறைத்தூதர் கொண்டு வந்த மார்க்கத்தை அழிப்பதற்கு) சூழ்ச்சி செய்கிறார்கள்.
(16) நானும் சூழ்ச்சி செய்கிறேன். (அவர்களை விட்டுப் பிடித்து அவர்களின் சூழ்ச்சிக்குக் கூலி வழங்குவேன்).
(17) நீங்கள் நிராகரிப்பாளர்களுக்கு சில காலங்கள் (அவகாசம் கொடுங்கள்).

## அஃலா

(1) ( سبحان ربي الاعلى ) என்ற வார்த்தையைக் கூறுவதன் மூலம் தகுதியில்லாத அனைத்தை விட்டும்) உமது நாயகனின் பெயரை நீ தூய்மைப்படுத்துவீராக.
(2) அவன் எத்தகையவன் என்றால், அவன் (மனிதனைப்) படைத்து (அவனது உடம்பை) சீரானதாக ஆக்கினான்.
(3) மேலும் அவன் (பலவிதமான படைப்பினங்களையும்) ஏற்படுத்தி அவை ஒவ்வொன்றிற்கும் (அவற்றிற்கு அவசியமானவற்றை அடைந்து கொள்வதற்கு) வழியும் காட்டினான்.
(4) மேலும் அவன் மேயும் தளங்களை (புற்பூண்டுகள் உள்ள நிலங்களை) வெளியாக்கினான்.
(5) பின்பு அவன் அதை காய்ந்து கருகிய சருகுகளாக ஆக்கினான்.
(6) நாம் உங்களுக்கு குர்ஆனை ஓதிக் காண்பிப்போம். நீங்கள் அதை மறக்கமாட்டீர்கள். (வஹியின் ஆரம்ப காலத்தில் ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபியவர்களுக்கு அதை ஓதிக் காட்டும் பொழுது நபியவர்கள் மறதியைப் பயந்து அவசரப்பட்டு ஓத முயற்சிப்பார்கள். அச்சந்தர்ப்பத்தில் இவ்வசனம் இறங்கியது. அல்லாஹ் அவர்களின் உள்ளத்தில் அல்-குர்ஆன் முழுவதையும் பாதுகாத்துக் கொடுத்தான். அவர்கள் எதையும் மறக்கவில்லை.)
(7) அல்லாஹ் (நீங்கள் எதை மறக்க வேண்டும் என நாடுகிறானோ) அவற்றைத் தவிர (நீங்கள் மறக்க மாட்டீர்கள்) நிச்சயமாக அவன் பகிரங்கமானவற்றையும், மறையக்கூடியவற்றையும் அறிவான்.
(8) மேலும் நாம் இலகுவான (மார்க்கத்தின்பால் பாதையை) உமக்கு இலகுவாக்கி வைப்போம். (சுவனத்தின் அமல்களை உமக்கு இலகுவாக்கி வைப்போம்.)
(9) (முஹம்மதே) உபதேசம் பயனளிக்குமாயின் நீர் (உமக்கு நாம் அறிவித்துத் தந்தவற்றைக் கொண்டு) உபதேசம் புரிவீராக. (உபதேசம் புரியப்பட்டதற்குப் பின்பும் தொடர்ந்தும் பெருமை கொண்டு மனோஇச்சையைப் பின்பற்றி உபதேசத்தை மறுப்பவர்களுக்கு நீங்கள்

بَلْ تُؤْثِرُونَ ٱلْحَيَوٰةَ ٱلدُّنْيَا ١٦ وَٱلْءَاخِرَةُ خَيْرٌ وَأَبْقَىٰٓ ١٧ إِنَّ
هَـٰذَا لَفِى ٱلصُّحُفِ ٱلْأُولَىٰ ١٨ صُحُفِ إِبْرَٰهِيمَ وَمُوسَىٰ ١٩

## سُورَةُ الغَاشِيَةِ

ترتيبها ٨٨ — آياتها ٢٦

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَـٰنِ ٱلرَّحِيمِ

هَلْ أَتَىٰكَ حَدِيثُ ٱلْغَـٰشِيَةِ ١ وُجُوهٌ يَوْمَئِذٍ خَـٰشِعَةٌ ٢
عَامِلَةٌ نَّاصِبَةٌ ٣ تَصْلَىٰ نَارًا حَامِيَةً ٤ تُسْقَىٰ مِنْ عَيْنٍ ءَانِيَةٍ ٥
لَّيْسَ لَهُمْ طَعَامٌ إِلَّا مِن ضَرِيعٍ ٦ لَّا يُسْمِنُ وَلَا يُغْنِى مِن جُوعٍ ٧
وُجُوهٌ يَوْمَئِذٍ نَّاعِمَةٌ ٨ لِّسَعْيِهَا رَاضِيَةٌ ٩ فِى جَنَّةٍ عَالِيَةٍ ١٠
لَّا تَسْمَعُ فِيهَا لَـٰغِيَةً ١١ فِيهَا عَيْنٌ جَارِيَةٌ ١٢ فِيهَا سُرُرٌ مَّرْفُوعَةٌ ١٣
وَأَكْوَابٌ مَّوْضُوعَةٌ ١٤ وَنَمَارِقُ مَصْفُوفَةٌ ١٥ وَزَرَابِىُّ مَبْثُوثَةٌ ١٦
أَفَلَا يَنظُرُونَ إِلَى ٱلْإِبِلِ كَيْفَ خُلِقَتْ ١٧ وَإِلَى ٱلسَّمَآءِ كَيْفَ
رُفِعَتْ ١٨ وَإِلَى ٱلْجِبَالِ كَيْفَ نُصِبَتْ ١٩ وَإِلَى ٱلْأَرْضِ كَيْفَ
سُطِحَتْ ٢٠ فَذَكِّرْ إِنَّمَآ أَنتَ مُذَكِّرٌ ٢١ لَّسْتَ عَلَيْهِم
بِمُصَيْطِرٍ ٢٢ إِلَّا مَن تَوَلَّىٰ وَكَفَرَ ٢٣ فَيُعَذِّبُهُ ٱللَّهُ ٱلْعَذَابَ
ٱلْأَكْبَرَ ٢٤ إِنَّ إِلَيْنَآ إِيَابَهُمْ ٢٥ ثُمَّ إِنَّ عَلَيْنَا حِسَابَهُم ٢٦

மீண்டும் மீண்டும் உபதேசம் செய்ய வேண்டியதில்லை. முதல் அழைப்பைப் பொறுத்தவரை அதை வேறுபாடின்றி எல்லோருக்கும் செய்வது கடமையாகும்.)

10 (அல்லாஹ்வைப்) பயப்படுபவர்கள் உபதேசம் பெற்று (நேர்வழியையும், பயத்தையும் அதிகரித்துக் கொள்வார்கள்.)

11 துர்ப்பாக்கியவான் அதை (ஏற்காமல்) தவிர்ந்து (தூரமாகிக் கொள்வான்.)

12 அவன் எத்தகையவன் எனில் பிரமாண்டமான (மறுமையின் நரக) நெருப்பில் நுழைவான்.

13 பின்பு அவன் அதில் மரணித்து (தண்டனையிலிருந்து) விடுபடமாட்டான். மேலும் (அதில்) நிம்மதியாக வாழவும் மாட்டான்.

14 (இணைவைத்தல், பாவங்களைவிட்டும்) தூய்மையானவர்கள் திட்டமாக வெற்றி பெற்றுவிட்டார்கள்.

15 மேலும் (தனது நாவினால்) தனது நாயனின் பெயரை ஞாபகித்து தொழுதவன் (வெற்றி பெற்று விட்டான்.)

16 எனினும் நீங்கள் (இவ்வுலகின்) தாழ்ந்த வாழ்க்கையைத் தேர்ந்தெடுக்கின்றீர்கள்.

17 மறுமை (வாழ்க்கை) சிறந்ததும் நிலையானதுமாகும்.

18 நிச்சயமாக இது (இணைவைத்தல் போன்றவற்றைவிட்டும் தூய்மையானவர் வெற்றி பெறுவார் என்பது) முன்னைய வேதங்களிலும் இருக்கின்றது.

19 என்றால் இப்றாஹீம், மூஸா (அலை) ஆகியோரின் வேதங்களிலும் இருக்கின்றது.

## அல்-காசியா

1 (தனது பயங்கர நிகழ்வுகளினால் படைப்பினங்கள் எல்லோரையும்) மூடிக்கொள்ளக்கூடிய (மறுமையின்) செய்தி (நபியே) திட்டமாக உம்மிடம் வந்துவிட்டது.

2 சில முகங்கள் அன்றைய தினத்தில் பயந்துகொண்டிருக்கும். (மறுமையயில் மனிதர்கள் இரு பிரிவினராகக் காணப்படுவர். ஒரு பிரிவினர் அவர்கள் வேதனைகளுக்கு முகம் கொடுப்பதால் அவர்களுடைய முகங்கள் பயந்து கொண்டிருக்கும்.)

3 (அவை உலகில்) அமல்கள் செய்து களைப்படைந்தன. (அவர்கள் இணைவைத்திருந்ததால் அவற்றிற்கு எந்தக் கூலியும் வழங்கப் படமாட்டாது.)

4 (அம்முகங்கள்) கொதித்துக் கொண்டிருக்கும் நெருப்பில் நுழையும்.

5 கடுமையாகக் கொதித்துக் கொண்டிருக்கும் ஊற்றுக் கண்ணிலிருந்து புகட்டப்படுவார்கள்.

6 அவர்களுக்கு ‘ழரீஉ’ எனப்படும் காய்ந்த முள் மரங்களிலிருந்தே தவிர வேறு உணவுகள் இல்லை.

7 அது கொழுப்படையவும் செய்யாது. பசியைப் போக்கவும் மாட்டாது.

8 மேலும் சில முகங்கள் சந்தோஷமானவையாகக் காணப்படும். (அவர்கள் இரண்டாம் பிரிவினர். அவர்களுக்கு அல்லாஹ் வைத்திருக்கும் கூலிகளை அறிந்ததும் அவர்களின் முகங்கள் பிரகாசமடையும்.)

9 அவர்களின் முயற்சியை அவை பொருந்திக் கொள்ளும். (அவர்களின் முயற்சிக்கு வழங்கப்படும் கூலியை அவர்கள் பொருந்திக் கொள்வார்கள்.)

10 அவர்கள் உயர்ந்த சுவனத்தில் இருப்பார்கள்.

11 வீணான (பாவமான) வார்த்தைகளை அவர்கள் கேட்கமாட்டார்கள்.

12 அதில் ஓடக்கூடிய ஊற்றுக்கள் இருக்கின்றன.

13 உயர்த்தப்பட்ட கட்டில்களும் அதில் இருக்கின்றன.

14 அவற்றில் வைக்கப்பட்டிருக்கும் குவளைகளும் இருக்கின்றன.

15 ஒன்றுடன் ஒன்று (ஒழுங்காக) சேர்த்துவைக்கப்பட்டிருக்கும் தலையணைகளும் அங்கு இருக்கின்றன.

16 மெல்லிய கோடுள்ள அழகிய விரிப்புக்களும் (அதில் இருக்கின்றன.)

17 (பெரிய உடம்பையும், அதிக வளத்தையும், அதிசயத்தக்க பல பண்புகளையும் கொண்டு படைக்கப்பட்டுள்ள) ஒட்டகத்தை அது எவ்வாறு படைக்கப்பட்டுள்ளது என அவர்கள்

ترتيبها ٨٩ — سُورَةُ الفَجْرِ — آياتها ٣٠

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

وَالْفَجْرِ (١) وَلَيَالٍ عَشْرٍ (٢) وَالشَّفْعِ وَالْوَتْرِ (٣) وَاللَّيْلِ إِذَا يَسْرِ
(٤) هَلْ فِي ذَٰلِكَ قَسَمٌ لِّذِي حِجْرٍ (٥) أَلَمْ تَرَ كَيْفَ فَعَلَ رَبُّكَ بِعَادٍ
(٦) إِرَمَ ذَاتِ الْعِمَادِ (٧) الَّتِي لَمْ يُخْلَقْ مِثْلُهَا فِي الْبِلَادِ (٨)
وَثَمُودَ الَّذِينَ جَابُوا الصَّخْرَ بِالْوَادِ (٩) وَفِرْعَوْنَ ذِي الْأَوْتَادِ (١٠)
الَّذِينَ طَغَوْا فِي الْبِلَادِ (١١) فَأَكْثَرُوا فِيهَا الْفَسَادَ (١٢) فَصَبَّ
عَلَيْهِمْ رَبُّكَ سَوْطَ عَذَابٍ (١٣) إِنَّ رَبَّكَ لَبِالْمِرْصَادِ (١٤) فَأَمَّا
الْإِنسَانُ إِذَا مَا ابْتَلَاهُ رَبُّهُ فَأَكْرَمَهُ وَنَعَّمَهُ فَيَقُولُ رَبِّي أَكْرَمَنِ
(١٥) وَأَمَّا إِذَا مَا ابْتَلَاهُ فَقَدَرَ عَلَيْهِ رِزْقَهُ فَيَقُولُ رَبِّي أَهَانَنِ (١٦)
كَلَّا بَل لَّا تُكْرِمُونَ الْيَتِيمَ (١٧) وَلَا تَحَاضُّونَ عَلَىٰ طَعَامِ
الْمِسْكِينِ (١٨) وَتَأْكُلُونَ التُّرَاثَ أَكْلًا لَّمًّا (١٩)
وَتُحِبُّونَ الْمَالَ حُبًّا جَمًّا (٢٠) كَلَّا إِذَا دُكَّتِ الْأَرْضُ دَكًّا
دَكًّا (٢١) وَجَاءَ رَبُّكَ وَالْمَلَكُ صَفًّا صَفًّا (٢٢) وَجِيءَ يَوْمَئِذٍ
بِجَهَنَّمَ يَوْمَئِذٍ يَتَذَكَّرُ الْإِنسَانُ وَأَنَّىٰ لَهُ الذِّكْرَىٰ (٢٣)

பார்க்கமாட்டார்களா?
18 மேலும் (தூண்கள் எதுவுமின்றி உயர்த்தப்பட்டுள்ள) வானத்தை அது எவ்வாறு உயர்த்தப்பட்டுள்ளது என அவர்கள் பார்க்க மாட்டார்களா? (அது உயர்த்தப்பட்டுள்ள விதம் புத்திக்கும் அறிவுக்கும் அப்பாற்பட்டதாகும்.)
19 மேலும் (ஆடாமல்,அசையாமல் உறுதியாக நட்டப்பட்டுள்ள) மலைகளை அது எவ்வாறு நட்டப்பட்டுள்ளது எனப் பார்க்கமாட்டார்களா?
20 (யாவரும் பயன் பெறும் வகையில் விரிவுபடுத்தப்பட்டுள்ள) பூமியை அது எவ்வாறு விரிவுபடுத்தப்பட்டுள்ளது (எனப் பார்க்க மாட்டார்களா?)
21 ((முஹம்மதே!) நீங்கள் (அவர்களுக்கு) உபதேசம் செய்து (அச்சத்தை ஏற்படுத்துங்கள்). நீங்கள் உபதேசம் செய்பவர் மாத்திரம்தான். (உங்கள் கடமை உபதேசம் செய்வது மாத்திரம் தான்).
22 (நீங்கள் அவர்களை ஈமான் கொள்ள வற்புறுத்துவதற்கு) நீங்கள் அவர்களின் பேரில் அதிகாரம் செலுத்துபவர் அல்லர்.
23 என்றாலும் (உபதேசத்தை ஏற்றுக் கொள்வதை விட்டும்) பின் வாங்கி நிராகரித்தவர்கள்.
24 அல்லாஹ் அவர்களை பெரும் தண்டனையாக தண்டித்து விடுவான். (அது நரகத்தின் வேதனையாகும்)
25 அவர்கள்(மரணத்தின் பின்) மீள்வது எங்களிடமாகும்.
26 (மறுமையில் எங்கள் பால் மீண்டதன் பின்) அவர்களை விசாரணை செய்வது (தண்டிப்பது) எங்கள் பொறுப்பாகும்.

## அல்-பஜ்ர்

1 வைகறை நேரத்தின் மீது சத்தியமாக. (முஜாஹித் (ரஹ்) கூறுகின்றார்கள்: ஹஜ் பெருநாள் தினத்தின் வைகறை மீது சத்தியமாக.)
2 (துல் ஹஜ் மாதத்தின் ஆரம்ப) பத்து நாட்களின் மீது சத்தியமாக.
3 இரட்டையிலான எண்ணிக்கைகள் மீதும், ஒற்றையிலான எண்ணிக்கைகள் மீதும் சத்தியமாக. (இரட்டை எண்ணிக்கை என்பது ‘அய்யாமுத் தஷ்ரீக்’ நாட்களில் முந்திய இரண்டு நாட்கள் எனவும், ஒற்றை என்பது அவற்றில் மூன்றாவது நாள் எனவும் கூறப்பட்டுள்ளது.)
4 அது முன்னோக்கி வரும் நேரத்தில் இரவு நேரத்தின் மீது சத்தியமாக.
5 அதில் புத்தியுடையவருக்கு (நம்பிக்கையை ஏற்படுத்தும்) சத்தியம் இருக்கின்றது. (புத்தியுடையவர் இவை அல்லாஹ் சத்தியம் செய்வதற்குத் தகுதியானவை என அறிந்து கொள்வார்.)
6 உமது இரட்சகன் ‘ஆத்’ கூட்டத்தினருக்கு எவ்வாறு செய்தான் (தண்டித்தான்) என்பதை நீர் அறியவில்லையா?
7 பெரும் பலசாலிகளான ‘இரம்’ சந்ததியினருக்கு (அவன் எவ்வாறு செய்தான் என்பதையும் நீர் அறியவில்லையா? இரம் என்பது ஆத் கூட்டத்தினரின் மற்றொரு பெயராகும். இரம் என்பது அவர்களுடைய பாட்டனின் பெயர் என்றும், அவர்கள் வாழ்ந்த இடத்தின் பெயர் என்றும் கூறப்பட்டுள்ளது.)
8 அவர்கள் எத்தகையவர்களெனில் ஊர்களில் (அவர்களைப் போன்ற பலசாலிகள் இருக்கும் வேறொரு) ஊர் படைக்கப்படவில்லை.
9 இன்னும் பள்ளத்தாக்கின் பாறைகளை (வீடாக) க்குடைந்த ‘ஸமூத்’ கூட்டத்தினர்களை (எவ்வாறு செய்தான் என நீர் அறியவில்லையா? அவர்கள மலைகளைக் குடைந்து வீடுகளை அமைத்துக் கொள்வார்கள். அவர்களின் பள்ளத்தாக்கு ஹிஜ்ர் என்ற இடத்தில் அல்லது ‘வாதில் குறா’ என்ற இடத்தில் உள்ளது.)
10 பெரும் படைகளையுடைய பிர்அவ்னை (அல்லாஹ் எவ்வாறு செய்தான் என்பதை நீர் அறியவில்லையா?)
11 அவர்கள் எத்தகையவர்களெனில் ஊர்களில் அத்து மீறிச் செயற்பட்டார்கள்.
12 பின்பு, அவர்கள் குழப்பத்தையும் அதிகப் படுத்தினார்கள்.

13 உமது இரட்சகன் அவர்களின் (அந்தக் குழப்பங்கள்) மீது (கடுமையான) தண்டனையைக் கொட்டினான்.
14 நிச்சயமாக உமது இரட்சகன் கண்காணித்துக் கொண்டிருக்கிறான். (கூலி கொடுக்கும் பொருட்டு அவர்கள் செயல்களைக் கண்காணித்துக் கொண்டிருக்கிறான்)
15 மனிதன், அவனது இரட்சகன் அவனை சோதிக்க நாடி (செல்வங்களைக் கொடுத்து) அவனை கண்ணியப்படுத்தி (அவனது இரணங்களைத் தாராளமாகக் கொடுத்து) அவனுக்கு அருள்களை வழங்கினால், எனது நாயன் என்னை கண்ணியப்படுத்திவிட்டான் எனக் கூறுவான்.
16 மேலும் அவனைச் சோதிக்க நாடி அவனுடைய இரணத்தை மட்டுப்படுத்திக் கொடுத்தால் எனது இரட்சகன் என்னை இழிவுபடுத்தி விட்டான் எனக் கூறுவான். (இது காபிரின் பண்பாகும். ஒரு விசுவாசி அவனுக்கு அல்லாஹ் நன்மைகளுக்கு அனுகூலம் புரிவதை கண்ணியமாகக் கருதுவான். அவனுக்கு பாவங்களுக்கு அனுகூலம் புரிவதை இழிவாகக் கருதுவான்.)
17 அவ்வாறல்ல. எனினும் நீங்கள் (அல்லாஹ் உங்களுக்கு அருளியவற்றிலிருந்து கொடுத்து) அநாதைகளை கண்ணியப்படுத்த மாட்டீர்கள்.
18 மேலும். நீங்கள் ஏழைகளுக்கு உணவளிக்க (உங்களையோ, மற்றவர்களையோ) தூண்டமாட்டீர்கள். (அந்த ஏழை உங்கள் எந்த வாழ்வாதாரங்களும் இன்றி வாழ்ந்து அதே நிலையில் மரணித்தும் விடுவார்.)
19 மேலும் நீங்கள் (அநாதைகள், பெண்கள், பலவீனமானவர்கள் போன்றவர்களுடைய) அனந்தரங்களை அதிகமாகச் சாப்பிடுகின்றீர்கள்.
20 மேலும் நீங்கள் செல்வங்களை மிகக் கடுமையாக விரும்புகின்றீர்கள்.
21 அவ்வாறு நீங்கள் செய்ய வேண்டாம். பூமியைக் கடுமையாக (ப்பல விடுத்தங்கள் உசுப்பப்பட்டால்)
22 இன்னும் (தனது அடியார்களுக்கிடையில் தீர்ப்புச் செய்வதற்காக) உங்களுடைய நாயனும், வானவர்களும் வருவார்களாயின்,
23 இன்னும் அத்தினத்தில் நரகத்தை (க்கயிற்றினால் இழுத்துக்) கொண்டு வரப்பட்டால் அந்நாளில் மனிதன் சிந்தனை பெற்று யோசிப்பான். (அன்று) ஞாபகிப்பது எங்ஙனம் (அவனுக்குப் பயனளிக்கப் போகின்றது?)
24 நான் எனது (மறு உலக) வாழ்க்கைக்கு (நல்லமல்களை) முற்படுத்தியிருக்க வேண்டாமா? எனக் கூறுவான்.
25 அன்றைய தினத்தில் அல்லாஹ் வேதனை செய்வது போன்று யாரும் வேதனை செய்யமாட்டார்கள்.
26 மேலும் (சங்கிலிகளாலும், விளங்குகளாலும்) அல்லாஹ் கட்டுவதைப் போன்று யாரும் கட்டமாட்டார்கள்.
27 (அல்லாஹ்வை சந்தேகமின்றி விசுவாசித்து, உறுதி கொண்டு) மன அமைதி அடைந்த ஆத்மாவே.
28 உனக்கு வழங்கப்படும் கூலியைப் பொருந்தியவனாக உனது நாயனின் பால் மீளவாயாக.
29 மேலும் எனது (நல்) அடியார்கள் (கூட்டத்தில்) நீயும் நுழைந்து கொள்.
30 மேலும் எனது சுவனபதியில் நுழைந்து கொள் (அது தான் கண்ணியமாகும் அதற்கு மேல் வேறு கண்ணியம் ஒன்றில்லை.)

## அல்-பலத்

1 நான் இந்த ஊரை (மக்காவை) க்கொண்டு சத்தியம் செய்கிறேன். (அல்லாஹ் இங்கு புண்ணிய பூமியான மக்காவைக் கொண்டு அதன் சிறப்பை உணர்த்துமுகமாக சத்தியம் செய்துள்ளான். ஏனெனில் அதில் கஃபதுல்லாஹ் இருக்கின்றது. மேலும் அது இஸ்மாஈல் (அலை) அவர்களினதும், முஹம்மத் (ஸல்) அவர்களினதும் ஊராகும். அத்துடன் ஹஜ் கிரிகையின் வணக்கங்களும் அங்கே தான் நடைபெறுகின்றன.)
2 நீங்கள் இந்த ஊரில் இறங்கியிருக்கின்றீர்கள் (வசிக்கின்றீர்கள் இவ்வூர் நீங்கள் வசிப்பதன் காரணமாக கண்ணியமானதாகவும், சிறப்பானதாகவும் மாறிவிட்டது.)
3 மேலும் தந்தையைக் கொண்டும், அவர் பெற்ற பிள்ளைகளைக் கொண்டும் சத்தியம் செய்கிறேன். (ஆதம் (அலை) அவர்களைக் கொண்டும், அவர்களது சந்ததியினரைக் கொண்டும், அல்லது ஒவ்வொரு உயிரினத்தினதும் பெற்றோரைக் கொண்டும், அவை பெற்றவற்றைக் கொண்டும் சத்தியம் செய்கிறேன்.
4 நிச்சயமாக நாம் மனிதனை கஷ்டங்களுக்கு ஈடு கொடுப்பவனாகப் படைத்துள்ளோம். (அவன் மரணிக்கும் வரை இவ்வுலகில் பல கஷ்டங்களுக்கு ஈடு கொடுக்கின்றான். அவன் மரணித்ததும் மண்ணறையினதும், மறுமை வாழ்வினதும் சிரமங்களுக்கு முகம் கொடுக்கின்றான்).
5 அவன் (என்ன பாவங்கள் செய்தாலும்) அவனைத் தண்டிப்பதற்கு யாரும் சக்தி பெறமாட்டார்கள் என மனிதன் நினைக்கின்றானா?
6 ஒன்று சேர்த்திருந்த (பெரும்) செல்வத்தை நான் செலவு செய்து விட்டேன் என்று அவன் சொல்கின்றான்.
7 அவனை யாரும் காணவில்லை என அவன் எண்ணுகின்றானா? (அவன் எங்கிருந்து

يَقُولُ يَٰلَيۡتَنِي قَدَّمۡتُ لِحَيَاتِي ﴿٢٤﴾ فَيَوۡمَئِذٖ لَّا يُعَذِّبُ عَذَابَهُۥٓ أَحَدٞ ﴿٢٥﴾
وَلَا يُوثِقُ وَثَاقَهُۥٓ أَحَدٞ ﴿٢٦﴾ يَٰٓأَيَّتُهَا ٱلنَّفۡسُ ٱلۡمُطۡمَئِنَّةُ ﴿٢٧﴾ ٱرۡجِعِيٓ
إِلَىٰ رَبِّكِ رَاضِيَةٗ مَّرۡضِيَّةٗ ﴿٢٨﴾ فَٱدۡخُلِي فِي عِبَٰدِي ﴿٢٩﴾ وَٱدۡخُلِي جَنَّتِي ﴿٣٠﴾

## سُورَةُ البَلَدِ

آياتها ٢٠ — ترتيبها ٩٠

بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

لَآ أُقۡسِمُ بِهَٰذَا ٱلۡبَلَدِ ﴿١﴾ وَأَنتَ حِلُّۢ بِهَٰذَا ٱلۡبَلَدِ ﴿٢﴾ وَوَالِدٖ وَمَا وَلَدَ
﴿٣﴾ لَقَدۡ خَلَقۡنَا ٱلۡإِنسَٰنَ فِي كَبَدٍ ﴿٤﴾ أَيَحۡسَبُ أَن لَّن يَقۡدِرَ عَلَيۡهِ
أَحَدٞ ﴿٥﴾ يَقُولُ أَهۡلَكۡتُ مَالٗا لُّبَدًا ﴿٦﴾ أَيَحۡسَبُ أَن لَّمۡ يَرَهُۥٓ أَحَدٌ
﴿٧﴾ أَلَمۡ نَجۡعَل لَّهُۥ عَيۡنَيۡنِ ﴿٨﴾ وَلِسَانٗا وَشَفَتَيۡنِ ﴿٩﴾ وَهَدَيۡنَٰهُ
ٱلنَّجۡدَيۡنِ ﴿١٠﴾ فَلَا ٱقۡتَحَمَ ٱلۡعَقَبَةَ ﴿١١﴾ وَمَآ أَدۡرَىٰكَ مَا ٱلۡعَقَبَةُ ﴿١٢﴾
فَكُّ رَقَبَةٍ ﴿١٣﴾ أَوۡ إِطۡعَٰمٞ فِي يَوۡمٖ ذِي مَسۡغَبَةٖ ﴿١٤﴾ يَتِيمٗا ذَا مَقۡرَبَةٍ
﴿١٥﴾ أَوۡ مِسۡكِينٗا ذَا مَتۡرَبَةٖ ﴿١٦﴾ ثُمَّ كَانَ مِنَ ٱلَّذِينَ ءَامَنُواْ وَتَوَاصَوۡاْ
بِٱلصَّبۡرِ وَتَوَاصَوۡاْ بِٱلۡمَرۡحَمَةِ ﴿١٧﴾ أُوْلَٰٓئِكَ أَصۡحَٰبُ ٱلۡمَيۡمَنَةِ ﴿١٨﴾ وَٱلَّذِينَ
كَفَرُواْ بِـَٔايَٰتِنَا هُمۡ أَصۡحَٰبُ ٱلۡمَشۡـَٔمَةِ ﴿١٩﴾ عَلَيۡهِمۡ نَارٞ مُّؤۡصَدَةُۢ ﴿٢٠﴾

## سُورَةُ الشَّمۡسِ

آياتها ١٥ — ترتيبها ٩١

சம்பாதித்து, எவ்வாறு செலவு செய்தான் என்பதை அல்லாஹ் அறியவில்லை என நினைக்கின்றானா?)
8 அவனுக்கு நாம் இரண்டு கண்களை ஆக்கவில்லையா?
9 மேலும் ஒரு நாவையும் இரண்டு உதடுகளையும் ஆக்கவில்லையா?
10 அவனுக்கு நாம் (நன்மை, தீமை ஆகிய இரண்டின்) பாதைகளையும் காட்டிக் கொடுக்கவில்லையா?
11 அவன் தடையைக் கடந்து செல்லக் கூடாதா? (அவனுக்கும் அல்லாஹ்விற்குக் கீழ்படிதலுக்கும் இடையில் தடையாகவுள்ள அம்சங்களைக் கிழித்து தாண்டிச் செல்லக் கூடாதா?
12 தடை என்றால் என்ன என்பதை உமக்கு எது அறிவித்துவிட்டது?
13 (அது) ஓர் அடிமையை விடுதலை செய்து (உரிமையிடுவதாகும்)
14 அல்லது பஞ்சமுள்ள (உணவுகள் தட்டுப்பாடாகவுள்ள) ஒரு நாளில் உணவளிப்பதாகும்.
15 உறவினரான அநாதைக்கு (தகப்பனை இழந்த சிறுவருக்கு உணவளிப்பதாகும்.)
16 அல்லது மிகவும் வறியவரான ஓர் ஏழைக்கு (உணவளிப்பதாகும்.)
17 பின்பு (இவற்றைச் செய்து விட்டு) அவன் ஈமான் கொண்டு நல்லமல்கள் செய்தவர்களில் நின்றும் ஆகிவிடக்கூடாதா? (ஏனெனில் இவ்வணக்கங்கள் முஃமின்களுக்கு மாத்திரமே பயனளிக்கும். மேலும் அவர்கள் வணக்க வழிபாட்டைச் செய்வதிலும், பாவங்களைத் தவிர்ந்து கொள்வதிலும் சோதனைகளுடைய சந்தர்ப்பத்திலும் பொறுமை செய்யும் படி) ஒருவருக்கொருவர் உபதேசம் செய்தும், (அல்லாஹ்வின் அடியார்களுக்கு) இரக்கம் காட்டுவது கொண்டும் ஒருவருக்கொருவர் உபதேசம் செய்யக்கூடியவர்களில் நின்றும் அவர்கள் ஆகிவிடக்கூடாதா,?
18 இவர்கள் தான் வலதை உடையவர்கள்.
19 எமது வசனங்களை நிராகரித்தார்களே அவர்கள் இடதை உடையவர்கள்.
20 மூடிக்கொள்ளக் கூடிய (நரக) நெருப்பு அவர்களுக்கிருக்கின்றது.

## அஷ்ஷம்ஸ்

1 சூரியனின் மீதும் அதனுடைய பிரகாசத்தின் மீதும் சத்தியமாக (லுஹா என்பது சூரியன் அடிவானிலிந்து உயர்ந்து அதன் ஒளி பூரணமாகும் நேரமாகும்.)
2 அதை (சூரியனை அது மறைந்ததற்குப் பின்) அடுத்து வரும் நிலையில் சந்திரன் மீது சத்தியமாக.
3 மேலும் அதை (சூரியனை) தெளிவானதாக ஆக்கும் பகலின் மீது சத்தியமாக.
4 அதை (சூரியனைத் தனது இருளினால்) மூடிக்கொள்ளும் இரவு நேரத்தின் மீது சத்தியமாக.
5 வானத்தின் மீதும், அதை நிர்மானித்தவனின் மீதும் சத்தியமாக.
6 பூமியின் மீதும் அதை (எல்லாப் பாகங்களிலும்) மட்டப்படுத்தி (விரிவுபடுத்தி)யவனின் மீதும் சத்தியமாக.
7 ஆத்மாவின் மீதும் அதனை செம்மைப் படுத்தியவனின் மீதும் சத்தியமாக.(அதன் உறுப்புக்களை உருவாக்கி அவற்றிற்கு உயிரைக் கொடுத்து, அவனுக்கு மனோ வலிமைகளையும் ஏற்படுத்தி ஆச்சரியமான அறிவுரைகளையும் ஏற்படுத்தி வைத்தான். மேலும் நிலையாக இருக்கக்கூடியதாகவும் ஆக்கினான். நபியவர்கள் கூறினார்கள். (ஒவ்வொரு பிள்ளையும் மார்க்கத்தை ஏற்கும் நிலையில் பிறக்கின்றான். அவனை அவனது இரு பெற்றோர்களும் தான் யூதனாகவும், கிறிஸ்தவனாகவும், நெருப்பு வணங்கியாகவும் மாற்றுகின்றார்கள்).
8 பின்பு, அவன் அதற்கு (ஆத்மாவிற்கு) அதன் கெடுதிகளையும் அதற்கு இறையச்சத்தை ஏற்படுத்தக் கூடிய விடயங்களையும் அறிவித்துக் கொடுத்தான்.
9 அதைத் தூய்மையாக்கியவன் திட்டமாக வெற்றி பெற்று விட்டான். (தனது உள்ளத்தை தூய்மைப் படுத்தி இறையச்சத்தைக் கொண்டு அதை உயர்த்தி விடுபவன்

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

وَالشَّمْسِ وَضُحَاهَا ﴿١﴾ وَالْقَمَرِ إِذَا تَلَاهَا ﴿٢﴾ وَالنَّهَارِ إِذَا جَلَّاهَا ﴿٣﴾
وَاللَّيْلِ إِذَا يَغْشَاهَا ﴿٤﴾ وَالسَّمَاءِ وَمَا بَنَاهَا ﴿٥﴾ وَالْأَرْضِ وَمَا طَحَاهَا
﴿٦﴾ وَنَفْسٍ وَمَا سَوَّاهَا ﴿٧﴾ فَأَلْهَمَهَا فُجُورَهَا وَتَقْوَاهَا ﴿٨﴾ قَدْ
أَفْلَحَ مَن زَكَّاهَا ﴿٩﴾ وَقَدْ خَابَ مَن دَسَّاهَا ﴿١٠﴾ كَذَّبَتْ ثَمُودُ
بِطَغْوَاهَا ﴿١١﴾ إِذِ انبَعَثَ أَشْقَاهَا ﴿١٢﴾ فَقَالَ لَهُمْ رَسُولُ اللَّهِ
نَاقَةَ اللَّهِ وَسُقْيَاهَا ﴿١٣﴾ فَكَذَّبُوهُ فَعَقَرُوهَا فَدَمْدَمَ
عَلَيْهِمْ رَبُّهُم بِذَنبِهِمْ فَسَوَّاهَا ﴿١٤﴾ وَلَا يَخَافُ عُقْبَاهَا ﴿١٥﴾

## سُورَةُ اللَّيْلِ

آياتها ٢١ — ترتيبها ٩٢

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

وَاللَّيْلِ إِذَا يَغْشَىٰ ﴿١﴾ وَالنَّهَارِ إِذَا تَجَلَّىٰ ﴿٢﴾ وَمَا خَلَقَ الذَّكَرَ وَالْأُنثَىٰ ﴿٣﴾
إِنَّ سَعْيَكُمْ لَشَتَّىٰ ﴿٤﴾ فَأَمَّا مَنْ أَعْطَىٰ وَاتَّقَىٰ ﴿٥﴾ وَصَدَّقَ بِالْحُسْنَىٰ ﴿٦﴾
فَسَنُيَسِّرُهُ لِلْيُسْرَىٰ ﴿٧﴾ وَأَمَّا مَن بَخِلَ وَاسْتَغْنَىٰ ﴿٨﴾ وَكَذَّبَ بِالْحُسْنَىٰ
﴿٩﴾ فَسَنُيَسِّرُهُ لِلْعُسْرَىٰ ﴿١٠﴾ وَمَا يُغْنِي عَنْهُ مَالُهُ إِذَا تَرَدَّىٰ ﴿١١﴾ إِنَّ عَلَيْنَا
لَلْهُدَىٰ ﴿١٢﴾ وَإِنَّ لَنَا لَلْآخِرَةَ وَالْأُولَىٰ ﴿١٣﴾ فَأَنذَرْتُكُمْ نَارًا تَلَظَّىٰ ﴿١٤﴾

மறுமையில் தான் விரும்பும் அனைத்தையும் பெற்றுக் கொள்வான்.

10 அதை அசுத்தப்படுத்தியவன் திட்டமாக நஷ்டமடைந்து விட்டான். (பாவங்கள் மூலம் வழிகெடச் செய்து கீழ் நிலைக்கு உள்ளத்தை இட்டுச் சென்றவன் நஷ்டமடைந்து விட்டான்.)

11 ஸமூது கூட்டத்தினராகிய அவர்கள் (பாவங்களில்) அத்து மீறிச் செல்வதன் மூலம் பொய்யாக்கி விட்டார்கள்.

12 அவர்களில் மிகத் துர்ப்பாக்கியவான் கிளர்ந்தெழுந்த நேரத்தில் (பொய்யாக்கி விட்டார்கள்) அவன் குதார் பின் சாலிப் என்பவனாயிருக்கும். ஸாலிஹ் அவர்களின் ஒட்டகத்தை அவன் அறுத்தான்

13 அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு ''அல்லாஹ்வின் ஒட்டகத்தையும் அதனுடைய தண்ணீரையும் விட்டுவிடுங்கள்'' எனச் சொன்னார். (அவ்விரண்டிற்கும் இடையில் நீங்கள் குறிக்கிட வேண்டாம்)

14 அவர்களின் பாவத்தின் காரணமாக அதன் மீது (அவ்வூர் மீது தனது தண்டனையை) மூடிக்கொள்ளச் செய்து (அவர்களை மண்ணுக்குக் கீழால் ஆக்கி) அப்பூமியை மட்டப்படுத்தி விட்டான்.

15 அதன் முடிவைப் பற்றி அவன் பயப்படுவதில்லை.

## அல்-லைல்

1 அது மூடிக்கொள்ளும் நேரத்தில் இரவின் மீது சத்தியமாக,

2 அது வெளியாகும் நேரத்தில் பகலின் மீது சத்தியமாக,

3 ஆணையும், பெண்ணையும் படைத்தவனின் மீது சத்தியமாக,

4 நிச்சயமாக உங்கள் முயற்சி பலதரப்பட்டது (அவற்றில் சில சுவனத்தின் அமல்கள், மேலும் சில நரகத்தின் அமல்கள். தன்னை விடுவிப்பதற்காக முயற்சிப்பவரும் இருக்கிறார், தன்னை அழிக்க முயற்சிப்பவரும் இருக்கிறார்).

5 (தனது செல்வங்களை நல்வழிகளில்) கொடுத்து (தடைசெய்யப்பட்டவைகளைத்) தவிர்ந்து கொள்ளக்கூடியவர்கள்.

6 மேலும் (அல்லாஹ் பகரம் தருவான் என்ற அவனது வாக்குகளை) உண்மைப் படுத்தி நம்பியவர்கள்.

7 அவருக்கு நாம் இலகுவான மார்க்கத்தின் பால் (நல்வழியில் செல்தல் போன்ற விடயங்களை) இலகுவாக்கி வைப்போம். (இவ்வசனங்கள் அபூபக்ர் (ரலி) அவர்களின் விடயத்தில் இறங்கியவை. அல்லாஹ்வின் விடயத்தில் வேதனை செய்யப்பட்டு, மக்கா காபிர்களுக்குக் கீழால் இருந்த ஆறு அடிமைகளை அவர்கள் வாங்கி உரிமையிட்டார்கள்.)

8 கஞ்சத்தனம் செய்து (நன்மைகளை விட்டும்) தேவையற்றிருப்பவர்கள்.

9 மேலும் (அல்லாஹ்வின் வாக்கை) பொய்ப்பிப்பவர்கள்,

10 அவருக்கு நாம் கஷ்டமானதின் பால் (நரகத்தின் செயல்கள் பால்) இலகுவாக்கி விடுவோம்.

11 அவன் (நரகில்) விழுவானாயின் அவனின் செல்வம் (அல்லாஹ்வின் தண்டனையை தடுக்கும் விடயத்தில்) எந்தப் பயனையும் ஏற்படுத்தாது.

12 நிச்சயமாக (வழிகேட்டை விட்டும்) நேர்வழியைத் தெளிவுபடுத்துவது எமது பொறுப்பாகும். பர்ராஉ (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: நேர்வழியில் நடக்க யாராவது முற்படுவாராயின் அவருக்கு வழிகாட்டுவது அல்லாஹ்வின் பொறுப்பாகும். மேலும் அவர் கூறுவார் யாராவது அல்லாஹ்வை நாடுவாராயின் அல்லாஹ் அவ்வழியில் இருக்கின்றான். அல்லாஹ்வை (அடைய) யாராவது நாடினால் அவன் பால் நேர்வழி பெற்றுவிடுவான்.

13 நிச்சயமாக இறுதியில் வரக்கூடியதும் (மறுமை), முதலில் வரக்கூடியதும் (இம்மை) எமக்குரியது. (அவ்விரண்டிலும் நாமே அதிகாரம் செலுத்துவோம்.)

14 பற்றி எரியும் (நரக) நெருப்பை உங்களுக்கு நான் எச்சரிக்கை செய்கின்றேன்.

15 மிகவும் துர்ப்பாக்கியசாலியைத் தவிர (வேறு யாரும்) அதில் நுழைய மாட்டார்கள். (அவன் காபிராவான் அவன் அதில் நுழைந்து அதன் உஷ்ணத்தைப் பெற்றுக்கொள்வான்.)

لَا يَصْلَىٰهَآ إِلَّا ٱلْأَشْقَى ﴿١٥﴾ ٱلَّذِى كَذَّبَ وَتَوَلَّىٰ ﴿١٦﴾ وَسَيُجَنَّبُهَا
ٱلْأَتْقَى ﴿١٧﴾ ٱلَّذِى يُؤْتِى مَالَهُۥ يَتَزَكَّىٰ ﴿١٨﴾ وَمَا لِأَحَدٍ عِندَهُۥ مِن
نِّعْمَةٍ تُجْزَىٰٓ ﴿١٩﴾ إِلَّا ٱبْتِغَآءَ وَجْهِ رَبِّهِ ٱلْأَعْلَىٰ ﴿٢٠﴾ وَلَسَوْفَ يَرْضَىٰ ﴿٢١﴾

## سُورَةُ الضُّحَىٰ

ترتيبها ٩٣ — آياتها ١١

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

وَٱلضُّحَىٰ ﴿١﴾ وَٱلَّيْلِ إِذَا سَجَىٰ ﴿٢﴾ مَا وَدَّعَكَ رَبُّكَ وَمَا قَلَىٰ ﴿٣﴾
وَلَلْءَاخِرَةُ خَيْرٌ لَّكَ مِنَ ٱلْأُولَىٰ ﴿٤﴾ وَلَسَوْفَ يُعْطِيكَ رَبُّكَ
فَتَرْضَىٰٓ ﴿٥﴾ أَلَمْ يَجِدْكَ يَتِيمًا فَـَٔاوَىٰ ﴿٦﴾ وَوَجَدَكَ ضَآلًّا
فَهَدَىٰ ﴿٧﴾ وَوَجَدَكَ عَآئِلًا فَأَغْنَىٰ ﴿٨﴾ فَأَمَّا ٱلْيَتِيمَ فَلَا تَقْهَرْ
﴿٩﴾ وَأَمَّا ٱلسَّآئِلَ فَلَا تَنْهَرْ ﴿١٠﴾ وَأَمَّا بِنِعْمَةِ رَبِّكَ فَحَدِّثْ ﴿١١﴾

## سُورَةُ الشَّرْحِ

ترتيبها ٩٤ — آياتها ٨

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

أَلَمْ نَشْرَحْ لَكَ صَدْرَكَ ﴿١﴾ وَوَضَعْنَا عَنكَ وِزْرَكَ ﴿٢﴾ ٱلَّذِىٓ
أَنقَضَ ظَهْرَكَ ﴿٣﴾ وَرَفَعْنَا لَكَ ذِكْرَكَ ﴿٤﴾ فَإِنَّ مَعَ ٱلْعُسْرِ يُسْرًا ﴿٥﴾ إِنَّ
مَعَ ٱلْعُسْرِ يُسْرًا ﴿٦﴾ فَإِذَا فَرَغْتَ فَٱنصَبْ ﴿٧﴾ وَإِلَىٰ رَبِّكَ فَٱرْغَب ﴿٨﴾

(16) அவன் எத்தகையவன் எனில் (நபிமார்கள் கொண்டு வந்த உண்மையை) பொய்யாக்கி (ஈமான் கொண்டு கீழ்ப்படிவதை விட்டும்) பின்வாங்கியவன்.

(17) (குப்ரை மிகக்கடுமையாகத் தவிர்ந்து கொள்ளும்) பயபக்தி உள்ளவர் அதை விட்டும் தூரமாக்கப்படுவார். (அல்வாஹிதி என்பவர் குறிப்பிடுகின்றார் அவர் அபூபக்ர் (ரழி) ஆவார் என்பது விரிவுரையாளர்கள் அனைவரினதும் கருத்தாகும். அதாவது அவரின் விடயத்தில் இவ்வசனம் இறங்கியது. இதில் கூறப்படும் நன்மை எல்லோருக்கும் பொதுவானது.)

(18) அவர் எத்தகையவர் எனில் தனது செல்வத்தை (அல்லாஹ்விடம்) அது தூய்மையானதாக இருக்க வேண்டும் என்ற நோக்கில் கொடுப்பவர்.

(19) அவர் யாருக்கும் பிரதி உபகாரம் செய்யவேண்டிய எந்த தர்மங்களும் அவரிடம் இல்லை. (அவர் யாருக்கும் பிரதி செய்யும் நோக்கில் தர்மம் செய்வதில்லை)

(20) மிக உயர்ந்த அவருடைய இரட்சகனின் பொறுத்தத்தைத் தேடுவதைத் தவிர (அவரிடம் வேறு நோக்கம் இல்லை.)

(21) ரு(அல்லாஹ் அவருக்கு வழங்கும் கூலியைப் பார்த்து) அவர் (மறுமையில்) பொருந்திக் கொள்வார்.

## அல்-ழுஹா

நபியவர்கள் இரண்டு அல்லது மூன்று நாட்கள் நோய்வாய்பட்டிருந்தார்கள். ஒரு பெண் அவர்களிடம் வந்து "முஹம்மதே உமது ஷைத்தான் உம்மை விட்டுவிட்டதாகவே நான் நினைக்கின்றேன். ஏனெனில் இரண்டு அல்லது மூன்று நாட்கள் அவன் உங்களை நெருங்கவில்லை" எனக் கூறினாள். அச்சந்தர்ப்பத்தில் அல்லாஹ் இவ்வத்தியாயத்தை இறக்கிவைத்தான்.

(1) ளுஹாவுடைய நேரத்தின் மீது சத்தியமாக. ('ளுஹா' என்பது சூரியன் அடிவானிலிருந்து உயரும் நேரமாகும்.)

(2) அது (பகலை) மூடிக்கொள்ளும் நேரத்தில் இரவு நேரத்தின் மீது சத்தியமாக.

(3) உமது இறைவன் உம்மை விட்டுவிடவில்லை. (வஹியை நிறுத்தி பயணம் சொல்பவர் விட்டுவிடுவதைப் போன்று விடவில்லை.) மேலும் அவன் உங்களை வெறுக்கவுமில்லை.

(4) (நபித்துவத்தின் சிறப்புக்கள் உலகில் வழங்கப்பட்டாலும் கூட) மறுமையாகிறது (மறுமையில் கிடைக்கும் சுவர்க்கம்) உமக்குச் சிறந்ததாகும்.

(5) உமது இரட்சகன் (மாரக்கத்தில் வெற்றியையும், மறுமையில் 'ஹவ்ழுல் கவ்ஸர்' எனும் தடாகம், நற்கூலி, சிபாரிசு செய்தல் போன்றவற்றையும்) உமக்குத் தருவான். அப்போது நீங்கள் பொருந்திக் கொள்வீர்கள்.

(6) அவன் உங்களை ஓர் தந்தையற்ற அநாதையாகக் கண்டு கொண்டு உங்களுக்கு ஒதுங்குமிடத்தை ஏற்படுத்தித் தரவில்லையா?

(7) உம்மை அவன் (நேர்வழிகளை விட்டும்) தவறியவராகக் கண்டு (உமக்கு அல் குர்ஆனை அருளி) நேர்வழி காட்டவில்லையா?

(8) உம்மை அவன் (குடும்பமுடைய, செல்வங்கள் அற்ற) வறியவராகக் கண்டு உமக்கு (வாழ்வாதாரங்களைத் தந்து) உமக்கு வசதியை ஏற்படுத்தித் தரவில்லையா?

(9) நீங்கள் அநாதையை (அவர் மீது அதிகாரம் செலுத்தி, அவருக்கு அநீதி இழைத்து) அடக்க முற்பட வேண்டாம். (நீங்கள் அநாதையாக இருந்ததை ஞாபகித்து அவரது உரிமைகளைக் கொடுத்து விடுங்கள்.)

(10) மேலும் நீங்கள் யாசிப்பவரை விரட்டி விடவேண்டாம். (நீங்கள் வறியவராக இருந்ததை ஞாபகித்து அவருக்குக் கொடுங்கள். அல்லது மென்மையான வார்த்தைகளைக் கூறி அனுப்புங்கள்.)

(11) உமது இரட்சகனின் அருள்களை நீங்கள் (மக்களுக்கு) அறிவியுங்கள். (ஏனெனில் அருள்களை மறைக்காமல் தெரியப்படுத்துவதும் அவற்றிற்கு நன்றி செய்வதாகும்.)

## அல்-இன்சிராஹ்

1 (நபியே) நாம் உமக்கு உமது இதயத்தை (நபித்துவத்தை ஒப்பேற்று அதன் சுமைகளை ஏற்றுக்கொள்ளும் வகையில்) விரிவுபடுத்தவில்லையா? (அதனால் தான் அழைப்புப் பணியைச் செய்வதற்கும், நுபுவ்வத்தின் சுமைகளைச் சுமப்பதற்கும், வஹியைப் பாடமிட்டுக் கொள்வதற்கும் சக்தி பெற்றீர்கள்.)
2 (ஜாஹிலிய்யத்தில் உங்களால் நடைபெற்ற) உமது குற்றங்களை நாம் மன்னித்து விட்டோம்.
3 அவை எத்தகையவை எனில், அவை உமது முதுகைப் பாரமாக்கிக் கொண்டிருந்தன.
4 (இம்மையிலும், மறுமையிலும்) நாம் உமது பிரஸ்தாபத்தை (பல விதங்களில்) உயர்த்தி வைத்திருக்கின்றோம். (அல்லாஹ்வைப் பற்றி சாட்சியம் கூறுவதுடன் உம்மைப் பற்றி சாட்சியம் கூறுவதைக் கட்டாயப்படுத்தல், அதானில் உமது பெயர் கூறப்படல், உம்மீது ஸலவாத்துச் சொல்லல் என்பன அவற்றில் சிலவாகும்.
5 நிச்சயமாக (இக்)கஷ்டத்துடன் இலேசு இருக்கின்றது.
6 நிச்சயமாக (இக்)கஷ்டத்துடன் இலேசு இருக்கின்றது.
7 நீங்கள் (தொழுகையை, அல்லது அழைப்புப் பணியை, அல்லது யுத்தத்தை) முடித்து விட்டீராயின் (துஆவிலும் வணக்க வழிபாடுகளிலும்) ஈடுபடுவீராக.
8 மேலும், (நரகத்தைப் பயந்தும் சுவனத்தின் பால் ஆசை கொண்டும்) உமது நாயனின் பால் இறைஞ்சுவீராக.

آياتها ٨ سُورَةُ التِّينِ ترتيبها ٩٥

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

وَالتِّينِ وَالزَّيْتُونِ ١ وَطُورِ سِينِينَ ٢ وَهَٰذَا الْبَلَدِ الْأَمِينِ ٣
لَقَدْ خَلَقْنَا الْإِنسَانَ فِي أَحْسَنِ تَقْوِيمٍ ٤ ثُمَّ رَدَدْنَاهُ أَسْفَلَ سَافِلِينَ
٥ إِلَّا الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ فَلَهُمْ أَجْرٌ غَيْرُ مَمْنُونٍ ٦
فَمَا يُكَذِّبُكَ بَعْدُ بِالدِّينِ ٧ أَلَيْسَ اللَّهُ بِأَحْكَمِ الْحَاكِمِينَ ٨

آياتها ١٩ سُورَةُ الْعَلَقِ ترتيبها ٩٦

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

اقْرَأْ بِاسْمِ رَبِّكَ الَّذِي خَلَقَ ١ خَلَقَ الْإِنسَانَ مِنْ عَلَقٍ ٢ اقْرَأْ وَرَبُّكَ
الْأَكْرَمُ ٣ الَّذِي عَلَّمَ بِالْقَلَمِ ٤ عَلَّمَ الْإِنسَانَ مَا لَمْ يَعْلَمْ ٥ كَلَّا إِنَّ
الْإِنسَانَ لَيَطْغَىٰ ٦ أَن رَّآهُ اسْتَغْنَىٰ ٧ إِنَّ إِلَىٰ رَبِّكَ الرُّجْعَىٰ ٨ أَرَأَيْتَ
الَّذِي يَنْهَىٰ ٩ عَبْدًا إِذَا صَلَّىٰ ١٠ أَرَأَيْتَ إِن كَانَ عَلَى الْهُدَىٰ ١١ أَوْ أَمَرَ
بِالتَّقْوَىٰ ١٢ أَرَأَيْتَ إِن كَذَّبَ وَتَوَلَّىٰ ١٣ أَلَمْ يَعْلَم بِأَنَّ اللَّهَ يَرَىٰ ١٤ كَلَّا لَئِن
لَّمْ يَنتَهِ لَنَسْفَعًا بِالنَّاصِيَةِ ١٥ نَاصِيَةٍ كَاذِبَةٍ خَاطِئَةٍ ١٦ فَلْيَدْعُ نَادِيَهُ
١٧ سَنَدْعُ الزَّبَانِيَةَ ١٨ كَلَّا لَا تُطِعْهُ وَاسْجُدْ وَاقْتَرِبْ ۩ ١٩

## அத்தீன்

1 அத்திப் பழத்தின் மீதும் (அவர்கள் எண்ணெய் வடித்தெடுக்கும்) 'ஒலிவ்' பழத்தின் மீதும் சத்தியமாக (இவ்விரண்டு பழங்களையும் கூறி அவை விளையும் இடமான பலஸ்தீனத்தையே அல்லாஹ் நாடுகின்றான்.)
2 'ஸைனா' மலையின் மீதும் சத்தியமாக (இம்மலையில் தான் அல்லாஹ் மூஸா அலை அவர்களுடன் பேசினான்.)
3 அபயமளிக்கும் இந்த ஊரின் (மக்கா) மீதும் சத்தியமாக (இந்த ஊர் ஒரு பாதுகாப்பான இடம் என்பதால் இதற்கு 'அமீன்' எனப் குறிப்பிடப்பட்டுள்ளது. மூஸா, ஈஸா, முஹம்மத் (ஸல்) ஆகிய மூவருக்கும் வஹி இறங்கிய பிரதேசங்களாக இந்த மூன்று இடங்களும் காணப்படுவதால் இவற்றைக் கொண்டு அல்லாஹ் சத்தியம் செய்துள்ளான். மூன்று வேதங்களும் இவற்றிலே இறக்கப்பட்டுள்ளன. இவற்றிலிருந்தே மனிதர்களுக்கு நேர்வழியின் பிரகாசம் சென்றது.
4 திட்டமாக நாம் அழகிய தோற்றத்திலே மனிதனைப் படைத்தோம். (நேர்த்தியான உடம்புள்ளவனாகவும், தனது உணவை தன் கையால் சாப்பிடக் கூடியவனாகவும், திட்டமிடக் கூடியவனாகவும் படைத்துள்ளான். மேலும் அறிவாற்றல் உள்ளவனாகவும், பேசக் கூடியவனாகவும் படைத்துள்ளான். இதனால் அல்லாஹ் நாடியவாறு அவனின் பிரதிநிதியாக உலகில் அவனுக்கு இருக்க முடிந்தது.
5 பின்பு அவனைத் தாழ்ந்தவர்களில் தாழ்ந்தவர்களாக ஆக்கினோம். (சிறந்த உருவில் படைக்கப்பட்ட மனிதன் தனது பாவச் செயல்கள் மூலம் மிருகங்களை விட மோசமானவனாக மாறி மிகக் கீழ் நிலைக்கே சென்றுவிடுகின்றான். மேலும் நரகிலும் அவன் ஆகக் கீழ் தரத்திற்கே சென்று விடுகின்றான்.)
6 விசுவாசம் கொண்டு நற்கிரிகைகள் செய்தார்களே அவர்களைத் தவிர (அவர்கள் கீழ் நிலைக்குத் தள்ளப்படமாட்டார்கள். மாறாக அவர்கள் விசாலமான அல்லாஹ்வின் கவனத்திற்குச் செல்வார்கள்.) அவர்களுக்கு துண்டிக்கப்படாத (நின்றுவிடாத நிலையான) கூலி இருக்கின்றது.
7 (மனிதனே! உன்னை அல்லாஹ் அழகிய தோற்றத்தில் படைத்தான் என்பதையும், அவனுக்கு மாறு செய்து நிராகரிக்கக் கூடிய சந்தர்ப்பத்தில் மிகக் கீழானவனாக மாற்றி

விடுகிறான் என்பதனையும் நீ அறிந்த) பின்பும் உன்னை எது (மறுமையைப்) பொய்யாக்கக்கூடியவனாக ஆக்கிவிட்டது?
8 அல்லாஹ் தீர்ப்புச் செய்கிறவர்களில் எல்லாம் மிகவும் (நேர்மையாகத்) தீர்ப்புச் செய்யக்கூடியவனாக இருக்கவில்லையா? (சிறந்த தோற்றத்தில் படைக்கப்பட்ட மனிதன் ஈமான் கொள்ளாத பட்சத்தில மிகக் கீழானவனாகவும், ஈமான் கொண்டு நல்லமல்கள் செய்யும் போது மிக உயர்ந்தவனாகவும் ஆக்கிவிடுகின்றான்.)

## அல்-அலக்

இதில் ஆரம்ப ஐந்து வசனங்களும் முதன்முதலில் இறங்கிய வசனங்களாகும்.
1 (முஹம்மதே!) நீங்கள் (படைப்பினங்களை படைத்த) உமது நாயனின் பெயரைக் கூறி (ஆரம்பித்தவராக) ஓதவீராக.
2 அவன் மனிதனை இரத்தக் கட்டியினால் படைத்தான். (ஆரம்பமாக இந்திரியத் துளியினால் படைத்து பின் அவ்விந்திரியம் இரத்தக்கட்டியாக மாற்றம் பெறும். அவ்வாறு உறைந்த இரத்தமே ஒரு துண்டு போன்று இருக்கும்.)
3 நீர் ஓதவீராக. உமது இறைவன் மிகக் கொடை கொடுப்பவன். (நீங்கள் எழுத்தறிவற்றவராக இருந்தும் உம்மால் வசனங்களை ஓதவைத்தது அவனது கொடையில் நின்றும் உள்ளதாகும்.
4 அவன் எத்தகையவன் எனில் பேனையால் (எழுதக்) கற்பித்தான். (அல்லாஹ் இஸ்லாமியப் பிரச்சாரத்தை வாசிக்கவும் எழுதவும் அழைப்பு விடுப்பதன் மூலம் ஆரம்பித்துள்ளான். அதற்குக் காரணம் அவ்விரண்டிலும் மிகப் பெரிய பயன்கள் உள்ளதனாலாகும்.)
5 மனிதனுக்கு அவன் (அல்லாஹ்) அறியாதவற்றைக் கற்றுக் கொடுத்தான்.
6 நிச்சயமாக மனிதன் அத்து மீறிச் செயல்படுகின்றான்.
7 (தன்னை தனது செல்வத்தின் மூலமும் தனது பலத்தின் மூலமும் அல்லாஹ்வை விட்டும்) தேவையற்றவனாகக் கருதியதால் (அவன் அத்து மீறிச் செயல்படுகின்றான்.)
8 நிச்சயமாக (மரணத்தின் பின்) மீள்வது உமது இறைவனின் பாலாகும்.. (வேறு யாரிடமும் அல்ல)
9 அவன் தடுக்கின்றானே அவனை நீர் பார்த்தீரா?
10 ஓர் அடியானை (நபி (ஸல்) அவர்களை) அவர் தொழும்போது (அவன் தடுக்கின்றானே அவனை நீர் பார்த்தீரா?)
11 .அவர் (முஹம்மத்) நேர்வழியில் இருந்தாலும் (அவன் தடுப்பதை நீர் பார்த்தீரா?) (அவனால் தடுக்கப்படும் அடியார் நேர்வழியில் இருந்தாலும் அவன் தடுக்க முற்படுகின்றான்.)
12 அல்லது அவர் (உளத்தூய்மை, ஏகத்துவம் போன்ற நரகை விட்டும்) பாதுகாக்கக்கூடியவற்றைக் கொண்டு ஏவினாலும் (அவன் தடுக்க முற்படுகின்றான்.)
13 (தடுக்கும்) அவன் (அபூ ஜஹ்ல், அல்லாஹ்வின் தூதர் கொண்டு வந்ததைப்) பொய்ப்பித்து (ஈமான் கொள்ள) பின்வாங்கிய போதும் (அவன் தடுக்க முற்படுகின்றான்).
14 (அவனின் நிலமைகளை) அல்லாஹ் கண்டுகொண்டிருக்கின்றான் என்பதை அவன் அறியமாட்டானா? (எனவே அவனுக்கு அல்லாஹ் கூலி வழங்குவான். இவ்வாரிருக்கையில் நபியைத் தடுக்க அவன் எவ்வாறு துணிவு கொள்வான்.)
15 அவன் அவ்வாறு செய்யக்கூடாது. அவன் தவிர்ந்து கொள்ள வில்லையாயின் (இது அவனுக்கு எச்சரிக்கையாகும்) அவனது முன்னெற்றி உரோமத்தைப் பிடித்து இழுத்தெறிவோம்.
16 பொய் சொல்லும், பாவம் செய்யும் முன்னெற்றி உரோமத்தை (ப்பிடித்து இழுத்தெறிவோம். அம் முன்னெற்றி உரோமத்தை உடையவன் பாவம் செய்பவன்.)
17 அவன் தன் அவையில் ஒன்று சேரக் கூடியவர்களை அழைக்கட்டும் (அபூ ஜஹ்ல் நபியவர்களிடத்தில் இப்பள்ளத்தாக்கிலே நான் தான் அவையோரால் அதிகமானவன் எனப் பெருமையடித்தான். அப்போது இவ்வசனம் இறங்கியது.)
18 நாங்கள் (அவனைப்பிடித்து நரகில் தள்ளுவதற்காக நரகில் வேதனை செய்யும் கடுமையான வானவர்களான) ஸபானியாக்களை அழைப்போம்.
19 அவ்வாறில்லை. நீர் (தொழுகையை விடும் படி உம்மை அழைத்த விடயத்தில்) அவருக்குக் கீழப்படிய வேண்டாம். (நீங்கள் அவனைப் பற்றி பொருட்படுத்தாமல்) ஸஜ்தாச் செய்து (தொழுது அவனை) நெருங்குங்கள்.

## அல்-கத்ர்

1 நிச்சயமாக நாம் அதை (குர்ஆனை) மாட்சிமை பொருந்திய இரவில் இறக்கிவைத்தோம். (லவ்ஹுல் மஹ்பூலிலிருந்து கீழ் வானத்திற்கு மொத்தமாக இறக்கப்பட்டு 23 வருட காலப் பகுதியில் பகுதி பகுதியாக நபியவர்களுக்கு இறங்கியது. இவ்விரவு குர்ஆன் இறக்கப்பட்ட மாதமாகிய ரமழானின் கடைசிப்பத்து நாட்களில் அமைந்துள்ளது. அந்நாளை குறிப்பாக்கும் விடயத்தில் ஹதீஸ்கள் முரண்பட்டு வந்துள்ளன.)
2 மாட்சிமை மிக்க இரவு எது என்பதை ஏது உமக்கு அறிவித்து விட்டது? ('லைலதுல் கத்ர்' எனப் பெயரிடுவதற்குக் காரணம், இவ்விரவில் அல்லாஹ் அடுத்த வருடம் வரையுள்ள நிகழ்வுகளை ஏற்படுத்துகிறான் என்பதனாலாகும் அல்லது இவ்விரவு

سُورَةُ القَدْرِ
ترتيبها ٩٧ — آياتها ٥

بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ
إِنَّآ أَنزَلۡنَٰهُ فِي لَيۡلَةِ ٱلۡقَدۡرِ ١ وَمَآ أَدۡرَىٰكَ مَا لَيۡلَةُ ٱلۡقَدۡرِ ٢
لَيۡلَةُ ٱلۡقَدۡرِ خَيۡرٞ مِّنۡ أَلۡفِ شَهۡرٖ ٣ تَنَزَّلُ ٱلۡمَلَٰٓئِكَةُ وَٱلرُّوحُ
فِيهَا بِإِذۡنِ رَبِّهِم مِّن كُلِّ أَمۡرٖ ٤ سَلَٰمٌ هِيَ حَتَّىٰ مَطۡلَعِ ٱلۡفَجۡرِ ٥

سُورَةُ البَيِّنَةِ
ترتيبها ٩٨ — آياتها ٨

بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ
لَمۡ يَكُنِ ٱلَّذِينَ كَفَرُواْ مِنۡ أَهۡلِ ٱلۡكِتَٰبِ وَٱلۡمُشۡرِكِينَ مُنفَكِّينَ
حَتَّىٰ تَأۡتِيَهُمُ ٱلۡبَيِّنَةُ ١ رَسُولٞ مِّنَ ٱللَّهِ يَتۡلُواْ صُحُفٗا مُّطَهَّرَةٗ ٢
فِيهَا كُتُبٞ قَيِّمَةٞ ٣ وَمَا تَفَرَّقَ ٱلَّذِينَ أُوتُواْ ٱلۡكِتَٰبَ إِلَّا مِنۢ
بَعۡدِ مَا جَآءَتۡهُمُ ٱلۡبَيِّنَةُ ٤ وَمَآ أُمِرُوٓاْ إِلَّا لِيَعۡبُدُواْ ٱللَّهَ مُخۡلِصِينَ
لَهُ ٱلدِّينَ حُنَفَآءَ وَيُقِيمُواْ ٱلصَّلَوٰةَ وَيُؤۡتُواْ ٱلزَّكَوٰةَۚ وَذَٰلِكَ دِينُ
ٱلۡقَيِّمَةِ ٥ إِنَّ ٱلَّذِينَ كَفَرُواْ مِنۡ أَهۡلِ ٱلۡكِتَٰبِ وَٱلۡمُشۡرِكِينَ
فِي نَارِ جَهَنَّمَ خَٰلِدِينَ فِيهَآۚ أُوْلَٰٓئِكَ هُمۡ شَرُّ ٱلۡبَرِيَّةِ ٦ إِنَّ
ٱلَّذِينَ ءَامَنُواْ وَعَمِلُواْ ٱلصَّٰلِحَٰتِ أُوْلَٰٓئِكَ هُمۡ خَيۡرُ ٱلۡبَرِيَّةِ ٧

சிறப்பும் கண்ணியமும் பொருந்திய இரவு என்பதனாலாகும்.)

3 மாட்சிமை உள்ள இரவு ஆயிரம் மாதங்களை விடச்சிறந்தது (அது ஓர் இரவாக இருந்த போதும் அதில் நற்கிரிகைகள் செய்வது ஆயிரம் மாதங்கள் நற்கிரிகைகள் செய்வதை விடச் சிறந்தது.)

4 அதிலே (அவ்விரவில்) வானவர்களும் 'ரூஹ்' எனப்படும் ஜிப்ரீல் (அலை) அவர்களும் (அல்லாஹ்வால் தீர்மானிக்கப்பட்ட) ஒவ்வொரு விடயத்தையும் அவர்களின் நாயனின் உத்தரவுடன் எடுத்துக் கொண்டு இறங்குகின்றார்கள்.

5 அது (அந்த இரவு முழுவதும்) சாந்தியாகும். (அது முழவதும் நன்மையாகும் ஷைத்தான் அதில் தீங்கு செய்யவோ, நோவினை செய்யவோ சக்தி பெறமாட்டான்.) வைகறை உதயமாகும் வரை (வானவர்கள் கூட்டம் கூட்டமாக இடைவிடாமல் இறங்கிக்கொண்டிருப்பர்.

## அல்-பய்யினா

1 வேதக்காரர்களில் நின்றும் (யூதர்கள், கிறிஸ்தவர்கள்) மேலும் இணைவைப்பவர்களில் நின்றும் (அரபு நாட்டில் விக்கிரகங்களை வணங்கி இணைவைத்தவர்கள்) நிராகரித்தவர்கள் அவர்களுக்கு தெளிவான அத்தாட்சி அவர்களிடம் வரும் வரை (அவர்களுடைய இறை நிராகரிப்பை விட்டும்) நீங்கக்கூடியவர்களாக இருக்கவில்லை. (இங்கு தெளிவான அத்தாட்சி எனப்படுவது முஹம்மத் (ஸல்) அவர்களும், அவர்கள் கொண்டு வந்த மார்க்கமுமாகும்.) அவர்கள் அவர்களுடைய வழிகேட்டையும் அறிவீனத்தையும் அவர்களுக்குத் தெளிவுபடுத்தி ஈமானின் பால் அவர்களை அழைத்தார்கள்.

2 (அவ்வத்தாட்சி) அல்லாஹ்விடமிருந்து (வரும்) தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு (மாற்றியமைத்தல், இடைச்செறுகல் போன்றவற்றை விட்டும்) தூய்மையாக்கப்பட்ட வேத வசனங்களை ஓதிக் காண்பிப்பார். அது உண்மையாகவே அல்லாஹ்வின் பேச்சாகும்.

3 அதிலே தெளிவான சட்டங்கள் இருக்கின்றன. (அதில் உள்ளவை நேரிய சட்டங்களும் வசனங்களுமே இருக்கின்றன. சத்தியத்தை விட்டும் சாய்ந்திருப்பவை அதில் இல்லை. அதில் உள்ளவையெல்லாம் நல்லவையும், நேர்வழியும், ஞானமும் தான். இதைத்தான் அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான்: "அல்லாஹ்விற்கே எல்லாப்புகழும், அவன் தனது அடியானளவில் இறக்கிவைத்தான். அதில் அவன் கோணலை ஆக்கவில்லை மாறாக நேரானதாக அதை ஆக்கினான்" ஸூரா கஹ்பின் அவ்வசனங்களை யாராவது பின்பற்றுவாராயின் அவர் அல்லாஹ்வின் நேர்வழியில் இருப்பார்.)

4 வேதம் கொடுக்கப்பட்டவர்கள் அவர்களுக்குத் தெளிவான அத்தாட்சி வந்ததன் பின்னரே தவிர அவர்கள் பிரியவில்லை. (அவர்கள் பிரிந்ததும், கருத்து வேற்றுமை கொண்டதும் தெளிவின்மையினால் அல்ல. மாறாக உண்மை தெளிவானதன் பின் தான் அவர்கள் பிரிந்தார்கள். அல்லாஹ் முஹம்மத் (ஸல்) அவர்களை நபியாக அனுப்பி வைத்தான். சிலர் அவர்களை விசுவாசித்தனர். வேறு சிலர் அவர்களை நிராகரித்தனர். அவர்களுடைய மார்க்கத்தையும் உண்மைப்படுத்தி வந்த தூதரை விசவாசித்து பின்பற்றும் விடயத்தில் அவர்கள் ஒன்று பட்டிருக்க வேண்டும்.)

5 (அவர்களுக்கு இறக்கப்பட்ட வேதங்களிலும், அல் குர்ஆனிலும்) பொய்யான மார்க்கங்களன்றி உண்மை மார்க்கத்தை அவனுக்குத் தூய்மையாக்கி அல்லாஹ்வை வணங்குவதையே அவர்களுக்கு ஏவப்பட்டது (அல்லாஹ்விற்கு எந்த இணையையும் ஏற்படுத்தாமல் தூய்மையாக அவனை வணங்கும் படியே அவர்கள் ஏவப்பட்டார்கள்.) மேலும், அவர்கள் தொழுகையை (அல்லாஹ் விரும்பும் விதத்தில்) நிறைவேற்றுவதையும் (உரிய நேரத்தில்) ஸகாத்தைக் கொடுப்பதையுமே அவர்களுக்கு ஏவப்பட்டது. அது (இம்மார்க்கம்) நேரான வழிமுறையின் மார்க்கமாகும். (அதை விட்டு அவர்கள் பிரியக்கூடாது)

6 நிச்சயமாக வேதக்காரர்களிலும், இணைவைப்பாளர்களிலும் நிராகரித்தவர்கள் நிரந்தரமாக நரகில் இருப்பர். அவர்கள் மனிதர்களில் மிகக்கெட்டவர்கள். (ஏனெனில் அவர்கள் பொறாமைக்காகவும், அத்துமீறியும் சத்தியத்தை விட்டார்கள். எனவே

جَزَآؤُهُمْ عِندَ رَبِّهِمْ جَنَّٰتُ عَدْنٍ تَجْرِى مِن تَحْتِهَا ٱلْأَنْهَٰرُ خَٰلِدِينَ
فِيهَآ أَبَدًا ۖ رَّضِىَ ٱللَّهُ عَنْهُمْ وَرَضُوا۟ عَنْهُ ۚ ذَٰلِكَ لِمَنْ خَشِىَ رَبَّهُۥ ٨

## سُورَةُ الزَّلْزَلَةِ

ترتيبها ٩٩ — آياتها ٨

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

إِذَا زُلْزِلَتِ ٱلْأَرْضُ زِلْزَالَهَا ١ وَأَخْرَجَتِ ٱلْأَرْضُ أَثْقَالَهَا
٢ وَقَالَ ٱلْإِنسَٰنُ مَا لَهَا ٣ يَوْمَئِذٍ تُحَدِّثُ أَخْبَارَهَا ٤
بِأَنَّ رَبَّكَ أَوْحَىٰ لَهَا ٥ يَوْمَئِذٍ يَصْدُرُ ٱلنَّاسُ أَشْتَاتًا
لِّيُرَوْا۟ أَعْمَٰلَهُمْ ٦ فَمَن يَعْمَلْ مِثْقَالَ ذَرَّةٍ خَيْرًا
يَرَهُۥ ٧ وَمَن يَعْمَلْ مِثْقَالَ ذَرَّةٍ شَرًّا يَرَهُۥ ٨

## سُورَةُ الْعَادِيَاتِ

ترتيبها ١٠٠ — آياتها ١١

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

وَٱلْعَٰدِيَٰتِ ضَبْحًا ١ فَٱلْمُورِيَٰتِ قَدْحًا ٢ فَٱلْمُغِيرَٰتِ صُبْحًا
٣ فَأَثَرْنَ بِهِۦ نَقْعًا ٤ فَوَسَطْنَ بِهِۦ جَمْعًا ٥ إِنَّ ٱلْإِنسَٰنَ
لِرَبِّهِۦ لَكَنُودٌ ٦ وَإِنَّهُۥ عَلَىٰ ذَٰلِكَ لَشَهِيدٌ ٧ وَإِنَّهُۥ لِحُبِّ
ٱلْخَيْرِ لَشَدِيدٌ ٨ ۞ أَفَلَا يَعْلَمُ إِذَا بُعْثِرَ مَا فِى ٱلْقُبُورِ ٩

அவர்கள் மீளும் மறுமையிலும் மோசமானவர்களாகவே இருப்பர்.)

7 நிச்சயமாக விசுவாசம் கொண்டு நற்கிரிகைகள் செய்தவர்கள், அவர்கள் மனிதர்களில் சிறந்தவர்கள்.

8 (அவர்கள் விசுவாசித்து நற்கிரிகைகள் புரிந்ததற்குப் பிரதியாக) அவர்களுடைய நாயனிடத்தில் அவர்களுடைய கூலியாகிறது 'அத்ன்' எனும் சுவனத்தின் தோப்புக்களாகும். அவற்றின் (மரங்களுக்கும், அறைகளுக்கும்) கீழால் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அதில் அவர்கள் என்றும் நிலையாக இருப்பார்கள். (அதிலிருந்து அவர்கள் வெளியேறவும் மாட்டார்கள், மரணிக்கவும் மாட்டார்கள். அல்லாஹ் அவர்களைப் பொருந்திக் கொண்டான். அது அவனது இரட்சகனைப் பயந்தவர்களுக்காகும்.)

## அஸ்ஸில்ஸால்

1 பூமியை (க்கடுமையாக) உசுப்பப்படுவதாக உசுப்பப்பட்டால் (அச்சந்தர்ப்பத்தில் பூமியின் நடுக்கத்தினால் அதன் மேல் உள்ள அனைத்தும் உடைந்து விடும்.)

2 மேலும் பூமி அதன் சுமைகளை (மரணித்தவர்களையும், அதில் புதைக்கப்பட்டவர்களையும்) வெளியாக்குமானால், (இரண்டாவது ஸூர் ஊதப்பட்டதன் பின் அது மரணித்தவர்களை வெளியே தள்ளிவிடும்.)

3 மனிதன் (தனக்கேற்பட்ட அதிர்ச்சியின் காரணமாகவும், பயத்தின் காரணமாகவும்) இதற்கு (பூமிக்கு) என்ன நிகழ்ந்தது? (ஏன் எல்லாவற்றையும் வெளியாக்கிவிட்டது?) எனக் கேட்பான்.

4 அன்றைய தினத்தில் அது அதன் செய்திகளை அறிவிக்கும். (அதற்கு மேலால் செய்யப்பட்ட நன்மைகளையும் பாவங்களையும் அறிவிக்கும். அடியார்களுக்கு விரோதமாக சாட்சியம் சொல்வதற்காக அல்லாஹ் அதைப் பேசவைப்பான்)

5 உமது இரட்சகன் அதற்கு ஏவியதன் காரணமாக (அது எல்லாவற்றையும் அறிவிக்கும்.)

6 அந்நாளில் மனிதர்கள் அவர்களுடைய அமல்களை அவர்களுக்குக் காட்டப்படுவதற்காக அவர்கள் (அவர்களுடைய மண்ணறைகளிலிருந்து) பல பிரிவினர்களாக வெளியாகி வருவார்கள். (சிலர் வலப்பக்கமாகச் செல்வார்கள், சிலர் இடப்பக்கமாகச் செல்வார்கள்.)

7 யாரவது ஓர் அணுப்பிரமாணம் நன்மை செய்திருந்தாலும் அதை அவர் (தனது ஏட்டில்) கண்டுகொள்வார். (அதையிட்டு அவர் சந்தோஷமடைவார்.)

8 மேலும், (அவ்வாறே) யாராவது ஓர் அனுப்பிரமாணம் தீமை செய்தாலும் அதனையும் (மறுமையில் அவரது ஏட்டில்) கண்டு கொள்வார். (அது அவருக்குக் கவலையை ஏற்படுத்தும். (மு.்.மினுக்கு அல்லாஹ் அதனை மன்னித்து விடவும் கூடும்.)

## அல்-ஆதியாத்

1 மூச்சிரைக்கும் சத்தம் வெளியாகும் வன்னம் வேகமாக ஓடும் குதிரைகள் மீது சத்தியமாக, (அல்லாஹ்வையும், அவனது தூதரையும் விரோதிக்கும் காபிர்களுடன் புனிதப்போர் புரியும் போது பயன்படுத்தப்படும் குதிரைகளே இங்கு நாடப்பட்டுள்ளன.)

2 மேலும் நெருப்புப் பொறிகளை பற்றவைக்கும் குதிரைகள் மீது சத்தியமாக, (வேகமாகச் செல்லும் அக்குதிரைகளின் பாதங்கள் கற்களில் வேகமாகப் படும் போது நெருப்புப் பொறி பறக்கும்.)

3 (விரோதிகளின் மீது) காலையில் திடீர்த் தாக்குதல் நடத்தும் குதிரைகள் மீது சத்தியமாக.

4 அதன் மூலம் (வேகமாகத் தாக்குவதன் மூலம்) புழுதியைக் கிளப்பிவிடுவதின் மீது சத்தியமாக,

5 (விரோதிகளைத் தோல்வியடையச் செய்து அவர்களின்) கூட்டத்திற்கு நடுவில் ஆகிவிடக்கூடிய குதிரைகளின் மீது சத்தியமாக,

6 நிச்சயமாக மனிதன் அவனது இரட்சகனை அதிகம் நிராகரிக்கக்கூடியவன். (அவனுடைய அருள்களுக்கு நன்றி மறப்பவன்.)

7 நிச்சயமாக (அவன் நிராகரிப்பதற்கும் நன்றி மறப்பதற்கும்) அவனே சாட்சியாவான்.

8 நிச்சயமாக அவன் செல்வத்தை விரும்புவதில் மிகக்கடுமையானவன். (அதைத்

தேடுவதிலும், பெற்றுக்கொள்வதிலும் கடுமையாக முயற்சிப்பவன்.)

9 அவன் அறியமாட்டானா? மண்ணறைகளில் உள்ளவற்றைப் பிரட்டப்பட்டால், (அவற்றை வெளியேற்றப்பட்டால்,)

10 மேலும் இதயங்களில் உள்ளவற்றை (நன்மைகளையும் தீமைகளையும்) பிரித்துத் தெளிவுபடுத்தப்பட்டால்,

11 நிச்சயமாக அவர்களின் இரட்சகன் அந்நாளில் அவர்களை மிக அறிந்தவன். (என்பதை அவன் அறியமாட்டானா? ஒவ்வொரு மனிதனும் அல்லாஹ் அவன் செயல்கள் அனைத்தையும் மிக அறிந்தவன்: அவற்றிற்குத் தக்க கூலிகளை மறுமையில் அவன் வழங்குவான் என்பதை அறிவது அவசியமாகும். எனவே செல்வங்களின் மோகம் அவர்கள் அல்லாஹ்விற்கு நன்றி செலுத்துவதை விட்டும், மேலும் அவனை வணங்கி மறுமைக்காக நற்கிரிகைகள் செய்வதை விட்டும் அவர்களின் கவனத்தைத் திருப்பிவிடக்கூடாது.)

وَحُصِّلَ مَا فِي ٱلصُّدُورِ ﴿١٠﴾ إِنَّ رَبَّهُم بِهِمْ يَوْمَئِذٍ لَّخَبِيرٌۢ ﴿١١﴾

## سُورَةُ القَارِعَةِ

ترتيبها ١٠١ — آياتها ١١

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

ٱلْقَارِعَةُ ﴿١﴾ مَا ٱلْقَارِعَةُ ﴿٢﴾ وَمَآ أَدْرَىٰكَ مَا ٱلْقَارِعَةُ
﴿٣﴾ يَوْمَ يَكُونُ ٱلنَّاسُ كَٱلْفَرَاشِ ٱلْمَبْثُوثِ ﴿٤﴾
وَتَكُونُ ٱلْجِبَالُ كَٱلْعِهْنِ ٱلْمَنفُوشِ ﴿٥﴾ فَأَمَّا
مَن ثَقُلَتْ مَوَٰزِينُهُۥ ﴿٦﴾ فَهُوَ فِي عِيشَةٍ رَّاضِيَةٍ
﴿٧﴾ وَأَمَّا مَنْ خَفَّتْ مَوَٰزِينُهُۥ ﴿٨﴾ فَأُمُّهُۥ هَاوِيَةٌ
﴿٩﴾ وَمَآ أَدْرَىٰكَ مَا هِيَهْ ﴿١٠﴾ نَارٌ حَامِيَةٌۢ ﴿١١﴾

## அல்-காரிஆ

1 (உள்ளங்களைத்) திடுக்கிடச் செய்யக்கூடியதாகிறது. (இது இறுதி நாளின் பெயர்களில் ஒன்றாகும்.)

2 திடுக்கிடச் செய்யக்கூடியது எது?

3 திடுக்கிடச் செய்யக்கூடியது எது என்பதை உமக்கு எது அறிவித்தது?

4 மனிதர்கள் சிதறடிக்கப்பட்ட (தட்டுத் தடுமாறி திசையறியாது அங்குமிங்கும் பறந்து செல்லும்) ஈசல்களைப் போன்று ஆகிவிடும் நாளில் (அது நிகழும்.)

5 மேலும் மலைகள் (குடையப்பட்டு, நிறம் போடப்பட்ட பஞ்சுகளாக) ஆகிவிடும் நாளில் (அது நிகழும்)

## سُورَةُ التَّكَاثُرِ

ترتيبها ١٠٢ — آياتها ٨

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

أَلْهَىٰكُمُ ٱلتَّكَاثُرُ ﴿١﴾ حَتَّىٰ زُرْتُمُ ٱلْمَقَابِرَ ﴿٢﴾ كَلَّا سَوْفَ
تَعْلَمُونَ ﴿٣﴾ ثُمَّ كَلَّا سَوْفَ تَعْلَمُونَ ﴿٤﴾ كَلَّا لَوْ تَعْلَمُونَ
عِلْمَ ٱلْيَقِينِ ﴿٥﴾ لَتَرَوُنَّ ٱلْجَحِيمَ ﴿٦﴾ ثُمَّ لَتَرَوُنَّهَا
عَيْنَ ٱلْيَقِينِ ﴿٧﴾ ثُمَّ لَتُسْـَٔلُنَّ يَوْمَئِذٍ عَنِ ٱلنَّعِيمِ ﴿٨﴾

6 (மஹ்ஷர் மைதானத்தில் விசாரணையின் பின் மனிதர்களின் நிலையையும் அவர்கள் இரு பிரிவினர்களாகப் பிரிவார்கள் என்பதையும் அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.) எனவே (அந்நாளில் எவருடைய நற்கிரியைகளின்) நிறைகள் பாரமாகி விடுகின்றதோ,

7 அவர் பொருந்திக் கொள்ளக்கூடிய வாழ்க்கையில் இருப்பார்.

8 யாருடைய (நற்கிரிகைகளின்) நிறுவைகள் பாரமற்றதாகிவிட்டதோ,

9 அவர் ஒதுங்குமிடம் 'ஹாவியா' எனும் நரகமாகும். (இங்கு ஒதுங்குமிடம் என்பதற்கு தாய் என்ற கருத்தைக் குறிக்கும் 'உம்மு' என்ற வார்த்தையே பிரயோகிக்கப்பட்டுள்ளது. ஏனெனில் பிள்ளைகள் தாயின் பால் ஒதுங்குவது போல் இவர்கள் நரகின் பால் ஒதுங்குவார்கள்.)

10 அது (ஹாவியா எனும் நரகம்) எது என்பதை உமக்கு எது அறிவித்துத் தந்தது.

11 அது உஷ்ணம் கடுமையான (நரக) நெருப்பாகும்.

## அத்தகாஸுர்

1 (செல்வங்களையும் பிள்ளைகளையும்) பெருக்கி அவற்றைக் கொண்டு பெருமை பேசும் ஆசை உங்களை (அல்லாஹ்விற்குக் கீழ்படிந்து மறுமைக்கு நற்கிரிகைகள் புரிவதை விட்டும்) உங்கள் கவனத்தைத் திருப்பிவிட்டது.

2 நீங்கள் மண்ணறைகளைச் சந்திக்கும் வரைக்கும். (உங்களுக்கு மரணம் வரும் வரை அது உங்கள் கவனத்தைத் திருப்பிக்கொண்டிருக்கும்.)

3 அவ்வாறு அது உங்களைத் திருப்பிவிடக்கூடாது. நீங்கள் (மறுமையில் அதன் தீயவிளைவை) அறிந்து கொள்வீர்கள்.

4 மீண்டும், அவ்வாறு அது உங்களைத் திருப்பிவிடக்கூடாது. நீங்கள் (மறுமையில் அதன் தீயவிளைவை) அறிந்து கொள்வீர்கள்.

5 நீங்கள் (உலக விடயங்களை உறுதியாக அறிவது போன்று மறுமையில் எங்கு மீள்வீர்கள் என்பதை) உறுதியாக அறிவீர்களாயின் (அது உங்கள் கவனத்தைத் திருப்பியிருக்க மாட்டாது.)

6 நிச்சயமாக நீங்கள் (மறுமையில்) நரகத்தைக் காண்பீர்கள்.

7 பின்பும் நிச்சயமாக அதை உறுதியாக கண்கூடாகவே காண்பீர்கள்.

8 பின்பு நீங்கள் அந்நாளில் அருட்கொடைகளைப் பற்றிக் கேட்கப்படுவீர்கள். (மறுமைக்காக

سُورَةُ الْعَصْرِ
ترتيبها ١٠٣ — آياتها ٣

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

وَالْعَصْرِ ١ إِنَّ الْإِنسَانَ لَفِي خُسْرٍ ٢ إِلَّا الَّذِينَ آمَنُوا
وَعَمِلُوا الصَّالِحَاتِ وَتَوَاصَوْا بِالْحَقِّ وَتَوَاصَوْا بِالصَّبْرِ ٣

سُورَةُ الْهُمَزَةِ
ترتيبها ١٠٤ — آياتها ٩

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

وَيْلٌ لِّكُلِّ هُمَزَةٍ لُّمَزَةٍ ١ الَّذِي جَمَعَ مَالًا وَعَدَّدَهُ ٢
يَحْسَبُ أَنَّ مَالَهُ أَخْلَدَهُ ٣ كَلَّا لَيُنبَذَنَّ فِي الْحُطَمَةِ ٤
وَمَا أَدْرَاكَ مَا الْحُطَمَةُ ٥ نَارُ اللَّهِ الْمُوقَدَةُ ٦ الَّتِي تَطَّلِعُ
عَلَى الْأَفْئِدَةِ ٧ إِنَّهَا عَلَيْهِم مُّؤْصَدَةٌ ٨ فِي عَمَدٍ مُّمَدَّدَةٍ ٩

سُورَةُ الْفِيلِ
ترتيبها ١٠٥ — آياتها ٥

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

أَلَمْ تَرَ كَيْفَ فَعَلَ رَبُّكَ بِأَصْحَابِ الْفِيلِ ١ أَلَمْ يَجْعَلْ كَيْدَهُمْ
فِي تَضْلِيلٍ ٢ وَأَرْسَلَ عَلَيْهِمْ طَيْرًا أَبَابِيلَ ٣ تَرْمِيهِم
بِحِجَارَةٍ مِّن سِجِّيلٍ ٤ فَجَعَلَهُمْ كَعَصْفٍ مَّأْكُولٍ ٥

நீங்கள் தயாராகுவதை விட்டும் உங்களைத் திருப்பிய இன்பங்களைப் பற்றி அவன் கேட்பான். அவன் பாதுகாப்பு, ஆரோக்கியம், ஓய்வு சுவையான உணவுகள், சுவையான பானங்கள், தாகத்திற்காக குடிக்கும் குளிர் நீர், வீடுகளின் மூலம் நிழல் பெறல் போன்றவற்றைப் பற்றி உங்களிடம் விசாரணை செய்வான்.)

## அல்-அஸ்ர்

1 காலத்தின் மீது சத்தியமாக, (அல்லாஹ் இவ்வசனத்தில் காலத்தின் மீது சத்தியம் செய்துள்ளான். ஏனெனில் படைத்த நாயன் ஒருவன் இருக்கிறான் என்பதற்கு அதில் தெளிவான அத்தாட்சி இருக்கின்றது. இரவு, பகல் என்பன ஓர் ஒழுங்கான ஏற்பாட்டில் செல்லல், இருள், ஒளி என்பன மாறி மாறி வருதல் போன்றன அவற்றுள் சிலவாகும். முகாதில் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: அஸ்ர் நேரத்தின் மீது சத்தியமாக)

2 நிச்சயமாக மனிதன் நஷ்டத்தில் இருக்கிறான். (நஷ்டம் என்பது மூலதனத்தில் குறைவு ஏற்படுவதாகும்.)

3 விசுவாசம் கொண்டு நற்கிரிகைகள் செய்து (அவர்கள் ஏற்று நம்புவது கடமையாயிருக்கக்கூடிய) சத்தியத்தைக் கொண்டு ஒருவருக்கொருவர் உபதேசம் செய்து (சத்தியம் என்பது அல்லாஹ்வை விசுவாசித்து அவனை ஓர்மைப் படுத்துவதும் அவன் மார்க்கமாகத் தந்தவற்றை ஏற்று நடப்பதும், அவன் விலக்கியவற்றை விலகி நடப்பதுமாகும்.) மேலும் பொறுமையைக் கொண்டும் ஒருவருக்கொருவர் உபதேசம் செய்தவர்களையும் தவிர. (அவர்கள் நஷ்டத்தில் இல்லை. பாவத்தை விடுவதில் பொறுமை செய்தல், நன்மைகளைச் செய்வதில் பொறுமை செய்தல், சோதனைகளின் போது பொறுமை செய்தல் ஆகிய மூன்றும் பொறுமையில் அடங்கும்.)

## அல்-ஹுமஸா

1 முன்னிலையில் மனிதர்களின் குறைகளைச் சொல்லிக் கொண்டிருக்கும் ஒவ்வொருவருக்கும், பின்னால் புறம் பேசித் திரியும் ஒவ்வொருவருக்கும் கேடுதான்.

2 அவன் எத்தகையவனெனில் செல்வத்தை ஒன்றுசேர்த்து அதனை எண்ணிக் கொண்டிருப்பவன். (அவன் மற்றவர்களின் குறைகளைப் பேசுவதற்கு தான் சேகரித்த செல்வத்தின் இறுமாப்பும், அதனால் மற்றவர்களை விட அவன் தனக்குச் சிறப்பு உண்டு எனக்கருதுவதுமே காரணமாகும் என்பதை அல்லாஹ் இங்கு உணர்த்துகிறான்.)

3 (அவன் தனது செல்வத்தின் இறுமாப்பின் காரணமாக) அவனது செல்வம் (அவன் மரணித்து விடாமல்) நிரந்தரமாக அவனை வாழ வைத்துவிடும் என எண்ணிக் கொண்டிருக்கின்றான். (எனவே மரணத்தின் பின் உள்ளவற்றைப் பற்றி அவன் சிந்திப்பதில்லை.)

4 அவன் நினைப்பது போன்றல்ல. அவன் உறுதியாகவே ஹுதமாவில் எறியப்படுவான். (அது அவனையும் அவனது செல்வங்களையும் சுக்கு நூறாக்கி விடும்.)

5 'ஹுதமா' என்றால் என்ன என்பதை உமக்கு ஏது அறிவித்துத் தந்தது?

6 (அது) அல்லாஹ்வால் மூட்டப்பட்ட (நரக) நெருப்பாகும்.

7 அது எத்தகையதெனில் இதயங்களுக்குச் சென்றடையக் கூடியது. (இதயங்களை அடைந்து அவற்றை அது மூடிக் கொள்ளும். ஏனெனில் அவ்விதயங்கள் தான் வழிதவறிய நோக்கங்கள், கெட்ட எண்ணங்கள், கெட்ட பண்புகள் போன்றவற்றின் உறைவிடமாகும்.

8 நிச்சயமாக அதை அவர்கள் மீது சூழ்ந்து மூடிக் கொள்ளச் செய்யப்படும். (அதிலிருந்து வெளியேற அவர்கள் சக்தி பெறமாட்டார்கள்.

9 நீண்ட கம்பங்களில் (அவர்கள் கட்டப்பட்டிருப்பார்கள்.) முகாதில் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: இரும்பு முளைகளால் கட்டப்படும், அவர்கள் அதிலிருந்து வெளியேறவும் முடியாது. காற்று அதனுள் செல்லவும் முடியாது.

## அல்பீல்

1 யானைப் படைகளை உமது இரட்சகன் எவ்வாறு செய்தான் (தண்டித்தான்) என்பதை நீர் அறியவில்லையா? (அவர்கள் எதியோப்பியாவைச் சேர்ந்த கிறிஸ்தவர்கள். அவர்கள் யமன் நாட்டை ஆட்சி செய்தார்கள். அங்கிருந்து க.்.பாவை நாசப்படுத்தும் நோக்கில் மக்காவை நோக்கி வந்தார்கள். அல்லாஹ் இவ்வத்தியாயத்தில் கூறியுள்ள பறவைகளை அனுப்பி அவர்களை அழித்து விட்டான். அது ஓர் அத்தாட்சியாகும். முஹம்மத் (ஸல்) அவர்கள் நபியாக அனுப்பப்படுவதற்கு நாற்பது வருடங்களுக்கு முன் இது நடந்தது.

2 (க.்.பாவை அழிப்பதற்கு அவர்கள் மேற்கொண்ட (முயற்சியையும்) அவர்களின் சூழ்ச்சியை(யும்) அவன் வழிதவறச் செய்யவில்லையா?

3 மேலும் அவன் அவர்களின் பேரில் பறவைகளை கூட்டம் கூட்டமாக அனுப்பி வைத்தான். (அவை கறுப்புப் பறவைகள். கடல் பக்கத்திலிருந்து வந்தன. ஒவ்வொரு பறவையுடனும் மூன்று கற்கள் காணப்பட்டன. சொண்டில் ஒரு கல்லும் இரு கால்களில் இரு கற்களும் காணப்பட்டன. அவை படக்கூடிய அனைத்தையும் அவை சுக்குநூறாக்கி விடும்.

4 (நெருப்பில்) சுடப்பட்ட கற்களை அவர்களுக்கு அவை எறியும். (நரக நெருப்பில் சுடப்பட்ட அக்கற்களில் அவர்களின் பெயர்கள் எழுதப்பட்டிருந்தன. அவர்களில் ஒருவருக்கு அக்கல் படுமாயின் அவருக்கு அழிவை ஏற்படுத்தும். அவை கடலையின் பருமனில் இருந்தன.)

5 (மிருகங்களால்) மென்று (எறியப்பட்ட) இலைகளைப் போன்று அவர்களை அவன் ஆக்கிவிட்டான்.

### سُورَةُ قُرَيْشٍ

ترتيبها ١٠٦ — آياتها ٤

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

لِإِيلَٰفِ قُرَيْشٍ ﴿١﴾ إِۦلَٰفِهِمْ رِحْلَةَ ٱلشِّتَآءِ وَٱلصَّيْفِ
﴿٢﴾ فَلْيَعْبُدُوا۟ رَبَّ هَٰذَا ٱلْبَيْتِ ﴿٣﴾ ٱلَّذِىٓ أَطْعَمَهُم
مِّن جُوعٍ وَءَامَنَهُم مِّنْ خَوْفٍۭ ﴿٤﴾

### سُورَةُ الْمَاعُونِ

ترتيبها ١٠٧ — آياتها ٧

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

أَرَءَيْتَ ٱلَّذِى يُكَذِّبُ بِٱلدِّينِ ﴿١﴾ فَذَٰلِكَ ٱلَّذِى
يَدُعُّ ٱلْيَتِيمَ ﴿٢﴾ وَلَا يَحُضُّ عَلَىٰ طَعَامِ ٱلْمِسْكِينِ ﴿٣﴾
فَوَيْلٌ لِّلْمُصَلِّينَ ﴿٤﴾ ٱلَّذِينَ هُمْ عَن صَلَاتِهِمْ سَاهُونَ
﴿٥﴾ ٱلَّذِينَ هُمْ يُرَآءُونَ ﴿٦﴾ وَيَمْنَعُونَ ٱلْمَاعُونَ ﴿٧﴾

### سُورَةُ الْكَوْثَرِ

ترتيبها ١٠٨ — آياتها ٣

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

إِنَّآ أَعْطَيْنَٰكَ ٱلْكَوْثَرَ ﴿١﴾ فَصَلِّ لِرَبِّكَ وَٱنْحَرْ ﴿٢﴾
إِنَّ شَانِئَكَ هُوَ ٱلْأَبْتَرُ ﴿٣﴾

## குறைஷ்

1 குறைசிகளுக்கு விருப்பமுள்ளதாக ஆக்கியதற்காக,

2 அவர்களுக்கு மாரி காலத்தின் பயணத்தையும், கோடை காலப் பயணத்தையும் விருப்பமுள்ளதாக ஆக்கியதற்காக, (குறைசிகள் வியாபாரத்தைத் தொழிலாகக் கொண்டவர்கள். அவர்கள் மாரி காலத்தில் யமனுக்கும் கோடை காலத்தில் சிரியாப் பகுதிக்கும் பயணம் செய்வார்கள். அவ்விரு பயணங்களும் இல்லையெனில் அவர்களின் வாழ்க்கை பெரும் கஷ்டமாகி விடும். க.்.பாவிற்கு நெருக்கமாக இருப்பதன் மூலம் அவர்களுக்குப் பாதுகாப்பும் இல்லையென்றிருந்தால் அவர்களுக்கு வியாபாரம் செய்ய முடியாது. இவ்வருள்களை அல்லாஹ் வழங்கியதற்காக அல்லாஹ்வை அவர்கள் வணங்கவும்.)

3 இந்த வீட்டின் (க.்.பாவின்) நாயனை அவர்கள் வணங்கவும். (இங்கு அவர்கள் சிலைகளை வைத்திருந்த போதும் அவனே அதன் நாயன் என அவர்களுக்கு அறிவிக்கின்றான். இந்த க.்.பாவின் மூலம் அறபிகள் சிறப்பைப் பெற்றிருந்தார்கள்.)

4 அவன் எத்தகையவனெனில் (இவ்விரு பயணங்களின் மூலம்) அவர்களுக்கு பசிக்கு உணவளித்தான். (மேலும்) அவன் அவர்களை அச்சமற்றவர்களாகவும் ஆக்கி வைத்தான். (ஏனைய அறபிகள் சிலர் சிலரைத் தாக்கிக் கொண்டும், சிறைப் பிடித்துக் கொண்டும் இருந்தனர். ஆனால் குறைசிகள் அவர்கள் ஹரத்தில் இருந்ததனால் இவற்றை விட்டும் பாதுகாக்கப்பட்டார்கள்.

## அல்-மாஊன்

1 (நபியே!) தீர்ப்பு நாளைப் பொய்யாக்குகின்றானே அவனை நீர் பார்த்தீரா?
2 அவன் எத்தகையவனெனில் அநாதைகளை (அவர்களுடைய உரிமைகளை எடுக்க விடாமல் கடுமையாக) விரட்டுபவன். (அறியாமைக்கால அறபிகள் பெண்களுக்கும், சிறுவர்களுக்கும் அனந்தரம் கொடுக்காமல் இருந்தார்கள்).
3 அவன் எளியவர்களுக்கு உணவளிக்க (தன்னையோ, பிறரையோ) தூண்டமாட்டான். (அது அவனின் கஞ்சத்தனத்தினாலாகும்.)
4 தொழக்கூடியவர்களுக்குக் கேடு தான்.
5 எத்தகையவர்கள் எனில் அவர்கள் அவர்களுடைய தொழுகையை மறந்திருப்பார்கள். (அதைப் பொருட்படுத்தமாட்டார்கள். தொழுதால் நன்மையை எதிர்பார்க்கவும் மாட்டார்கள். அதை விட்டால் தண்டனையைப் பயப்படவும் மாட்டார்கள். அதன் நேரம் முடிவடையும் வரை அதை மறந்திருப்பார்கள்.)
6 அவர்கள் (அவர்களுடைய தொழுகையையும் இதர நற்கிரிகைகளையும் மக்களுக்குக்) காட்டிக் கொள்ளவே செய்வார்கள்.
7 மேலும் அவர்கள் (அயல் வீட்டார்களுக்கிடையில் இரவலாகப் பரிமாறிக்கொள்ளப்படும் கத்தி, வாளி போன்ற) அற்பமான பொருட்களைக் (கொடுக்காமல்) தடுத்துக் கொள்வார்கள்.

## அல்-கவ்ஸர்

1 நிச்சயமாக நாம் உங்களுக்கு (ஹவ்ழுல்) கவ்ஸர் (எனும் தடாகத்தை)தந்துள்ளோம். (அல்லாஹ் இதை நபியவர்களுக்கும், அவர்களது கூட்டத்தினருக்கும் கண்ணியமாக ஆக்கியுள்ளான்.)
2 (உங்கள் மீது கடமையாக்கப்பட்டுள்ள தொழுகைகளை) உமது நாயனுக்காகத் தொழுது அவனுக்காக அறுத்துப் பலியிடுங்கள். (சில மனிதர்கள் பிறரைத் தொழுதுகொண்டும் பிறருக்காக அறுத்துக் கொண்டுமிருந்தார்கள். அல்லாஹ் தனது நபிக்கு அவனையே தொழும் படியும், அவனுக்காகவே அறுக்கும் படியும் ஏவுகின்றான். இது ஹஜ் பெருநாள் தொழுகையையும் அதற்குப் பின்னால் செய்யப்படும் உழ்ஹிய்யாவையுமே குறிக்கின்றது என கதாதா, அதாஉ, இக்ரிமா (ரஹ்) ஆகியோர் கூறுகின்றார்கள்.)
3 நிச்சயமாக உங்களை வெறுப்பவன்தான் சந்ததியற்றவன் (அப்தர் -சந்ததியற்றவன்- எனப்படுவது மனிதர்களில் பிள்ளை இல்லாதவர்கள். நபியவர்களின் ஆண்மகன் ஒருவர் இறந்த சந்தர்ப்பத்தில் காபிர்களில் ஒருவன் அவர் சந்ததியற்றவன் எனக் கூறினான். அப்போது இவ்வத்தியாயம் இறங்கியது.)

## அல்- காபிரூன்

1 (நபியே!) நீர் கூறுவீராக. நிராகரிப்பாளர்களே (மக்கா காபிர்கள் நபியவர்களிடம் வந்து நீங்கள் ஒரு வருடத்திற்கு எங்கள் தெய்வங்களை வணங்குங்கள். நாங்கள் ஒரு வருடத்திற்கு உங்கள் நாயனை வணங்குவோம் என்றனர். அப்போது இவ்வத்தியாயம் இறங்கியது.)
2 நீங்கள் வணங்கும் (விக்கிரகங்களை) நான் (தற்போது) வணங்கமாட்டேன்.
3 நீங்கள் (உங்கள் இறை நிராகரிப்பிலும், இணைவைத்தலிலும் இருக்கும் வரை) நான் வணங்குவதை (அல்லாஹ்வை) வணங்கமாட்டீர்கள்.
4 நான் நீங்கள் வணங்குபவற்றை (எதிர்காலத்திலும்) வணங்கமாட்டேன்.
5 நீங்களும் (உங்கள் இணைவைப்பிலும் நிராகரிப்பிலும் இருக்கும் வரை எதிர்காலத்திலும்) நான் வணங்குவதை (அல்லாஹ்வை) வணங்கமாட்டீர்கள்.
6 உங்களுக்கு உங்கள் மார்க்கம். எனக்கு எனது மார்க்கம். (நீங்கள் உங்கள் மார்க்கத்தைப் பொருந்திக் கொண்டால் நான் எனது மார்க்கத்தைப் பொருந்திக் கொள்கிறேன். உங்கள் மார்க்கம் உங்களுடன் இருக்கட்டும். எனது மார்க்கம் என்னுடன் இருக்கட்டும்.)

## அந்-நஸ்ர்

(இதற்கு ஸூரதுத் தவ்தீஉ (விடைபெறும் ஸூரா) எனவும் சொல்லப்படும். இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள். இந்த ஸூரா இறங்கிய போது நபியவர்கள் எனக்கு மரணச் செய்தி விடுக்கப்பட்டுவிட்டது எனக் கூறினார்கள். -அஹ்மத்-)
1 அல்லாஹ்வின் உதவியும், மக்கா வெற்றியும் வருமானால் (உங்கள் பகைவர்களான

குறைசிகளுக்கு விரோதமாக அல்லாஹ்வின் உதவி உங்களுக்குக் கிடைத்து மக்காவை வெற்றி கொண்டுவிடுவீராயின்)

2 மேலும் மனிதர்கள் அல்லாஹ்வின் மார்க்கத்தில் கூட்டம் கூட்டமாக நுழைவதையும் காண்பீர்களாயின் (நபி (ஸல்) அவர்கள் மக்காவை வெற்றி கொண்டதும் அறபிகள் சொன்னார்கள் யானைப் படையின் தாக்கத்திலிருந்து அல்லாஹ் இம்மக்கா வாசிகளைப் பாதுகாத்துவிட்ட நிலையில் முஹம்மத் இவர்களை வெற்றி கொள்வாராயின் அவர் உண்மையில் தான் இருக்கின்றார். அவரை யாரும் தடுக்கமுடியாது என்றனர். எனவே அவர்கள் தனிநபர்களாக நுழைந்தபின் கூட்டம் கூட்டமாக மார்க்கத்தில் நுழையத் தொடங்கினர். முழுக் கோத்திரமாகவும் இஸ்லாத்தில் நுழைந்தனர்.)

3 உமது இரட்சகனைப் புகழ்வதுடன் (அவனைத்) தூய்மைப் படுத்துங்கள். மேலும் அவனிடம் பாவமன்னிப்புத் தேடுங்கள். நிச்சயமாக அவன் பாவங்களை மிகவும் மன்னிப்பவன். (இவ்வத்தியாயம் நபியவர்களின் தவணை முடிவடைந்துவிட்டதைக் குறிக்கின்றது என இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள் -புகாரி-)

سُورَةُ الكَافِرُونَ — آياتها ٦ — ترتيبها ١٠٩

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

قُلْ يَٰٓأَيُّهَا ٱلْكَٰفِرُونَ ١ لَآ أَعْبُدُ مَا تَعْبُدُونَ ٢
وَلَآ أَنتُمْ عَٰبِدُونَ مَآ أَعْبُدُ ٣ وَلَآ أَنَا۠ عَابِدٌ مَّا عَبَدتُّمْ ٤
وَلَآ أَنتُمْ عَٰبِدُونَ مَآ أَعْبُدُ ٥ لَكُمْ دِينُكُمْ وَلِىَ دِينِ ٦

سُورَةُ النَّصْرِ — آياتها ٣ — ترتيبها ١١٠

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

إِذَا جَآءَ نَصْرُ ٱللَّهِ وَٱلْفَتْحُ ١ وَرَأَيْتَ ٱلنَّاسَ
يَدْخُلُونَ فِى دِينِ ٱللَّهِ أَفْوَاجًا ٢ فَسَبِّحْ بِحَمْدِ رَبِّكَ
وَٱسْتَغْفِرْهُ ۚ إِنَّهُۥ كَانَ تَوَّابًۢا ٣

سُورَةُ المَسَدِ — آياتها ٥ — ترتيبها ١١١

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

تَبَّتْ يَدَآ أَبِى لَهَبٍ وَتَبَّ ١ مَآ أَغْنَىٰ عَنْهُ مَالُهُۥ وَمَا
كَسَبَ ٢ سَيَصْلَىٰ نَارًا ذَاتَ لَهَبٍ ٣ وَٱمْرَأَتُهُۥ
حَمَّالَةَ ٱلْحَطَبِ ٤ فِى جِيدِهَا حَبْلٌ مِّن مَّسَدٍۭ ٥

## அல்-மஸத்

1 அபூ லஹபின் இரு கைகளும் நாசமாகட்டும். அவனும் நாசமாகட்டும். (அவனுக்குக் கேடாக பிரார்த்தனை செய்யப்பட்டது போன்றே நிகழ்ந்தது. இவன் நபியவர்களின் பெரிய தந்தையின் மகனாவான். இவனின் பெயர் அப்துல் உஸ்ஸா)

2 அவனின் செல்வங்களும், அவன் சம்பாதித்து(க் கொண்ட இலாபங்களும், தலைமைப் பதவிகளும் அல்லாஹ்வின் தண்டனையை விட்டும் பாதுகாக்கும் விடயத்தில்) எந்தப் பயனையும் அளிக்கவில்லை.

3 கொழுந்து விட்டெரியும் நெருப்பில் அவன் நுழைவான். (அதில் அவனை எரிக்கப்பட்டு வேதனை செய்யப்படும்.)

4 விறகுகளை அதிகம் சுமந்து வரும் அவனது மனைவியும் (-உம்மு ஜமீல்- நுழைவாள்.) அவள் காட்டு விறகுகளையும், முட்களையும் சுமந்து வந்து இரவில் நபியவர்கள் செல்லும் பாதையில் எறிவாள்.)

5 ஈத்தமட்டையிலிருந்து திரிக்கப்பட்ட ஒரு கயிறு அவள் கழுத்தில் காணப்படும். (அவளிடம் இரத்தினத்தினாலான பெறுமதிமிக்க ஒரு மாலை காணப்பட்டது. அவள் அதை முஹம்மத்(ஸல்) அவர்களை எதிர்ப்பதில் செலவு செய்வதாக சூளுரைத்திருந்தாள். அதற்குக் கூலியாகவே அல்லாஹ் இதை வழங்கியுள்ளான்.

## அல்-இஹ்லாஸ்

1 (நபியே) நீர் கூறுவீராக. அவன் அல்லாஹ் ஒருவன் (இணைவைப்பவர்கள் சொன்னார்கள்: உமது நாயனின் குடும்பப் பரம்பரையைக் கூறுவீராக. அப்போது இவ்வத்தியாயம் இறங்கியது.)

2 அல்லாஹ்வாகிறவன் எல்லோராலும் (தமது தேவைகளுக்காக) நாடப்படக் கூடியவன். (ஸமத் எனப்படுபவர் சகல சிறப்புப் பண்புகளையும் பூர்த்தியாக்கிக் கொள்ளக் கூடியவர்.)

3 அவன் (யாரையும்)பெறவுமில்லை, (யாராலும்) அவன் பெறப்படவுமில்லை. (அவன் அவ்வாறு பெறப்பட்டிருந்தால் இல்லாமை என்ற பண்பு அவனுக்கு இருந்திருக்கும். முஷ்ரிக்களும் வேதக்காரர்களும் கூறுவது போன்று மலக்குகளையோ, உஸைர்(அலை) அவர்களையோ, ஈஸா (அலை) அவர்களையோ அவன் பெறவில்லை.)

4 (அவனுடைய எந்தப் பண்புகளிலும்) அவனுக்கு நிகராக யாருமில்லை.

سُورَةُ الإِخْلَاص

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

قُلْ هُوَ ٱللَّهُ أَحَدٌ ① ٱللَّهُ ٱلصَّمَدُ ② لَمْ يَلِدْ
وَلَمْ يُولَدْ ③ وَلَمْ يَكُن لَّهُۥ كُفُوًا أَحَدٌۢ ④

سُورَةُ الفَلَق

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

قُلْ أَعُوذُ بِرَبِّ ٱلْفَلَقِ ① مِن شَرِّ مَا خَلَقَ ② وَمِن
شَرِّ غَاسِقٍ إِذَا وَقَبَ ③ وَمِن شَرِّ ٱلنَّفَّٰثَٰتِ فِى
ٱلْعُقَدِ ④ وَمِن شَرِّ حَاسِدٍ إِذَا حَسَدَ ⑤

سُورَةُ النَّاس

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

قُلْ أَعُوذُ بِرَبِّ ٱلنَّاسِ ① مَلِكِ ٱلنَّاسِ ② إِلَٰهِ
ٱلنَّاسِ ③ مِن شَرِّ ٱلْوَسْوَاسِ ٱلْخَنَّاسِ ④ ٱلَّذِى
يُوَسْوِسُ فِى صُدُورِ ٱلنَّاسِ ⑤
مِنَ ٱلْجِنَّةِ وَٱلنَّاسِ ⑥

## அல்-பலக்

(1) வைகறையின் இறைவனிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன். (பலக் என்பது ஸுப்ஹ் நேரத்தைக் குறிக்கும். ஏனெனில் இரவு அதை விட்டும் பிரிந்து விடுகின்றது. அல்லது அல்லாஹ்வின் படைப்புக்களில் பிரிந்தவை. அல்லது அல்லாஹ்வின் படைப்புக்களில் நின்றும் பிரிந்து காணப்படக்கூடிய தானியங்கள், வித்துக்கள் இன்னும் பிராணிகள் மற்றும் ஏனைய அல்லாஹ்வின் படைப்புக்கள் அனைத்தையும் உள்ளடக்கிக் கொள்ளும். இருள்களை நீக்குவதற்கு சக்தி பெற்ற நாயன் அவனிடம் பாதுகாப்பு தேடுபவனின் கஷ்டங்களையும் கவலைகளையும் நீக்குவதற்கு மிகச் சக்தி பெற்றவனாகும்.)

(2) அவனது படைப்புக்களின் தீங்குகளை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன்.

(3) இரவின் இருள் பரவிவிட்ட நேரத்தில் அதன் தீங்குகளை விட்டும் (பாதுகாப்புத் தேடுகிறேன். இரவு நேரத்தில் தான் காடுகளிலிருந்து ஐவாய் மிருகங்களும், இன்னும் விஷ ஜந்துக்களும் அதன் வதிவிடங்களிலிருந்து வெளியாகின்றன. அதே போன்று உலகில் பாவமான காரியங்களில் ஈடுபடுவோரும் இரவு நேரத்தில்தான் உற்சாகப்படுகின்றனர்.)

(4) முடிச்சுக்களில் ஊதி சூனியம் செய்யும் பெண்களின் கெடுதிகளை விட்டும் (அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன். ஏனெனில் அவர்கள் நூல்களில் முடிச்சுப் போட்டு சூனியம் செய்யும் போது அவற்றில் ஊதுகின்றனர்.)

(5) பொறாமைக்காரன் பொறாமை கொண்டு விட்டால் அவனின் கெடுதியை விட்டும் (உன்னிடம் பாதுகாப்பு தேடுகிறேன். பொறாமை என்பது அடுத்த சகோதரனிடம் உள்ள அல்லாஹ்வின் அருட்கொடைகள் நீங்க வேண்டும் என்று ஆசை வைப்பதாகும்.)

## அந்-நாஸ்

(1) (நபியே) நீர் கூறுவீராக. மனிதர்களின் இரட்சகனிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன். (மனிதர்களின் இரட்சகன் என்பதன் பொருள் அவர்களைப் படைத்து அவர்களது கருமங்களைத் திட்டமிட்டுச் செய்து அவர்களின் எல்லாக் காரியங்களையும் சீர் செய்பவன் என்பதாகும்.)

(2) (அவன்) மனிதர்களின் அரசன். (அவனுக்கே முழுமையான ஆட்சியும், அடக்கியாளும் அதிகாரமும் உண்டு.)

(3) மனிதர்களின் வணக்கத்துக்குரிய நாயன். (அதாவது அரசன், சில வேளை வணங்கப்படலாம். சில வேளை வணங்கப்படாமல் இருக்கலாம். எனினும் 'இலாஹ்' என்ற பதம் அதில் யாரும் பங்கு சேரமாட்டார்கள் என்பதைத் தெளிவுபடுத்துகிறது.)

(4) மறைந்திருந்து சந்தேகங்களைக் கிளப்பக் கூடிய ஷைத்தானின் தீங்கை விட்டும் (பாதுகாவல் தேடுகிறேன். மக்களை இரகசியமாக அவனுக்கு வழிப்படுமாறு அழைப்புவிடுத்து குழப்பம் விளைவிப்பதே அவனது பழக்கமாகும். மனதில் குழப்பத்தை உண்டுபண்ணுவோர் இரண்டுவகைப்படுவர். முதலாவது ஜின்கள். இரண்டாவது மனிதர்கள்.)

(5) இத்தகையோர் ஜின்களில் மற்றும் மனிதர்களிலும் இருக்கின்றனர். (ஜின் இன ஷைத்தான்கள் முன்கூறியது போன்று மக்களின் உள்ளத்தில் சந்தேகங்களை உருவாக்கின்றனர். மனித இன ஷைத்தான்கள் இரக்கமாக நல்லுபதேசம் செய்பவன் போன்று மனிதர்களின் உள்ளத்தில் குளறுபடிகளைத் தோற்றுவிக்கின்றனர். இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள்: பிள்ளைகள் பிறக்கும் போது அவர்களின் உள்ளத்தில் மன ஊசலாட்டங்களின்றி பிறப்பதில்லை. அவன் அல்லாஹ்வை நினைவு கூரும் போது ஷைத்தான் பின்வாங்கி விடுகிறான். அவன் அல்லாஹ்வை நினைவு கூர மறந்துவிட்டால் ஷைத்தான் உள்ளத்தில் குழப்பத்தை உண்டாக்குகிறான். ஷைத்தானின் சூழ்ச்சிகள் மற்றும் ஊசலாட்டங்களை விட்டும் அல்லாஹ் நம்மைப் பாதுகாப்பானாக.)

# முஸ்லிமின் வாழ்க்கையின் சில முக்கிய வினாக்கள்

1 **முஸ்லிம் தனது அகீதாவை எங்கிருந்து பெறுவான்?** அல்லாஹ்வின் வேதத்திலிருந்தும், தனது மனோ இச்சைப்படி பேசாத நபியின் ஸஹீஹான ஹதீஸிலிருந்தும் பெற்றுக்கொள்வான். அல்லாஹ் கூறுகிறான்: *"அது அவருக்கு அறிவிக்கப்படும் வஹி அன்றி கிடையாது".* அவை ஸஹாபாக்களும் ஸாலிஹான முன்னோர்களும் விளங்கிய முறையில் விளங்கப்படவேண்டும்.

2 **நாம் கருத்துவேறுபட்டால் எதன் பக்கம் மீளுவோம்?** நேரான மார்க்கத்தின் பால் மீளுவோம். அல்லாஹ்வின் வேதமும் நபியின் ஸுன்னாவுமே மூலாதாரமாகும். அல்லாஹ் கூறுகிறான்: *"நீங்கள் ஏதாவதொன்றில் பிணங்கிக்கொண்டால் அதை அல்லாஹ்விடம் ஒப்படைத்துவிடுங்கள்."* ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *"உங்களிடத்தில் இரண்டு விடயங்களை விட்டுச் செல்கிறேன். அவற்றைப் பற்றிப்பிடித்தால் வழிதவற மாட்டீர்கள். அது அல்லாஹ்வின் வேதமும் அவனது நபியின் ஸுன்னாவுமாகும்.* (அஹ்மத்)

3 **மறுமையில் விமோசனமடையும் பிரிவினர் யார்?** ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினர்கள்: *"எனது சமூகம் 73 பிரிவாகப் பிரியும். ஒரு பிரிவைத் தவிர மற்ற அனைத்தும் நரகத்திலேயே."* அப்போது ஸஹாபாக்கள் "அல்லாஹ்வின் தூதரே அவர்கள் யார்?" என வினவினர். அதற்கு அவர்கள், *"நானும் எனது தோழர்களும் இருக்கும் கொள்கையில் இருப்பவர்கள்" எனப் பதிலளித்தார்கள். (திர்மிதி) ரஸூல்* (ஸல்) அவர்களும், ஸஹாபாக்களும் இருந்த வழியே சரியானது. நீர் ஈடேற்றத்தையும், உன் கிரியைகள் ஒப்புக்கொள்ளப்படுவதையும் விரும்பினால் அதனைப் பின்பற்றிக்கொள். புதிதாக வழிபாடுகளை உண்டாக்குவதைத் தவிர்ந்துகொள்.

4 **நற்கிரியைகள் அங்கீகரிக்கப்படுவதற்கான நிபந்தனைகள் என்ன?** 1) அல்லாஹ்வை நம்புவதும் அவனை ஏகத்துவப்படுத்துவதும். ஏனென்றால் இணைவைப்பனிடமிருந்து நற்கிரியைகள் அங்கீகரிக்கப்படமாட்டாது. 2) தூய எண்ணம். அதாவது நற்கிரியையைக் கொண்டு அல்லாஹ்வை நாடுவது. 3) அதில் நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றுவது. அதாவது அவர்கள் காட்டிய வழியில் செய்வது. இவற்றில் ஏதாவது ஒன்று இல்லாதபோது அந்தக் கிரியை அங்கீகரிக்கப்படமாட்டாது. அல்லாஹ் கூறுகிறான். *"இன்னும் நாம் அவர்கள் செய்த செயல்களின் பக்கம் முன்னோக்கி அவற்றை பரத்தப்பட்ட புழுதியாக ஆக்கினோம்."*

5 **இஸ்லாத்தின் படித்தரங்கள் எத்தனை?** மார்க்கத்தின் படித்தரங்கள் மூன்று: இஸ்லாம், ஈமான், இஹ்ஸான்

6 **இஸ்லாம் என்றால் என்ன? அதன் தூண்கள் எத்தனை?** இஸ்லாம் என்பது ஏகத்துவத்தைக் கொண்டு அல்லாஹ்வுக்கு அடிபணிவதும், அவனுக்கு வழிப்படுவதும், இணைவைத்தலை விட்டும், இணைவைப்பவர்களைவிட்டும் நீங்கியிருத்தலுமாகும். அதன் தூண்கள் ஐந்து. அதனை ரஸூல் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: *"இஸ்லாம் ஐந்து விடயங்களின் பேரில் அமைக்கப்பட்டுள்ளது. வணக்கத்துக்குரிய நாயன் அல்லாஹ்வைத் தவிர யாரும் கிடையாது, முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனது தூதர் என்று சாட்சி சொல்வதும், தொழுகையை நிலைநிறுத்துவதும், ஸகாத் கொடுப்பதும், கஃபாவை ஹஜ் செய்வதும், ரமழானில் நோன்பு நோற்பதுமாகும்.* (புகாரி, முஸ்லிம்)

7 **ஈமான் என்றால் என்ன? அதன் தூண்கள் எத்தனை?** ஈமான் என்பது உள்ளத்தால் உறுதி கொள்வதும், நாவால் மொழிவதும், உறுப்புக்களால் செயலாற்றுவதுமாகும். வழிபாடுகள் மூலம் அது அதிகரிக்கும். பாவச் செயலால் அது குறையும். அல்லாஹ்: *"அவர்களது ஈமானுடன் மேலும் ஈமானை அதிகரிப்பதற்காக"* என்று கூறுகிறான். ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினர்கள்: *"ஈமான் எழுபதும் சில கிளைகளுமாகும். அதில் மிக உயர்ந்தது லாஇலாஹ*

*இல்லல்லாஹ் என்ற வார்த்தையாகும். மிகத் தாழ்ந்தது பாதையிலிருந்து தீங்கு விளைவிப்பவற்றை அகற்றுவதாகும். வெட்கம் ஈமானின் கிளைகளில் ஒன்றாகும்."* சிறப்புக்குரிய காலங்களில் நற்கிரியைகளில் காணும் உற்சாகமும், பாவங்கள் செய்யும் போது ஏற்படும் சோர்வும் ஈமான் கூடக்கூடியதும், குறையக்கூடியதும் என்பதை உறுதிப்படுத்துகின்றது. அல்லாஹ் கூறுகின்றான்: *"நிச்சயமாக நன்மைகள் தீமைகளைப் போக்கிவிடும்".* ஈமானின் தூண்கள் ஆறு. ரஸூல் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: *"அல்லாஹ்வையும் அவனது மலக்குகளையும் அவனது வேதங்களையும், அவனது தூதர்களையும், மறுமை நாளையும் நல்ல, தீய கற்பனையையும் நம்புவதே ஈமானாகும்."* (முஸ்லிம்).

8 "லாஇலாஹ இல்லல்லாஹ்" என்பதன் அர்த்தம் யாது? வணக்கத்தின் உரிமையை அல்லாஹ் அல்லாதவற்றை விட்டும் நீக்கி அல்லாஹ்வுக்கு மாத்திரம் அதனைத் தரிபடுத்துவதாகும்.

9 அல்லாஹ் எங்களுடன் இருக்கின்றானா? ஆம். அல்லாஹ் அவனது அறிவு, கேள்வி, பார்வை, பாதுகாத்தல், அறிதல், சக்தி, நாட்டம் என்பவற்றைக் கொண்டு எங்களுடன் இருக்கின்றான். ஆனால் அவனது "தாத்" எனும் சுயம் படைப்புக்களின் தாத்துடன் கலக்கமாட்டாது. படைப்புக்களில் எதுவும் அதனைச் சூழ்ந்துகொள்ளவும் மாட்டாது.

10 அல்லாஹ்வைக் கண்ணால் காணமுடியுமா? அல்லாஹ்வை உலகில் கண்ணால் காணமுடியாது. மு.்.மின்கள் மஹ்ஷரிலும், சுவர்க்கத்திலும் அவனைக் காண்பார்கள் என்பது அஹ்லுஸ் ஸுன்னாக்களின் ஏகோபித்த கருத்தாகும். அல்லாஹ் கூறுகிறான்: *"அன்று சில முகங்கள் செழிப்பாக இருக்கும். அவை தங்கள் இறைவனைப் பார்த்துக்கொண்டிருக்கும்".*

11 அல்லாஹ்வின் திருநாமங்களையும் அவனது பண்புளையும் அறிவதன் பயன் என்ன? அல்லாஹ் தனது படைப்புக்களின் மீது விதித்த முதலாவது கடமை அவனை அறிவதாகும். மனிதர்கள் அவனை அறிந்தால் அவனை உரிய முறையில் வணங்குவர். அல்லாஹ் கூறுகின்றான்: *"வணக்கத்துக்குத் தகுதியான நாயன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்பதை நீ அறிந்துகொள்".* அல்லாஹ்வின் அருள் விசாலமென நினைப்பது அவனின் மீது ஆதரவு வைப்பதையும், அவனது தண்டனை கடுமையென நினைப்பது அவனைப் பற்றிய பயத்தையும், அவனே உபகாரம் செய்பவன் என நினைப்பது நன்றி உணர்வையும் ஏற்படுத்தும். அவனது திருநாமங்களைக் கொண்டும் அவனது ஸிபாத்துக்களைக் கொண்டும் அவனை வணங்குவதன் கருத்தாவது: அதன் கருத்துக்களை விளங்கி அதன் படி அமல் செய்வதாகும்.

அல்லாஹ்வின் திருநாமங்களிலும் பண்புகளிலும் அறிவு, கிருபை, நீதி போன்றவை அடியார்களிடமும் இருப்பது விரும்பப்படக்கூடியவையாகும். தெய்வீகம், அடக்கியாள்தல், பெருமை போன்ற பண்புகள் அடியார்களுக்கு இருக்கக் கூடாதவைகளாகும். அடிபணிதல், தேவை காணல், மற்றவர்களிடம் கேட்டல், பணிவு போன்ற அடியார்களிடம் இருக்கவேண்டிய பண்புகள் அல்லாஹ்வுக்கு இருக்கமுடியாதவைகளாகும். படைப்புகளில் அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமானவர்கள் அவன் விரும்பும் பண்புகளைப் பெற்றவர்களே. அவனுக்கு மிகவும் வெறுப்பானவன் அவன் வெறுக்கும் பண்புகளைப் பெற்றவனே.

12 அல்லாஹ்வின் அழகிய திரு நாமங்கள் யாவை? அல்லாஹ் கூறுகின்றான்: *"அல்லாஹ்வுக்கு அழகான திருநாமங்கள் உண்டு. நீங்கள் அவற்றைக் கொண்டு அவனை அழையுங்கள்".* ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *"அல்லாஹ்வுக்கு 99 திருநாமங்கள் உண்டு. யார் அவற்றைப் பாடமிடுகின்றாரோ அவர் சுவர்க்கம் நுழைவார்."* (புகாரி, முஸ்லிம்) யார் குர்ஆனையும் ஹதீஸையும் ஆராய்வாரோ அவற்றைப் பாடமிட்டுக்கொள்வார். அவையானவன:

| திருநாமம் | கருத்து |
|---|---|
| அல்லாஹ் | வணங்கப்படுவதற்கும் அவனது படைப்பினங்கள் அனைத்தும் அவனுக்கு அடியார்களாக இருப்பதற்கும் தகுதியானவன். அவனே வணங்கப்படத் தகுதியானவன். அடிபணிதல், தாழ்வடைதல். றுகூஉ, ஸுஜூத் உள்ளிட்ட எல்லா வணக்கங்களும் அவனுக்கு மாத்திரமே செய்யப்பட வேண்டும். |
| அர்ரஹ்மான் | அவன் விசாலமான அருளையும் அது அவனது எல்லாப் படைப்பினங்களையும் உள்ளடக்கிக் கொள்ளக்கூடியது என்பதையும் அறிவிக்கும் அவனது பெயராகும். இது அவனுக்கு மாத்திரம் குறிப்பான ஒரு பெயராகும். இதை வேறு எவருக்கும் பயன்படுத்துவது கூடாது. |
| அர்ரஹீம் | இவ்வுலகிலும் மறுமையிலும் முஃமின்களுக்கு அருள்புரிந்து மன்னிப்பு வழங்கக்கூடியவன். அவன் இவ்வுலகில் அவனை வணங்குவதின் பால் அவர்களுக்கு வழிகாட்டினான். மறுமையில் அவனுடைய சுவனத்தைக் கொண்டு அவர்களை கண்ணியப்படுத்துவான். |
| அல்அபுவ்வு | அடியார்கள் பாவங்கள் செய்து தண்டனைக்குத் தகுதியானவர்களாக இருந்தும் அவர்களைத் தண்டிக்காமல் மன்னித்துவிடக் கூடியவன். |
| அல்கபூர் | அடியார்களின் பாவங்களை வெளிப்படுத்தி அவர்களை இழிவுபடுத்தாமல் அவற்றை மன்னித்து மறைத்துவிடக் கூடியவன். |
| அல்கப்பார் | அவனிடம் பாவமன்னிப்புக் கோரும் அடியார்களின் பாவங்களை அதிகமாக மன்னிப்பவன் என்ற கருத்தை உணர்த்தும் ஒரு பெயர். |
| அர்ரஊப் | அபரிமிதமான கருணை உடையவன். அக்கருணை இவ்வுலகில் எல்லாப் படைப்பினங்களுக்கும் மறுமையில் முஃமின்களுக்கு மாத்திரமும் கிடைக்கக்கூடியது. |
| அல்ஹலீம் | அடியார்கள் செய்யும் குற்றத்திற்கான தண்டனைகளை விரைவாக வழங்காமல் அவற்றைத் தாமதப்படுத்தி அவர்கள் அவனிடம் அவற்றிற்காக மன்னிப்புக் கோரும் பட்சத்தில் மன்னித்து விடக் கூடியவன். |
| அத்தவ்வாப் | அவனது அடியார்களில் தான் நாடியவர்களுக்கு பாவ மன்னிப்புக் கோருவதன் பால் அருள்புரிந்து அதை ஏற்றுக் கொள்பவன். |
| அஸ்ஸித்தீர் | அவன் தனது அடியார்களின் பாவங்கள், குறைகளை வெளிப்படுத்தி இழிவுபடுத்தாமல் அவற்றை மறைத்து விடக்கூடியவன். தனது அடியார்களும் அவர்களுடைய குறைகளையும் மற்றையவர்களுடைய குறைகளையும் மறைப்பதை விரும்புபவன். |
| அல்கனீ | அவன் பரிபூரணமானவனாக இருப்பதனாலும் அவனுடைய பண்புகள் பரிபூரணமானவையாக இருப்பதனாலும் தனது படைப்பினங்கள் எவற்றின் பாலும் தேவை காணாதவன். மாறாக படைப்பினங்களே அவனின் அருளின் பால் தேவை காணக்கூடியவர்கள். |
| அல்கரீம் | அதிகம் நலவுகளையுடையவன். அதிகம் கொடை கொடுக்கக் கூடியவன். தான் நாடியவர்களுக்கு நாடிய விதம் நாடியளவு கேட்டும் கேட்காமலும் கொடுக்கக் கூடியவன். மேலும் பாவங்களை மன்னித்து குறைகளை மறைப்பவன். |
| அல்அக்ரம் | கொடையில் உச்சத்தை அடைந்தவன். அவனுக்கு அதில் எந்த நிகருமில்லை. அனைத்து நன்மைகளும் அவனிடமிருந்தே வருகின்றன. நன்மைகள் செய்வோருக்கு அவனது வரிசையின் மூலம் கூலி வழங்குகின்றான். பாவம் செய்பவர்களுக்கு அவகாசம் வழங்கி தனது நேர்மையின் மூலம் விசாரணை செய்கின்றான். |
| அல்வஹ்ஹாப் | அதிகம் கொடைகள் உடையவன். எந்தப் பிரதியுமின்றி கொடுப்பவன். கேட்காமலும் எந்த நோக்கங்களும் இன்றிக் கொடுப்பவன். |

| | |
|---|---|
| அல்ஜவாத் | அவனது அடியார்களுக்கு தாராளமாக உபகாரமும் கொடைகளும் வழங்கக்கூடியவன். |
| அல்வதூத் | தன் நேசர்களை அன்புவைக்கக் கூடியவன். மன்னிப்பைக் கொண்டும் அருள்களைக் கொண்டும் அவர்களின் பால் அன்பு கொள்பவன். மேலும் அவர்களைப் பொருந்தி அவர்களின் நற்கிரியைகளை அங்கீகரிப்பவன். பூமியில் அவர்களுக்கு அங்கீகாரத்தை ஏற்படுத்திக் கொடுப்பவன். |
| அல்மு..தீ | தன் பொக்கிசத்திலிருந்து தனது படைப்புக்களில் நாடியவர்களுக்கு நாடியளவு வழங்கக்கூடியவன். குறிப்பாக அவற்றில் பெரும் பகுதியை தனது நேசர்களுக்கு வழங்குபவன். அவனே ஒவ்வொன்றுக்கும் அதனுடைய படை கோலத்தையும் வடிவமைப்பையும் வழங்கினான். |
| அல்வாஸிஉ | அவன் பண்புகளில் விசாலமாவன். எனவே படைப்புக்களில் யாரும் அவனைப் புகழ்ந்து முடிக்க முடியாது. கண்ணியத்திலும் அதிகாரத்திலும் விசாலமானவன். மன்னிப்பிலும் அருளிலும் விசாலமானவன். கொடையிலும் உபகாரத்திலும் விசாலமானவன். |
| அல்முஹ்ஸின் | அவன் அவனிலும் பண்புக்களிலும் அவனது செயற்களிலும் பூரணமான அழகையுடையவன். மேலும் ஒவ்வொரு பொருளுடைய படைகோலத்தையும் அழகுறச் செய்தவன். மேலும் தன் படைப்புக்களுக்கு உபகாரம் செய்பவன். |
| அர்ராஸிக் | எல்லாப் படைப்புக்களுக்கும் ரிஸ்கை வழங்குபவன். அகிலத்தார்களைப் படைக்குமுன் அவர்களின் ரிஸ்களைத் தீர்மானித்தவன். தாமதித்தாவது அவற்றைப் பூரணமாக வழங்குவதற்கு பொறுப்பெடுத்தவன். |
| அர்ரஸ்ஸாக் | அவன் தனது அடியார்களுக்கு ரிஸ்கை அதிகமாக வழங்குபவன் என்பதைக் குறிக்கும் ஒரு பெயர். அவர்கள் அவனிடம் கேட்க முன் கொடுக்கின்றான். அவர்கள் அவனுக்கு மாறு செய்யும் நிலையில் கூட ரிஸ்களிக்கின்றவன். |
| அல்லதீப் | நுணுக்கமான விடயங்களை அறிந்தவன். அவனுக்கு எந்த ஒரு மறைவான விடயமும் மறையமாட்டாது. அடியார்கள் எதிர்பார்க்காத விதத்தில் மறைமுகமான பல வழிகளின் மூலம் அவர்களுக்கு நன்மைகளையும் பயன்களையும் சேர்த்து விடுபவன். |
| அல்ஹபீர் | தனது அறிவின் மூலம் வெளிப்படையான விடயங்களை அறிவது போல மறைவான விடயங்களையும் அறியக்கூடியவன். |
| அல்பத்தாஹ் | தனது அறிவு, ஞானம் என்பவற்றின் தேட்டத்துக்கு அமைய அவனது ஆட்சி,அருள், ரிஸ்க் என்பனவற்றின் பொக்கிசங்களிலிருந்து திறந்து கொடுப்பவன். |
| அல்அலீம் | தனது அறிவால் வெளிப்படையான, மறைவான விடயங்கள், இரகசியம், பரகசியம், சென்ற கால, நிகழ்கால, எதிர்கால நிகழ்வுகள் என்பவற்றை முழுமையாக அறிபவன். அவனுக்கு எதுவும் மறைய மாட்டாது. |
| அல்பர்ரு | தனது படைப்புக்களுக்கு தாராளமாக உதவி உபகாரம் செய்பவன். அவனது அருள்களை எண்ணி முடிப்பதற்கு யாரும் சக்தி பெறமாட்டார்கள். மேலும் அவன் தனது வாக்கில் உண்மையானவன். தனது அடியார்களின் பாவங்களை மன்னித்து அவர்களுக்கு உதவி செய்து பாதுகாப்பவன். அவர்களிடமிருந்து சிறிதளவு நல்அமல்களையும் அங்கீகரித்து அவற்றை வளரச் செய்பவன். |
| அல்ஹகீம் | ஒவ்வொரு விடயத்தையும் அவற்றிற்குரிய இடத்தில் அமைப்பவன். அவனது திட்டமிடலில் சீர்குலைவோ தவறோ ஏற்படமாட்டாது. |
| அல்ஹகம் | தனது அடியார்களுக்கிடையில் நீதமாகத் தீர்ப்புச் செய்பவன். அவர்கள் எவருக்கும் அநீதி இழைக்கமாட்டான். அவனே மக்களுக்கு மத்தியில் தீர்ப்புச் செய்யுமுகமாக குர்ஆனை இறக்கிவைத்தான். |

| | |
|---|---|
| அஷ்ஷாகிர் | தனக்கு அடிபணிபவர்களைப் புகழ்ந்து அவர்கள் செய்யும் நற்கிரியைகளுக்கு அவை குறைந்த அளவாக இருப்பினும் கூலி வழங்குபவன். அவனின் அருள்களுக்கு நன்றி செய்யும் இடத்து உலகில் அவற்றை அதிகப்படுத்தியும் மறுமையில் நன்மைகள் வழங்கியும் பிரதி செய்பவன். |
| அஷ்ஷகூர் | அடியார்களின் கொஞ்ச அமல்கள் அவனிடம் வளர்ச்சி அடைந்து அவற்றிற்கு பன்மடங்கு கூலி வழங்குபவன். அல்லாஹ் அடியார்களுக்கு நன்றி செலுத்துவது என்பது அவர்களுடைய அமல்களை அங்கீகரித்து அவற்றிற்குக் கூலி வழங்குவதாகும். |
| அல்ஜமீல் | அவனிலும் அவன் பண்புகளிலும் செயல்களிலும் அழகானவன். படைப்புக்களில் காணப்படும் அழகுகள் அமைத்தும் அவன் வழங்கழியவையே. |
| அல்மஜீத் | வானங்களிலும் பூமியிலும் சிறப்பு, கௌரவம், கண்ணியம், உயர்வு என்பன உடையவன். |
| அல்வலி | படைப்புக்களின் விடயங்களை நிறைவேற்றி தனது ஆட்சி விடயங்களை திட்டமிடுபவன். மேலும் தனது நேசர்களுக்கு உதவி செய்பவன். |
| அல்ஹமீத் | தனது அழகிய பெயர்களுக்காகவும் பண்புகளுக்காகவும் செயல்களுக்காகவும் புகழப்படக்கூடியவன். செழிப்பிலும் கஷ்டத்திலும் புகழப்படுபவன். பொதுவாக எல்லாப் புகழ்களுக்கும் தகுதியானவன். ஏனெனில் அவனே எலலாப் பூரணத்துவங்களைக் கொண்டும் வர்ணிக்கப்படக் கூடியவன். |
| அல்மவ்லா | இரட்சகன், ஆட்சியாளன், தலைவன். மேலும் தனது நேசர்களுக்கு உதவி செய்பவன். |
| அந்நஸீர் | தான் நாடியவர்களை தனது உதவியின் மூலம் உறுதிப்படுத்துபவன். அவன் உதவி செய்தவர்களை யாரும் மிகைக்க முடியாது. அவன் உதவி செய்யாதவர்களுக்கு யாராலும் உதவி செய்யவும் முடியாது. |
| அஸ்ஸமீஉ | எல்லா இரகசியங்கள், சம்பாஷனை, பரகசியங்கள் அனைத்தையும் கேட்பவன். சப்தங்களில் மிக நுணுக்கமான வற்றையும் பெரிய சப்தங்களையும் கேட்பவன். மேலும் தன்னை அழைப்பவர்களுக்கு விடையளிப்பவன். |
| அல்பஸீர் | வெளியுலகம், மறைவான உலகம் அனைத்திலும் உள்ள எல்லாவற்றையும் பார்ப்பவன். அவை மறைந்திருந்தாலும் அல்லது வெளியாகியிருந்தாலும் அல்லது பெரியதாகவும் அல்லது நுண்ணியதாக இருந்தாலும் சரியே. |
| அஷ்ஷஹீத் | தனது படைப்புக்களைக் கண்காணிக்கக்கூடியவன். தனித்தவன். என்றும் நீதி உடையவன். என்றும் தனக்குத் தானே சாட்சி சொல்பவன். மு∴மின்கள் அவனை ஓர்மைப் படுத்தும் பொழுது அவர்கள் உண்மையார்கள் என்று சாட்சி சொல்பவன். அவனுடைய மலக்குகளுக்கும் நபிமார்களுக்கும் சார்பாக சாட்சி சொல்பவன். |
| அர்ரகீப் | படைப்புக்களின் செயல்களை எந்த ஒன்றும் தவறாமல் துள்ளியமாக அவற்றை அறிந்து வைத்திருப்பவன். அவனை விட்டும் கண் இமைத்தலோ உள்ளத்தின் ஊசலாட்டமோ தப்பிவிட மாட்டாது. |
| அர்ரபீக் | அவனுடைய செயற்களில் மிகவும் இரக்கமுடையவன். தனது படைப்புக்களின் விடயத்தில் ஆறுதலாகவும் படிமுறையுடனும் செயல்படக்கூடியவன். தனது அடியார்களை மென்மையாகவும் இரக்கமாகவும் நடாத்தக்கூடியவன். அவர்களுடைய சக்திக்கு அப்பாற்பட்டவற்றைக் கொண்டு அவர்களைக் கஷ்டப்படுத்தமாட்டான். அதே போன்று அவன் அடியார்களிலும் இரக்கமும் மென்மையும் உள்ளவர்களை அவன் விரும்புகின்றான். |

| | |
|---|---|
| அல்கரீப் | அவன் தனது அறிவினாலும் ஆற்றலினாலும் எல்லாப் படைப்புக்களுக்கு மிகவும் நெருக்கமானவன். தனது அருளினாலும் இரக்கத்தினாலும் மு.்.மினான அடியாாகளுக்கு நெருக்கமானவன். அத்துடன் அவன் தனது அர்ஷிற்கு மேலால் இருந்து கொண்டிருக்கின்றான். அவன் ஒரு போதும் தனத படைப்புக்களுடன் கலக்கமாட்டான். |
| அல்முஜீப் | தன்னிடம் பிரார்த்திப்பவர்களுக்கும் கேட்கக் கூடியவர்களுக்கும் தனது அறிவு, ஞானம் என்பவற்றின் தேட்டத்தின் பிரகாரம் விடையளிப்பவன். |
| அல்ஹஸீப் | தனது அடியார்களுடைய உலக, மறுமைத் தேவைகளை அவர்களுக்கு நிறைவேற்றிக் கொடுப்பவன். குறிப்பாக மு.்.மின்களுக்கு அதில் பெரும் பங்கு இருக்கின்றது. மேலும் தனது அடியார்கள் உலகில் செய்த செயல்களை விசாரணை செய்பவன். |
| அல்மு.்.மின் | தனது தூதர்களையும் அவர்களைப் பின்பற்றுபவர்களையும் அவர்கள் உண்மையானவர்கள் என்று சாட்சி பகர்வதன் மூலமும் அவர்களுக்கு அவசியமான அத்தாட்சிகளை வழங்குவதன் மூலமும் அவர்களை உண்மைப்படுத்துபவன். உலகிலும் மறுமையிலும் கிடைக்கும் எல்லாப் பாதுகாப்பையும் அவனே வழங்குபவன். அநீதி, தண்டனை, திடுக்கம் போன்றவற்றை விட்டும் மறுமையில் மு.்.மின்களுக்கு பாதுகாப்பு உத்தரவாதம் வழங்குபவன். |
| அல்மன்னான் | தனது படைப்புக்களுக்கு அதிகமாகவும் தாராளமாகவும் நன்கொடைகளை வழங்குபவன். |
| அத்தய்யிப் | எல்லாவிதமான குறைகளை விட்டும் தூய்மையானவன். முழுமையான அழகும் பூரணத்துவமும் அவனுக்கு மாத்திரமே உண்டு. தனது படைப்புகளுக்கு அதிகம் நன்மைகளை வழங்குபவன். அடியார்களின் நன்மைகள், நல் அமல்கள் என்பவற்றிலிருந்து தூய்மையானவற்றையும் ஹலாலானவற்றையும் அவனுக்கென்று மாத்திரம் செய்யப்பட்டதையும் ஒப்புக்கொள்ளக்கூடியவன். |
| அஷ்ஷாபி | உள்ளங்களுக்கும் உடல்களுக்கும் நோய்களை விட்டும் ஆரோக்கியம் வழங்குபவன். அடியார்களின் கையில் அவனால் இலகுபடுத்திக் கொடுக்கப்பட்ட மருந்துகளே காணப்படுகின்றன. அவற்றின் மூலம் ஆரோக்கியம் வழங்குவது அவன் கைவசம் மாத்திரமே இருக்கின்றது. |
| அல்ஹபீழ் | அடியார்களையும் அவர்களது செயற்களையும் அவனின் வரிசையினால் பாதுகாப்பவன். அவனது வல்லமையினால் படைப்புக்களைப் பேணிப் பாதுகாப்பவன். |
| அல்வகீல் | அகிலத்தார்களைப் படைப்பதையும் அவர்களின் விடயங்களைத் திட்டமிடுவதையும் பொறுப்பெடுத்துக் கொண்டவன். அவர்களை உருவாக்குவதற்கும் உதவி செய்வதற்கும் பொறுப்பானவன். அவன் மு.்.மின்களால் பொறுப்புச் சாட்டப்படக்கூடியவன். அவர்களுடைய முயற்சியை ஆரம்பிக்க முன் அவனிடம் அவர்கள் பொறுப்புச் சாட்டுவார்கள். உழைக்கும் நேரத்தில் அவனிடம் உதவி தேடுவார்கள். அவர்களுக்கு அனுகூலம் புரிந்ததன் பின் அவனுக்கு நன்றி செலுத்தி புகழ்வார்கள். அவர்களுக்கு பங்கு வைக்கப்பட்டதைப் பொருந்திக் கொள்வார்கள். |
| அல்கல்லாக் | அதிகம் படைக்கும் ஆற்றல் கொண்டவன் என்பதைக் குறிக்கும் ஒரு பெயர். அவன் தொடர்ந்து படைத்துக் கொண்டிருக்கின்றான். அவனுக்கு இந்தப் பண்பு தொடர்ந்தும் இருந்து கொண்டிருக்கின்றது. |
| அல்காலிக் | எந்த முன்மாதிரிகளுமின்றி நூதனமாகப் படைக்கக் கூடியவன். |
| அல்பாரிஉ | அவனுடைய ஏற்பாட்டில் படைக்கப்பட வேண்டும் எனத் தீர்மானிக்கப்பட்டவற்றை படைத்து வெளிப்படுத்துபவன். |
| அல்முஸவ்விர் | அவனுடைய ஞானம், அறிவு, அருள் என்பவற்றின் பிரகாரம் அவன் |

| | |
|---|---|
| | தெரிவு செய்த உருவமைப்புக்களில் படைப்புக்களைப் படைக்கக் கூடியவன். |
| அர்ரப்பு | தனது அருள்களினால் தனது படைப்புக்களைப் பரிபாலித்து கொஞ்சம் கொஞ்சமாக வளரச் செய்பவன். தனது நேசர்களின் உள்ளங்களை அவற்றை சீர் செய்யக்கூடியவற்றின் மூலம் பரிபாலிப்பவன். அவன் படைத்து ஆட்சி செய்யும் தலைவன். |
| அல்அளீம் | அவனுடைய தாதிலும் பண்புகளிலும் செயல்களிலும் கண்ணியம் உடையவன். அதனால் அடியார்கள் அவனைக் கண்ணியப்படுத்துவதும் அவனது ஏவல், விலக்கல்களைக் கண்ணியப்படுத்துவதும் கட்டாயமாகும். |
| அல்காஹிர் | தனது படைப்புக்களைக் கட்டுப்படுத்தி தன்னை வணங்கும் படி வேண்டி அவர்கைளஉயர்ந்திருப்பவன். எல்லாப் படைப்புக்களும் அவனுக்குப் பணிவடைகின்றன. |
| அல்கஹ்ஹார் | மேற்படிப் பண்பில் மிகைப்பானவன். |
| அல்முஹைமின் | ஒன்றை நிர்வகித்து பாதுகாத்து கண்காணிக்கக் கூடியவன். |
| அல்அஸீஸ் | சக்தியின் மூலம் பெறப்படும் கண்ணியம், இன்னொருவரின் பால் தேவை காணாமல் இருப்பதன் மூலம் கிடைக்கும் கண்ணியம், மற்றவர்களைக் கட்டுப்படுத்தி ஆளும் சக்தியின் மூலம் பெறப்படும் கண்ணியம் ஆகிய எல்லா கண்ணியங்களையும் உடையவன். அவனை யாரும் மிகைக்கவும் மாட்டார்கள். அவன் யாரின் பால் தேவை காணவும் மாட்டான். அவன் அனுமதி இன்றி எந்த ஒன்றும் நகரவும் மாட்டாது. |
| அல்ஜப்பார் | செல்லுபடியாகும் நாட்டம் உடையவன். எல்லாப் படைப்புக்களும் அவனுக்குக் கட்டுப்படக்கூடியவை. அவனின் தீர்ப்புக்கு வழிபடுபவை. மேலும் பாதிக்கப்பட்டவர்களின் குறைகளைத் தீர்ப்பவன். வறியவர்களின் தேவையை நிறைவேற்றுபவன். கஷ்டத்தை இலகுபடுத்திக் கொடுப்பவன். நோய்களால் பாதிக்கப்பட்டவர்களுக்கு நிவாரணம் அளிப்பவன். |
| அல்முதகப்பிர் | எல்லாக் கெடுதிகள் குறைகளை விட்டும் கண்ணியமானவன். தனது அடியார்களுக்கு அநீதி இழைப்பதை விட்டும் உயர்வானவன். தனது அடியார்களில் கட்டுப்பட மறுப்பவர்களை அடிக்கி ஆள்பவன். பெறுமைக்குரியவன். இப்பண்பில் யாராவது அவனுடன் முரண்பட்டால் அவனைத் தண்டித்து அடிபணிய வைப்பான். |
| அல்கபீர் | அவனுடைய தாதிலும் பண்புகளிலும் செயல்களிலும் பெரியவன். ஆவனை விடப் பெரியது ஒன்றுமில்லை. அவனது கண்ணியத்துக்கு முன் அனைத்தும் சிறிதாகும். |
| அல்ஹயிய்யு | அவனது கண்ணியத்துக்கும் வலுப்பமான அவனது சக்திக்கும் தகும் விதத்தில் வெட்கம் என்ற பண்பை உடையவன். அவனது வெட்கம் அவனது கொடை, கண்ணியம், கௌரவம் போன்றவற்றின் மூலம் வரும் வெட்கமாகும். |
| அல்ஹய்யு | நிரந்தரமாக வாழும் பூரணத் தன்மையுடையவன். அவனுக்கு ஆரம்பமோ முடிவோ இல்லை. அகிலத்தில் காணப்படும் அனைவரின் வாழ்வை அவனே வழங்குகின்றான். |
| அல்கய்யூம் | தனது படைப்பினங்களின் பால் தேவை காணாமல் தன்னாகவே நிலைத்திருப்பவன். வானங்கள், பூமி அனைத்திலும் இருப்பவர்கள் அனைவரையும் நிர்வகிப்பவன். அவர்கள் அனைவரும் அவன்பால் தேவை காணக் கூடியவர்கள். |
| அல்வாரிஸ் | படைபினங்கள் அழிந்ததன் பின் எஞ்சியிருக்கக்கூடியவன். எல்லாப் பொருட்களும் அதனுடையவர்கள் அழிந்ததன் பின் அவன் பக்கமே |

| | |
|---|---|
| | வந்து சேரும். எங்கள் கைவசம் இருக்கும் அனைத்தும் அவற்றின் உரிமையாளன் அல்லாஹ்விடம் ஒரு நாள் சென்றடையும். |
| அத்தய்யான் | எல்லாப் படைப்புக்களும் அவனுக்குக் கட்டுப்படும். மேலும் அடியார்களுக்கு அவனது செயல்களுக்காக கூலி வழங்குபவன். அவை நன்மையாக இருந்தால் பன்மடங்காக வழங்குவான். அவை பாவமாக இருப்பின் அதற்காகத் தண்டிப்பான் அல்லது மன்னித்து விடுவான். |
| அல்மலிக் | ஏவல், விலக்கல், வெற்றி என்பவற்றிற்கு உரிமையாளன். படைப்புக்களுக்கிடையில் அவன் மாத்திரமே ஏவல் விலக்கல் செய்பவன். தனது ஆட்சி நிலைத்திருப்பதில் அல்லது அதைப் பாதுகாப்பதில் வேறு யாருக்கும் எந்தப் பங்களிப்பும் கிடையாது. |
| அல்மாலிக் | அடிப்படையிலும் தகுதியுடனும் ஆட்சி உடையவன். அவனைத் தவிர எந்தப் படைப்புக்களும் இல்லாதிருந்து அவற்றைப் படைக்கும் சந்தர்ப்பத்தில் ஆட்சி அதிகாரம் அவனுக்கே இருந்தது. எல்லாப் படைப்பினங்களும் அழிந்ததும் பின்னும் ஆட்சி அதிகாரம் அவனுக்கே உரியது. |
| அல்மலீக் | ஆட்சி அதிகாரங்களை மிகவும் கொண்டிருப்பவன். |
| அஸ்ஸுப்பூஹ் | எல்லாக் குறைகளை விட்டும் தூய்மையாக்கப்பட்டவன். ஏனெனில் பூரணத்துவத்தின் எல்லாப் பண்புகளும் பூரண அழகும் அவனுக்கு மாத்திரமே இருக்கின்றது. |
| அல்குத்தூஸ் | எந்த விதத்திலும் எல்லாக் குறைகளை விட்டும் தூய்மையாக்கப்பட்டவன். பூரணத்துவத்தின் பண்புகளை அவன் மாத்திரமே தனிமையாகப் பெற்றிருக்கக் கூடியவன். அதில் அவனுக்கு உவமானங்கள் கூறப்படமாட்டாது. |
| அஸ்ஸலாம் | அவனுடைய தாதிலும் பண்புகளிம், செயல்களிலும் குறைகளை விட்டும் நீங்கி இருப்பவன். உலகிலும் மறுமையிலும் உள்ள எல்லா ஈடேற்றங்களும் அவனிடமிருந்தே கிடைக்கின்றது. |
| அல்ஹக்கு | அவனிலோ அவனுடைய பண்புளிலோ அவனின் செயற்களிலோ அவன் இறைவன் என்பதிலோ எந்த சந்தேகத்திற்கும் இடமில்லாதவன். |
| அல்முபீன் | தன்னுடைய ஓர்மை, அறிவு. ஞானம், வல்லமை என்பவற்றில் தெளிவானவன். மேலும் தனது அடியார்களுக்கு நேர்வழியை அதைப் பின்பற்றுவதற்காகவும் வழிகேட்டின் வழிகளை அவற்றைத் தவிர்ந்து கொள்வதற்காகவும் தெளிவு படுத்துபவன். |
| அல்கவிய்யு | பூரணமான அவனது நாட்டத்துடன் வரையறையற்ற சகிதியுடையவன். |
| அல்மதீன் | தனது சக்தியிலும் ஆற்றலிலும் உறுதயானவன். அவனது செயற்களில் அவனுக்கு கலைப்போ கச்டமோ ஏற்படமாட்டாது. |
| அல்காதிர் | அனைத்துக்கும் சக்தி பெற்றவன். வானத்திலோ பூமிலோ எந்த ஒன்றும் அவனை இயலாமலாக்கிவிட மாட்டாது. மேலும் அனைத்தையும் ஏற்படுத்துபவன். |
| அல்கதீர் | அவனது சக்தியில் வரையறை அற்றவன். |
| அல்முக்ததிர் | அவன் தான் தீர்மானித்தவற்றை செல்லுபடுத்தி அவனது அறிவால் தீர்மானித்த படி படைப்பதற்கு மிகவும் சக்தி பெற்றவன். |
| அல்அலிய்யு அல்அ:்லா | தனது எல்லாக் கருமங்களிலும் அடக்கி ஆளும் விடயத்திலும் தாதிலும் உயர்ந்தவன். அனைத்தும் அவனுடைய ஆட்சிக்கும் சக்திக்கும் கீழே இருக்கின்றன. அவனுக்கு மேல் எந்த ஒன்றும் இல்லை. |
| அல்முதஆலி | அவனுடைய உயர்வுக்கு அனைத்தும் அடிபணியும். அவனுக்கு மேல் மொத்தத்தில் எந்தொன்றும் இல்லை. மாறாக அவனுக்குக் |

| | |
|---|---|
| | கீழாகவே காணப்படுகின்றன. |
| அல்முகத்திம் | அவனது நாட்டத்தினதும் ஞானத்தினதும் பிரகாரம் அவனே விடயங்களை முற்படுத்தி அவற்றிற்குரிய இடங்களில் அமைக்கின்றான். மேலும் அவனுடைய அறிவின் பிரகாரம் படைப்புக்களில் சிலதைக் காண சிலதை முற்படுத்துகின்றான். |
| அல்முஅக்கிர் | தனது நாட்டத்தின் பிரகாரம் விடயங்களை இறக்குவதில் சிலதை முற்படுத்தியும் பிற்படுத்தியும் வைப்பவன். மேலும் அடியார்கள் பாவமன்னிப்புக் கோரி அவன்பால் மீளுமுகமாக தண்டனையைப் பிற்படுத்துபவன். |
| அல்முஸ.்.இர் | பொருட்களுடைய பெறுமதியையும் அவற்றின் செயல்பாடுகளையும் கூட்டவும் குறைக்கவும் செய்யக்கூடியவன். அவனர் அறிவு, அவனது ஞானத்தின் தேட்டத்தின் பிரகாரம் பொருட்களின் விலை அதிகரிக்கும் அல்லது குறையும். |
| அல்காபிழ் | அவன் உயிர்களைக் கைப்பற்றுபவன். மேலும் அடியார்களில் தான் நாடியவர்களைச் சோதிக்கு முகமாக அவனது அறிவின் பிரகாரம் அவற்றின் உணவுகளைத் தடுப்பவன். |
| அல்பாஸித் | தனது கொடை, அருள் என்பவற்றின் மூலம் அவனது அறிவின், நாட்டத்தின் பிரகாரம் அடியார்களுக்கு ரிஸ்கை விரிவுபடுத்திக் கொடுத்து அவர்களைச் சோதிக்கின்றான். மேலும் பாவிகளுடைய பாவ மன்னிப்புக் கோரலை ஏற்கு முகமாக தனது இரு கைகளையும் விரிப்பவன். |
| அல்அவ்வல் | அவனுக்கு முன் எந்த ஒன்றும் இல்லாதிருந்தவன். எல்லாப் படைப்புக்களும் அவன் படைத்ததன் பின்போ உருவாயின. அல்லாஹ்வுக்கு ஆரம்பம் இல்லை. |
| அல்ஆகிர் | அவனுக்குப் பின் எந்த ஒன்றும் இல்லை. அவன் எஞ்சியிருப்பவன். பூமியில் இருப்பவர்கள் அனைவரும் அழியக்கூடியவர்கள். பின்பு அவன் பால் மீளுபவர்கள். அவனுக்கு எந்த ஒரு முடிவும் இல்லை. |
| அள்ளாஹிர் | எல்லா வஸ்துக்களுக்கும் மேலால் இருப்பவன். அவனுக்கு மேல் ஒன்றும் இல்லை. எல்லாவற்றையும் அடக்கி ஆட்சி செய்து அவற்றை முழுமையாக அறிந்திருப்பவன். |
| அல்பாதின் | அவன் இன்றி எந்தொன்றும் உருவாக மாட்டாது. மிக நெருக்கமானவனும் எல்லாவற்றையும் அறியக்கூடியவன். படைப்பினங்களுடைய பார்வைகளை விட்டும் மறைந்திருக்கக் கூடியவன். |
| அல்வித்ரு | ஆவன் தனித்தவன். அவனுக்கு எந்த ஒரு நிகரோ இணையோ கிடையாது. |
| அஸ்ஸய்யித் | தனது அடியார்கள் அனைவருக்கும் தரைமைத்துவம் உடையவன். அவன் அவர்களுடைய அரசனும் அவர்களைப் படைத்தவனுமாயிருக்கும். அவர்கள் அவனுடைய படைப்புக்களும் அடியார்களுமாவர். |
| அஸ்ஸமது | தலைமைத்துவத்தில் பூரண நிலையை அடைந்தவன். படைப்புக்கள் அனைவரும் அவர்களுடைய எல்லாத் தேவைகளுக்கும் அவன் பால் நாடுவார்கள். அவன் உணவளிப்பவன். அவனுக்கு உணவளிக்கப்படமாட்டாது. |
| அல்வாஹிது அல் அஹத். | வுரையறை அற்ற எல்லாப் பூரணத்துவங்களிலும் தனித்திருப்பவன். அவற்றில் யாரும் அவனுக்கு இணையாக மாட்டார்கள். அவனைப் போன்று எந்த ஒன்றும் இல்லை என்பது அவன் வணங்கப்படுவதற்கு தனித்தவன் என்பதை வலியுறுத்துகின்றது. |
| அல்இலாஹ் | உண்மையில் வணங்கப்பட தகுதியானவன். வணக்கங்கள் அனைத்துக்கும் அவன் மாத்திரமே தகுதியானவன். |

| | |
|---|---|
| அல்லாஹ் | வணங்கப்படுவதற்கும் அவனது படைப்பினங்கள் அனைத்தும் அவனுக்கு அடியார்களாக இருப்பதற்கும் தகுதியானவன். அவனே வணங்கப்படத் தகுதியானவன். அடிபணிதல், தாழ்வடைதல். றுகூஉ, ஸுஜூத் உள்ளிட்ட எல்லா வணக்கங்களும் அவனுக்கு மாத்திரமே செய்யப்பட வேண்டும். |
| அர்ரஹ்மான் | அவன் விசாலமான அருளையும் அது அவனது எல்லாப் படைப்பினங்களையும் உள்ளடக்கிக் கொள்ளக்கூடியது என்பதையும் அறிவிக்கும் அவனது பெயராகும். இது அவனுக்கு மாத்திரம் குறிப்பான ஒரு பெயராகும். இதை வேறு எவருக்கும் பயன்படுத்துவது கூடாது. |
| அர்ரஹீம் | இவ்வுலகிலும் மறுமையிலும் மு.்.மின்களுக்கு அருள்புரிந்து மன்னிப்பு வழங்கக்கூடியவன். அவன் இவ்வுலகில் அவனை வணங்குவதின் பால் அவர்களுக்கு வழிகாட்டினான். மறுமையில் அவனுடைய சுவனத்தைக் கொண்டு அவர்களை கண்ணியப்படுத்துவான். |

அவற்றைப் பாடமிடுவது என்பது அதன்படி ஒழுகுவதாகும். உதாரணமாக அல்ஹகீம் என்றால் அவனது முழு விடயங்களையும் அவனுக்கு ஒப்படைத்துவிடுவான். ஏனென்றால் அனைத்து விடயங்களும் அவனது ஹிக்மத் படியே நடக்கின்றன. அல்குத்தூஸ் என்றால் அல்லாஹ் அனைத்துக் குறைகளைவிட்டும் தூய்மையானவன் என்பதை அறிந்துகொள்வான். அவற்றைக் கண்ணியப்படுத்துவதும், அவற்றைக் கொண்டு அவனை அழைப்பதும் அவற்றைக் கொண்டு அமல் செய்வதில் உள்ளதாகும்.

13 **அல்லாஹ்வின் திருநாமங்களுக்கும் அவனது பண்புகளுக்கும் இடையில் வித்தியாசம் என்ன?** இரண்டைக் கொண்டும் பாதுகாப்புத் தேடலாம். சத்தியம் செய்யலாம். ஆனால் அவற்றிற்கிடையில் சில வித்தியாசங்கள் உண்டு. அவற்றில் மிக முக்கியமானவை: 1) அவனது திருநாமங்களைக் குறித்து அவற்றின் அடிமை எனலாம். திருநாமங்களைக் கொண்டு அவனை அழைக்கலாம். அப்துல் கரீம் எனலாம். அப்துல் கரம் எனலாகாது. யாகரீம் என அழைக்கலாம். யாகரம் என அழைக்கலாகாது. 2) அல்லாஹ்வின் திருநாமத்திலிருந்து பண்புகளைப் பிரித்தெடுக்கலாம். அர்ரஹ்மான் என்ற திருநாமத்திலிருந்து றஹ்மத் என்ற பதத்தை எடுக்கலாம். ஆனால் பண்புகளுக்குரிய சொற்களிலிருந்து பெயர்களை எடுக்கமுடியாது. உதாரணமாக இஸ்திவா என்ற சொல்லிருந்து முஸ்தவின் என்ற சொல் எடுக்கப்படமாட்டாது. 3) அல்லாஹ்வின் செயல்களிலிருந்து பெயர்கள் எடுக்கப்படமாட்டாது. கோபம் என்பது அல்லாஹ்வின் செயல். அதிலிருந்து அல்காளிப் கோபிப்பவன் என்ற பெயர் எடுக்கப்படமாட்டாது.

14 **மலக்குகளைப் பற்றி நம்புவதன் கருத்து என்ன?** மலக்குகள் என்ற ஒரு பிரிவினர் உண்டென்றும் அவர்களை அல்லாஹ் அவனை வணங்குவதற்காகவும் அவனது கட்டளைகளை நிறைவேற்றுவதற்காகவும் படைத்தான் என்றும் உறுதியாக ஏற்றுக்கொள்வதாகும். அல்லாஹ் கூறுகிறான்: *“அவர்கள் கண்ணியமான அடியார்களாகும். பேச்சால் அவனை முந்தமாட்டார்கள். அவனது உத்தரவுப் படி செயல்படுவார்கள்”.* அவர்களைப் பற்றிய நம்பிக்கை பின்வரும் விடயங்களை உள்ளடக்கும். 1)அவர்கள் உண்டென நம்பிக்கை கொள்வது 2)அவர்களில் பெயர்கள் அறியப்பட்டவர்களை பெயர்களுடன் நம்புவது உதாரணமாக ஜிப்ரீல் (அலை) 3)அவர்களது பண்புகளில் அறியப்பட்டவைகளை நம்புவது. உதாரணமாக அவர்களது படைப்பு வலுப்பமாக இருப்பது. 4)அவர்களுக்கென உரிய வேலைகளை நம்புவது. உதாரணமாக மலகுல் மவ்து.

15 **குர்ஆன் என்றால் என்ன?** குர்ஆன் என்பது அதனை ஓதுவதை வணக்கமாகக் கொள்ளப்படும் அல்லாஹ்வின் பேச்சாகும். அவனிலிருந்து ஆரம்பித்து அவனளவிலே போய்ச் சேரும். அல்லாஹ் எழுத்துக்களுடன், சப்தத்துடன் பேசினான். ஜிப்ரீல் (அலை) அவர்கள் அவனிடமிருந்து

கேட்டார்கள். அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு எத்திவைத்தார்கள். வானத்திலிருந்து இறக்கப்பட்ட வேதங்கள் அனைத்தும் அல்லாஹ்வின் பேச்சே.

16 **நபியவர்களின் ஸுன்னாவை விட்டு குர்ஆனைக் கொண்டு மாத்திரம் போதுமாக்கிக்கொள்ளலாமா?** கூடாது. அல்லாஹ் ஸுன்னாவையும் எடுக்கும் படி ஏவினான். *“தூதர் உங்களுக்கு எதைக் கொடுத்தாரோ அதை எடுத்துக்கொள்ளுங்கள். அவர் எதை விட்டும் தடுத்தாரோ அதைத் தவிர்ந்துகொள்ளுங்கள்”* என்று அல்லாஹ் கூறுகிறான். குர்ஆனை விபரிக்கக்கூடியதாகவே ஸுன்னா வந்துள்ளது. மார்க்கத்தின் விபரங்களை ஸுன்னாவின் மூலமே அறிய முடியும். ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ***“அறிந்துகொள்ளுங்கள்! நிச்சயமாக எனக்கு குர்ஆனையும் அதனுடன் அதைப் போன்ற ஒன்றையும் கொடுக்கப்பட்டுள்ளது. ஒரு மனிதன் தனது கட்டிலில் வயிறு நிரம்பிய நிலையில் “நீங்கள் குர்ஆனைப் பற்றிக் கொள்ளுங்கள். அதிலே ஹலால் எனக் கண்டவற்றை ஹலால் என எடுங்கள். அதிலே ஹறாம் எனக் கண்டவற்றை ஹறாம் என எடுங்கள்”*** என்று சொல்வான். (அஹ்மத், அபூதாவூத்).

17 **றஸூல்மார்களை நம்புதல் என்பதன் அர்த்தம் என்ன?** அல்லாஹ் ஒவ்வொரு சமூகத்திலிருந்தும் “அவனை மாத்திரம் வணங்குவதற்கும், அவனையன்றி வணங்கப்படக்கூடியவற்றை நிராகரிப்பதற்கும்” அழைக்கக்கூடிய தூதுவர்களை அனுப்பினான் என்று உறுதியாக நம்புவதாகும். அவர்கள் அனைவரும் உண்மையானவர்கள். நம்பப்படக்கூடியவர்கள். கண்ணியமானவர்கள். நல்லவர்கள். நம்பிக்கைக்குரியவர்கள். நேர்வழி பெற்றவர்கள். வழிகாட்டக்கூடியவர்கள். அவர்கள் தங்கள் தூதுவத்தை எத்திவைத்தார்கள். அவர்கள் படைப்புக்களில் மிக மேலானவர்கள். அவர்கள் பிறந்ததிலிருந்து மரணிக்கும் வரை இணைவைப்பதை விட்டும் தூய்மையானவர்கள்.

18 **மறுமையின் சிபாரிசுகளின் வகைகள் என்ன?** அது பலவகைப்படும்.
1) அவற்றுள் மிக உயர்ந்தது “சபாஅத்துள் உள்மா”வாகும். மக்கள் மஹ்ஷரில் ஐம்பதாயிரம் வருடங்கள் தங்களுக்குத் தீர்ப்புச் செய்வதை எதிர்பார்த்திருந்த பின் ரஸூல் (ஸல்) அவர்கள் இறைவனிடம் சிபாரிசு செய்வார்கள். இந்த சிபாரிசு ரஸூல் (ஸல்) அவர்களுக்கு மாத்திரம் சொந்தமானதாகும். இது ரஸூல் (ஸல்) அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட “மகாமுன் மஹ்மூத்" ஆகும். 2)சுவர்க்கத்தின் வாயிலைத் திறப்பதற்காக சிபாரிசுசெய்தல். முதன்முதல் சுவர்க்கத்தின் வாயிலைத் திறக்கும்படி வேண்டுவது எங்கள் நபி ரஸூல் (ஸல்) அவர்களே. சமூகங்களில் முதலில் சுவர்க்கம் செல்வது அவர்களது சமூகமே. 3) நரகத்தில் தள்ளும் படி ஏவப்பட்டுள்ள ஒரு பிரிவினரை நரகத்தில் தள்ளாதிருக்கும் படி சிபாரிசுசெய்தல். 4) ஏகத்துவவாதிகளில் நரகத்தில் நுழைந்த பாவிகளை நரகிலிருந்து வெளியேற்ற சிபாரிசு செய்தல். 5) சுவர்க்கவாதிகளில் சிலரின் பதவிகளை உயர்த்தும் படி சிபாரிசுசெய்தல். பிந்திய மூன்றும் எங்கள் ரஸூல் (ஸல்) அவர்களுக்கு மாத்திரம் சொந்தமானதல்ல. ஆனால் அவர்களுக்கு அதில் முன்னுரிமையுண்டு. அவர்களை அடுத்து நபிமார்கள், மலக்குகள், ஸாலிஹீன்கள், சுஹதாக்கள் சிபாரிசுசெய்வர். 6) விசாரணையின்றி சுவர்க்கம் செல்வதற்காக சிபாரிசுசெய்தல். 7) சில காபிர்களுடைய தண்டனையை இலகுவாக்கும் படி சிபாரிசு செய்தல். இது ரஸூல் (ஸல்) அவர்களுக்கு மாத்திரம் உள்ளது. அவர்கள் தங்கள் சிறிய தந்தை அபூதாலிபின் தண்டனையை இலகுவாக்கும் படி சிபாரிசு செய்வார்கள். இவைகளுக்குப் பின் அல்லாஹ் ஏகத்துவத்தில் மரணித்த சிலரை யாரினதும் சிபாரிசுமின்றி நரகத்திலிருந்து விடுதலைசெய்வான். அவர்களது தொகையை அல்லாஹ்வே அறிவான். அவர்கள் அவனது அருளால் சுவர்க்கம் செல்வார்கள்.

19 **உயிருடன் இருப்பவர்களிடம் உதவி, சிபாரிசு கேட்கலாமா?** ஆம், கேட்கலாம். மற்றவர்களுக்கு உதவிசெய்வதை இஸ்லாம் வலியுறுத்தியுள்ளது.

அல்லாஹ் கூறுகிறான்: *“நீங்கள் நன்மையிலும், இறையச்சத்திலும் ஒருவருக்கொருவர் ஒத்துழைப்பாக இருங்கள்”.* ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *“அடியான் தனது சகோதரனுக்கு உதவும் போது அல்லாஹ் அவனுக்கு உதவுகிறான்”* (முஸ்லிம்). சிபாரிசு செய்வது மிகவும் சிறப்புக்குரியது. அல்லாஹ் கூறுகிறான்: *“யார் அழகிய சிபாரிசு செய்கிறாரோ அவருக்கும் அதிலிருந்து ஒரு பங்கு கிடைக்கும். ரஸூல்* (ஸல்) அவர்கள் கூறினார்கள். *“நீங்கள் சிபாரிசு செய்யுங்கள். உங்களுக்குக் கூலி கிடைக்கும்.* (புகாரி). உயிருடன் இருப்பவரிடம் சிபாரிசு கேட்பது அனுமதிக்கப்பட பல நிபந்தனைகள் உள்ளன. 1) உயிருடன் இருப்பவரிடமே சிபாரிசு கேட்கப்படவேண்டும். மரணித்தவரிடம் அதை வேண்டுவது துஆவாகும். மரணித்தவர் தன்னை அழைப்பவர்களின் அழைப்பைக் கேட்கமாட்டார். அல்லாஹ் கூறுகின்றான்: *நீங்கள் அவர்களை அழைப்பீர்களாயின் உங்கள் அழைப்பை அவர்கள் கேட்க மாட்டார்கள்.* அவர்கள் கேட்டாலும் கூட அவர்கள் விடையளிக்க மாட்டார்கள். மரணித்தவர் உயிரோடிருப்பவரின் துஆவின் பால் தேவை காணும் போது அவரிடத் எங்ஙகனம் வேண்டலாம். தனக்கே எதுவும் செய்யச் சக்தி அற்றவர். அவர் எப்படி மற்றவர்களுக்கு உதவலாம். அவர் மரணித்ததும் துஆ போன்ற சில அமல்களின் நற்கூலியைத் தவிர அவரது அமல்கள் அனைத்தும் நின்றுவிடுகின்றன. நபி (ஸல்) அவர்குள் கூறினார்கள்: *ஒருவன் மரணித்தால் மூன்று விடங்களைத் தவிர அவனுடைய அமல்கள் நின்று விடுகின்றன. 1.நிரந்தரமான ஸதகா 2.பயனள்ள அறிவு 3.தனக்காகப் பிரார்த்தனை புரியும் நல்ல பிள்ளை.* 2) தான் வேண்டுவதை விளங்கவேண்டும். 3) கேட்கப்படுபவர் முன்னால் இருத்தல் வேண்டும். 4)அவர் அதற்கு சக்திபெற்றவராக இருத்தல் வேண்டும். 5)இவ்வுலகவிடயமாக இருத்தல் வேண்டும். 6)மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட, தீங்கற்றவிடயமாக இருத்தல் வேண்டும்.

20 வஸீலா எத்தனை வகை? அது இரண்டு வகை. முதலாவது வகை: அனுமதிக்கப்பட்டது. **அது மூன்று வகைப்படும்.** 1) அல்லாஹ்வின் திருநாமங்கள், பண்புகளைக்கொண்டு அவனிடத்தில் வஸீலாத் தேடல் 2)நல்லமல்களைக் கொண்டு அவனிடம் வஸீலாத் தேடல். (குகையில் அடைபட்ட மூன்று பேரின் சம்பவத்தைப் போன்று) 3) உயிருடன், முன்னால் இருக்கும், அவனது நல்லடியார்களில் ஒருவரின் துஆவைக் கொண்டு வஸீலாத் தேடல்.

இரண்டாவது வகை: தடுக்கப்பட்டது. **அது இரண்டு வகைப்படும்.** 1) நபி, அல்லது வலிமார்களில் ஒருவரின் பொருட்டால் கேட்பது. (யா அல்லாஹ் உனது நபியின் பொருட்டால் உன்னிடம் கேட்கிறேன். ஹுஸைன் (ரலி) அவர்களின் பொருட்டால் கேட்கிறேன் என்று சொல்வது போல்.) றஸூலுள்ளாஹ்வினதும், வலிமார்களினதும் அந்தஸ்து அல்லாஹ்விடம் உயர்வானது. ஸஹாபாக்கள் நல்லவிடயங்களில் மிகவும் ஆர்வமுள்ளவர்களாக இருந்தார்கள். ஆனால் அவர்கள் யாரும் தங்களுக்கிடையே நபியவர்களின் கப்ரு இருந்தும் கூட பஞ்சம் ஏற்பட்ட போது நபியவர்களின் பொருட்டால் வஸீலாத் தேடவில்லை. மாறாக அவர்களது சிறிய தந்தை அப்பாஸ் (ரலி) அவர்களது துஆவைக் கொண்டே உதவி தேடினார்கள். 2) நபியின் பேரிலோ வலியின் பேரிலோ சத்தியம் செய்து கேட்பது. படைப்புக்கள் எதன் மீதும் சத்தியம்செய்து படைப்புக்களிடம் கேட்பது கூடாது. படைப்புக்கள் மீது சத்தியம் செய்து அல்லாஹ்விடம் கேட்பது அதை விடக் கடுமையானது.

21 மறுமையைப் பற்றி நம்புவதன் அர்த்தம் யாது? மறுமை நாள் உண்டாகும் என்பதை உறுதியாக நம்புவதாகும். மரணம், அதற்குப் பின் ஏற்படும் கப்றின் பித்னா, அதன் வேதனை, அதன் இன்பம், ஸூர் ஊதுதல், அல்லாஹ்வின் விசாரணைக்காக மனிதர்கள் நிற்றல், ஏடுகளை விரித்தல், தராசு, ஸிராத்,

ஹவ்ழ், சிபாரிசு, அதற்குப் பின்பு சுவர்க்கம் அல்லது நரகம் செல்லல் என்பன பற்றிய நம்பிக்கையும் இதில் அடங்கும்.

22 **மறுமையின் பெரிய அடையாளங்கள் எவை?** நுபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: ***பத்து அத்தாட்சிகளை நீங்கள் காணும் வரை மறுமை ஏற்படாது.புகை, தஜ்ஜால், மிருகம் வெளியதல், சூரியன் மேற்கில் உதித்தல், ஈஸா (அலை) இறங்குதல், ய.்ஜூஜ் ம.்ஜூஜ் வெளியாகுதல், மேற்கு, கிழக்கு, அரேபிய தீபகற்பம் என்பனவற்றில் ஏற்படும் மூன்று நில நடுக்கங்கள் என்பனவற்றைக் கூறினார்கள். அதில் கடைசி அடையாளம் மக்களை அவர்களை எழுப்பப்படும் இடத்துக்கு விரட்டிச் செல்லும் ஒரு நெருப்பாகும் என்றும் கூறினார்கள்.*** (முஸ்லிம்)

23 **மக்களுக்கு ஏற்படும் மிகப் பெரிய சோதனை எது?** நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: ***ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்பட்டது முதல் மறுமை உண்டாகும் வரை தஜ்ஜாலை விட மிகப் பெரிய விடனம் ஒன்றுமில்லை.*** (முஸ்லிம்). அவன் மனித இனத்தைச் சேர்ந்த ஒருவன். இறுதிக் காலப் பகுதியில் வெளியாகுவான். அவனுடைய இரண்டு கண்களுகிடையில் காபிராகிவிட்டவன் என்ற கருத்தைக் குறிக்கும் (ك ف ر) என்ற எழுத்துக்கள் எழுதப்பட்டிருக்கும். அவன் ஒரு கண் குருடானவன்.அவனுடைய கண் மிதந்து கொண்டிருக்கும் ஒரு முந்திரிப் பழத்தைப் போன்றிருக்கும்.அவன் பெளியான ஆரம்ப காலப் பகுதியில் தான் ஒரு நல்லடியான ன் வாதிட்டு பின்பு தான் நபியென வாதிட்டு பின்பு தானே இறைவன் என வாதிடுவான். முக்களிடத்தில் அவன் வந்து தன்பால் அவர்களை அழைப்பான். அவர்கள் அவனைப் பொய்ப்பித்து அவனது பேச்சை மறுத்து விடுவார்கள். ஆவன் அவர்களை விட்டும் திரும்பிச் செல்வான். ஆப்போது அவர்களுடைய செல்வங்கள் அனைத்தும் அவனைத் தொடர்ந்து செல்லும். அவர்கள் வசம் ஒன்றுமே எஞ்சியிருக்காது. இப்போது மீண்டும் அவர்களிடம் வந்து அவர்களை அழைப்பான். அவர்கள் அவனுடைய அழைப்பை ஏற்று அவனை உண்மைப் படுத்துவார்கள். அப்போது அவன் வானத்துகுக்குக் கட்டளையிட அது மழையைப் பொழிவிக்கும். மேலும் பூமிக்கு தாவரங்களை முளைக்கச் செய்யும் படி கட்டளையிட அவ்வாறு அது செய்யும். மக்களிடம் வரும்போது அவனிடம் தண்ணீரும் நெருப்பும் காணப்படும். அவனின் நெருப்பு குளிர்ந்த தண்ணீராகும். அவனின் நீர் நெருப்பாகும். ஒரு விசுவாசி தனது ஒவ்வொரு தொழுகையின் இறுதியிலும் அவனுடைய பித்னாவை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுவர் அவசியமாகும். மேலும் அவனை அடைந்து கொண்டால் ஸூரதுல் கஹ்பின் ஆரம்ப வசனங்களை அவனின் மீது ஓதிவிடுவதும் அவனைச் சந்திப்பதைத் தவிர்ப்பதும் அவசியமாகும். நுபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ***யாராவது தஜ்ஜாலின் வருகையைப் பற்றிக் கேள்விப் பட்டால் அவனை விட்டும் தூரமாகிவிடவும். ஏனெனில் ஒரு மனிதன் தான் ஒரு மு.்மின் எனக் கருதியவனாக அவனிடம் வருவான் . அவன் கிழப்பி விடும் சந்தேகங்களின் காரணமாக அவனைப் பின்பற்றி*** விடுவான். (அபூ தாவூத்) அவன் பூமியில் 40 நாட்கள் தங்கியிருப்பான். அதில் ஒரு நாள் ஒரு வருடத்தைப் போலவும் இன்னொரு நாள் ஒரு மாதத்தைப் போன்றும் மற்றொரு நாள் ஒரு கிழமையைப் போன்றும் ஏனைய நாட்கள் சாதாரண நாட்களைப் போன்றிருக்கும். அவன் புவியில் மக்கா, மதீனா தவிர்ந்த மற்றைய எல்லா பிரதேசத்தினுள்ளும் நுழைவான். பின்பு ஈஸா (அலை) அவர்கள் இறங்கி அவனைக் கொலை செய்து விடுவார்கள்.

24 **சுவர்க்கமும், நரகமும் தற்போது இருக்கின்றனவா?** ஆம். அவற்றை அல்லாஹ் மனிதர்களைப் படைக்க முன்பே படைத்துவிட்டான். அவை ஒரு போதும் அழியமாட்டாது. அல்லாஹ் தனது அருளினால் சுவர்க்கத்துக்கென

சிலரைப் படைத்துள்ளான். தனது நீதியால் நரகத்துக்கென சிலரைப் படைத்துள்ளான். ஒவ்வொருவரும் எதற்காகப் படைக்கப்பட்டுள்ளார்களோ அதன்பால் இலகுவாக்கப்படுவார்கள்.

25 ஏற்பாட்டை (விதியை) ஈமான் கொள்வதன் அர்த்தம் யாது? எல்லா நன்மையும், தீமையும் அல்லாஹ்வின் ஏற்பாட்டைக் கொண்டும், தீர்மானத்தைக் கொண்டுமே நடக்கின்றன. அவன் நாடியதைச் செய்யக்கூடியவன். ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *"அல்லாஹ் வானங்களிலும் பூமியிலுமுள்ளவர்களைத் தண்டித்தால் அவர்களுக்கு அநியாயம் செய்யாதவனாகவே தண்டிக்கிறான். அவர்களுக்கு அவன் அருள்புரிந்தால் அவனது அருள் அவர்களுடைய அமல்களைவிடச் சிறந்தது. நீர் அல்லாஹ்வின் பாதையில் உஹுது மலையளவு செலவு செய்தாலும் நீர் ஏற்பாட்டை ஈமான்கொண்டு, உனக்குக் கிடைக்கக்கூடியது உன்னை விட்டும் தவறமாட்டாது என்றும், உனக்குத் தவறியது உனக்குக் கிடைக்கூடியது அல்ல என்றும் நம்பிக்கைகொள்ளும் வரைக்கும் அங்கீகரிக்கமாட்டான். இதல்லாத நம்பிக்கையில் மரணித்தால் நீ நரகம் நுழைவாய்.* (அஹ்மத்). விதி பற்றிய நம்பிக்கை நான்கு விடயங்களை உள்ளடக்கும். 1) அல்லாஹ் ஒவ்வொரு விடயத்தையும் மொத்தமாகவும் விபரமாகவும் அறிந்துள்ளான் என்று நம்புவது. 2) அல்லாஹ் அவற்றை லவ்ஹுல் மஹ்பூலில் எழுதியுள்ளான் என்று நம்புவது. ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *"அல்லாஹ் வானங்களையும் பூமியையும் படைப்பதற்கு ஐம்பதாயிரம் வருடங்களுக்கு முன் படைப்புகளின் ஏற்பாடுகளை எழுதிவிட்டான்."* (முஸ்லிம்). 3) யாராலும் தடுத்து நிறுத்த முடியாத, நிறைவேறும் படியான அல்லாஹ்வின் நாட்டத்தையும், எதுவும் இயலாமல் ஆக்கிவிடாத அவனது சக்தியையும் நம்புவது. அவன் நாடியது நடைபெறும். அவன் நாடாது எதுவும் நடைபெறாது. 4)அல்லாஹ்வே பொருட்கள் அனைத்தையும் படைப்பவனாகும். அவனைத் தவிர்ந்த அனைத்தும் அவனது படைப்புக்களே என நம்பவுது.

26 படைப்பினங்களுக்கு சக்தியும், நாட்டமும் உண்டா? ஆம் மனிதனுக்கு நாட்டமும் சுயவிருப்பமும் உண்டு. ஆனாலும் அவை அல்லாஹ்வின் நாட்டத்தை விட்டும் வேறாகாது. அல்லாஹ் கூறுகிறான் *"அல்லாஹ் நாடியதையன்றி நீங்கள் நாடமாட்டீர்கள்."* ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள் *"நீங்கள் நற்கிரியை செய்யுங்கள். ஒவ்வொன்றும் அவை எதற்காகப் படைக்கப்பட்டுள்ளதோ அதனைச் செய்வதற்கு உதவிசெய்யப்படும்."* (புகாரி, முஸ்லிம்). அல்லாஹ், நல்லதையும் தீயதையும் பிரித்தறிவதற்காக எங்களுக்கு பகுத்தறிவையும், கேள்வியையும், பார்வையையும் தந்துள்ளான். களவெடுத்துவிட்டு **"அல்லாஹ் அதனை என்மீது கற்பித்துவிட்டான்"** என்று சொல்பவன் ஒரு புத்திசாலியாக இருக்கமுடியுமா? இந்த வார்த்தையை மனிதர்களிடம் சொன்னால் அவர்கள் அவனை மன்னிக்கமாட்டார்கள். *"உனக்குத் தண்டனையும் அல்லாஹ்வால் கற்பிக்கப்பட்டுள்ளது"* எனக் கூறி அவன் தண்டிக்கப்படுவான். கற்பனையைக் காரணம் காட்டக் கூடாது. அல்லாஹ் கூறுகிறான். *"அல்லாஹ் நாடியிருந்தால் நாங்களும், எங்கள் மூதாதையினரும் இணைவைத்திருக்க மாட்டோம். நாங்கள் எந்தப் பொருளையும் ஹராமாக்கியிருக்க மாட்டோம்."* என்று முஷ்ரிக்கள் கூறுவார்கள். இப்படித்தான் இவர்களுக்கு முன்பிருந்தவர்களும் பொய்ப்பித்துக்கொண்டிருந்தனர்."

27 இஹ்ஸான் என்றால் என்ன? ரஸூல் (ஸல்) அவர்கள் இஹ்ஸானைப் பற்றிக் கேட்டவருக்குக் கூறினார்கள் *"நீர் அல்லாஹ்வைக் காண்பது போன்று அவனை வணங்குவதாகும். நீர் அவனைக் காணாவிட்டாலும் அவன் உன்னைக் காண்கிறான்.* (முஸ்லிம்). மார்க்கத்தின் மூன்று படித்தரங்களில் அதுவே உயர்ந்ததாகும்.

28 **தவ்ஹீதின் பங்குகள் எத்தனை?** அதன் பங்குகள் மூன்று. 1) தவ்ஹீதுர் ருபூபிய்யா. அல்லாஹ்வின் (படைத்தல், உயிர்ப்பித்தல் போன்ற) செயல்களில் அவனை ஓர்மைப்படுத்தல். இறை நிராகரிப்பாளர்கள் நபி (ஸல்) அவர்களின் வருகைக்கு முன்பே இதனை ஏற்றுக்கொண்டிருந்தனர். 2) தவ்ஹீதுல் உலூஹிய்யா. (தொழுகை, நேர்ச்சை, ஸதகா போன்ற) வணக்க விடயங்களில் அல்லாஹ்வை ஓர்மைப்படுத்தல். வணக்க வகைகளில் அல்லாஹ்வை ஓர்மைப்படுத்தவே றஸூல்மார்கள் அனுப்பப்பட்டார்கள், வேதங்கள் இறக்கப்பட்டன. 3) தவ்ஹீதுல் அஸ்மாஇ வஸ்ஸிபாத். அல்லாஹ்வும் அவனது தூதரும் அல்லாஹ்வுக்குத் தரிபடுத்திய அழகிய திருநாமங்களையும் உயர்வான பண்புகளையும் கருத்துத் திரிக்காமல், வெறுமையாக்காமல், இவ்வாறு என்று விதம் சொல்லாமல் உவமைப்படுத்தாமல் அப்படியே ஏற்றுக்கொள்வதாகும்.

29 **வலி என்றால் யார்?** வலி என்றால் அல்லாஹ்வைப் பயந்த நல்லடியார்களான மு.ஃமின்கள். அல்லாஹ் கூறுகின்றான் *“நிச்சயமாக அல்லாஹ்வின் நேசர்களுக்கு அச்சமுமில்லை. அவர்கள் துக்கப்படவுமாட்டார்கள். அவர்கள் ஈமான்கொண்டவர்களாகவும், இறையச்சம் உள்ளவர்களாகவும் இருப்பர்”* ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள் *“எனது வலி அல்லாஹ்வும் மு.ஃமின்களில் ஸாலிஹானவர்களுமாவர்.”* (புகாரி, முஸ்லிம்).

30 **நபி (ஸல்) அவர்களின் தோழர்களின் விடயத்தில் எமது கடமை என்ன?** அவர்களை அன்புகொள்வதும், அவர்களைப் பொருந்திக் கொள்ளும் படி பிரார்த்திப்பதும், எமது உள்ளத்தையும், நாவையும் அவர்களை குறை நினைப்பது, பேசுவதை விட்டும் தூய்மைப்படுத்துவதும், அவர்களிடையே ஏற்பட்ட பிரச்சினைகள் பற்றிப் பேசுவதைத் தவிர்த்தலும் அவசியம். அவர்கள் பாவங்களை விட்டும் பாதுகாக்கப்பட்டவர்கள் அல்லர். ஆனாலும் அவர்கள் மார்க்க விடயமொன்றில் ஆராய்ந்து ஒரு முடிவு எடுத்தால் அவர்களது முடிவு சரியாக இருந்தால் அவர்களுக்கு இரண்டு கூலிகள் உண்டு. பிழையாக இருந்தால் அவர்கள் செய்த ஆய்வுக்காக அவர்களுக்கு ஒரு கூலி உண்டு. அவர்களால் ஏதும் பிழைகள் நடந்திருந்தால் அவற்றை அழித்துவிடக்கூடிய சிறப்புக்கள் அவர்களுக்குண்டு. அவர்கள் படித்தரங்கள் வித்தியாசமானவர்கள். அவர்களில் மிகச் சிறந்தவர்கள் அபூபக்ர் உமர், உஸமான், அலி, தல்ஹா, ஸுபைர், அப்துர் ரஹ்மான் பின் அவ்ப், ஸஃத் பின் அபீ வக்காஸ், ஸஈத் பின் ஸைத், அபூ உபைதா பின் ஜர்ராஹ் (ரழி) பின் ஏனைய முஹாஜிர்கள். பின் முஹாஜிர்களிலும் அன்ஸார்களிலும் பத்ரில் கலந்து கொண்டவர்கள் பின் ஏனைய அன்ஸார்கள். பின் ஏனைய தோழர்கள். ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *“எனது தோழர்களை ஏசாதீர்கள். எனது ஆத்மா யார் வசம் இருக்கின்றதோ அவன் மீது ஆணையாக உங்களில் ஒருவர் உஹது மலை அளவு தங்கத்தை செலவு செய்தாலும் அவர்கள் செலவு செய்த ஒரு “முத்து” (இரு கைகளையும் சேர்த்து அள்ளும் அளவு) அல்லது அரை முத்து அளவு நன்மையைப் பெற்றுக்கொள்ள மாட்டார்கள்.”* (புகாரி, முஸ்லிம்). மேலும் ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *“யார் எனது தோழர்களுக் ஏசுகின்றார்களோ அவர்களுக்கு அல்லாஹ்வுடையவும் மலக்குகளுடையவும் எல்லா மனிதர்களுடையவும் சாபம் இருக்கின்றது.”* (தபரானி).

31 **ரஸூல் (ஸல்) அவர்களைப் புகழ்வதில் அவர்களுக்குரிய தரத்தைவிட அளவு கடந்து செல்லலாமா?** முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் படைப்புக்களில் மிக மேலானவர்கள் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. ஆனால் கிறிஸ்தவர்கள் ஈஸா (அலை) அவர்களை அளவுகடந்து புகழ்ந்தது போல் நாம் அவர்களை அளவுகடந்து புகழக்கூடாது. ரஸூல் (ஸல்) அவர்களே அவ்வாறு செய்யவேண்டாம் எனத் தடுத்துள்ளார்கள்: *“கிறிஸ்தவர்கள்*

*மர்யமுடைய மகனை அளவு கடந்து புகழ்ந்தது போன்று நீங்கள் என்னை அளவுகடந்து புகழவேண்டாம். நான் அவனது அடியானே.* நீங்கள் எனக்கு அல்லாஹ்வின் அடியானென்றும் அவனது தூதர் என்றும் சொல்லுங்கள்.

32 வேதத்தையுடையவர்கள் *மு:.மின்களா?* யூதர்களும், கிறிஸ்தவர்களும் ஏனைய மதத்தைச் சேர்ந்தவர்களும் காபிர்களே. அவர்கள் அவர்களின் சமயத்தின் சரியான அடிப்படைகளைப் பின்பற்றிய போதிலும் சரியே, முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் தூதராக அனுப்பப்பட்ட பின் அவர்கள் தங்கள் பழைய மார்க்கத்தை விட்டு இஸ்லாத்தைப் பின்பற்றவில்லையானால் *"அவர்களிடமிருந்து அது அங்கீகரிக்கப்பட மாட்டாது. அவர்கள் மறுமையில் நஷ்டமடைந்தவர்களில் ஆகிவிடுவர்"* ஒரு முஸ்லிம் அவர்கள் காபிர்கள் என நம்பிக்கை கொள்ளாவிட்டால், அல்லது அவர்களது மார்க்கம் பிழையானது என்பதில் சந்தேகம் கொண்டால் அவர் காபிராகிவிடுவார். ஏனென்றால் அவர்கள் காபிர்கள் என்று அல்லாஹ்வும், அவனது தூதரும் அளித்த தீர்ப்புக்கு மாறுசெய்துவிட்டார். அல்லாஹ் கூறுகிறான்: *"கூட்டத்தார்களில் எவர் இதை நிராகரிக்கிறாரோ அவருக்கு வாக்களிக்கப்பட்ட இடம் நரக நெருப்பாகும்."* ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள். *"முஹம்மதின் ஆத்மா யார் கைவசம் இருக்கின்றதோ அவன் மீது ஆணையாக இந்த சமுதாயத்தில் யூதரோ, கிறிஸ்தவரோ யாரும் என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு என்னை நம்பவில்லையோ அவர் நரகம் செல்வார்".* (முஸ்லிம்).

33 காபிர்களுக்கு அநியாயம் செய்யலாமா? அநியாயம் செய்வது தடுக்கப்பட்டதாகும். ரஸூல் (ஸல்) அவர்கள் அல்லாஹ் கூறியதாகக் கூறினார்கள். "அநியாயம் செய்வதை என் மீது தடுத்துள்ளேன். நீங்களும் உங்களுக்கிடையில் அநியாயம் செய்துகொள்வதைத் தடுத்துள்ளேன். நீங்கள் உங்களுக்கிடையே அநியாயம் செய்துகொள்ளாதீர்கள். (முஸ்லிம்). அநியாயம் செய்யப்பட்டவன் அநீதியிழைத்தவனிடமிருந்து மறுமையில் தெண்ட குற்றத்தைப் பெற்றுக்கொள்வான். நபி (ஸல்) பின்வருமாறு கூறினார்கள்: "வங்கரோத்துக்காரர் யார் என உங்களுக்குத் தெரியுமா?" என நபியவர்கள் தோழர்களிடம் வினவியதற்கு யாரிடம் திர்ஹம் (பணமோ), சொத்துகளோ இல்லையோ அவரே எங்களில் வங்கரோத்துக்காரரர்" என தோழர்கள் பதிலளித்தனர், அதற்கு நபியவர்கள் "வங்கரோத்துக்காரர் யாரெனில், மறுமையில் எனது சமூகத்தைச் சேர்ந்த சிலர் தொழுகை, நோன்பு, ஸகாத் என பல வணக்கங்களுடன் வந்தும் சிலர் "இவன் எனக்கு ஏசினான், என் மீது அவதூறு கூறினான், என் சொத்தை அபகரித்தான், அவனைக் கொன்றான், என்னை அடித்தான்" என அவன் இழைத்த அநியாயங்களை முறையிட, அநீதியிழைக்கப்பட்டோர் ஒவ்வொருவருக்கும் இவனது நற்கிரியைகளிலிருந்து தெண்டகுற்றமாக வழங்கப்பட்டு இவனது நல்லமல்கள் யாவுமே முடிவடைந்தால் அநீதியிழைக்கப்பட்டோரின் தவறுகளிலிருந்து இவனுக்கு வழங்கப்பட்டு இவனை நரகில் வீசி எறியப்படுவான்" எனப் பகர்ந்தார்கள். ((முஸ்லிம்).

காபிர்களுடன் நாம் நடந்துகொள்ளும் விடயத்தில் அவர்கள் இரு பிரிவினர்கள். ஒரு பிரிவினர்: உடன்படிக்கைக்குட்பட்டவர்கள். அவர்கள் மூன்று வகையினர். 1) திம்மிகள். அவர்கள் "ஜிஸ்யா" எனும் வரி செலுத்துபவர்கள். அவர்கள் இஸ்லாமிய நாட்டில் வாழ்வதற்காக வேண்டி அல்லாஹ்வினதும், அவனது தூதரினதும் தீர்ப்புக்கள் அவர்கள் மீது அமுல் நடாத்தப்பட முஸ்லிம்களுடன் உடன்படிக்கை செய்தவர்கள். 2) சமாதான ஒப்பந்தமுடையவர்கள். முஸ்லிம்களின் நாட்டில் வாழ்வதற்காக முஸ்லிம்களுடன் சமாதான ஒப்பந்தம் செய்தவர்கள். ஆனால் திம்மிகளைப் போன்று அவர்கள் மீது இஸ்லாமிய சட்டங்கள் அமுல் நடாத்தப்படமாட்டாது. ஆனால் அவர்கள் முஸ்லிம்களுடன்

யுத்தம் செய்தல் கூடாது. 3) பாதுகாப்பளிக்கப்பட்டவர்கள். அவர்கள் இஸ்லாமிய நாட்டுக்கு குடியிருக்கும் நோக்கமின்றி வரக்கூடியவர்கள். தூதுவர்கள், வியாபாரிகள், தரிசிக்க வருபவர்கள் போன்றோர். இவர்கள் கொலை செய்யப்படமாட்டார்கள். அவர்களிடமிருந்து வரி அறவிடப்படமாட்டாது. அவர்களுக்கு இஸ்லாத்தைப் பற்றிச் சொல்லப்படும். இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ளாவிட்டால் அவர்கள் பாதுகாப்பான இடத்துக்குச் செல்ல அனுமதிக்கப்படுவர்.

இரண்டாம் பிரிவினர்: ஹர்பிக் காபிர்கள். அவர்கள் உடன்படிக்கையில் சேராத, முஸ்லிம்களிடம் பாதுகாப்புப் பெறாதவர்கள். அவர்கள் பல பிரிவினர். முஸ்லிம்களுடன் யுத்தம் செய்பவர்கள், முஸ்லிம்களுக்கெதிராக சதிசெய்பவர்கள், முஸ்லிம்களின் எதிரிகளுடன் ஒத்துழைப்பவர்கள் போன்றோர். இவர்களுடன் யுத்தம் செய்யப்படும். இவர்கள் கொலை செய்யப்படுவார்கள்.

34 பித்அத் என்றால் என்ன? ஷரீஅத்தில் எந்த அடிப்படையும் இல்லாத புதிதாக உண்டாக்கப்பட்ட வணக்க வழிபாடுகளாகும். சரீஆவில் அதற்கு அடிப்படை ஏதும் இருப்பின் மொழி ரீதியில் அது பித்அத் எனப்பட்டாலும் மார்க்க ரீதியில் அது பித்அத் எனப்படமாட்டாது.

35 மார்க்கத்தில் நல்ல பித்அத், கெட்ட பித்அத் என இருவகை உண்டா? மார்க்க ரீதியில் பித்அத் அனைத்தையும் கண்டித்து குர்ஆன் வசனங்களும் ஹதீஸ்களும் வந்துள்ளன. ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள். *"யாராவது எமது இந்த மார்க்கத்தில் அதில் இல்லாததை உண்டாக்கினால் அது நிராகரிக்கப்படும்"* (புகாரி, முஸ்லிம்). மேலும் கூறினார்கள்: *"புதிதாக உண்டாக்கப்பட்ட அனைத்தும் பித்அத்தே. பித்அத் அனைத்தும் வழிகேடு"* (அஹ்மத்). இமாம் மாலிக் (ரஹ்) மார்க்க சம்பந்தமான பித்அத் பற்றி பின்வருமாறு கூறினார்கள்: **"யாராவது நல்லதெனக் கருதி இஸ்லாத்தில் ஒரு நூதனத்தை உண்டாக்கினால் அவர், முஹம்மத் (ஸல்) அவர்கள் தனது தூதுத்துவத்தில் சதிசெய்துவிட்டார் எனக் கருதிவிட்டார். ஏனென்றால்** *"இன்றைய தினத்தில் உங்களுக்கு உங்கள் மார்க்கத்தை நான் பூர்த்திசெய்துவிட்டேன். எனது அருளை உங்களுக்கு நிரப்பமாக்கிவிட்டேன்."* **என்று அல்லாஹ் கூறுகின்றான்.**

மொழி ரீதியான கருத்தில் பித்அத்தைப் புகழும் சில ஹதீஸ்கள் வந்துள்ளன, அவை மார்க்கத்தில் இருந்து விடுபட்ட சிலவற்றைச் செய்யும் படி தூண்டும் ஹதீஸ்களாகும். *"யாராவது இஸ்லாத்தில் ஒரு அழகிய விடயத்தை ஏற்படுத்தினால் அவருக்கு அதன் நற்கூலியும் அதற்குப் பின்னால் அதனைச் செய்தவர்களின் நற்கூலியும் கிடைக்கும். அவர்களது கூலியில் குறைவு ஏற்படாது"* (முஸ்லிம்). உமர் (ரலி) அவர்கள் தராவீஹுடைய விடயத்தில் "இது நல்ல பித்அத்" எனக் கூறியது இந்தக் கருத்திலேயே வந்துள்ளது. ஏனென்றால் தராவீஹ் தொழுகை ரஸூல் (ஸல்) அவர்கள் மூன்று இரவுகள் தொழுதார்கள். தொழும் படி தூண்டினார்கள். அது கடமையாக்கப்படும் எனப் பயந்து பிறகு விட்டுவிட்டார்கள். பிறகு உமர் (ரலி) அவர்கள் மனிதர்களை ஒன்று சேர்த்துத் தொழவைத்தார்கள்.

36 நயவஞ்சகத்தின் வகைகள் எத்தனை? இரண்டு. 1) கொள்கை சம்பந்தப்பட்டது (பெரியது). இறை நிராகரிப்பை மனதில் மறைத்து இஸ்லாத்தை வெளிக்காட்டுவதாகும். இது மனிதனை இஸ்லாத்தை விட்டும் வெளிப்படுத்திவிடும். அதே நிலையில் யாரும் மரணித்தால் குப்ரிலேயே அவன் மரணிக்கின்றான். அல்லாஹ் கூறுகின்றான்: *"நிச்சயமாக முனாபிக்குகள் நரகின் கீழ் தட்டில் இருப்பர்"* அல்லாஹ்வையும் முஃமின்களையும் ஏமாற்ற முனைவது, முஃமின்களைப் பரிகாசிப்பது, முஸ்லிம்களுக்கு எதிராக காபிர்களுடன்

ஒத்துழைப்பது, தங்கள் நற்கிரியைகள் மூலம் உலக நோக்கங்களை நாடல் என்பன அவர்களது பண்புகளில் சிலவாகும்.

2) செயல் ரீதியான நயவஞ்சகம். இந்தப் பண்பு மனிதனை இஸ்லாத்தை விட்டும் வெளிப்படுத்தாது. ஆனால் அவன் பாவமன்னிப்புப் பெறவில்லையாயின் பெரிய நயவஞ்சகத்தை அடையும் ஆபத்தில் அவன் இருக்கின்றான். பொய் பேசல், வாக்கு மாறல், உடன்படிக்கையை முறித்தல், நம்பிக்கைக்குத் துரோகம் செய்தல் என்பன இவர்களின் அடையாளங்களாகும். இதனால் தான் ஸஹாபாக்கள் செயல் ரீதியான நயவஞ்சகத்தைப் பயந்திருந்தார்கள். இப்னு அபீ முலைகா (ரஹ்) கூறுகிறார்கள்: "ஸஹாபாக்களில் நான் முப்பது பேரைச் சந்தித்துள்ளேன். அவர்கள் ஒவ்வொருவரும் தங்களிடத்தில் நயவஞ்சகத்தனம் இருப்பதைப் பயந்திருந்தார்கள்." இப்ராஹீம் அத்தய்மீ கூறினார்கள். "எனது பேச்சை எனது நடத்தையோடு ஒப்பு நோக்கும் போதெல்லாம் நான் ஒரு பொய்யனாக இருப்பதைப் பயப்படுகின்றேன்" ஹஸனுல் பிஸ்ரி கூறினார்கள்: "மு.·.மின் தான் நயவஞ்சகத்தைப் பயப்படுவான். நயவஞ்சகனோ அதைப் பற்றிப் பயமின்றி இருப்பான்." உமர் (ரலி) அவர்கள் ஹுஸைபா (ரலி) அவர்களிடம் "அல்லாஹ் மீது சத்தியமிட்டு உங்களிடம் கேட்கிறேன்: ரஸூல் (ஸல்) அவர்கள் உங்களிடம் என்னையும் முனாபிக் எனக் குறிப்பிட்டார்களா?" என வினவினார்கள். அதற்கு அவர்கள்: "இல்லை" எனக் கூறிவிட்டு, "இனி நான் யாரையும் தூயவன் எனச் சொல்லமாட்டேன்" என்றார்கள். இவற்றில் எந்தப் பண்பும் உன்னிடம் ஏற்படாமல் பாதுகாத்துக்கொள்.

37 அல்லாஹ்விடம் மிகப் பெரிய பாவம் எது? அல்லாஹ்வுக்கு இணைவைப்பதாகும். அல்லாஹ் கூறுகிறான்: *"நிச்சயமாக இணைவைப்பது பெரிய அநியாயமாகும்."* ரஸூல் (ஸல்) அவர்களிடம் பாவங்களில் எது பெரியது எனக் கேட்கப்பட்ட போது, ***"அல்லாஹ் உன்னைப் படைத்திருக்கும் நிலையில் அவனுக்கு இணைவைப்பதாகும்" எனப் பதிலளித்தார்கள்*** (புகாரி, முஸ்லிம்).

38 இணைவைப்பதின் வகைகள் எத்தனை? இரண்டு வகைப்படும்.

1) இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றும் பெரிய இணை. அதை அல்லாஹ் மன்னிக்கமாட்டான். அல்லாஹ் கூறுகின்றான்: *"நிச்சயமாக அல்லாஹ் அவனுக்கு இணைவைப்பதை மன்னிக்கமாட்டான். ஏனையவற்றை அவன் நாடியவர்களுக்கு மன்னிப்பான்".* இணைவைத்தல் நான்கு வகைப்படும்.

1- பிரார்த்தனையில் இணைவைத்தல், 2- நோக்கத்தில் இணைவைத்தல்

3- வழிப்பாட்டில் இணைவைத்தல். அதாவது மத அறிஞர்களுக்கு வழிப்படுவதற்காக அல்லாஹ் ஹராமாக்கியதை ஹலாலாக்குதல், அல்லது ஹலாலாக்கியதை ஹராமாக்குதல். 4- அன்புவைப்பதில் இணை. அல்லாஹ்வை விரும்புவதைப் போன்று மற்றொருவரை விரும்புவது.

2)சிறிய இணை. இதைச் செய்தவன் இஸ்லாத்தை விட்டு வெளிப்படமாட்டான். குறைவான ஷிர்க்கு, முகஸ்துதி போன்றவைகளாகும். இது இரு வகைப்படும்.

1. வெளிப்படையானது. அல்லாஹ் அல்லாதவற்றைக் கொய்டு சத்தியம் செய்தல், அல்லாஹ்வும் நீயும் நாடியது, அல்லாஹ்வும் இன்னவரும் இல்லையென்றிருந்தால் என்று கூறுதல் போன்ற வார்த்தைகளுடன் தொடர்புடையவையும் சோதனைகளை நீக்குவதற்கு அல்லது தடுப்பதற்கு வளையல்களை அல்லது நூல்களை அணிதல், கண்ணூறுக்காக தாயத்துக் கட்டுதல், பறவைகள், சொற்கள், இடங்கள் போன்றவற்றைக் கொண்டு சகுனம் பார்த்தல் போன்ற செயல் சார்ந்தவையும் இதில் அடங்கும்.

2. மறைவானது. எண்ணங்கள்ஈ நோக்கங்களில் இணைவைத்தல். இது அமல்களில் ஏற்படும் முகஸ்துதி போன்றவையாகும்.

39 **பெரிய ஷிர்க்குக்கும் சிறிய ஷிர்க்குக்கும் இடையில் உள்ள வித்தியாசம் என்ன?** பெரிய ஷிர்க்கைச் செய்தவன் இஸ்லாத்தை விட்டும் வெளிப்பட்டுவிடுவான். நரகத்தில் நிரந்தரமாகத் தள்ளப்படுவான். ஆனால் சிறிய ஷிர்க்குடையவன் இஸ்லாத்தை விட்டும் வெளியேற மாட்டான். நரகில் நிரந்தரமாகத் தள்ளப்படவும்மாட்டான். பெரிய ஷிர்க்கு அனைத்து நன்மைகளையும் இல்லாதொழித்து விடும். ஆனால் சிறிய ஷிர்க்கு எக் கிரியையில் சேர்ந்ததோ அதை மாத்திரம் அழித்துவிடும். சிறிய ஷிர்க்கு அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்டால் மாத்திரம் தான் மன்னிக்கப்படுமா? அல்லது அல்லாஹ் நாடினால் அவன் விரும்பி மன்னிப்பானா? என்பது கருத்து வேறுபாடுள்ள ஒரு விடயமாகும். எப்படியிருந்தாலும் சிறிய ஷிர்க்கும் பயங்கரமானதே.

40 **சிறிய இணையை விட்டும் பாதுகாக்க வழியுண்டா? அவ்வாறு நடந்தால் அதற்குப் குற்றப் பரிகாரம் உண்டா?** முகஸ்துதியை விட்டும் பாதுகாப்புப் பெற நற்கிரியைகளைக் கொண்டு அல்லாஹ்வின் திருப்தியை நாடவேண்டும். அதற்காக அல்லாஹ்விடம் பிரார்த்திக்க வேண்டும். ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள். ***"மனிதர்களே! நீங்கள் இந்த இணையைப் பயந்துகொள்ளுங்கள். அது எறும்பு ஊர்ந்து செல்வதை விட மிக மறைவானது."*** **"எறும்பு ஊர்ந்து செல்வதை விட மறைவானது என்றால் நாம் அதை விட்டும் எப்படிப் பாதுகாத்துக்கொள்ளவது?"** என அவர்களிடம் கேட்கப்பட்ட போது, **(அல்லாஹும்ம இன்னா நஊது பிக மின் அன் நுஷ்ரிக பிக ஷைஅன் ந.'.லமுஹு வநஸ்த.'.பிருக லிமா லா ந.'.லமு)** யா அல்லாஹ்! நாங்கள் அறிந்தவர்களாக உனக்கு இணைவைப்பதை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறோம். நாங்கள் அறியாததற்காக உன்னிடம் மன்னிப்புக் கோருகிறோம்" என்று நீங்கள் கூறுங்கள் எனப் பதிலளித்தார்கள். அல்லாஹ் அல்லாதவை மீது சத்தியம் செய்தால் அதற்குப் பரிகாரம் பற்றி ரஸூல் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: ***"யாராவது லாத், உஸ்ஸா மீது சத்தியம் செய்தால் அவன் லா இலாஹ இல்லல்லாஹ் என்று சொல்லட்டும்"*** என்றார்கள் (புகாரி,முஸ்லிம்). துற்குறிபார்ப்பதன் பரிகாரம் பற்றி ரஸூல் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: ***"யாரையாவது துற்குறி ஒரு தேவையை விட்டும் தடுத்துவிட்டால் அவன் இணைவைத்துவிட்டான்."*** அப்போது "அதன் பரிகாரம் என்ன?" எனக் கேட்கப்பட அதற்கு அவர்கள் **(அல்லாஹும்ம லா கைர இல்லா கைருக, வலா தைர இல்லா தைருக, வலா இலாஹ கைருக)** ***"யா அல்லாஹ் உன்னிடமிருந்து வரும் நன்மையைத் தவிர நன்மை கிடையாது. நீ நாடமல் எந்தத் துற்குறியும் எந்தத் தீங்கையும் செய்யாது, உன்னைத் தவிர இறைவன் இல்லை என்று கூறுவீராக."*** எனக் கூறினார்கள்.

41 **குப்ரு (இறைநிராகரிப்பின்) வகைகள் எத்தனை? இரண்டு வகைப்படும். 1) (இஸ்லாத்தை விட்டும் வெளிப்படுத்தும்) பெரிய குப்ரு.** அது ஐந்து பிரிவுகளாகும். 1. பொய்ப்பித்தல். 2. உண்மைப்படுத்துவதுடன் பெருமையடித்தல். 3. சந்தேகங்கொள்ளல் 4. புறக்கணித்தல் 5. நயவஞ்சகம். **2) சிறிய குப்ரு.** இது முஸ்லிமைக் கொலைசெய்தல் போன்ற பாவங்களால் ஏற்படக்கூடியது. இதனால் இஸ்லாத்தை விட்டும் வெளிப்படமாட்டான்.

42 **நேர்ச்சை வைப்பதன் சட்டம் என்ன?** ரஸூல் (ஸல்) அவர்கள் நேர்ச்சை வைப்பதைத் வெறுத்துள்ளார்கள். அவர்கள் ***"அது எந்த நன்மையையும் கொண்டுவராது"*** எனக் கூறினார்கள்.(முஸ்லிம்). அல்லாஹ்வுக்காக நேரப்பட்டாமல் வலிமார்கள், கப்றுகள் போன்றவைகளுக்காக நேர்ச்சை வைப்பது ஹராமாகும். அதை நிறைவேற்றக் கூடாது.

43 **சாஸ்திரக்காரனிடம் போவது பற்றிய சட்டம் என்ன?** அது தடுக்கப்பட்டதாகும். அவர்கள் மறைவான அறிவை தங்களுக்கு

வாதிடுவதனால் அவர்களை உண்மைப்படுத்தாத நிலையில் அவர்களிடம் ஏதும் நன்மை எதிர்பார்த்துச் சென்றாலும் அவனது நாற்பது நாட்களின் தொழுகைகள் அங்கீகரிக்கப்படமாட்டாது. ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *"யாராவது சாஸ்திரக்காரனிடம் சென்று ஏதாவதொன்றைப் பற்றிக் கேட்டால் அவனது நாற்பது இரவுகளின் தொழுகை அங்கீகரிக்கப்படமாட்டாது."* அவனிடம் சென்று அவர்கள் சொல்வதை ஏற்றுக்கொண்டால் முஹம்மத் (ஸல்) அவர்களது மார்க்கத்தை நிராகரித்துவிட்டான். ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *"யாராவது சாஸ்திரகாரனிடம் வந்து அவன் சொல்வதை உண்மைப்படுத்தினால் முஹம்மத் (ஸல்) அவர்களது மார்க்கத்தை நிராகரித்துவிட்டான்".* (அபூதாவூத்).

44 **நட்சத்திரங்களைக் கொண்டு மழைதேடுவது எப்போது பெரிய சிர்க்காக அல்லது சிறிய சிர்க்காக ஆகிவிடும்.** யாராவது அல்லாஹ்வின் நாட்டமின்றி நட்சத்திரங்களுக்கு தனியாகவே மழை பொழியச் செய்யும் சக்தி உண்டு என நம்பினால் அது பெரிய சிர்க்காகும். அல்லாஹ்வின் நாட்டப் படி மழைபொழியும், அல்லாஹ் நட்சத்திரத்தை அதற்குக் காரணமாக ஆக்கியுள்ளான், அந்த நட்சத்திரம் வெளியாகும் போது மழை பெய்யவேண்டும் என்று அல்லாஹ் ஏற்பாடு செய்துள்ளான் என நம்புவதும் பாவமாகும். அது சிறிய சிர்க்காகும். ஏனென்றால் எவ்வித ஆதாரமுமின்றி நட்சத்திரத்தைக் காரணமாக ஏற்படுத்திக்கொண்டான். ஆனால், பருவங்களை அறியவும், மழை பொழியும் காலத்தைக் கண்டறியவும் நட்சத்திரத்தைப் பயன்படுத்துவது தவறில்லை.

45 **முஸ்லிம்களின் தலைவருடைய விடயத்தில் எமது கடமை என்ன?** விருப்பு, வெறுப்பு அனைத்து நேரத்திலும் அவருக்கு வழிப்படுவது கடமையாகும். அவர்கள் அநீதம் செய்த போதிலும் அவர்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்வது கூடாது. அவர்களுக்கு எதிராகப் பிரார்த்தனை செய்யக் கூடாது. அவர்கள் சீராகவும், நேர்வழியில் செல்லவும் அவர்களுக்காகப் பிரார்த்திக்கவேண்டும். அவர்கள் பாவத்தைக் கொண்டு ஏவாத வரை அவர்களுக்கு வழிப்படவேண்டும். பாவங்களில் அவர்களுக்கு வழிப்படக் கூடாது. ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *"உனது முதுகில் அடிக்கப்பட்டாலும், உனது சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டாலும் தலைவருக்கு வழிப்படு."* (முஸ்லிம்).

46 **அல்லாஹ்வின் ஏவல், விலக்கல்களிலே அவனது (ஹிக்மத்) நோக்கம் பற்றிக் கேட்கலாமா?** ஆம், கேட்கலாம். ஆனால் ஈமானின் உறுதியை அதிகரிப்பதற்காகவே அன்றி "அதை அறிந்துதான் ஈமான் கொள்வேன்" அல்லது "நற்கிரியைகள் செய்வேன்" என்ற நிலைப்பாடு இருக்கக்கூடாது. எந்தக் கேள்வியும் இன்றி அப்படியே ஏற்றுக்கொள்வதே ஈமானின் பூரணத்துவத்தினதும், அடிபணிதலினதும் உயர் நிலையாகும். ஸஹாபாக்களும் அவ்வாறே இருந்தனர்.

47 **"உனக்கு ஏதாவது நன்மை ஏற்பட்டால் அது அல்லாஹ்வின் புறத்திலிருந்து வந்ததாகும். ஏதாவது தீமை ஏற்பட்டால் அது உன்னிடமிருந்து வந்ததாகும்" என்ற குர்ஆன் வசனத்தின் அர்த்தம் என்ன?** இந்த இடத்தில் நன்மையைக் கொண்டு நாடப்பட்டிருப்பது 'நி.'.மத்' எனும் அருளாகும். தீமை என்பது சோதிப்பாகும். அனைத்தும் அல்லாஹ்வின் ஏற்பாட்டிலேயே நடக்கின்றன. நன்மை அல்லாஹ்வின் பக்கம் சேர்க்கப்படும். ஏனென்றால் அந்த நன்மையின் மூலம் அல்லாஹ்வே உபகாரம் செய்தான். தீமையைப் பொருத்த மட்டில் அல்லாஹ் அவன் அறிந்த ஒரு நுணுக்கத்திற்காக அதைப் படைத்தான். அதன்படி அது அவனது நற்செயலாகும். ஏனென்றால் அவன் தீயதைச் செய்யமாட்டான். ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நன்மைகள்

அனைத்தும் உன் கைவசமே இருக்கின்றது. தீமை உன்பக்கம் இல்லை." அடியார்களின் செயல்கள் அல்லாஹ்வினால் படைக்கப்பட்டுள்ள அதே சமயம் மனிதர்களின் முயற்சியும் தான். அல்லாஹ் கூறுகின்றான்: *"எவர் (தான தர்மம்) அளித்து, பயபக்தியுடன் நடந்து, நல்லவற்றை உண்மையாக்குகின்றாரோ அவருக்கு நாம் சுவர்க்கத்தின் வழியை லேசாக்குவோம். எவர் கஞ்சத்தனம் செய்து அல்லாஹ்விடமிருந்து தன்னைத் தேவையற்றவனாகக் கருதுகிறாரோ, இன்னும் நல்லவற்றைப் பொய்யாக்குகின்றாரோ அவருக்கு கஷ்டத்தின் (நரகத்தின்) வழியை லேசாக்குவோம்."*

48 **ஒருவரைக் குறித்து 'சஹீத்' எனலாமா?** ஒருவர் இன்னொருவரை சஹீத் என்று தீர்ப்புச் செய்வது அவரை சுவர்க்கவாசி என்று தீர்ப்புச் செய்வது போன்றாகும். ரஸூல் (ஸல்) அவர்கள் ஒருவரைக் குறித்து சுவர்க்கவாசி அல்லது நரகவாசி என்று குறிப்பிட்டாலன்றி எந்த ஒரு தனிப்பட்ட நபரையும் குறிப்பிட்டு அவர் சுவர்க்கவாசி, நரகவாசி என்று தீர்ப்புச் செய்யக் கூடாது என்பது ஸுன்னத் வல் ஜமாஅத்தினரின் கொள்கையாகும். ஏனென்றால் ஒரு மனிதனின் யதார்த்தம் மறைவானது. நற்கிரியைகள் அதன் முடிவுகளைக் கொண்டே. அவன் எந்த நிலையில் மரணித்தான் என்பதையும், அவனது நோக்கம் எப்படி இருந்தது என்பதையும் நாம் அறியமாட்டோம். அல்லாஹ் மாத்திரமே அவற்றை அறிவான். ஆனாலும் நன்மை செய்தவனுக்கு சுவர்க்கம் கிடைக்கவேண்டும் என எதிர்பார்ப்போம். தீமை செய்தவன் நரகம் செல்வான் எனப் பயப்படுகிறோம்.

49 **ஒரு முஸ்லிமைக் குறித்து காபிர் என தீர்ப்பு வழங்கலாமா?** ஒரு முஸ்லிமிடமிருந்து குப்ரு, சிர்க், நிபாக் என்பன வெளிப்படையாக இல்லாமல் அவனைக் காபிர் என்றோ முஷ்ரிக் என்றோ, முனாபிக் என்றோ தீர்ப்புச் செய்வது கூடாது. அவனது உள்ரங்கத்தை அல்லாஹ்வின் பக்கம் சாட்டிவிடுவோம்.

50 **க..பா அல்லாதவற்றைத் தவாப் செய்யலாமா?** பூமியில் தவாப் செய்ய அனுமதிக்கப்பட்ட ஒரே இடம் க..பாவாகும். அதைத் தவிர வேறு எதுவும் கிடையாது. வேறு எதையும் (அது எவ்வளவு உயர்வானதாக இருந்தாலும்) க..பாவுக்கு சமமாக்கக் கூடாது.

# உள்ளம் சார்ந்த அமல்கள்

அல்லாஹ் இதயத்தைப் படைத்து அதை அரசனாகவும் உறுப்பக்களை அதன் படையாகவும் அமைத்துள்ளான். எனவே அரசன் நல்லவனாகக் காணப்படும் போது படையினர்கள் நல்லவர்களாகக் காணப்படுகின்றனர். நுபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: *நிச்சயமாக உடம்பில் ஒரு சதைத் துண்டு இருக்கின்றது. அது சீராகும் போது முழு உடம்பும் சீராகிவிடுகின்றது. அது கெட்டு விடும் போது முழு உடம்பும் கெட்டுவிடுகின்றது. அது இதயமாகும்.* (புகாரி, முஸ்லிம்) அது இறை நம்பியுடையவும் தக்வாவுடையவும் அல்லது இறை நிராகரிப்புடையவும் நயவஞ்சகத்துடையவும் இடமாகும். நுபி (ஸல்) அவர்கள் *தனது இதயத்தின் பால் சுட்டிக் காட்டியவாறு தக்வா இங்கு தான் இருக்கின்றது என மூன்று தடைவ கூறினார்கள்.* (முஸ்லிம்).

ஈமான் என்பது உள்ளம் உறுதி கொள்வதும் நாவால் மொழிவதும் உள்ளத்தாலும் உறுப்புக்களாலும் அமல் செய்வதுமாகும். உள்ளம் ஈமான் கொண்டு உண்மைப் படுத்துகின்றது. அதன் பிதைிபலனாக நாவு ஷஹாதா கலிமாவை மொழிகின்றது. அதன் பின் ஆதரவு வைத்தல், அன்பு கொள்ளல், பயப்படுதல் போன்ற உள்ளம் சார்ந்த அமல்களை இதயதம் செய்கின்றது. நாவின் மூலம் அல்லாஹ்வை ஞாபகித்தல், குர்ஆன் ஓதல் போன்ற செயல்களைச் செய்கின்றான். ஸுஜூது ருகூஊ போன்ற அமல்களின் மூலம் ஏனைய உறுப்புக்களும் உசும்புகின்றன. உடம்பு இதயத்தைப் பின்பற்றும். உள்ளத்தில் எது தரிபட்டிருக்கின்றதோ அதன் பிரதிபலிப்பு ஏதாவதொரு விதத்தில் உடம்பில் வெளியாகும்.

இதயம் சார்ந்த அமல்கள் என்பதன் அர்த்தம் இதயத்தால் செய்யப்பட வேண்டிய, உள்ளத்துடன் தொடர்புடைய அமல்களாகும். அவற்றில் மிகப் பெரியது உள்ளத்தில் இருக்கும் அல்லாஹ்வைப் பற்றிய நம்பிக்கையாகும். மார்க்க விடயங்களை ஏற்று உண்மைப் படுத்துவதும் இவ்வகை அமலாகும். ஒரு மனிதனின் உள்ளத்தில் ஏற்படும் (அல்லாஹ்வின் மீதான) அன்பு, பயம், ஆதரவு, (அவனின் பால்) மீளுதல், தவக்குல், பொறுமை, உறுதி, உள்ளச்சம் என்பன போன்றவையும் இதைச் சார்ந்ததாகும்.

இதயம் சார்ந்த அமல்கள் அனைத்தினதும் எதிர் மறை இதய நோய்களாகும். தூய்மையான எண்ணத்தின் எதிர்மறை முகஸ்துதியாகும். உறுதியின் எதிர்மறை சந்தேகமாகும். அன்பின் எதிர் மறை வெறுத்தலாகும். இவ்வாறே ஒவ்வொன்றையும் கொள்ளலாம். நாம் எமது இதயத்தை சீர்திருத்துவதை மறந்திவிடுவோமானால் பாவங்கள் அதில் ஒன்று சேர்ந்து அதை நாசப்படுத்திவிடும். நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: *ஓர் அடியான் ஒரு பாவத்தைச் செய்தால் அவனது இதயத்தில் ஒரு புள்ளி விழுகின்றது. அவன் அதை விட்டும் நீங்கி பாவமன்னிப்புக் கோரினால் அது மீண்டும் பிரகாசமடைகின்றது. மாறாக தொடர்ந்து பாவங்கள் செய்யச் செய்ய புள்ளிகள் அதிகரிகத்து இதயத்தை அப்படியே மூடிக்கொள்கின்றது. இதுவே அல்லாஹ் 'அவர்கள் சம்பாதித்த பாவங்கள் அவர்களின் இதயங்களில் துருவாகப் படிந்துவிட்டது' என்று குறிப்பிட்ட துருவாகும்.* (திர்மிதி)

மேலும் நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: *பித்னாக்கள் பாயில் காணப்படும் குச்சிகளைப் போன்று ஒவ்வொன்றாக எடுத்துக் காண்பிக்கப்படும். எந்த இதயத்தினுள் அவை புகுத்தப்படுமோ அங்கு ஒரு கரும்புள்ளி இடப்படுகின்றது. எந்த இதயம் அவற்றை நிராகரித்துவிடுகின்றதோ அங்கு ஒரு வெள்ளைப் புள்ளி இடப்படுகின்றது. இவ்வாறு இரு வகையான இதயங்கள் இருக்கின்றன. 1. பால் நிறக் கல்லைப் போன்ற வெள்ளையானது. வானங்கள், பூமி நிலைத்திருக்கும் வரை எந்த பித்னாக்களாலும் பாதிப்பு ஏற்படாது. 2. கவிழ்ந்திருக்கும் கூஜா போன்ற*

*கருநிறமான இதயம். அது எந்த நல்ல விடயத்தையும் ஏற்றுக் கொள்ளாது. எந்தப் பாவத்தையும் மறுக்காது. மனோ இச்சையில் நின்றும் எதை அதனுள் புகுத்தப்பட்டிருக்கின்றதோ அதை மாத்திரம் ஏற்றுக் கொள்ளும்.* (முஸ்லிம்)

ஓர் அடியான் உறுப்புக்கள் சார்ந்த அமல்களை அறிவதை விட இதயம் சார்ந்த அமல்களை அறிவதே மிக முக்கியமாகும். ஏனெனில் உள்ளம் சார்ந்த அமல்கள் அடிப்படையானதும் உறுப்புக்கள் சார்ந்த அமல்கள் அதன் பிரிவாக இருப்பதுடன் அவற்றைப் பூரணப்படுத்துபவையாகவும் காணப்படுகின்றன. நபி (ஸல்) அவகள் சொன்னார்கள்: *நிச்சயமாக அல்லாஹ் உங்கள் உருவங்களையோ செல்வங்களையோ பார்க்கமாட்டான். மாறாக உங்கள் உள்ளங்களையும் செயல்களையுமே பார்க்கின்றான்.* (முஸ்லிம்)

எனவே இதயம் என்பது அறிதல், ஆராய்தல், சிந்தித்தல் என்பவற்றின் இடமாகக் காணப்படுகின்றது. இதனால் தான் மனதர்கள் அல்லாஹ்விடத்தில் உள்ளத்தில் இருக்கும் ஈமான். உறுதி, தூய்மையான எண்ணம் போன்றவற்றின் மூலமாகவே வித்தியாசப்படுகின்றார்கள். ஹஸன் அல் பஸ்ரி (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்: அபூபக்கர் (ரழி) அவர்கள் ஏனைய ஸஹாபாக்களை அவர்களின் அமல்களின் மூலம் முந்தவில்லை. அவருடைய உள்ளத்தில் தரிபட்டிருந்த ஈமானின் மூலமாகவே அவர்களை முந்தினார்கள்.

இதயம் சார்ந்த அமல்கள் உறுப்புக்கள் சார்ந்த அமல்களை விட பல விதங்களில் சிறப்படைகின்றன. 1. இதயத்தைச் சார்ந்த அமல்கள் சீர் குலையும் போது உறுப்புக்கள் சார்ந்த அமல்கள் சீர் குலைந்து விடுகின்றன. (உ-ம்) முகஸ்துதி. 2. இதயம் சார்ந்த அமல்களே அடிப்படையானவை. உள்ளத்தில் எந்த நாட்டமுமின்றி உறுப்புக்களால் வெளிப்படும் வார்த்தைக்கு, செயலுக்கு நன்மை வழங்கப்படமாட்டாது. 3. அவை மறுமையில் உயர் பதவிகளைப் பெறுவதற்குக் காரணமாக அமைகின்றன. (உ-ம்) உலகப்பற்றின்றிருத்தல். 4.உறுப்புக்கள் சார்ந்த அமல்களை விட இவை மிகக் கஷ்டமானவை. இன்னும் முன்கதிர் (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள் : நான் 40 வருடங்கள் கஷ்டப்பட்டதன் பின்பே என் இதயம் சீராகியது. 5. அவை சிறந்த நன்மைகளை உடையவை. (உ-ம்) அல்லாஹ்வின் பேரில் அன்பு கொள்ளல். 6. மகத்தான கூலியைப் பெற்றுத் தரக்கூடியது. அபுத் தர்தா (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள்: ஒரு மணித்தியாலம் சிந்திப்பது ஓர் இரவு நின்று வணங்குவதை விடச் சிறந்தது. 7. இவை உறுப்புக்களையும் தூண்டிவிடக் கூடியவை. 8. இவை உறுப்புக்களின் அமல்களின் கூலியை அதிகப்படுத்துகின்றன அல்லது குறைத்து விடுகின்றன அல்லது அழித்து விடுகின்றன. (உ-ம்) தொழுகையில் உள்ளச்சம் 9. அவை உறுப்புக்களின் அமல்களுக்குப் பகரமாக அமைகின்றன. செல்வம் இல்லாத சந்தர்ப்பத்தில் ஸதகாக் கொடுப்பதற்கு நிய்யத் வைத்தல். 10. அவற்றின் கூலிக்கு எல்லை இல்லை (உ-ம்) பொறுமை . 11. அவற்றின் கூலி உறுப்புக்கள் தடைப்படும் போதும் அல்லது அவை செயல்பட முடியாத போதும் தொடரும். 12. அவை உறுப்புக்கள் அமல் செய்வதற்கு முன்னாலும் செய்யும்போதும் இருந்து கொண்டிருக்கும்.

உறுப்புக்கள் செயல்பட முன் இதயத்தில் பல நிலைமைகள் ஏற்படுகின்றன. 1) **الهاجس** ஒரு விடயம் இதயத்தில் சென்றவுடன் அதைப் பற்றிய முதலாவது சிந்தனை. 2) **الخاطرة** உள்ளத்தில் தரிபடும் சிந்தனை. 3) **حديث النفس** ஒரு விடயத்தைச் செய்வதா விடுவதா என்ற தடுமாற்றத்துடன் உள்ள சிந்தனை. 4) **الهم** ஒன்றைச் செய்ய வேண்டுமென்ற எண்ணம் கூடுதல். 5) **العزم** செய்ய வேண்டுமென்ற உறுதியான முடிவு. நன்மைகளைப் பற்றிய அல்லது பாவங்களைப் பற்றிய முதல் மூன்று வகையான

சிந்தனைகளுக்கும் நன்மையோ கூலியோ வழங்கப்படமாட்டாது. நான்காவது வகை நன்மையில் காணப்படுமாயின் அதற்கு ஒரு நன்மை வழங்கப்படும். பாவம் சம்பந்தமானதாக அது இருந்தால் அதைப் பாவமாகப் பதிவு செய்யப்படமாட்டாது. அது உறுதியாக (ஐந்தாவது நிலை) மாறுமானால் அது நன்மையானால் அதற்கு நன்மை வழங்கப்படும். அது பாவமாயின் அவன் பாவியாவான். அவன் அதைச் செய்யாவிடினும் சரியே. ஏனெனில் ஒரு விடயத்துக்கு சக்தி பெற்றிருக்கும் நிலையில் அதைச் செய்ய வேண்டுமென உறுதியாக எண்ணுவது அதைச் செய்ததைப் போன்றதாகும். அல்லாஹ் கூறுகின்றான். *" மு.:.மின்களின் விடயத்தில் பாவங்கள் பரவ வேண்டுமென விரும்புபவர்களுக்கு நோவினையுள்ள தண்டனை இருக்கின்றது*.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *இரு முஸ்லிம்கள் அவர்கள் இருவர்களுடைய வாள்களுடன் சந்தித்துக் கொள்வார்களாயின் கொலை செய்தவரும் கொலை செய்யப்பட்டவரும் நரகிலாகும்.* அப்பொழுது நான் கேட்டேன்: ஒருவர் கொலை செய்தவர். கொலை செய்யப்பட்டவரின் நிலை என்ன? அப்பொழுது நபியவர்கள் சொன்னார்கள் : *இவர் அவரைக் கொலை செய்ய வேண்டுமென்ற ஆசையுடனே இருந்தார்.* (புகாரி)

ஒருவர் ஒரு பாவத்தைச் செய்ய உறுதி பூண்டதன் பின் அதை விடுவதில் நான்கு நிலைகள் காணப்படுகின்றன. 1. அல்லாஹ்விற்குப் பயந்ததற்காக அதை விட்டு விடுதல். இதற்குக் கூலி வழங்கப்படும். 2. மனிதர்களுக்குப் பயந்து விட்டு விடுதல். இது பாவமாகும். ஏனெனில் பாவத்தை விடுவது ஒரு வணக்கமாகும். ஆதை அல்லாஹ்விற்காக மாத்திமே செய்யப்பட வேண்டும். 3. பாவத்தைச் செய்வதற்கான சாதனங்கள் இல்லாதிருப்பதால் விட்டு விடுதல். புாவத்தைச் செய்ய வேண்டும் என்ற உறுதியான எண்ணம் காணப்படுவதால் இவரும் பாவியாவார். 4. பாவத்தின் பால் சேர்க்கக்கூடிய வழி வகைகளைச் செய்து விட்டு பாவத்தை அடைய முடியாமல் விட்டுவிடுதல். இவர் அப்பாவத்தைச் செய்த குற்றவாளியைப் போன்றாவார். முன் குறிப்பிடப்பட்ட ஹதீஸில் இருப்பது போன்று பாவத்தைச் செய்ய வேண்டும் என்ற உறுதியான எண்ணத்துடன் செயல்பட்டவர் அப்பாவத்தைப் பூரணமாகச் செய்தவரைப் போன்றாவார். எண்ணத்துடன் சேர்ந்து செயலும் காணப்பட்டால் அதற்காகத் தண்டிக்கப்படுவார். ஒருவன் ஒரு ஹராத்தை ஒரு விடுத்தம் செய்துவிட்டு சந்தர்ப்பம் அமைந்தால் மீண்டும் அதைச் செய்ய வேண்டும் என்ற உறுதியுடன் இருந்தால் மீண்டும் அச்செயலைச் செய்யாவிட்டாலும் அதன் காரணமாக தொடர்ந்து பாவம் செய்தவராவார். அதற்காக அவர் தண்டிக்கப்படுவார்.

**உள்ளம் சார்ந்த சில அமல்கள்:**

**நிய்யத்:** எண்ணுதல், நாடுதல் என்ற கருத்தைக் கொண்டதாகும். இந்த நிய்யத் இன்றி எந்த ஒரு அமலும் சீராகமாட்டாது. ஏற்றுக்.கொள்ளப்படவும் மாட்டாது. நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் : *எல்லா அமல்களும் நிய்யத்களைக் கொண்டாகும். ஓவ்வொரு மனிதனுக்கும் அவன் நாடியது மாத்திரமே கிடைக்கும்.* (புகாரி, முஸ்லிம்)

**இப்னு முபாரக் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் :** எத்தனையோ சிறிய அமல்கள் நிய்யத் அதை அதிகப்படுத்திவிடுகின்றத. மேலும் எத்தனையோ பெரிய அமல்கள் நிய்யத் அவற்றைச் சிறிதாக்கிவிடுகின்றது. புழைல் பின் இயாழ் (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள் : *"அல்லாஹ் உன்னிடமிருந்து எதிர்பார்ப்பதெல்லாம் உனது நிய்யத்தையும் நாட்டத்தையும் தான்".* அமல் அல்லாஹ்வுக்காக வேண்டி அமையுமானால் அதற்கு இக்லாஸ் எனப்படும். இக்லாஸ் என்பது மற்றவர்களுக்கு எந்தப் பங்கும் இல்லாமல் அமலை

அல்லாஹ்வுக்காக மாத்திரம் செய்யப்படுவதாகும். அமல் அல்லாஹ்வுக்காக வேண்டி அன்றி செய்யப்படுமானால் அதற்கு முகஸ்துதி என்றோ நயவஞ்சகம் என்றோ வேறு ஒரு பெயரோ சொல்லப்படும்.

மார்க்க அறிவைக் கற்றவர்களைத் தவிர மனிதர்கள் அனைவரும் நாசமடையக்கூடியவர்கள். கற்றபடி அமல் செய்யக் கூடியவர்களைத் தவிர கற்றவர்கள் அனைவரும் நாசமடையக்கூடியவர்கள். தூய்மையான எண்ணம் இன்றி அமல் செய்யக்கூடியவர்கள் அனைவரும் நாசமடையக்கூடியவர்கள். எனவே அல்லாஹ்வை வழிப்பட நாடும் ஒரு மனிதனின் முதலாவது கடமை அவன் நிய்யத்தைப் படிப்பதாகும். பின்பு அவன் உளத்தூய்மை, உண்மை என்பவற்றின் யதார்த்தத்தை விளங்கியதன் பின் அதை அமலின் மூலம் சரிசெய்வதாகும். ஏனெனில் நிய்யத் இன்றி செய்யும் அமல் வீணான சிரமமாகும். உளத்தூய்மையற்ற நிய்யத் முகஸ்துதியாகும். ஈமானை உறுதிப்படுத்திக்கொள்ளாமல் வரும் இக்லாஸ் வெறும் புழுதி போன்றதாகும்.

**செயல்கள் மூன்று வகைப்படும். 1)பாவங்கள்.** பாவத்தைச் செய்யும் போது நாம் வைக்கும் நல்ல நிய்யத் அதை நன்மையாக மாற்றிவிடாது. அதைச் செய்யும் போது கெட்ட நோக்கங்களும் சேர்ந்து விடுமாயின் குற்றம் பலமடங்காகும். **2)அனுமதிக்கப்பட்டவை.** இவை ஒவ்வொன்றும் நல்ல நிய்யத் ஒன்றின் மூலமோ அல்லது பலதின் மூலமோ அவை வணக்கங்களாக மாற முடியும். **3)வணக்கங்கள்.**[1] இவை அங்கீகரிக்கப்படுவதற்கும் நன்மைகள் பல மடங்காக வழங்கப்படுவதற்கும் நிய்யத்துடன் இணைந்திருப்பது கட்டாயமாகும். அவற்றை முகஸ்துதிக்காகச் செய்தால் அது பாவமாகவும் சிறிய இணையாகவும் மாறிவிடும். சில நேரங்களில் பெரிய இணைக்கே அவனைக் கொண்டு

---

[1] நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *யாராவது நலவொன்றைச் செய்ய உறுதிகொண்டுவிட்டு அதனைச் செய்ய முடியவில்லையாயின் அல்லாஹ் அதனைப் பூரண நன்மையாக எழுதிவிடுகின்றான். அவன் நலவொன்றைச் செய்ய உறுதிகொண்டு அதனைச் செய்துவிட்டால் அல்லாஹ் அதனைப் பத்து நன்மைகளாக எழுதிவிடுகின்றான். அதனை 700 ஆகவும், அதற்கும் மேற்பட்ட மடங்குகளாகவும் அதிகரித்துக் கொடுக்கின்றான். யாராவது ஓர் கெடுதியைச் செய்ய உறுதிகொண்டும் அதனைச் செய்யவில்லையாயின் அல்லாஹ் அதனை அவனிடத்தில் பூரண நன்மையாக எழுதிவிடுகின்றான். அவன் கெடுதியைச் செய்ய உறுதிகொண்டு அதனைச் செய்து விட்டால் அல்லாஹ் ஒரேயொரு கெடுதியாக அதனை எழுதிவிடுகின்றான்.*

மேலும் அவர்கள் கூறினார்கள்: *இந்த சமூகத்துக்கு உவமானம் 4 பேர்களைப் போன்றாகும். (1) ஒருமனிதன் அல்லாஹ் அவனுக்குப் பணத்தையும், அறிவையும் வழங்கியுள்ளான். அவன் அவனது அறிவின் மூலம் அமல் செய்வதுடன் தனது பணத்தை உரிய முறையில் செலவும் செய்கின்றான். (2) இன்னொரு மனிதன் அல்லாஹ் அவனுக்கு அறிவைக் கொடுத்துள்ளான். ஆனால் பணத்தைக் கொடுக்கவில்லை. எனினும் அவன், என்னிடம் பணமிருந்தால் அவனைப்போன்று நானும் நல்லமல் புரிவேன் என ஆசை வைக்கின்றான். அவ்விருவரும் கூலியில் சமமானவர்களாகும் என நபிகளார் கூறினார்கள். (3) இன்னொரு மனிதன், அல்லாஹ் அவனுக்கு பணத்தைக் கொடுத்துள்ளான். ஆனால் அறிவைக் கொடுக்கவில்லை. அவன் பணத்தை வீண்விரயம் செய்கின்றான். (4) இன்னொரு மனிதன், அல்லாஹ் அவனுக்கு அறிவைக் கொடுக்கவுமில்லை, பணத்தைக் கொடுக்கவுமில்லை.* எனினும் அவன் என்னிடம் பணமிருந்தால் அவனைப்போன்று நானும் பணத்தை வீண்விரயம் செய்வேன் என ஆசை வைக்கின்றான். அவ்விருவரும் பாவத்தில் சமமானவர்களாகும் .இரண்டாவது நபரும் நான்காவது நபரும் தனக்கு முடியுமானதைச் செய்தார். அது தான் அவர் உறுதியுடன் மேலெண்ணம் வைத்ததாகும். அவர்கள் எங்களுக்கும் அவர்களிடம் காணப்படுவது இருந்தால் நாமும் அவர்களைப் போன்று செய்வோம் என்ற அவர்களின் வார்த்தையில் அது தெளிவாகியது. ஆதலால் அவர்கள் ஒவ்வொருவரும் கூலியிலும் தண்டனையிலும் யாரைப் போன்று இருக்க விரும்பினார்களோ அவர்களுடன் சேர்க்கப்பட்டார்கள். இப்னு றஜப் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: நபியவர்கள் கூலியில் அவர்கள் இருவரும் சமன் என்று குறிப்பிட்டது அந்நல்அமலுக்குரிய அடிப்படை நன்மையிலாகும். நன்மைகள் பன்மடங்காக வழங்கப்படுதல் என்ற சிறப்பு செய்தவருக்கு மாத்திரம் உள்ளதாகும். செய்யாதவருக்கும் பன்மடங்கு வழங்கப்படுமென்றிருந்தால் நன்மையைச் செய்யாமல் எண்ணியவருக்கும் 10 மடங்கு வழங்கப்படும். அது ஹதீஸ்களின் கருத்துக்கு மாற்றமானதாகும்.

போய்ச் சேர்த்துவிடும். முகஸ்துதி மூன்று வகைப்படும். 1- அடிப்படையில் ஓர் அமலைச் செய்யத்தூண்டியது முகஸ்துதி. இது இணையில் நின்றும் உள்ளது. இவ்வமல் பாதிலாகும். 2- அல்லாஹ்வுக்காக ஓர் அமலை ஆரம்பித்ததன் பின் அதில் முகஸ்துதி ஏற்படுதல். இதில் ஆரம்பமும் கடைசியும் ஒன்றோடொன்று தொடர்புறாமல் இருப்பின் ஆரம்பம் ஏற்றுக் கொள்ளப்படும். இறுதிப் பகுதி செல்லுபடியாகாது. (உ-ம்) ஸதகா. அவ்வாறின்றி அதனுடைய ஆரம்பமும் இறுதியும் ஒன்றோடொன்று தொடர்புறக்கூடியதாக இருப்பின் அதில் இரு நிலைமைகள் உண்டு. 1.அவன் முகஸதுதியைத் தடுக்க முயற்சித்தால் இது அமலுக்குப் பாதிப்பை ஏற்படுத்தாது. 2. முகஸ்துதியில் மனநிறைவடைதல். இதில் முழு வணக்கமும் அழிந்து விடும். 3- அமல் செய்து முடிந்ததன் பின் முகஸ்துதி ஏற்படல். இது வெறும் எண்ணம். அமலுக்கோ அமல் செய்தவருக்கோ எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தாது. இவை தவிர இன்னும் மறைவான முகஸ்துதிகள் காணப்படுகின்றன. அவற்றைக் கற்றுத் தவிர்ந்து கொள்வது அவசியமாகும்.

**அவர் நல் அமல் செய்வதன் நோக்கம் இவ்வுகத் தேவை ஒன்றை அடைவதாக இருக்குமயின் அவனது நற்கூலியோ அல்லது பாவமோ அவனது நிய்யத்தின் அளவுக்குக் காணப்படும். அதில் மூன்று நிலைமைகள் இருக்கின்றன.** 1. அவ்வமலைச் செய்யத் தூண்டியது உலகத் தேவையை அடைவது மாத்திரமே. (உ-ம்) பணத்திற்காக மக்களைத் தொழுவிப்பவர். இவர் பாவியாவார். நுபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ***அல்லாஹ்வின் பொருத்தத்தைத் தேடி படிக்கப்பட வேண்டிய ஓர் அறிவை ஓர் உலகத் தேவையை அடைவதற்காக மாத்திரம் கற்பானாயின் அவன் சுவனத்தின் வாடையைக்கூட பெற்றுக் கொள்ளமாட்டான்.*** (அபூதாவூத்). 2. அவன் அல்லாஹ்வுக்காக வேண்டியும் உலகத் தேவைக்காக வேண்டியும் அதைச் செய்தல். இவன் ஈமானும் உளத்தூய்மையும் குறைந்தவன். அவனின் நல்ல நிய்யத்தின் அளவிற்கு அவன் கூலி வழங்கப்படுவான். 3. அல்லாஹ்வுக்காக வேண்டி மாத்திரம் அமல் செய்தல். அத்துடன் அமல் செய்வதற்கு உதவி பெறுமுகமாக சம்பளம் ஒன்றைப் பெற்றுக் கொள்ளல். அவரின் நற்கூலி பூரணமாகக் கிடைக்கும். அவர் எடுத்த சம்பளம், கூலி போன்றவற்றின் மூலம் நற்கூலி குறைந்து விடமாட்டாது. ***“நீங்கள் கூலி பெறுவதற்கு மிகத் தகுதியானது இறை வேதமாகும்” (புகாரி).***

**தூய்மையான எண்ணத்துடன் அமல் செய்பவர்கள் பல படித்தரத்தில் காணப்படுகின்றனர். 1. குறைந்த படித்தரம்:** கூலியை எதிர்பார்த்ததற்காகவோ அல்லது தண்டைணையைப் பயந்தோ அமல் செய்வதாகும். **2. நடு நிலை:** அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்துவதற்காகவும் அவனது கட்டளையை ஏற்றதற்காகவும் அமல் செய்தல். **3. உயர் நிலை:** அல்லாஹ்வின் பேரில் கொண்ட அன்பிற்காகவும் அவனைக் கண்ணியப்படுத்துவதற்காகவும் அவனைப் பயந்தும் அமல் செய்வதாகும். இது ஸித்தீக்கீன்கள் எனப்படுவோரின் அந்தஸ்தாகும்.[1]

---

[1] அல்லாஹ் கூறுகின்றான்: (மூஸா அலை அவர்கள் கூறினார்கள்) என் இறவைா நீ பொருந்திக்கொள்ளுமுகமாக நான் உன்பக்கம் விரைந்து வந்தேன். இங்கே மூஸா (அலை) அல்லாஹ்வின் கட்டளைக்கு விடையளிப்பது மாத்திரமன்றி அவன் அவர்களை பொருந்திக் கொள்வதற்காகவும் அவனைச் சந்திக்க விரைந்தார்கள். இது போன்று தான் பெற்றோர்களுக்கு பணிவிடை செய்வது. இதில் 3 படித்தரங்கள் உண்டு. 1. கீழ் நிலை :அவர்களை நிந்தனை செய்த தண்டனையைப் பயந்ததற்காவும் பணிவிடை செய்த நன்மையைப் பெற்றுக் கொள்ளும் நோக்குடன் செய்தல். 2. நடு நிலை: அல்லாஹ்வை வழிப்படுவதற்காகவும் அவர்கள் செய்த நலவுகளுக்கு

✷ **பாவ மன்னிப்புக் கோரல் :** பாவம் செய்தால் உடனடியாகத் தௌபாச் செய்வது கடமை. பாவம் நடைபெறுதல் என்பது அடிப்படையில் ஒரு பெரும் பிரச்சினையல்ல. ஏனென்றால், அது மனிதனின் இயல்பு. ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *“மனிதர்கள் அனைவரும் பாவம் செய்யக் கூடியவர்கள். பாவம் புரிபவர்களில் சிறந்தவர்கள் அதிகமாக மன்னிப்புக் கேட்பவர்கள்”* (திர்மிதி). மேலும் கூறினார்கள்: *“நீங்கள் பாவம் செய்யாவிடின் அல்லாஹ் உங்களை அகற்றிவிட்டு பாவம் செய்து அவனிடம் மன்னிப்புக் கோரும் ஒரு சமூகத்தை ஏற்படுத்தி அவர்களை மன்னிப்பான்”* (முஸ்லிம்). ஆனால் பாவத்தில் நிலைத்திருப்பதும், பாவமன்னிப்புக் கோருவதைப் பிற்படுத்துவதும் தவறாகும். ஷைத்தான் ஏழு தடைகளில் ஒரு தடையின் மூலம் மனிதனிடம் வெற்றிபெற விரும்புகின்றான். ஒன்றில் இயலாமல் ஆகிவிட்டால் அதற்கடுத்ததற்குத் தாவுகின்றான். அவையாவன: (1) இணை மற்றும் குப்ர் எனும் தடை. (2) அதற்கு முடியாவிட்டால், நம்பிக்கை சம்பந்தமானவற்றில் பித்அத் மற்றும் நபியவர்களைப் பின்பற்றுவதை விட்டும் தடுத்தல் எனும் தடை. (3) அதற்கும் முடியாவிட்டால், பெரும் பாவங்களில் ஈடுபட வைத்தல் எனும் தடை. (4) அதற்கும் முடியாவிட்டால், சிறிய பாவங்களில் தொடராக ஈடுபடல் எனும் தடை. (5) அதற்கும் முடியாவிட்டால், அனுமதிக்கப்பட்டவைகளை அதிகமாகச் செய்தல் எனும் தடை. (அதன் மூலம் அனுமதிக்கப்படாதவற்றில் நுளைய வாய்ப்புண்டு) (6) அதற்கும் முடியாவிட்டால், அதிக நன்மைகள் வழங்கப்படும் நற்கருமங்களை விட்டுவிட்டு வேறு அமல்களில் ஈடுபடுதல் எனும் தடை. (7) அதற்கும் முடியாவிட்டால், மனித மற்றும் ஜின்களிலுள்ள ஷைத்தான்களை இவனளவில் சாட்டிவிடல் எனும் தடை ஆகியவையாகும்.

**பாவங்கள் பல வகைப்படும். 1- பெரும்பாவம்.** உலகில் தண்டனை, மறுமையின் எச்சரிக்கை, அல்லாஹ்வின் கோபம், சாபம் அல்லது ஈமான் இருக்கமுடியாது என எச்சரிக்கப்படும் பாவங்கள் பெரும் பாவங்களாகும்.

**2- ஏனையவை சிறிய பாவங்களாகும்.** சிறுபாவத்தில் நிலைத்திருத்தல், திரும்பத்திரும்பச் செய்தல், அதனை அற்பமாகக் கருதுதல், அதனைச் செய்வது கொண்டு பெருமைப்படுதல், பகிரங்கமாகச் செய்தல் போன்றன சிறுபாவங்களை பெரும்பாவங்களாக மாற்றிவிடும் காரணிகளாகும்.

அனைத்துப் பாவங்களை விட்டும் தௌபாச் செய்யலாம். சூரியன் மேற்கிலிருந்து உதிக்கும் வரை அல்லது மரணத் தருவாயில் உயிர் தொண்டையை அடையும் வரை தௌபாவுக்கு அவகாசம் உண்டு. தௌபாச் செய்பவனுக்கு வழங்கப்படும் கூலி அது உண்மையானதாக இருந்தால் பாவங்கள் வானம் எட்டுமளவு இருந்தாலும் அவை அனைத்தும் நன்மைகளாக மாற்றப்படுவதாகும்.

**மன்னிப்புக் கோரலை அங்கீகரிக்க சில நிபந்தனைகள் உள்ளன.** அவை: 1- பாவத்தை விட்டும் நீங்கிக்கொள்ளல். 2- செய்த பாவத்திற்காகக் கவலைப்படல் 3- எதிர்காலத்தில் மீண்டும் அப்பாவத்தைச் செய்யாமல் இருக்க உறுதிபூணல். மற்ற மனிதர்களுடைய உரிமைகள் சம்பந்தப்பட்ட பாவமாக இருந்தால் அவர்களது உரிமைகளைக் கட்டாயம் அவர்களிடம் திருப்பி ஒப்படைத்துவிட வேண்டும்.[1]

---

நன்றியாகவும் செய்தல். 3. உயர்நிலை : அல்லாஹ்வின் கட்டளையை ஏற்று அவன் அன்பிற்காகவும் அவனை கண்ணியப்படுத்துமுகமாகவும் செய்தல்.

[1] நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளது : *அல்லாஹ்விடம் பதிவேடுகள் 3 இருக்கின்றன. ஒரு ஏடு அதில் உள்ளவற்றை அல்லாஹ் பொருட்படுத்தமாட்டான் .*

**பாவமன்னிப்புக் கோரும் விடயத்தில் மனிதர்கள் 4 வகைப்படுவர்.** 1. இவர்கள் பாவமன்னிப்புக் கோரி மீண்டும் பாவங்களின் பால் மீள்வதைப் பற்றிச் சிந்திக்காமல் அவர்களின் வாழ்நாள் முடியும் வரை அதில் நிலைத்திருப்பர். இந்நிலையே தௌபாவில் உறுதியாயிருப்பதாகும். இவர் நன்மைகள் செய்து முந்திக்கொள்ளக்கூடியவர். இவ்வகையான தௌபா தூய்மையான தௌபா என அழைக்கப்படும். இவர்கள் சாந்தமான உள்ளம் உடையவர்கள். 2. இப்பிரிவினர் பாவமன்னிப்புக் கோரிவிட்டு முக்கியமான வழிபாடுகளில் ஈடுபடுவார்கள். ஆனாலும் இடைக்கிடையே அவர்களுக்குக் குறுக்கிடும் பாவங்களை விட்டும் அவர்கள் நீங்கிக் கொள்ளமாட்டார்கள். அது அவர்கள் வேண்டுமென்றே செய்யும் பாவங்கள் அல்ல. மாறாக அப்பாவங்களைச் செய்ய வேண்டுமென்ற உறுதியான வேட்கை அவர்களிடம் இல்லாத நிலையில் அவர்கள் அவற்றைக் கொண்டு சோதிக்கப்படுகின்றார்கள். அவர்கள் அவ்வாறு பாவம் செய்யும் போதெல்லாம் தன்னையே குறை கூறி, கவலைப்பட்டு பாவங்களின் காரணிகளை விட்டும் தூரமாக வேண்டுமென உறுதி பூணுவார்கள். இவர்கள் தங்களையே குறைகாணும் உள்ளம் கொண்டவர்கள். 3. இப்பிரிவினர் பாவமன்னிப்புக் கோரிவிட்டு சில காலம் அதில் உறுதியாக இருப்பார்கள். பின்பு ஒரு சில பாவங்களின் பேரில் உள்ள அவர்களுடைய மனோ இச்சை அவர்களை மிகைக்க, அவர்கள் அப்பாவங்களைச் செய்துவிடுவார்கள். எனினும் வணக்க வழிபாடுகளை அவர்கள் தொடர்ந்தும் செய்து கொண்டிருப்பார்கள். மேலும் வேறு பல பாவங்களை அவற்றைச் செய்வதற்குச் சக்தியிருந்தும் விருப்பமிருந்தும் விட்டுவிடுவார்கள். ஓரிரு பாவங்களின் பால் அவர்களுக்கு உள்ள ஆசையே அவர்கள் மீறிவிடுகின்றது. பிறகு பாவமன்னிப்புக் கோரிவிடலாம் என தனக்கு ஒரு வாக்கை அளித்து விட்டு அப்பாவத்தைச் செய்கின்றனர். இவர்கள் பிற்படுத்தம் உள்ளம் கொண்டவர்கள். இவர்கள் பாவமன்னிப் கோருவதைப் பிற்படுத்துவதன் காரணமாக இவர்களின் முடிவு அபாயத்தில் இருக்கின்றது. ஏனெனில் இவர்கள் பாவமன்னிப்புக் கோர முன் இவர்களுக்கு மரணம் முந்தி விடலாம். எமது செயல்கள் அனைத்தும் முடிவுகளைக் கொண்டே தீர்மானிக்கப்படுகின்றன. 4. இப்பிரிவினர் பாவமன்னிப்புக் கோரி சில காலம் அதில் நிலையாக இருந்து விட்டு பாவங்ளில் மூழ்க ஆரம்பித்து விடுவர். இவர்களிடம் பாவமன்னிப்புக் கோரவேண்டும் என்ற சிந்னனையோ அல்லது பாவம் செய்ததைப் பற்றிய கவலையோ காணப்பட மாட்டாது. இவர்களிடம் கெடுதிகளை அதிகம் ஏவும் உள்ளம் காணப்படுகின்றது. இவர்களின் முடிவு கெட்டதாக அமையலாம் என்ற பயம் இருக்கின்றது.

✸ **உண்மை:** இது உள்ளம் சார்ந்த அமல்கள் அனைத்திற்கும் அடிப்படையாகும். உண்மை என்ற இவ்வார்த்தை ஆறு கருத்துக்களில் உபயோகிக்கப்படுகின்றது. 1. வார்த்தையில் உண்மை 2. எண்ணத்திலும் நாட்டத்திலும் உண்மை (இக்லாஸ் எனும் உளத்தூய்மை) 3. ஒரு விடயத்தை மன உறுதி கொள்வதில் உண்மையாயிருத்தல் 4. மன உறுதி கொள்ளப்பட்ட

---

*இரண்டாவது ஏடு அதில் எதையும் அவன் விட்டுவிட மாட்டான். மூன்றாவது ஏட்டில் உள்ளவற்றை அவன் மன்னிக்கமாட்டான். அல்லாஹ் மன்னிக்காத ஏடு இணையாகும். அல்லாஹ் கூறுகின்றான்: நிச்சயமாக யாராவது அவனுக்கு இணைவைத்தால் அல்லாஹ் அவனுக்கு சுவனத்தை ஹராமாக்கிவிடுகின்றான். அவன் ஒதுங்குமிடம் நரகாகும். அவன் பொருட்படுத்தாத ஏடு அல்லாஹ்வுக்கும் அடியார்களுக்கும் இடையில் உள்ள பாவங்கள். அவன் நாடினால் அவற்றை மன்னித்து விடுவான். அவன் விட்டுவிடாத பதிவேடு அடியார்கள் அவர்களுக்கிடையில் செய்து கொள்ளும் அநியாயங்களாகும். அவற்றில் சந்மேகமின்றி பழிக்குப்பழி இருக்கின்றது*

விடயங்களை நிறைவேற்றுவதில் உண்மையாயிருத்தல். 5. வெளிரங்கம் உள்ரங்கத்துக்கு நேர்படுவதன் மூலம் அமல்களில் உண்மையாயிருத்தல் 6. மார்க்கத்தின் எல்லாப் படித்தரங்களையும் நிறைவேற்றும் விடயத்தில் உண்மையாயிருத்தல். இது படித்தரங்கள் எல்லாவற்றிலும் மிக கண்ணியமானதும் மிக உயர்ந்ததுமாயிருக்கும். இது அல்லாஹ்வைப் பயப்படுதல், அவனை ஆதரவு வைத்தல், கண்ணியப்படுத்தல், உலக ஆசையற்றிருத்தல், பொருந்திக் கொள்ளல், தவக்குல் வைத்தல், அன்பு வைத்தல் போன்ற இதயம் சார்ந்த அமல்கள் அனைத்திலும் அவன் உண்மையாளனாக இருப்பதாகும். மேற்கூறப்பட்ட அனைத்திலும் அவன் உண்மையாளனாக காணப்படின் அவன் ஸித்தீக் (மிகவும் உண்மையாளன்) ஆவான். ஏனெனில் உண்மையில் உயர் நிலையை அடைந்தவானயிருக்கும். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *நீங்கள் உண்மையைப் பற்றிப்பிடித்துக் கொள்ளுங்கள். ஏனெனில் உண்மை நன்மைகளின் பால் வழிகாட்டும். நன்மைகள் சுவனத்தின் பால் வழிகாட்டும். ஒரு மனிதன் உண்மை பேசி தொடர்ந்தும் அவன் முயற்சித்து உண்மையை மாத்திரம் பேசும் பொழுது அல்லாஹ்விடத்தில் "ஸித்தீக்" (உண்மையாளன்) என எழுதப்படுகின்றான்.* (புகாரி, முஸ்லிம்) ஒரு மனிதனுக்கு சத்தியம் தெளிவற்றிருந்து அவன் தனது மனோ இச்சைக்குக் கட்டுப்படாமல் உண்மையாகவேஅதை அல்லாஹ்விடம் தேடினால் பெரும்பாலும் அச்சத்தியத்தை அடைந்து கொள்ள அவன் அனுகூலம் புரியப்படுவான். அவ்வாறு அவனுக்கு அதை அடைந்து கொள்ள முடியாமல் போனாலும் அல்லாஹ் அவனை மன்னித்து விடுவான்.

உண்மைக்கு மாற்றமான பண்பு பொய்யாகும். ஒருவனுடைய இதயத்திலிருந்து முதன் முதலாக பொய் அவனுடையை நாவையே வந்தடைந்து அதைக் கெடுத்து விடுகின்றது. பின்பு அவனது நாவிலிருந்து வெளியாகும் வார்த்தைகளை அது சீர் கெடவைத்தது போன்று ஏனைய உறுப்புக்களை அடைந்து அவற்றையும் சீர் கெடுத்து விடுகின்றது. எனவே அவனது வார்த்தைகள், செயல்கள், நிலைமைகள் எல்லாவற்றிலுமே பொய் கலந்து சீர் கேடு அப்படியே வேரூன்றி விடுகின்றது.

✸ **அன்பு வைத்தல் :** நாம் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் அன்பு கொள்வதன் மூலம் ஈமானின் இனிமையைப் பெற்றுக் கொள்ளலாம். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *மூன்று விடயங்கள் ஒருவனிடம் காணப்படுமாயின் அவற்றின் மூலம் அவன் ஈமானின் இனிமையைப் பெற்றுக் கொள்வான். 1. அல்லாஹ்வும் அவனது தூதரும் மற்றைய அமைத்தையும் விட அவனுக்கு மிக விருப்பமானவர்களாக இருத்தல். 2. ஒரு மனிதனை அல்லாஹ்வுக்காக மாத்திரம் நேசம் கொள்ளல். 3. இறை நிராகரிப்பில் இருந்து அல்லாஹ் அவனைப் பாதுகாத்ததன் பின் மீண்டும் அதன் பால் மீள்வதை நெருப்பில் எறிப்படுவதை வெறுப்பது போன்று வெறுத்தல்.* (புகாரிஈ முஸ்லிம்) நேசம் என்ற இம்மரத்தை இதயத்தில் நடப்பட்டு அதற்கு உளத்தூய்மை, நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றுதல் ஆகியனவற்றின் மூலம் அதற்கு நீர்ப்பாய்ச்சப்பட்டால் அது அல்லாஹ்வின் உத்தரவின் பிரகாரம் எல்லா வகையான பழங்களையும் உணவுகளையும் அது காய்த்துக் கொண்டிருக்கும். அவை நான்கு வகையாகும். 1) அல்லாஹ்வை அன்புகொள்ளல். அது ஈமானின் அடிப்படையாகும். 2) அல்லாஹ்வின் விடயத்தில் அன்புகொள்வதும் வெறுப்புக் கொள்வதும் இது கடமையாகும்.[1]

---

[1] சேர்ந்து நடத்தல், வெறுத்து நடத்தல் விடயத்தில் மனிதர்கள் மூன்று பிரிவினர். 1) எந்த

3) அல்லாஹ்வுடன் சேர்த்து அன்புகொள்ளல். அல்லாஹ் அல்லாதவற்றையும் அல்லாஹ்வுடன் சேர்த்து அன்புகொள்ளல். முஶ்ரிகீன்கள் தங்கள் தெய்வங்களை அன்புகொள்ளல் இந்த வகையைச் சேர்ந்ததாகும். இது இணைவைத்தலின் அடிப்படையாகும். 4) இயற்கையான அன்பு. பெற்றோர்களை, பிள்ளைகளை அன்புவைத்தல், உணவு போன்றவற்றை விரும்புதல் என்பன இதில் சேரும். இது அனுமதிக்கப்பட்டதாகும். அல்லாஹ் எம்மை நேசம் கொள்ள வேண்டுமாயின் நாம் உலகில் ஆசையற்றவர்களாக இருக்க வேண்டும். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். : ***உலக ஆசை அற்றவனாக இரு . அல்லாஹ் உன்னை நேசம் கொள்வான்.*** (இப்னுமாஜஹ்)

**பொறுப்புச் சாட்டல் (தவக்குல்):** எமது தேவைகள் நிறைவேறும் விடயத்திலும் நாம் வெறுக்கும் விடய்களைத் தடுக்கும் விடயத்திலும் அல்லாஹ்வின் மீது பூரண நம்பிக்கை வைத்து மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட காரணிகளைச் செய்வதுடன் எமது இதயம் அவனிடம் பொறுப்புச் சாட்டி அவனின் மீது மாத்திரம் நம்பிக்கை வைப்பதே தவக்குலாகும். அவனிடம் எமது இதயம் பொறுப்புச் சாட்டாமல் இருப்பது எமது ஏகத்துவத்தில் உள்ள குறையாகும். நாம் காரணிகளைச் செய்யாமல் விடுவது எமது இயலமையும் எமது புத்தியில் உள்ள குறையுமாகும். நாம் தவக்குல் வைக்க வேண்டிய சந்தர்ப்பம் ஒரு விடயத்தை ஆரம்பிக்க முன்பாகும். அது எமது இறைநம்பிக்கையில் காணப்படும் உறுதியின் வெளிப்பாடாகும். அது மூன்று வகைப்படும். 1) **கடமையானது.** அது நன்மைகளைப் பெறுவது, இடர்களைத் தடுப்பது என்ற அனைத்து விடயங்களிலும் அல்லாஹ் மீது நம்பிக்கை வைப்பதாகும். 2) **தடுக்கப்பட்டது.** அது இரண்டு வகைப்படும். 1- பெரிய சிர்க்கு. அது காரணிகளின் மீது முழுமையான நம்பிக்கை வைத்தலாகும். அவை சுயமாகவே நன்மைகளை ஏற்படுத்தும், தீமைகளைத் தடுக்கும் என நம்பிக்கைகொள்வதாகும்.[1] 2- சிறிய சிர்க்கு. இன்னொருவர் வாழ்வாதாரம்

---

வெறுப்பும் இன்றி சேர்ந்து நடக்கவேண்டியவர்கள். அவர்கள் நபிமார்கள், ஸித்தீகீன்கள் போன்ற தூய்மையான மு.்.மின்கள். இவர்களுள் ரஸூல் (ஸல்) அவர்கள் முதன்மையானவர்கள். அவ்வாறே அவர்களது மனைவிமார்கள், பிள்ளைகள், தோழர்கள் ஆகியோரும். 2) முற்றாக அவர்களை விட்டும் ஒதுங்கி நடக்கவேண்டியவர்கள். அவர்கள் வேதம் கொடுக்கப்பட்டவர்கள், இணைவைப்பவர்கள், முனாபிக்குகள் போன்ற காபிர்களாவர். 3) ஒரு புறத்தில் சேர்ந்தும் மறு புறத்தில் தவிர்ந்தும் நடக்கப்படவேண்டியவர்கள். அவர்கள் மு.்.மின்களில் பாவிகள். அவர்களிடம் ஈமான் இருப்பதனால் அவர்களைச் சேர்ந்து நடத்தல், அவர்கள் பாவம் செய்கின்ற காரணத்தால் அவர்களை வெறுத்து நடத்தல். **காபிர்களுடன் நேசம் கொள்வது இரண்டு வகைப்படும்:** 1- மதமாற்றத்தை ஏற்படுத்தக் கூடியது. அவர்களுடைய மார்க்கத்துக்காக அவர்களுக்கு உதவுவது, 2- ஹராமானது ஆனால் மார்க்கத்தை விட்டும் வெளியேற்றாது,அவர்குளுடைய உலக விடயங்களில் அவர்களுக்கு உதவி செய்தல் இங்கு ஒரு விடயத்தைத் தெளிவாக விளங்க வேண்டியுள்ளது. காபிர்களுடன் நல்ல முறையில் பழகுவதற்கும், அவர்களை வெறுத்து நடப்பதற்குமிடையில் வித்தியாசம் உண்டு. உள்ளத்தில் அவர்கள் மீது அன்புகொள்ளாமல், அவர்களைப் பயந்ததற்காக அல்லாமல், அவர்களுடன் நல்ல முறையில் பழகுவது, அவர்களில் பலயீனமானவர்களுக்கு இறக்கப்படுவது, அவர்களுடன் மென்மையான வார்த்தைகளை உபயோகிப்பது ஒரு அம்சம். இது பற்றி அல்லாஹ் கூறுகிறான்: *"மார்க்க விடயங்களில் உங்களுடன் யுத்தம் செய்யாமலும், உங்கள் ஊரை விட்டும் உங்களை வெளியேற்றாமலும் இருப்பவர்களுக்கு நீங்கள் நன்மை செய்வதையும் அவர்களுடன் நீதமாக நடந்துகொள்வதையும் அல்லாஹ் உங்களுக்குத் தடுக்கவில்லை.* அவர்களை வெறுத்து நடப்பதென்பது வேறொரு அம்சமாகும். இதைப் பற்றி அல்லாஹ் கூறுகிறான்: *"விசுவாசம் கொண்டவர்களே! என்னுடைய எதிரியையும், உங்களுடைய எதிரியையும் நேசம் காட்டவேண்டிய நண்பர்களாக நீங்கள் எடுத்துக்கொள்ள வேண்டாம்."* நபி (ஸல்) அவர்கள் மதீனா யஹூதிகளுடன் நடந்து கொண்டது போன்று அவர்களுடன் அன்புகொள்ளாமல் வெறுத்திருப்பதுடன் கொடுக்கல் வாங்கல்களில் அவர்களுடன் நேர்மையாக நடக்கமுடியும்.

[1] நாம் காரணிகளைச் செய்வது தவக்குலுக்கு முரணாகுமா? அதில் பல விதங்கள் இருக்கின்றன. 1) இல்லாதிருக்கும் ஒரு பயனைப் பெறுதல். இது மூன்றுவகைப்படும் . அ) உறுதயான காரணி (உ-

அளிப்பதற்குக் காரணமாக இருப்பவர் என்ற வகையில் றிஸ்குடைய விடயத்தில் அவர் மீது நம்பிக்கை கொள்ளல். 3) அனுமதிக்கப்பட்டது. ஒருவன் மற்றொருவனை அவனால் முடிந்த ஒன்றுக்குச் சாட்டிவிட்டு அவன் மீது நம்பிக்கை கொள்வதாகும். நாம் விற்பதற்கும் வாங்குவதற்கும் ஒருவரை நியமிப்பது இவ்வகையைச் சார்ந்ததாகும். இதில் அல்லாஹ்வின் மீதும் பின்பு உன் மீதும் தாவக்குல் வைத்துள்ளேன. ஏனக் கூறுவது கூடாது. மாறாக உனடனை நியமித்துள்ளேன் எனச் சொல்வார்.

✷ **நன்றி:** ஓர் அடியான் உள்ளத்தில் அல்லாஹ்வை ஈமான் கொள்வதன் மூலமாகவும் நாவால் அவனைப் புகழ்வதன் மூலமாகவும் உறுப்புக்களால் அவனை வணங்குவதன் மூலமாகவும் அவனால் வழங்கப்பட்ட அருள்களின் பிரதிபலிப்புக்கள் வெளியாகுவதே நன்றியாகும். நன்றி என்பது அவனிடம் வேண்டப்படுகின்ற வணக்கமாக இருப்பதுடன் அவனுக்கு வேறு விடயங்கள் கிடைப்பதற்கு உதவியாகவும் இருக்கின்றது. அது உள்ளத்திலும் நாவிலும் உறுப்புக்களிலும் இருக்கின்றது. அல்லாஹ்வின் அருள்களை அவனது வழிப்பாட்டில் பயன்படுத்தப்படுவதே நன்றியாகும்.

✷ **பொறுமை :** சோதனைகளின் துயரங்களை அல்லாஹ்விடம் மாத்திரம் முறையிட்டு வேறு யாரிடமும் முறையிடாமல் இருப்பதே பொருமையாகும். அல்லாஹ் கூறுகின்றான் : *பொறுமையாளர்களுக்கு அவர்களுடைய எண்ணிக்கையின்றி நிரப்பமாகவே வழங்கப்படும்.* மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ***யார் சிரமத்துடன் பொறுமையை எடுத்துக் கொள்கின்றாரோ அல்லாஹ் அவனைப் பொறுமையாளனாக ஆக்கிவிடுவான். எவருக்கும் பொறுமையை விட சிறந்ததும் விசாலமானதுமான ஒரு அருள் வழங்கப்படவில்லை.*** (புகாரி, முஸ்லிம்) உமர் (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள்: **எனக்கு ஏற்பட்ட ஒவ்வொரு சோதனையிலும் எனக்கு நான்கு அருள்கள்**

---

ம்) பிள்ளைகளைப் பெற்றுக் கொள்வதற்காகத் திருமணம் முடித்தல். இக்காரணியை விடுவது பைத்தியமாகும். இது அறவே தவக்குலாகாது. ஆ) உறுதியான காரணிகள் அல்ல, ஆனால் பெரும்பாலும் அவை இன்றி அவ்விடயம் நடைபெறுவதில்லை. (உ-ம்) உணவு போன்றவற்றைத் தயார் செய்து எடுத்துக் கொள்ளாமல் பாலை வனத்தில் பயணம் செய்பவன். இவனது செயலும் தவக்குலாகமாட்டாது. பயணத்தில் உணவு போன்றவற்றை எடுத்துக் கொள்ளும்படி ஏவப்பட்டுள்ளது. நபி (ஸல்) அவர்களும் தேவையான உணவுகளையும் ஒரு வழிகாட்டியையும் எடுத்துக் கொண்டார்கள். இ) உறுதியின்றி ஒரு விடயத்தை அடைந்து கொள்வதற்கான காரணிகளாகச் சந்தேகிக்கப்படுபவை. (உ-ம்) வியாபாரங்கள் போன்றவற்றில் சில நுணுக்கமான திட்டமிடல்கள். இவற்றைச் செய்வதும் தவக்குலுக்கு முரணாகமாட்டாது. சம்பாத்தியத்தை விடுவது எவ்விதத்திலும் தவக்குலாக மாட்டாது. உமர் (ரழி) அவர்கள் கூறினார்கள் : பூமியில் வித்துக்களை விதைத்து விட்டு அல்லாஹ்வின் மீது தவக்குல் வைப்பவனே உண்மையில் தவக்குல் வைப்பவன். 2) இருக்கும் ஒன்றைப் பாதுகாத்தல். ஹலாலான உணவைப் பெற்றுக் கொள்ளும் ஒருவன் எதிர்காலத் தேவைக்காக அதைச் சேமித்து வைப்பது தவக்குலுக்கு முரணாகாது. குறிப்பாக குடும்பஸ்தர்கள் இவ்வாறு செய்யலாம். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் பனூ நளீர் குலத்தவர்களிடமிருந்து கிடைத்த ஈத்தமரங்களை விற்று அதன் மூலம் தனது குடும்பத்துக்கான ஒரு வருட உணவை சேமித்து வைத்தார்கள். 3) ஏற்பட்டிராத ஒரு கெடுதியைத் தடுக்க முயற்சித்தல்: கெடுதிகள் வராமலிருப்பதற்கான காரணிகளைச் செய்வது தவக்குலுக்கு முரணாகாது. (உ-ம்) கவச ஆடைகளை அணிவது, ஒட்டகம் போன்றவற்றைக் கட்டி வைத்தல். இவற்றைச் செய்து விட்டு காரணிகளின் மீது முழு நம்பிக்கை வைக்காமல் காரணகர்த்தாவின் மீது நம்பிக்கை வைத்துவிட்டு அல்லாஹ்வின் தீர்மானங்களைப் பொருந்திக் கொள்வான். 4) ஏற்பட்டிருக்கும் ஒரு கெடுதியைத் தடுத்தல் : இது மூன்று வகைப்படும். அ) காரணி உறுதியானது. (உ-ம்) தாகத்துக்கு நீர் அருந்தல். இதைச் செய்யாமல் விடுவது தவக்குலாகாது. ஆ) காரணி பெரும்பான்மையான எதிர்பார்ப்புள்ளது. (உ-ம்) நோய்களுக்காக இரத்தம் குத்தி எடுத்தல். இவற்றைச் செய்வதும் தவக்குலுக்கு முரணாகாது. ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் நோய்களுக்கு மருந்து செய்யும்படி ஏவியுள்ளார்கள். இ) சந்தேகிக்கப்படும் காரணிகள் . (உ-ம்) ஆரோக்கியமாக இருக்கும் போது நெருப்பினால் ஒத்தனம் போடுதல் இதைச் செய்வது தவக்குலுக்கு முற்றாக முரணாகும்.

இருந்தன. 1. அச்சோதனை எனது மார்க்கத்தில் ஏற்படவில்லை 2. அது பெரியதாக அமையவில்லை 3. அதைப் பொருந்திக் கொள்ளும் பாக்கியத்தை அருளப் பெற்றேன். 4. அதற்குரிய கூலியை எதிர்பார்க்கின்றேன்.

பொறுமை பல படித்தரங்களைக் கொண்டதாகும். 1. கீழ்நிலை : சோதனையை வெறுப்பதுடன் யாரிடமும் அதைமுறையிடாமல் இருப்பது. 2.நடுநிலை :அதைப் பொருந்திக் கொள்வதுடன் முறையிடுவதை விட்டுவிடுவது. 3. உயர் நிலை : அச்சோதனைக்காக அல்லாஹ்வைப் புகழ்வது. ஒருவருக்கு அநீதி இழைக்கப்பட்ட சந்தர்ப்பத்தில் அநீதி இழைத்தவனக்கு விரோதமாக துஆக் கேட்டால் பழியைத் தீர்த்து தனக்குரிய உரிமையை அவன் எடுத்துக் கொண்டான். அவன் பொறுமை செய்யவில்லை.

பொறுமை இரு வகைப்படும். 1. உடம்பு சார்ந்தது. இங்கு குறிப்பிடப்படுவது இதுவல்ல. 2. இயற்கையான ஆசைகளுக்கும் மனோ இச்சைகளுக்கும் விரேதமாக செய்யப்படும் மனம் சார்ந்த பொறுமை.[1]

ஓர் அடியான் உலகில் பெற்றுக் கொள்ளக்கூடியவை இரு வகைப்படும்.

அ) அவனுக்கு விருப்பத்துக்குரியவை, அவற்றில் அல்லாஹ்வின் கடமைகளை நிறைவேற்றி அவற்றில் எதையும் பாவத்தில் பயன்படுத்தாமல் அவனுக்கு நன்றி செலுத்துவது கடமையாகும்.

ஆ) மனோ இச்சை விரும்பாதவை. இது மூன்று வகைப்படும். 1. அல்லாஹ்வின் வழிப்பாட்டிற்காகப் பொறுமை செய்தல். இதில் கடமையானவற்றைச் செய்வதற்காகப் பொறுமை செய்வது கட்டயாமானதாக இருப்பதுடன் ஸுன்னத்தானவற்றைச் செய்வதற்கு பொறுமை செய்வது ஸுன்னத்தாகும். 2.பாவத்தை விடுவதில் பொறுமை செய்தல் : இதில் ஹராமாக்கப்பட்டவற்றைச் செய்வதற்குப் பொறுமை செய்வது கடமையாக இருப்பதுடன் மக்ரூஹானவற்றை விடுவதற்குப் பொறுமை செய்வது ஸுன்னத்தாகும். 3.அல்லாஹவின் தீர்மானத்தின் படி நடக்கக்கூடியவற்றிற்காக பொறுமை செய்தல். இதில் நாம் யாரிடமும் முறையிடாமல் நவைப் பேணியும் உள்ளத்தால் ஆட்சேபிக்காமலும் வெறுப்படையாமலும் ஆடைகளைக் கிழித்தல், கண்ணத்தில் அடித்தல், ஒப்பாரி வைத்தல் போன்ற செயல்களை உறுப்புக்களால் செய்யாமலும் பொறுமை செய்வது கடமையாகும். அல்லாஹ்வின் அப்படிப்பட்ட தீர்மானங்களை உள்ளத்தால் பொருந்திக் கொள்வது ஸுன்னத்தாகும்.

நன்றியுள்ள செல்வந்தர் சிறந்தவரா? அல்லது பொறுமை செய்யும் ஏழை சிறந்தவரா?: செல்வந்தன் தனது செல்வங்களை வழிப்பாட்டில் செலவழித்தால் அல்லது அதற்காகச் சேமித்து வைத்தால் பொறுமை செய்யும் ஏழையை விட அவரே சிறந்தவர். அவர் வணக்கங்கள் அல்லாத ஆகுமான விடயங்களில் செல்வத்தைச் செலவு செய்வாராயின் பொறுமை செய்யும் ஏழையே சிறந்தவர். நுபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: உணவருந்தி நன்றி செலுத்துபவர் நோன்பு பிடித்து பொறுமை செய்பவரின் அந்தஸ்தில் இருக்கின்றார். – அஹ்மத் -

✸ **பொருந்திக் கொள்ளல்** : இது ஒரு விடயத்தைக் கொண்டு மனநிறைவடைந்து அதைக் கொண்டு போதுமாக்கிக் கொள்வதாகும். ஒரு விடயம் நடந்து முடிந்து பின்பே இது ஏற்பட வேண்டும். அல்லாஹ்வின்

---

[1] இவ்வகைப் பொறுமை வயிறு, அபம் என்பனவற்றின் ஆசையைக் கட்டுப்படுத்துவதாக இருப்பின் அது பத்தினித்தனம் எனப்படும். அது யுத்தத்தில் இருந்தால் அதற்கு வீரம் எனப்படும். கோபத்தைக் கட்டுப்படுத்துவதில் காணப்பட்டால் அதற்கு சாந்தம் எனப்படும். ஒரு விடயத்தை மறைப்பதாக இருந்தால் இரகசியத்தை மறைத்தல் எனப்படும். வாழ்க்கையில் அத்தியாவசியமற்றதை விடுவதாயின் துறவறம் எனப்படும். வாழ்க்கையில் சிறிதளவின் மீது பொறுமை செய்வதாயின் அதற்கு மனநிறைவு எனப்படும்.

தீர்மானங்களைப் பொருந்திக் கொள்வது அல்லாஹ்விற்கு நெருக்கமான அடியார்களின் நிலையாக இருப்பதுடன் அல்லாஹ்வின் நேசம், அல்லாஹ்வின் மீது தவக்குல் வைத்தல்,என்பவற்றின் பிரதிபலனாகும். நாம் விரும்பாத விடயம் ஒன்று சிகழும் போது அதை நீக்கிவிடும் படி அல்லாஹ்விடம் இறைஞ்சுவது இதற்கு முரணாகாது.

✷ **உள்ளச்சம்** : இது அல்லாஹ்வை கண்ணியப்படுத்தி, நமது உள்ளம் உடைந்து பணிவடைவதாகும். ஹுதைபா (ரழி) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்: நயவஞ்சகமான உள்ளச்சத்தை விட்டும் உங்களை நான் எச்சரிக்கின்றேன். அப்போது அவர்களிடம் நயவஞ்சகமான உள்ளச்சம் எனப்படுவது யாது என வினவப்பட்டது. அதற்கவர்கள் உடம்பு அச்சப்பட்டு உள்ளம் அச்சப்படாமல் இருப்பதாகும் என்றார்கள். மேலும் அவர்கள் கூறினார்கள்: நீங்கள் உங்கள் மார்க்கத்தில் முதலாவது இழப்பது உள்ளச்சத்தையாகும். உள்ச்சத்துடன் செய்யப்பட வேண்டும் என மார்க்கத்தில் சொல்லப்பட்ட வணக்கங்களுக்கு அதனுடைய உள்ளச்சத்தின் அளவைக் கொண்டே நன்மை வழங்கப்படும். (உ-ம்) தொழுகை. ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் ஒரு தொழுகையாளிக்கு வழங்கப்படும் கூலியைப் பற்றிக் குறிப்பிடும் போது, "அவனுடைய தொழுகையில் அவனுக்கு அதன் அரைவாசி நன்மையோ அல்லர் காற்பகுதியோ , ஐந்தில் ஒன்றோ பத்தில் ஒன்றோ எழுதப்படமாட்டாது. சில நேரங்களில் உள்ளச்சம் சிறிதும் இல்லாதிருப்பதனால் ஒன்றுமே எழுதப்படமாட்டாது.

✷ **ஆதரவு வைத்தல்:** அல்லாஹ்வின் விசாலமான அருளை நம்பிக்கையுடன் எதிர்பார்ப்பதே ஆதரவு வைத்தலாகும். இதன் எதிர்ச் சொல் நிராசையாகும் அல்லாஹ்வின் அருளை ஆதரவு வைத்து அமல் செய்வது அவனைப் பயந்து அமல் செய்வதை விடச் சிறந்தது. ஏனெனில் அது அல்லாஹ் பற்றிய நல்லெண்ணத்தை எமக்கு ஏற்படுத்துகின்றது. அல்லாஹ் கூறுகின்றான் : எனது அடியான் என்னைப் பற்றி எண்ணும் விதத்தில் நான் இருக்கின்றேன். (முஸ்லிம்) இதில் இரு படித்தரங்கள் காணப்படுகின்றன.

**1.உயர் நிலை:** நன்மையைச் செய்து அல்லாஹ்வின் அருளையும் கூலியையும் ஆதவை வைப்பது. ஆயிஷா (ரழி) அவர்கள் கேட்டார்: அல்லாஹ்வின் தூதரே " அவர்கள் செய்யக்கூடியவற்றை அவர்களுடைய உள்ளங்கள் பயந்து நடுங்கிய நிலையில் அவர்கள் செய்வார்கள்" என அல்லாஹ் குறிப்பிடுவது அவனைப் பயந்த நிலையில் விபச்சாரம், களவு, மது அருந்துதல் போன்ற பாவங்களைச் செய்பவர்களைத் தானே எனக் கேட்டார்கள். அதற்கு நபியவர்கள் இல்லை ஸித்தீகின் மகளே! அவர்களிடமிருந்து அல்லாஹ் அங்கீகரிக்க மாட்டானோ எனப்பயந்தவர்களாக தொழுகை, நோன்பு போன்ற நல் அமல்கள் புரிபவர்களைத் தான் அல்லாஹ் இவ்வாறு குறிப்பிடுகின்றான் இவர்களே நன்மையின் பால் விரைகின்றவர்கள் எனப் பகர்ந்தார்கள். (திர்மிதி)

**2. கீழ் நிலை** : அல்லாஹ்வின் மன்னிப்பை எதிர்பார்த்து பாவங்கள் செய்தல். பாவமன்னிப்புக் கோராமல் தொடர்ந்து பாவம் செய்து கொண்டு அல்லாஹ்வின் மன்னிப்பை எதிர்பார்ப்பவன் வெறும் நப்பாசையில் இருக்கின்றான். இவ்வாறு இருப்பது ஆதரவு வைத்தலாக மாட்டாது. முதலாம் நிலையில் உள்ளவர்கள் புகழுக்குரியவர்கள். இரண்டாம் நிலையில் உள்ளவர்கள் இகழப்படுவார்கள். ஓர் உண்மை இறை விசுவாசி நன்மை செய்துவிட்டுப் பயந்து கொண்டிருப்பான். ஒரு நய வஞ்சகன் பாவம் செய்து விட்டு பயமற்றிருப்பான்.

✷ **பயம்** : விரும்பத்தகாத ஒரு விடயம் நடைபெற்றுவிடுமோ என எதிர்பார்த்து உள்ளம் கவலைப்படுவதே பயமாகும். இதன் எதிர்மறை தைரியம், நிம்மதி என்பனவாகும். பயப்படுவது அல்லாஹ்வை ஆதரவு

வைப்பதற்கு முரணானதாகக் கருதப்படமாட்டாது. இது உள்ளத்தில் பயத்தை ஏற்படுத்தி அமல்களின் பால் தூண்டக்கூடியது. ஆதரவு ஆசையை ஏற்படுத்தி அமல்களின் பால் தூண்டக்கூடியது. எனவே ஆதரவு, பயம்,அன்பு ஆகிய அனைத்தையும் ஒன்று சேர்த்துக் கொள்வது அவசியமாகும். இப்னுல் கய்யிம் (ரஹ்) அவர்கள் கூறினார்கள் : அல்லாஹ்வின் பால் நடக்கும் ஓா இதயம் ஒரு பறவையைப் போன்றது. அன்பு அதன் தலையாகும். பயமும் ஆதரவும் அதன் இரு இறக்கைகளாகும். உள்ளத்தில் பயம் குடிகொள்ளுமானால் இச்சைகளின் இடங்களை அது கருக்கி உலகத்தை அது விரட்டிவிடும். குட்டாமாக இருக்க வேண்டிய பயம் கடமைகளை நிறைவேற்றுவதற்கும் தடுக்கப்பட்டவற்றை விடுவதற்கும் எம்மைத் தூண்டக்கூடியதாகும். ஸுன்னத்தான அமல்களை செய்யவும் மக்ரூஹ்களை விடவும் தூண்டும் பயம் ஸுன்னத்தானதாகும். அது 3 வகை. 1) நாயன் என்ற வகையில் பயப்படுவது. இவ்வகைப் பயம் அல்லாஹ்வுக்கு மாத்திரம் உள்ளதாகும். அவன் அன்றி வேறு யாரையும் இவ்வாறு பயந்தால் அது பெரிய இணையாகும். இது விக்கிரகங்கள் ஏதும் தீங்கு செய்யும் என்றோ அல்லது கெடுதிகளைச் செய்யும் என்றோ பயப்படுவதைப் போன்றாகும். 2)தடுக்கப்பட்ட பயம். இது மனிதர்களைப் பயந்து ஒரு கடமையை விடுவதோ அல்லது தடுக்கப்பட்ட ஒன்றைச் செய்வதாகும். 3)அனுமதிக்கப்பட்டது. தீங்கு செய்யும் பிராணி போன்றவற்றைப் பயப்படுதல்.

**துறவறம்** : ஒரு பொருளில் உள்ள ஆசையை விட்டு அதை விடச் சிறந்த ஒன்றின் பால் எமது ஆசை திரும்புவதாகும். ஊலக விடயங்களில் ஆசையற்றிருப்பது எமது உள்ளத்துக்கும் உடம்புக்கும் நிம்மதியைத் தருகின்றது. அதில் நாம் ஆசை கொள்வது துக்கத்தையும் கவலையயும் அதிகரிக்கின்றது. மேலும் உலக ஆசை எல்லாப் பாவத்திற்கும் அடிப்படையாகும். அதை நாம் வெறுப்பது வழிப்பாடுகளுக்குக் காரணமாக அமையும். துறவறம் என்பது உலக ஆசையை நீர் உமது உள்ளத்திலிருந்து வெளியேற்றுவதாகும். உள்ளத்தில் ஆசை நிறைந்துள்ள நிலையில் உமது கையிலிருந்து பொருட்களை வெளியேற்றுவது துறவறமாகமாட்டாது. அது அறிவீனர்களின் துறவறமாகும். ஒரு வறியவனுக்கு செல்வத்துடன் ஐந்து நிலைகள் காணப்படுகின்றன. 1. செல்வத்தை வெறுத்தும் அதன் கெடுதியைத் தவிர்ந்து கொள்ளுமுகமாகவும் அதை விட்டும் தூரமாகுதல். இந்நிலையுடையவன் துறவி என அழைக்கப்படுவான். 2. செல்வம் கிடைத்ததைப் பற்றி மகிழ்ச்சியடையமாட்டான். அத்துடன் பாதிப்பு ஏற்படக்கூடியளவு வெறுத்து ஒதுக்கவும் மாட்டான். இவன் பொருந்திக் கொள்பவன் என அழைக்கப்படுவான். 3. செல்வத்தில் விருப்பம் இருப்பதனால் அது கிடைப்பதை விரும்புவான். ஆனால் அதைத் தேடிப் பெற்றுக்கொள்ளுமளவு விருப்பமிருக்காது. மாற்றமாக தானாக வந்து சேர்ந்தால் அதை எடுத்து சந்தோசமடைவான். அதைக் கஷ்டப்பட்டுத்தான் பெற வேண்டுமென்றிருந்தால் அதற்கு முயற்சிக்கமாட்டான். இவன் கிடைப்பதைக் கொண்டு மன நிறைவடைபவன் எனப்படுவான். 4. தனது இயலாமையின் காரணமாக அதைத் தேடுவதை விட்டுவிடுபவன். ஆனால் அதில் விருப்பமுண்டு. கஷ்டப்பட்டு உழைத்து அதைப் பெற்றுக் கொள்ள முடிந்தால் அவ்வாறு பெற்றுக் கொள்வான். இவன் பேராசை உள்ளவன் என அழைக்கப்படுவான். 5. நிர்ப்பந்தத்துக்காகத் தேடுபவன். (உ-ம்) உணவு, ஆடை என்பனவற்றை இழந்து பசியுடனும் நிர்வாணமாகவும் இருப்பவன். இவன் நிர்ப்பந்திக்கப்பட்டவன் எனப்படுவான்.

# அமைதியான ஓர் கலந்துரையாடல்

அப்துள்ளாஹ் என்ற ஒருவர் அப்துன் நபி என்ற ஒருவரைச் சந்தித்தார். அவர் நபியின் அடிமை எனத் தனக்குப் பெயரிட்டிருப்பதைக் கண்டித்தார். அல்லாஹ் அன்றி வேறொருவருக்கு எப்படி அடிமையாக முடியும் எனக் கேட்டுவிட்டு அவரிடம் "நீர் அல்லாஹ் அல்லாத வேறு எதையும் வணங்குகின்றீரா?" எனக் கேட்டார்.

**அப்துன் நபி:** இல்லை. நான் முஸ்லிம். அல்லாஹ் அல்லாத எதையும் நான் வணங்குவதில்லை.

**அப்துள்ளாஹ்:** அவ்வாறாயின் ஏன் கிறிஸ்தவர்கள் அப்துல் மஸீஹ் என்று பெயர்வைப்பது போன்று இவ்வாறான பெயரைக் கொண்டிருக்கின்றாய்? கிறிஸ்தவர்கள் அவ்வாறு பெயர் வைப்பதில் ஆச்சரியம் இல்லை. ஏனென்றால் அவர்கள் ஈஸா (அலை) அவர்களை வணங்குகின்றனர். உனது பெயரைக் கேட்டதும் நீர் நபியை வணங்குபவர் என உடனடியாகக் கருதப்படும். இது முஸ்லிமின் கொள்கையல்ல. அவனது கொள்கை நபி என்பவர் அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் என்பதே.

**அப்துன் நபி:** முஹம்மத் (ஸல்) அவர்கள் மனிதர்களில் மிகச் சிறந்தவர். ரஸூல்மார்களின் தலைவர். அவர்களைக் கொண்டு பரக்கத்துப் பெறவும், அவர்களது பொருட்டால் அல்லாஹ்வின் பக்கம் நெருங்கவும், அவர்களது சிபாரிசைப் பெறவும் நாம் இவ்வாறு பெயர் வைக்கிறோம். நீர் ஆச்சரியப்படாதே. எனது சகோதரன் அப்துல் ஹுஸைன். அதற்கு முன் எனது தகப்பன் அப்துர் ரஸூல். இவ்வாறு பெயர் சூட்டுவது ஆதிகாலம் தொட்டு மக்களிடம் பரவலாக உள்ளது. எமது மூதாதையினரும் இவ்வாறே செய்தனர். பிரச்சினையைப் பெரிதுபடுத்தாதே. மார்க்கம் இலகுவானது.

**அப்துள்ளாஹ்:** இது முந்தியதை விட மிக மோசமான ஒரு தவறு. அல்லாஹ் அல்லாதவர்களிடம் அவர்களால் முடியாததைக் கேட்பது கூடாது. அவர் அல்லாஹ்வின் தூதராக இருக்கலாம், அல்லது ஹுஸைன் (ரலி) அவர்கள் போன்ற நல்லடியார்களாக இருக்கலாம். இது எமக்கு ஏவப்பட்டுள்ள ஏகத்துவத்துக்கும் கலிமா தவ்ஹீதுக்கும் முற்றிலும் முரணாகும்.
இது போன்ற பெயர்களை சூட்டுவதன் விளைவை உனக்குத் தெளிவுபடுத்த சில கேள்விகளை உன் முன் வைக்கிறேன். உண்மையைத் தெளிவுபடுத்தி, நல்லதை ஏவி தீயதைத் தடுப்பதன்றி எனக்கு வேறு எந்த நோக்கமும் இல்லை. அல்லாஹ்விடமே உதவி தேடுகிறேன். அவன் மீதே நம்பிக்கை வைக்கிறேன். தவறுகளை விட்டும் நீங்கவோ, நன்மைகளைச் செய்யவோ அல்லாஹ்வின் நாட்டமின்றி முடியாது. முதலில் குர்ஆன் வசனங்களில் இரண்டை உமக்கு ஞாபகப்படுத்துகிறேன். *"மு'மின்களிடம் அவர்களுக்கிடையே தீர்ப்புக் கூறுவதற்காக அல்லாஹ்வின் பக்கமும், அவனின் தூதர் பக்கமும் அழைக்கப்பட்டால், அவர்கள் சொல்வதெல்லாம் "நாங்கள் செவியுற்றோம், அடிபணிந்தோம்" என்பது தான். உங்களில் ஏதாவது ஒரு விடயத்தில் பிணக்கு ஏற்படுமாயின் மெய்யாகவே நீங்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்புபவர்களாக இருப்பின் அதை அல்லாஹ்விடமும் அவனின் தூதரிடமும் ஒப்படைத்துவிடுங்கள்."*

**அப்துள்ளாஹ்:** நீர் அல்லாஹ்வை ஓர்மைப்படுத்துவதாகவும், வணக்கத்துக்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்று சாட்சி சொல்வதாகவும் கூறினீரே, எனக்கு அதன் பொருளை சிறிதளவு தெளிவுபடுத்த முடியுமா?

**அப்துன் நபி:** ஏகத்துவம் என்பது அல்லாஹ் இருக்கிறான் என்று நம்புவதும் அவனே வானங்களையும் பூமியையும் படைத்தான், உயிர்ப்பிப்பவனும் மரணிக்கச் செய்பவனும் அவனே. அவனே உணவளிப்பவன், அறிவுள்ளவன்,

சக்தியுள்ளவன் என்று நம்பிக்கை கொள்வதாகும்.

**அப்துள்ளாஹ்:** இது மாத்திரம் ஏகத்துவம் என்றிருந்தால் பிர்அவ்னும் அவனது சமூகமும், அபூஜஹ்லும் ஏகத்துவ வாதிகளாக இருந்திருப்பர். பெரும்பாலான இணைவைப்பவர்களைப் போன்று இவர்களும் உங்களது கருத்தை அறிந்திருந்தார்கள். இறைத்தன்மையை வாதிட்ட பிர்அவ்ன் அல்லாஹ் இருக்கிறான், உலகத்தை இயக்குபவன் அவன் என்றெல்லாம் ஏற்றுக்கொண்டே இருந்தான். அல்லாஹ் கூறுகின்றான்: *"அவர்களுடைய உள்ளங்கள் அவற்றை உண்மையென உறுதிகொண்ட போதிலும் அநியாயமாகவும் பெருமை கொண்டவர்களாகவும் அவர்கள் அவற்றை மறுத்தார்கள்."* அவன் மூழ்கும் நேரத்தில் அவனிடம் இந்த நம்பிக்கை இருந்தது என்பது தெளிவாகியது. ஆனால் நபிமார்கள் அனுப்பப்பட்டதும், வேதங்கள் இறக்கப்பட்டதும், குறைசிகளுடன் யுத்தம் செய்யப்பட்டதும் இபாதத் எனும் வணக்க வழிபாடுகளில் அல்லாஹ்வை ஓர்மைப்படுத்துவதற்காகவே. இபாதத் என்பது அல்லாஹ் விரும்பும் மறைவான, வெளிப்படையான அனைத்துச் சொற்களையும் செயல்களையும் அடக்கிக்கொள்ளும். "லா இலாஹ இல்லல்லாஹ்'' என்ற வசனத்தில் உள்ள \இலாஹ்"| என்பதன் அர்த்தம் வணக்கத்திற்குத் தகுதியான இறைவன் என்பதே.

**அப்துள்ளாஹ்:** நூஹ் நபி முதல் ரஸூல்மார்கள் பூமியில் அனுப்பப்பட்டது எதற்காக என்பதை அறிவாயா?

**அப்துன் நபி:** அல்லாஹ்வை மாத்திரம் வணங்கவும், அவனுக்கு இணைவைப்பதை விட்டும் மனிதர்களைப் பாதுகாப்பதற்காகவுமே அனுப்பப்பட்டார்கள்.

**அப்துள்ளாஹ்:** நூஹ் நபியின் சமூகத்தினர் இணைவைக்கக் காரணம் என்ன?

**அப்துன் நபி:** தெரியாது.

**அப்துள்ளாஹ்:** நூஹ் நபியின் சமூகத்தினர் வுத், ஸுவா∴, யகூஸ், யஊக் ஆகிய நல்லடியார்களின் விடயத்தில் அத்துமீறிச் சென்ற போதே நூஹ் நபியை அல்லாஹ் அவர்களிடம் அனுப்பினான்.

**அப்துன் நபி:** வுத், ஸுவா∴ போன்றன காபிர்களான ஆட்சியாளர்களின் பெயர்கள் அல்ல. நல்லடியார்களின் பெயர்கள் என்றா சொல்கின்றீர்?

**அப்துள்ளாஹ்:** ஆம். நல்லடியார்கள். நூஹ் நபியின் சமூகத்தினர் அவர்களை தெய்வங்களாக எடுத்துக்கொண்டனர். அரபிகள் அவர்களைப் பின்பற்றினர். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கும் ஒரு ஹதீஸ் இதனை உறுதிப்படுத்துகின்றது. ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நூஹ் நபியின் காலத்தில் வணங்கப்பட்ட விக்கிரகங்கள் பிற்காலத்தில் அரபிகளிடம் இருந்தன. 'வுத்' என்பது தவ்மதில் ஜன்தலிலிருந்த 'கல்பு' என்ற சமூகத்தினருடையது. 'ஸுவா∴' ஹுஸைல் சமூகத்தினருக்கும், 'யகூஸ்' முறாத் சமூகத்தினருக்கும் இருந்தது. பின்பு அது 'ஸபா' என்ற ஊரில் பனீ கதீப் சமூகத்திற்காக மாறியது. 'யஊக்' ஹமதானுக்கும், 'நஸ்ர்' ஹிம்யருக்குமாக இருந்தது. இவைகள் நூஹ் நபியின் சமூகத்திலிருந்த நல்லடியார்களின் பெயர்களாகும். அவர்கள் மரணித்ததன் பின் "அவர்களது சபைகளில் அவர்களுக்கு சிலைகள் அமைத்து அவர்களது பெயர்களை வைக்கும் படி" ஷைத்தான் அவர்களைத் தூண்டினான். அவர்கள் அப்படிச் செய்தார்கள். ஆனால் அவர்கள் அவற்றை வணங்கவில்லை. அவர்கள் மரணித்து, அறிவும் மாற்றமடைந்ததும் அவைகள் வணங்கப்பட்டன.

**அப்துன் நபி:** இது ஆச்சரியமான செய்தியே.

**அப்துள்ளாஹ்:** அதை விட ஆச்சரியமான ஒரு செய்தியைச் சொல்லவா? இறுதித் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களை அல்லாஹ், பாவமன்னிப்பு,

தவாபு, ஸஃ, ஹஜ், ஸதகா போன்ற நல் அமல்களைச் செய்துகொண்டிருந்த ஒரு கூட்டத்திற்கு அனுப்பினான். ஆனாலும் அவர்கள் அவனது படைப்புக்களில் சிலவற்றை (மலக்குகள், ஈஸா நபி போன்ற நல்லடியார்களை) அவர்களுக்கும், அவனுக்கும் இடையில் தரகர்களாக எடுத்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள்: "நாங்கள் இவர்கள் மூலம் அல்லாஹ்விடம் நெருங்க முனைகிறோம், அவர்கள் அல்லாஹ்விடம் எங்களுக்காக சிபாரிசு செய்வதை விரும்புகிறோம்" என்று சொல்வார்கள். அல்லாஹ் நபி முஹம்மத் (ஸல்) அவர்களை அவர்களிடம் (அவர்களது தந்தை) இப்ராஹீம் நபி அவர்களின் மார்க்கத்தைப் புதுப்பிக்க அனுப்பினான். அவர்கள், இது அல்லாஹ்வுக்கு மாத்திரம் சொந்தமானது, அவனையன்றி வேறு யாருக்கும் இந்த நிலை கிடையாது, அவனே படைத்தவன், அவனுக்கு இணை கிடையாது, உணவளிப்பவன் அவனையன்றி யாரும் கிடையாது, ஏழு வானங்களும் அவற்றில் உள்ளவைகளும் ஏழு பூமிகளும் அவற்றில் உள்ளவைகளும் அவனுக்கு சொந்தமானவை, அவை அனைத்தும் அவனது கட்டுப்பாட்டிலே உள்ளன, அவர்களால் வணங்கப்படும் அந்த விக்கிரகங்கள் கூட அவற்றை அறிந்திருக்கின்றன என அவர்களுக்கு அறிவித்தார்கள்.

**அப்துன் நபி:** இது மிகப் பயங்கரமான ஒரு செய்தியே. இதற்கு ஏதும் ஆதாரங்கள் உண்டா?

**அப்துள்ளாஹ்:** ஆதாரங்கள் நிறைய உண்டு. அல்லாஹ் கூறுகின்றான்: *"உங்களுக்கு வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உணவளிப்பவன் யார்? (உங்கள்) செவிப்புலன் மீதும், பார்வைகளின் மீதும் சக்தியுடையவன் யார்? இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றையும், உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றையும் வெளிப்படுத்துபவன் யார்? காரியங்களைத் திட்டமிட்டுச் செய்பவன் யார்? என்று (நபியே!) நீர் கேளும். உடனே அவர்கள் அல்லாஹ் என்று பதிலளிப்பர். அவ்வாறாயின் நீங்கள் பயபக்தியுடன் நடக்கக் கூடாதா?" "நீங்கள் அறிந்திருந்தால் இந்தப் பூமியும், அதிலுள்ளவர்களும் யாருக்குச் சொந்தம்?' என்று நீர் கேட்பீராக. "அல்லாஹ்வுக்கே என்று" அவர்கள் கூறுவார்கள். "அவ்வாறாயின் நீங்கள் நல்லுணர்வு பெறமாட்டீர்களா?" எனக் கேட்பீராக. "ஏழு வானங்களின் இறைவனும், மகத்தான அர்ஷின் இறைவனும் யார்?" என்று கேட்பீராக. "அல்லாஹ்வே" என்று அவர்கள் சொல்வார்கள். "அவ்வாறாயின் நீங்கள் அவனுக்கு அஞ்சி நடக்கமாட்டீர்களா?' என்று கேட்பீராக. "எல்லாப் பொருளின் ஆட்சியும் யார் கையில் இருக்கிறது? எல்லாவற்றையும் பாதுகாப்பவனாக, ஆனால் அவனுக்கு எதிராக எவரும் பாதுகாக்கப்பட முடியாதே அவன் யார்? நீங்கள் அறிவீர்களாயின் (கூறுங்கள்)" என்று கேட்பீராக. அதற்கவர்கள் "இது அல்லாஹ்வுக்கே உரியது" என்று கூறுவார்கள். "நீங்கள் ஏன் மதிமயங்குகிறீர்கள்?" என்று கேட்பீராக.*

அக்கால முஷ்ரிக்கள் ஹஜ்ஜில் அவர்களது தல்பியாவின் போது "லப்பைக லாசரீக லக" என்பதன் பின் "இல்லா சரீகன் ஹுவ லக தம்லிகுஹு வமா மலக" (உனக்கு இணை கிடையாது, உனக்கு உரித்தான பங்காளியைத் தவிர) என்பதையும் சேர்த்துக் கொள்வார்கள். உலகில் அதிகாரம் செலுத்துபவன் அல்லாஹ்வே என்று அவர்கள் ஏற்றுக்கொண்டது அவர்களை இஸ்லாத்தில் சேர்த்துவிடவில்லை. மலக்குகள், நபிமார்கள், நல்லடியார்கள் மூலம் அல்லாஹ்வின் பக்கம் நெருங்க நாடியதே அவர்களது உயிர்களையும் சொத்துக்களையும் மதிப்பற்றதாக்கியது. எனவே அனைத்துப் பிரார்த்தனைகளையும் அல்லாஹ்விடம் மாத்திரமே இறைஞ்சவேண்டும். நேர்ச்சை, அறுத்துப் பலியிடல், உதவி தேடல் அனைத்தும் அல்லாஹ்வுக்கு மாத்திரமே நிறைவேற்றப்பட வேண்டிய வணக்கங்களாகும்.



**அப்துன் நபி:** நீங்கள் கருதுவது போன்ற ஏகத்துவம் என்பது அல்லாஹ் இருப்பதையும் அவன் உலகில் அதிகாரம் செலுத்துவதையும் ஏற்றுக்கொள்வது மாத்திரம் அல்ல என்றால் தவ்ஹீத் என்றால் என்ன?

**அப்துள்ளாஹ்:** ரஸுல்மார்கள் அனுப்பப்பட்டதும், முஷ்ரிக்கள் ஏற்றுக்கொள்ள மறுத்ததுமான தவ்ஹீத், வணக்கங்களில் அல்லாஹ்வை ஓர்மைப்படுத்துவதாகும். பிரார்த்தனை, நேர்ச்சை, அறுத்துப் பலியிடல், உதவி தேடல், பாதுகாப்புக் கோரல் போன்ற வணக்க வகைகளில் எதையும் அல்லாஹ் அல்லாதவர்களுக்கு நிறைவேற்றக் கூடாது. இதுவே 'லாஇலாஹ இல்லல்லாஹ்' என்பதன் அர்த்தமாகும். குறைசிய முஷ்ரிக்களிடத்தில் \இலாஹ்| என்பது 'இவ்வாறான வணக்கங்களுக்கு நாடப்படக்கூடியவன்' என்ற கருத்தே இருந்தது. அது மலக்காக, நபியாக, மரமாக, ஜின்னாக இருக்கலாம். 'இலாஹ்' என்பதன் மூலம் படைக்கக்கூடியவன், ஆட்சிசெய்பவன் என்ற கருத்தை அவர்கள் கொண்டிருக்கவில்லை. அவற்றைச் செய்பவன் அல்லாஹ் மாத்திரம் என்று அவர்கள் ஏற்கனவே அறிந்திருந்தனர். நபி (ஸல்) அவர்கள் அவர்களை ஏகத்துவக் கலிமாவை நடைமுறைப்படுத்தும் படியே அழைத்தார்கள் அன்றி அதை மொழியும் படி அல்ல.

**அப்துன் நபி:** குறைசிய முஷ்ரிக்கள் இன்றைய அதிகமான முஸ்லிம்களை விட 'லாஇலாஹ இல்லலாஹ்' என்ற கலிமாவின் கருத்தை விளங்கியிருந்தனர் என்று கூறுகிறீர் போலும்.

**அப்துள்ளாஹ்:** ஆம். மனவேதனை அளிக்கும் உண்மை நிலை அதுவே. அந்த மூடக் காபிர்கள் "ரஸுல் அவர்கள் இந்தக் கலிமாவின் மூலம் வணக்க விடயங்களில் அல்லாஹ்வை ஓர்மைப்படுத்துவதையும், அல்லாஹ்வை அன்றி வணங்கப்படும் அனைத்து வஸ்துக்களை விட்டும் நீங்கியிருக்கவேண்டும் என்பதையுமே நாடினார்கள்" என்பதை அறிந்திருந்தனர். ஏனென்றால் ரஸுல் (ஸல்) அவர்கள் "நீங்கள் லாஇலாஹ இல்லல்லாஹ் என்று கூறுங்கள்" என்று சொன்ன போது அவர்கள் "அனைத்து தெய்வங்களையும் ஒன்றாக ஆக்கிவிட்டாரா? இது ஒரு ஆச்சரியமான விடயமே" எனக் கூறினர். அன்றைய அறியாமையிலிருந்த காபிர்களால் இது விளங்க முடியுமாயிருந்தும் இஸ்லாத்தை வாதிக்கும் இன்றைய மக்களால் இதை விளங்க முடியாமல் இருப்பது ஆச்சரியமே. உள்ளத்தால் கலிமாவின் கருத்தை விளங்காமல் நாவால் மாத்திரம் மொழிவது போதும் என நினைத்துக் கொண்டிருக்கின்றனர். அவர்களில் பகுத்தறிவுள்ளவர்கள் \அல்லாஹ்வை அன்றி படைப்பவன், ரிஸ்களிப்பவன், கருமங்களைத் திட்டமிடுபவன் கிடையாது| என நினைக்கின்றனர். ஆனால் குறைசிக் காபிர்களோ இவர்களை விட கலிமாவின் அர்த்தத்தைப் புரிந்துள்ளனர்.

**அப்துன் நபி:** நான் அல்லாஹ்வுக்கு இணைவைக்கவில்லை. படைப்பது, உணவளிப்பது, நன்மை ஏற்படுத்துவது, தீமை ஏற்படுத்துவது அல்லாஹ் அன்றி வேறு யாரும் இல்லை. அவனுக்கு இணை இல்லை. அலி, ஹுஸைன்(ரலி), அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) மாத்திரமன்றி ரஸுல் (ஸல்) அவர்கள் கூட தங்களுக்கு எந்த நன்மையையோ தீமையையோ ஏற்படுத்த முடியாதவர்கள் என்ற நம்பிக்கை கொண்டுள்ளேன். ஆனாலும் நான் ஒரு பாவி. நல்லாடியார்களுக்கு அல்லாஹ்விடம் விஷேட அந்தஸ்து உண்டு. அதன் மூலம் அவர்கள் அல்லாஹ்விடம் எனக்காக சிபாரிசு செய்யும் படி கேட்கிறேன்.

**அப்துள்ளாஹ்:** ஏற்கனவே இதற்குப் பதிலளித்துவிட்டேன். ரஸுல் (ஸல்) அவர்கள் யாருடன் யுத்தம் செய்தார்களோ அவர்களும் இதை ஏற்றுக் கொண்டே இருந்தனர். அவர்களது விக்கிரகங்கள் உலகில் எதையும் செய்ய முடியாதவை என்பதை அறிந்திருந்தனர். அவர்களும் அவைகளின் சிபாரிசையே தேடினர். இவற்றுக்கெல்லாம் குர்ஆனிலிருந்து பதில் அளித்துவிட்டேன்.

**அப்துன் நபி:** ஆனாலும் இந்த வசனங்கள் விக்கிரகங்களை வணங்குபவர்கள் விடயத்தில் இறங்கியவைகளாகும். நபிமார்களையும் நல்லடியார்களையும் எப்படி விக்கிரகங்களுக்கு நிகராக்க முடியும்?

**அப்துள்ளாஹ்:** நூஹ் நபியின் காலத்தில் இருந்தது போல் இந்த விக்கிரகங்களில் சில நல்லடியார்களின் பெயர்கள் சூட்டப்பட்டவை என்பதை அறிந்தீர்கள். அந்தக் காபிர்கள் அவைகளுக்கு அல்லாஹ்விடம் ஒரு அந்தஸ்து இருப்பதாகக் கருதி அவர்களது சிபாரிசையே நாடினார்கள். அல்லாஹ் கூறுகிறான்: *"அவனையன்றிப் பாதுகாப்பாளர்களை எடுத்துக் கொண்டிருப்பவர்கள் "அவர்கள் எங்களை அல்லாஹ்வின் அருகே சமீபமாகக் கொண்டு செல்வார்கள் என்பதற்காகவேயன்றி நாங்கள் அவர்களை வணங்கவில்லை"* **(எனக் கூறுகின்றனர்)**

"நபிமார்களையும் நல்லடியார்களையும் எப்படி விக்கிரகங்களாக ஆக்கலாம்" எனக் கேட்டீர்களே, நபி (ஸல்) அவர்கள் அவர்களிடம் அனுப்பப்பட்ட அந்தக் காபிர்களில் சிலர் நல்லடியார்களிடம் பிரார்த்தித்துக்கொண்டிருந்தனர். *"(அல்லாஹ்வையன்றி) இவர்கள் யாரைப் பிரார்த்திக்கின்றார்களோ அவர்கள், தங்கள் இரட்சகனின் பால் அவர்களில் யார் மிக்க நெருக்கமானவர்கள் என்று நெருக்கத்தைத் தேடுகின்றனர். அவனது அருளையும் ஆதரவு வைக்கின்றனர். அவனது தண்டனையையும் பயப்படுகின்றனர். நிச்சயமாக உமது இரட்சகனின் தண்டனை எச்சரிக்கப்பட்டதாக இருக்கிறது,"* சிலர் ஈஸா (அலை) அவர்களிடமும் அவர்களது தாயாரிடமும் பிரார்த்தித்துக்கொண்டிருந்தனர். "அல்லாஹ், "மர்யமுடைய மகன் ஈஸாவே! நீரா மனிதர்களுக்கு *"அல்லாஹ்வை விட்டுவிட்டு என்னையும் எனது தாயாரையும் இரண்டு தெய்வங்களாக எடுத்துக்கெள்ளுங்கள்" என்று கூறினீர்கள்?" என்று கூறுவதை ஞாபகப்படுத்திப் பாருங்கள்."* சிலர் மலக்குகளிடம் பிரார்த்தித்துக்கொண்டிருந்தனர். *"அவர்கள் அனைவரையும் அவன் ஒன்று சேர்த்து பின் மலக்குகளிடம் "இவர்களா உங்களை வணங்கிக் கொண்டிருந்தனர்?" என்று கேட்பான்.*

இந்த வசனங்களைக் கவனித்துப் பார். அல்லாஹ், விக்கிரகங்களை நாடியவர்கள், நல்லடியார்களை நபிமார்களை நாடியவர்கள் அனைவரையும் ஒரே தரத்தில் காபிராகவே கணித்துள்ளான். நபி (ஸல்) அவர்கள், அவர்கள் அனைவருடனும் யுத்தம் செய்துள்ளார்கள்.

**அப்துன் நபி:** காபிர்கள் அவைகளிடமிருந்து நன்மை பயக்குவதை எதிர்பார்க்கின்றனர். ஆனால் நான் அல்லாஹ்வே நன்மையும் தீமையும் செய்பவன் என்பதை உறுதிகொள்கிறேன். அவற்றுக்காக அவனையே நாடுகிறேன். நல்லடியார்களுக்கு அவற்றில் எதையும் செய்ய முடியாது. ஆனாலும் அவர்கள் சிபாரிசு செய்ய வேண்டும் என்பதற்காகவே அவர்களை நாடுகிறேன்.

**அப்துள்ளாஹ்:** காபிர்கள் சொன்ன அதே விடயத்தையே நீங்களும் சொல்கிறீர்கள். அல்லாஹ் கூறுகிறான்: *"தங்களுக்கு யாதொரு நன்மையோ, தீமையோ செய்ய இயலாத அல்லாஹ் அல்லாதவற்றை வணங்குகிறார்கள். அவர்கள் "இவை அல்லாஹ்விடம் எங்களுக்கு மன்றாட்டம் செய்பவை" என்றும் கூறுகிறார்கள்.*

**அப்துன் நபி:** நான் அல்லாஹ்வை அன்றி வணங்கவில்லை. அவர்களிடம் பிரார்த்திப்பது, அவர்கள் பக்கம் ஒதுங்குவது ஒரு வணக்கம் அல்ல.

**அப்துள்ளாஹ்:** நான் உன்னிடம் "அல்லாஹ் வணக்கத்தை அவனுக்கு மாத்திரம் தூய்மைப்படுத்தும் படி உன்மீது கட்டாயப்படுத்தவில்லையா?" என்று கேட்கிறேன். அல்லாஹ் கூறுகிறான்: *"அல்லாஹ்வுக்கு வணக்கத்தைத் தூய்மையாக்கியவர்களாக நேரான வழியில் இருந்தவாறு அல்லாஹ்வை வணங்கும் படியே அவர்கள் ஏவப்பட்டுள்ளார்கள்."*

**அப்துன் நபி:** ஆம். என் மீது கடமையாக்கியுள்ளான்.
**அப்துள்ளாஹ்:** அப்படியாயின் அல்லாஹ் உன் மீது கடமையாக்கிய இந்தக் கடமை பற்றி எனக்கு விளக்க முடியுமா?
**அப்துன் நபி:** இந்தக் கேள்வியின் மூலம் நீங்கள் என்ன நாடுகிறீர்கள் என்பது எனக்குப் புரியவில்லை. சற்று விளக்கலாமா?
**அப்துள்ளாஹ்:** நான் தெளிவுபடுத்துவதைக் கேள். அல்லாஹ் கூறுகிறான்: *"உங்கள் இறைவனிடம் பணிவாகவும், அந்தரங்கமாகவும் பிரார்த்தனை புரியுங்கள். நிச்சயமாக அவன் வரம்பு மீறுபவர்களை விரும்ப மாட்டான்."* பிரார்த்தனை என்பது அல்லாஹ்வுக்குச் செய்யும் வணக்கமாக இல்லையா?
**அப்துன் நபி:** ஆம். அது வணக்கத்தின் அடிப்படை. "பிரார்த்தனை என்பது இபாதத்" என ஹதீஸில் வந்துள்ளது. (அபூதாவூத்).
**அப்துள்ளாஹ்:** அது ஒரு வணக்கம் என்பதை நீர் ஏற்றுக்கொண்டதன் பின், உனது ஒரு தேவைக்காக இரவு, பகலாக அவனது றஹ்மத்தை ஆதரவு வைத்தவனாக, அவனது தண்டனையைப் பயந்தவனாக அவனைப் பிரார்த்தித்துவிட்டு, பின்பு அதே விடயத்தில் ஒரு நபியிடமோ மலக்கிடமோ மண்ணறையில் இருக்கும் ஒரு நல்லடியாரிடமோ பிரார்த்தித்தால் நீர் வணக்கத்தில் இணைவைக்கவில்லையா?
**அப்துன் நபி:** ஆம். இணைவைத்தவனாக ஆகிவிடுவேன். அது தெளிவானது.
**அப்துள்ளாஹ்:** இன்னொரு உதாரணத்தைப் பார். "உனது இறைவனுக்காகத் தொழுது, பிராணியை அறுத்துப் பலியிடு" என்று அல்லாஹ் கூறுகிறான். இதற்கு வழிப்பட்டு நீர் பிராணியை அறுத்தால் அது வணக்கமா இல்லையா?
**அப்துன் நபி:** ஆம். வணக்கம்.
**அப்துள்ளாஹ்:** அவ்வாறாயின் ஒரு நபிக்கோ ஒரு ஜின்னுக்கோ அறுத்துப் பலியிட்டால் அது வணக்கத்தில் இணையாகாதா?
**அப்துன் நபி:** ஆம். சந்தேகமின்றி அது இணைவைத்தலே.
**அப்துள்ளாஹ்:** நான் உனக்கு பிரார்த்தனையையும், அறுத்துப் பலியிடலையும் உதாரணமாகச் சொன்னேன். ஏனென்றால், துஆ என்பது சொல்லால் செய்யும் வணக்கங்களில் மிக முக்கியமானது. அறுத்துப் பலியிடுவது உடம்பால் செய்யப்படும் வணக்கங்களில் மிக முக்கியமானது, வணக்கம் என்பது அவ்விரண்டும் மாத்திரம் அல்ல. நேர்ச்சை, சத்தியம் செய்தல், உதவிகோரல், பாதுகாப்புத் தேடல் போன்றனவும் அவற்றுள் அடங்கும். அவர்களது விடயத்தில் குர்ஆன் வசனம் இறங்கிய அந்த முஷ்ரிக்கள் மலக்குகளையும், நல்லடியார்களையும் \லாத்| ஐயும், வேறு வஸ்துக்களையும் வணங்கிக் கொண்டிருந்தனரா?
**அப்துன் நபி:** ஆம். அவ்வாறே நடந்துகொண்டிருந்தனர்.
**அப்துள்ளாஹ்:** பிரார்த்தனை, அறுத்துப் பலியிடல், உதவி கோரல், பாதுகாப்புத் தேடல் போன்றவற்றில் அன்றி அவர்களது வணக்கம் இருந்ததா? அவர்களும் தாம் அல்லாஹ்வின் அடிமை, அவனது கட்டுப்பாட்டில் இருக்கிறோம், அவனே விடயங்களை திட்டமிட்டு வகுக்கின்றான் என்றெல்லாம் நம்பியிருந்தனர். ஆனால் அவைகளுக்கு அல்லாஹ்விடம் இருப்பதாகக் கருதும் அந்தஸ்துக்காக அவைகளிடம் பிரார்த்தித்தார்கள். இவை மிகச் சர்வ சாதரணமானதே.
**அப்துன் நபி:** அப்துள்ளாஹ்வே! நீர் ரஸூல் (ஸல்) அவர்களது சிபாரிசை மறுக்கின்றீரா?
**அப்துள்ளாஹ்:** இல்லை. நான் மறுக்கவில்லை. எனது தாயையும் தகப்பனையும் அவர்களுக்காக அர்ப்பணிக்கிறேன். அவர்கள் சிபாரிசு செய்பவர்கள். அவர்கள் சிபாரிசு அங்கீகரிக்கப்படக்கூடியவர்கள். அவர்களது சிபாரிசை நானும்

எதிர்பார்க்கிறேன். ஆனாலும் அனைத்துச் சிபாரிசின் உரிமையும் அல்லாஹ்வுக்கே. **"அனைத்துச் சிபாரிசுகளும் அல்லாஹ்வுக்குரியது" என்று நீர் சொல்வீராக.** அவன் அனுமதித்ததன் பின்பே யாரும் சிபாரிசு செய்ய முடியும். **"அவனது அனுமதியின்றி யார் அவனிடம் சிபாரிசு செய்ய முடியும்?"** அல்லாஹ் உத்தரவிட்டவர்களுக்காக அன்றி சிபாரிசு செய்ய முடியாது. **"அவன் விரும்பியவர்களுக்காக அன்றி அவர்கள் சிபாரிசு செய்ய மாட்டார்கள்."** அவன் ஏகத்துவத்தை அன்றி பொருந்திக்கொள்ளமாட்டான். **"யாராவது இஸ்லாம் அல்லாததை மார்க்கமாகத் தேடினால் அவனிடமிருந்து அது அங்கீகரிக்கப்பட மாட்டாது."** ஆகிய அல்குர்ஆன் வசனங்கள் மூலம் சிபாரிசு அனைத்தும் அல்லாஹ்வுக்கென்றும், அவன் உத்தரவின்றி சிபாரிசு செய்ய முடியாதென்றும், நபியோ, மற்றவர்களோ அல்லாஹ்வால் அனுமதிக்கப்பட்டவர்களுக்கு மாத்திரம் தான் சிபாரிசு செய்வதென்றும் இருந்தால் அனைத்துச் சிபாரிசின் உரிமை அல்லாஹ்வுக்கே உரியது என்பது தெளிவாகிவிட்டது. நானும் அவர்களது சிபாரிசை வேண்டுகிறேன். யா அல்லாஹ் அவர்களது சிபாரிசை எனக்குத் தவறவிடாதே. அவர்கள் எனக்காக சிபாரிசுசெய்வதை அங்கீகரிப்பாயாக.

**அப்துன் நபி:** எந்த ஒருவரிடமும் அவரிடம் இல்லாத ஒன்றைக் கேட்கக்கூடாது என்பதில் நாம் ஒன்றுபட்டுவிட்டோம். அல்லாஹ் நபியவர்களுக்கு சிபாரிசைக் கொடுத்துள்ளான். எனவே அவர்களிடத்தில் சிபாரிசைக் கேட்கலாம். அது இணைவைத்தலாக மாட்டாது.

**அப்துள்ளாஹ்:** ஆம். அல்லாஹ் சிபாரிசைக் கேட்பதைத் தடுக்கவில்லை என்றால் உனது வாதம் சரியானதே. அல்லாஹ் கூறுகிறான்: **"அல்லாஹ்வுடன் யாரையும் அழைக்காதே"** சிபாரிசைக் கேட்பது ஒரு பிரார்த்தனை. நபிக்கு சிபாரிசைக் கொடுத்தவன் அல்லாஹ். அவன் அல்லாதவர்களிடம் அதைக் கேட்கவேண்டாம் என்று தடுத்தவனும் அவனே. அல்லாஹ் நபியல்லாதவர்களுக்கும் சிபாரிசைக் கொடுத்துள்ளான். மலக்குகள் சிபாரிசு செய்வார்கள். பருவமடைய முன் மரணித்த சிறுவர்கள் சிபாரிசு செய்வார்கள். நல்லடியார்கள் சிபாரிசு செய்வார்கள். அல்லாஹ் அவர்களுக்கு சிபாரிசைக் கொடுத்துள்ளான். எனவே அவர்களிடம் நான் அதைக் கேட்கிறேன் என்று சொல்லப் போகிறீரா? நீர் அவ்வாறு சொன்னால் அல்லாஹ் குர்ஆனில் தடுத்த விடயமான நல்லடியார்களுக்கு வணக்கத்தை நிறைவேற்றுபவராக மாறிவிட்டீர். அப்படி இல்லையென்றிருந்தால் "அல்லாஹ் அவர்களுக்குக் கொடுத்தான். நான் அவர்களிடம் கேட்கிறேன்" என்ற உனது வாதம் பிழையாகிவிட்டது.

**அப்துன் நபி:** நான் அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்கவில்லை. நல்லடியார்கள் பக்கம் ஒதுங்குவது சிர்க்கு (இணை) இல்லையே.

**அப்துள்ளாஹ்:** அல்லாஹ் இணைவைப்பதை விபச்சாரத்தை விட மிகக் கடுமையாகத் தடுத்துள்ளான், அதை அல்லாஹ் மன்னிக்கமாட்டான் என்பதை நீர் ஏற்றுக்கொள்கிறீரா?

**அப்துன் நபி:** ஆம். அதை ஏற்றுக்கொள்கிறேன். அது அல்லாஹ்வின் திருவசனங்களில் தெளிவாகவே உள்ளது.

**அப்துள்ளாஹ்:** அல்லாஹ் தடுத்த இணைவைத்தல் உன்னிடம் இல்லை என்றீர். அந்த இணைவைத்தல் எது என்பதை எனக்குத் தெளிவுபடுத்த முடியுமா?

**அப்துன் நபி:** இணை என்பது விக்கிரகங்களை வணங்குவது, அதன் பால் ஒதுங்குவது, அவற்றிடம் கேட்பது, அவற்றிற்குப் பயப்படுவது என்பனவாகும்.

**அப்துள்ளாஹ்:** விக்கிரகங்களை வணங்குவது என்பதன் அர்த்தம் என்ன? குறைசிக் காபிர்கள் அந்த மரங்களும் அந்தக் கற்களும் படைக்கின்றன, உணவளிக்கின்றன, பிரார்த்திப்பவர்களின் விடயங்களை

ஒழுங்குபடுத்துகின்றன என நம்பியிருந்தனரா? அவர்கள் அவ்வாறு நம்பவில்லை என்பதை நீர் ஏற்கனவே ஏற்றுக்கொண்டீர்.

அப்துன் நபி: நான் அவ்வாறு கருதவில்லை. யாராவது மரத்திடமோ கல்லிடமோ, மண்ணரையின் மீதுள்ள கட்டிடத்திடமோ பிரார்த்தித்தால் அவற்றிற்காக அறுத்தால் அவைகள் அல்லாஹ்வின் பால் நெருக்கமாக்கும், அவற்றின் பரக்கத்தால் அல்லாஹ் ஆபத்துக்களைத் தடுப்பான் என்று கருதினால் அதுவே விக்கிரக வணக்கமாகும்.

அப்துள்ளாஹ்: நீர் உண்மை சொல்லிவிட்டீர். ஆனால் இதுவே நீங்கள் கற்களிடத்திலும் மண்ணறைகளுக்கு மேலுள்ள கட்டிடங்களிலும் செய்யக்கூடிய வேலை. இணைவைப்பதென்பது விக்கிரக வணக்கம் என்றீர். இணைவைப்பது மேற்கூறப்பட்டவைகளை மாத்திம் செய்வதாகும் என்றும், நல்லடியார்கள் மீது நம்பிக்கைவைப்பது, அவர்களிடம் பிரார்த்திப்பது இணைவைப்பதில் அடங்காது என்றும் சொல்கிறீரா?

அப்துன் நபி: ஆம். அவ்வாறே எனது கருத்து.

அப்துள்ளாஹ்: அவ்வாறாயின் நபிமார்கள், நல்லடியார்கள், மலக்குகளின் மீது நம்பிக்கை வைப்பதைத் தடுக்கக்கூடிய, அவ்வாறு நடப்பவர்கள் காபிர் எனக்கூறும் திருக்குர்ஆன் வசனங்கள் எங்கே? அவற்றை உனக்கு நான் ஏற்கனவே எடுத்துக் காட்டினேன் அல்லவா?

அப்துன் நபி: மலக்குகளிடமும், நபிமார்களிடமும் பிரார்த்தித்தவர்கள் அதனால் காபிராகவில்லை. அவர்கள் "மலக்குகள் அல்லாஹ்வின் பெண்மக்கள், ஈஸா (அலை) அல்லாஹ்வின் மகன்" என்று சொன்னதாலே காபிரானார்கள். நாங்கள் அப்துல் காதிர் அல்லாஹ்வின் மகன் என்றோ, ஸைனப் அல்லாஹ்வின் பெண்மகள் என்றோ சொல்லவில்லை.

அப்துள்ளாஹ்: அல்லாஹ்வுக்குப் பிள்ளைகளை ஏற்படுத்துவது அது தனியான ஒரு சிர்க்காகும். அல்லாஹ் கூறுகின்றான்: "(நபியே! நீர் கூறுவீராக! அல்லாஹ் அவன் ஒருவன், அவன் தேவையற்றவன். அவன் (யாரையும்) பெறவுமில்லை. யாராலும் பெறப்படவும் இல்லை." (அஹத் என்றால் நிகரில்லாதவன் என்ற பொருளாகும். ஸமத் என்றால் தேவைகளுக்காக நாடப்படக்கூடியவன் என்ற கருத்தாகும்) இதை யாராவது மறுத்தால் (ஸூராவின் பிந்திய பகுதியை மறுக்காவிட்டாலும்) காபிராகிவிடுவான். அல்லாஹ் கூறுகிறான்: "அல்லாஹ் தனக்கென ஒரு மகனை எடுத்துக் கொள்ளவில்லை. அவனுடன் (வேறு) நாயனும் இல்லை. அவ்வாறிருந்தால் ஒவ்வொரு நாயனும் தான் படைத்தவற்றை தன்னோடு கொண்டு போய் சிலர் சிலரை மிகைத்துவிடுவர்." இருவிதமான குப்ருக்குமிடையில் அவன் வித்தியாசப்படுத்தினான். லாத்திடம் பிரார்த்தித்தவர்கள் அதை அல்லாஹ்வுடைய மகன் என்று சொல்லவில்லை. ஜின்களை வணங்கியதன் மூலம் காபிரானவர்களும் அவ்வாறு சொல்லவில்லை. அவ்வாறே நான்கு மத்ஹபுகளைச் சேர்ந்தவர்களும் முர்தத்தைப் பற்றிப் பேசும் பாடத்தில் ஒரு முஸ்லிம் அல்லாஹ்வுக்கு மகன் உண்டு என்றால் அவன் காபிராகிவிடுவான், அல்லாஹ்வுக்கு இணை வைத்தவனும் காபிராகிவிடுவான் என்றும் வேறுபடுத்தியே கூறுகின்றனர்.

அப்துன் நபி: ஆனாலும் அல்லாஹ் சொல்கின்றான்: "அறிந்துகொள்ளுங்கள்! நிச்சயமாக அல்லாஹ்வின் நேசர்களுக்குப் பயம் கிடையாது. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். அவர்கள் விசுவாசம் கொண்டு இறையச்சம் உள்ளவர்களாக இருந்தார்கள்."

அப்துள்ளாஹ்: நாம் அதை ஏற்றுக்கொள்கிறோம். அது உண்மை என்கிறோம். ஆனாலும் அவர்கள் வணங்கப்படமாட்டார்கள். அந்த இறை நேசர்களான முத்தகீன்களை அல்லாஹ்வுடன் கூட்டாக்குவதையும், அவர்களை

அல்லாஹ்வுடன் சேர்த்து வணங்குவதையுமே நாம் கண்டிக்கிறோம். அவர்களை அன்பு வைப்பது, அவர்களைப் பின்பற்றுவது, அவர்களுக்கு (ஷரீஆவுக்கு உட்பட்ட விதத்தில்) கராமத்துக்கள் நிகழலாம் என ஏற்றுக்கொள்வது உன் மீது கடமையாகும். பித்அத்காரர்களே அவர்களது கராமத்துக்களை முழுமையாகவே நிராகரிப்பர். அல்லாஹ்வின் மார்க்கம் இரண்டுக்கும் இடையில் நடுநிலையானது. இரண்டு வழிகேட்டுக்கும் மத்தியில் நேர்வழியுடையதாகும். இரண்டு பாதிலுக்கும் இடையில் உண்மையாகும்.

**அப்துன் நபி:** (அவர்கள் சம்பந்தமாக குர்ஆன் இறங்கிய) அந்தக் காபிர்கள் கலிமாவை ஏற்றுக்கொள்ளாதவர்கள். அல்லாஹ்வின் தூதரைப் பொய்யாக்குபவர்கள். மறுமையை மறுப்பவர்கள். குர்ஆனை ஏற்றுக்கொள்ள மறுப்பதுடன் அதனை சூனியம் என்பவர்கள். நாமோ கலிமாவை ஏற்றுள்ளோம். குர்ஆனை உண்மையென்கிறோம். மறுமையை ஏற்றுக்கொள்கிறோம். தொழுகிறோம். நோன்பு நோற்கிறோம். அவ்வாறிருக்க எப்படி எங்களை அவர்களைப் போன்றவர்கள் என்கிறீர்கள்?

**அப்துள்ளாஹ்:** ஒரு மனிதன் ஒரு விடயத்தில் நபி (ஸல்) அவர்களை உண்மைப்படுத்தி இன்னொரு விடயத்தில் பொய்யாக்கினால் அவன் இஸ்லாத்தில் நுழையமாட்டான் என்பதில் மார்க்க அறிஞர்களிடையே கருத்துவேறுபாடில்லை. குர்ஆனில் சிலதை ஏற்று சிலதை ஏற்க மறுப்பதும் இவ்வாறே. ஏகத்துவத்தை ஏற்று தொழுகையை மறுத்தால், அல்லது ஏகத்துவத்தையும் தொழுகையையும் ஏற்று ஸகாத்தை மறுத்தால் அல்லது இவை அனைத்தையும் ஏற்று நோன்பை மறுத்தால், அல்லது ஹஜ்ஜை மறுத்தால் அவன் காபிராகிவிடுவான். நபி (ஸல்) அவர்களது காலத்தில் சிலர் ஹஜ் செய்ய மறுத்த போது அவர்களது விடயத்தில் அல்லாஹ் *"அதற்குரிய பாதையில் பயணம் செய்ய சக்திபெற்றிருக்கும் மனிதர்களுக்கு அல்லாஹ்வுக்காக அவ்வீடு சென்று ஹஜ் செய்வது கடமையாகும். ஆனால் எவரேனும் இதை நிராகரித்தால் நிச்சயமாக அல்லாஹ் உலகத்தாரை விட்டும் தேவயற்றவனாக இருக்கிறான்."* என்ற வசனத்தை இறக்கிவைத்தான். மறுமைக்காக எழுப்பப்படுவதை மறுத்தால் உலமாக்களின் ஏகோபித்த கருத்தின் படி காபிராகிவிடுவான். இதானலேயே இஸ்லாத்தில் ஒரு பகுதியை ஏற்று மறு பகுதியை ஏற்க மறுத்தவன் காபிர் என்பதைக் குர்ஆன் ஆணித்தரமாகக் கூறியுள்ளது. இஸ்லாத்தில் ஒரு பகுதியை ஏற்று மற்றப் பகுதியை ஏற்க மறுத்தவன் காபிர் என்பதை நீர் ஏற்றுக் கொள்கிறீரா?

**அப்துன் நபி:** ஆம். ஏற்றுக் கொள்கிறேன். அது குர்ஆனில் தெளிவாக உள்ளது.

**அப்துள்ளாஹ்:** ஒரு விடயத்தில் நபி சொல்வதை ஏற்று தொழுகை கடமை என்பதை மறுத்தால், எல்லாவற்றையும் ஏற்று மறுமையில் எழுப்பப்படுவதை மாத்திரம் மறுத்தால் அவன் காபிர் என்பது அனைத்து மத்ஹபுகளின் ஏகோபித்த கருத்து, குர்ஆனும் அவ்வாறே கூறியுள்ளது. இதை நீர் நிச்சயமாக ஏற்றுக்கொள்வீர். நபியவர்கள் கொண்டுவந்த கடமைகளில் தொழுகை, ஸகாத், ஹஜ் அனைத்தையும் விட மிக மேலானது ஏகத்துவம் என்பதை நீர் அறிந்துகொள். நபியவர்கள் கொண்டுவந்த இவைகளில் ஏதாவது ஒன்றை நிராகரித்தவன் காபிர் ஆகிவிடுகின்றான், ஆனால் அனைத்து ரஸூல்மார்களும் கொண்டுவந்த ஏகத்துவத்தை மறுத்தவன் ஏன் காபிராகுவதில்லை? ஸுப்ஹானல்லாஹ். இது எவ்வளவு பெரிய மடமை?

நபித் தோழர்கள் யமாமாவில் பனூஹனீபா கோத்திரத்துடன் யுத்தம் செய்ததைக் கவனித்துப் பார். அந்த பனூஹனீபா கோத்திரத்தினர் நபியோடு இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டிருந்தனர். அல்லாஹ்வைத் தவிர இறைவன் இல்லை எனவும் முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனின் தூதர் எனவும்

ஏற்றுக்கொண்டிருந்தனர். அவர்கள் தொழுபவர்களாகவும் அதான் சொல்லக்கூடியவர்களாகவும் இருந்தனர்.

**அப்துன் நபி:** ஆனால் பொய்யன் முஸைலமாவை அவர்கள் நபி என வாதித்தனர். நாங்கள் முஹம்மத் (ஸல்) அவர்களுக்குப் பின் நபியில்லை என்கிறோம்.

**அப்துள்ளாஹ்:** ஆனால் நீங்கள் அலி (ரலி), அப்துல் காதிர் ஜீலானி, மற்றும் சில நபிமார்களையும், மலக்குகளையும் வானம் பூமிகளைப் படைத்தாளும் அல்லாஹ்வின் தரத்திற்கு உயர்த்துகின்றீர்கள். ஒரு சாதாரண மனிதனை நபியின் தரத்துக்கு உயர்த்துபவன் காபிர், அவனுக்குக் கலிமா பிரயோசனம் அளிக்க மாட்டாதென்றால் மனிதனை அல்லாஹ்வின் தரத்திற்கு உயர்த்தியவனின் நிலை என்ன? அலி (ரலி) அவர்களால் நெருப்பில் போடப்பட்டு எரிக்கப்பட்டவர்களும் தங்களை முஸ்லிம்கள் என்றே கூறிக்கொண்டிருந்தனர். அவர்கள் அலி (ரலி) அவர்களது ஆதரவாளர்கள். ஸஹாபாக்களிடம் அறிவுபெற்றவர்கள். நீங்கள் அப்துல் காதிர் ஜீலானி மீது கொண்டிருந்த நம்பிக்கையை அவர்கள் அலி (ரலி) மீது கொண்டிருந்தனர். ஸஹாபாக்கள், அவர்களுடன் யுத்தம் செய்ய வேண்டும், அவர்கள் காபிர்கள் என எவ்வாறு ஏகோபித்து முடிவெடுத்தனர்? ஸஹாபாக்கள் முஸ்லிம்களை காபிராக்குகிறார்கள் என நினைக்கின்றீரா? அப்துல் காதிர் போன்றவர்களில் இந்த நம்பிக்கை வைப்பதில் தவறில்லை. அலி(ரலி) வில் இந்த நம்பிக்கை தவறு என நினைக்கின்றீரா?

முன்னோர்கள் சிர்க்கையும், நபியையும் குர்ஆனையும் பொய்யாக்குவதையும், மறுமையை மறுப்பதையும் ஒன்றாகச் சேர்த்துக்கொண்டதால் தான் காபிர் என்றால், எல்லா மத்ஹபின் உலமாக்களும் தங்கள் நூல்களில் "முர்தத்தின் சட்டம்" என்ற தலைப்பில் ஒரு பாடம் ஏற்படுத்தி, அதில் "முர்தத் என்றால் முஸ்லிமான பின் காபிரானவன்" எனக் குறிப்பிட்டுள்ளார்கள். அத்தோடு குப்ரை ஏற்படுத்தும் பல விடயங்களையும் குறிப்பிட்டுள்ளார்கள். அதைச் செய்பவனை இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றிவிடும். அவர்கள் சில அற்பமான விடயங்களைக் கூட கூறியுள்ளார்கள். அல்லாஹ்வின் வெறுப்பை ஏற்படுத்தக்கூடிய ஒரு வார்த்தையை மனதால் நாடாமல் நாவால் மாத்திரம் மொழிதல், பரிகாசத்துக்காகச் சொல்லப்படும் சில வார்த்தைகள் என்பவற்றையும் உதாரணம் காட்டியுள்ளனர். *"நீங்கள் அல்லாஹ்வையும் அவனது அத்தாட்சிகளையும் அவனது தூதுவரையும் பரிகாசிக்கின்றீர்களா? நீங்கள் காரணம் சொல்லவேண்டாம். நீங்கள் விசுவாசம் கொண்ட பின் நிராகரிப்பவர்களாக ஆகிவிட்டீர்கள்."* என்று அல்லாஹ் குறிப்பிட்டுள்ளவர்கள், தபூக் யுத்தத்தில் நபியவர்களுடன் இருந்தவர்கள், ஒரு வார்த்தையைப் பேசிவிட்டு, "பரிகாசத்துக்காப் பேசினோம்" என்று சொன்னவர்கள். அவர்களைக் குறித்து அல்லாஹ், முஸ்லிமாக இருந்த பின் காபிரானவர்கள் எனக் குறிப்பிட்டுள்ளான். இஸ்ரவேலர்கள், இஸ்லாமியராக, அறிவாளிகளாக, நல்லடியார்களாக இருந்தும் "எங்களுக்கு ஒரு நாயனை ஏற்படுத்தித் தருவாயாக" எனக் கேட்டனர். அவ்வாறே நபித் தோழர்களில் சிலர், "எங்களுக்கு (அக்கால முஷ்ரிக்களுக்கு தங்கள் ஆயுதங்களைத் தூக்கிவைத்து விட்டு அவ்விடத்தில் வணக்க நோக்கத்தில் தங்குவோருக்கு ஒரு மரம் இருந்தது போல்) தூக்கி வைக்கும் மரத்தை ஏற்படுத்தித் தருவீர்களாக!" என்று கேட்டபோது, இது இஸ்ரவேலர்கள் *"அவர்களுக்கு தெய்வங்கள் இருப்பது போன்று எங்களுக்கும் தெய்வங்களை ஏற்படுத்தித்தருவாயாக"* என்று சொன்னது போலாகும் என நபி (ஸல்) அவர்கள் சத்தியம் செய்து சொன்னார்கள்.

**அப்துன் நபி:** இஸ்ரவேலர்களும், நபியிடம் “எங்களுக்கு அவ்வாறான மரத்தை ஏற்படுத்தித் தாருங்கள்” எனக் கேட்டவர்களும் அவ்வாறு கேட்டதால் காபிராகவில்லை.

**அப்துல்லாஹ்:** இஸ்ரவேலர்களோ, நபியிடம் அவ்வாறு கேட்டவர்களோ அதைச் செய்யவில்லை. அவ்வாறு செய்திருந்தால் அவர்களும் காபிராகியிருப்பர். ரஸூல் (ஸல்) அவர்கள் தடுத்த போது அவர்களுக்கு வழிப்படாமல், அவ்வாறான மரத்தை எடுத்திருந்தால் நிச்சயமாக அவர்கள் காபிராகியிருப்பர்.

**அப்துன் நபி:** என்னிடம் இன்னொரு சந்தேகம் உண்டு. அது உஸாமா (ரலி) அவர்களின் சம்பவம். கலிமாவை மொழிந்தவரைக் கொலை செய்த போது “லாஇலாஹ இல்லல்லாஹ் என்று மொழிந்த பின்பும் அவரைக் கொலை செய்தீரா?” என நபியவர்கள் அவரைக் கண்டித்தார்கள். (நூல்: புகாரி). அவ்வாறே ரஸூல் (ஸல்) அவர்கள் “கலிமாவை மொழியும் வரை மனிதர்களுடன் யுத்தம் செய்யும் படி நான் ஏவப்பட்டுள்ளேன்.” என்று கூறியுள்ளார்கள். (நூல்: முஸ்லிம்). நீங்கள் சொன்ன விடயங்களுக்கும் இந்த இரண்டு சம்பவங்களுக்குமிடையில் எப்படி ஒப்பு நோக்குவது?

**அப்துல்லாஹ்:** யூதர்கள் லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவை மொழியும் போதே, நபியவர்கள் அவர்களுடன் யுத்தம் செய்தார்கள், அவர்களைச் சிறைப் பிடித்தார்கள். பனூஹனீபா சமூகத்தினர் ‘லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்’ என்று சொல்லிக் கொண்டும், தொழுதுகொண்டும் இருக்கும் போதே நபித் தோழர்கள் அவர்களுடன் யுத்தம் செய்தார்கள். அலி (ரலி) அவர்களால் சுட்டெரிக்கப்பட்டவர்களும் அவ்வாறே இருந்தனர்.

மறுமைக்காக எழுப்பப்படுவதை மறுத்தவன், கலிமாச் சொல்லியிருந்தாலும் கொலை செய்யப்படுவான். இஸ்லாத்தின் பிரதான தூண்களில் ஒன்றை மறுத்தவனும் கலிமாச் சொல்லியிருந்த போதும் கொலை செய்யப்படுவான் என்பதை நீர் ஏற்றுக்கொள்கிறீர். அவ்வாறாயின், இஸ்லாத்தின் உப பிரிவுகளில் ஒன்றை மறுக்கும் போது கலிமா பிரயோசனம் அளிக்காதிருக்க இஸ்லாத்தின் அடிப்படைகளில் ஒன்றான தவ்ஹீதை மறுக்கும் போது எப்படி கலிமா பிரயோசனம் அளிக்கப் போகின்றது. இந்த ஹதீஸ்களின் கருத்துக்களை நீர் சரியாக விளங்கவில்லை போலும்.

உஸாமா (ரலி) அவர்கள் இஸ்லாத்தை வாதிட்ட ஒருவரை அவர் தனது உயிருக்குப் பயந்து தான் கலிமாச் சொன்னார் என நினைத்து கொலை செய்தார்கள். ஒருவர் இஸ்லாத்தை வெளியில் காட்டினால் அதற்கு மாற்றமான ஒரு நிலை அவரிலிருந்து வெளியாகும் வரை அவருக்கு ஒன்றும் செய்யக் கூடாது. அல்லாஹ் கூறுகிறான்: *“விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வின் பாதையில் சென்றால் தெளிவுபடுத்திக்கொள்ளுங்கள்.* அதாவது உறுதிப்படுத்திக்கொள்ளுங்கள். இந்த வசனம் அவரது நிலையை உறுதிப்படுத்தும் வரை அவருக்கு ஏதும் செய்வதைத் தவிர்த்துக் கொள்ளவேண்டும் என்பதைத் தெளிவுபடுத்துகின்றது. இஸ்லாத்திற்கு மாற்றமான விடயங்கள் அவரிடம் இருப்பது உறுதியானால் அவர் கொலை செய்யப்படவேண்டும்.

*“கலிமாவை மொழியும் வரை அவர்களுடன் யுத்தம் செய்யுங்கள்”* என்ற ஹதீஸைக் கூறிய ரஸூல் (ஸல்) அவர்களே, கவாரிஜ்கள் விடயத்தில் *“அவர்களை எங்கே கண்டாலும் கொலைசெய்யுங்கள்”* என்று கூறினார்கள். (நூல்: புகாரி). அவர்கள் வணக்கங்களை மிக அதிகமாகச் செய்யக்கூடியவர்களாக இருந்தவர்கள். அவர்கள் வணக்கத்தில் ஈடுபடுவதைப் பார்த்த ஸஹாபாக்கள் தாங்கள் செய்வதை அற்பமாகக் கண்டனர். அவர்கள் ஸஹாபாக்களிடமிருந்தே அறிவைப் படித்தார்கள். அவர்களிலிருந்து மார்க்க

முரணான விடயங்கள் வெளியான போது அவர்கள் கூறிய கலிமாவோ, அவர்களது அதிகமான வணக்கங்களோ, அவர்கள் தாம் முஸ்லிம் என வாதித்ததோ கொலை செய்யப்படுவதை விட்டும் அவர்களைப் பாதுகாக்கவில்லை.

**அப்துன் நபி:** மறுமையில் மனிதர்கள் ஆதம் (அலை) பின்பு நூஹ் (அலை) பின்பு இப்ராஹீம் (அலை) பின்பு மூஸா (அலை) பின்பு ஈஸா (அலை) ஆகியோரைக் கொண்டு இரட்சிக்கக் கேட்பார்கள். அவர்கள் முடியாது என்றதும் ரஸூல் (ஸல்) அவர்களிடம் செல்வார்கள் என ஹதீஸ்களில் வந்துள்ளதே. இது மற்றவர்களிடம் இரட்சிக்கத்தேடுவது சிர்க்கு அல்ல என்பதற்கு ஆதாரமாகாதா?

**அப்துல்லாஹ்:** இது உண்மையைப் புரட்டுவதாகும். முன்னிலையில் இருக்கும் உயிருள்ள ஒருவரிடம் இரட்சிக்கத்தேடுவதை நாம் மறுக்கவில்லை. அல்லாஹ் கூறுகிறான்: *"அவர்களது கூட்டத்தைச் சேர்ந்தவர், (மூஸா (அலை)) அவர்களது எதிரிகள் கூட்டத்தைச் சேர்ந்தவருக்கு எதிராக உதவி தேடினார்"* யுத்த சந்தர்ப்பங்களிலும் வேறு சந்தர்ப்பங்களிலும் ஒரு மனிதன் தனது ஆதரவாளர்களிடம் பாதுகாப்புத் தேடுவதில் எவ்வித ஆட்சேபனையும் இல்லை. நாம் மறுப்பதெல்லாம் வலிமார்களின் கப்றுகளிடத்தில் நடைபெறும் இரட்சிக்கத் தேடுதலையும், அவர்கள் மறைவாக இருக்கும் போது அவர்களால் முடியாதவற்றை அவர்களிடம் கேட்பதையுமே. மனிதர்கள் நபிமார்களிடத்தில் மறுமையில் இரட்சிக்கத்தேடுவது, விசாரனையைத் துரிதப்படுத்தி சுவர்க்கவாதிகள் மஹ்ஷரின் கஷ்டத்திலிருந்து நிவாரணம் பெறுவதற்காக அல்லாஹ்விடம் பிரார்த்திக்கும் படியே. நீர் பேசுவதைக் கேட்கக்கூடிய உயிருடனுள்ள ஒரு நல்லடியாரின் முன்னால் சென்று உனக்காகப் பிரார்த்திக்குப் படி வேண்டுவதில் எந்தத் தவறும் இல்லை. நபித் தோழர்கள் நபி (ஸல்) அவர்கள் உயிருடன் இருக்கும் போது அவர்களிடம் இவ்வாறு கேட்கக்கூடியவர்களாக இருந்தார்கள். ஆனால் அவர்கள் மரணித்த பின்பு அவர்கள் யாருமே அவர்களது மண்ணறைக்குச் சென்று எதையும் கேட்கவில்லை. முன்னோர்கள் கப்றடியில் தமக்காக துஆப் பிரார்த்தனை புரிவதைக் கண்டித்துள்ளார்கள்.

**அப்துன் நபி:** இப்ராஹீம் (அலை) அவர்கள் நெருப்பில் போடப்பட்ட போது ஜிப்ரீல் (அலை) அவர்கள் ஆகாயத்தில் தோன்றி ஏதாவது தேவை உண்டா? எனக் கேட்டார்கள். அதற்கு இப்ராஹீம் (அலை) "உங்களிடம் எந்தத் தேவையும் இல்லை" என்றார்கள். ஜிப்ரீல் (அலை) அவர்களிடம் இரட்சகிக்கத்தேடுவது இணைவைப்பதாக இருந்தால் ஜிப்ரீல் (அலை) அவ்வாறு கேட்டிருக்கமாட்டார்கள்.

**அப்துல்லாஹ்:** முந்தியதைப் போன்ற ஒரு கேள்வியே இதுவும். முதலில் இது ஒரு ஆதாரமற்ற செய்தியாகும். அது உண்மையாக இருந்தாலும் கூட ஜிப்ரீல் (அலை) தனக்கு முடியுமான ஒன்றையே செய்யக் கேட்டார்கள். *"சக்திமிக்கவர் அவர்களுக்கு அதைக் கற்றுக்கொடுத்தார்"* இப்ராஹீம் (அலை) அவர்களை எரிக்கப்பட்ட அந்த நெருப்பையும், அதற்குச் சூழ உள்ள பூமியையும், மலையையும் கிழக்கிலோ மேற்கிலோ எறிந்துவிடும் படி அல்லாஹ் அவர்களுக்கு உத்தரவிட்டாலும் அவர்களால் அது முடியாமல் போகாது. இது ஒரு பணக்காரன் ஒரு வசதியற்றவனுக்கு பண உதவி செய்யக் கேட்ட போது, எனக்குத் தேவையில்லை. நான் அல்லாஹ்வின் உதவி வரும் வரை பொறுமை செய்வேன் என்று சொல்வது போன்றாகும். ஆனால் இன்று கப்றுகளிடத்தில் நடைபெறும் சிர்க் இதை விட எவ்வளவு தூரத்தில் இருக்கின்றது?

எனது சகோதரனே! முஹம்மத் (ஸல்) அவர்கள் அனுப்பப்பட்ட முந்திய சமுதாயம் செய்த சிர்க்கு இன்றைய மனிதர்கள் செய்யும் சிர்க்கை விட பின்வரும் மூன்று காரணங்களினால் மிகவும் இலகுவானதே.

1- முன்னோர்கள் சௌகரியமாக இருக்கும் போதே அல்லாஹ்வுக்கு இணைவைப்பார்கள். கஷ்டம் வந்த போது அல்லாஹ்வை மாத்திரமே நாடுவர். அவர்களைப் பற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்: "அவர்கள் கப்பலில் ஏறினால் மார்க்கத்தை அல்லாஹ்வுக்குத் தூய்மைப்படுத்தியோராக அவனைப் பிரார்த்திப்பார்கள். அவர்களைக் காப்பாற்றி கரை சேர்த்ததும் அவர்கள் இணை வைப்பவர்களாகிவிடுவர்" "மலை முகடுகளைப் போன்று அலைகள் அவர்களைச் சூழ்ந்துகொண்டால் மார்க்கத்தை அல்லாஹ்வுக்குத் தூய்மைப்படுத்தியவர்களாக அவனைப் பிரார்த்திப்பார்கள். அவர்களைக் காப்பாற்றி கரை சேர்த்ததும் அவர்களில் சிலர் நடுநிலையாக இருப்பர். நன்றி கெட்ட பெரிய துரோகிகள் அன்றி எமது அத்தாட்சிகளை யாரும் நிராகரிப்பதில்லை." ரஸூல் (ஸல்) அவர்கள் அவர்களுடன் யுத்தம் செய்த அந்த முஷ்ரிக்கள் செல்வச் செழிப்புடன் இருக்கும் போது அல்லாஹ்வுடன் சேர்த்து மற்றவர்களிடமும் பிரார்த்திப்பார்கள். ஆனால் கஷ்டம் வந்த போது மற்றவர்கள் அனைவரையும் மறந்துவிட்டு அல்லாஹ்வை மாத்திரமே அழைப்பர். ஆனால் இன்று சிர்க்கு வைப்பவர்கள் செழிப்பிலும், கஷ்டத்திலும் அல்லாஹ் அல்லாதவர்களிடம் பிரார்த்திக்கின்றனர். நெருக்கடியில் சிக்கிவிட்டால் "யா ரஸூலல்லாஹ்!, யா ஹுஸைன்!, யா முஹ்யத்தீன்!" என்பார்கள். இதை விளங்குபவர்கள் எங்கே?

2- முன்னோர்கள் அல்லாஹ்வுக்கு நெருக்கமான நபி அல்லது வலி அல்லது மலக்குகளிடம் பிரார்த்தித்தனர். அல்லது அல்லாஹ்வுக்கு மாறுசெய்யாத கற்களையும் மரங்களையும் அழைத்தனர். ஆனால் இன்றைய முஷ்ரிக்களோ அல்லாஹ்வுடன் மனிதர்களில் பெரும் பாவிகளையே அழைக்கின்றனர். நல்லடியார்களில், அல்லது அல்லாஹ்வுக்கு மாறுசெய்யாத கற்களிலும் மரங்களிலும் நம்பிக்கை வைப்பவன் பாவம் செய்வதைக் கண்ணால் கண்டுகொண்டே அவன் மீது நம்பிக்கை வைப்பவனை விட மேலானவனே.

3- நபி (ஸல்) அவர்களது காலத்து முஷ்ரிக்களின் சிர்க்குகள் இருந்ததெல்லாம் தவ்ஹீதுல் உலூஹிய்யாவில் மாத்திரமே. தவ்ஹீதுர் ருபூபிய்யாவில் இருக்கவில்லை. ஆனால் இன்றையவர்களின் சிர்க்குகள் தவ்ஹீதுல் உலூஹிய்யாவில் இருப்பதோடு அதிகமாக தவ்ஹீதுர் ருபூபிய்யாவிலும் இருக்கின்றது. படைத்தல், உயிர்ப்பித்தல், மரணித்தல் போன்றவற்றை இயற்கையே ஏற்படுத்துகிறது என அவர்கள் கருதுகின்றனர்.

முன் கூறியவற்றிலிருந்து அறியப்பட்ட ஒரு முக்கிய சட்டத்தைக் கூறி எனது பேச்சை முடிக்கலாம் என எதிர்பார்க்கிறேன். ஏகத்துவம் என்பது உள்ளத்தால் உறுதிகொள்வது, நாவால் மொழிவது, உறுப்புக்களால் செய்யப்படும் கிரியைகள் ஆகிய மூன்றும் ஒருமித்தே உண்டாக வேண்டும். இவைகளில் ஏதாவது ஒன்று விடுபட்டால் முஸ்லிமாக இருக்க முடியாது. தவ்ஹீதை அறிந்தும் அதன்படி நடக்காவிட்டால் பிர்அவ்ன், இப்லீஸ் போன்று காபிரே.

ஒரு விடயத்தில் அதிகமானோர் தவறுகின்றனர். "இது உண்மை. ஆனால் எங்களால் செய்து கொள்ள முடியாமலிருக்கிறது, இது எங்கள் ஊரில் இல்லை. ஊர் மக்களது தீங்குகளைப் பயந்து அவர்களோடு ஒத்துப் போக வேண்டியிருக்கிறது" என்று காரணம் சொல்கின்றனர். குப்ருடைய தலைவர்களில் பெரும்பாலானோரும் இவ்வாறு உண்மையை அறிந்து இது போன்ற சில காரணங்களைச் சொல்லி அதனை விட்டார்கள். அல்லாஹ்

கூறுகிறான்: "அவர்கள் அல்லாஹ்வின் அத்தாட்சிகளுக்குப் பதிலாக அற்பமான கிரயத்தை எடுத்தார்கள். நிச்சயமாக அவர்கள் செய்துகொண்டிருக்கும் வேலை கெட்டதாக இருக்கும்."

யாராவது தவ்ஹீதை விளங்காமல், உள்ளத்தால் ஏற்றுக்கொள்ளாமல் வெளிப்படையாக தவ்ஹீதின் படி நடந்தால் அவன் முனாபிக் ஆவான். அவன் காபிரை விட மோசமானவன். அல்லாஹ் கூறுகிறான்: "நிச்சயமாக நயவஞ்சகர்கள் நரகத்தின் கீழ் தட்டில் இருப்பார்கள். அவர்களுக்கு உதவும் யாரையும் கண்டுகொள்ளமாட்டீர்."

மனிதர்கள் பேசக்கூடியவற்றை நீர் கவனித்தால் இதை நன்கு அறிந்துகொள்வீர். உண்மையை அறிந்து உலகில் ஏற்படும் ஒரு நஷ்டத்திற்காக அதை விடுகின்றனர். இவர்கள் காரூனைப் போன்றவர்கள். மற்றும் சிலர் ஹாமானைப் போன்று பதவிகளைப் பயந்து விடுகின்றனர். மற்றும் சிலர் பிர்அவ்ன் போன்று ஆட்சி தவறுவதைப் பயந்து விடுகின்றனர்.

முனாபிக்களைப் போன்று வெளித்தோற்றத்தில் தவ்ஹீதைப் பின்பற்றுவோரையும் நீர் காண்பீர். அவனிடம் அவனது உள்ளத்தால் பின்பற்றும் தவ்ஹீதைப் பற்றிக் கேட்டால் அவன் எதையும் அறியமாட்டான்.

குர்ஆனின் இரண்டு வசனங்களை நீர் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும். ஒன்று: ஏற்கனவே கூறப்பட்ட வசனம். அதாவது: "நீங்கள் காரணம் சொல்ல வேண்டாம். விசுவாசம் கொண்ட பின் நீங்கள் நிராகரிப்பவர்களாக ஆகிவிட்டீர்கள்." ரஸூல் (ஸல்) அவர்களுடன் ரோமர்களை எதிர்த்து யுத்தம் செய்தவர்கள் பரிகாசத்திற்காகச் சொன்ன ஒரு வார்த்தையின் காரணமாக காபிரானார்கள் என்றால், செல்வம், பதவி போன்ற தப்பிவிடும் எனப் பயந்து அல்லது யாரையும் சமாளிப்பதற்காக குப்ருடைய வார்த்தையைப் பேசுபவன் எவ்வளவு கடுமையான குப்ரில் ஆகிவிடுகிறான் என்பதை விளங்கிக்கொள். பரிகாசத்திற்காகப் பேசுபவன் மற்றவர்களை சிரிப்பூட்டுவதற்காக உள்ளத்தால் நம்பிக்கை கொள்ளாமலே சொல்கிறான். ஆனால் மக்களைப் பயந்தோ அல்லது அவர்களிடமிருப்பதில் ஆசை கொண்டோ பேசுபவன் "ஷைத்தான் உங்களுக்கு வறுமையை வாக்களிக்கிறான். பாவத்தை ஏவுகிறான்." என்ற வசனத்தின் படி சைத்தானையே உண்மைப் படுத்துகின்றான். சைத்தானின் எச்சரிக்கையைப் பயந்தனர். "ஷைத்தான் தனது சகாக்களைப் பயமுறுத்துகிறான்" அல்லாஹ்வின் வாக்கை நம்பவில்லை. "அல்லாஹ் அவன் அருளும் மன்னிப்பையும் சிறப்பையும் வாக்களிக்கிறான்." அவனது எச்சரிக்கையைப் பயப்படவில்லை. இப்படியானவர்கள் அல்லாஹ்வின் வலியாக இருக்கத் தகுதியா அல்லது சைத்தானின் வலியாக இருக்கத் தகுதியா?

இரண்டு: "எவர் ஈமான்கொண்ட பின் அல்லாஹ்வை நிராகரிக்கிறாரோ அவர் (மீது அல்லாஹ்வின் கோபம் இருக்கிறது.) அவருடைய உள்ளம் ஈமானைக் கொண்டு அமைதி அடைந்திருக்கும் நிலையில் யார் நிர்ப்பந்திக்கப்படுகிறாரோ அவரைத் தவிர. ஆனால் எவருடைய உள்ளம் குப்ரைக் கொண்டு விரிவாகி இருக்கிறதோ அவர்கள் மீது அல்லாஹ்வின் கோபம் உண்டாகும். அவர்களுக்குக் கொடிய வேதனையும் உண்டு" என்ற குர்ஆன் வசனம். உள்ளம் ஈமானை உறுதிகொண்ட நிலையில் வற்புறுத்தலுக்கு உள்ளானவர்களை மாத்திரமே அல்லாஹ் மன்னிப்பதாகக் கூறுகிறான். மற்றவர்கள், எதையும் பயந்தோ, எதிலும் ஆசைவைத்தோ, யாரையும் சமாளிப்பதற்காகவோ, நாட்டை, குடும்பத்தைத் திருப்திப்படுத்தவோ செய்தால், அல்லது பரிகாசத்திற்காகச் செய்தால் அவன் காபிர் ஆகிவிடுகிறான். வற்புறுத்தப்பட்டவன் மன்னிக்கப்படுகிறான். ஆனால் வற்புறுத்தல் என்பது செயல்களில் மாத்திரமே இருக்கலாம். உள்ளத்தால் ஈமான் கொள்ளும்

விடயங்களில் வற்புறுத்தல் ஏற்படமுடியாது. “அது அவர்கள் மறுமையை விட உலக வாழ்க்கையை விரும்பிய காரணத்தினாலும், நிராகரிக்கும் கூட்டத்தினருக்கு அல்லாஹ் வழிகாட்டமாட்டான் என்பதாலுமாகும்” என்ற வசனம் அவர்கள் தண்டிக்கப்படுவது அவர்களது கொள்கை, அறியாமை, மார்க்கத்தை வெறுத்தல், குப்ரை விரும்பல் போன்ற காரணங்களினால் அல்ல, உலக நன்மைகளை மார்க்கத்தை விட மேலாக எடுத்துக்கொண்டதால் தான் என்பதைத் தெளிவாக எடுத்துரைக்கிறது,

நான் இவ்வளவையும் சொன்ன பின்னால் நீ இருக்கும் கொள்கையை விட்டு உனது இறைவனின் பால் தௌபாச் செய்து நேர்வழிக்குத் திரும்ப நினைக்கவில்லையா? ஏனென்றால் இது ஒரு பயங்கர விடயம் என்பதை நீ அறிந்துகொண்டாய்.

**அப்துன் நபி:** அல்லாஹ்விடம் நான் பாவமன்னிப்புக் கோருகிறேன். வணக்கத்துக்குரிய நாயன் அல்லாஹ்வைத் தவிர யாரும் இல்லை. முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனின் தூதர் என்று நான் சாட்சி சொல்கிறேன். அல்லாஹ்வைத் தவிர்ந்த நான் வணங்கிக்கொண்டிருந்த அனைத்தையும் நான் நிராகரித்துவிட்டேன். என்னால் நடந்த முந்திய பாவங்களை மன்னிக்கும் படியும், அவனது இரக்கம், அருளைக் கொண்டு எனக்கு அன்பு காட்டும் படியும், நான் மரணிக்கும் வரை என்னைச் சரியான கொள்கையில் ஸ்திரப்படுத்திவைக்கும் படியும் அல்லாஹ்விடம் வேண்டுகிறேன். நீ எனக்குச் செய்த இந்த நல்லுபதேசத்திற்காக, நான் இந்தப் பெயரை வைத்திருந்ததைக் கண்டித்தற்காக அல்லாஹ் உனக்கு நற்கூலி அளிப்பானாக. நான் எனது பெயரை அப்துர் ரஹ்மான் என்று மாற்றிவிட்டேன். நான் இருந்த பிழையான கொள்கையிலிருந்து திரும்புவதற்கு உதவியமைக்காகவும் அல்லாஹ் உனக்குக் கூலி தருவானாக. நிச்சயமாக நான் அந்தக் கொள்கையிலிருந்தால் ஒரு போதும் வெற்றிபெறமாட்டேன்.

கடைசியாக உன்னிடம் ஒரு வேண்டுகோள் விடுக்க விரும்புகிறேன். மக்கள் அதிகமாகச் செய்யும் சில தறுகளை எனக்குச் சுட்டிக்காட்டவும்.

**அப்துள்ளாஹ்:** பரவாயில்லை. நான் சொல்வதைக் கேள்!

- குர்ஆன், ஹதீஸிலிருந்து ஏதாவது கருத்து வேறுபாடுகள் தென்பட்டால் பித்னா நோக்கிலோ, அதன் பிறகருத்தைத் தேடியோ கருத்து முரண்பாடானவற்றைப் பின்பற்றுவதாக உனது கொள்கை இருக்கக்கூடாது. உண்மையில் அதன் கருத்தை அல்லாஹ்வை அன்றி யாரும் அறியமாட்டார்கள். அறிவில் நன்கு தரிபாடான, அனைத்தும் அல்லாஹ்விடமிருந்து வந்தவை, நாம் அப்படியே அதனை நம்பிக்கை கொண்டோம் என்று சொல்லக்கூடியவர்களில் இருந்துகொள். கருத்து வேறுபாடுள்ளவைகள் பற்றி ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “உனக்கு சந்தேகமான ஒன்றை சந்தேகம் இல்லாத ஒன்றின் பக்கம் விட்டுவிடு”(நஸாஈ) “யார் சந்தேகமானவைகளைத் தவிர்ந்துகொள்கிறாரோ அவர் தனது மார்க்கத்துக்கும் மானத்துக்கும் பாதுகாப்பெடுத்துக்கொண்டார். யார் சந்தேகமான விடயங்களில் ஆகிவிடுகிறாரோ அவர் ஹராத்தில் நுழைந்துவிட்டார்"(புகாரி, முஸ்லிம்). “பாவம் என்பது உனது உள்ளத்தில் ஊசலாடி மனிதர் அதை அறியக் கூடாது என நீ விரும்பியதாகும்” (முஸ்லிம்). “உனது உள்ளத்திடம் மார்க்கத் தீர்ப்புக் கேள். (அவ்வாறு மூன்று விடுத்தம் கூறிய நபி(ஸல்) அவர்கள்) \நன்மை| என்பது உனது உள்ளம் அது பற்றி ஆறுதல் அடையக்கூடியது, பாவம் என்பது உனது உள்ளத்தில் ஊசலாடி, அதைச் செய்வது பற்றி நீ ஈரெண்ணம்

கொண்டதாகும். மனிதர்கள் தீர்ப்பு வழங்கியபோதிலும் உனது உள்ளத்தில் தீர்ப்புக் கேள். (நூல்: அஹ்மத்).

✷ மனோ இச்சையைப் பின்பற்றுவதை உனக்கு எச்சரிக்கிறேன். அல்லாஹ் அது பற்றி குர்ஆனில் எச்சரித்துள்ளான். "தனது மனோ இச்சையை இறைவனாக எடுத்துக்கொண்டவனை நீர் பார்க்கவில்லையா?"

✷ தனிமனிதனுக்கோ, கருத்துக்களுக்கோ பிடிவாதம் பிடிப்பதை எச்சரிக்கிறேன். மூதாதையர்கள் வாழ்ந்துள்ள நிலை உண்மையை ஏற்றுக் கொள்வதற்குத் தடையாக இருக்கலாம். உண்மை என்பது ஒரு மு..மினின் தவறிய பொருள். அதை எங்கு கண்டாலும் அவனே அதை எடுப்பதற்குத் தகுதியானவன். அல்லாஹ் கூறினான்: **"அல்லாஹ் இறக்கியதைப் பின்பற்றுங்கள் என்று அவர்களுக்குச் சொல்லப்பட்டால், அவர்கள் "நாங்கள் எங்கள் மூதாதையினர் எதில் இருப்பதைக் கண்டோமோ அதைப் பின்பற்றுவோம்" என்று சொல்வார்கள். அவர்களது மூதாதையினர் எதையும் விளங்காதவர்களாக, நேர்வழி பெறாதவர்களாக இருந்த போதிலும்."**

✷ காபிர்களுக்கு ஒப்பாகுவதை உனக்கு எச்சரிக்கிறேன். அதுவே அனைத்துக் குழப்பங்குளுக்கும் அடிப்படை. ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள் "யாராவது இன்னொரு சமூகத்தினரைப் பின்பற்றினால் அவன் அவர்களைச் சேர்ந்தவனாகும்" (அபூதாவூத்).

✷ அல்லாஹ் அல்லாதவற்றின் மீது நம்பிக்கை கொள்வதை எச்சரிக்கிறேன். அல்லாஹ் கூறுகிறான்: **"யார் அல்லாஹ் மீது நம்பிக்கை வைக்கிறாரோ அல்லாஹ் அவனுக்குப் போதுமானவன்"**

✷ அல்லாஹ்வுக்கு மாறுசெய்யும் விடயத்தில் எந்தப் படைப்புக்களுக்கும் வழிப்படாதே. ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "படைத்தவனுக்கு மாறு செய்யும் விடயத்தில் படைப்புக்களுக்கு வழிப்படக்கூடாது" (திர்மிதி).

✷ அல்லாஹ்வைப் பற்றி தப்பெண்ணம் கொள்ளாதே. ரஸூல் (ஸல்) அவர்கள் ஹதீஸ் குத்ஸியில் அல்லாஹ் கூறுவதாகக் கூறினார்கள்: "எனது அடியான் என்னைப் பற்றி எண்ணும் இடத்தில் நான் இருக்கிறேன். (புகாரி, முஸ்லிம்).

✷ கஷ்டங்கள் வராமல் பாதுகாக்கவோ, வந்ததைத் தடுக்கவோ வலையல்களை, நூல்களை அணிவதை விட்டும் எச்சரிக்கிறேன்.

✷ கண்ணூரைத் தடுப்பதற்காக தாயத்துக்களைத் தொங்கவிடுவதை எச்சரிக்கிறேன். ஏனென்றால் அது சிர்க்காகும். ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "யாராவது எதையாவது தொங்கவிட்டால் அவன் அதன் பால் சாட்டப்படுவான். (திர்மிதி).

✷ கற்கள், மரங்கள், பழைய சின்னங்கள், (ஸியாரத்) கட்டிடங்கள் மூலம் பரக்கத்துத் தேடுவதை எச்சரிக்கிறேன்.

✷ துற்குறி பார்ப்பதை எச்சரிக்கிறேன். அது சிர்க்காகும். ரஸூல் (ஸல்) அவர்கள்: "குறிபார்ப்பது ஷிர்க்காகும்" (என மூன்று விடுத்தம்) கூறினார்கள். (அஹ்மத், அபூதாவூத்).

✷ சூனியக்காரர்கள், சாஸ்திரக்காரர்களை நம்புவதை எச்சரிக்கிறேன். அவர்கள் தங்களுக்கு மறைவான விடயங்கள் பற்றி அறிவு இருப்பதாகக் கருதுகின்றனர். தட்டுகளில் ராசிகளை வெளிப்படுத்துகின்றனர். ஒருவருடைய பாக்கியம், துற்பாக்கியம் பற்றி அறிவிக்கின்றனர். அவர்களை நம்புவது சிர்க்காகும். மறைவான விடயங்களை அல்லாஹ் அன்றி யாரும் அறிய மாட்டார்கள்.

✷ மழைபொழிவதை நட்சத்திரங்களுக்கோ, பருவங்களுக்கோ சாட்டுவதை எச்சரிக்கிறேன். அது சிர்க்காகும். அவற்றை அல்லாஹ்வுக்கே சேர்க்கவேண்டும்.

* யாராக இருந்தாலும் அல்லாஹ் அல்லாதவற்றைக் கொண்டு சத்தியம் செய்வதை எச்சரிக்கிறேன். அதுவும் சிர்க்காகும். ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "யார் அல்லாஹ் அல்லாதவற்றைக் கொண்டு சத்தியம் செய்கிறாரோ அவர் காபிராகிவிட்டார். அல்லது இணைவைத்தவராகி விட்டார்". (அஹ்மத், அபூதாவூத்). நபி, நம்பிக்கைத் தன்மை, பொருப்பு, மானம் போன்றவற்றைக் கொண்டு சத்தியம் செய்வது போன்றவை இவற்றுள் அடங்கும்.
* காலம், காற்று, சூரியன், குளிர், சூடு போன்றவற்றை ஏசுவதை எச்சரிக்கிறேன். அவற்றை அல்லாஹ்வே படைத்தான். அவற்றை ஏசினால் அல்லாஹ்வை ஏசுவதாகும்.
* ஏதாவதொரு (தீமை) நடந்த பின் "இப்படி நடந்திருந்தால் அது நடந்திருக்காது" என்று சொல்வதை எச்சரிக்கிறேன். அது ஷைத்தானின் வாயிலைத் திறந்துவிடும். அல்லாஹ்வின் ஏற்பாட்டை ஆட்சேபிப்பதாகவும் அமைந்துவிடும். நீர் "அல்லாஹ் ஏற்படுத்தினான். அவன் நாடியது நடந்தது" என்று சொல்.
* மையவாடிகளைப் பள்ளிகளாக (தொழும் இடங்களாக) எடுத்துக்கொள்வதை எச்சரிக்கிறேன். கப்றுள்ள எந்தப்பள்ளியிலும் தொழக்கூடாது. ரஸூல் (ஸல்) அவர்கள் மரணப் படுக்கையில் கூறியதாக ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "அல்லாஹ்வின் சாபம் யூதர்கள், கிறிஸ்தவர்கள் மீது உண்டாவதாக. அவர்கள் அவர்களது நபிமார்களின் அடக்கஸ்தலங்களை தொழும் இடங்களாக மாற்றிக்கொண்டார்கள்." அவர்கள் செய்ததை அவர்கள் கண்டித்தார்கள். அவ்வாறு கண்டிக்கவில்லை எனில் அவர்களது கப்றும் வெளிப்படுத்தப்பட்டிருக்கும்.(புகாரி, முஸ்லிம்). ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "உங்களுக்கு முன் இருந்தவர்கள் அவர்களது நபிமார்களதும் நல்லடியார்களதும் கப்றுகளை பள்ளிவாயல்களாக எடுக்கக்கூடியவர்களாக இருந்தார்கள். நீங்கள் அடக்கஸ்தலங்களை பள்ளிகளாக்காதீர்கள். அதை விட்டும் நான் உங்களைத் தடுக்கிறேன். (அபூ அவானா).
* நபியவர்களின் அல்லது நல்லடியார்களின் பொருட்டால் வஸீலாத்தேடும் படி ரஸூல் (ஸல்) அவர்கள் கூறியாதாகச் சொல்லப்படும் (புணையப்பட்ட) ஹதீஸ்கள் பற்றி எச்சரிக்கை செய்கிறேன். அவை இட்டுக்கட்டப்பட்டவைகளே. உதாரணமாக: "நீங்கள் எனது அந்தஸ்தைக் கொண்டு வஸீலாத் தேடுங்கள். அல்லாஹ்விடத்தில் எனது அந்தஸ்து மிக மேலானது" "உங்கள் விடயங்கள் உங்களால் முடியாது போனால் நீங்கள் கப்றுகளில் உள்ளவர்களைப் பற்றிப் பிடித்துக்கொள்ளுங்கள்." "அல்லாஹ் ஒவ்வொரு வலியின் கப்றுகளின் மீதும் ஒரு மலக்கைச் சாட்டியுள்ளான். அவர் மனிதர்களின் தேவைகளை நிறைவேற்றுகிறார்." "உங்களில் ஒருவர் ஒரு கல்லைப் பற்றி நல்லெண்ணம் வைத்தாலும் அது அவருக்கு நன்மை பயக்கும்."
* நபி பிறந்த தினம், மி∴றாஜ், பராஅத் இரவு போன்ற சமய அனுஷ்டானங்கள் என்ற பெயரில் கொண்டாடப்படும் கொண்டாட்டங்கள் பற்றி எச்சரிக்கிறேன். அவைகள் புதிதாக உண்டாக்கப்பட்டவைகள். ரஸூல் (ஸல்) அவர்களோ, அவர்களை எங்களை விட அதிகம் நேசம் வைத்த, நன்மையான விடயங்களில் எங்களை விட மிக ஆர்வமுள்ள ஸஹாபாக்களோ அவற்றைச் செய்யவில்லை. அவை மார்க்கத்திலுள்ள நல்ல விடயங்களாக இருந்திருந்தால் அவர்கள் அவற்றைச் செய்ய முந்தியிருப்பார்கள்.

# லாஇலாஹ இல்லல்லாஹ்

இக்கலிமா இரு பகுதிகளை உள்ளடக்கியிருக்கின்றது. 1.لا إله உண்மையில் வணங்கப்படுவதற்கான தகுதி யாருக்கும் இல்லை என்ற கருத்தைக் குறிக்கின்றது. 2. إلا الله அத்தகுதி அல்லாஹ்விற்கு மாத்திரம் இருக்கின்றது என்பதைக் குறிக்கின்றது. அல்லாஹ் கூறுகின்றான்: *"இப்றாஹீம் தன் தந்தையிடமும், தம் சமூகத்தாரிடமும், என்னைப் படைத்தவனைத் தவிர நீங்கள் வணங்குபவற்றை விட்டும் நிச்சயமாக நான் விலகிக்கொண்டவன். நிச்சயமாக அவனே எனக்கு நேர்வழிகாட்டுவான் எனக் கூறியதை (நபியே நீர் எண்ணிப் பார்ப்பீராக.)* சுவர்க்கத்தின் திறவுகோல் 'லாஇலாஹ இல்லல்லாஹ்' எனக் கூறப்படுகின்றது, அவ்வாறாயின் அதை மொழிந்த ஒவ்வொருவரும் சுவர்க்கம் நுழையத் தகுதிபெறுவார்களா?

வஹ்பிப்னு முனப்பிஹ் அவர்களிடம் "லாஇலாஹ இல்லல்லாஹ் சுவர்க்கத்தின் திறவுகோல் அல்லவா?" எனக் கேட்கப்பட்டது. அதற்கவர்கள் "ஆம், ஆனால் ஒவ்வொரு திறப்புக்கும் பற்கள் உண்டு. பற்கள் சரியாக உள்ள திறப்புக்களை நீர் கொண்டுவந்தால் திறக்கலாம். இன்றேல் திறக்கமுடியாது.

இந்தப் பற்கள் எவை என்பதைத் தெளிவுபடுத்தும் பல ஹதீஸ்கள் வந்துள்ளன. "யார் இந்தக் கலிமாவை தூய எண்ணத்துடன் மொழிகிறாரோ........", யார் உள்ளத்தால் உறுதிகொண்டவராக.........", "உள்ளத்தால் உண்மைப்படுத்தி........" போன்ற பல ஹதீஸ்கள், அந்தக் கலிமாவின் கருத்தை அறிவது, மரணிக்கும் வரை அதில் நிலையாக இருப்பது, அதன் கருத்துக்கு தலைசாய்ப்பது போன்றவற்றின் மூலமே சுவர்க்கம் நுழைய முடியும் என்பதை உணர்த்துகின்றன.

மார்க்க அறிஞர்கள் பல ஆதாரங்களை அடிப்படையாக வைத்து அந்தக் கலிமா சுவர்க்கத்தின் திறப்பாக அமைய, அது பயன் அளிக்க பல நிபந்தனைகளைக் கூறியுள்ளனர். அந்த நிபந்தனைகளே அதன் பற்களாகும்.

❶ கருத்தை அறிதல். எந்தச் சொல்லுக்கும் ஒரு கருத்துண்டு. இறைத்தன்மையை அல்லாஹ் அல்லாதவற்றைவிட்டும் நீக்கி அல்லாஹ்வுக்கு மட்டும் தரிபடுத்துவதாகும் என்ற கருத்தை விளங்கியறிதல் கடமையாகும். அதாவது வணக்கத்துக்கு உரித்தானவன் அவனையன்றி யாரும் இல்லை. அல்லாஹ் கூறுகிறான்: "அறிந்தவர்களாக உண்மையைக் கொண்டு சாட்சி சொன்னவர்களைத் தவிர" ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *"யாராவது வணக்கத்துக்குத் தகுதியான நாயன் அல்லாஹ்வையன்றி யாரும் இல்லை என அறிந்தவனாக மரணித்தால் அவன் சுவர்க்கம் நுழைவான்."* (முஸ்லிம்).

❷ யகீன். அதன் கருத்தை எந்தச் சந்தேகத்துக்கும், தடுமாற்றத்திற்கும் இடமின்றி மனதால் உறுதிகொள்வதாகும். மு.்.மின்களைப் பற்றிக் குறிப்பிடும் போது அல்லாஹ் கூறுகிறான்: *"நிச்சயமாக விசுவாசிகள் அல்லாஹ்வையும், அவனது ரஸூலையும் ஈமான் கொண்டு சந்தேகம் கொள்ளாமல் இருந்து, அவர்களது சொத்துக்களாலும் உயிர்களாலும் அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாத் செய்தவர்களாவர்."* நாவால் மொழிவது மாத்திரம் போதாது. உள்ளத்தால் உறுதிகொள்வது அவசியம். இன்றேல் அது முழுமையான நிபாக் ஆகும். ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *"அல்லாஹ்வைத் தவிர வணங்கத் தகுதியான நாயன் இல்லை என்றும் நான் அவனது தூதுவர்*

*என்றும் சாட்சி சொல்கிறேன். இந்த இரண்டு விடயங்களிலும் சந்தேம் கொள்ளாத நிலையில் யாராவது அல்லாஹ்வைச் சந்தித்தால் அவன் சுவர்க்கம் நுழைவான்.* (முஸ்லிம்).

**3** அங்கீகரித்தல். இந்தக் கலிமாவின் கருத்தை அறிந்து, மனதால் உறுதியும் கொண்டால் அதன் பிரதிபலிப்பு வெளியாகுதல் வேண்டும். இந்தக் கலிமாவின் கருத்தை ஏற்றுக்கொள்வதன் மூலமே அது உண்டாக முடியும். யார் ஏகத்துவத்தின் அழைப்பை ஏற்க மறுக்கிறாரோ (பெறுமையாலோ, வம்புத்தனத்தினாலோ பொறாமையாலோ ஆயினும் சரி) அவர் காபிராகிவிடுவார். பெறுமைக்காக அதை ஏற்க மறுத்தவர்கள் பற்றி அல்லாஹ் குறிப்பிடும் போது *“அவர்களுக்கு வணக்குத்துக்குரிய நாயன் அல்லாஹ்வைத் தவிர யாரும் இல்லை என்று சொல்லப்பட்டால் அவர்கள் பெருமையடிப்பார்கள்”* எனக் கூறுகிறான்.

**4** ஏகத்துவத்துக்கு முழுமையாக வழிப்படல். இதுவே அவனது ஈமானை அறியும் உறைகல்லும் வெளித்தோற்றமுமாகும். அல்லாஹ் மார்க்கமாக்கியவற்றை ஏற்று நடப்பதன் மூலமும், அவன் விலக்கியவற்றைத் தவிர்ந்துகொள்வதன் மூலமும் இதனை உறுதிசெய்யலாம். அல்லாஹ் கூறுகிறான்: *“யார் நன்மை செய்தவனாக அல்லாஹ்வின் பக்கம் தலைசாய்க்கிறாரோ அவர் உறுதியான கயிற்றைப் பற்றிக்கொண்டார். கருமங்களின் முடிவு அல்லாஹ்வின் பக்கமாகும்.”*

**5** உண்மை. இந்தக் கலிமாவை மொழிவதில் உண்மையாக நடந்துகொள்ளல். உள்ளம் பொய்யாக்கிய நிலையில் நாவால் மொழிந்தால் அவன் முனாபிக்காவான். முனாபிக்களைப் பற்றி அல்லாஹ் *“அவர்களது உள்ளத்தில் இல்லாததை நாவால் சொல்கிறார்கள்.”* என்று குறிப்பிடுகிறான்.

**6** அன்புகொள்ளல். முஃமின் இந்தக் கலிமாவையும், அதன்படி நடப்பதையும், அதன் படி நடப்பவர்களையும் விரும்புவான். ஒரு அடியான் தனது இறைவனை நேசம் வைப்பதன் அடையாளம் தனது மனோ இச்சைக்கு மாறுபட்டாலும் அல்லாஹ்வின் விருப்பத்துக்குரியவைகளை முற்படுத்துவது, அல்லாஹ்வையும் அவனது தூதர்களையும் நேசம் வைப்பர்களை நேசம் வைப்பது, அவர்களை விரோதிப்பவர்களை வெறுப்பது, ரஸுலைப் பின்பற்றுவது, அவர்களது வழிகாட்டலை ஏற்றுக்கொள்வது என்பனவாகும்.

**7** தூய எண்ணம். அந்தக் கலிமாவைக் கூறுவதன் மூலம் அல்லாஹ்வின் பொருத்தத்தையே நாடுவான். அல்லாஹ் கூறுகிறான்: *“வணக்கத்தை அல்லாஹ்வுக்குத் தூய்மையாக்கி, நேர்வழியில் தரிபட்டு அவனை வணங்கும் படியே அவர்களுக்கு ஏவப்பட்டுள்ளது.”* ரஸுல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *“அல்லாஹ்வின் திருப்தியை நாடி யார் அந்தக் கலிமாவை மொழிகின்றாரோ அவரை அல்லாஹ் நரகின் மீது ஹராமாக்கிவிடுகிறான்.”* (புகாரி).

மரணிக்கும் வரை இந்த அனைத்து நிபந்தனைகளுடன் அந்தக் கலிமாவில் நிலையாக இருத்தல் வேண்டும்.

# முஹம்மதுர் ரஸூலுள்ளாஹ்

மரணித்தவன் மண்ணறையில் சோதிப்புக்குள்ளாகுவான். அங்கு அவனிடத்தில் மூன்று கேள்விகள் கேட்கப்படும். அவற்றிற்குப் பதில் அளித்தால் வெற்றிபெறுவான். இன்றேல் நாசமாவான். அந்தக் கேள்விகளில் ஒன்று "உனது நபி யார்?" என்பது. அதன் நிபந்தனைகளை சம்பூரணப்படுத்த முடிந்தவனாலேயே அதற்குப் பதிலளிக்க முடியும். அல்லாஹ் மண்ணறையில் அவனது பதிலை உணர்த்தி அவனது நாவை ஸ்திரப்படுத்துவான். சொத்துக்களோ, பிள்ளைகளோ பயன் அளிக்காத நாளில் அவன் பயனடைவான். அதன் நிபந்தனைகளாவன:

**1 முஹம்மத் (ஸல்) அவர்கள் ஏவிய விடயங்களில் அவர்களுக்கு வழிப்படல்.** அல்லாஹ் அவர்களுக்கு வழிப்படும் படி எமக்கு ஏவியுள்ளான். அவன் கூறுகிறான்: *"யார் றஸூலுக்கு வழிப்படுகிறாரோ அவர் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டுவிட்டார்"* மேலும் கூறுகிறான்: *"நீர் கூறுவீராக: நீங்கள் அல்லாஹ்வை நேசம் வைப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசம் வைப்பான்."* ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *"எனது சமூகத்தினர் அனைவரும் சுவர்க்கம் செல்வர். விலகிக்கொண்டவர்களைத் தவிர. விலகிக்கொண்டவர்கள் யார் எனக் கேட்கப்பட்டது, அதற்கு ரஸூல் (ஸல்) அவர்கள் "எனக்கு வழிப்பட்டவன் சுவர்க்கம் செல்வான். எனக்கு மாறுசெய்தவன் விலகிக்கொண்டான்."* (புகாரி).

யார் நபியவர்களை அன்பு வைக்கிறாரோ அவர் கட்டாயமாக அவர்களுக்கு வழிப்படவேண்டும். அன்பின் பலன் வழிப்பாடாகும். அவர்களைப் பின்பற்றாமல் அவர்களை அன்பு வைத்துள்ளதாக யாரும் வாதிட்டால் அவன் பொய்யனே.

**2 அவர்கள் அறிவிக்கும் விடயங்களில் அவர்களை உண்மைப்படுத்தல்.** யாராவது அவர்களைத் தொட்டும் ஆதாரபூர்வமாக வந்த ஒன்றை மனோ இச்சைக்காகப் பொய்ப்பித்தால் அவன் அல்லாஹ்வையும் றஸூலையும் பொய்யாக்கிவிட்டான். ஏனென்றால் நபியவர்கள் பொய், தவறுகளை விட்டும் பாதுகாக்கப்பட்டவர்கள். அல்லாஹ் கூறுகிறான்: *"அவர்கள் சொந்த விருப்பத்தில் பேச மாட்டார்கள்"*

**3 அவர்கள் தடுத்தவைகளைத் தவிர்ந்துகொள்ளல்.** பாவங்களில் மிகப் பெரியதான சிர்க்கு முதல், ஏனைய பெரும்பாவங்கள், சிறுபாவங்கள், அவர்களால் வெறுக்கப்பட்டவைகள் உட்பட அனைத்துப் பாவங்களையும் தவிர்ந்துகொள்ளல் அவசியம். ஒரு முஸ்லிம் தனது நபியை அன்பு வைக்கும் அளவு அவனது ஈமான் அதிகரிக்கும். ஈமான் அதிகரித்தால் நற்கிரியைகள் அவனுக்கு விருப்பமானதாகிவிடும். இறை நிராகரிப்பு, பாவங்கள் அவனுக்கு வெறுப்பானதாகிவிடும்.

**4 அல்லாஹ் அவனது நபியின் மூலம் மார்க்கமாகக்** காட்டித் தந்ததைக் கொண்டே அன்றி அல்லாஹ்வை வணங்கக்கூடாது. வணக்க வழிபாடுகள் எதையும் புதித்தாக உண்டாக்குவது தடையாகும். எதற்கு அனுமதி வந்துள்ளதோ அதை மாத்திரமே வணக்கமாகச் செய்யலாம். ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *யாராவது எமது ஏவல் இல்லாத ஒரு விடயத்தைச் செய்தால் அது அங்கீகரிக்கப்படமாட்டாது.*

**படிப்பினை:** அறிந்து கொள்! நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை நேசிப்பது உம் மீது கட்டாயக் கடமையாகும். வெறும் பிரியம் மாத்திரம் போதுமானதல்ல. மாறாக உனது உயிர் உட்பட அனைத்தை விடவும் உனக்கு மிக நேசமுள்ளவராக இருக்க வேண்டும். எவ்வாறெனில் எவர்

ஒன்றை நேசிக்க ஆரம்பித்து விடுகின்றாறோ அவர் அதனை முன்னிருத்தி அதற்கு ஒத்ததாகச் செயல் பட ஆரம்பித்து விடுகின்றான்.

நபி முஹம்மது (ஸல்) அவர்களை நேசிப்பதில் எவர் வாய்மையோடு நடந்து கொள்கின்றாரோ அவரில் அதன் அடையாளங்கள் பிரதிபளிக்கும். அதாவது தனது சொல், செயல் அனைத்திலும் அவர்களது வழிமுறைகளைப் பின்பற்றுவதோடு அவனது நல்ல நிலையிலும், கெட்ட நிலையிலும், விருப்பு, வெறுப்பு எல்லா நிலையிலும் அவர்களது கட்டளைக்கு வழிப்பட்டு அவர்கள் விலக்கியலற்றைத் தவிர்த்தும், அவர்களது ஒழுக்க நெறிகளைப் பேணியும் அவன் வாழ்வதைக் காணலாம். ஏனெனில் பின்பற்றுவதும், வழிப்படுவதும் உண்மையான நேசத்தின் பிரதிபலனாகும். அவ்விரண்டும் இல்லாத நேசம் உண்மையாக முடியாது. அண்ணல் நபி (ஸல்) அவர்களை நேசிப்பதின் அடையாளங்களில் சில: (1) அவர்களை அதிகம் நினைவு கூர்வது, அவர் மீது ஸலவாத்துச் சொல்வது. எவர் ஒன்றை அதிகம் நேசிக்கின்றாறோ அவர் அதனை அதிகம் நினைவு கூர்வார். (2) அவர்களைச் சந்திப்பதில் ஆவல் கொள்வார். ஒவ்வொரு நேசனும் தனது நேசத்துக்குரியவரை சந்தப்பதில் ஆசை கொள்வான். (3) அவர்களை நினைவு கூரப்படும் போது அவர்களை கண்ணியப்படுத்தல். (இஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்: நபி (ஸல்) அவர்களது மறைவுக்குப் பின்னர் அவர்களது தோழர்கள் அவர்களை நினைவுகூரும் போதெல்லாம் உள்ளச்சம் கொண்டு பூரிப்படைந்து அழுது விடக்கூடியவர்களாக இருந்தார்கள். (4) அவர்கள் வெறுத்தவர்களை வெறுத்து, அவர்கள் விரோதித்தவர்களை விரோதித்து, நயவஞ்சகர்கள், மற்றும் பித்அத்துடையவர்களில் நின்றும், அவர்களது ஸுன்னாவுக்கு மாற்றம் செய்து அவர்களது மார்க்கத்தில் நூதனங்களை ஏற்படுத்தியவர்களை ஒதுக்கிவிடுவது. (5) அவர்களது குடும்பத்தினர், மனைவி மக்கள் மற்றும் அவர்களது முஹாஜிரீன், அன்ஸாரித் தோழர்களில் நின்றும் அவர்கள் நேசித்த அனைவரையும் நேசிப்பது. மேற்குறிப்பிட்டவர்களை விரோதித்தவர்களை நாமும் விரோதிப்பது. அவர்களை வெறுத்து ஏசிப் பேசியவர்களை நாமும் வெறுப்பது. (6) அவர்களது அழகிய குணங்களை எடுத்து நடப்பது. ஏனெனில் நபியவர்கள் மனித குலத்திலேயே குணத்தின் குன்றாகத் திகழ்ந்தார்கள். இதனால் தான் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: இறைத்தூதரவர்களின் பண்பு குர்ஆனாகவே இருந்தது. அதாவது குர்ஆன் கட்டளையிடாத ஒன்றை அவர்கள் செய்யமாட்டார்கள். அவர்களது பண்புகளைப் பொருத்த வரையில் அவர்கள் மனிதர்களிலேயே மிகத்துணிவுள்ளவர்களாக இருந்தார்கள். யுத்த முனைகளின் நிலை கடுமையாகும் போது அதிலும் துணிவுள்ளவர்களாகக் காணப்பட்டார்கள். மேலும் மிக்க கொடை வல்லலாகவும், ரமழான் மாத இரவு வணக்கம் புரிபவராகவும், நற்போதனை வழங்கும் சாந்தமான குணமுள்ளவராகவும் இருந்தார்கள். சொந்த விடயத்தில் யாரையும் பழி வாங்கமாட்டார்கள்.

இறைவனுடைய விடயங்களில் மனிதர்களிலே மிகக் கண்டிப்பானவராகக் காணப்பட்டார்கள். மேலும் மனிதர்களிலே வீட்டறையில் முடங்கிக்கிடக்கும் மறைவான கன்னிப் பெண்ணை விட மிக்க பணிவு, நாணம் நிறம்பியவராகக் காணப்பட்டார்கள். தனது குடும்பம், அனைத்து சிருஷ்டிகள் மீதும் கருணையுள்ளம் கொண்டவராகக் காணப்பட்டார்கள். மேலும் இன்னோரன்ன எத்தனையோ பண்புகள் அவரிடமிருந்தன.

# இஸ்லாத்தை முறிக்கக்கூடியவை

பின்வருவனவற்றை அல்லது அவற்றில் ஒன்றைச் செய்வது இஸ்லாத்தை விட்டும் நீக்கிவிடும்.

1 அல்லாஹ்வின் வணக்கத்தில் இணைவைத்தல். அல்லாஹ் கூறுகிறான்: *"அல்லாஹ் அவனுக்கு இணைவைப்பதை மன்னிக்கமாட்டான். அது தவிர்ந்தவைகளை அவன் நாடியவர்களுக்கு மன்னிப்பான்".*

2 யாராவது தனக்கும், அல்லாஹ்வுக்கும் இடையில் தரகர்களை ஏற்படுத்தி, அவர்களிடம் பிரார்த்தித்தால், சிபாரிசை வேண்டினால், அவர்கள் மீது நம்பிக்கை வைத்தால் ஏகோபித்த கருத்தின் படி அவன் காபிராகிவிட்டான்.

3 யாராவது முஷ்ரிகீன்களை காபிர் என்று கருதாவிட்டால், அவர்கள் காபிர் என்பதில் சந்தேகம் கொண்டால், அல்லது அவர்களது கொள்கையைச் சரிகண்டால் அவன் காபிராகிவிட்டான்.

4 யாராவது நபி (ஸல்) அவர்கள் காட்டிய வழியை விட வேறொருவர் காட்டிய வழி பூரணமானது, அல்லது அவர்களது தீர்ப்பை விட மற்றவர்களது தீர்ப்பு அழகானது என்றால் அவன் காபிராகிவிட்டான்.

5 யாராவது நபியவர்கள் கொண்டுவந்த ஒன்றை வெறுத்தால் அதை அவர் அமுல் நடத்தியபோதிலும் காபிராகிவிட்டார். அல்லாஹ் கூறுகிறான்: *"அல்லாஹ் இறக்கியதை அவர்கள் வெறுத்தார்கள். அல்லாஹ் அவர்களது நற்கிரியைகளை அழித்துவிட்டான்."*

6 ரஸூல் (ஸல்) அவர்களது மார்க்கத்தில் (அதன் நற்கூலி, தண்டனைகளில்) ஏதாவதொன்றைப் பரிகாசித்தால் ஏகோபித்த கருத்தின்படி காபிராகிவிடுவான். அல்லாஹ் கூறுகிறான்: *"(நபியே!) நீர் "நீங்கள் அல்லாஹ்வையும், அவனது அத்தாட்சிகளையும், அவனது தூதுவரையும் பரிகாசிக்கின்றீர்களா?" என்று கேட்பீராக.*

7 சூனியம் செய்தால், அதைச் சரிகண்டால் காபிராகிவிடுவான். அல்லாஹ் கூறுகிறான்: *"நாங்கள் சோதனையாக இருக்கிறோம். நீர் (இதைக் கற்று) நிராகரிப்பவராகாதே"* என்று சொல்லும் வரை அவர்கள் இருவரும் யாருக்கும் (சூனியத்தை) கற்றுக்கொடுக்க மாட்டார்கள்."

8 முஸ்லிம்களுக்கு எதிராக முஷ்ரிகீன்களுடன் சேர்ந்து ஒத்துழைத்தால், அவர்களுக்கு உதவி செய்தால் காபிராகவிடுவான். அல்லாஹ் கூறுகிறான்: *"உங்களில் யார் அவர்களை அதிகாரிகளாக எடுத்துக்கொள்கிறார்களோ அவர்களும் அவர்களைச் சேர்ந்தவர்கள்."*

9 மனிதர்களில் சிலருக்கு சரீஅத் சட்டங்களை விட்டும் விலகிநடக்க அனுமதி உண்டு என்று நம்பினால் காபிராகிவிடுவான். அல்லாஹ் கூறுகிறான்: *"யார் இஸ்லாம் அல்லாததை மார்க்கமாக எடுத்துக் கொள்கிறாரோ அவரிடமிருந்து அதை அங்கீகரிக்கப்படமாட்டாது. அவர் மறுமையில் நஷ்டவாளர்களில் உள்ளவராவார்"*

10 அல்லாஹ்வின் மார்க்கத்தைப் படிக்காமலும் அமுல் நடத்தாமலும் புறக்கணித்திருந்தால் காபிராகிவிடுவான். அல்லாஹ் கூறுகிறான்: *"அவனது இறைவனின் ஆயத்துக்களைக் கொண்டு உபதேசம் செய்யப்பட அதைப் புறக்கனித்தவனை விட அநியாயக்காரன் யார் இருக்கின்றான்?"*

# சுத்தம்

இஸ்லாத்தின் இரண்டாவது கடமையான தொழுகை சுத்தமின்றி நிறைவேறமாட்டாது. நீர் அல்லது மண் இன்றி சுத்தம் செய்ய முடியாது.

**தண்ணீரின் வகைகள் : 1- தாஹிர்.** தன்னிலும் துப்பரவானது. மற்றவைகளைத் துப்பரவும் செய்யக்கூடியது. அது தொடக்கையும் நீக்கும். நஜீஸையும் அகற்றும். **2- நஜீஸ்.** நஜீஸுடன் கலந்த கொஞ்சமான தண்ணீர். அல்லது நஜீஸால் நிறம், சுவை, மணம் இவைகளில் ஏதாவதொன்றில் மாற்றம் ஏற்பட்ட அதிகமான தண்ணீர்.

முக்கிய குறிப்பு : அதிகமான நீர் நஜீஸால் அதன் நிறம், சுவை, மணம் இவைகளில் ஏதாவதொன்றில் மாற்றம் ஏற்பட்டால் மாத்திரமே நஜீஸாக மாறும். கொஞ்சமான தண்ணீரில் நஜீஸ் பட்டதும் நஜீஸாக மாறிவிடும். **இரண்டு குல்லத் (சுமார் 210 லீட்டர்) அளவுள்ள தண்ணீரை அதிகமான தண்ணீர் எனப்படும்.**

**பாத்திரங்கள்.** தங்கம், வெள்ளி தவிர்ந்த அனைத்துத் துப்பரவான பாத்திரங்களையும் பாவிக்கலாம். தங்கம், வெள்ளிப் பாத்திரங்களால் துப்பரவு செய்தால் துப்பரவாகும். ஆனால் பாவித்தது குற்றமாகும். காபிர்களின் பாத்திரங்கள், உடுப்புக்கள் நஜீஸ் எனத் திட்டமாக அறியும் வரை பாவிக்கலாம்.

**இறந்த பிராணியின் தோல்:** இறந்த பிராணியின் தோல் நஜீஸாகும். இறந்த பிராணிகள் இருவகைப்படும். 1-அதன் இறைச்சி சாப்பிட அனுமதிக்கப்படாதவை. 2-இறைச்சி சாப்பிட அனுமதிக்கப்பட்ட பிராணி அறுக்கப்படாத நிலையில் மரணித்தது. இதன் தோல் பதனிடப்பட்டால் உலர்ந்தவைகளில் அதைப் பாவிக்கலாம். ஈரமானவற்றில் பாவிக்க முடியாது.

**மலசல துப்பரவு:** முன், பின் துவாரங்களால் ஏதும் வெளிப்பட்டால் துப்பரவு செய்வது அவசியம். தண்ணீரால் துப்பரவு செய்வதை \இஸ்தின்ஜா.˙.| என்றும் கல்லால் துப்பரவுசெய்வதை \இஸ்திஜ்மார்| என்றும் சொல்லப்படும். கல் போன்றதால் துப்பரவு செய்வதாக இருந்தால் அது துப்பரவானதாகவும், நஜீஸை உறிஞ்சி, அகற்றும் தன்மையுள்ளதாகவும், உணவுப் பதார்த்தம் அல்லாததாகவும் இருத்தல் அவசியம். மூன்று அல்லது அதைவிட அதிகமான கற்கள் அவசியம். மலசலம் கழிப்பவர் தேவைக்கு அதிகமாக மலசல கூடத்தில் இருப்பது தவிர்க்கப்படவேண்டும். நீர் துறையில், நடைபாதையில், மனிதர்கள் நிழல் பெறும் இடங்களில், பழம் காய்க்கும் மரங்களுக்குக் கீழால் மலசலம் கழித்தல் கூடாது.

மலசலகூடங்களுக்கு அல்லாஹ்வின் திக்ருகள் பதியப்பட்ட எதையும் எடுத்துச் செல்வது, அங்கு பேசுவது, பொந்துகளில் கழிப்பது, வலது கையால் மர்மஸ்தலத்தைத் தொடுவது, கிப்லாவை முன்னோக்குவது கூடாது. அவசியத் தேவையேற்படும் போது இவைகள் அனுமதிக்கப்படும். துப்பரவு செய்யும் போது மூன்று விடுத்தம் செய்வதும், கல்லால் துப்பரவு செய்த பின் தண்ணீரால் துப்பரவு செய்வதும் ஸுன்னத்தாகும்.

**பற்துலக்கல்.** \அறாக்| போன்ற மிருதுவான குச்சிகளால் பல் துலக்குவது ஸுன்னத்தாகும். தொழுகை, குர்ஆன் ஓதல், வுழு, தூக்கத்தை விட்டும் எழும்புதல், பள்ளி அல்லது வீட்டில் நுழைதல், வாயில் துர்வாடை ஏற்படல் போன்ற சந்தர்ப்பங்களில் அது முக்கிய ஸுன்னத்தாகும். பற்துலக்குவதிலும், சுத்தம் செய்வதிலும் வலதைக் கொண்டு ஆரம்பிப்பதும், கழிவுகளை நீக்கும் போது இடதை முற்படுத்துவதும் ஸுன்னத்தாகும்.

**வுழு: பர்ளுகள்:** 1- முகத்தைக் கழுவுதல் (வாய் கொப்பளித்தலும், மூக்குக்குத் தண்ணீர் செலுத்தலும் அதில் அடங்கும்) 2- விரல்களின் நுனியிலிருந்து முழங்கை வரை கைகளைக் கழுவுதல். 3- தலை முழுவதையும் இரு காதுகளையும் சேர்த்து தண்ணீரால் தடவுதல்.

4- கரண்டை உட்பட கால்களைக் கழுவுதல். 5- மேற்சொன்ன ஒழுங்கு முறையில் செய்தல். 6- தொடர்ச்சியாகச் செய்தல்.

**வுழூவின் ஸுன்னத்துக்கள்:** பற்துலக்கல், முகத்தைக் கழுவ முன் வாய் கொப்பளித்தலையும், மூக்குக்குத் தண்ணீர் செலுத்தலையும் முற்படுத்தல், நோன்பாளி அல்லாதவர்கள் வாய் கொப்பளித்தலிலும், மூக்குக்குத் தண்ணீர் செலுத்துவதிலும் கடப்பாகச் செய்தல், அடர்த்தியான தாடியைக் குடைந்து கழுவுதல், விரல்களைக் குடைந்து கழுவுதல். உறுப்புக்களில் வலதைக் கொண்டு ஆரம்பித்தல், இரண்டாவது- மூன்றாவது முறைகள் கழுவுதல், வலது கையால் மூக்குக்கு நீர் செலுத்தி இடது கையால் சீறிவிடல், உறுப்புக்களைத் தேய்த்தல், வுழூவை சம்பூரணமாகச் செய்தல், வுழூவின் பின் அதன் துஆவை ஓதல் என்பனவாகும்.

**வுழூவின் வாஜிப்கள்:** பிஸ்மியைக் கொண்டு ஆரம்பித்தல், தூக்கத்திலிருந்து விழித்தவன் தண்ணீரில் கையை ஆழ்த்த முன் இரண்டு முன்கைகளையும் கழுவிக்கொள்ளல் என்பனவாகும்.

**மக்ரூஹ்கள்:** (காரணமின்றி) சூடான, குளிரான தண்ணீரால் வுழூச் செய்தல், ஒரு உறுப்பை மூன்று முறைக்கு மேலதிகமாகக் கழுவுதல், உறுப்புக்களிலிருந்து தண்ணீரை உதறுதல், கண் உள்ளே கழுவுதல் என்பனவாகும். வுழூச் செய்த பின் துடைப்பதில் தவறில்லை.

வாய்கொப்பளிக்கும் போது வாயினுள்ளே தண்ணீரை அலச வேண்டும். மூக்கினுள்ளே தண்ணீரை இழுத்தெடுப்பதும் அவசியமாகும்.

**வுழூச் செய்யும் முறை:** மனதால் வுழூச் செய்வதை நாடிக்கொண்டு பிஸ்மில் சொல்வான். பின் இரண்டு முன் கைகளையும் கழுவுவான். அடுத்து வாய் கொப்பளித்து விட்டு மூக்கினுள் தண்ணீர் செலுத்தி சீறிவிடுவான். பின் முகத்தைக் கழுவுவான். (முகத்தின் எல்லை: நீள்பக்கமாக தலையில் முடி முளைக்கும் இடத்திலிருந்து நாடிக் குழி வரையும், அகலத்தால் இரண்டு காதுகளுக்கும் இடைப்பட்ட பகுதியுமாகும்.) பின் இரு கைகளையும் முழங்கை வரை கழுவுவான். அடுத்து நெற்றி முடிந்து தலை ஆரம்பமாகும் இடத்திலிருந்து பிடரி வரை தலை முழுவதையும் தண்ணீரால் தடவுவதுடன், (காதுக்கு மேலால் உள்ள வெண்மையான இடமும் தலையைச் சேர்ந்த பகுதியாகும்.) ஆள்காட்டி விரலை காதுக் குழிக்குள் இட்டு, பெருவிரல்களால் காதின் வெளிப் பகுதியைக் தடவுவான். பிறகு இரண்டு கால்களையும் கரண்டை வரை கழுவுவான்.

**கவனிக்கப்படவேண்டியது:** தாடி இலேசானதாக இருந்தால் தாடிக்கு உள்ளே இருக்கும் மேனியைக் கழுவுதல் வேண்டும். தாடி அடர்த்தியாக இருந்தால் தாடியின் வெளிப்பகுதியைக் கழுவினால் போதுமானது.

**ஹுப்பில் மஸ்ஹுச் செய்தல் (தண்ணீரால் தடவுதல்):** \ஹுப்| என்பது தோல் போன்றதால் செய்யப்பட்ட பாதணியாகும். கம்பளி போன்றதால் செய்யப்பட்டதாக இருந்தால் அதற்கு ஜவ்ரப் (மேஸ்) எனப்படும். வுழூவின் போது பின்வரும் நிபந்தனைகள் பேணப்பட்டிருந்தால் இவற்றின் மேல் தண்ணீரால் தடவுதல் கூடும். 1- (கால்கள் இரண்டையும் கழுவப்பட்ட) வுழூவுடன் இருக்கும் நிலையில் அணியப்படல் வேண்டும். 2- தயம்மும் போன்றன்றி தண்ணீரால் செய்யப்பட்ட வுழூவாக இருத்தல் வேண்டும். 3- அவை காலின் கட்டாயமாகக் கழுவப்படவேண்டிய பகுதிகளை மறைத்திருக்க வேண்டும். 4-அனுமதிக்கப்பட்ட ஒன்றால் செய்யப்பட்டவையாக இருத்தல் வேண்டும். 5- துப்பரவானதாக இருத்தல் வேண்டும்.

**ஹுப்பில் மஸ்ஹுச் செய்யும் அளவு:** கால் விரல்களிலிருந்து கணுக்கால் வரை மேற்பக்கமாக அதிகமான பகுதிகள்.

**கைவிரல்கள் விரிக்கப்பட்ட நிலையில் விரல்களால் மஸ்ஹுச் செய்யப்படும்.**

✷ வலதை முற்படுத்தாமல் இரண்டு கால்களையும் ஒரே விடுத்தமாக மஸ்ஹுச் செய்வதே சிறந்தது. ✷ ஹுப்பின் கீழ்பகுதியையோ அதன் குதிப்பகுதியையோ மஸ்ஹுச் செய்யக்கூடாது. ✷ ஹுப்பை மஸ்ஹுச் செய்யாமல் கழுவுதல், மஸ்ஹை மடக்கிச் செய்தல் மக்ரூஹ் ஆகும்.

**தலைப்பாகை:** பின்வரும் நிபந்தனைகளுடன் தலைப்பாகையின் மீதும் தண்ணீரால் தடவலாம். 1- தலைப்பாகை அணிந்தவன் ஆணாக இருத்தல் வேண்டும். 2- தலையின் வழமையான பகுதிகளை மறைத்திருத்தல் வேண்டும். 3- வுழூவின் போது மாத்திரமே செய்யப்படல் வேண்டும். 4- தண்ணீரால் செய்யபடக்கூடிய வுழூவாக இருத்தல் வேண்டும்.

**முக்காடு:** பின்வரும் நிபந்தனைகளுடன் முக்காடின் மீதும் தண்ணீரால் தடவலாம். 1- பெண்களுக்குரியதாக இருத்தல். 2- வுழூச் செய்யும் போதாக இருத்தல். 3- தண்ணீரைக் கொண்டு செய்யப்படக்கூடிய வுழூவாக இருத்தல். 4- தொண்டைக்குக் கீழால் சுற்றப்பட்டதாக இருத்தல். 5- தலையில் வழமையாக மறைக்கப்படும் பகுதிகளை மறைத்திருத்தல்.

**தலைப்பாகை, முக்காடு என்பவற்றில் பெரும் பகுதி மஸ்ஹுச் செய்யப்படவேண்டும்.**

**மஸ்ஹுச் செய்ய அனுமதிக்கப்பட்ட காலம்:** ஊரில் இருப்பவன் ஒரு முழுநாளும், பிரயாணி சுருக்கித்தொழ அனுமதிக்கப்பட்ட (பிரயாணத்தூரமான 85 கி.மீ.) பயனம் மேற்கொள்வதாகும். அது மூன்று பகல்களும், மூன்று இரவுகளுமாகும்.

**காலத்தின் ஆரம்பம்:** ஊரில் இருப்பவனாக இருந்தால் அதை அணிந்து முதலாவது முறை வுளூ முறிந்ததிலிருந்த நேரத்திலிருந்து ஆரம்பமாகி அடுத்த நாள் அதே நேரத்தில் முடிவடைகிறது. (24 மணித்தியாலங்கள்). (பிரயாணிக்கு 3 நாட்கள்)

**குறிப்பு:** பிரயாணத்தின் போது மஸ்ஹை ஆரம்பித்து ஊரை வந்தடைந்தால், அல்லது ஊரில் ஆரம்பித்து பிறகு பிரயாணமானால், அல்லது ஆரம்பித்த நேரத்தில் சந்தேகம் கொண்டால், ஊரில் இருப்பவனுக்குரிய சட்டத்தைப் பின்பற்றுவான்.

**ஜபீரத்:** \ஜபீரத்| என்பது எலும்புகள் முறிந்த போது வைத்துக் கட்டப்படும் பலகையாகும். பின்வரும் மூன்று நிபந்தனைகளுடன் அதன் மீதும் தண்ணீரால் தடவலாம். 1- தேவையின் போது அது கட்டப்பட்டிருத்தல் வேண்டும். 2- தேவையின் அளவைத் தாண்டியிருத்தல் கூடாது 3- அதைத் தண்ணீரால் தடவுவதுடன் ஏனைய பகுதிகள் கழுவப்படல் வேண்டும். தேவையின் அளவைத் தாண்டியிருந்தால் அதை நீக்குதல் அவசியமாகும். நீக்குவதால் ஏதும் தங்கடம் ஏற்படும் என்றிருந்தால் தண்ணீரால் தடவிக்கொள்ளலாம்.

**வுழூவை முறிக்கக்கூடியவை:** 1- முன், பின் துவாரத்தால் வெளிப்படக்கூடியவை. அவை: காற்று, இந்திரியம் போன்ற துப்பரவானதாக இருக்கலாம் அல்லது மலம், சலம், மதி போன்ற நஜீஸாக இருக்கலாம். 2- தூக்கம், மயக்கம் போன்றவற்றால் சுயநினைவிழத்தல். உட்கார்ந்த நிலையிலோ நின்ற நிலையிலோ ஏற்படக்கூடிய சிறு தூக்கத்தைத் தவிர. 3- மலம் அல்லது சலம் வழமைக்கு மாறான வழியால் வெளிப்படல். 4- மலம், சலம் அல்லாத நஜீஸான ஒரு பொருள் அதிகமாக வெளிப்படல். (இரத்தம் போன்றது). 5- ஒட்டக இறைச்சி சாப்பிடல். 6- திரையின்றி கையால் அபத்தைத் தொடல். 7- ஆண் பெண்ணையோ, பெண் ஆணையோ திரையின்றி இச்சையுடன் தொடல். 8- மதம் மாறல்.

**குறிப்பு:** யாருக்காவது வுழூச் செய்தது உறுதியாக இருந்து, அது முறிந்துவிட்டதா என்று சந்தேகம் ஏற்பட்டால், அல்லது முறிந்தது உறுதியாக இருந்து அதன்பின் வுழூச் செய்தேனா என்று சந்தேகம் கொண்டால் உறுதியானதை

எடுத்துக்கொள்வான். சந்தேகத்தை விட்டுவிடுவான்.
குளி: குளியைக் கடமையாக்கக்கூடியவைகள்: 1-விழிப்பில் உணர்ச்சியுடனும், தூக்கத்தில் உணர்ச்சியுடன் அல்லது உணர்ச்சியின்றி இந்திரியம் வெளிப்படல். 2- ஒரு ஆணின் ஆணுறுப்பின் கத்னாவுடைய அளவு பெண் உறுப்பில் செல்லல். (இந்திரியம் வெளிப்படாத போதிலும் சரியே) 3- முர்தத்தாயினும் ஒரு காபிர் இஸ்லாத்தில் நுழைதல். 4- மாதாந்த ருது வெளிப்படல். 5- பிரசவ ருது வெளிப்படல். 6- ஒரு முஸ்லிம் மரணித்தல்.

குளிப்பில் கடமையான முறை: அவசியமான குளியை நிறைவேற்றும் நோக்குடன் வாய், மூக்கு என்பவற்றின் உட்பாகம் முதல் உடம்பின் முழுப்பகுதியும் தண்ணீரால் கழுவப்பட்டால் குளி நிறைவேறிவிடும். ஆனாலும் குளி பரிபூரணமாக இருக்க பின்வரும் விடயங்களையும் நிறைவேற்றவேண்டும். 1- நிய்யத்து வைத்தல். 2- பிஸ்மிச் சொல்லல். 3- கைகளைப் பாத்திரத்தினுள் செலுத்த முன் கழுவிக்கொள்ளல். 4-அபத்தையும், அருவருப்பானவை பட்ட இடங்களையும் கழுவிக்கொள்ளல். 5-வுழூச் செய்தல். 6- முதலில் தலையில் மூன்று விடுத்தம் தண்ணீர் ஊற்றல். 7-பின்பு, உடம்பின் ஏனைய பகுதிகளுக்குத் தண்ணீர் ஊற்றல். 8-இரு கைகளாலும் உடம்பைத் தேய்த்தல். 9- வலதை முற்படுத்தல்.

வுழூவில்லாதவர் செய்யக்கூடாதவைகள்: 1- குர்ஆனைத் தொடல். 2- தொழுதல். 3- தவாப் செய்தல்.

குளி கடமையானவர் மேற்கூறப்பட்டவைகளுடன் பின்வருவனவற்றையும் செய்தல் கூடாது: 1- குர்ஆன் ஓதல். 2- வுழூ இன்றி பள்ளியினுள் தரித்தல்.

குளி கடமையானவர் வுழூவில்லாமல் தூங்குவதையும், குளிக்கும்போது தண்ணீரை வீண்விரயம் செய்வதையும் தவிர்க்கவேண்டும்.

தயம்மும்:

அதன் நிபந்தனைகள்: 1- தண்ணீர் பாவிக்க முடியாதிருத்தல்.
2- புழுதியுள்ள, சுடப்படாத சுத்தமான மண்ணைக் கொண்டிருத்தல்.

தயம்முமின் பர்ளுகள்: 1- முகத்தைத் தடவுதல். 2- இரண்டு முன்கைகளையும் மணிக்கட்டு வரை தடவுதல். 3- கூறப்பட்ட ஒழுங்கு முறையில் செய்தல். 4- தொடர்ச்சியாகச் செய்தல்.

தயம்முமை முறிப்பவை: 1- வுழூவை முறிப்பவைகள் அனைத்தும். 2- தண்ணீர் இல்லாததற்காகத் தயம்மும் செய்தவர் தண்ணீரைப் பெற்றுக்கொள்ளல். 3- தண்ணீரைப் பாவிக்க முடியாமலிருந்தவர் பாவிக்க முடியுமான நிலையைப் பெறுதல்.

தயம்முமின் ஸுன்னத்துகள்: 1- குளிக்குப் பதிலாகத் தயம்மும் செய்பவர் தொடர்ச்சியாகவும், ஒழுங்குப் பிரகாரமும் செய்தல். 2- கடைசி நேரம் வரை பிற்படுத்தல். 3- வுழூவின் பின் ஓதும் திக்ருகளை தயம்முமின் பின் ஓதுதல்.

குறிப்பு: கைகளை மண்ணில் ஒன்றுக்கு மேற்பட்ட விடுத்தங்கள் அடிப்பதைத் தவிர்க்க வேண்டும்.

தயம்மும் செய்யும் முறை: நிய்யத்துடன், பிஸ்மிச் சொல்லி இரண்டு கைகளையும் மண்ணில் தட்டுவான். பின் கைகளின் உட்பாகத்தால் முகத்தையும், தாடியையும் தடவுவான். பிறகு இடது முன் கையின் உட்புறத்தால் வலது முன்கையின் வெளிப்பகுதியையும், வலது முன்கையின் உட்புறத்தால் இடது முன் கையின் வெளிப்பகுதியையும் தடவுவான்.

நஜீஸை நீக்கல்: நஜீஸ் (அசுத்தம்) இரு வகைப்படும். அடிப்படையில் நஜீஸானவை. அவற்றைத் துப்பரவு செய்ய முடியாது. உதாரணமாக பன்றியைக் குறிப்பிடலாம். அதைக் கழுவுவதால் அது சுத்தமானதாக மாறிவிடாது. 2. அடிப்படையில் சுத்தமானதாக இருந்து நஜீஸான ஒரு

பொருள் கலந்ததால் நஜீஸாக மாறியது. (உ-ம்) ஆடை, நிலம். இவற்றை பின்வரும் அட்டவணையின் மூலம் விளக்கலாம்.

| பொருட்கள் | | தீர்ப்பு |
|---|---|---|
| மிருகங்கள் | அசுத்தமானவை | நாய், பன்றி, அவை ஈன்றவைகள், ஏனைய சாப்பிட அனுமதியற்ற பறவைகள், மற்றும் பூனையை விடப் பெரியதாக உள்ள மிருகங்கள், இவற்றின் சிறுநீர், மலம், வாந்தி, வியர்வை, பால், உமிழ்நீர் என்பன. |
| | சுத்தமானவை | 1. மனிதன் : அவனுடைய கழிவுப் பொருட்களில் இந்திரியம், வியர்வை, உமிழ்நீர், பால், மூக்குச் சளி,பெண்களின் அபத்தில் ஏற்படும் ஈரம் என்பன துப்பரவாகும். சிறு நீர், மலம். மதன நீர், வத்ய் என்பன அசுத்தமாகும். |
| | | 2. சாப்பிட அனுமதிக்கப்பட்ட மிருகங்கள் : இவற்றின் சிறுநீர், மலம், பால், வியர்வை உட்பட அனைத்து கழிவுப் பொருட்களும் சுத்தமானவை. |
| | | 3. தவிர்ந்து கொள்ள கஷ்டமானவை : (உ-ம்) கழுதை, பூனை. எலி போன்ற தோற்றத்தில் பூனையை விடச் சிறியவை. இவற்றின் உமிழ்நீரும் வியர்வையும் மாத்திரம் சுத்தமாகும். |
| இறந்தவை | மனிதன், மீன், வெட்டுக்கிளி என்பவற்றைத் தவிர்ந்த ஏனைய இறந்தவை அனைத்தும் அசுத்தமானவையாகும். இதே போன்று தேள், ஈ, நுளம்பு போன்ற ஓடும் இரத்தம் இல்லாதவற்றில் இறந்தவையும் சுத்தமானதாகும். | |
| சடப்பொருட்கள் | பூமி, கற்கள், இவை போன்றவை அனைத்தும் சுத்தமனைவை. (அசுத்தமானவை என விளக்கப்பட்ட சடப்பொருட்கள் விதிவிலக்காகும்.) | |

**குறிப்பு:** ✷ இரத்தம், சீழ், ஊணம் என்பன நஜீஸாகும். சுத்தமான பிராணியின் மேற்படிக் கழிவுப் பொருட்கள் கொஞ்சமாக இருந்தால் தொழுகையின் போது மன்னிக்கப்படும். ✷ மீன், அறுக்கப்பட்ட பிராணியின் இறைச்சியில், நரம்பில் தங்கியிருக்கும் இரத்தம் துப்பரவானதாகும். ✷ சாப்பிட அனுமதிக்கப்பட்ட பிராணியின் உடம்பிலிருந்து உயிருடன் இருக்கும் போது வெட்டி எடுக்கப்பட்டது நஜீஸாகும். கருவறையிலிருந்து எடுக்கப்பட்ட இரத்தக்கட்டி, சதைக்கட்டி என்பனவும் நஜீஸாகும்.✷ நஜீஸை நீக்குவதற்கு நிய்யத் அவசியமில்லை. மழை போன்றவற்றால் நஜீஸ் தானாகவே நீங்கிவிட்டால் துப்பரவாகிவிடும். ✷ நஜீஸைக் கையால் தொடுவதோ, அதன் மீது நடப்பதோ வுழுவை முறித்துவிடாது. நஜீஸையும் அது பட்ட இடத்தையும் துப்பரவு செய்யவேண்டும்.

**நஜீஸ் பட்ட இடம் சுத்தமாக மூன்று நிபந்தனைகள் உள்ளன:** 1-பரிசுத்தமான தண்ணீரால் கழுவப்படவேண்டும். 2- பிலிந்துவிடப்படக்கூடிய பொருளாக இருந்தால் தண்ணீரைப் பிலிந்துவிடவேண்டும். 3- கழுவுவதன் மூலம் மாத்திரம் நீங்காத நிலையிலுள்ள நஜீஸை சுரண்டி நீக்கிவிட வேண்டும். 4-நாய் சம்பந்தப்பட்ட நஜீஸாக இருந்தால் ஏழுவிடுத்தம் கழுவப்படவேண்டும். ஒரு விடுத்தம் மண், மற்றும் சவர்க்காரத்தால் கழுவப்படவேண்டும்.

**கவனிக்கப்படவேண்டிய சில விடயங்கள்:** ✷ நிலத்தில் உள்ள நஜீஸ் சிறு நீர் போன்ற திரவமாக இருந்தால் நஜீஸும், அதன் நிறமும், வாடையும் நீங்கும் வரை தண்ணீர் ஊற்றிவிட்டால் போதுமானது. மலம் போன்று தின்மமாக இருந்தால் அதுவும் அதன் அடையாளங்களும் முதலில் நீக்கப்படல் வேண்டும். ✷ நஜீஸ் இருந்த இடத்தைக் குறிப்பாக அறிய முடியவில்லையாயின் அப்பகுதி முழுவதும் கழுவப்படவேண்டும். ✷ ஸுன்னத் தொழுகைக்காக வுழுச் செய்தால் அதன் மூலம் பர்ளுத் தொழுகையும் தொழலாம். ✷ தூங்கினால், அல்லது காற்று வெளிப்பட்டால் தொழுகைக்காக வுழுச் செய்வதன்றி எந்தப் பகுதியும் கழுவப்படமாட்டாது.

# பெண்களின் வழமையான ருது சம்பந்தப்பட்ட சட்டங்கள்

**ஒரு பெண்ணுக்கு மாதாந்த ருது (ஹைள்) ஏற்பட மிகக் குறைந்த வயது ஒன்பதாகும்.** அந்த வயதுக்கு முன் அவளது முன் துவாரத்தால் இரத்தம் வெளிப்பட்டால் அதற்கு இஸ்திஹாளா[1] எனப்படும். மாதாந்த ருது வெளிப்படுவதற்கான கூடிய வயதிற்கு எல்லை கிடையாது.

**மாதாந்த ருது தரிபட்டிருக்கும் ஆகக் குறைந்த காலம் 24** மணித்தியாலங்களாகும். அதை விடக்குறைந்த காலம் இருந்தால் அது இஸ்திஹாளாவாகும்.

**அது தரிபட்டிருக்கும் ஆகக் கூடிய காலம் 15 நாட்களாகும்.** அந்தக் காலத்தை விடக் கூடினால் அதுவும் இஸ்திஹாளாவாகும்.

**இரண்டு ருதுவுக்கு இடைப்பட்ட காலம் 13 நாட்களாகும்.** 13 நாட்களுக்கு முன் இரத்தம் வெளிவந்தால் அதுவும் இஸ்திஹாளாவாகும்.

**பெண்களுக்கு பெரும்பாலும் மாதாந்த ருது தரிபட்டிருக்கும் காலம் ஆறு அல்லது ஏழு நாட்களாகும்.**

**பெரும்பாலும் இரண்டு ருதுகளுக்கு இடைப்பட்ட காலம் 23 அல்லது 24 நாட்களாகும்.**

கர்ப்பிணிப் பெண்ணிலிருந்து வெளிப்படும் இரத்தம் கலங்கள்[2], மஞ்சள்[3] என்பனவும் இஸ்திஹாளாவாகும்.

**ஒரு பெண் தான் துப்பரவாகிவிட்டதை எப்படி அறிவாள்?** அவள் வெண்மையான திரவத்தைக் கண்டால் துப்பரவாகிவிட்டாள்.[4] அல்லது இரத்தம், மஞ்சள் அல்லது கலக்கம் போன்றவற்றை விட்டும் மர்மஸ்தலம் காய்ந்து விட்டது என்பதை உணர்ந்தால் அவள் துப்பரவாகிவிட்டாள்.

**துப்பரவான காலத்தில் பெண்ணின் மர்மஸ்தலத்திலிருந்து வெளிப்படும் திரவப் பொருள்:** அது மெல்லியதாக அல்லது ஒட்டும் தன்மையுள்ள வெள்ளையாக இருந்தால் துப்பரவானது. இரத்தமாக, மஞ்சள் நிறமாக, கலங்கிய நிறமாக இருந்தால் நஜீஸாகும். இவை அனைத்தும் வுழூவை முறிக்கும். இவைகள் தொடர்ந்து வந்தால் அது இஸ்திஹாளாவாகும்.

**கலங்கிய நிறம், மஞ்சள்:** இவை மாதாந்த ருதுவைத் தொடர்ந்து வந்தால் அதுவும் மாதாந்த ருதுவின் சட்டத்துக்குறப்படும். தனியாக வந்தால் இஸ்திஹாளாவாகும்.

**வழமையான காலத்துக்கு முன் துப்பரவாகுதல்:** வழமையான காலத்துக்கு முன்பதாக ருது வெளிப்படுவது நின்றுவிட்டால் அவள் துப்பரவானவளாகவே கணிக்கப்படுவாள்.

**வழமையான காலத்துக்கு முன்பு அல்லது பின்பு ருது வெளிப்படல்:** மாதாந்த

---

[1] **மாதாந்த ருது (ஹைள்):** இது பிரசவம் போன்ற காரணங்களின்றி ஆரோக்கிய நிலையில் இயற்கையாக வரும் இரத்தமாகும். **இஸ்திஹாளா:** நோய் அல்லது வேறு கோளாருகள் காரணமாக வழமையான காலம் அல்லாததில் இரத்தம் வெளியாவதாகும்.
**அவ்விரண்டுக்கும் மத்தியிலுள்ள வித்தியாசம்:** மாதாந்த ருதுவின் இரத்தம் கருப்புக்கு நெருங்கிய கடும் சிவப்பாகவும், கடினமானதாகவும், விட்டு விட்டு வரக்கூடியதாகவும், பெரும்பாலும் துர்வாடை வீசக்கூடியதாகவும் இருக்கும். இஸ்திஹாளா இரத்தம் வடியும் தன்மையுள்ளதாகவும், தெளிவான சிவப்பாகவும், மிருதுவானதாகவும், சாதாரண இரத்த வாடையுள்ளதாகவும் இருக்கும்.
**மாதாந்த ருது வரும் நிலையில் தொழுவது, நோன்பு நோற்பது, தவாப் செய்வது, குர்ஆனை ஓதுவது, அல்லது தொடுவது, பள்ளியில் தரித்திருப்பது அபத்தில் உறவுகொள்வது, விவாகரத்துச் செய்வது ஆகிய அனைத்தும் தடைசெய்யப்பட்டதாகும்.**

[2] ஊதா நிறத்திலான இரத்தம்.

[3] மஞ்சள் நிறத்திலான இரத்தம்.

[4] ஒரு பெண் மாதவிடாயை விட்டும் சுத்தமாகும் சந்தர்ப்பத்தில் அவளுடைய அபத்திலிருந்து வெளியேறும் ஒரு திரவம். அது சுத்தமானது. அது வெளிப்படுவது வுழூவை முறிக்கும்

ருதுவுக்குள்ள அடையாளங்கள் இருந்து, முந்திய ருது வந்து 15 நாட்களையும் தாண்டிவிட்டால் அதுவும் மாதாந்த ருதுவாகக் கணிக்கப்படும். இன்றேல் அது இஸ்திஹாளாவாகும்.

**வழமையான காலத்தை விடக் கூடுதலாக அல்லது குறைவாக ருது வருதல்:** 15 நாட்களைத் தாண்டாவிட்டால் அதுவும் மாதாந்த ருதுவாகவே கணிக்கப்படும்.

**ஒரு பெண்ணுக்குத் தொடர்ச்சியாக பல நாட்கள் ருது வருதல்:** அவ்வாறான பெண்களுக்கு மூன்று நிலைகள் உண்டு: 1- ஒவ்வொரு மாதத்திலும் ருது வரக்கூடிய நாள், தரிபட்டிருக்கும் காலம் பற்றி அறிந்திருக்கிறாள். அவளது இரத்தம் ஒரே வகையாக அல்லது வித்தியாசமானதாக இருக்கின்றது. இவ்வாறான பெண் வழமையான காலத்தை மாதாந்த ருதுவாகவும், ஏனைய காலத்தை இஸ்திஹாளாவாகவும் கணிப்பாள். 2- ஒவ்வொரு மாதத்திலும் ருது வரக்கூடிய நாள் பற்றி அறிந்திருக்கிறாள். ஆனால் எவ்வளவு காலம் தரிபட்டிருக்கும் என்பது பற்றி அறியவில்லை. இவள் வழமையான திகதியிலிருந்து 6 அல்லது 7 நாட்களை மாதாந்த ருதுவாகக் கணிப்பாள். 3- ஒவ்வொரு மாதத்திலும் ருது ஆரம்பிக்கக் கூடிய நாள் பற்றி அறியவில்லை. ஆனால் தரிபட்டிருக்கும் காலம் பற்றி அறிந்திருக்கிறாள். இவள் ஒவ்வொரு பிறை மாதத்தின் ஆரம்பத்திலிருந்து குறித்த காலத்தை மாதாந்த ருதுவாகக் கணிப்பாள்.

**ஒரு பெண்ணுக்கு பிரசவத்தின் பின் இரத்தம் வெளிவரவில்லையானால்:** அவளுக்கு பிரசவ ருது வரக்கூடிய பெண்ணுக்குள்ள எந்த சட்டமும் கிடையாது. அவள் மீது குளி கடமையில்லை. அவளது நோன்பு முறியவும் மாட்டாது.

**பிரவசவத்தின் அடையாளங்களைக் காணல்:** பிரசவத்திற்கு சற்று முன்னால் வலியுடன் வெளிவரும் இரத்தம், நீர் என்பன இஸ்திஹாளாவாகும்.

**பிரசவம் நடைபெறும் போது வெளியாகும் இரத்தம்:** பிள்ளை வெளிப்பட முந்தியாயினும் அல்லது ஒரு பகுதி வெளிப்பட்டிருந்தாலும் இது பிரசவ ருதுவாகும். இந்தக் காலத்திற்குரிய தொழுகையை களாச் செய்யத் தேவையில்லை.

**பிரசவ ருதுவின் காலம் எப்போது ஆரம்பமாகும்?** சிசு முழுமையாக வெளியில் வந்ததும் பிரசவ ருதுவின் காலம் ஆரம்பமாகிவிடும்.

**பிரசவ ருதுவின் குறைந்த காலம் எவ்வளவு?** குறைந்த காலம் என்று எதுவும் கிடையாது. பிரசவித்தவுடன் இரத்தம் நின்றுவிட்டால் உடனடியாக குளித்து தொழலாம். நாற்பது நாள் வரை எதிர்பார்த்திருக்க அவசியமில்லை.

**பிரசவ ருதுவின் கூடிய காலம் எது?** நாற்பது நாட்களாகும். அதை விட அதிகமானால் அதைப் பொருட்படுத்தப்படமாட்டாது. நாற்பது நாட்கள் முடிந்ததும் குளித்துத் தொழலாம். நாற்பது நாட்களைத் தாண்டி வரும் இரத்தம் கர்ப்ப காலத்துக்கு முந்திய மாதாந்த ருதுவின் காலத்துக்கு நேர்பட்டிருந்தால் அதையும் மாதாந்த ருதவாகக் கணிக்கப்படும்.

**இரட்டைப் பிள்ளைகளைப் பிரசவித்த பெண்:** முதலாவது பிள்ளையைப் பெற்றவுடனே பிரசவ ருதுவின் காலம் ஆரம்பமாகிறது.

**குறைமாதப் பிரசவத்தின் பின்பு வரும் இரத்தம்:** சிசு கற்பத்தில் 80 நாட்களைத் தாண்டியிலுந்தால் அந்த இரத்தம் இஸ்திஹாளாவாகும். 90 நாட்களைத் தாண்டியிருந்தால் அது பிரசவ ருதுவாகும். 80 நாட்களுக்கும் 90 நாட்களுக்கும் இடைப்பட்ட காலமாக இருந்தால் அந்தச் சிசு மனித உருவம்

பெற்றிருந்தால் அதைப் பிரசவித்த பிறகு வரும் இரத்தம் பிரசவ ருதுவாகும். மனித உருவம் பெற்றிருக்காவிட்டால் இஸ்திஹாளாவாகும்.

**நாற்பது நாட்களுக்கு இடைப்பட்ட காலத்தில் ருது நின்று பின்பு மீண்டும் வந்தால்:** நாற்பது நாட்களுக்கிடைப்பட்ட காலத்தில் இரத்தம் நின்று விட்டால் குளித்துத் தொழவேண்டும். மீண்டும் அந்தக் காலத்துக்குள் வந்தால் அதுவும் பிரசவ ருதுவாகக் கணிக்கப்படும்.

**கவனிக்கப்படவேண்டியவை:** ✷ ம.்.றிப் ஆக முன் ஒரு பெண்ணுக்கு மாதாந்த ருது, அல்லது பிரசவ ருது நின்றுவிட்டால் அவள் அன்றைய தினம் ளுஹர், அஸர் ஆகிய இரு தொழுகைகளையும் களாச் செய்யவேண்டும். அவ்வாறே ஸுப்ஹுக்கு முன் துப்பரவானால் அன்றைய தினத்தின் ம.்.றிப், இஷா ஆகிய இரண்டு தொழுகைகளையும் களாச் செய்யவேண்டும். ✷ஒரு தொழுகையின் நேரம் உண்டாகி தொழ முன் ஒரு பெண்ணுக்கு மாதாந்த ருது, பிரசவ ருது ஏற்பட்டால் அந்த நேரத்துத் தொழுகையை அவள் களாச் செய்ய வேண்டியதில்லை. ✷மாதாந்த ருது, பிரசவ ருதுவின் பின் குளிக்கும் போது தலை முடி பிண்ணப்பட்டிருந்தால் அவிழ்த்துவிடுவது கட்டாயமாகும். ஏனைய கட்டாயமான குளிகளுக்காக அவிழ்ப்பது கட்டாயமாகாது. ✷இஸ்திஹாளாவில் இருக்கும் பெண்ணுடன் உடலுறவு கொள்ளல் தவிர்க்கப்படவேண்டும். கணவனுக்குக் கட்டாயமான தேவையேற்பட்டால் தவறில்லை. ✷இஸ்திஹாளா ஏற்பட்டுள்ள பெண் மாதவிடாய்க்காக குளித்ததன் பின் ஒவ்வொரு தொழுகைக்காகவும் வுழூச் செய்துகொள்வாள். ✷ ஒரு பெண் ஹஜ், உம்ரா கிரியைகளை அல்லது ரமழான் மாத நோன்பை முழுமையாக நிறைவேற்றும் நோக்கில் ருதுவை குறிப்பிட்ட சில நாட்களுக்குத் தடை செய்யும் மருந்துகளை அவளது உடம்புக்குத் தீங்கில்லாவிட்டால் உபயோகிக்கலாம்.

# இஸ்லாத்தில் பெண்கள்

ஈமான் கொள்ளல், நற்கிரியைகள் செய்தல் என்பவற்றில் அல்லாஹ் ஆண்களுக்கு என்ன கூலிகளையும் சிறப்புக்களையும் வழங்குகின்றானோ அதே சிறப்புக்களையும் கூலிகளையும் அவன் பெண்களுக்கும் வழங்குகின்றான். நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: ***பெண்கள் ஆண்களின் உடன் பிறப்புக்கள்*** (அவர்களுக்கு ஒத்தவர்கள்). ---அபூ தாவூத்- அவளுக்கு தனது உரிமையைக் கேட்டுப் பெற்றுக் கொள்ளவும் அவளுக்கு இழைக்கப்பட்ட அநீதியை முறைப்பாடு செய்யவும் உரிமை இருக்கின்றது. மார்க்கத்தின் எல்லாச் சட்டதிட்டங்களிலும் ஆண்களும், பெண்களும் சமமாவர். ஆனால் அவர்கள் இருவருக்கும் இடையில் வித்தியாசம் உண்டு என குறிப்பாகச் சொல்லப்பட்டவற்றை விதிவிலக்காகக் கொள்ளப்படும். அவை ஒப்பீட்டளவில் மிகச் சொற்பமான சட்டங்களேயாகும். மெலும் மார்க்கம் ஆண்கள், பெண்கள் ஆகிய ஒவ்வொருவருடைய உடலமைப்பு, ஆற்றல்கள் என்பனவற்றின் அடிப்படையிலேயே ஒவ்வொருவருக்கும் குறிப்பான சட்டங்களை வழங்கியுள்ளது. அல்லாஹ் கூறுகின்றான். *"படைத்தவன் அறியமாட்டானா?* அவன் நுணுக்கமான அறிவுடையவனும் விளங்கி அறிந்தவனுமாயிருக்கும்.

பெண்ணுக்கென குறிப்பான சில பொறுப்புக்கள் இருக்கின்றன. அதே போன்று ஆணுக்கும் குறிப்பான பொறுப்புக்கள் இருக்கின்றன. ஓர் இனத்துக்குக்

குறிப்பான ஒன்றில் மற்ற இனம் தலையீடு செய்வது வாழ்க்கைச் சமநிலையில் பாதிப்பை ஏற்படுத்தும். ஒரு பெண்ணைப் பொறுத்தவரையில் அவள் வீட்டில் இருந்தவாறே ஆணுக்கும் வழங்கும் கூலிகளைப் பெற்றுக் கொள்ள வாய்ப்புக்கள் வழங்கப்பட்டுள்ளன. ஒரு அஸ்மா பின் யஸீத் (ரழி) என்ற பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அச்சந்தர்ப்பத்தில் நபித் தோழர்களும் அங்கு காணப்பட்டார்கள். அப்பெண்மணி சொன்னாள் : அல்லாஹ்வின் தூதரே எனது தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும். நான் பெண்கள் சார்பாகவும் எனக்கு கற்றுக்கொடுக்கும் நோக்குடனும் வந்துள்ளேன். அர்ப்பணங்கள் உங்களுக்குக் கிடைக்கட்டும். நான் உங்களிடம் வருகை தருவதை அறிந்திருக்கும் அல்லாது அறியாமல் இருக்கின்ற மேற்கிலோ கிழக்கிலோ வசிக்கின்ற எந்தப் பெண்மணியும் உனது கருத்திலே தான் இருக்கின்றார்கள். நிச்சயமாக அல்லாஹ் சத்தியத்தைக் கொண்டு உங்களை ஆண்களுக்கும் பெண்களுக்கும் துஸதராக அனுப்பி வைத்தான். உங்களையும் உங்களை அனுப்பிவைத்த உங்கள் இறைவனையும் நாங்கள் ஈமான் கொண்டிருக்கின்றோம். பெண்களாகிய நாங்கள் உங்கள் வீடுகளில் முடக்கி வைக்கப்பட்டுள்ளோம். உங்கள் இசசைளைத் தீர்க்கும் இடமாகவும் உங்கள் பிள்ளைகளைச் சுமக்கக் கூடியவர்களாகவும் இருக்கின்றோம். ஆண்களாகிய நீங்கள் ஜும்ஆத் தொழுகை, ஜமாஅத் தொழுகை, நோயாளிகளை நோய் வினவச் செல்லல், ஜனாஸாக்களில் கலந்து கொள்ளல், ஒரு ஹஜ்ஜிற்குப் பின் இன்னொரு ஹஜ் போன்றவற்றைக் எங்களைக் காண சிறப்பிக்கப்பட்டுள்ளீர்கள். ஆவை எல்லாவற்றையும் விட மிகச் சிறந்ததாகிய புனிதப் போரும் உங்களுக்கிருக்கின்றது. ஆண்களாகிய உங்களில் ஒருவர் ஹஜ், உம்ரா, புனிதப் போர் போன்றவற்றிற்கு வெளியாகிச் சென்றால் உங்கள் செல்வங்களை உங்களுக்குப் பாதுகாத்துத் தருகின்றோம். உங்களுக்கு ஆடைகளை நெய்து தருகின்றோம். உங்கள் சிறுவர்களை உங்களுக்காக பராமரிக்கின்றோம். ஆனால் அல்லாஹ்வின் தூதரே எங்களுக்கு உங்களுக்குக் கிடைக்கும் கூலி கிடைப்தில்லையே? அப்போது நபி (ஸல்) அவர்கள் தனது தோழர்களின் பால் முழுமையாகத் திரும்பி "(மார்க்க) விடயத்தில் இப்பெண்ணை விட மிக அழகிய முறையில் கேள்வி கேட்கும் ஒரு பெண்ணுடைய வார்த்தையைக் நீங்கள் கேட்டுள்ளீர்களா? எனக்கேட்டார்கள். ஒரு பெண் இவ்வாறு கேட்க அறிந்திருப்பாள் என நாங்கள் கருதவில்லை அல்லாஹ்வின் தூதரே என்றார்கள், பின் நபியவர்கள் அப்பெண்ணின் பால் திரும்பி பெண்ணே திரும்பிச் செல்வீராக. உங்களுக்குப் பின் இருக்கும் பெண்களுக்கு அறிவியுங்கள், உங்களில் ஒருவர் தனது கணவனுடைய கடமைகளைச் சிறந்த முறையில் செய்வதும் அவனின் திருப்தியைத் தேடுவதும் அவனின் விருப்பத்துக்கு நேர்பாடாக தன்னை அமைத்துக் கொள்வதும் மேற் குறிப்பிடப்பட்ட அமல்களுக்கு நிகராகும். எனச் சொன்னார்கள். அப்பெண் சந்தோசத்தினால் லாஇலாஹ இல்லல்லாஹ் என்று சொன்னவளாகவும் தக்பீர் சொன்னவளாகவும் திரும்பிச் சென்றாள். (பைஹகி) மேலும் நபியவர்களிடம் சில பெண்கள் வந்து அல்லாஹ்வின் தூதரே ஆண்கள் அல்லாஹ்வின் பாதையில் புனிதப் போர் புரியும் சிறப்பை எடுத்துக் கொள்கின்றார்கள். புனிதப் போர்புரிபவர்களின் சிறப்புக்களை நாம் அடைவதற்குரிய நற்கிரியைகள் ஏதும் இருக்கின்றதா? என வினவினார்கள். அதற்கு நபியவர்கள் உங்களில் ஒருவர் தனது வீட்டு வேலைகளைச்

செய்வதன் மூலம் அல்லாஹ்வின் பாதையில் போர்புரிவத் நன்மயை அடையலாம் என்றார்கள். மேலும் தனது உறவு முறைப் பெண்ணுக்கு உதவி ஒத்தாசைகள் புரிவதிலும் அல்லாஹ் பெரும் கூலியை வைத்துள்ளான். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *இரண்டு பெண்மக்களுக்கு அல்லது இரு சகோதரிகளுக்கு அல்லது இரு உறவு முறைப் பெண்களுக்கு அல்லாஹ்வின் பொருத்தத்தை எதிர்பார்த்தவராக செலவு செய்து அல்லாஹ் அவர்களுக்கு ஒரு வழியை ஏற்படுத்தும் வரை அல்லது அவர்களுக்கு செல்வத்தை வழங்கும் வரை அதைச் செய்தால் அவர்கள் இருவரும் இவனை நரகை விட்டும் பாதுகாக்கும் திரையாக அமைந்து விடுவார்கள்.* (தபரானி)

## பெண்களின் சட்டங்களில் சில :

✷ ஓர் ஆண் தனக்கு திருமணம் முடிக்க அனுமதிக்கப்படாத பெண்ணுடன்[1] தனித்திருப்பது ஹராமாகும். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *ஓர் ஆண் திருமணம் செய்ய அனுமதிக்கப்படாத பெண்ணைத் தவிர்த்து மற்ற எந்தப் பெண்ணுடன் தனித்திருக்க வேண்டாம்.* (புகாரி, முஸ்லிம்)

✷ பள்ளியில் தொழ பெண்களுக்கு அனுமதி உண்டு. ஆனால் அவர்களுக்கு பித்னாக்கள் ஏற்படும் என்ற பயம் இருந்தால் அவ்வாறு செல்வது மக்ரூஹாகும். ஆயிஷா (ரழி) அவர்கள் கூறினார்கள்: **இன்று பெண்கள் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் மாற்றங்களை நபியவர்கள் அறிந்திருப்பின் பெண்கள் பள்ளிகளுக்கு வருவதைத் தடுத்திருப்பார்கள்.** ஆண்கள் பள்ளியில் தொழுவதன் மூலம் பெற்றுக் கொள்ளும் பன்மடங்கு நன்மைகளை பெண்கள் வீட்டில் தொழுவதன் மூலம் பெற்றுக் கொள்ளலாம். ஒரு பெண் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, “யா ரஸூலல்லாஹ்! நான் உங்களுடன் தொழ விரும்புகிறேன்" என்றாள். அதற்கு நபியவர்கள் “நீ என்னுடன் தொழ விரும்புகிறாய் என்பது எனக்குத் தெரியும். எனினும் நீ உனது வீட்டில் அறையில் தொழுவதற்காக ஒதுக்கப்பட்ட இடத்தில் தொழுவது அறையில் (ஏனைய இடங்களில்) தொழுவதை விடச் சிறந்ததாகும். நீ உனது வீட்டு அறையில் தொழுவது உனது வீட்டின் நடுப்பகுதியில் தொழுவதை விடச் சிறந்ததாகும். நீ உனதுவீட்டின் நடுப்பகுதியில் தொழுவது அயல் பள்ளிவாசலில் தொழுவதைவிடச் சிறந்ததாகும். நீ உனது அயல் பள்ளிவாசலில் தொழுவது எனது பள்ளிக்கு வந்து தொழுவதை விடச் சிறந்ததாகும்." எனக் கூறினார்கள். (அஹ்மத்) மேலும் நபியவர்கள் கூறினார்கள்: *பெண்களன் பள்ளிகளில் மிகச் சிறந்தது அவர்களின் வீடாகும்.* (அஹ்மத்)

✷ ஒரு பெண்ணுக்கு ஹஜ், உம்ரா ஆகிய வணக்கங்கள் அவள் மஹ்ரமான ஓர் ஆண் துணையைப் பெற்றுக் கொள்ளும் சந்தர்ப்பத்தில் தான் கடமையாகும். முஹரமான ஆண்துணை இல்லாத சந்தர்ப்பத்தில் அவள் பயணங்கள் மேற்கொள்வதும் அனுமதிக்கப்படமாட்டாது. நபி) (ஸல்) அவர்கள் கூறினார்கள்: *ஒரு பெண் மூன்று நாள் தூரத்தை விட அதிக தூரம் ஒரு மஹ்ரம் துணையுடனே தவிர பயணம் செய்யமாட்டாள்.* (புகாரி, முஸ்லிம்)

✷ மேலும் பெண்கள் கப்றுகளை ஸியாரத் செய்வதும் மரணித்தவரின்

---

[1] ஒரு பெண்ணுடைய மஹ்ரம் என்பது அவளுக்குத் திருமணம் முடிக்க நிரந்தரமாக ஹராமாக்கப்பட்ட ஆண்கள். அவர்கள் : தந்தை, பாட்டன் (தலை முறை உயர்ந்தாலும் சரியே), மகன். மகனின் மகன் (கீழிறங்கினாலும் சரியே, சகோதரன், சகேதரனுடைய பிள்ளைகள்,சகேதரியுயை பிள்ளைகள், தந்தையின் உடன் பிறப்புக்கள், தாயின் உடன்பிறப்புக்கள், கணவனின் தந்தை. அவரின் மகன், செவிலித் தந்தை, மகன். சகோதரன், மகளின் கணவன், தாயின் கணவன்.

ஈமக்கிரியைகளில் கலந்து கொள்வது தடுக்கப்பட்டுள்ளது. ***கப்ருகளை ஸியாரத் செய்யக்கூடிய பெண்களை அல்லாஹ் சபிப்பானாக,என நபியவர்கள் கூறினார்கள்.*** மேலும் உம்மு அதிய்யா (ரழி) கூறுகின்றார்கள்: **ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்வதை விட்டும் நாங்கள் தடுக்கப்பட்டோம்.** (முஸ்லிம்)

✷ அத்தடை எம்மீது கட்டாயத் தடையாக இருக்கவில்லை. பெண்கள் அவர்களுடைய தலை முடிகளுக்கு எந்த நிரத்தைக் கொண்டும் நிறம் போட அனுமதிக்கப்பட்டுள்ளார்கள். ஆனால் கருப்பினால் நிறம் போடுவது மக்ரூஹாகும். ஆனால் தன்னைத் திருமண முடிக்க விரும்பும் ஓர் ஆணை ஏமாற்றும் நோக்கில் இதைச் செய்யலாகாது.

✷ ஒரு பெண்ணுக்கு அனந்தரச் சொத்துக்களில் அல்லாஹ் வழங்கியிருக்கும் பங்குகளை முழுமையாகக் கொடுக்கப்பட வேண்டும். ***யார் அனந்தரம் பெறத் தகுதியான ஒருவரின் அனந்தரத்தை அபகரித்துக் கொள்கின்றாரோ அல்லாஹ் சுவனத்தில் அவனுக்கிருக்கும் அனந்தரத்தைப் பறித்துக் கொள்வான் என நபியவர்கள் கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளது.*** (இப்னு மாஜஹ்)

✷ ஒரு மனைவிக்கு உணவு, பானம், ஆடை, வதிவிடம் உட்பட எல்லா வாழ்வாதாரங்களையும் வழங்குவது கணவனின் மீது கடமையாகும். அல்லாஹ் கூறுகின்றான்: ***வசதியுள்ளவர்கள் தனது வசதயிலிருந்து செலவு செய்யட்டும். யாருக்கு மட்டுப்படுத்தப்பட்ட வசதி வழங்கப்பட்டுள்ளதோ அவர் அல்லாஹ் அவருக்கு வழங்கியதிலிருந்து செலவு செய்யட்டும்.*** கணவனில்லாத ஒரு பெண்ணின் வாழ்வாதாரங்கள் அவளின் தந்தைக்கோ சகோதரனுக்கோ மகனுக்கோ கடமையாகும். அவளுக்கு உறவினர்கள் யாரும் இல்லாத படசத்தில் ஏனையோர் அவளின் செலவினங்களை வழங்குவது ஸுன்னத்தாகும். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ***விதவைப் பெண்களுடையவும் வறியவர்களுடையவும் விடயங்களில் முயற்சிகளை மேற்கொள்பவன் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிபவனைப் போன்றாகும் அல்லது இரவு நின்று வணங்கி பகல் நோன்பு பிடிப்பவனைப் போன்றாகும்.*** (புகாரி, முஸ்லிம்)

✷ ஒரு பெண் மறுமணம் புரியாத வரை வரை அவளே தனது சிறிய பிள்ளைகளைப் பராமரிக்கத் தகுதியானவள். வுளிடம் விள்ளை இருக்கும் வரை அதன் செலவினங்கள் அதன் தந்தை அவளிடம் வழங்க வேண்டும்.

✷ பெண்கள் குறிப்பாக வாலிபப் பெண்களும் பித்னாவுக்கு வாய்ப்புள்ளவர்களும் ஆண்களுக்கு ஸலாத்தை ஆரம்பிக்கக்கூடாது.

✷ பெண்கள் அவர்களுடைய மர்மஸ்தலத்தின் முடிகளையும், கமுக்கக் கட்டு முடிகளையும் நீக்கிக் கொள்வதும் நகங்களைக் களைவதும் ஸுன்னத்தாகும். அவற்றை நாய்பது நாட்களுக்கு மேலால் விட்டுவிடுவது மக்ரூஹாகும்.

✷ இரு புருவங்கள் உள்ளிட்டமுகத்தின் முடிகளை நீக்குவது ஹராமாகும். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ***அல்லாஹ் முகத்தின் முடிகளை நீக்குபவர்களையும் நீக்கச் சொல்பவர்களையும் சபித்துள்ளான்.*** (அபூ தாவூத்)

✷ **துக்கம் அனுஷ்டித்தல்:** ஒரு பெண் அவளது கணவன் மரணமானதற்கன்றி வேறொருவருடைய மரணத்திற்காக மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் அனுஷ்டிப்பது ஹராமாகும். ஆனால் கணவனுக்காக அவள் 4 மாதங்களும் பத்து நாட்களும் துக்கம் அனுஷ்டிப்பது கடமையாகும். மேலும், துக்கம் அனுஷ்டிக்கும் காலத்தில் அப்பெண் குங்குமம் போன்ற அலங்காரப் பொருட்களையும், நறுமணம் பாவிப்பதையும் விட்டுவிடுவது கடமையாகும். அத்துடன் மோதிரம் உட்பட எந்த ஒரு ஆபரணங்களையும் அணியக்கூடாது.

மேலும், அலங்கரத்திற்கான நிறங்களாகிய சிவப்பு, மஞ்சள் போன்ற நிறங்களிலான உடைகளை அணிவதையும், மருதோண்டி, ஏனைய பூச்சுக்களால் தன்னை அழகுபடுத்துவதையும், கறுப்பு நிறத்தால் சுர்மா இடுவதையும், நறுமணம் கலந்த எண்ணெய் பூசுவதையும் கட்டாயம் தவிர்க்கவேண்டும். ஆனால் அப்பெண்ணுக்கு நகம் வெட்டுவது, முடிகளைக் களைவது, குளிப்பது என்பன அனுமதிக்கப்பட்டவைகளாகும். துக்கம் அனுஷ்டிக்கும் பெண் கறுப்பு அல்லது வெள்ளை போன்ற ஒரு குறிப்பிட்ட நிறத்தினாலான ஆடையையே அணியவேண்டும் என்ற கட்டாயம் கிடையாது.

அவள் எந்த வீட்டில் இருக்கும்போது அவளது கணவன் மரணமானாரோ அதே வீட்டில் அவள் இத்தாவை நிறைவேற்றுவது கட்டாயமாகும். ஏதேனும் தேவைக்காகவன்றி அவ்வீட்டிலிருந்து வேறு இடத்துக்குப் போவது ஹராமாகும். அத்துடன் இத்தா அனுஷ்டிக்கும் பெண் ஏதேனும் தேவைக்காகவன்றி பகல் பொழுதில் வீட்டைவிட்டு வெளியே செல்லக்கூடாது.

✷ ஒரு பெண் தன்னுடைய முடிகளை முழுமையாகச் சிறைப்பது ஹராமாகும். ஆண்களுக்கு அல்லது காபிர்களுக்கு ஒப்பாகாமல் கட்டையாக வெட்டிக் கொள்ள அனுமதி உண்டு. ***ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் பெண்களில் ஆண்களுக்கு ஒப்பாகுபவர்களைச் சபித்துள்ளார்கள்*** (திர்மிதி). மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ***யாராவது ஒரு கூட்டத்தினருக்கு ஒப்பாகுவாராயின் அவரும் அக்கூட்டத்தைச் சார்ந்தவரே.*** (அபூ தாவூத்)

✷ ஒரு பெண் வீட்டிலிருந்து வெளியாகும் போது பின்வரும் நிபந்தனைகள் பூரணமாகக் காணப்படும் அங்கியால் தனது உடலை மறைப்பது கடமையாகும். 1. முழு உடம்பையும் மறைக்கக்கூடியதாக இருக்க வேண்டும். 2. அவ்வாடையே கவர்ச்சியானதாக இருக்கக்கூடாது. 3. உடம்பை மறைக்காத அளவு மெல்லியதாக இருக்கக் கூடாது. 4. இறுக்கமானதாக இல்லாமல் விசாலமானதாக இருக்க வேண்டும். 5. மனம் பூசப்படாததாக இருக்க வேண்டும். 6. ஆண்களின் ஆடைக்கு ஒப்பாகக் கூடாது. 7. மாற்று மதப் பெண்களின் ஆடையை ஒத்ததாக இருக்கக் கூடாது. 8. பிரபல்யத்தை ஏற்படுத்தும் விதமான ஆடையாக இருக்கக்கூடாது. ஒருமனிதனின் அல்லது மிருகத்தின் உருவம் உள்ள ஆடைகளை அணிவதோ அல்லர் அவற்றை சுவர் போன்றவற்றில் அழகுக்காகத் தொங்கவிடுவதோ அல்லது அவற்றை விற்பதோ ஹராமாகும்.

**மற்றவர்களுடன் ஒரு பெண் பேணவேண்டிய அவ்ரத் (மறைக்கப்பட வேண்டிய பகுதி) 3 வகைப்படும்.** 1. கணவனின் முன்னிலையில்: கணவன் அவளுடைய உடம்பில் எந்தப் பகுதியையும் பார்க்க அனுமதி உண்டு 2. பெண்களுக்கும் மஹ்ரமான ஆண்களுக்கும் முன்னிலையில்: இவர்களுக்கு முன் முகம், முன்கை. முன்கால் கழுத்துப் பகுதி போன்ற சாதாரண நிலையில் தெரியும் பகுதிகளை வெளிப்படுத்தலாம். 3. அந்நிய ஆண்களுக்கு முன்: இவர்களுக்கு முன் பெண்பார்ப்பது அல்லது மருத்துவத் தேவை என்பவற்றிற்கன்றி முழு உடம்பையும் மறைப்பது கடமையாகும். ஏனெனில் பெண்களின் பித்னா அவர்களுடைய முகத்தில் தான் இருக்கின்றது. நாங்கள் முகங்களை ஆண்களுக்கு முன் மூடிக்கொள்வோம் என பாதிமா பின்த் முன்திர் (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள். (ஹாகிம்) ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: **நாங்கள் நபியவர்களுடன் இஹ்ராம் பூண்டுள்ள நிலையில் பயணிகள் எங்களைக் கடந்து செல்வார்கள். அவர்கள் எங்களை நெருங்கும் போது நாம் தலை மூடிகளை இழுத்து முகம் வரை மூடிக்**

**கொள்வோம். அவர்கள் எங்களைத் தாண்டிச் சென்ற பின் மீண்டும் முகத்தைத் திறந்து கொள்வோம்.** (அபூ தாவூத்)

✷ **இத்தா: (இத்தா மேற்கொள்ளும் பெண்கள் பல பிரிவினராகும்).**

1) கர்ப்பிணிப்பெண்: இப்பெண் தலாக் அல்லது கணவனின் மரணம் என்பவற்றிற்காக பிள்ளையைப் பெற்றெடுக்கும் வரை இத்தா அனுஷ்டிக்க வேண்டும். 2) கணவன் மரணமான பெண்: இப்பெண் 4 மாதங்களும் 10 நாட்களும் இத்தா அனுஷ்டிக்க வேண்டும். 3) (தலாக் சொல்லப்பட்ட) மாதவிடாய் ஏற்படக்கூடிய சாதாரண பெண்: இவள் மூன்று மாதவிடாய் ஏற்படும் காலம் இத்தா இருக்க வேண்டும். தலாக் சொன்னதிலிருந்து மூன்றாவது மாதவிடாய் சுற்றிலிருந்து துப்பரவாவதுடன் இத்தா முடிவடைந்துவிடும். 4) மாதவிடாய் ஏற்படாத பெண்: இவளது இத்தாவின் காலம் மூன்று மாதங்களாகும்.

இத்தாவின் காலத்தில் மீட்டெடுக்க முடியுமான விதத்தில் தலாக் சொல்லப்பட்ட ஒரு பெண் தனது இத்தாக் காலத்தில் கணவனுடனேயே தொடர்ந்து இருப்பது கடமையாகும். இத்தா முடியும் வரை கணவன் அவளை நினைத்த விதத்தில் பார்ப்பதும், அவளுடன் தனித்திருப்பதும் கூடுமானதாகும். இவ்வாறு இருப்பதால் சிலவேளை அவ்விருவருக்கும் மத்தியில் அல்லாஹ் மனக்கசப்பை நீக்கி இணக்கப்பாட்டை ஏற்படுத்த வாய்ப்புண்டு.

✷ மேலும், இத்தா இருக்கும் பெண்ணை மீட்டி எடுப்பதற்காக மனைவியிடம் கணவன் "உன்னை நான் திருப்பி எடுத்து விட்டேன்" என்று சொல்வது அல்லது அவளுடன் உடலுறவில் ஈடுபடுவது போதுமானதாகும். அப்பெண்ணின் விருப்பத்துடனேயே அவை நடைபெற வேண்டும் என்ற கட்டாயத் தேவை கிடையாது.

ஒரு பெண் தானாகத் திருமணம் செய்து கொள்ளமாட்டாள். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **தனது பொறுப்பாளரின் அனுமதியின்றி ஒரு பெண் திருமணம் செய்தால் அவளுடைய திருமணம்** செல்லுபடியாகாது, (அபூ தாவூத்)

✷ ஒரு முடிகளைச் சேர்ப்பதும் பச்சை குத்துவதும் தடுக்கப்பட்டுள்ளது. நபி (ஸல்) அவர்கள். ***கூறினார்கள்.பொய்க் கொண்டை சேர்ப்பவர்களையும், அதனைச் செய்யுமாறு வேண்டுபவர்களையும், பச்சை குத்துபவர்களையும், குத்துமாறு ஏவக் கூடியவர்களையும் அல்லாஹ் சபிப்பானாக.*** (புகாரி, முஸ்லிம்)

✷ ஒரு பெண் தக்க காணமின்றி கணவனிடம் விவாகரத்தைக் கோருவது ஹராமாகும். நபி (ஸல்) அவர்கள். ***கூறினார்கள்.யாராவது ஒரு பெண் தகுந்த காரணமின்றி தனது கணவனிடம் விவாகரத்தைக் கேட்டால் சுவர்க்கத்தின் வாடை அவள் மீது ஹராமாகிவிடும்.*** (அபூ தாவூத்)

✷ ஒரு பெண் தனது கணவனுக்கு முழுமையாகக் கட்டுப்படுவது குறிப்பாக படுக்கைக்கு அழைக்கும் போது கட்டுப்படுவது கடமையாகும். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். ***ஒரு கணவன் தனது மனைவியை படுக்கைக்கு அழைத்து, அவள் அதற்கு இணங்க மறுத்தால் விடியும் வரை மலக்குகள் அவளை சபித்துக் கொண்டிருப்பார்கள்.*** (புகாரி, முஸ்லிம்)

ஒரு பெண் பாதையில் செல்லும் போது அந்நிய ஆண்களைச் சந்திக்க நேரும் எனக் கருதினால் நறுமனம் பூசிய நிலையில் வெளியில் செல்லல் ஹராமாகும். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். ***ஒரு பெண் நறுமனம் பூசி அவர்கள் அதை நுகர வேண்டும் என எதிர்பார்த்து ஒரு கூட்டத்தைத் தாண்டிச் சென்றால் அவள் விபச்சாரியாவாள்.*** (அபூ தாவூத்)

# தொழுகை

ஊரில் இருக்கும் ஆண்களுக்கு அதானும், இகாமத்தும் பர்ளு கிபாயாவாகும். தனித்துத் தொழுபவர்களுக்கும், பிரயாணிகளுக்கும் ஸுன்னத்தாகும். பெண்களுக்கு மக்ரூஹாகும். தொழுகையின் நேரம் நுழைய முன்பு அவை செய்யப்படக்கூடாது. ஸுப்ஹு நேரத்தில் மாத்திரம் நள்ளிரவுக்குப் பின் முதலாவது அதான் சொல்லலாம்.

தொழுகையின் நிபந்தனைகள்: 1- இஸ்லாம் 2- புத்திசுவாதீனம் 3- பகுத்தறிவு 4- சக்திபெற்ற போது சுத்தம் செய்தல். 5- நேரம் நுழைதல்.

ளுஹருடைய நேரம் சூரியன் நடு உச்சியிலிருந்து மேற்காக சாய ஆரம்பித்ததும் ஆரம்பமாகி ஒரு பொருளுடைய நிழல் அந்தப் பொருளின் அளவை அடையும் வரையுமாகும். அத்தோடு அஸர் நேரம் ஆரம்பமாகிறது. ஒரு பொருளின் நிழல் அதன் அளவில் இரண்டு மடங்கு அடையும் வரை சிறப்புடைய நேரமாகும். சூரியன் மறையும் வரை அனுமதிக்கப்பட்ட நேரமாகும். சூரியன் மறைந்ததும் மஃரிபுடைய நேரமாகும். செம்மேகம் மறைவதுடன் மஃரிபுடைய நேரம் முடிவடைந்து இஷாவுடைய நேரமாகிவிடும். இரவின் அரைப் பகுதி வரை சிறப்புக்குரிய நேரமாகும். பஜ்ரு உதயமாகும் வரை இது இருக்கும். பஜ்ரு உதயமாவதுடன் ஸுப்ஹு நேரம் ஆகிவிடுகிறது. சூரியன் உதயமாவதுடன் ஸுப்ஹின் நேரம் முடிவடைந்துவிடும்.

6- அவ்ரத்தை மறைத்தல்[1]. 7- சக்தியுள்ளவர் உடல், உடை, தொழுமிடம் ஆகியவற்றில் நஜீஸைத் தவிர்ந்துகொள்வதாகும். 8- சக்திபெற்றவர் கிப்லாவை முன்னோக்குவதாகும். 9- நிய்யத்து.

தொழுகையின் பர்ளுகள்: தொழுகையின் பர்ளுகள் பதினான்காகும். 1- சக்திபெற்றவர் பர்ளான தொழுகையில் நின்று தொழுதல். 2- இஹ்றாம் தக்பீர் கூறுதல். 3-பாத்திஹா ஓதல். 4- ஒவ்வொரு ரக்அத்திலும் றுகூஉ செய்தல். 5- றுகூஇலிருந்து எழும்புதல். 6- றுகூஉக்குப் பின்னால் நிலையில் நிற்றல். 7- ஏழு உறுப்புக்கள் மூலம் (நிலத்தில் தொட) ஸுஜூது செய்தல். 8- இரண்டு ஸுஜூதுக்கும் இடையில் உட்காருதல். 9- கடைசி அத்தஹிய்யாத்து. 10- அதற்காக உட்காருதல். 11- கடைசி அத்தஹிய்யாத்தில் நபியவர்கள் பேரில் ஸலவாத்துச் சொல்லல். 12- முதலாவது ஸலாம். 13- செயல் சம்பந்தமான எல்லா பர்ளுகளிலும் தரித்தல். 14- பர்ளுகளைக் கூறப்பட்ட ஒழுங்கில் செய்தல். **இந்த பர்ளுகள் இன்றி தொழுகை நிறைவேறாது. வேண்டுமென்றோ, மறந்தோ இவைகளில் ஒன்றை விட்டால் அந்த ரக்அத் நிறைவேறாது.**

தொழுகையின் வாஜிப்கள் எட்டாகும். 1- இஹ்ராம் தக்பீர் தவிர்ந்த ஏனைய தக்பீர்கள். 2- இமாம் அல்லது தனித்துத் தொழுபவர் \ஸமிஅல்லாஹ் லிமன் ஹமிதஹ்| என்று கூறுதல். 3- றுகூஇலிருந்து எழும்பும் போது \றப்பனா வலகல் ஹம்து| **என்று** கூறுதல். 4- றுகூஉவில் ஒரு விடுத்தம் \ஸுப்ஹான றப்பியல் அளீம்| என்று கூறுதல். 5- ஸுஜூதில் ஒரு விடுத்தம் \ஸுப்ஹான றப்பியல் அஃலா| என்று கூறுதல். 6- இரண்டு

[1] அவ்ரத் என்பது ஒரு மனிதனின் மறைக்கப்பட வேண்டிய வெளியாகுவதற்கு வெட்கப்படும் பகுதியாகும். ஏழு வயதை அடைந்த ஒரு ஆண் பிள்ளையின் அவ்ரத் இரு முன் பின் துவாரமாகும். 10 அல்லது அதற்கு மேற்பட்ட வயதை அடைந்தவரின் அவ்ரத் தொப்புளுக்கும் முழங்காலுக்கும் இடைப்பட்ட பகுதியாகும். பெண்ணின் முகம், தவிர்ந்த உடம்பின் அனைத்துப் பகுதிகளும் அவ்ரத்தாகும். தொழுகையில் முகத்தை மறைப்பது மக்ரூஹாகும். ஆனால் அந்நிய ஆண்களுக்கு முன் மறைப்பது கட்டாயமாகும். அவளது உடம்பில் ஏதாவது ஒரு பகுதி வெளியாகிய நிலையில் அவள் தொழுதால் அல்லது தவாப் செய்தால் அது ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. முன் பின் துவாரங்கள் கடுமையான அவ்ரதாகும். தொழுகைக்கு வெளியில் கூட இவ்விரண்டையும் மறைப்பது கடமையாகும். தனிமையில் அல்லது இருளில் உள்ள சந்தர்ப்பத்தில் அவற்றைத் தேவையின்றி வெளிப்படுத்துவது மக்ரூஹாகும்.

ஸுஜூதுகளுக்கும் இடையில் \றப்பிக்பிர்லீ என்று கூறுதல். 7- முதலாவது அத்தஹிய்யாத்து ஓதல். 8- அதற்காக உட்காரல்.

**இந்த வாஜிப்களை வேண்டுமென்று விட்டால் தொழுகை வீணாகிவிடும். மறதியாக விட்டால் ஸஜ்தாச் செய்ய வேண்டும்.**

**தொழுகையின் ஸுன்னத்துகள்:** அவை சொல் சம்பந்தமானவைகளும், செயல் சம்பந்தமானவைகளும் உள்ளன. அவைகளில் எதையும் வேண்டுமென்று விட்டாலும் தொழுகை வீணாக மாட்டாது. **சொல் சம்பந்தமான ஸுன்னத்துகள்:** (பாத்திஹாவுக்கு முன் ஓதப்படும்) இஸ்திப்தாஹ் துஆ ஓதல், அஊது சொல்லல், பிஸ்மி சொல்லல், ஆமீன் கூறல், சப்தமாக ஓதும் தொழுகையில் ஆமீனை சப்தமாகச் சொல்லல், பாத்திஹாவுக்குப் பின்னால் குர்ஆனில் ஏதாவது ஓதல், இமாம் சப்தமாக ஓதல், (மஃமூம் சப்தமாக ஓதக் கூடாது. தனித்துத் தொழுபவர் சப்தமாக ஓத அனுமதியுண்டு.) றப்பனா வலகல் ஹம்து என்பதன் பின் ஹம்தன் கஸீரன்... என்ற திக்ரை முழுமையாக ஓதல், றுகூஉ, ஸுஜூது, நடு இருப்பு ஆகியவற்றில் தஸ்பீஹ்களை ஒன்றுக்கு மேற்பட்ட விடுத்தம் ஓதல், ஸலாம் கொடுக்க முன் துஆ ஓதல்.

**செயல் சம்பந்தமான ஸுன்னத்துகள்:** இஹ்ராம் தக்பீரின் போதும், றுகூஉக்குச் செல்லும் போதும், றுகூஉவிலிருந்து எழும்பும் போதும், மூன்றாவது ரக்அத்துக்கு எழும்பும் போதும் கைகளை உயர்த்தல். நிலையில் இருக்கும் போது வலது கையை இடது கைக்கு மேலாக நெஞ்சின் மீது வைத்தல், ஸுஜூது செய்யும் இடத்தை நோட்டமிட்டுக்கொண்டிருத்தல், நிலையில் இரண்டு பாதங்களையும் பிரித்து வைத்தல், ஸுஜூதின் போது முதலில் முட்டுக்காலையும் அடுத்து இரண்டு கைகளையும், அடுத்து நெற்றியையும் மூக்கையும் நிலத்தில் படுமாறு வைத்தல், கைகளை விலாவை விட்டும் தூரப்படுத்தல், வயிற்றை தொடையை விட்டும் தூரப்படுத்தல், தொடையைக் கால்களை விட்டும் தூரப்படுத்தல், முட்டுக்கால்களுக்கிடையில் அகற்றிவைத்தல், பாதங்களைப் பிரித்தவாறு நிமிர்த்தி வைத்தல், விரல்களின் உட்பகுதியை பூமியில் அழுத்தமாக வைத்தல், இரு கைகளையும் விரிக்கப்பட்டதாக, விரல்கள் சேர்க்கப்பட்டதாக தோள்புயத்துக்கு நேராக வைத்தல், எழும்பும் போது இரு கைகளையும் முழங்காலில் ஊன்றி எழும்புதல், நடு இருப்பிலும், முந்திய அத்திஹிய்யாத்திலும் \இப்திராஷ்\ இருப்பு இருத்தல், பிந்திய அத்திஹிய்யாத்தில் \தவர்ருக்\ இருப்பு இருத்தல், நடு இருப்பிலும், அத்தஹிய்யாத்தின் இருப்பிலும் இரண்டு கைகளையும் விரிக்கப்பட்டதாக, விரல்கள் சேர்க்கப்பட்டதாக தொடையின் மேல் வைத்தல், வலது கையின் சிறிய விரலையும், அடுத்த விரலையும் மடித்து நடுவிரலை பெருவிரலுடன் சேர்த்து வட்டமாக்கிக்கொண்டு (அல்லாஹ்வின் பெயர் குறிப்பிடும் போதும், துஆவின் போதும்) ஆள்காட்டி விரலால் சைக்கினை செய்தல், ஸலாமின் போது வலது பக்கமும், இடது பக்கமும் தலையைத் திருப்புதல், ஸலாமின் போது வலதைக் கொண்டு ஆரம்பித்தல் என்பனவாகும்.

**மறதிக்கான ஸஜ்தா:** தொழுகையில் ஓதப்படும் ஒரு ஓதலை அதற்குரிய இடம் அல்லாததில் ஓதினால் ஸஜ்தாச் செய்வது ஸுன்னத்தாகும். உதாரணமாக ஸஜ்தாவில் குர்ஆன் ஓதுவது போன்றாகும். ஒரு ஸுன்னத்தை விட்டால் ஸஜ்தா ஆகுமானதாகும். ஒரு றுகூஉ அல்லது ஸுஜூது அல்லது நிலையை அதிகரித்தால், தொழுது முடிய முன் ஸலாம் கொடுத்தால், ஓதல்களில் பொருளை மாற்றக்கூடிய விதத்தில் தவறுவிட்டால், ஒரு வாஜிபை விட்டால், ஒன்றை அதிகப்படுத்தியதின் நேரத்தில் சந்தேகம் கொண்டால் ஸஜ்தாச் செய்வது அவசியமாகும். அவசியமான ஸஜ்தாவை வேண்டுமென்று விடுவதால் தொழுகை முறிந்துவிடும். ஸஜ்தாவை ஸலாமுக்கு முன்போ, பின்போ செய்யலாம்.

ஸஜ்தாவை மறந்து நேரம் அதிகமாகிவிட்டால் பிறகு ஸஜ்தாச் செய்ய அவசியமில்லை.

**தொழுகை முறை:** தொழ ஆரம்பிக்கும் போது கிப்லாவை முன்னோக்கி நின்று **“அல்லாஹு அக்பர்”** என்று தக்பீர் சொல்லவேண்டும். இமாம் அந்தத் தக்பீரையும் ஏனைய தக்பீர்களையும் மஃமூம்களுக்குக் கேட்கும் விதத்தில் சப்தமாகச் சொல்வார். ஏனையவர்கள் மெதுவாகச் சொல்வர். தக்பீர் ஆரம்பிக்கும் போது இரு கைகளையும் தோள்புயத்துக்கு நேராக உயர்த்துவார். பிறகு இரு கைகளையும் (வலது கையால் இடது கையைப் பிடித்த நிலையில்) நெஞ்சுக்குக் கீழாக வைப்பார். ஸுஜுதுடைய இடத்தில் பார்வையைச் செலுத்துவார். ஹதீஸில் இடம்பெற்றுள்ள **(ஸுப்ஹானகல்லாஹும்ம வபிஹம்திக வதபாரகஸ்முக வதஆலா ஜத்துக வலா இலாஹ கைருக)** போன்ற \இஸ்திப்தாஹ்| உடைய துஆக்களில் எதையாவது ஓதுவார். பின்பு இமாம் அஊது, பிஸ்மி ஓதுவார். (இவைகளை மெதுவாகவே ஓதுவார்.) பின்பு பாத்திஹா ஓதுவார். சப்தமாக ஓதும் தொழுகையில் இமாம் வாய் மூடியிருக்கும் நேரத்தில் மஃமூம் பாதிஹாவை ஓதுவது முஸ்தஹப்பாகும். மெதுவாக ஓதப்படும் தொழுகையில் வாஜிபாகும். அதற்குப் பின் குர்ஆனில் ஏதாவது ஒரு பகுதியை ஓதுவார். ஸுப்ஹுத் தொழுகையில் திவாலுல் முபஸ்ஸலிலிருந்தும், மஃறிபில் கிஸாருல் முபஸ்ஸலிலிருந்தும், ஏனைய தொழுகைகளில் அவ்ஸாதுல் முபஸ்ஸலிலிருந்தும் ஓதுவது ஸுன்னத்தாகும். ‘திவாலுல் முபஸ்ஸல்’ என்பது ஸுரத்துல் காப் முதல் அம்ம ஸுரத்து வரையும், ‘அவ்ஸாதுல் முபஸ்ஸல்’ என்பது அம்ம ஸுரத்திலிருந்து ளுஹா வரையும், ‘கிஸாருல் முபஸ்ஸல்’ என்பது ளுஹாவிலிருந்து அந்நாஸ் வரையுமாகும். இமாம் ஸுப்ஹுத் தொழுகையிலும், மஃறிப், இஷாவுடைய முந்திய இரண்டு ரக்அத்துகளிலும் சப்தமாக ஓதுவார். ஏனைய இடங்களில் மெதுவாக ஓதுவார். அதற்குப் பின் தக்பீர் சொல்லி, இரண்டு கைகளையும் தோள் புயத்துக்கு நேராக உயர்த்தி றுகூஉ செய்வார். இரண்டு கைகளையும் இரண்டு முட்டுக்காள்களின் மீது விரல்களை விரித்தவாறு வைப்பார். முதுகை நீட்டி, தலை அதற்கு நேர்படும் வகையில் குனிவார். பிறகு **\ஸுப்ஹான றப்பியல் அளீம்|** என்று மூன்று விடுத்தம் ஓதுவார். பிறகு **\ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ்|** என்று சொன்னவாறு தலையை உயர்த்துவார். அப்போது இஹ்ராம் தக்பீரில் போன்று கையை உயர்த்துவார். பின் **(ரப்பனா வலகல் ஹம்து ஹம்தன் கஸீரன் தையிபன் முபாரகன் பீஹி மில்அஸ் ஸமாவாதி வமில்அல் அர்லி அமில்அ மா சிஃத மின் சைஇன் பஃது)** என்று ஓதுவார். பின் தக்பீர் சொன்னவனாக ஸுஜூத் செய்வார். கைகளை விலாவை விட்டும், வயிற்றை தொடையை விட்டும் தூரப்படுத்திக் கொள்வார். இரு கைகளையும் தோள்புயத்துக்கு நேராக வைத்துக்கொள்வார். கைகால் விரல்களை கிப்லாப் பக்கமாக வைத்துக்கொள்வார். பிறகு \ஸுப்ஹான றப்பியல் அஃலா| என்று மூன்று விடுத்தம் கூறுவார். அவர் விரும்பின் அதிகப்படுத்தலாம். அல்லது தேவையான பிரார்த்தனைகளைச் செய்துகொள்ளலாம். பிறகு தக்பீர் சொன்னவராக எழும்பி இடது காலை விரித்து அதன் மேல் உட்கார்ந்து வலது காலை நட்டி அதன் விரல்களை கிப்லாப் பக்கமாக வைத்துக்கொள்வார். அல்லது இரண்டு கால்களையும் நட்டி அவற்றின் விரல்களை கிப்லாப் பக்கமாக வைத்து, பித்தட்டின் மீது உட்கார்ந்துகொள்வார். பிறகு **(றப்பிக்பிர்லீ)** என்று இரண்டு விடுத்தம் கூறி விரும்பினால் **(வர்ஹம்னீ வஜ்புர்னீ வர்பஃனீ வர்ஸுக்னீ வன்ஸுர்னீ வஹ்தினீ வஆபினீ)** என்ற துஆவையும் சேர்த்துக்கொள்ளலாம். பிறகு இரண்டாவது ஸுஜூதையும் முந்தியதைப் போன்று செய்வார். பிறகு தக்பீர் சொன்னவாறு எழும்பி இரண்டாவது ரக்அத்தையும் முந்தியதைப் போன்று தொழுவார். இரண்டாவது றக்அத்தையும் முடித்தால் அத்தஹிய்யாத்துக்காக உட்காருவார். இரண்டு கைகளையும் விரிக்கப்பட்டதாக, விரல்கள் சேர்க்கப்பட்டதாக தொடையின் மேல் வைப்பார், வலது கையின் சிறிய விரலையும் அடுத்த விரலையும் மடித்து

நடுவிரலை பெருவிரலுடன் சேர்த்து வட்டமாக்கிக்கொண்டு ஆள்காட்டி விரலால் சைக்கினை செய்வார். பிறகு அத்தஹிய்யாத்து ஓதுவார்.
**(அத்தஹிய்யாது லில்லாஹி வஸ்ஸலவாது வத்தய்யிபாது அஸ்ஸலாமு அலைக அய்யுஹன் நபிய்யு வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு அஸ்ஸலாமு அலைனா வஅலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன் அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லல்லாஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸூலுஹு)** மூன்று, நான்கு ரக்அத்துத் தொழுகையாக இருந்தால் தக்பீர் சொன்னவராக, கைகளை உயர்த்தியவராக எழும்புவார். முந்திய ரக்அத்துகளைப் போன்று தொழுவார். ஆனாலும் சப்தமாக ஓதமாட்டார். நிலையில் பாத்திஹா மாத்திரம் ஓதுவார். பிறகு கடைசி அத்தஹிய்யாத்துக்காக உட்காருவார். இடது காலை விரித்து வலது காலுக்குக் கீழால் வெளிப்படுத்துவார். வலது காலை நட்டிக்கொள்வார். இரண்டு அத்தஹிய்யாத்து உள்ள தொழுகையில் பிந்திய அத்தஹிய்யாத்தில் இவ்விதம் உட்காருவது ஸுன்னத்தாகும். பிறகு முன்கூறிய அத்தஹிய்யாத்தை ஓதிவிட்டு
(அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா ஸல்லைத அலா இப்றாஹீம வஅலா ஆலி இப்றாஹீம இன்னக ஹமீதுன் மஜீது. அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த அலா இப்றாஹீம வஅலா ஆலி இப்றாஹீம இன்னக ஹமீதுன் மஜீது) என்பதை ஓதுவார். பிறகு
(அஊது பில்லாஹி மின் அதாபின்னாரி வஅதாபில் கப்ரி வபித்னதில் மஹ்யா வல்மமாதி வபித்னதில் மஸீஹித் தஜ்ஜால்)

என்ற துஆவையும் ஹதீஸில் வந்த ஏனைய துஆக்களையும் ஓதுவார். பிறகு இரண்டு ஸலாம்கள் சொல்வார். வலது பக்கமாகத் தலையைத் திருப்பி **அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹ்!** என்றும் பின் இடது பக்கமாகத் தலையைத் திருப்பியும் அவ்வாறே சொல்வார். பிறகு ஹதீஸில் குறிப்பிடப்பட்டுள்ள திக்ருகளை ஓதுவார்.[1]

**நோயாளியின் தொழுகை:** ஒருவர் நின்று தொழ முடியாதவராக இருந்தால், அல்லது நின்று தொழுதால் நோய் அதிகரிக்கும் என்றிருந்தால் உட்கார்ந்து தொழலாம். அதற்கும் முடியாவிட்டால் விலாப் பக்கம் சாய்ந்து தொழலாம். அதற்கும் முடியாதவர் மல்லாந்து படுத்துத் தொழலாம். ருகூஉ, ஸுஜூது செய்ய முடியாதவர்கள் சைக்கினை செய்வார்கள். தொழுகைகள் தவறினால் அவற்றைத் தொழுதுகொள்ள வேண்டும். ஒவ்வொரு தொழுகையையும் உரிய நேரத்தில் தொழமுடியாதளவு பாதிப்புக்குள்ளாகி கடும் கஷ்டமாக இருந்தால் ளுஹரையும், அஸரையும் ஒன்று சேர்த்தும், மஃரிபையும் இஷாவையும் ஒன்று சேர்த்தும் தொழலாம்.

---

[1] **அஸ்தஃபிருல்லாஹ்** என்று (3) மூன்று விடுத்தம் கூறி அல்லாஹும்ம அன்தஸ்ஸலாம், வமின்கஸ்ஸலாம், தபாரக்த யாதல் ஜலாலி வல்இக்ராம், லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லிசைஇன் கதீர், லாஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹ், லாஇலாஹ இல்லல்லாஹு வலாநஃபுது இல்லா இய்யாஹு லஹுன்னிஃமது வலஹுல் பழ்லு வலஹுஸ் ஸனாஉல் ஹஸன், லாஇலாஹ இல்லல்லாஹு முக்லிஸீன லஹுத்தீன வலவ் கரிஹல் காபிரூன், அல்லாஹும்ம லாமானிஅ லிமா அஃதைத, வலா முஃதிய லிமாமனஃத, வலா யன்பஉ தல்ஜத்தி மின்கல் ஜத்து
**ஸுப்ஹு, மஃரிப் தொழுகைகளுக்குப் பின் முந்திய திக்ருகளுடன்:** லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து யுஹ்யீ வயுமீது வஹுவ அலா குல்லிசைஇன் கதீர்
**என்பதை பத்து விடுத்தங்கள் ஓதுவார். அதற்குப் பின்னால் ஸுப்ஹானல்லாஹ் 33, அல்ஹம்து லில்லாஹ் 33, அல்லாஹு அக்பர் 33 கூறி 100ஜப் பூர்த்தியாக்க**
லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லிசைஇன் கதீர்
என்பதை ஓதுவார். பிறகு ஆயத்துல் குர்ஸியையும், குல் ஸூராக்கள் மூன்றையும் ஓதுவார். ஸுப்ஹுக்கும் மஃரிபுக்கும் பின்னால் அந்த 3 ஸூராக்களையும் மூன்று முறை ஓதுவார்.

**பிரயாணியின் தொழுகை:** பிரயாணம் செய்யும் தூரம் சுமார் 80 கி.மீ. ஐவிட அதிகமாகவும் இருந்து பிரயாணமும் அனுமதிக்கப்பட்டதாக இருந்தால் நான்கு ரக்அத்துகள் கொண்ட தொழுகையை இரண்டு ரக்அத்துகளாக சுருக்கித் தொழலாம். ஒரு இடத்தில் நான்கு நாட்களை (20 தொழுகைகள்) விட அதிகமாக தங்க நாடினால் அந்த இடத்தை அடைந்தது முதல் நான்கு ரக்அத்துகளாகவே தொழ வெண்டும். சுருக்கக் கூடாது. பிரயாணி ஊரில் இருப்பவனைப் பின்பற்றித் தொழுதால், ஊரில் மறதியாக விடுபட்ட தொழுகையை பிரயாணத்தில் தொழுதால், அல்லது பிரயாணத்தில் மறந்த தொழுகையை ஊரில் தொழுதால் நான்கு ரக்அத்துகளாகத் தொழுவது கடமையாகும். பிரயாணிக்கு சுருக்கித் தொழுவது சிறந்தாக இருந்தாலும் சுருக்காமலும் தொழலாம்.

**ஜும்ஆத் தொழுகை:** அது ளுஹரை விடச் சிறந்தது. அது தனியான ஒரு தொழுகையே அன்றி சுருக்கப்பட்ட ளுஹர் அல்ல. அதை நான்காகத் தொழவோ ளுஹருடைய நிய்யத்துடன் தொழவோ கூடாது. ஜும்ஆவுடன் அஸரைச் சேர்த்துத் தொழுதல் கூடாது.

**வித்ரு:** வித்ருத் தொழுகை ஸுன்னத்தாகும். அதற்குரிய நேரம் இஷாவிலிருந்து பஜ்ரு வரையாகும். குறைந்த அளவு ஒரு ரக்அத்தும், கூடிய அளவு 11 ரக்அத்துகளுமாகும். ஒவ்வொரு இரண்டு ரக்அத்துக்கும் பின்னால் ஸலாம் கொடுப்பது சிறந்தது. பூரணத்துவத்தில் மிகவும் குறைந்தது இரண்டு ஸலாமுடன் மூன்று ரக்அத்துகள் தொழுவதாகும். முதலாவது ரக்அத்தில் ஸூரதுல் அ.்.லாவும் இரண்டாவது ரக்அத்லி ஸூரதுல் காபிரூனும் மூன்றாவது ரக்அதில் ஸூரதுல் இக்லாஸும் ஓதுவது ஸுன்னத்தாகும். கடைசி ரக்அதில் ருகூவிற்குப் பின் தனிமையில் தொழுதாலும் சரி சத்தத்தை உயர்த்தி குநூத் ஓதுவது ஸுன்னத்தாகும்.

**ஜனாஸாத் தொழுகை:** மரணித்த ஒரு முஸ்லிமைக் குளிப்பாட்டுவது, கபன் செய்வது, தொழுவிப்பது, சுமந்து செல்வது, அடக்கம் செய்வது என்பன பர்ளு கிபாயாவாகும். யுத்த களத்தில் மரணித்த ஷஹீதைத் தவிர. ஷஹீதை குளிப்பாட்டவோ, கபன்செய்யப்படவோ மாட்டாது. மாறாகத் தொழுவிக்கப்பட்டு, மரணித்த நிலையிலேயே அடக்கம் செய்யப்படும்.

ஒரு ஆணின் உடம்பை முழுமையாகச் சுற்றுமளவு மூன்று வெள்ளைப் பிடவையிலும், பெண்ணை வேட்டி, தலைமூடி, கமீஸ், உடம்பை முழுமையாகச் சுற்றுமளவு இரண்டு பிடவைகள் ஆகிய ஐந்து பிடவைகளிலும் கபன் செய்யப்படும். இமாம் அல்லது தனித்துத் தொழுபவர் ஆணின் தலையிடத்திலும், பெண்ணின் நெஞ்சிடத்திலும் தொழுகைக்காக நிற்பார்கள். ஒவ்வொரு தக்பீருடனும் கைகளை உயர்த்தி நான்கு தக்பீர்கள் சொல்லப்படும். முதலாவது தக்பீருக்குப் பின் அஊது, பிஸ்மி என்பவற்றுடன் பாத்திஹாவை சப்தமின்றி ஓதப்படும். இரண்டாவது தக்பீருக்குப் பின்னால் நபியவர்கள் மீது ஸலவாத்துச் சொல்லப்படும். மூன்றாவது தக்பீருக்குப் பின்னால் மரணித்தவருக்காகப் பிரார்த்தனை செய்யப்படும். நான்காவது தக்பீருக்குப் பின்னால் சிறிது நேரம் பொருத்து சொல்லப்படும்.

மண்ணறையை ஒரு சாணைவிட உயர்த்துவது, அதற்கு சாந்தடிப்பது, அதை முத்தமிடுவது, அதற்கு மனமிடுவது, அதன் மீது எழுதுவது, உட்காருவது, நடப்பது, அங்கு விளக்கேற்றுவது, அதனை (தவாப்)வலம் வருவது, அதன் மீது பள்ளிவாசல் கட்டுவது, மரணித்தவரை பள்ளியுள் அடக்கம் செய்வது என்பன ஹராமானவைகளாகும். கப்றின் மீது கட்டப்பட்டுள்ள குப்பாக்களை உடைப்பது கடமையாகும்.

✷ மரணித்தவருக்காக ஆறுதல் கூற குறிப்பிட்ட வசனம் எதுவும் கிடையாது. “உமது கூலியை அல்லாஹ் நிறப்பமாக்குவானாக, உமது மய்யித்துக்கு அல்லாஹ் பிழை பொறுப்பானாக” போன்ற வார்த்தைகளைப் பாவிக்கலாம். மரணித்த ஒரு காபிருக்காக முஸ்லிமுக்கு ஆறதல் கூறும் போது “உனது கூலியை அல்லாஹ் நிறப்பமாக்குவானாக” போன்ற வார்த்தைகளைப் பாவிக்கலாம். காபிர்களுக்கு ஆறுதல் வார்த்தை கூறக் கூடாது.

✸ தான் மரணித்தால் தனது குடும்பத்தினர் தனக்கு ஒப்பாரிவைப்பார்கள் என ஒருவர் அறிந்தால் அவ்வாறு செய்யக்கூடாது என அவர்களுக்கு வஸிய்யத்துச் செய்வது கடமை. இன்றேல் அவர்கள் அழுததற்காக அவர் தண்டிக்கப்படுவார்.

✸ இமாம் சாபிஈ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: "மற்றவர்கள் ஆறுதல் கூறவதை எதிர்பார்த்து குடும்பத்தவர்கள் ஒன்று சேர்ந்து உட்கார்ந்திருப்பது மக்ரூஹாகும்." ஜனாஸா அடக்கப்பட்ட பின் ஒவ்வொருவரும் தங்கள் தேவைகளுக்காக சென்றுவிடலாம்.

✸ மரணவீட்டாருக்கு உணவு சமைத்துக்கொடுப்பது ஸுன்னத்தாகும். அவர்கள் சமைக்கும் உணவிலிருந்து சாப்பிடுவதும், அங்கு கூடுபவர்களுக்காக சமைப்பதும் மக்ரூஹாகும்.

✸ அதற்காகவென்றே பிரயாணம் மேற்கொள்ளாமல் பொதுவாக முஸ்லிமின் கப்றைத் தரிசிப்பது ஸுன்னத்தாகும். காபிருடைய கப்ரைத் தரிசிப்பது ஆகும். காபிர் முஸ்லிமின் கப்ரைத் தரிசிப்பதைத் தடுக்கப்படமாட்டாது.

✸ மையவாடிக்குச் சென்றவர்

**(அஸ்ஸலாமு அலைக்கும் தார கௌமின் மு.்.மினீன் அல்லது அஸ்ஸலாமு அலைக்கும் அஹ்லத்தியாரி மினல் மு.்.மினீன், வஇன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லலாஹிகூன், யர்ஹமுல்லாஹுல் முஸ்தக்திமீன மின்னா வல்முஸ்த.்.கிரீன், நஸ்அலுல்லாஹ லனா வலகுமுல் ஆபியஹ், அல்லாஹும்ம லா தஹ்ரிம்னா அஜ்ரஹும் வலா தப்தின்னா ப.்.தஹும் வ.்.பிர்லனா வலஹும்.)**

என்று சொல்வார்.

**பொருள்:** மு.்.மினானவர்களே! உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக. இன்ஷா அல்லாஹ் நாம் உங்களுடன் வந்து சேர்வோம். எங்களில் முந்தியவர்களுக்கும் பிந்தியவர்களுக்கும் அல்லாஹ் றஹ்மத்துச் செய்வானாக. எங்களுக்கும் உங்களுக்கும் அல்லாஹ் றஹ்மத்துச் செய்வானாக! யா அல்லாஹ்! அவர்களது கூலியை எங்களுக்குத் தப்பச் செய்துவிடாதே. அவர்களுக்குப் பின்னால் எங்களை பித்னாவில் ஆக்கிவிடாதே. எங்களுக்கும் அவர்களுக்கும் பிழை பொறுப்பாயாக.

✸ **பெருநாள் தொழுகை:** அது பர்ளு கிபாயாவாகும். அதற்குரிய நேரம் ளுஹாத் தொழுகையின் நேரமாகும். பெருநாள் என்ற செய்தி ளுஹருக்குப் பின்பு கிடைத்தால் அடுத்த நாள் அதைக் களாவாகத் தொழலாம். அதன் நிபந்தனைகள்: இரண்டு குத்பாக்களைத் தவிர ஜும்ஆவின் நிபந்தனைகள் போன்றாகும். பெருநாள் தொழுகைக்கு முன்போ, பின்போ மைதானத்தில் நப்ல் தொழுகை தொழப்படமாட்டாது.

**தொழும் விதம்:** இரு ரக்அத்துகள் தொழப்படும். முதலாம் ரக்அத்தில் அஊது கூற முன் ஏழு தக்பீர்களும் இரண்டாவது ரக்அத்தில் ஐந்து தக்பீர்களும் கைகளை உயர்த்திச் சொல்லப்படும். பின்பு அஊது, பிஸ்மி கூறி பாத்திஹாவை சப்தமாக ஓதப்படும். முதலாவது ரக்அத்தில் \ஸப்பிஹிஸ்ம' (அல் அ.்.லா) ஸூராவும் இரண்டாவது ரக்அத்தில் காஷியா ஸூராவும் ஓதப்படும். தொழுகைக்குப் பின் கதீப் ஜும்ஆவைப் போன்று இரண்டு குத்பாக்களை நிகழ்த்துவார். இரண்டு குத்பாக்களிலும் தக்பீரை அதிகமாகச் சொல்வது ஸுன்னத்தாகும். சாதாரண ஸுன்னத் தொழுகையைப் போன்று பெருநாள் தொழுகையைத் தொழுதாலும் கூடும். ஏனென்றால் தக்பீர்களும் ஏனையவைகளும் ஸுன்னத்தானவைகளாகும்.

**கிரகணத் தொழுகை:** அதுவும் ஸுன்னத்தாகும். அதற்குரிய நேரம் சூரிய அல்லது சந்திர கிரகணம் ஆரம்பித்ததிலிருந்து முடியும் வரையாகும். நேரம் முடிந்த பின் அது களாச் செய்யப்படமாட்டாது. அது இரண்டு ரக்அத்துகளாகும். முதலாம் ரக்அத்தில் சப்தமாக பாத்திஹா ஸூரத்தும், ஒரு நீண்ட ஸூரத்தும் ஓதுவார். பின்பு நீண்ட நேரம் ருகூஉ செய்வார். \ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா| என்று சொல்லிவிட்டு ஸுஜூது செய்யாமல் திரும்பவும் பாத்திஹாவும் ஒரு நீண்ட

ஸூரத்தும் ஓதுவார். திரும்பவும் நீண்ட ருகூஉ செய்துவிட்டு நிலைக்கு வந்து பின் நீண்ட இரண்டு ஸுஜூதுகள் செய்வார். இவ்வாறே இரண்டாவது ரக்அத்தையும் தொழுதுவிட்டு அத்தஹிய்யாத்து ஓதி ஸலாம் சொல்வார். முதலாம் ருகூஉக்குப் பின் ஒரு ம.்.ூம் வந்து சேர்ந்தால் அவருக்கு அந்த ரக்அத்து கணக்கில் எடுக்கப்பட மாட்டாது.

**மழை தேடித் தொழுதல்:** வரட்சி ஏற்பட்டு மழை குறைந்தால் அதற்காகத் தொழுவது ஸுன்னத்தாகும். அதற்குரிய நேரம், தொழும் விதம், சட்டங்கள் அனைத்திலும் பெருநாள் தொழுகையைப் போன்றாகும். ஆனால் தொழுகைக்குப் பின் ஒரு குத்பா மாத்திரம் ஓதப்படும். குத்பாவின் கடைசியில் காலம் மாறுவதற்கு நற்குறியாக மேலுள்ள பிடவையைப் புரட்டுவது ஸுன்னத்தாகும்.

**ஸுன்னத்தான தொழுகைகள் :** நபி(ஸல்) அவர்கள் ஐவேளை பர்ளைத் தவிர ஸுன்னத்தாக 12 ரக்அத்கள் ஒவ்வொரு நாளும் தொழுதுள்ளர்கள். அவை ஸுப்ஹுக்கு முன் 2, ளுஹருக்கு முன் 4, பின் 2, ம.்.றிபுக்குப் பின் 2, இஷாவிற்குப் பின் 2 ஆகியவைகளாகும். இதைத்தவிர மேலும் சில ரக்அத்கள் நப்லாகத் தொழுதுள்ளதாகவும் ஹதீஸ்களில் வந்துள்ளன.

**தடுக்கப்பட்ட நேரங்கள் : நபியவர்களால் தடுக்கப்பட்ட நேரங்களில் ஸுன்னத்தான தொழுகைகளை முழுமையாகவோ, அல்லது குறைவாகவோ தொழுவது ஹராமாகும். தடுக்கப்பட்ட நேரங்கள் பின்வருமாறு:-**

1. விடிவெள்ளி உதயமானதிலிருந்து சூரியன் உதயமாகி (எமது பார்வையில்) ஒரு ஈட்டியின் அளவு உயரும் வரை. (சுமார் 20 நிமிடங்கள்).
2. சூரியன் உச்சிவானுக்கு வந்ததிலிருந்து அது மேற்கு நோக்கி சரியும் வரை. (ளுஹர் நேரம் ஆரம்பிக்கும் வரை).
3. அஸர் தொழுகையைத் தொழுததிலிருந்து சூரியன் மறையும் வரை.

எனினும், தொழுகைக்கான காரணம் முந்திவிட்ட ஸுன்னத்தான தொழுகைகளை இந்நேரங்களில் தொழலாம். உதாரணமாக பள்ளியின் காணிக்கை (பள்ளியினுள் நுழைந்தால் தொழப்படும் தொழுகை) தவாபின் ஸுன்னத் 2 ரக்அத்கள், ஸுப்ஹுத் தொழுகையின் ஸுன்னத், ஜனாஸாத் தொழுகை, வுழூவின் ஸுன்னத் 2 ரக்அத்கள், ஸஜ்தா திலாவத், நன்றிக்கான ஸுஜூத்.

பள்ளியின் சட்டங்கள் : தேவையின் அளவு பள்ளிகள் கட்டுவது கடமையாகும். அவை பூமியில் அல்லாஹ்வுக்கு மிக விருப்பமான இடங்களாகும். அவற்றில் கைதட்டுவது, சங்கீதங்கள் இசைப்பது தடுக்கப்பட்ட கவிகளைப் பாடுவது, ஆண்கள் பெண்கள் ஒன்றாகக் கலந்திருப்பது, உடலுறவு கொள்வது வியாபாரம் செய்வது என்பன தடுக்கப்பட்டவையாகும். பள்ளியில் வியாபாரம் செய்யும் ஒருவரை நாம் கண்டால் “உன்னுடைய வியாபாரத்தில் அல்லாஹ் இலாபம் தராமல் இருக்கட்டும்” என அவரைப் பார்த்து சொல்வது ஸுன்னத்தாகும். மேலும் தவறிய பொருட்களைப் பள்ளியில் தேடுவதும் ஹராமாகும். அவ்வாறு தேடும் ஒருவரைக் கண்டால் அவரைப் பார்த்து “அல்லாஹ் உனக்கு அதைத் திருப்பித் தராமல் இருக்கட்டும்” எனச் சொல்வது ஸுன்னத்தாகும். சிறுவர்களால் தொந்தரவு இல்லாத சந்தர்ப்பங்களில் சிறுவர்களுக்குக் கற்றுக் கொடுத்தல், திருமண ஒப்பந்தங்களை நிகழ்த்துதல், தீர்ப்புச் செய்தல், அனுமதிக்கப்பட்ட பாடல்களைப் பாடுதல். இ.்.திகாப் இருப்பவர்களும் மற்றவர்களும் தூங்குதல், விருந்தினர் மற்றும் நோயாளிகள் தங்குதல், பகல்நேரங்களில் தூங்குதல் என்பன பள்ளியில் அனுமதிக்கப்பட்டுள்ளன. இரைச்சல், வாக்குவாதம், விரும்பத்தகாத விடயங்களைக் கொண்டு சத்தத்தை உயர்த்துதல், தேவையின்றி பள்ளியைப் பாதையாக ஆக்கிக் கொள்ளல் என்பனவற்றை விட்டும் பள்ளிகளைப் பாதுகாப்பது ஸுன்னத்தாகும். உலக விடயங்களில் தேவையவற்றைப் பேசுவது மக்ரூஹாகும். பள்ளியின் விரிப்புக்கள், விளக்குகள், மின்சாரம் என்பவற்றை திருமண நிகழ்ச்சிகளுக்கோ அல்லது சோக நிகழ்வுகளுக்கோ பயன்படுத்தக்கூடாது.

# ஸகாத் (ஏழை வரி)

**ஸகாத் கொடுக்கப்படவேண்டிய பொருட்கள்:** நான்கு அம்சங்களில் ஸகாத் கடமையாகும் 1) ஆடு மாடு ஒட்டகங்கள் ஆகிய கால்நடைகள் 2) பூமியிலிருந்து முளைக்கும் தாவரங்கள், பழங்கள் 3) தங்கம் வெள்ளி போன்ற கிரயங்கள் 4) வியாபாரப் பொருட்கள்.

**ஸகாத் கடமையாவதற்கான நிபந்தனைகள்:** பின்வரும் நிபந்தனைகள் இருப்பின் மாத்திரமே ஒரு பொருளில் ஸகாத் கடமையாகும். 1.(அப்பொருளின் உரிமையாளர்) முஸ்லிமாயிருத்தல். 2.சுதந்திரமானவராக இருத்தல். 3.அப்பொருள் ஸகாத் விதியாவதற்கான குறித்த அளவை அடைந்திருத்தல். 4.உரிமையாளருக்கு அப்பொருளின் மீது முழுமையான உரிமை இருத்தல். 5.பூமியில் விளையும் பொருட்களைத் தவிர ஏனையவை ஒரு வருடம் கழிந்ததாக இருத்தல்.

**ஆடு மாடு ஒட்டகம் ஆகிய கால்நடைகளுக்கான ஸகாத்:** அவைகளில் ஸகாத் விதியாவதற்கு இரண்டு நிபந்தனைகள் உள்ளன.

1) வருடம் முழுவதும் அல்லது வருடத்தில் கூடுதலான காலம் மேய்ப்பு நிலங்களில் (செலவின்றி தானாக உணவு உட்கொண்டு) வளர வேண்டும். 2) அவை வேலைக்கு அமர்த்தப்பட்டதாக அன்றி அவை விருத்தியடைந்து அதன் மூலம் குட்டிகளும் பாலும் பெறும் நோக்கத்தில் வளர்க்கப்பட வேண்டும். வியாபாரம் செய்யும் நோக்கில் வளர்க்கப்படும் கால்நடைகளுக்கு வியாபாரப் பொருட்களுக்கான ஸகாத் கொடுக்கப்படவேண்டும்.

**ஒட்டகங்களுக்கான ஸகாத் விபரம் அடங்கிய அட்டவணை**

| ஒட்டகங்களின் எண்ணிக்கை | 1- 4 | 5 - 9 | 10 - 14 | 15 - 19 | 20 - 24 | 25 - 35 | 36 - 45 | 46 - 60 | 61 - 75 | 76 - 90 | 91- 120 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஸகாத்தின் விபரம் | ஸகாத் கிடையாது | 1 ஆடு | 2 ஆடுகள் | 3 ஆடுகள் | 4 ஆடுகள் | பின்து மஹாழ் | பின்து லபூன் | ஹிக்கத் | ஜதஅத் | பின்து லபூன் 2 | 2 ஹிக்கத் |
| ஒட்டகங்களின் எண்ணிக்கை 120 ஐ விட அதிகமாக இருந்தால் முழுத் தொகையையும் 50 ஆல் பிரித்து ஒவ்வொரு 50 இற்கும் 1 ஹிக்கத் அல்லது 40 ஆல் பிரித்து ஒவ்வொரு 40 இற்கும் 1 பின்து லபூன் கொடுக்கப்பட வேண்டும். | | | | | | | | | | | |

**மேற்கூறப்பட்ட ஒட்டகங்களில் பருவப் பெயர்களுக்கான வயது விபரம்:**

**பின்து மஹாழ்:** ஒரு வருடம் பூர்த்தி அடைந்த பெண் ஒட்டகம்

**பின்து லபூன்:** இரண்டு வருடங்கள் பூர்த்தி அடைந்த பெண் ஒட்டகம்

**ஹிக்கத்:** மூன்று வருடங்கள் பூர்த்தி அடைந்த பெண் ஒட்டகம்

**ஜஸஅத்:** நான்கு வருடங்கள் பூர்த்தி அடைந்த பெண் ஒட்டகம்

**மாடுகளுக்கான ஸகாத் விபரம் அடங்கிய அட்டவணை**

| மாடுகளின் எண்ணிக்கை | 1-29 | 30-39 | 40-59 |
|---|---|---|---|
| ஸகாத்தின் விபரம் | ஸகாத் கிடையாது | தபீஉ அல்லது தபீஅத் | முஸின்னு அல்லது முஸின்னத் |
| மாடுகளின் எண்ணிக்கை 60 அல்லது அதை விட அதிகமாக இருந்தால் முழுத் தொகையையும் 30 ஆல் பிரித்து ஒவ்வொரு 30 இற்கும் ஒரு தபீஉ அல்லது 40 ஆல் பிரித்து ஒவ்வொரு 40 இற்கும் ஒரு முஸின்னத் கொடுக்கப்பட வேண்டும். | | | |

மேற்கூறப்பட்ட மாடுகளின் பருவப் பெயர்களுக்கான வயது விபரம்:

தபீஉ(ஆண்), தபீஅத்(பெண்) ஒரு வருடம் பூர்த்தி அடைந்தது.

முஸின்னு(ஆண்), முஸின்னத்(பெண்) இரண்டு வருடங்கள் பூர்த்தி அடைந்தது.

## ஆடுகளுக்கான ஸகாத் விபரம் அடங்கிய அட்டவணை

| ஆடுகளின் எண்ணிக்கை | 1-39 | 40-120 | 121-200 | 201-399 |
|---|---|---|---|---|
| ஸகாத் விபரம் | ஸகாத் கிடையாது | 1ஆடு | 2ஆடுகள் | 3ஆடுகள் |
| ஆடுகளின் எண்ணிக்கை 400 அல்லது அதை விட அதிமாக இருந்தால் அதனை நூறால் பிரித்து ஒவ்வொரு நூறுக்கும் ஒரு ஆடு வீதம் கொடுக்கப்படும். | | | | |

**ஸகாத்திற்காகக் கொடுக்கப்படும் ஆட்டின் வயது விபரம்:**
✷ஆறு மாதம் பூர்த்தியடைந்த செம்மறியாடு.
✷ஒரு வருடம் பூர்த்தியடைந்த வெள்ளை ஆடு.
பின்வரும் வகையான ஆடுகள் ஸகாத்திற்காக எடுக்கப்படமாட்டாது.
✷வயது முதிர்ந்தது.
✷ஒரு கண் குருடானது.
✷அதன் குட்டியைப் பராமரித்து வளர்க்கும் நிலையில் உள்ளது.
✷கருவுற்றிருக்கும் நிலையில் உள்ளது.
✷பெறுமதிமிக்கது.

**நிலத்தில் வளரும் பொருட்களுக்கான ஸகாத்:** பூமியில் வளரும் சகல தானிய, பழ வகைகளுக்கும் பின்வரும் மூன்று நிபந்தனைகளும் இருப்பின் ஸகாத் கடமையாகும்.
1.முகத்தல் அளவையின் படி அளவிடப்பட்டு (அவசரமாக பழுதாகாமல்) சேமித்து வைக்க முடியுமானதாயிருத்தல்.
(உ-ம்) தானியங்களில் அரிசி, கோதுமை, பார்லி போன்றவை. பழங்களில் முந்திரிகை, ஈத்தம்பழம் போன்றவை.
முகத்தல் அளவில் அளவிடப்படாத சேமித்து வைக்க முடியுமானவற்றில்
(உ-ம்) மரக்கறி, கீரை வகைகளில்) ஸகாத் விதியாகாது.
2.ஸகாத் விதியாவதற்குரிய அளவை (நிஸாப்) அடைந்திருத்தல்.
இவற்றில் ஆகக் குறைந்த நிஸாப் 653 கிலோ கிராமாகும்.
3.அப்பொருளில் ஸகாத் விதியாவதற்குரிய பருவத்தை அது அடையும் போது அது அவருக்கு (ஸகாத் கொடுப்பவருக்கு) சொந்தமானதாயிருத்தல்.
அவைகளைப் பழமாகவோ, தானியமாகவோ புசிப்பதற்குத் தகுதியான நிலையை அடையும் போதே அவற்றில் ஸகாத் விதியாகின்றது. அதாவது பழங்கள் செந்நிற அல்லது மஞ்சள் நிறமுடையதாக மாறுவதும், தானிய வகைகள் முற்றிக் காய்ந்த நிலையை அடைவதுமாகும்.

**கொடுக்கப்படவேண்டிய அளவு:** மழை நீர், வாய்க்கால் நீர் போன்றவற்றினால் (நீர் பாய்ச்சப்படுவதைப் போன்று) சிரமமின்றி நீர் பாய்ச்சப்பட்டால் அதில் பத்தில் ஒரு பங்கு (10வீ) கொடுக்கப்பட வேண்டும். கிணறுகள் போன்றவற்றிலிருந்து நீர் இறைப்பதைப் போல் சிரமத்துடன் நீர் பாய்ச்சப்பட்டால் இருபதில் ஒரு பங்கு (05வீ) கொடுக்கப்பட வேண்டும்.
வருடத்தில் சில நாட்கள் சிரமத்துடனும் வேறு சில நாட்கள் சிரமமின்றியும் நீர் பாய்ச்சப்பட்டிருந்தால் இரண்டிலும் கூடுதலானதின் அடிப்படையிலேயே ஸகாதின் அளவு கணிக்கப்படும். அப்படி இரண்டு விதங்களில் நீர் பாய்ச்சிய நாட்களின் அளவைக் கொண்டே எது கூடுதலானது என்பது கணக்கிடப்படும்.

**தங்கம், வெள்ளி போன்றவற்றிற்கான ஸகாத் விபரம்:** தங்கம் 85 கிராம் நிறையையும், வெள்ளி 595 கிராம் நிறையையும் அடையும் வரை அவைகளில் ஸகாத் விதியாகாது. நாணயக்குற்றிகள், நாணயத் தாள்கள் போன்றவற்றைப் பொறுத்தவகையில் அவைகளின் பெறுமதி தங்கம், வெள்ளி ஆகியவற்றில்

ஸகாத் விதியாவதற்கான அளவு (நிஸாப்)கள் இரண்டிலும் குறைவானதின் பெறுமதியை அடைந்தால் ஸகாத் கடமையாகிவிடும். (அதாவது 85 கிராம் தங்கம் 595 கிராம் வெள்ளி இரண்டினதும் அப்போதைய சந்தைப் பெறுமதியைக் கணித்து அவ்விரண்டு தொகைகளிலும் குறைந்த தொகையின் அளவு பெறுமதியான பணம் ஒருவரிடம் இருப்பின் அப்பணத்திற்காக ஸகாத் கொடுக்கப்பட வேண்டும். தங்கம், வெள்ளி பணம் என்பவற்றில் ஸகாத்திற்காகக் கொடுக்கப்பட வேண்டிய அளவு நாற்பதில் ஒரு பங்காகும் (2.5 மூ ).

பாவனைக்காகச் செய்யப்பட்டுள்ள அனுமதிக்கப்பட்ட தங்க, வெள்ளி ஆபரணங்களில் ஸகாத் விதியாகாது. கூலிக்குக் கொடுத்து வருமானம் பெறும் நோக்கில், அல்லது சேமித்து வைக்கும் நோக்கில் செய்யப்பட்டவைகளுக்கு ஸகாத் கொடுக்கப்படவேண்டும்.

வழமையாகப் பெண்கள் அணியும் சகல தங்க, வெள்ளி ஆபரணங்களும் பெண்களுக்குப் பாவிக்க அனுமதியுண்டு. மேலும் பாத்திரங்களில் இலேசாக வெள்ளியைக் கலப்பதற்கு அனுமதியுண்டு. ஆண்களுக்கு முழுவதும் வெள்ளியினால் செய்யப்பட்ட மோதிரம், மூக்குக் கண்ணாடி போன்ற சிறிய அளவிலான பொருட்களை அணியலாம்.

தங்கத்தைப் பொறுத்த வகையில் பாத்திரங்களில் அதில் சிறிதளவையேனும் சேர்க்க முடியாது. பெண்களுக்கு ஒப்பாகாத விதத்தில் வேறு ஒரு பொருளை சார்ந்திருக்கும் சிறிய அளவிலான தங்கத்தினாலான ஒன்றை ஆண்கள் அணியலாம்.
(உதாரணமாக: உடையின் பொத்தான், பல் கட்டும் நூல்)

ஒருவரிடமுள்ள பணத்தின் அளவு கூடுவதும், குறைவதுமாக இருந்து அந்த அளவுகளுக்கு தனித்தனியாக வருடத்தைக் கணக்கிட்டு ஸகாத் கொடுப்பது சிரமமாயிருப்பின் அவர் வருடத்தில் ஒரு தினத்தைக் குறித்து அன்று அவரிடமுள்ள பணத்தொகையில் இரண்டரை வீதத்தை ஸகாத்தாகக் கொடுப்பார். அப்பணத்தில் ஒரு வருடம் பூரணமாகாத சில நாளாக இருப்பினும் சரியே. ஒருவருக்கு மாதாந்தம் கிடைக்கும் சம்பளம், காணி, வீடு பொன்றவற்றை கூலிக்குக் கொடுப்பதன் மூலம் கிடைக்கும் வருமானம் போன்றவற்றை பொறுத்தமட்டில் அது எவ்வளவு பெரிய தொகையாக இருப்பினும் அதிலிருந்து அவர் எதையேனும் சேமித்து வைக்காத பட்சத்தில் ஸகாத் விதியாகாது. மாறாக, எதனையும் சேமித்து வைத்தால் ஒரு வருடம் கழிந்தாலும் அந்த சேமிக்கப்பட்ட தொகைக்காக ஸகாத் கொடுக்க வேண்டும். அத்தொகைகளும் தனித்தனியாக வருடம் கணிப்பது சிரமமாயின் முன்பு கூறப்பட்டது போல் ஒரு நாளைக் குறித்து அன்று அவைகளுக்காக ஸகாத் கணக்கிட்டுக் கொடுப்பார்.

**கடனிற்கான ஸகாத்:** எவருக்கேனும் பணக்காரர் அல்லது அவரிடமிருந்து எடுக்க முடியுமான நிலையில் பணமுள்ள ஒருவரிடமிருந்து கடன் வரவேண்டியிருந்தால் அக்கடனைத் திருப்பிப் பெற்றதும் கடந்துபோன வருடங்களுக்கான ஸகாத்தை அது பல வருடங்களாயினும் கொடுக்க வேண்டும். வறிய நிலையில் உள்ள ஒருவரிடமிருந்து வரவேண்டிய கடனைப் போன்று பெற்றுக் கொள்ள முடியாததாக இருந்தால் அதில் ஸகாத் விதியாகாது. ஏனெனில் கடனின் உரிமையாளருக்கு அப்பணத்தில் அதிகாரம் செலுத்த முடியாத நிலையில் உள்ளது.

**வியாபாரப் பொருட்களுக்கான ஸகாத்:** பின்வரும் நான்கு நிபந்தனைகள் இருந்தாலேயன்றி வியாபாரப் பொருட்களில் ஸகாத் விதியாகமாட்டாது.

1. அப்பொருளுக்குரிய உரிமையாளராக இருத்தல். 2. அவைகளில் வியாபாரம் செய்யும் முடிவு இருக்கவேண்டும். 3. அவைகளின் முழுப் பெறுமதி நிஸாப் (ஸகாத் விதியாவதற்கான) அளவை அடைந்திருக்க வேண்டும். அதாவது தங்கம், வெள்ளி இரண்டினதும் நிஸாபுகளில் குறைந்த அளவு. 4. ஒரு வருடம் பூரணமாகியிருத்தல்.

எனவே இந்த நிபந்தனைகள் இருப்பின் வியாபாரப் பொருட்களின் பெறுமதியிலிருந்து ஸகாத்தைக் கொடுக்க வேண்டும். அவைகளின் நிஸாபைப் பூரணப் படுத்துவதற்காக அவரிடம் தங்கம், வெள்ளி அல்லது ரொக்கப் பணங்கள் இருப்பின் அவைகளையும் வியாபாரப் பொருட்களின் பெறுமதியுடன் சேர்க்கப்பட வேண்டும்.

வீடு, உடை, வாகனம் போன்ற விற்பனைக்கான பொருளை ஒருவர் தனது சொந்தப் பாவனைக்கு எடுப்பதாக முடிவுசெய்தால் அதற்கு ஸகாத் கொடுக்கமாட்டார். மீண்டும் அதனை விற்பதாக முடிவுசெய்தால் அன்றிலிருந்து (ஸகாத் கணிப்பீட்டிற்காக) புதிதாக ஒரு வருடத்தை ஆரம்பிக்க வேண்டும்.[1]

**ஸகாதுல் பித்ர்:** நோன்புப் பெருநாள் தினத்தன்று (இரவும், பகலும்) தனக்கும், தனது குடும்பத்தினருக்கும் தேவையான உணவிற்கான செலவினங்களைவிட மேலதிகமாக ஒருவரிடம் பணம் இருப்பின் அவர் மீது ஸகாத்துல் பித்ர் கடமையாகும். ஒரு நபருக்காக (ஆண் அல்லது பெண்) கொடுக்கப்பட வேண்டிய அளவு அவ்வூரின் பிரதான உணவுப் பொருளில் 2¼ (இரண்டே கால்) கிலோ கிராமாகும். ஸகாதுல் பித்ர் விதியாகிய ஒருவர் தனக்காகவும், பெருநாள் தினத்திரவு அவரது கட்டாயச்செலவிற்கு உட்பட்டவர்களுக்காகவும் வசதியிருப்பின் அதனைக் கொடுக்க வேண்டும். பெருநாள் அன்று காலை பெருநாள் தொழுகைக்கு முன் அதனைக் கொடுப்பது சிறந்ததாகும். பெருநாள் தொழுது முடியும் வரை கொடுக்காமல் பிற்படுத்துவது கூடாது. எனினும் பெருநாள் தினத்திற்கு ஓரிரு நாட்களுக்கு முன்னதாக அதனைக் கொடுக்கலாம். பலருக்காகக் கொடுக்கப்படும் பித்ராவை ஒரு நபருக்கே கொடுக்கலாம். அதே போன்று ஒருவரது பங்கை பலருக்கும் பங்கிட்டுக் கொடுக்கலாம்.

**ஸகாத்தை நிறைவேற்றுதல்:** ஸகாத் விதியானவுடன் தாமதமின்றி அவசரமாக அதனைக் கொடுத்துவிட வேண்டும். சிறு பிள்ளை, பைத்தியம் பிடித்தவர் ஆகியோரது பொருளில் விதியாகும் ஸகாத்தை அவர்களது பொறுப்பாளிகள் நிறைவேற்றி வைக்க வேண்டும். ஸகாத்தைக் கொடுக்கும் போது அதனைப் பகிரங்கப்படுத்துவதும் பொருளின் உரிமையாளரே அதனைப் பங்கீடு செய்வதும் ஸுன்னத்தாகும்.

பகுத்தறிவும் சித்தசுவாதீனமும் உள்ள ஒருவர் தனது ஸகாத்தைக் கொடுப்பதாக நிய்யத் வைப்பது கட்டாயமாகும். ஸகாத் கொடுக்கும் ஒருவர் பொதுவான தர்மம் கொடுப்பதாக நிய்யத் வைப்பாராயின் தனது முழுச் சொத்தையும் அவர் கொடுத்தாலும் அது கடமையான ஸகாத்தை நிறைவேற்றியதாக ஆகமாட்டாது. ஒரு சொத்துக்கான ஸகாத்தை அதன் ஊரிலுள்ள ஏழைகளுக்குக் கொடுப்பதே மிகச் சிறந்தது. எனினும் அதன் ஸகாத்தை வேறு ஒரு ஊரிலுள்ளவர்களுக்குக் கொடுப்பதில் நியாயமான

---

[1] வியாபாரப் பொருட்களின் ஸக்காத்துடைய நிஸாப் 85 கிராம் தங்கத்தின் பெறுமதியாகும். அல்லது 595 கிராம் வெள்ளியின் பெறுமதியாகும். ஸக்காத் கொடுப்பவர் ஸக்காத் கொடுக்கும் நேரத்தில் இவ்விரண்டிலும் எது குறைந்ததோ அதைக் கொடுக்கலாம்.

கூடிய பயன்கள் இருப்பின் அதனைக் கருத்திற் கொண்டு அவர்களுக்குக் கொடுக்கலாம். ஒரு பொருளுக்கான ஸகாத்தின் நிஸாப் பூரணமாகும் பட்சத்தில் அதற்கான இரண்டு வருடங்களின் ஸகாத்தை முன்கூட்டியே கொடுத்தும் விடலாம்.

**ஸகாத் பெறத் தகுதியானவர்கள்: எட்டுக் கூட்டத்தினர்.**

1. வறியவர்கள். 2. ஏழைகள் 3.ஸகாத்தை சேகரித்து கணக்கிடுவது போன்ற பணிகளில் ஈடுபடுவோர். 4. ஸகாத் வழங்குவதன் மூலம் இஸ்லாத்தின் பால் நல்லெண்ணம் ஊட்டப்பட்டு கவர்ந்திழுக்கப்பட்டு அதில் ஸ்திரப்படுத்தப்பட வேண்டிய புது முஸ்லிம்கள். 5. (விடுதலை பெறப் பணம் தேவைப்படும்) அடிமைகள். 6. கடனாளிகள். 7.இறைபாதையில் (புனிதப்போரில்) ஈடுபடுவோர் 8. வழிப்போக்கர்கள்.

இவர்கள் அனைவருக்கும் அவரவரின் தேவைக்கேற்ற அளவு ஸகாத் பணத்திலிருந்து கொடுக்கப்படும். ஆனால் இரண்டாவது கூட்டத்தைச் சேர்ந்தவருக்கு அவரது வேலைக்கேற்ற கூலியின் அளவே கொடுக்கப்படும். அவர் வசதியுள்ளவராக இருப்பினும் அதனைப் பெறலாம். ஆட்சியாளர்களுக்கு எதிராக கிளர்ச்சியில் ஈடுபடுபவர்கள் ஊரைக் கைப்பற்றினால் ஸகாத் பணத்தை (விநியோகிப்பதற்காக) அவர்களிடம் ஒப்படைக்கலாம். ஒரு ஆட்சியாளர் மக்களிடமிருந்து விருப்பத்துடனோ அல்லது பலாத்காரமாகவோ ஸகாத்தை எடுத்தால் அது நிறைவேறும். அவர் அதில் நீதமாக நடப்பினும் அநீதமாக நடப்பினும் சரியே. காபிர், அடிமை, பணக்காரர், ஸகாத் கொடுப்போரின் கட்டாயச் செலவிற்கு உட்பட்டவர், பனூ ஹாசிம் கோத்திரத்தினர் ஆகியோருக்கு ஸகாத்தைக் கொடுக்க முடியாது. ஸகாத் எடுக்கத் தகுதியில்லாதவருக்கு தெரியாத்தனமாக அதனைக் கொடுத்த பின்னர் அவரது நிலை தெரிய வருமாயின் அது நிறைவேற மாட்டாது. எனினும் ஏழை என நினைத்து ஒருவருக்கு ஸகாத்தை கொடுத்த பின் அவர் வசதியுள்ளவர் எனத் தெரிய வந்தாலும் அது நிறைவேறும்.

**கடமையல்லாத ஸுன்னத்தான தான தர்மம்:** இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்: *"நிச்சயமாக ஒரு முஃமினுடைய மரணத்தின் பின்பும் அவனது நல்லமல்களில் தொடர்ந்தும் அவனுக்குக் கூலி கிடைத்துக் கொண்டிருக்கும் கருமங்கள் பின்வருமாறு: அவன் கற்பித்துப் பரப்பிவிட்டுச் சென்ற அறிவு, அவன் விட்டுச் சென்ற நல்ல பிள்ளை, அவனது அனந்தரக்காரர்களுக்கு விட்டுச்சென்ற அல்-குர்ஆன், அவன் கட்டிய பள்ளிவாசல், வழிப்போக்கர்களுக்காக அவன் உருவாக்கிய மடம்ஃஅம்பலம், அவன் அமைத்துச் சென்ற ஆறுஃநதி, அவன் வாழும் போது ஆரோக்கிய நிலையில் அவனது சொத்திலிருந்து கொடுத்த தர்மம் என்பனவாகும்."* (நூல்: இப்னுமாஜா).

# நோன்பு

பருவமடைந்த சித்தசுவாதீனமுள்ள நோன்பு பிடிக்க சக்தியுள்ள மாதாந்த.ீ. பிரசவ ருதுவை விட்டும் துப்பரவான நிலையிலுள்ள (பெண்கள்) ஆகிய ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் ரமழான் மாதம் நோன்பு பிடிப்பது கடமையாகும். நோன்பை நோற்க சக்தியிருப்பின் அதனைப் பழக்கும் நோக்கில் சிறு பிள்ளைகளுக்கும் நோன்பு பிடிக்கும் படி ஏவப்படும்.

**ரமழான் மாதம் ஆரம்பமாகுவதை பின்வரும் இரு விடயங்களில் ஒன்றின் மூலம் அறியலாம்.**

1. பருவமைடந்த சித்தசுவாதீனமுள்ள, நன்னடத்தையும் மார்க்கத்தை ஒழுகும் நிலையிலுமுள்ள நம்பத்தகுந்த நீதமான ஒரு முஸ்லிம் தலைப்பிறையைக் காண்பது. (அவர் பெண்ணாக இருந்தாலும் சரியே).
2. (பிறைகாணாத பட்சத்தில்) ஷ.ீபான் மாதத்தை 30 நாட்களைக் கொண்ட மாதமாகப் பூரணப்படுத்துதல்.

ஒவ்வொரு நாள் நோன்பும் ஸுபஹ் தொழுகைக்கான நேரம் (பஜ்ர்) ஆரம்பித்ததிலிருந்து சூரியன் மறைந்து முடியும் வரையாகும். கடமையான நோன்பைப் பொறுத்தமட்டில் பஜ்ர் நேரத்திற்கு முன் (இரவில்) அதற்காக நிய்யத் வைப்பது கட்டாயமாகும்.

**நோன்பை முறிக்கும் காரியங்கள்:**

1. ஒரு பெண்ணுடன் முன்துவாரத்தில் .ீ. அபத்தில் உடலுறவுகொள்ளல். இதன் மூலம் நோன்பை முறித்தவர் அதனைக் கழாச் செய்வதும், அதற்கான குற்றப் பரிகாரம் கொடுப்பதும் கடமையாகும்.

**அதன் குற்றப் பரிகாரம் பின்வமாறு:** ✸ ஒரு அடிமையை உரிமையிடல்.
✸ அதற்கு வசதியில்லாவிட்டால் தொடர்ச்சியாக இரண்டு மாதங்கள் நோன்பு நோற்றல். ✸ அதற்கும் சக்திபெறாவிட்டால் 60 ஏழைகளுக்கு உணவளித்தல். ✸ அதற்கும் வசதிபெறாவிட்டால் அவருக்கு வேறெதுவும் கடமையாக மாட்டாது. (அவர் தௌபாச் செய்துகொள்வார்.)

2. இந்திரியம் வெளிப்படல்.

முத்தமிடுதல், எதையேனும் ஆசையுடன் தொடுதல், சுய இன்பத்தில் ஈடுபடுதல் போன்ற காரணத்தால் இந்திரியம் வெளிப்பட்டால் நோன்பு முறிந்துவிடும். தூக்கத்தில் ஸ்கலிதமாவதால் நோன்பிற்கு எவ்விதப் பாதிப்பும் கிடையாது.

3. வேண்டுமென்றே எதையாவது சாப்பிடுதல், அல்லது குடித்தல். ஆனால், மறதியாக நடந்தால் நோன்பு முறியமாட்டாது.
4. இரத்தத்தை வெளியேற்றல்.

இரத்த தானம் கொடுப்பதற்காக அல்லது மேலதிக இரத்தத்தை வெளியேற்றுவதற்காக இரத்தத்தை வெளியேற்றுவதன் மூலம் நோன்பு முறிந்துவிடும். எனினும், பரிசோதனைக்காக கொஞ்சம் இரத்தம் எடுப்பதும், ஒருவரது சுய முயற்சியின்றி இரத்தம் வெளியாவதும் நோன்பை முறிக்காது. உதாரணமாக: தானாக மூக்கின் வழியாகவோ, காயம் ஏற்பட்டோ இரத்தம் வருதல்.

5. வேண்டுமென்றே முயற்சிசெய்து வாந்தி எடுத்தல். ஆனால் தானாக வாந்தி வந்தால் நோன்பு முறியாது.

பாதையில் பறக்கும் புழுதி வாயின் வழியாகத் தொண்டைக் குழியினுள் சென்றால் அல்லது சாதாரணமாக நாசிக்கு நீர் செலுத்தும் போது, வாய் கொப்பளிக்கும் போது தண்ணீர் தொண்டைக்குழியினுள் சென்றால், மனக்கிளர்ச்சியை ஏற்படுத்தும் ஒன்றைப் பற்றிய சிந்தனையிலிருந்து இந்திரியம் வெளியானால், அல்லது தூக்கத்தில் ஸ்கலிதமானால், அல்லது

ஒருவரது முயற்சியின்றி இரத்தம், வாந்தி என்பன வெளிவந்தால் நோன்பு முறியமாட்டாது.

இரவு நேரமென நினைத்து ஒருவர் சாப்பிட்ட பின் அது பகல் நேரமெனத் தெரிய வந்தால் அவர் அந்த நோன்பைக் கழாச் செய்ய வேண்டும். பஜ்ருடைய நேரம் ஆகிவிட்டதோ என சந்தேகித்த நிலையில் இரவில் ஒருவர் சாப்பிட்டிருந்தால் அவரது நோன்புக்குப் பாதிப்பு ஏற்படமாட்டாது. மேலும், சூரியன் மறைந்து விட்டது என எண்ணிய நிலையில் (சூரியன் மறைய முன்) மாலைப் பொழுதில் சாப்பிட்டிருந்தால் அவர் அதனைக் கழாச் செய்ய வேண்டும்.

**நோன்பை விடுவதற்கான சட்டங்கள்:** தக்க காரணமின்றி ரமழான் நோன்பை விடுவது ஹறாமாகும். பிரசவ ∴ மாதாந்த ருது வந்த நிலையிலுள்ள பெண் நோன்பு நோற்காமல் இருப்பது கட்டாயமாகும். இவ்வாறே இஸ்லாத்தின் பார்வையில் பாதுகாக்கப்படவேண்டியதாகக் கருதப்படும் ஓர் உயிர்ப் பிராணியை ஆபத்திலிருந்து காப்பாற்றுவதற்காக நோன்பை விட வேண்டியேற்பட்டாலும் நோன்பை விடுவது கட்டாயமாகும். சுருக்கித் தொழமுடியுமான தூரம் பயணம் செய்யும் ஒருவர் பயணத்தில் நோன்பு நோற்பது அவருக்குக் கஷ்டமாக இருப்பின் நோன்பை விடுவது ஸுன்னத்தாகும். இதே போன்று நோன்பு நோற்பதால் உடல் நிலை மோசமாகலாம் அல்லது நோய் அதிகரிக்கலாம் என அச்சப்படும் நோயாளியும் நோன்பை விடுவது ஸுன்னத்தாகும். மேலும் பகல் பொழுதில் ஊரிலிருந்து பிரயாணத்தை ஆரம்பிக்கும் ஒருவருக்கும், நோன்பு நோற்பதால் தமக்கோ அல்லது தமது பிள்ளைக்கோ ஆபத்து ஏற்படலாம் என அச்சப்படும் கர்ப்பிணிப் பெண், பாலூட்டும் பெண் ஆகியோருக்கும் நோன்பை விடுவதற்கு அனுமதியுண்டு. ஆனால், மேற்கூறப்பட்ட அனைவரும் தாம் விட்ட நோன்புகளைக் கழாச் செய்ய வேண்டும். எனினும், கர்ப்பிணிப் பெண், பாலூட்டும் பெண் ஆகியோர் (தமக்காக அன்றி) பிள்ளைக்கு மாத்திரம் ஆபத்து எனப் பயந்த நிலையில் நோன்பை விட்டிருப்பின் அதனைக் கழாச் செய்வதுடன் விடுபட்ட ஒவ்வொரு நோன்பிற்காகவும் ஒரு ஏழைக்கு உணவு வழங்க வேண்டும்.

வயோதிபம், சுகப்படுத்த முடியாத நோய் ஆகிய காரணங்களுக்காக நோன்பு நோற்க முடியாமல் போனவர் தவறிப்போன ஒவ்வொரு நோன்பிற்குமாக ஒரு ஏழைக்கு உணவு வழங்க வேண்டும். நோன்புகளை அவர் கழாச் செய்ய வேண்டியதில்லை.

நோன்பைக் கழாச் செய்ய வேண்டிய ஒருவர் தக்க காரணத்துடன் அடுத்த வருடம் ரமழான் வரை அதனைத் தாமதப்படுதினால் அவர் அதனைக் கழாச் செய்தால் மாத்திரம் போதுமானதாகும். ஆனால், தக்க காரணமின்றி அப்படித் தாமதப்படுத்தினால் கழாச் செய்வதுடன் ஒவ்வொரு நோன்பிற்குமாக ஒரு ஏழைக்கு உணவு வழங்கவும் வேண்டும். தக்க காரணத்துடன் கழாச் செய்யாமல் பிற்படுத்திய ஒருவர் அதற்கிடையில் மரணமாகிவிட்டால் எதுவும் கடமையாகமாட்டாது. ஆனால், தக்க காரணமின்றி அவர் அப்படிச் செய்திருந்தால் (அவருக்காக) ஒரு நோன்பிற்காக ஒரு ஏழைக்கு என்ற விகிதப்படி உணவு வழங்கப்பட வேண்டும். மரணமான ஒருவர் சுகயீனம் காரணமாக கழாச்செய்யாமல் விட்ட ரமழான் நோன்புகளை அவரது உறவினர்கள் பிடிப்பது ஸுன்னத்தாகும். அதேபோன்று அவரது நேர்ச்சை நோன்பு, ஏனைய வழிபாட்டிற்கான நேர்ச்சைகளையும் உறவினர்கள் நிறைவேற்றுவது ஸுன்னத்தாகும்.

தகுந்த காரணத்துடன் நோன்பை விட்டிருந்த ஒருவருக்கு அந்த சலுகைக்கான காரணம் பகல் பொழுதில் நீங்கிவிட்டால் மீதமான பொழுதை நோன்பாளியைப் போன்று கழித்துவிட்டு மீண்டும் அந்நாளிற்குரிய நோன்பைக் கழாச்செய்ய வேண்டும். மேலும், பகல் நேரத்தில் ஒரு காபிர் இஸ்லாத்தைத் தழுவும் போதும், ருதுவிலிருந்து ஒரு பெண் துப்பரவு அடையும்போதும் இச்சட்டம் பின்பற்றப்படவேண்டும். அத்துடன், நோன்பை விட்ட நிலையில் பகலில் ஒரு நோயாளி குணமடைதல், பிரயாணி தன் பயணத்தை முடித்துக்கொள்ளல், சிறுவன் பருவமடைதல், பைத்தியம் குணமடைதல் போன்ற நிலைகளிலும் இச்சட்டமே பின்பற்றப்படவேண்டும். ரமழான் காலத்தில் நோன்பைப் பிடிக்காமல் விட்டுவிட்டு அந்த ரமழான் காலத்திலேயே வேறு நோன்புகளைப் பிடிக்கவும் முடியாது.

**ஸுன்னத்தான நோன்புகள்:** ஸுன்னத்தான நோன்புகளில் மிக ஏற்றமானது ஒருநாள் விட்டு ஒருநாள் நோன்பு பிடிப்பதாகும். அடுத்ததாக, வாரத்தில் திங்கள், வியாழன் நாட்களிலும் அதற்கடுத்ததாக மாதாந்தம் மூன்று தினங்கள் நோன்பு நோற்பதுமாகும். இதில் மிகச்சிறந்தது பிறைமாதங்களில் (இஸ்லாமிய மாதக் கணிப்பீடு) 13, 14, 15 ம் பிறைகளில் பிடிப்பதாகும். மேலும், முஹர்ரம், ஷஃபான் ஆகிய மாதங்களின் பெரும் பகுதியில் நோன்பு வைப்பதும் ஸுன்னத்தாகும். இதேபோன்று ஆஷூரா தினம், அரபாநாள், ஷவ்வால் மாதத்தில் ஆறு நாட்கள் நோன்பு நோற்பதும் ஸுன்னத்தாகும். தனியாக ரஜப் மாதம் மாத்திரம் அல்லது வெள்ளி மாத்திரம், சனி மாத்திரம் நோன்பிருப்பது மக்ரூஹாகும். இன்னும், வானம் தெளிவாக இருந்தும் பிறை கண்டது நிரூபணமாகாத ஷஃபானின் பிறை 30 (சந்தேக நாள்) அன்றும் நோன்பு நோற்பது மக்ரூஹாகும்.

**நோன்பு நோற்க ஹறாமான தினங்கள்:** நோன்பு, ஹஜ் பெருநாள் தினங்களிலும், \அய்யாமுத் தஷ்ரீக்| எனப்படும் துல்ஹிஜ்ஜா மாதத்தின் 11, 12, 13 பிறைகளிலும் நோன்பு நோற்பது ஹறாமாகும்.

எனினும் கிரான் அல்லது தமத்துஃ முறையில் ஹஜ் செய்து அதன் காரணமாக நோன்பு பிடிக்க வேண்டியவருக்கு அய்யாமுத் தஷ்ரீக் நாட்களில் விதிவிலக்கு உண்டு.

**முக்கிய குறிப்புகள்:**

* நோன்பு நோற்கவுள்ள ஒருவருக்கு பஜ்ருக்கு முன் பெருந்தொடக்கு ஏற்பட்டால் (பெண்கள் மாதவிடாயிலிருந்து துப்பரவடைதல் அல்லது ஏதேனுமோர் வழியில் ஜனாபத் ஏற்படல் போன்று) குளிக்காமல் ஸஹர் செய்து விட்டு ஸுபஹ் தொழுகைக்காக பாங்கு சொல்லப்பட்டதன் பின் குளித்துக் கொள்ளலாம். இதனால் நோன்பிற்கு எந்தப் பாதிப்பும் கிடையாது.
* எல்லோருடனும் சேர்ந்து ரமழானின் எல்லா நோன்புகளைப் பிடித்து முடிக்கும் நோக்கில் ஒரு பெண் தனது மாதவிடாயை சில நாட்களுக்குத் தடுத்து வைக்கும் மருந்துகளைப் பாவிக்கலாம். ஆனால் இச்செயலால் பக்க விளைவுகளும், ஆபத்துகளும் வரமாட்டாது என்ற உத்தரவாதமும், உறுதியும் இருக்க வேண்டும்.
* ஒரு நோன்பாளி உமிழ் நீரை விழுங்கலாம். இதேபோன்று தொண்டையின் உள்ளே (வெளியிலல்ல)ஏற்படும் காரலையும் விழுங்குவது நோன்பை முறிக்காது.
* நபியவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: “(நோன்பு துறக்கும் நேரமானதும்) தாமதிக்காமல் அவசரமாக நோன்பு துறந்தும், ஸஹர் செய்வதை (முடியுமான

அளவு) பிற்படுத்தியும் நடக்கும் வரை எனது உம்மத் சிறப்பான நிலையிலேயே தொடர்ந்தும் இருப்பார்கள்." (நூல்: அஹ்மத்).

* "யஹூதி, நஸாராக்கள் தாமதித்து நோன்பு துறக்கும் வழமையுள்ளவர்கள் என்பதால் (அதற்கு மாற்றமாக) எமது மக்கள் நோன்பு துறப்பதை அவசரப்படுத்துபவர்களாக இருக்கும் வரை இந்த மார்க்கம் (மற்ற மார்க்கங்களைவிட) கண்ணியமானதாக சிறப்புற்று மேலோங்கியதாகத் தொடர்ந்தும் இருக்கும்." (நூல்: அபூதாவூத்).

* நோன்பு துறக்கும் வேளையில் துஆப்பிரார்த்தனையில் ஈடுபடுவது விரும்பத்தக்கது. நபியவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்: "நிச்சயமாக நோன்பாளிக்கு நோன்பு துறக்கும் போது மறுக்கப்படாமல் அங்கீகரிக்கப்படும் ஒரு பிரார்த்தனை (கிடைக்கும் பாக்கியம்) உண்டு". (நூல்: இப்னுமாஜா).
ஹதீஸ்களில் நோன்பு துறக்கும்போது ஓதப்படுவதற்காக வந்துள்ள துஆக்களில் நபியவர்கள் ஓதிய பின்வரும் துஆவும் ஒன்றாகும்.
"தஹபல் ளமஉ வப்தல்லதில் உரூக், வஸபதல் அஜ்ரு இன்ஷா அல்லாஹ்" (தாகம் தீர்ந்துவிட்டது, நாடி நாளங்கள் நனைந்து விட்டன, அல்லாஹ் நாடினால் கூலி உறுதியாகும்.)

* நன்கு காயாத பழுத்த ஈத்தம்பழத்தினால் நோன்பு துறப்பது ஸுன்னத்தாகும். அது கிடைக்காவிட்டால் பழுத்துக்காய்ந்த ஈத்தம்பழத்தின் மூலமும், அதுவும் கிடைக்காவிட்டால் தண்ணீரின் மூலமும் நோன்பு துறப்பது ஸுன்னத்தாகும்.

* நோன்பாளி சுர்மா போடுவதையும், கண் அல்லது காதில் திரவமான சொட்டுகளை விடுவதையும் தவிர்ப்பது நல்லது. இப்படிச் செய்வதால் நோன்பு முறிந்துவிடும் என சில உலமாக்களின் கருத்துக்கள் இருப்பதால் அதனையும் பேணும் நோக்கில் அவைகளைத் தவிர்க்க வேண்டும். ஆனால் வைத்தியம் போன்ற தேவைகள் இருப்பின் அவைகளைச் செய்வது பிழையல்ல. அப்படி ஊற்றப்படும் மருந்தின் சுவை தொண்டையில் உணரப்பட்டாலும் நோன்பிற்குப் பாதகமில்லை.

* ஒரு நோன்பாளி நோன்பு நோற்ற நிலையில் பகலின் எந்த நேரத்திலும் (மிஸ்வாக்) பல் துலக்கலாம். ஆதாரம் கூடிய வலுவான கருத்தின்படி அது எச்சந்தர்ப்பத்திலும் மக்ரூஹ் ஆகமாட்டாது.

* ஒரு நோன்பாளி புறம்பேசுவது, கோள் சொல்வது, பொய் பேசுவது போன்ற இழிசெயல்களைக் கட்டாயம் தவிர்க்க வேண்டும். எவரேனும் ஏசிச் சீண்டினால் "நிச்சயமாக நான் நோன்பாளி" எனக்கூறி ஒதுங்கிக்கொள்ள வேண்டும். நாவையும், ஏனைய உறுப்புக்களையும் பாவங்களைவிட்டும் பாதுகாத்துக் கொள்வதன் மூலம் ஒரு நோன்பாளி தனது நோன்பை காத்துக்கொள்கின்றான். ஏனெனில் நபியவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்: "பொய்பேசுவதையும், அதன்படி நடப்பதையும் யார் விடவில்லையோ அவர் (நோன்பு பிடிப்பதில்) சாப்பாட்டையும், குடிப்பையும் விட்டுவிடுவதில் அல்லாஹ்வுக்கு எந்தத் தேவையும் கிடையாது." (நூல்: அஹ்மத்).

* ஒருவர் நோன்பு நோற்றுள்ள நிலையில் விருந்துக்கு அழைக்கப்பட்டால் (அவர் போய்) விருந்தளிப்பவருக்காக துஆச்செய்வது ஸுன்னத்தாகும். நோன்பு நோற்காத நிலையிலிருந்தால் சாப்பிடுவதும் ஸுன்னத்தாகும்.

* லைலதுல் கத்ர் என்பது ஒரு வருடத்தின் மிகச்சிறந்த இரவாகும். அது ரமழான் மாதத்தின் கடைசிப் பத்து இரவுகளிலேயே வரக்கூடியதாகும்.




(அதிலும் 27ஆம் அன்று லைலதுல் கத்ர் இரவு வருவதற்கு மிகவும் கூடிய வாய்ப்புண்டு என சிலர் கூறியுள்ளனர்) அவ்விரவில் செய்யப்படும் நல்லமல்கள் ஆயிரம் மாதங்கள் நல்லமல்கள் செய்வதைவிடவும் சிறந்ததாகும். அதனைக் கணிப்பதற்கு சில அடையாளங்கள் உள்ளன. அவற்றில் சில பின்வருமாறு:

✷ அன்றைய காலைப் பொழுதில் சூரியன் அதிக கதிர்கள் இல்லாமல் வெள்ளை நிறமாகக் காட்சியளித்தல்.

✷ அன்றைய காலநிலை சூடு அல்லது குளிர் என்றில்லாமல் நடுநிலையாக இருத்தல்.

சிலவேளை ஒரு முஸ்லிம் தன்னை அறியாமலேயே அவ்விரவை அடைந்து விடலாம். எனவே, லைலதுல்கத்ர் இரவைத் தவறாமல் அடைந்துகொள்ளும் நோக்கில் பொதுவாக ரமழான் மாதம் முழுவதும் அதிலும் குறிப்பாக அதன் கடைசிப் பத்து நாட்களிலும் ஒவ்வொருவரும் அதிகமாக வணக்க வழிபாடுகளில் ஈடுபடவேண்டும். அதன் எல்லா இரவுகளிலும் ரமழானின் இரவு நேர வணக்கத்தைத் தவறாது நிறைவேற்றுவதில் ஆர்வமாய் இருக்கவேண்டும். மேலும், ஒருவர் ஜமாஅத்துடன் தறாவீஹ் தொழுகையைத்தொழ ஆரம்பித்தால் இமாம் முழுமையாகத் தொழுது முடியும் வரை அந்த ஜமாஅத்துடனேயே தொடர்ந்து தொழவேண்டும். அப்படித் தொழும் பட்சத்தில் அவருக்கு ஒரு இரவு முழுவதும் நின்று வணங்கிய நன்மை எழுதப்படும்.

எவரேனுமொருவர் ஸுன்னத்தான நோன்பொன்றைப் பிடிக்க ஆரம்பித்தால் அதனைப்பிடித்து முடிப்பது ஸுன்னத்தே அன்றி கடமையல்ல. அவர் வேண்டுமென்றே அதனை விடுவதில் குற்றம் கிடையாது. அதனைக் கழாச் செய்யவேண்டிய கட்டாயமும் கிடையாது.

**இ.திகாப் :** 'இ.்.திகாப்' என்பது வணக்க வழிபாடுகளில் ஈடுபடும் நோக்கில் சித்தசுவாதீனமுள்ள ஒரு முஸ்லிம் பள்ளியில் தரித்திருப்பதாகும். இ.்.திகாபுடைய வணக்கத்தில் ஈடுபடுபவர் பெருந்தொடக்கை விட்டும் துப்பரவானவராக இருப்பது நிபந்தனையாகும். மேலும் அவர் சாப்பிடுவது, மலசலம் கழிப்பது, கடமையான குளிப்பை நிறைவேற்றுவது போன்ற அவசியத் தேவைகளுக்காக அன்றி பள்ளியை விட்டும் வெளியாகாமல் இருத்தல் வேண்டும். தேவையின்றி பள்ளியை விட்டும் வெளிப்படுவது, உடலுறவில் ஈடுபடுவது என்பன இ.்.திகாபை முறித்துவிடும்.

**பொதுவாக எல்லா நேரங்களிலும்** இ.்.திகாப் இருப்பது ஸுன்னத்தாகும். மேலும் ரமழான் மாதத்தில் அது முக்கிய ஸுன்னத்தாகும். அதிலும் விஷேசமாக ரமழானின் இறுதிப்பத்தில் அது மிகவும் முக்கியமானதாகும். இ.்.திகாப் நிறைவேறுவதற்கான குறைந்த காலம் கொஞ்சநேரமாகும். எனினும், ஒருநாளைவிடக் குறையாமலிருப்பது விரும்பத்தக்கது. மேலும் கணவனுடைய உத்தரவுடனேயே அன்றி திருமணமான பெண் இ.்.திகாப் இருக்கக்கூடாது. இ.்.திகாப் இருக்கும் ஒருவர் வணக்க வழிபாடுகளில் ஈடுபடுவதும், அனுமதிக்கப்பட்ட விடயங்களையும் அதிகமாகச் செய்யாமலிருப்பதும், தனக்குத் தேவையற்ற விடயங்களைத் தவிர்ந்து நடப்பதும் ஸுன்னத்தாகும்.

# ஹஜ், உம்ரா

**ஹஜ்ஜும் உம்ராவும்:** ஹஜ், உம்ரா ஆகிய இரு வணக்கங்களும் பின்வரும் நிபந்தனைகள் இருப்பின் ஒருவரின் வாழ்வில் ஒருமுறை கடமையாகும். 1.முஸ்லிமாக இருத்தல். 2.சித்தசுவாதீனமுள்ளவராக இருத்தல். 3.பருவமடைந்தவராக இருத்தல். 4.சுதந்திரப்புருசராக இருத்தல். 5.அவ்வணக்கத்தை நிறைவேற்றுவதற்கான வசதியுள்ளவராக இருத்தல். (அப்பயணத்திற்கான வாகனம், பயணச்செலவுகள் உள்ளவராக இருத்தல்.)

ஹஜ் கடமையான ஒருவர் கவனயீனமாக அதனை நிறைவேற்றாமல் இருந்து மரணமடைந்துவிட்டால் அவரது சொத்திலிருந்து ஹஜ், உம்ராவின் செலவினங்களுக்காகப் பணம் ஒதுக்கப்பட்டு அவை நிறைவேற்றப்பட வேண்டும். மேலும், ஒரு காபிர் அல்லது பைத்தியக்காரர் ஹஜ் செய்தால் நிறைவேறமாட்டாது. ஆனால், ஒரு சிறுபிள்ளை அல்லது அடிமை செய்யும் ஹஜ் நிறைவேறும். எனினும் இஸ்லாத்தின் கடமையான ஹஜ்ஜுக்குப் பதிலாக அது நிறைவேறாது. ஹஜ் செய்ய வசதியற்ற ஒருவர் கடன்வாங்கி ஹஜ் செய்தால் அது நிறைவேறும். மேலும், கடமையான ஹஜ்ஜை நிறைவேற்றாத அல்லது அதற்கு முன் ஒருபோதும் ஹஜ் செய்திடாத ஒருவர் வேறொருவருக்குப் பதிலாக ஹஜ் செய்தால் அது (ஹஜ் செய்யும்) அவருடைய கடமையான ஹஜ்ஜாகவே நிறைவேறும். பகரமான ஹஜ்ஜாக நிறைவேறாது.

**இஹ்ராம் நிய்யத் வைத்தல்:** இஹ்ராம் நிய்யத் வைக்கத் தயாராகும் ஒருவருக்கு ஆரம்பத்தில் குளித்துத் துப்பரவு செய்துகொண்டு மணம் பூசிக்கொள்வது ஸுன்னத்தாகும். அதன்பின் தைக்கப்பட்ட ஆடைகளைக் கழைந்து துப்பரவான வெள்ளை நிற வேட்டியையும், மேலங்கியையும் அணிந்துகொள்வார். பின்பு, (லப்பைக அல்லாஹும்ம உம்ரதன்) அல்லது (லப்பைக அல்லாஹும்ம ஹஜ்ஜன்) அல்லது (லப்பைக அல்லாஹும்ம ஹஜ்ஜன் வஉம்ரதன்) என வாயால் கூறி (தான் செய்யவிருக்கும் ஹஜ் அல்லது உம்ரா அல்லது இரண்டையும் சேர்த்து) மனதால் நிய்யத் வைத்துக்கொள்வார். தனது இந்த வணக்கத்தை நிறைவேற்றி முடிப்பதற்கு ஏதேனும் தடையேற்படலாம் எனப்பயந்தால் "ஏதேனும் எனக்குத்தடை ஏற்பட்டால் அவ்விடத்தில் நான் இஹ்ராமை விட்டும் நீங்கிவிடுவேன்" என்று (நிய்யத் வைக்கும்போது) அவருக்கு நிபந்தனையிட்டுக் கொள்ளலாம். ஹஜ் வணக்கத்தை நிறைவேற்ற முனையும் ஒருவர் பின்வரும் மூன்று முறைகளில் தான் விரும்பும் ஒரு முறையில் அதனை நிறைவேற்றலாம். அவையாவன: தமத்துஉ, இப்ராது, கிரான் என்பனவாகும். அவற்றில் மிகச்சிறந்தது தமத்துஉ முறையாகும்.

**தமத்துஉ:** ஹஜ்ஜுக்கான மாதங்களில் உம்ராவுக்கு இஹ்ராம் நிய்யத் வைத்து அதனை முதலில் செய்துமுடித்த பின் அதே வருடத்தில் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் நிய்யத் வைப்பதாகும்.

**இப்ராது:** ஹஜ்ஜுக்கு மாத்திரம் இஹ்ராம் நிய்யத் வைப்பது.

**கிரான்:** ஹஜ்ஜு, உம்ரா இரண்டுக்குமாக ஒரே நேரத்தில் நிய்யத் வைப்பது. அல்லது முதலில் உம்ராவுக்கு இஹ்ராம் நிய்யத் வைத்து, அந்த உம்ராவுடைய தவாபை ஆரம்பிக்கமுன் ஹஜ்ஜையும் அதனுடன் இணைத்துக்கொள்வதாகும்.

ஹஜ்ஜுக்காக நிய்யத் வைத்து வாகனத்தில் ஏறிப் புறப்படத்துவங்கும் ஒருவர் பின்வருமாறு தல்பியா சொல்ல ஆரம்பிப்பார்.

(லப்பைகல்லாஹும்ம லப்பைக், லப்பைக லா ஷரீக லக லப்பைக், இன்னல் ஹம்த வன்னிஃமத லக வல்முல்க், லா ஷரீக லக்) தல்பியாவை அதிகமாகச் சொல்வதும், பெண்கள் அல்லாதவர்கள் சத்தத்தை உயர்த்தியவர்களாக அதனைச் சொல்வதும் ஸுன்னத்தாகும்.

**இஹ்ராமுடைய நிலையில் தடுக்கப்பட்ட அம்சங்கள்:** 1. முடியைக் களைதல். 2. நகத்தை வெட்டுதல். 3. ஆண்கள் தைக்கப்பட்ட ஆடைகளை அணிதல். எனினும், வேட்டி போன்ற தைக்கப்படாத ஆடை கிடைக்காத இக்கட்டான நிலையில் முழுநீள காற்சட்டை போன்றதை அணியலாம். அதேபோன்று சாதாரண செருப்புக் கிடைக்காத பட்சத்தில் ஹுஃப்பின் மேற்பகுதியை வெட்டி கரண்டைக்குக் கீழுள்ள பகுதியை அணியலாம். இந்நிலையில் தெண்டகுற்றம் விதியாகமாட்டாது. 4. ஆண்கள் தலையை மூடுதல். 5. உடலில் அல்லது உடையில் மணம் பூசுதல். 6. உண்பதற்கு அனுமதிக்கப்பட்ட காட்டு மிருகங்களை வேட்டையாடுதல். 7. திருமண ஒப்பந்தம் செய்தல். (திருமணத்தை நடாத்துவது ஹராமாகும். அதனைச் செய்ததற்கு தெண்டகுற்றம் கடமையாகாது) 8. அபம் அல்லாத பகுதியில் ஆசையுடன் திரையின்றி சேர்தல். ஒரு ஆட்டை அறுத்துப் பங்கிடுதல், அல்லது 3 நாட்கள் நோன்பு நோற்றல், அல்லது 6 ஏழைகளுக்கு உணவளித்தல் என்பன அதற்கான தெண்டகுற்றமாகும். 9. அபத்தில் உடலுறவு கொள்ளல். இஹ்ராமிலிருந்து களையும் இரு கட்டங்களில் முதற்கட்டத்திற்கும் முன்பு இதனைச் செய்தால் அவரது ஹஜ் பாழாகிவிடும். எனினும், அவர் ஹஜ்ஜை தொடர்ந்தும் செய்துமுடிப்பதும், அடுத்த வருடம் அதனைக் கழாச்செய்வதும், ஒரு ஒட்டகத்தை அறுத்து மக்காவிலுள்ள ஏழைகளுக்குப் பங்கிடுவதும் அவர் மீது கடமையாகும். இச்செயலை இஹ்ராமிலிருந்து கலையும் முதற்கட்டத்திற்குப் பின்பு செய்திருந்தால் அவருடைய ஹஜ் முறிந்துவிடமாட்டாது. எனினும் அவர் ஓர் ஒட்டகத்தை அறுத்துப் பலியிடவேண்டும். மேலும், உம்ரா வணக்கத்தில் ஈடுபட்டுள்ள ஒருவர் உடலுறவு கொண்டால் அந்த உம்ரா முறிந்துவிடும். அவர் ஒரு ஆட்டை அறுப்பதும், அந்த உம்ராவைக் கழாச்செய்வதும் அவர் மீது கடமையாகும். இஹ்ராமில் தடுக்கப்பட்ட அம்சங்களில் உடலுறவைத்தவிர வேறு எதையேனும் செய்ததன் மூலம் ஹஜ் அல்லது உம்ராவின் வணக்கம் முறியமாட்டாது. இஹ்ராமில் தடுக்கப்பட்ட இந்த அம்சங்களில் தைக்கப்பட்ட ஆடையை உடுப்பதிலே தவிர ஏனையவைகளில் பெண்களும் ஆண்களைப் போன்றே. ஆனால் பெண்களுக்கு தைக்கப்பட்ட ஆடையை அணியலாம். எனினும், பெண்கள் இஹ்ராமுடைய நிலையில் முகமூடிகளையும், கைமேஸ்களையும் அணிவது கூடாது.

**குற்றப்பரிகாரங்கள் இரண்டு வகைப்படும்:** (1) ஒருவரது விருப்பத்திற்கேற்ப தெரிவு செய்யப்படுவது. (2) வரிசைக்கிரமப்படி ஒன்று முடியாவிட்டால் அடுத்தது என்ற முறையில் கொடுக்கப்படுவது.

1. முடியைக் களைவது, மணம் பூசுவது, நகங்களை வெட்டுவது, தலையை மூடுவது, தைத்த ஆடையை அணிவது ஆகியவற்றின் குற்றப்பரிகாரமாகும். அவைகளுக்கான பரிகாரம் மூன்று நாட்கள் நோன்பு நோற்பது அல்லது ஒருவருக்கு ஒன்ரே கால் (1.25) கி.கிராம் வீதம் 6 ஏழைகளுக்கு உணவளிப்பது, அல்லது ஒரு ஆட்டை அறுத்துப் பங்கிடுவது. வேட்டையாடியதற்கான பரிகாரமாவது: கொல்லப்பட்ட பிராணிக்கு நிகரான அளவுள்ள கால் நடைகளில் (ஆடு, மாடு, ஒட்டகம்) ஒன்றை அறுப்பதாகும். அதற்கு நிகரான அளவு கால்நடைகளில் இல்லாவிட்டால் அப்பிராணியின் பெறுமதியளவு பணத்தைப் பங்கிடுவதாகும்.

2. தமத்துஉ, அல்லது கிரான் முறைப்படி ஹஜ் செய்தவருக்கான குற்றப்பரிகாரமாக ஒரு ஆடும், உடலுறவு கொண்டவருக்கான குற்றப்பரிகாரமாக ஒரு ஒட்டகமும் அறுக்கப்படவேண்டும். அம்மிருகங்களை அறுக்கமுடியாத பட்சத்தில் ஹஜ்ஜிலே மூன்று நோன்புகளும், தன் ஊருக்குத்

திரும்பிய பின் ஏழு நோன்புகளும் நோற்க வேண்டும். மேலும், மிருகங்களை அறுத்துப்பங்கிடுவதும், உணவு வழங்குவதும் புனித ஹரம் பூமியைச் சேர்ந்த ஏழைகளுக்கு மாத்திரமே.

மக்கா நகரினுள் நுழைதல்: ஹஜ் செய்யச் செல்லும் ஒருவர் புனித மஸ்ஜிதுல் ஹராமில் நுழையும் போது ஏனைய பள்ளிகளினுள் நுழையும் போது ஓதும் திக்ரை ஓதிக்கொள்வார். பின்பு அவர் தமத்துஉ முறைப்படி ஹஜ் செய்வாரானால் முதலில் உம்ராவிற்கான தவாபைச் செய்வார். இப்ராத் அல்லது கிரான் முறைப்படி ஹஜ் செய்வாரானால் \தவாபுல் குதூம்' (மக்காவிற்கு வெளியிலிருந்து மஸ்ஜிதுல் ஹராமுக்கு வரும் ஒருவர் முதலில் செய்யும் தவாபை) ஆரம்பமாகச் செய்வார். தவாப் செய்யத்துவங்கும் ஒருவர் தமது மேலங்கியின் நடுப் பகுதியை அவரது வலது தோள் புயத்தின் கமுக்கட்டுக்குக் கீழாலும், அதன் இரு ஓரங்களையும் தனது இடது தோள்புயத்தின் மேலாலும் போட்டுக்கொள்வார்.

அடுத்ததாக ஹஜருல் அஸ்வத் கல்லை (பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர்) என்று கூறி தனது வாயினால் முத்தமிடுவார். அல்லது ஒரு பொருளினால் தொட்டு அப்பொருளை முத்தமிடுவார். ஆல்லது வலக்கையால் சைகை செய்வார். தவாபின் ஒவ்வொரு சுற்றிலும் இவ்வாறு செய்வார். பின்பு க.்.பா தனது இடதுபக்கமாக இருக்கும் விதத்தில் அதனை ஏழு முறை சுற்றுவார். 7 சுற்றுகளில் முதல் மூன்று சுற்றுகளிலும் முடியுமான அளவு \ரமல்| ஓட்டம் ஓடுவார். எஞ்சிய சுற்றுகளில் சாதாரணமாக நடந்துகொள்வார். \ரமல்' ஓட்டம் என்பது கால் எட்டுகளை எடுத்துவைக்கும் போது கால் பாதங்களை அருகருகே எடுத்து வைத்து கொஞ்சம் குலுங்கிய நிலையில் ஓரளவான வேகத்தில் ஓடுவதாகும். தவாப் செய்யும் ஒருவர் க.்.பாவின் \ருக்னுல் யமானி| எனும் மூலைக்கு நேராக வரும்பொழுது முடியுமாயின் அதனைத் தொடுவார். அதற்கும் அடுத்த மூலைக்குமிடையில் ربنا آتنا في الدنيا حسنة وفي الآخرة حسنة وقنا عذاب النار (ரப்பனா ஆதினா பித்துன்யா ஹஸனதன் வபில் ஆகிரதி ஹஸனதன் வகினா அதாபன்னார்) என்பதனை ஓதிக்கொள்வார். ஒரு சுற்றின் ஏனைய பகுதிகளில் தனக்கு விருப்பமான பிரார்த்தனைகளைக் கேட்டுக்கொள்வார். தவாப் செய்து முடிந்த பின் முடியுமாயின் மகாமு இப்றாஹீமுக்குப் பின்னால் நின்று 2 ரக்அத்கள் தொழுதுகொள்வார். முதல் ரக்அத்தில் سورة الكافرون ஐயும், மறு ரக்அத்தில் سورة الإخلاص ஐயும் ஓதுவார். அதன்பின் ஸம்ஸம் நீரை அருந்துவார். அதனை அதிமாக அருந்துவது சிறந்தது. அதன்பின் ஹஜருல் அஸ்வதை நோக்கி வந்து முடியுமாயின் தொட்டுமுத்தமிட்டபின் \முல்தஸம்| என்ற இடத்தில் துஆ இறைஞ்சுவார். \முல்தஸம்| என்பது ஹஜருல் அஸ்வதுக்கும், க.்.பாவின் வாயலுக்கும் இடையிலுள்ள சிறிய இடப்பகுதியாகும்.

இவைகளைச் செய்துமுடித்தபின் 'ஸஈ' செய்வதற்காக ஸபா மலைக்குப்போய் அதில் ஏறி "இன்னஸ்ஸபா வல்மர்வத மின் ஷஆஇரில்லாஹ்". என்று ஆரம்பிக்கும் ((அல்லாஹ் ஆரம்பித்ததைக் கொண்டு நான் ஆரம்பிக்கிறேன்)) என்ற குர்ஆன் வசனத்தை ஓதி (அல்லாஹு அக்பர் லாஇலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்) என்று தக்பீர் சொல்லிவிட்டு அங்கிருந்து க.்.பாவை முன்னோக்கி தனது இரு கைகளையும் உயர்த்தி பிரார்த்தனை செய்வார். அதன்பின் ஸபா மலையிலிருந்து இறங்கி மர்வா என்ற இடத்தை நோக்கிச்செல்ல ஆரம்பிப்பார். அப்படிச்செல்லும் போது இரு பச்சை நிற விளக்குகளுக்கும் மத்தியில் ஓடுவதைப் போன்று கொஞ்சம் வேகமாகச் செல்வார். ஏனைய இடங்களில் சாதாரணமான வேகத்தில் நடந்து செல்வார். மர்வா மலையில் ஏறியபின் ஸபா மலையில் வைத்துச் செய்தவற்றை

செய்வார். பின்பு அதிலிருந்து இறங்கி ஸபாவிலிருந்து வந்ததைப் போல் ஸபாவை நோக்கிச் செல்வார். இப்படியாக 7 முறை ஸபா, மர்வாவுக்கு இடையில் தொங்கோட்டம் ஓடுவார். ஸபாவிலிருந்து மர்வாவுக்குச் சென்றடைவதை ஒரு முறையாகவும், மர்வாவிலிருந்து ஸபாவுக்குச் சென்றடைவதை இன்னொரு முறையாகவும் கணிக்கப்படும். ஸஈ செய்து முடிந்த பின் தனது தலை முடியை முழுமையாகச் சிரைப்பது அல்லது முழுமையாகக் கத்தரிப்பது ஆகிய இரண்டில் ஒன்றைச் செய்வார். இதில் தமத்துஉ முறையில் உம்ராவைச் செய்வோரைத் தவிரவுள்ள ஏனையோருக்கு தலைமுடியைச் சிரைப்பதே மிகச் சிறந்ததாகும். அவர் அந்த உம்ராவின் பின் ஹஜ் செய்யவுள்ளதே இதற்குக் காரணமாகும்.

கிரான் அல்லது இப்ராத் முறைப்படி ஹஜ் செய்பவர் தவாபுல் குதூமுக்குப் பின் ஹஜ்ஜுப் பெருநாள் தினத்தன்று ஜம்ரதுல் அகபாவுக்கு கல்லெறியும் வரை இஹ்ராமை விட்டும் நீங்கமாட்டார். மேற்கூறப்பட்ட தபாப், ஸஈ இரண்டிலும் ஆண்களைப் போலவே பெண்களும் நடந்துகொள்வார்கள். எனினும், தவாபிலும், ஸஈயிலும் பெண்கள் ரமல் ஓட்டம் ஓடுவது கூடாது.

**ஹஜ் செய்யும் விதம்:** துல்ஹிஜ்ஜா மாதத்தின் 8ஆம் பிறையாகிய தர்வியா எனும் நாளில் இஹ்ராம் நிலையில் இல்லாத ஒருவர் மக்காவில் அவர் தங்கி இருக்கும் இடத்தில் இருந்து இஹ்ராம் நிய்யத் வைத்தவராகப் புறப்பட்டு 9 ஆம் பிறையின் இரவு மினாவில் தங்குவதற்காகச் செல்வார். 9 ஆம் அன்று காலை அங்கிருந்து அரபாவிற்குப் புறப்பட்டுச் செல்வார். அங்கு ளுஹர் தொழுகையின் நேரமாகியதும் ளுஹரையும், அஸரையும் ஒன்றுசேர்த்து, சுருக்கித் தொழுவார். \உர்னா| பள்ளத்தாக்கைத் தவிர அரபா மைதானத்தின் அனைத்து இடங்களும் ஹஜ்ஜுக்காகத் தரித்திருப்பதற்கு முடியுமானதாகும். அரபாவில் தரித்திருக்கும் ஒருவர் **(லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீகலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலாகுல்லி சைஇன் கதீர்)** என்ற திக்ரை அதிகமாக ஓதுவார். அத்துடன் அல்லாஹ்வின் அருளை ஆசை வைத்தவராக முடியுமான அளவு துஆ இறைஞ்சுவதிலும், தௌபா செய்வதிலும் அதிகமதிகமாக ஈடுபடுவார். அன்றைய தினம் சூரியன் மறைந்ததும் முஸ்தலிபாவை நோக்கி அமைதியாகச் செல்வார். அப்படிச் செல்லும் வழியில் தல்பியா சொல்வதுடன், திக்ருகளையும் ஓதிக்கொள்வார். முஸ்தலிபாவைச் சென்றடைந்ததும் அங்கு மஃறிபையும், இஷாவையும் ஒன்றுசேர்த்து, சுருக்கித் தொழுதபின் முஸ்தலிபாவிலேயே அன்றிரவு தங்குவார். மறுநாள் காலை ஸுபஹ் தொழுகைக்கான நேரமானதும் தொழுதுவிட்டு நிலம்வெளிக்கும் வரை அங்கேயே துஆவில் ஈடுபடுவார். அதனைத் தொடர்ந்து சூரியன் உதயமாகமுன் முஸ்தலிபாவிலிருந்து புறப்பட்டுவிடுவார். செல்லும் வழியில் \வாதி முஹஸ்ஸர்| எனும் இடத்தை அடைந்ததும் முடியுமாயின் மிக வேகமாக அவ்விடத்தைக் கடந்துவிடுவார். பின்பு மினாவை வந்தடைந்ததும் முதலாவதாக ஜம்ரதுல் அகபாவிற்கு கல்லெறிவார். விரலினால் சுண்டப்படும் (பயர் கொட்டைக்கும், துப்பாக்கி ரவைக்கும் மத்திய அளவிலான) சிறிய 7 கற்களை எறிவார். ஓவ்வொரு கல்லையும் எறியும் போது கையை உயர்த்தி எறிவதுடன் தக்பீரும் சொல்வார். எறியப்படும் கற்கள் அங்குள்ள தூணில் படாவிட்டாலும் அதனைச் சுற்றிக் கட்டப்பட்டுள்ள மதில்களுக்கு உள்ளே விழுவது கட்டாயமாகும். (ஆனாலும் தற்போது அது மதிலாகவே கட்டப்பட்டு விரிவுபடுத்தப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது). ஜம்ராவுக்குக் கல்லெறிய ஆரம்பிப்பதுடன் தல்பியாவை

நிறுத்திக் கொள்வார். அதன்பின் தனது குர்பானை அறுத்துப் பலியிடுவார். அதனைத் தொடர்ந்து தலையை சிரைத்து அல்லது கத்தரித்துக்கொள்வார். சிரைப்பதே மிகச் சிறந்ததாகும். கல் எறிந்து முடித்து தலையைச் சிரைப்பதுடன் இஹ்ராமின் மூலம் தடுக்கப்பட்ட பெண்கள் சம்பந்தப்பட்ட விடயத்தைத் தவிரவுள்ள அனைத்து அம்சங்களும் அவருக்கு ஹலால் ஆகிவிடும். இதனையே التحلل الأول (இஹ்ராமை விட்டும் கலையும் முதல் கட்டம்) எனக் குறிப்பிடுவர். இதன்பின் மக்காவுக்குச் சென்று ஹஜ் நிறைவேறி முடிவதற்கான கடமையான தவாபான தவாபுல் இபாழாவை நிறைவேற்றுவார். அதன்பின் அவர் தமத்துஉ முறையின்படி ஹஜ்ஜு செய்வாராயின் அல்லது ஏற்கனவே தவாபுல் குதூமின் பின் ஸஈ செய்திருக்காவிடின் ஸஈ (தொங்கோட்டம்) ஓடுவார். இதனையும் செய்துமுடிப்பதுடன் பெண்கள் உட்பட அனைத்துமே அவருக்கு ஹலாலாகிவிடும். இது இஹ்ராமிலிருந்து நீங்கும் (இறுதி) இரண்டாம் கட்டமாகும். இதற்கு التحلل الثاني எனப்படும்.

அதன்பின் மினாவிற்குத் திரும்பிச் சென்று அதில் கட்டாயம் தங்கவேண்டிய இரவுகளில் அங்கு தங்குவார். மேலும், மினாவில் தங்கும் நாட்களில் ஒவ்வொரு நாளும் ளுஹர் நேரமான பின் அங்குள்ள ஜம்ராக்களுக்கு ஒவ்வொன்றுக்கும் 7 கற்கள் வீதம் கல்லெறிவார். முதலாவதாக ஜம்ரதுல் ஊலாவுக்குக் கல்லெறிந்துவிட்டு சற்று முன்பாகச் சென்று நின்று பிரார்த்தனை புரிவார். பின்பு நடுவிலுள்ள ஜம்ரதுல் வுஸ்தாவுக்கும் அதேபோன்று கல்லெறிந்துவிட்டு துஆச்செய்வார். அதன்பின் ஜம்ரதுல் அகபாவிற்கு கல்லெறியும் அவர் அவ்விடத்தில் தரித்து நிற்கமாட்டார். இரண்டாம் நாளும் இதுபோன்றே ஜம்ராக்களுக்குக் கல்லெறிவார். மூன்றாமிரவு மினாவில் தங்காமல் நேரகாலத்துடன் அவர் செல்ல விரும்பினால் இரண்டாம் நாள் சூரியன் மறைவதற்கு முன் மினாவிலிருந்து வெளியாகிவிடுவார். எனவே, பன்னிரெண்டாம் பிறையன்று அவர் மினாவினுள் இருக்கும்போது சூரியன் மறைந்துவிட்டால் அந்த இரவு மினாவில் தங்குவதும், அடுத்தநாள் கல்லெறிவதும் அவருக்குக் கடமையாகும். என்றாலும், நேரகாலத்துடன் செல்வதாக முடிவுசெய்த ஒருவர் சனநெருக்கடியின் காரணமாக மஃரிபுக்கு முன் மினாவை விட்டும் வெளியாக முடியாமல் போனால் சூரியன் மறைந்த பின்பு அவர் மினாவிலிருந்து செல்வதில் குற்றம் கிடையாது. கிரான் முறையில் ஹஜ் செய்பவரும், இப்ராத் முறையில் ஹஜ் செய்பவரைப் போன்றே. எனினும், அவர் தமத்துஉ முறையில் ஹஜ் செய்தவரைப்போன்று ஒரு குர்பான் கொடுக்க வேண்டும். ஹஜ் முடிந்தபின் வீடு செல்வதற்காகப் பயணம் செய்ய விரும்பும் ஒருவர் இறுதியாக கஃபாவைத் தரிசிப்பதற்காக 'தவாபுல் விதாஃ' பிரியாவிடைத் தவாபை செய்யாமல் மக்காவிலிருந்து வெளியாகமாட்டார். என்றாலும், இப்பிரியாவிடைத் தவாபு மாதவிடாய் அல்லது பிரசவ ருது நிலையிலுள்ள பெண்களுக்குக் கடமையாகமாட்டாது. பிரியாவிடைத் தவாபை முடித்த பின்னர் மக்காவினுள் வியாபாரம் போன்ற விடயங்களில் ஈடுபட்டால் அங்கிருந்து செல்லமுன் மீண்டும் ஒருமுறை பிரியாவிடைத் தவாபைச் செய்யவேண்டும். மேலும் மக்காவிலிருந்து பிரியாவிடைத் தவாபைச் செய்யாமல் வெளியாகிச் சென்ற ஒருவர் கொஞ்ச தூரம் சென்றபின் திரும்பி வந்து அதனைச் செய்தாலும் அது நிறைவேறும். ஆனால் அவர் வெகுதூரம் சென்று விட்டால் அந்த தவாபுக்குப் பதிலாக ஒரு குர்பான் கொடுக்க வேண்டும்.




**ஹஜ்ஜின் ருகுன்கள் எனும் கடமைகள் - 4**

1. இஹ்ராம் (ஹஜ்ஜுடைய வணக்கத்தை ஆரம்பிப்பதாக) நிய்யத் வைத்தல். 2. அறபாவில் தரித்தல். 3. தவாப் செய்தல். (இது தவாபுல் இபாழா அல்லது தவாபுஸ் ஸியாரா என அழைக்கப்படும்.) 4. ஸஈ செய்தல் (ஸபா, மர்வா மலைகளுக்கிடையில் தொங்கோட்டம் ஓடுதல்)

**ஹஜ்ஜின் வாஜிபுகள் எனும் கடமைகள் - 7**

1.இஹ்ராம் நிய்யத் வைப்பதற்காகக் குறிக்கப்பட்ட மீகாத் எனும் இடத்தில் வைத்து நிய்யத் வைத்தல். 2.அறபாவில் (சூரியன் மறையும் வரை) தரித்திருத்தல். 3.முஸ்தலிபாவில் (இரவின் அரைவாசிக்கும் பிந்திய நேரம் வரை) தங்குதல். 4.அய்யாமுத் தஷ்ரீக் (எனும் துல்ஹிஜ்ஜா 11, 12, 13) நாட்களின் இரவுகளில் மினாவில் தங்குதல். 5.ஜம்ராக்களுக்கு கல் எறிதல். 6.தலைமுடியைச் சிரைத்தல் அல்லது கத்தரித்தல். 7.பிரியாவிடைத் தவாப் செய்தல்.

**உம்ராவின் ருகுன்கள் எனும் கடமைகள் - 3**

1. இஹ்ராம் நிய்யத் வைத்தல். 2. தவாப் செய்தல். 3. ஸஈ செய்தல் (தொங்கோட்டம் ஓடுதல்).

**உம்ராவின் வாஜிபுகள் எனும் கடமைகள் - 2**

1. மீகாத்தில் வைத்து இஹ்ராம் நிய்யத் வைத்தல்.
2. தலைமுடியை சிரைத்தல் அல்லது கத்தரித்தல்.

குறிப்பு:- ருகுன் என்னும் கடமையை எவரேனும் விட்டால் அவருடைய ஹஜ் அல்லது உம்ரா வணக்கம் நிறைவேறமாட்டாது. வாஜிபு என்னும் கடமையை விட்டால் ஒரு குர்பான் கொடுத்து அதனை ஈடுசெய்யலாம். ஸுன்னாவை விட்டால் பாதிப்பு எதுவும் கிடையாது. மேலும் அதற்குப் பதிலாக வேறெதுவும் கடமையாகவும் மாட்டாது.

**தவாப் நிறைவேறுவதற்கான நிபந்தனைகள் - 13**

1. முஸ்லிமாக இருத்தல். 2. சித்தசுவாதீனமுள்ளவராக இருத்தல். 3.அதற்காக நிய்யத் வைத்தல். 4.தவாபிற்கான நேரம் நுழைதல். 5.மறைத்துக்கொள்ள முடியுமானவர் தனது உடம்பில் மறைக்க வேண்டிய பகுதியை (ஔரத்தை) மறைத்தல். 6. சிறு தொடக்கை விட்டும் துப்பரவாக இருத்தல். (சிறு பிள்ளைகளுக்கு இந்த நிபந்தனை கிடையாது) 7. உறுதியாக முழுமையான ஏழு சுற்றுகளைப் பூரணப்படுத்தல். 8. கஃபாவை தனக்கு இடப்பக்கமாக ஆக்கிக்கொள்ளல். இவ்விடயத்தில் ஏதாவது ஒரு சுற்றில் தவறு ஏற்பட்டால் அச்சுற்றை மீண்டும் செய்தல். 9. தவாப் செய்யும் போது பின்னோக்கிச் செல்லாமலிருத்தல். 10.சக்தியுள்ளவர் நடந்து தவாப் செய்தல். 11. தவாபின் சுற்றுகளைத் தொடர்ச்சியாகச் செய்தல். 12. மஸ்ஜிதுல் ஹராம் பள்ளியினுள்ளே தவாப் செய்தல். 13.ஹஜருல் அஸ்வத் இருக்கும் இடத்திலிருந்து தவாபை ஆரம்பித்தல்.

**தவாபின் ஸுன்னத்துகள்** ✷ ஹஜருல் அஸ்வதை வாயினால் முத்தமிடுதல் அல்லது ஒரு பொருளினால் அதனைத் தொட்டு முத்தமிடுதல். ✷ ஹஜருல் அஸ்வதை முத்தமிடும்போது தக்பீர் சொல்லல். ✷ கஃபாவின் மூலைகளில் ஒன்றாகிய ருக்னுல் யமானியைத் தொடுதல். ✷ ஏற்கனவே குறிப்பிடப்பட்ட இடங்களில் ரமல் ஓட்டம் ஓடுதல், சாதாரணமாக நடந்து செல்லல், \இழ்திபாஹ்| எனும் குறிப்பிட்ட வடிவில் இஹ்ராம் உடையை அணிதல். ✷ தவாபின் போது துஆ, திக்ர் போன்றவற்றில் ஈடுபடுதல். ✷ கஃபாவை நெருங்கி தவாப் செய்தல். ✷ தவாப் முடிந்தபின் மகாமு இப்றாஹீமுக்குப் பின்னால் நின்று இரு ரக்அத்கள் ஸுன்னத் தொழுதல்.

ஸஈ உடைய நிபந்தனைகள் - 9
1.முஸ்லிமாக இருத்தல். 2.சித்தசுவதீனமுள்ளவராக இருத்தல். 3.அதற்காக நிய்யத் வைத்தல். 4.தொடர்ச்சியாக ஓடிமுடித்தல். 5.சக்தியுள்ளவர் நடந்து செல்லல். 6.ஏழு ஓட்டங்களைப் பூரணப்படுத்தல். 7.ஸபா, மர்வா மலைகளுக்கிடையிலான தூரத்தை முழுமையாகக் கடத்தல். 8.முறையாக நிறைவேறிய ஒரு தவாபின் பின்னால் ஸஈ செய்தல். 9.(தொங்கோட்ட எண்ணிக்கையை) ஒற்றை இலக்கத்தை ஸபாவிலிருந்தும், இரட்டை இலக்கத்தை மர்வாவிலிருந்தும் ஆரம்பித்தல்.

ஸஈ உடைய ஸுன்னத்துகள்: ✷ தொடக்கையும், அசுத்தத்தையும் விட்டும் துப்பரவாக இருத்தல். ✷ (ஔரத்) மறைக்கப்படவேண்டிய இடத்தை மறைத்திருத்தல். ✷ ஸஈயின் இடைநடுவில் துஆ, திக்ர் போன்றவற்றில் ஈடுபடுதல். ✷ குறிப்பிடப்பட்ட இடங்களில் வேகமாகவும், சாதாரணமாகவும் நடத்தல். ✷ ஸபா, மர்வா ஆகிய இரு மலைகளிலும் ஏறுதல். ✷ தவாபுக்கும், ஸஈயிற்கும் இடையில் பிரிவின்றி தொடர்ச்சியாகச் செய்து முடித்தல்.

குறிப்பு:- ஜம்ராக்களில் கல்லெறியும்போது ஒரு தினத்தில் எறியவேண்டியதை அத்தினத்திலேயே எறிவது மிகச்சிறந்தது. எனினும் அதனை அடுத்தநாள் வரை பிற்படுத்தி மறுநாளும் எறியலாம். எல்லா நாட்களுக்குமாக சேர்த்து அய்யாமுத் தஷ்ரீக்கின் கடைசி நாளில் ஒன்றாக எறிந்தாலும் நிறைவேறும்.

உழ்ஹிய்யா: உழ்ஹிய்யாக் கொடுப்பது பிரதான ஸுன்னத்தாகும். தனது உழ்ஹிய்யாவைக் கொடுக்க முடிவுசெய்தவர் துல்ஹிஜ்ஜா மாதத்தின் ஆரம்பத்திலிருந்து அதனை அறுக்கும் வரை தன் உடலிலிருந்து முடி, நகம் போன்ற எதனையும் களைவது ஹராமாகும்.

அகீகா: இது ஒரு ஸுன்னத்தான அமலாகும். ஆண் பிள்ளைக்கு 2 ஆடும், பெண் பிள்ளைக்கு ஒரு ஆடும் அகீகாவிற்காக அறுக்கப்படும். அதனை குழந்தை பிறந்த ஏழாம் நாளன்று அறுப்பது ஸுன்னத்தாகும். மேலும், ஏழாம் நாளன்று அப்பிள்ளையின் தலைமுடியை சிரைத்து அதன் பாரத்தின் அளவு வெள்ளியை ஸதகாக் கொடுப்பதும் பெயரிடுவதும் ஸுன்னத்தாகும். அப்துல்லாஹ், அப்துர் ரஹ்மான் என்ற பெயர்களே மிகவும் சிறந்ததாகும். அப்துன் நபி, அப்துர் ரஸுல் எனப் பெயரிடுவது ஹராமாகும். அகீகாவின் நாள் உழ்ஹிய்யாவின் நாளுக்கு நேர்பட்டால் ஒன்றை நிறைவேற்றினாலும் போதுமாகும்.

மஸ்ஜிதுன் நபவிக்குச் செல்லும் ஒருவர் ஆரம்பமாக பள்ளியின் காணிக்கையாக 2 ரக்அத் ஸுன்னத் தொழுதுகொள்வார். அதன்பின் கண்ணியமான நபியவர்கள் அடக்கப்பட்டுள்ள இடத்துக்குச் சென்று கிப்லாவை பின்னோக்கி கப்ரை முன்னோக்கி பார்வையையும், தலையையும் தாழ்த்தியவராகவும் நபியவர்களைக் காணுவதைப்போன்று மனதில் அச்சமும், மரியாதையும் உள்ளவராக (அஸ்ஸலாமு அலைக யாரஸுலல்லாஹ்) என்று ஸலாம் கூறுவார். இதைவிட இன்னும் எதையேனும் அதிகப்படுத்திச் சொன்னால் அது நல்லதே. அடுத்து, ஒரு முழம் அளவு வலது பக்கம் நகர்ந்து அபூபக்கர் (ரலி) அவர்கள் மீது (அஸ்ஸலாமு அலைக யா அபா பக்ரினிஸ் ஸித்தீக்) என்றும், உமர் (ரலி) அவர்கள் மீது (அஸ்ஸலாமு அலைக யா உமரல் பாரூக்) என்றும் ஸலாம் சொல்லி யாஅல்லாஹ்! நபியவர்களுடன் சேர்ந்து பணிபுரிந்ததற்காகவும், இஸ்லாத்துக்கு சேவை புரிந்ததற்காகவும் அவர்களுக்கு நற்கூலி கொடுப்பாயாக! என துஆக் கேட்பார். அதன்பின் கிப்லாத் திசையை முன்னோக்கி கப்ருகள் இருக்கும் அவ்வறை அவரது இடதுபக்கமாக இருக்கும் விதத்தில் நின்றவராக துஆக்கேட்பார்.

# வரிசை முறைப்படியான ஹஜ் வணக்க முறையைக் காட்டும் சுருக்கமான அட்டவணை

| வணக்கமுறை | தமத்துஉ | கிரான் | இப்ராத் |
|---|---|---|---|
| ஆரம்பம்: இஹ்ராம் நிய்யத் வைப்பதும், தல்பியாச் சொல்ல ஆரம்பிப்பதும் | தமத்துஉ முறைப்படி உம்ராச் செய்வதாக வாயினால் மொழிவதுடன் மனதால் நிய்யத் வைத்தல் | ஹஜ், உம்ரா இரண்டையும் செய்வதாக வாயினால் மொழிந்து மனதால் நிய்யத் வைத்தல் لبيك حجا وعمرة | ஹஜ் செய்வதாக வாயினால் மொழிந்து மனதால் நிய்யத் வைத்தல் |
| பின்பு | உம்ராவின் தவாபைச் செய்தல் | மஸ்ஜிதுல் ஹராமைத் தரிசித்ததும் செய்யும் தவாபுல் குதூமைச் செய்தல் | மஸ்ஜிதுல் ஹராமைத் தரிசித்ததும் செய்யும் தவாபுல் குதூமைச் செய்தல் |
| பின்பு | உம்ராவின் ஸஈ செய்தல் (ஸபா, மர்வா மலைகளுக்கிடையில் தொங்கோட்டம் ஓடுதல்) | ஹஜ்ஜின் ஸஈ | ஹஜ்ஜின் ஸஈ |
| பின்பு | தலை முடியை சிறைத்தல் அல்லது கத்தரித்தல். இத்துடன் இஹ்ராமிலிருந்து முழுவதுமாக விடுபட்டுவிடுவார். | இஹ்ராமுடன் தொடர்ந்து இருப்பார். | இஹ்ராமுடன் தொடர்ந்து இருப்பார். |
| துல்ஹிஜ்ஜா 8 ஆவது நாள் ளுஹருக்கு முன் | மக்காவிலிருந்து ஹஜ்ஜுக்கு இஹ்ராம் நிய்யத் வைத்து மினாவுக்குச் செல்லல். | மினாவிலிருந்து செல்லல். | மினாவிலிருந்து செல்லல். |
| 9 ஆம் நாள் சூரிய உதயத்தின்பின் | அரபாவிற்குச் சென்று அஸரை முற்படுத்தி ளுஹருடன் சேர்த்து இரண்டையும் சுருக்கித் தொழுதல். அதன்பின் சூரியன் மறையும் வரை துஆப் பிரார்த்தனையில் ஈடுபடல். | | |
| சூரியன் மறைந்த பின் | முஸ்தலிபாவிற்குச் சென்று அங்கு சென்றதும் மஃரிபையும், இஷாவையும் சுருக்கியும், சேர்த்தும் தொழுதல். மேலும் இரவின் அரைவாசிப் பகுதி முடியும் வரை அங்கு தங்குவது ஸுன்னத்தாகும். | | |
| 10 ஆம் நாள் (பெருநாள் தினம்) பஜ்ரு நேரத்திற்கும் சூரிய உதயத்துக்கும் இடையில் | மினாவிற்குச் சென்று ஜம்ரதுல் அகபாவிற்குக் கல்லெறிதல் | | |
| | குர்பானை அறுத்தல் | குர்பானை அறுத்தல் | ----- |
| | தலைமுடியைச் சிரைத்தல், அல்லது கத்தரித்தல். அதன்பின் தவாபுல் இபாழாவைச் செய்தல். (ஹஜ்ஜுடைய) இம்மூன்றில் இரண்டைச் செய்வதுடன் இஹ்ராமிலிருந்து முதற்கட்ட நீங்குதல் ஏற்பட்டுவிடும். இம்மூன்றையும் செய்வதுடன் இரண்டாம் (இறுதிக்) கட்ட நீங்குதலும் ஏற்பட்டுவிடும். | | |
| | ஹஜ்ஜின் ஸஈயைச் செய்தல் | ஹஜ்ஜின் ஸஈயைச் செய்தல் | ----- |
| 11, 12 ஆம் நாட்களும் பிந்துபவர் 13 ஆம் நாளும் | ளுஹர்த் தொழுகையின் நேரமான பின் முதலாவது இரண்டாவது, மூன்றாவது என வரிசைக் கிரமப்படி ஜம்ராக்களுக்குக் கல்லெறிதல். | | |
| மக்காவிலிருந்து பயணமாகும்போது | (தவாபுல் விதாஃ)பிரியாவிடைத் தவாபைச் செய்தல். பரசவ, மதவிடாய் ருது உள்ள பெண்கள் இதனைச் செய்ய வேண்டியதில்லை. | | |

# பொதுவான சில உபதேசங்கள்

✷ சில விடயங்கள் பாவங்களுக்குக் குற்றப் பரிகாரமாகவும், அவை மன்னிக்கப்படுவதற்குக் காரணமாகவும் இருக்கின்றன. அவற்றில் சில பின்வருமாறு:- ✷ அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடல். ✷ உண்மையாக மனம்வருந்தி தௌபாச் செய்தல். ✷ நன்மைகளைச் செய்தல். ✷ சோதனைகள் ஏற்படல். ✷ தான தர்மம் செய்தல். ✷ அடுத்தவர் நமக்காக துஆச்செய்தல். ✷ இவ்விடயங்கள் நடந்தும் அவனுக்கு ஏதேனும் பாவங்கள் எஞ்சியிருந்து அல்லாஹ் அதனை மன்னிக்காவிட்டால் மண்ணறையில் அல்லது மறுமையில் அல்லது நரகத்தில் அந்தப் பாவங்களிலிருந்து அவன் துப்பரவாகும் வரை வேதனை செய்யப்படுவான். சரியான ஏகத்துவக் கொள்கையில் அவன் மரணித்திருந்தால் அதன் பின்பு அவன் சுவர்க்கம் செல்வான். ஆனால் (குப்ர்)இறைநிராகரிப்பு, (ஷிர்க்)இணைவைத்தல், (நிபாக்)குப்ரை மறைத்துக் கொண்டு முஸ்லிமைப்போன்று நடித்தல் ஆகிய நிலைகளில் ஏதேனுமொன்றில் அவன் மரணித்திருந்தால் முடிவே இல்லாத நரகவாழ்க்கையை அவன் அனுபவிப்பான்.

✷ பாவங்களினால் மனிதனுக்கு அதிகமான கெட்ட விளைவுகள் ஏற்படுகின்றன. அவை:-

✷ பாவங்களினால் உள்ளத்துக்கு ஏற்படும் கெடுதியாவது:- அந்தப் பாவங்கள் உள்ளத்தில் இருளையும், இழிவையும், நோயையும், ஒருவிதமான வெறுமை மனநிலையையும் ஏற்படுத்துகின்றன. மேலும் அந்த உள்ளத்தை அல்லாஹ்வை விட்டும் தடுத்தும் விடுகின்றன. அடுத்து இதேபோன்ற கெடுதிகள் ஒருவனது மார்க்க விடயத்திலும் பாவங்களை ஏற்படுத்திவிடுகின்றன. மேலும் நல்லமல்களில் ஈடுபடுவதைத் தடுப்பதுடன் நபியவர்களதும், மலக்குமார்கள், மு.ஃ.மின்கள் ஆகிய நல்லடியார்களது துஆ கிடைக்கும் பாக்கியத்தையும் தடுத்துவிடுகின்றன.

✷ மேலும், ரிஸ்க் எனும் மனித வாழ்க்கையின் தேவைகள் மீது பாவங்களினால் ஏற்படும் கெடுதியாவது:- அவை அந்த ரிஸ்கைத் தடுத்து, பாக்கியங்களை நீக்கி, சொத்துகளிலுள்ள பரகத்தையும் அழித்துவிடுகின்றன.

✷ ஒரு தனி மனிதனுக்கு பாவங்களினால் ஏற்படும் கெடுதியாவது:- அவை அவனது வாழ்நாளின் பரக்கத்தை அழித்து விடுவதுடன் அவனது வாழ்க்கையில் நெருக்கடியையும் ஏற்படுத்தி, அவனது தேவையை நிறைவேற்றுவதில் கஷ்ட நிலைகளையும் கொண்டுவருகின்றன.

✷ நல்லமல்கள் விடயத்தில் பாவங்களின் கெடுதியாவது:- அந்த அமல்கள் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு அவை தடையாகின்றன.

✷ பாவங்களினால் ஒரு சமூகத்துக்கு ஏற்படும் கெடுதியாவது:- அவை மக்கள் மத்தியில் அச்சமற்ற பாதுகாப்பான நிலையை நீக்குவதுடன் பொருட்களின் விலையேற்றத்தைக் கொண்டுவருவதுடன் மோசமான ஆட்சியாளர்கள், பகைவர்கள் ஆகியோரது அநியாயத்தையும் மழை தடைப்படுவதையும் இன்னும் பல கெடுதிகளையும் ஏற்படுத்துகின்றன.

கவலைகள் : மன அமைதியுடன் சந்தோஷமாக வாழ்வதும், கவலையற்ற வாழ்க்கை அமையவேண்டும் என்பதும் ஒவ்வொருவரது ஆசையாகும். இதன் மூலமே மகிழ்ச்சியான ஒரு வாழ்க்கை அமையமுடியும். அந்த ஆசை நிறைவேற மார்க்க ரீதியான சில காரணங்களும், இயற்கையான மற்றும் நடைமுறை சம்பந்தமான பல காரணங்களும் இருக்கின்றன. இவை அனைத்தும் ஒன்று சேர அமைவது இறை விசுவாசிகளுக்கு மாத்திரமே. அக்காரணிகளில் சில பின்வருமாறு:- 1. அல்லாஹ்வை ஈமான்கொள்ளல் (இறைவிசுவாசம்). 2.அல்லாஹ்வின் ஏவல்களைச் செய்து விலக்கல்களைத்

தவிர்த்தல். 3.சொல்லாலும், செயலாலும், வேறுபல வழிகளாலும் பிறருக்கு நன்மை செய்தல். 4. நல்லமல்களில் அல்லது மார்க்க ரீதியான, லௌஹீக ரீதியான பயனுள்ள கல்வித்துறைகளில் ஈடுபடல். 5. நடந்து முடிந்த அல்லது எதிர்கால விடயங்களையே சிந்தித்துச் சிந்தித்துக் காலத்தை வீணாக்காமல் தற்போதைய விடயங்களில் ஈடுபடல். 6. அல்லாஹ்வை அதிகமாக (திக்ர்) ஞாபகம் செய்தல். 7. வெளிப்படையான, ரகசியமான அல்லாஹ்வின் அருட்கொடைகளை எடுத்துச்சொல்லல். 8. வாழ்க்கைத் தரத்திலும், வசதியிலும் எம்மைவிடக் குறைந்த நிலையிலுள்ளவர்களை நோக்குதல். உலக விடயங்களில் எம்மைவிடச் சிறந்த நிலையிலுள்ளவர்களை நோக்காமலிருத்தல். 9. கவலையை உண்டாக்கும் விடயங்களை நீக்கி, மகிழ்ச்சியை ஏற்படுத்தும் விடயங்களைச் செய்ய முயற்சித்தல். 10. கவலையைப் போக்குவதற்காக நபி(ஸல்) ஓதிய துஆக்களின் மூலம் அல்லாஹ்வின் உதவிதேடி அடைக்கலம் புகுதல்.

**இப்ராஹீம் அல்கவ்வாஸ் (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்:** உளநோய்களுக்கான மருந்து ஐந்து வகைப்படும்.

1) அல்குர்ஆனை விளங்கி ஓதல்.
2) வயிறுமுட்ட சாப்பிடாமல் இருந்து பசியை அனுபவித்தல்.
3) இரவுநேர வணக்கம் புரிதல் (தஹஜ்ஜுத்).
4) இரவின் கடைசிப் பகுதி ஸஹர் நேரத்தில் அல்லாஹ்விடம் கெஞ்சிக் கெஞ்சிப் பிரார்த்தித்தல்.
5) இறையன்பைப்பெற்ற நல்லவர்களுடன் சேர்ந்திருத்தல்.

✷ திருமணம் புரிய ஆசையும், தேவையுமுள்ள ஒருவர் விபச்சாரத்தில் ஈடுபட்டுவிடுவார் என்ற பயம் இல்லாவிட்டால் அவர் திருமணம் செய்வது ஸுன்னத்தாகும். மாறாக, அவ்வாசை காரணமாக விபச்சாரத்தில் ஈடுபட்டுவிடுவார் என்ற பயம் இருந்தால் திருமணம் செய்வது அவருக்குக் கடமையாகும். ஆசையில்லாத ஒருவர் திருமணம் புரிவது ஆகுமானதாகும். திருமணம் புரிவது கடமையான சந்தர்ப்பத்தில் கடமையான ஹஜ்ஜை விட அதற்கு முதலிடம் வழங்கப்பட வேண்டும். மேலும், அந்நியப் பெண்களைப் பார்ப்பது ஹராமாகும். வயது கூடிய பெண், முகத்தில் மீசையில்லாத சிறு ஆண்பிள்ளை ஆகியோரையும் இச்சையுடன் பார்ப்பதும் கூடாது. இவர்களுடன் தனித்திருப்பதும் கூடாது. அதேபோன்று ஒரு மிருகத்தை இச்சையுடன் பார்ப்பதும் கூடாது.

✷ ஒருவன் விரும்பாத ஒரு பெண்ணை மணமுடிக்கும்படி அவனது பெற்றோருக்கு அவனை பலவந்தப்படுத்த முடியாது. அந்நிலையில் பெற்றோருக்குக் கட்டுப்படுவது அவனுக்குக் கடமையாகமாட்டாது. அதனால் அவன் பெற்றோரை நோவினை செய்தவனாக ஆகமாட்டான்.

✷ ஒரு ஆண் ஒரு பெண்ணைத் திருமணம் செய்ய பின்வரும் நிபந்தனைகள் அவசியமாகும்.

1. திருமண ஒப்பந்தத்தில் கணவன், மனைவி இருவரும் தெளிவாகக் குறிப்பிடப்படவேண்டும். எனவே பல பெண் பிள்ளைகளுள்ள ஒருவர் எனது மகள்மார்களில் ஒருவரை உங்களுக்குத் திருமணம் செய்து தந்துவிட்டேன்” எனக் கூறினால் அவ்வொப்பந்தம் நிறைவேறாது.
2. சித்தசுவாதீனமுள்ள பருவமடைந்த பணம், சொத்துக்களை கையாள்வதிலும் மார்க்க விடயங்களிலும் நல்ல முறையில் சீராக நடக்கக்கூடிய கணவனின் விருப்பத்துடனும், சித்தசுவாதீனமுள்ள சுதந்திரப்பெண்ணாகிய மணப்பெண்ணின் விருப்பத்துடனும் அது நடைபெறவேண்டும்.

3. மணப்பெண்ணின் இஸ்லாமிய சட்டரீதியான பொறுப்பாளரான வலீ அவளை திருமணம்செய்து வைக்கவேண்டும்.

எனவே ஒரு பெண் தன்னையே மணமுடித்துக் கொடுப்பதும், அவரது பொறுப்பாளர் அல்லாதவர் மணமுடித்து வைப்பதும் கூடாது. எனினும், பொருத்தமான ஒருவருக்கு அவளை மணமுடித்துக் கொடுப்பதற்கு வலீ மறுக்கும் பட்சத்தில் வலீ அல்லாதவர் அதனை நடாத்தி வைப்பார்.

**ஒரு பெண்ணை மணமுடித்துக் கொடுக்கும் அதிகாரமுள்ள வலீகாரர்களின் ஒழுங்குமுறை பின்வருமாறு:-**

அவளது தந்தை, (அவர் இல்லாவிடின்) தந்தையின் தந்தை (அப்பா) அடுத்து அவரதும் தந்தை, (இவ்வாறே மேல்நோக்கிச் செல்லப்படும்) அடுத்து அவளது மகன், மகனது மகன் (பேரன்) (இவ்வாறே கீழ்நோக்கிச் செல்லப்படும்) அடுத்து அவளது உடன்பிறந்த சகோதரன், அடுத்து தந்தை வழி சகோதரன் (அவளதும், இவனதும் தந்தை ஒருவர் தாய் வேறு) அதன்பின் சகோதரனின் மகன் (இவ்வாறே கீழ்நோக்கிச் செல்லப்படும்).

4. சாட்சிகள்: சித்தசுவாதீனமுள்ள, பருவமடைந்த, நீதமான இரு ஆண்கள் திருமணத்திற்கு சாட்சிகளாக இருப்பது அவசியமாகும்.

5. திருமணத்தில் இணைய விரும்பும் ஆண், பெண் இருவரும் திருமணம் முடிப்பதற்கான தடைகள் எதுவும் இல்லாமல் இருக்க வேண்டும். ஏதேனும் (மஹ்ரம்) இனபந்த உறவுகள் இருப்பதைப் போன்று.

✷ **ஒருவர் திருமணம் முடிக்க ஹராமான பெண்கள்:** 1) ஒருபோதும் திருமணம் முடிக்க முடியாதவர்கள்: இதில் பல பிரிவினர் உள்ளனர்.

1. ஒரு ஆணுக்கு பரம்பரை வழியான (இரத்த உறவு) உறவுப் பெண்கள்: தாய், தாயின் தாய் (உம்மும்மா), (அப்படியே தொடர்ந்து மேலே செல்லும் அனைவரும்), மகள், பிள்ளையின் மகள் (பேத்தி) (அப்படியே கீழ் நோக்கிச் செல்லும் எல்லாப் பிள்ளைகளும்), சகோதரி (உடன்பிறந்த, தாய்வழி, தந்தைவழி), சகோதரியின் மகள், சகோதரியின் மகளின் அல்லது மகளது மகளின் மகள், சகோதரனுடைய மகள் (உடன்பிறந்த, தாய்வழி, தந்தைவழி), அப்பெண்களின் பெண்பிள்ளைகள், அதேபோன்று அவர்களின் ஆண் அல்லது பெண்பிள்ளைகளின் பெண்பிள்ளைகள், (அப்படியே கீழ் நோக்கிச் செல்லும் எல்லாப் பெண் பிள்ளைகளும்), தாயின் சகோதரி, தந்தையின் சகோதரி, (தாயுடைய தாயின், தந்தையுடைய தந்தையின் சகோதரிகள்... அப்படியே மேலே செல்லும் அனைவரும்)

2. ஒரு ஆணுக்கு பால்குடி உறவு வழியாக வரும் பெண்கள்: இவ்வுறவில் மஹ்ரம்கள் வருவது இரத்த பரம்பரை உறவில் வருவதைப் போன்றாகும். அது திருமண உறவிலுமாகும்.

3. திருமண உறவு வழியாக வரும் சில பெண்கள்: மனைவியின் தாய், அவளது தாய் தந்தையரின் தாய்மார்கள் (பாட்டிகள்), தந்தையின் மனைவி, பெற்றோர் வழி பாட்டன்மார்களது மனைவிமார்கள், மகன்கள் மற்றும் பேரப்பிள்ளைகளது மனைவிமார்கள், ஒருவரது மனைவியின் பெண்பிள்ளைகள், (அப்படியே கீழ் நோக்கிச் செல்லும் எல்லாப் பெண் பிள்ளைகளும்).

2) நிரந்தரமாகவன்றி தற்காலிகமாக மஹ்ரமாகும் பெண்கள். அவர்கள் இரு வகையினர். 1. ஒரே நேரத்தில் மணந்திருக்கக் கூடாது என்ற அடிப்படையிலுள்ள சில பெண்கள். உதாரணமாக: உடன்பிறந்த இரு சகோதரிகள், ஒரு பெண்ணும், அவளது தாயின் சகோதரியும் (சாச்சி), அல்லது தந்தையின் சகோதரியும் (மாமி). 2. வேறொருவருக்கு மனைவியாக உள்ள ஒரு பெண்.

ஓர் ஆணின் பெற்றோர்கள் அவன் விரும்பாத ஒருபெண்ணை வலியுறுத்துவது கூடாது. அப்படி வலியுறுத்தினால் அவர்களுக்குக் கட்டுப்படுவது கட்டாயமாகமாட்டாது. அதன் மூலம் அவன் பெற்றோர்களுக்கு கீழ்ப்படியாதவனாக மாறவும் மாட்டான்.

✷ **தலாக் (விவாகரத்து):** மாதவிடாய் அல்லது பிரசவ ருது வரும் நிலையில் அல்லது கணவனுடன் உடலுறவில் ஈடுபட்ட துப்பரவில் உள்ள நிலையில் ஒருபெண்ணைத் தலாக் சொல்வது ஹராமாகும். (அது பாவமாயினும்) சொல்லப்பட்ட தலாக் செல்லுபடியாகும்.

மேலும் தகுந்த காரணமின்றி தலாக் சொல்வது வெறுக்கத்தக்கதாகும் (மக்ரூஹ்). எனினும், தேவையிருப்பின் தலாக் சொல்வதற்கு அனுமதியுண்டு. திருமண உறவில் தொடர்ந்து இருப்பதில் (கணவன், மனைவிக்கிடையில் பரஸ்பர இணக்கப்பாடு இல்லாததால் ஏற்படும்) சிரமத்துக்கும், கஷ்டத்துக்கும் உள்ளாகும் ஒருவர் தலாக் சொல்வது ஸுன்னத்தாகும். மனைவியை விவாகரத்துச் செய்வதில் பெற்றோருக்குக் கட்டுப்படவேண்டிய கட்டாயம் கிடையாது. தனது மனைவியைத் தலாக் சொல்ல நினைக்கும் ஒருவர் (ஒரே நேரத்தில்) ஒரு விடுத்தத்திற்கும் அதிகமாக தலாக் சொல்வது ஹராமாகும். அத்துடன், (தான் அவளுடன் அச்சமயம் உடலுறவுகொள்ளாத) துப்பரவு நிலையில் அவள் இருக்கும்போது தலாக் சொல்வது கடமையாகும். அதுவும் ஒருமுறை மாத்திரம் தலாக் சொல்லி அதைவிட அதிக விடுத்தங்கள் சொல்லாமல் இத்தா முடியும்வரை அப்படியே விட்டுவைப்பார். இவ்வாறு தலாக் சொல்லப்பட்ட பெண் அவளிருக்கும் வீட்டிலிருந்து வெளியேறுவதும், கணவன் அவளை இத்தா முடியமுன் வெளியேற்றுவதும் ஹராமாகும். மேலும், தலாக் வாயினால் மொழிவதன் மூலமே நிறைவேறும். மாறாக மனதால் நினைப்பதால் மாத்திரம் நிறைவேறாது.

✷ **சத்தியங்கள்:** சத்தியத்தை முறித்ததற்கான குற்றப் பரிகாரம் கடமையாவதற்கு பின்வரும் நான்கு நிபந்தனைகள் அவசியமாகும்.

1. சத்தியம் செய்யும் நோக்கில் சத்தியம் மொழியப்பட்டிருத்தல்.

எனவே, ஒருவர் சத்தியம் செய்யும் நோக்கமின்றி வாயினால் சத்தியத்தை மொழிந்தால் அதன்மூலம் அவர் சத்தியம் செய்தவராகமாட்டார். இத்தகைய சத்தியத்தை வீணான சத்தியம் என அழைக்கப்படும். சத்தியம் செய்யும் நோக்கமின்றி சாதாரணமாக பேச்சின் நடுவில் \அல்லாஹ்வின் மீது சத்தியமாக ஆம், அவ்வாறுதான், அப்படியல்ல| போன்ற வார்த்தைகள் வந்துவிடுவதைப் போன்று.

2. எதிர்காலத்தில் நடக்க முடியுமான ஒரு விடயத்துக்காக சத்தியம் செய்தல்.

எனவே, தெரியாத்தனமாக நடந்து முடிந்த ஒன்றிற்காக அல்லது தான் சொல்வது உண்மையென்று நினைத்து சத்தியம் செய்வது சத்தியமாகமாட்டாது. மேலும், தெரிந்த நிலையில் பொய்கூறியவராக சத்தியம் செய்வது (இதுபெரும் பாவங்களில் ஒன்றாகும். இதுவே ஹதீஸில் يمين غموس எனக்கூறப்பட்டுள்ள சத்தியமாகும்). அல்லது தான் உண்மை சொல்வதாக நினைத்துக்கொண்டு பிறகு நடைபெறவுள்ள ஒன்றிற்காக சத்தியம் செய்து அவ்விடயம் அதற்கு மாற்றமானது எனத் தெரியவந்தால் அது சத்தியமாகாது.

3. பலாத்காரப்படுத்தப்படாத நிலையில் சுயவிருப்பில் சத்தியம் செய்தல்.

4. செய்த சத்தியத்தை முறித்தல். அதாவது விடுவதாக சத்தியம் செய்த ஒன்றைச் செய்தல் அல்லது செய்வதாக சத்தியம் செய்த ஒன்றை விடுதல்.

எனினும் ஒருவர் சத்தியம் செய்யும்போது விதிவிலக்குச் செய்தால் பின்வரும் இரு நிபந்தனைகள் இருப்பின் அவர் மீது குற்றப்பரிகாரம் விதியாகமாட்டாது.
1) சத்தியத்துடன் சேர்த்து (தாமதமோ, பிரிவோ இன்றி) விதிவிலக்குச் செய்திருக்க வேண்டும்.
2) அந்த விதிவிலக்கப்படும் விடயத்துடன் சத்தியத்தை சம்பந்தப்படுத்தும் நோக்கம் இருக்க வேண்டும். \அல்லாஹ்மீது சத்தியமாக அவன் நாடினால்' எனக்கூறுவது போல.

ஒருவர் ஒரு விடயத்துக்காகச் சத்தியம் செய்து அதற்கு மாற்றமாக நடப்பது நன்மையும், பயனும் உள்ளதாக இருப்பின் சத்தியத்தை முறித்துவிட்டு சிறந்ததாகக் கருதும் அவ்விடயத்தைச் செய்வது ஸுன்னத்தாகும். அச்சத்தியத்தை முறித்ததற்காகக் குற்றப்பரிகாரம் கொடுத்துவிடுவார்.

✷ **சத்தியத்தை முறித்ததற்கான குற்றப்பரிகாரம் பின்வருமாறு:** ஒருவருக்கு ஒன்ரே கால் (1.25) கி.கிராம் வீதம் பத்து ஏழைகளுக்கு உணவு வழங்குவது, அல்லது அவர்களுக்கு உடை வழங்குவது, அல்லது ஒரு அடிமையை உரிமையிடுவது, இதற்கு முடியாவிட்டால் தொடர்ச்சியாக மூன்று நாட்கள் நோன்பு பிடிக்க வேண்டும். ஏழைகளுக்கு உணவு அல்லது உடை வழங்க முடியுமாக இருக்கும்போது ஒருவர் நோன்பிருந்தால் அது குற்றப்பரிகாரமாகமாட்டாது. மேலும் குற்றப் பரிகாரத்தை சத்தியத்தை முறிக்கமுன் அல்லது முறித்தபின் நிறைவேற்றலாம்.

எவரேனும் ஒரு விடயத்திற்காக பலமுறை சத்தியம் செய்திருப்பின் அதற்காக ஒரு குற்றப்பரிகாரம் போதுமானதாகும். ஆனால் பல விடயங்களுக்காகச் சத்தியம் செய்திருப்பின் பல குற்றப்பரிகாரங்களை நிறைவேற்ற வேண்டும்.

✷ தொழுகையிலும், அதற்கு வெளியிலும் அல்லாஹ்வை திக்ர் செய்யும்போது குறைந்தளவு தனக்கு மாத்திரம் கேட்கும் அளவாவது வாயினால் உச்சரித்து திக்ர் செய்வது அவசியமாகும். ஆனால் ஏனையோருக்கு இடையூறையும், அசௌகரியத்தையும் ஏற்படுத்தும் விதத்தில் சத்தமிட்டு திக்ர் செய்வது கூடாது.

✷ **நேர்ச்சைக்கடன்:** நேர்ச்சை வைத்தல் பல வகைகளாகும்.

1. **பொதுவான நேர்ச்சைக்கடன் வைத்தல்:** ஒருவர் "எனக்குச் சுகம் கிடைத்தால் அல்லாஹ்வுக்காக நான் ஒரு நேர்ச்சைக்கடனை நிறைவேற்றுவேன்" என ஒரு அமலைக் குறிக்காமல் சொல்வதைப்போல. இதில் அவருக்குச் சுகம் கிடைத்ததும் சத்தியத்தை முறித்ததற்காக வழங்கப்படும் குற்றப் பரிகாரத்தை நிறைவேற்றவேண்டும்.

2. **பிடிவாதத்தனமாக கோபத்தில் நேர்ச்சைக்கடன் வைத்தல்:** அதாவது: ஒன்றைச் செய்யாமல் தடுக்கும் அல்லது அதனைச் செய்யத்தூண்டும் நோக்கில் நேர்ச்சைக்கடனை ஒரு நிபந்தனையுடன் சம்பந்தப்படுத்தல். உதாரணமாக: ஒருவர் மற்றவரைப் பார்த்து "நான் உன்னுடன் பேசினால் ஒருவருடம் நோன்பிருப்பது எனக்குக் கடமையாகும்" எனக் கூறுவதைப் போன்றதாகும். எனவே, அவர் அந்நபருடன் பேசினால் அவன் கட்டாயப்படுத்திக் கொண்ட அந்த அமலைச் செய்யவேண்டும். அல்லது ஒரு சத்தியத்தை முறித்ததற்கான குற்றப்பரிகாரத்தை நிறைவேற்ற வேண்டும்.

3. **அனுமதிக்கப்பட்ட ஆகுமான ஒன்றை நேர்ச்சைக்கடன் வைத்தல்:** உதாரணமாக "அல்லாஹ்வுக்காக எனது உடையை உடுப்பது எனக்குக் கட்டாயமாகும்" எனக் கூறுவதைப் போன்று. எனவே, அவர் அந்த உடையை

உடுப்பது அல்லது சத்தியத்தை முறித்ததற்கான குற்றப்பரிகாரத்தை நிறைவேற்றுவது ஆகிய இரண்டில் ஒன்றைச் செய்யவேண்டும்.

**4. வெறுக்கத்தக்க ஒன்றை நேர்ச்சைக்கடன் வைத்தல்:** உதாரணமாக "எனது மனைவியை நான் தலாக் சொல்வது அல்லாஹ்வுக்காக என்மீது கடமை" எனக்கூறுவது. எனவே, அவர் அவ்விடயத்தை செய்யாமல் இருப்பதுடன் சத்தியத்தை முறித்ததற்கான குற்றப்பரிகாரத்தை நிறைவேற்றுவது ஸுன்னத்தாகும். ஆனால் அவ்விடயத்தை அவர் செய்துவிட்டால் அவர்மீது சத்தியத்தை முறித்ததற்கான குற்றப்பரிகாரம் கடமையாகாது.

**5. பாவமான காரியத்தை நேர்ச்சைக்கடன் வைத்தல் :** உதாரணமாக "நான் களவெடுப்பது அல்லாஹ்வுக்காக என்மீது கடமை" எனக்கூறுவதைப் போன்று. எனவே, அவர் அதனை நிறைவேற்றுவது ஹராமாகும். எனினும் அவர் சத்தியத்தை முறித்ததற்கான குற்றப்பரிகாரத்தை நிறைவேற்றுவார். ஆனால், அவ்விடயத்தை அவர் செய்தால் அது பாவமாயினும் அவர் மீது சத்தியத்தை முறித்ததற்கான குற்றப்பரிகாரம் விதியாகமாட்டாது.

**6. வணக்கமான காரியமொன்றை நேர்ச்சைக்கடன் வைத்தல்:** உதாரணமாக "அல்லாஹ்வுக்காக நான் இவ்வாறு தொழுவது என்மீது கடமை" என இறையருளைப் பெறும் நோக்கில் சொல்வது. இதனை ஒரு நோயாளி குணமடைவது போன்ற ஓர் நிபந்தனையுடன் சம்பந்தப்படுத்தினால் அது நிறைவேறும் பட்சத்தில் நேர்ச்சைக்கடனை நிறைவேற்றுவது அவசியமாகும். அவ்வாறு சம்பந்தப்படுத்தாவிட்டால் பொதுவாகவே நேர்ச்சைக்கடனை அவசியம் நிறைவேற்றவேண்டும்.

✷ **பாலூட்டுதல் மூலமான உறவு:** பரம்பரை உறவு வழியால் திருமணம் முடிக்க ஹராமாகும் உறவுகள் போன்று பின்வரும் மூன்று நிபந்தனைகள் இருப்பின் பால்குடி உறவுகளும் ஹராமாகும்.

1- அந்தப்பால் பிள்ளையின் மூலமாகவே சுரக்கப்பட்டிருக்க வேண்டும்.

2- பிள்ளை பிறந்ததிலிருந்து இரு வருடங்களுக்குள் அப்பிள்ளை பால் குடித்திருக்க வேண்டும்.

3- சந்தேகமின்றி ஐந்து அல்லது அதற்குமேற்பட்ட விடுத்தங்கள் பால் குடித்திருக்க வேண்டும். ஒரு விடுத்தம் என்பது பிள்ளை தாயின் முலைக்காம்பில் வாய் வைத்து உறிஞ்ச ஆரம்பித்து வாயை அப்புறப்படுத்தும் வரைக்குமாகும். வயிறு நிரம்ப வேண்டிய அவசியம் கிடையாது. மேலும், பால்குடி உறவின் மூலமான பிள்ளைக்கு செலவு கொடுப்பது கடமையாகவும்மாட்டாது, சொத்தில் வாரிசுரிமையும் ஏற்படாது.

✷ **வஸிய்யத் (மரணஉயில்):** ஒருவர் எவருக்கேனும் தகுந்த சாட்சிகள் இல்லாத நிலையில் எதையேனும் கொடுக்க வேண்டியிருந்தால் அவர் அதன் உரிமையாளருக்கு தனது மரணத்தின்பின் செலுத்தும் படி வஸிய்யத் செய்து வைப்பது கடமையாகும். அதிக பணம், பொருட்களை விட்டுச் செல்பவர் வஸிய்யத் செய்துவிட்டுச் செல்வது ஸுன்னத்தாகும். எனவே, அவர் தனது சொத்தில் 1∴3 (மூன்றிலொன்றை) வாரிஸல்லாத தனது உறவினரான ஏழையொருவருக்குக் கொடுக்குமாறு வஸிய்யத் செய்வது விரும்பத்தக்கது. அப்படி ஒருவர் இல்லா விட்டால் யாராகிலும் ஓர் ஏழை, ஆலிம், நல்லமனிதர் ஆகியோரில் ஒருவருக்கு வஸிய்யத் செய்வார். தனது சொத்தில் வாரிசு உரிமையுள்ள ஓர் ஏழைக்கு அவனது சொத்தில் வஸிய்யத் செய்வது விரும்பத்தக்கதல்ல. ஆனால் அவனது வாரிசு உரிமையாளர்கள் வசதியுள்ளவர்களாக இருப்பின் வஸிய்யத் செய்ய அவனுக்கு உரிமையுண்டு. மேலும், வாரிசு உரிமையற்றவருக்கு 1∴3 (மூன்றிலொன்றை) விட

அதிகமானதை வஸிய்யத் செய்வது ஹராமாகும். அத்துடன் வாரிசுரிமையுள்ளவருக்கு மிகக் குறைந்த அளவையேனும் வஸிய்யத் செய்யக்கூடாது. ஆனால் தனது வாரிசுக்கு வஸிய்யத் செய்து அவர் மரணித்தபின் அவரது ஏனைய வாரிசுகள் அதனை அங்கீகரித்தால் அது ஆகுமானதாகும்.

வஸிய்யத் செய்த ஒருவர் "நான் (வஸிய்யத்தை) வாபஸ் வாங்கிக்கொண்டேன், அதனை முறித்து விட்டேன், மாற்றிவிட்டேன்" போன்ற ஒன்றைக் கூறினால் அவரால் செய்யப்பட்ட வஸிய்யத் செல்லுபடியற்றதாகிவிடும். மேலும், ஒருவர் தனது வஸிய்யத் (மரண சாசனத்)தின் ஆரம்பத்தில் பின்வருமாறு எழுதுவது விரும்பத்தக்கதாகும். "பிஸ்மில்லாஹ்.... இது இன்னார் (தனது பெயர்) செய்துவிட்டுச் செல்லும் வஸிய்யத்தாகும். நான் நிச்சயமாக அல்லாஹ்வைத்தவிர (வணக்கத்துக்குரிய) வேறு நாயன் கிடையாது. அவன் தனித்தவன், அவனுக்கு இணை கிடையாது, மேலும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனது அடியானும் தூதருமாகும் என்றும், சுவர்க்கம், நரகம் என்பன உண்மையெனவும், இறுதிநாள் நிச்சயம் நிகழக்கூடியது அதில் சந்தேகம் கிடையாது என்றும், நிச்சயமாக அல்லாஹ் மண்ணறைகளில் உள்ளவர்களை மறுமையில் எழுப்புவான் என்றும் சாட்சி சொல்கின்றேன். மேலும், நான் விட்டுச்செல்லும் எனது குடும்பத்தினருக்கு அல்லாஹ்வைப் பயந்து நடக்கும் படியும், அவர்கள் மத்தியில் பிரிவினை அகற்றி ஒற்றுமையாய் வாழும் படியும், அவர்கள் உண்மையான இறை விசுவாசிகளாயிருப்பின் அல்லாஹ்விற்கும் அவனது தூதருக்கும் வழிப்படும் படியும் வஸிய்யத் செய்கின்றேன். அத்துடன், இப்றாஹீம், யஃகூப் (அலை) ஆகியோர் தமது பிள்ளைகளுக்குச்செய்த பின்வரும் இறுதி உபதேசத்தையும் வஸிய்யத் செய்கின்றேன். "என் குமாரர்களே! அல்லாஹ் உங்களுக்குச் சன்மார்க்கத்தைத் தேர்ந்தெடுத்துள்ளான். எனவே, நீங்கள் முஸ்லிம்களாகவே அன்றி மரணிக்க வேண்டாம்."...

**✷ நபி(ஸல்) அவர்கள் மீது ஸலவாத் சொல்லுதல்:**

ஸலவாத், ஸலாம் ஆகிய இரண்டில் ஒன்றை மாத்திரம் சொல்லாமல் இரண்டையும் சேர்த்துச் சொல்வது விரும்பத்தக்கது. மேலும், நபிமார்கள் அல்லாதவர்களுக்கு தனியாக ஸலவாத் சொல்லப்படமாட்டாது. அது மக்ரூஹ் ஆகும். உதாரணமாக அபூபக்கர் (அலைஹிஸ்ஸலாம், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) என்று கூறுவது போல். ஆனால் நபிமார்களுடன் சேர்ந்துவரும்போது சொல்லலாம். யாஅல்லாஹ்! முஹம்மது நபியவர்கள் மீதும், அவர்களது கிளையார், தோழர்கள், மனைவிமார், பரம்பரையினர் மீதும் ஸலவாத் சொல்வாயாக எனக்கூறுவது போலாகும்.

✷நபித்தோழர்கள், அவர்களை அடுத்து வந்த தாபிஈன்கள், உலமாக்கள், நல்லடியார்கள் போன்றோருக்காக அல்லாஹ்வின் அருளும், பொருத்தமும் ஏற்பட "ரலியல்லாஹு அன்ஹு, ரஹ்மதுல்லாஹி அலைஹி" போன்றவற்றின் மூலம் துஆச்செய்வது விரும்பத்தக்க விடயமாகும்.

அபூஹனீபா, மாலிக், ஷாபிஈ, அஹ்மத் போன்றோருக்கு "ரலியல்லாஹு அன்ஹும்" அல்லது "ரஹிமஹுமுல்லாஹ்" எனக் கூறப்படும்.

**✷ மிருகங்களை உணவுக்காக அறுத்தல்:**

தரையில் வாழும் உண்பதற்கு அனுமதிக்கப்பட்ட அறுக்க முடியுமான ஒவ்வோர் உயிர்ப் பிராணியையும் முறையாக அறுத்த பின்பே உண்ண முடியும். அறுப்பதற்கு 4 நிபந்தனைகள் உள்ளன. அவையாவன: 1- அறுப்பவர் சித்தசுவாதீனமுள்ளவராக இருத்தல். 2- அறுக்கும் ஆயுதம் நகம், பல் ஆகியன அல்லாததாக இருத்தல். அவ்விரண்டினாலும் அறுப்பது கூடாது.

3- தொண்டைக் குழி, உணவுக்குழாய், கழுத்தின் பக்க நரம்புகள் இரண்டும் அல்லது இரண்டில் ஒன்று என்பன அறுக்கப்பட வேண்டும். 4- அறுக்க ஆரம்பிக்கும் போது "பிஸ்மில்லாஹ்" என்று கூறுதல். (அரபுமொழியல்லாத வேறு மொழிகளிலும் பிஸ்மி சொல்லலாம்). அதனுடன் தக்பீரையும் சேர்த்துச் சொல்வது ஸுன்னத்தாகும். மேலும், மறதியாக பிஸ்மி சொல்லாமல் விட்டால் பரவாயில்லை. (ஆனால் தெரியாமல் விடுவது கூடாது.)

✷ **வேட்டையாடல்:** இயல்பிலேயே காட்டில் வாழும் உண்பதற்கு ஹலாலான அறுக்கமுடியாத நிலையிலுள்ள மிருகத்தை வேட்டையாடுவது ஆகும். வேட்டையாடுவதின் சட்டம்: அதனை உணவுபோன்ற தேவைகளுக்காகப் பயன்படுத்துவது அனுமதிப்பட்டதாகும். பொழுதுபோக்கிற்காகவும், விளையாட்டாகவும் அதனைச் செய்வது மக்ரூஹ் ஆகும். வேட்டைப் பிராணியை விரட்டிச் செல்வது மூலம் மக்களின் பயிர் நிலங்கள், வசிப்பிடங்கள் போன்றவற்றில் நுழைந்து அவர்களுக்குத் தொந்தரவு செய்யும் நிலை ஏற்பட்டால் அது ஹராமாகும். பின்வரும் 4 நிபந்தனைகள் இருப்பின் வேட்டையாடப்பட்ட பொருளைச் சாப்பிடுவது ஆகுமானதாகும்.

1. அறுப்பதற்கு அனுமதிக்கப்பட்ட பிராணியை வேட்டையாட வேண்டும்.
2. அதற்காகப் பயன்படுத்தப்படும் ஆயுதம் ஷரீஆவில் அனுமதிக்கப்பட்டதாக இருக்க வேண்டும். அதாவது ஈட்டி, அம்பு போன்ற கூரிய ஆயுதமாக இருக்கவேண்டும். மேலும், வேட்டைக்குப் பயிற்றப்பட்ட காயம் ஏற்படுத்தும் ராஜாளிப் பறவை, நாய் போன்றவற்றினாலும் வேட்டையாடலாம்.
3. வேட்டையாடுபவர் அதனைச் செய்யும் நோக்கில் செயல்பட்டிருக்க வேண்டும். அதாவது, வேட்டையாடும் ஆயுதம் அல்லது பிராணியை வேட்டையாடும் நோக்கில் அனுப்பப்படல் வேண்டும். எனவே, அவரின் நோக்கமின்றி அவர் அனுப்பாமல் தானாகவே அவை வேட்டையாடி வந்தால் அப்பிராணியை உண்ணமுடியாது.
4. ஆயுதத்தை அல்லது பயிற்றப்பட்ட மிருகத்தை அனுப்பும்போது "பிஸ்மில்லாஹ்" என்று சொல்லல் வேண்டும். வேட்டையாடும் விடயத்தில் மறதியாகவேனும் பிஸ்மியை விட முடியாது. அப்படி விட்டுவிட்டால் அந்த வேட்டையாடப்பட்ட பிராணியை உண்பது கூடாது.

✷ **உணவு (இதில் உணவு, குடிப்பு அனைத்தும் அடங்கும்):**

ஒரு பொருள் உண்பதற்கு ஹலாலானதாக இருப்பது என்பதே அடிப்படை பொது நிலையாகும். அதாவது எவ்வுணவும் 'அதை உண்பது கூடாது' என சட்டம் வராதவரை அதை உண்பதற்கு முடியுமானதாகும். எனவே, அனைத்து உணவுகளும் பின்வரும் மூன்று நிபந்தனைகள் இருப்பின் ஹலாலாகும்.

1. அது துப்பரவானதாக இருத்தல்.
2. அதை உண்பதில் ஆபத்து, கெடுதிகள் இல்லாமலிருத்தல்.
3. அது அருவருக்கத்தக்கதாக இல்லாமலிருத்தல்.

செத்த மிருகம், இரத்தம் போன்ற அசுத்தமானவை அனைத்தும் ஹராமாகும். அதேபோன்று நஞ்சு போன்ற ஆபத்து விளைவிப்பவையும், மலம், சிறுநீர், பேன், தெள்ளு போன்ற அருவருப்பானவைகளும் ஹராமாகும். தரையில் வாழும் மிருகங்களில் பின்வருவன ஹராமாகும்:

தனது வேட்டைப் பல்லினால் வேட்டையாடி உண்ணும் சிங்கம், கழுதை, புலி, ஓநாய், சிறுத்தை, நாய், பன்றி, குரங்கு, பூனை (அது மனிதசூழலில் வாழாவிருப்பினும்) நரி, அணில் போன்ற பிராணிகள். ஆனால் கழுதைப்புலி இவைகளில் விதிவிலக்கானதாகும்.

பறவைகளில் தனது கால் நகங்களால் வேட்டையாடி உண்ணும் ராஜாளி, கழுகு, பருந்து, ஆந்தை போன்றவையும், இறந்த பிராணிகளின் மாமிசங்களை உண்ணும் (கழுகு, ராஜாளி) நாரை போன்றவையும், நகர்ப்புறங்களில் வசிக்கும் அறபு மக்கள் அசுத்தமானவைகளாகக் கருதும் வௌவால், எலி, குளவி, தேன்பூச்சி, ஈ, வண்ணாத்திப் பூச்சி, ஹுத்ஹுத் பறவை, முள்ளம்பன்றி, பாம்பு, போன்றவையும், இதேபோன்று புழு, எலி, வண்டு, பல்லி போன்றவைகளும் ஹராமாகும். மேலும் ஷரீஆவில் கொல்லும்படி ஏவப்பட்டுள்ள அனைத்தும் (தேள் போன்றது) அல்லது ஷரீஆவில் அதைக் கொல்வது தடைசெய்யப்பட்டுள்ள அனைத்தும் (எறும்பு போன்றது) உண்பதற்கு அனுமதிக்கப்பட்ட ஒன்றும், அனுமதிக்கப்படாத ஒன்றும் இணைந்து பெற்றெடுத்த பிராணியும் (கழுதைப்புலியும், ஓநாயும் உறவுகொண்டு பெற்ற குட்டியைப்போல). இவை அனைத்தும் ஹராமாகும். ஆனால் சாப்பிட அனுமதிக்கப்பட்ட இரண்டு இணைந்து பெற்றெடுத்தது ஹலாலாகும். உதாரணமாக மரையும், குதிரையும் உறவுகொண்டு பிறந்த கோவேறு கழுதையைப் போன்று.

மேற்கூறப்பட்டதைத் தவிர அனைத்தும் அனுமதிக்கப்பட்டவையே. அதில் கால்நடைகளாகிய ஆடு, மாடு, ஒட்டகம் ஆகியனவும், குதிரையும், காட்டு மிருகங்களான ஒட்டகச்சிவிங்கி, முயல், காட்டு எலி, உடும்பு, மான் போன்றவையும் பறவைகளான ஒட்டகப்பட்சி, கோழி, மயில், புறா, சிட்டுக்குருவி, தாரா, வாத்து போன்றவையும், நீர்ப் பறவைகள் அனைத்தும், நீரில் வாழும் பிராணிகளில் தவளை, பாம்பு, முதலை என்பவற்றைத் தவிர ஏனையவைகளும் அடங்கும்.

அசுத்தமான உரம் அல்லது நீரினால் வளர்க்கப்பட்ட பயிர்கள், பழங்கள் போன்றவற்றைப் பொருத்தமட்டில் அந்த நஜீஸுடைய வாடை அல்லது சுவை அவற்றில் உணரப்பட்டால் ஹராமாகும். அப்படி இல்லையெனில் அனுமதிக்கப்படும். மேலும், கரிக்கட்டை, மண், களிமண் என்பவற்றையும் சமைக்க (வேக வைக்க)ப்படாத நிலையில் வெங்காயம், வெள்ளைப்பூடு போன்றவற்றையும் உண்பது மக்ரூஹாகும். ஒருவருக்கு பசியேற்பட்டு தவிர்க்க முடியாத இக்கட்டான நிலை ஏற்பட்டால் தன்னுயிரைப் பாதுகாத்துக்கொள்ளும் அளவு எதையாவது சாப்பிடுவது கடமையாகும்.

✸காபிர்களின் பெருநாள் கொண்டாட்டங்களில் பங்குபற்றுவதும், அவர்களுக்குப் பெருநாள் வாழ்த்துக் கூறுவதும், நாமாக ஆரம்பித்து அவர்களுக்கு ஸலாம் கூறுவதும் ஹராமாகும். ஆனால், அவர்கள் முதலில் எமக்கு ஸலாம் சொன்னால் நாம் "வஅலைக்கும்" எனப் பதில்சொல்வது கடமை.

அத்துடன் காபிர்களையும், ஸுன்னத் வல் ஜமாஅத்தினருக்குப் புறம்பான கொள்கையுள்ளவர்களான பித்அத்காரர்களையும் கௌரவிக்கும் நோக்கில் எழுந்து நிற்பது ஹராமாகும். அவர்களுடன் கைலாகு (முஸாபஹா)செய்வது மக்ரூஹாகும். மேலும், இஸ்லாமிய ஷரீஆ ரீதியான ஒரு நன்நோக்கத்திற்காக மாத்திரம் அவர்களுக்கு ஆறுதல் கூறுவதும், அவர்களை நோய் விசாரிப்பதும் அனுமதிக்கப்பட்டதாகும்.

அல்லாஹ்வின் நியதிகளை உற்றுநோக்கிச் சிந்திக்கும் ஒருவர் சோதனைகளும், பிரச்சினைகளும் ஏற்படுவது இப்பிரபஞ்ச வாழ்வில் அல்லாஹ்வின் நியதிகளில் ஒன்று என்பதைத் தெரிந்துகொள்வார். வல்ல அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான் "நிச்சயமாக நாம் உங்களைப் பயம், பசி (பஞ்சம்), செல்வங்கள், உயிர்கள், பழங்கனிகள் என்பவற்றைக் குறைப்பது ஆகியவற்றில் ஒன்றின் மூலம் சோதிப்போம். மேலும், (நபியே! இதற்காகப்) பொறுமை செய்பவர்களுக்கு நீர் சுபசெய்தி சொல்வீராக."

## இஸ்லாமிய முறையிலான ஓதிப் பார்த்தல் (மந்திரித்தல்):

நல்லடியார்கள் மனிதர்களில் சோதனையேற்படுவதற்கு மிகவும் வாய்ப்புக் குறைந்தவர்கள் என சிலர் எண்ணுவது தவறாகும். மாறாக, ஒருவருக்கு சோதனை ஏற்படுவது அவரது ஈமான் பலமானது என்பதற்கான ஆதாரமாகும். ஏனெனில், நபியவர்களிடம் *"மனிதர்களில் யார் கடுமையான சோதனைக்கு உள்ளாகுபவர்கள்?'* எனக் கேட்கப்பட்டபோது பின்வருமாறு கூறினார்கள்: *"நபிமார்கள், அதன்பின் ஏனைய நல்லடியார்கள், அதன்பின் மனிதர்களில் சிறந்தவர்களின் தர வரிசைப்படியாகும்."* (நூல்: இப்னு மாஜா). ஒரு மனிதனின் மார்க்கப்பற்றிற்கு ஏற்பவே அவன் சோதிக்கப்படுவான். அவனிடம் உறுதியான நம்பிக்கையும், மார்க்கப்பற்றும் இருந்தால் அவனது சோதனை அதிகரிக்கப்படும். அவை குறைவாக இருந்தால் அவனுக்கு இலேசான சோதனையே ஏற்படும்.

மேலும், ஒருவருக்கு நோய்போன்ற சோதனைகள் ஏற்படுவது அல்லாஹ் அவரை விரும்பியுள்ளான் என்பதற்கான அடையாளமாகும். நபியவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள், *"நிச்சயமாக அல்லாஹ் ஒரு கூட்டத்தின் மீது அன்பு வைத்தால் அவர்களுக்கு சோதனைகளை ஏற்படுத்துவான்."* (நூல் அஹ்மது). மேலும், அது அல்லாஹ் ஒருவருக்கு நன்மையை நாடியுள்ளான் என்பதற்கும் அடையாளமாகும். ஏனெனில், நபியவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள். *"அல்லாஹ் தனது அடியானுக்கு நன்மையை நாடினால் இவ்வுலகில் அவனுக்கான தண்டனையை முன்கூட்டியே கொடுத்துவிடுவான். இன்னும் அல்லாஹ் தனது அடியானுக்குக் கெடுதியை நாடினால் அவனது பாவத்திற்கான தண்டனையைத் தாமதித்து மறுமை நாளில் வழங்குவான்."* (நூல்: திர்மிதி). மேலும், சோதனைகள் சிறியதாயினும் அவை பாவங்களுக்கான குற்றப் பரிகாரமாகும். நபியவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்: *"ஒரு முஸ்லிமுக்கு முள்ளொன்று தைக்கும் அளவு அல்லது அதைவிடப் பெரிய அளவில் ஏதேனும் ஓர் கஷ்டம் ஏற்பட்டால் மரம் அதன் இலைகளை உதிரச் செய்வது போல் அல்லாஹ் அக்கஷ்டத்தின் மூலம் அவனது பாவங்களை நீக்கிவிடுகின்றான்"* (நூல். புகாரி, முஸ்லிம்).

எனவே, சோதனைக்கு உள்ளாகும் முஸ்லிம் நல்ல மனிதராக இருந்தால் அச்சோதனை அவனது முன்னைய பாவங்களுக்குப் பரிகாரமாக அல்லது அந்தஸ்துக்கள் உயர்த்தப்படுவதற்குக் காரணமாக அமைந்துவிடும். அம்மனிதன் பாவியாக இருந்தால் அது அவனது பாவங்களுக்குப் பரிகாரமாகவும், அவைகளின் பாரதூரத்தை அவனுக்கு உணர்த்துவதாகவும் அமைந்துவிடும். வல்ல அல்லாஹ் பின்வருமாறு கூறியுள்ளான். *"மனிதர்கள் (பாவங்கள்) செய்தவற்றின் காரணமாக கடலிலும், தரையிலும் குழப்பம் தோன்றியது."*

**மனிதனுக்கு ஏற்படும் சோதனைகள் பல விதங்களாகும்.**

(1) நல்லதைக்கொண்டு சோதிக்கப்படுவது (செல்வம் அதிகரிப்பதைப் போன்று).
(2) கெடுதியைக் கொண்டு சோதிக்கப்படுவது. (பயம், பஞ்சம், செல்வங்கள் அழிதல் போன்று). வல்ல அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான்: *"(துன்பங்களான) தீமையைக் கொண்டும், (இன்பங்களான) நன்மையைக் கொண்டும் பரீட்சிப்பதற்காக உங்களை நாம் சோதிக்கின்றோம்."* நோய், மரணம் என்பவற்றைக் கொண்டு சோதிக்கப்படுவதும் இதனைச் சேர்ந்ததே. இவ்விரண்டும் ஏற்படுவதற்கான காரணங்களில் மிக முக்கியமானது கண்திருஷ்டியும், பொறாமை காரணமாக சூனியம் செய்வதுமாகும். நபியவர்கள் கூறினார்கள்: *"அல்லாஹ்வின் களா எனும் முன்னேற்பாட்டின் பின் எனது உம்மத் அதிகம் மரணமாவதற்கான காரணம் கண்திருஷ்டியாகும்."* (நூல்: அத்தயாலிஸி).

**பாதுகாப்பிற்கான வழிகள்:** கண்திருஷ்டி, சூனியம் என்பன ஏற்படுவதற்கு முன் அவைகளை விட்டும் பாதுகாப்பைப் பெற்றுக்கொள்வதற்கான வழிவகைகளை நாம் தெரிந்திருப்பதும், அவைகளை அமுல்படுத்துவதும் அவசியமாகும்.

இதற்கான வழிகள் அதிகமுண்டு. அவற்றில் சில பின்வருமாறு. ✷ ஏகத்துவக் கொள்கையைக் கொண்டும் இவ்வுலகின் சகல நிர்வாகமும் அல்லாஹ்விடமே உள்ளது என்ற நம்பிக்கையைக் கொண்டும் உள்ளத்தைப் பலப்படுத்துவதுடன் நல்லமல்களை அதிகம் செய்தல். ✷ அல்லாஹ்வைப்பற்றி நல்லெண்ணம் வைப்பதுடன் அவனது பொறுப்பிலேயே விடயங்களை விட்டுவிடுதல். எனவே, ஏதோ ஒரு காரணத்தால் கண்திருஷ்டி அல்லது நோய் தன்னிடம் இருப்பதாக நினைத்து மனதை அலட்டிக்கொள்ளக்கூடாது. ஏனெனில் நோய் இருக்கின்றது என்ற மனக்குழப்பமே ஒரு நோயாகும்.

**குறிப்பு:-** வைத்தியத் துறை சார்ந்த நிபுணர்கள் பலர் பின்வருமாறு கூறுகின்றனர்: "உடலுறுப்புகளில் ஏற்படும் நோய்களில் மூன்றில் இரண்டு பங்கிற்கும் அதிகமான நோய்களை நோக்கினால் அவை யதார்த்தத்தில் முற்றாகவே இல்லாத ஒரு நோயை இருக்கின்றது என வீணாக சந்தேகம் கொண்டு சஞ்சலப்படும் உளரீதியான காரணங்களாலேயே ஏற்படுகின்றன" ✷ கண்திருஷ்டிப்படுவது, சூனியம்செய்வது என்பவற்றைக்கொண்டு பிரபலமான மனிதர்களைத் தவிர்ந்து நடத்தல். இது முன்னேற்பாடான காரணங்களைச் செய்தல் என்ற அடிப்படையிலே அன்றி பயத்திற்காக அல்ல. ✷ தான் ஆச்சரியப்படும் விதத்தில் எதையேனும் காணும்போது அல்லாஹ்வை திக்ரு செய்வதும் அதற்கு பரகத் ஏற்பட துஆச் செய்வதுமாகும். நபியவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்: "உங்களில் ஒருவர் தன்னிடம் அல்லது தனது செல்வத்தில் அல்லது தனது சகோதரனிடம் தான் விரும்பும் ஒன்றைக் கண்டால் அதில் பரகத் ஏற்பட துஆச் செய்து கொள்ளவும். ஏனெனில் கண்திருஷ்டி உண்மையானது" (ஹாகிம்).

**அதாவது:** அல்லாஹ் உங்களுக்கு பரகத் செய்வானாக எனப் பிரார்த்திப்பதாகும்.

✷ மதீனாவில் விளையும் \அஜ்வா| என்ற ஈத்தம் பழத்தில் ஏழு பழங்களைக் காலையில் ஆரம்பமாகச் சாப்பிடுவது சூனியத்தை விட்டும் காத்துக்கொள்ளும் வழிகளுள் ஒன்றாகும்.

✷ அல்லாஹ்விடமே அடைக்கலம் தேடி, அவனிடம் எமது காரியங்களை ஒப்படைத்து அவனைப் பற்றி நல்லெண்ணம் கொள்ளல், மேலும் சூனியம், கண் திருஷ்டி ஆகியவற்றை விட்டும் அவனிடம் பாதுகாப்புத் தேடுவதுடன், காலை மாலை திக்ருகள், பாதுகாப்பிற்கான துஆக்கள் ஆகியவற்றைத் தவறாமல் ஓதிவரல்.

பின்வரும் இரண்டு விடயங்களிலும் உறுதிகொண்டு குறிப்பிட்ட திக்ருகளை ஓதிவருவதினால் அல்லாஹ்வின் நாட்டப்படி அவை கூடுதலாகவோ குறைவாகவோ நல்ல பயன் கிடைக்கலாம்: 1) அந்த திக்ருகள் இறைவனின் நாட்டம் இருப்பின் நிச்சயம் பயனளிக்கும் என்றும், அவைகள் விடயத்தில் கூறப்பட்டுள்ள சிறப்புகளும், பலன்களும் உண்மையானவை என்றும் உறுதியாக நம்புதல். 2) அவற்றை வாயினால் மொழிவதுடன் அதன் பால் செவியையும் உள்ளத்தையும் செலுத்தி முழுக்கவனத்துடன் ஓதவேண்டும், ஏனெனில் இவை துஆக்களாகும், மனதால் கவனம் செலுத்தாமல் வாயினால் மாத்திரம் ஓதப்படும் துஆக்கள் அங்கீகரிக்கப்படமாட்டாது என்பது ஆதாரபூர்வமான நபிமொழியின் கூற்றாகும்.

**காலை மாலை திக்ருகளுக்கான நேரங்கள்:** காலை திக்ருகள் ஸுபஹ் தொழுகையின் பின்பும், மாலை திக்ருகள் அஸர் தொழுகையின் பின்பும் ஓதப்படவேண்டும். குறித்த நேரத்தில் அவற்றை ஓத மறந்தால் ஞாபகம் வந்ததும் ஓதிக்கொள்ள வேண்டும்.

**கண் திருஷ்டி போன்றவை ஏற்பட்டுள்ளதற்கான அடையாளங்கள்:** வைத்தியத்திற்கும், ஷரீஆ ரீதியிலான ஓதிப் பார்த்தலுக்கும் இடையில் எவ்வித முரண்பாடும் கிடையாது. ஏனெனில் உடலுறுப்புகளில் ஏற்படும் நோய்களுக்கும்

உளரீதியிலான நோய்களுக்கும் அல்குர்ஆனில் மருந்துண்டு. ஒருவர் உடல் ரீதியான நோய்களின்றி ஆரோக்கியமாக உள்ள நிலையில் அவரது உடம்பில் பின்வரும் அடையாளங்கள் இருப்பின் அவை கண்திருஷ்டி போன்றதற்கான அறிகுறிகளாக இருக்கலாம்:

தலையின் பல இடங்களில் மாறி மாறி ஏற்படும் தலைவலி, முகம் மஞ்சளித்தல், அதிகம் சிறுநீர் கழிதல், அல்லது வியர்த்தல், உணவில் விருப்பமின்மை, உடலுறுப்புகள் வழமைக்கு மாறாகக் குளிர்தல், அல்லது சூடாகுதல், மேலும் தானாக நடுங்குதல், இதயம் படபடத்தல், இரண்டு தோள் புயங்கள் அல்லது முதுகின் கீழ் பகுதியில் இடம்மாறி வலியேற்படல், உள்ளம் இறுகிய நிலை அல்லது கவலை ஏற்படல், தூக்கமின்மை, வழமைக்கு மாறாக கோபம், பயம் காரணமாக உணர்ச்சி வசப்படல், அதிகம் கொட்டாவி அல்லது பெரு மூச்சுவிடல், சோம்பேறித்தனம், மற்றோரை விட்டும் ஒதுங்கித் தனித்திருப்பதில் மனம் நாட்டம் கொள்ளல், அதிகம் தூங்குவதில் விருப்பம் கொள்ளல், வைத்திய ரீதியிலான காரணங்கள் புரியாத ஆரோக்கியம் சம்பந்தமான பிரச்சினைகள் இன்னும் பல இருக்கின்றன. நோயின் கடுமை அல்லது பலவீனத்திற்கேற்ப இவ்வடையாளங்கள் அனைத்துமோ அல்லது சிலதோ இருக்கலாம்.

ஒரு முஸ்லிம் இறை நம்பிக்கையும், உள்ளமும் பலமானவனாக தைரியசாலியாக இருப்பது அவசியமாகும். தனக்கு நோய் ஏற்பட்டுவிட்டது என வீண் சந்தேகமும் ஊகமும் அவனிடம் ஏற்படக்கூடாது. மேற்கூறப்பட்ட அடையாளங்கள் ஏதேனும் ஏற்பட்ட மாத்திரத்திலேயே தான் ஒரு நோயாளி என நினைத்து மனதை அலட்டிக் கொள்ளக்கூடாது. ஏனெனில், நோய் உள்ளது என வீண் சந்தேகம் கொள்வது குணப்படுத்துவதற்கு மிகவும் கஷ்டமான நோய்களில் ஒன்றாகும். இந்த அறிகுறிகள் சிலர் ஆரோக்கியமாக இருக்கும் நிலையிலும் வந்து போகலாம், வேறு சிலருக்கு உடல் ரீதியான நோய்களுக்காகவும் இவை ஏற்படலாம், இன்னும் சிலரைப் பொருத்தமட்டில் ஈமானின் பலவீனமும் இதற்குக் காரணமாகலாம், இதற்கு உதாரணமாக மன இறுக்கம், கவலை, ஒதுங்கித் தனித்திருத்தல் போன்றவற்றைக் கொள்ளலாம். எனவே, இத்தகைய நிலைகள் ஏற்பட்டால் அல்லாஹ்வுடனான தொடர்பை மீள் பரிசீலனை செய்து சீர் செய்து கொள்ள வேண்டும்.

**கண் திருஷ்டியினால்[1] ஏற்பட்ட நோய்க்கு அல்லாஹ்வின் நாட்டம் இருப்பின் பின்வரும் இரண்டு வழிகளில் ஒன்றின் மூலம் வைத்தியம் செய்து குணம் பெறலாம்:** ஒன்றைப் பற்றி ஆச்சரியப்படுவதற்கு அல்லது அதனை வர்ணிப்பதற்கு கண்ணால் பார்ப்பதே பெரும்பாலும் காரணமாக அமைவதால் கண்திருஷ்டிக்கு \கண்| எனும் சொல் பிரயோகிக்கப்படுகின்றது, மாறாக கண் மூலம் தான் திருஷ்டி ஏற்படுகின்றது என்பதால் அல்ல, ஏனெனில் பார்க்க முடியாத குருடன் மூலமும் திருஷ்டி ஏற்பட வாய்ப்புண்டு.)

---

[1] **கண்திருஷ்டி:** இது கெட்ட ஷைத்தான்களின் மூலம் அல்லாஹ்வின் உத்தரவின் படி ஏற்படும் கெடுதியாகும். கண்திருஷ்டியை ஏற்படுத்துபவர் ஒருவரிடமுள்ள ஏதேனும் ஒரு சிறப்பைப் பார்த்து ஆச்சரியப்படும் பொழுது அல்லது வர்ணிக்கும் பொழுது கெட்ட ஷைத்தான்களும் அதனுடன் இணைந்துவிட்டால் கண்திருஷ்டி ஏற்படுவதைத் தடுக்கும் திக்ர், தொழுகை போன்ற அம்சங்கள் அந்நேரம் நடக்காத பட்சத்தில் அந்நபருக்கு கண்திருஷ்டி ஏற்பட்டுவிடுகின்றது. ஸஹீஹுல் புஹாரி கிரந்தத்தில் பதியப்பட்டுள்ள "கண்திருஷ்டி ஏற்படுவது உண்மையானது"எனும் நபிமொழி இதற்கு ஆதாரமாக உள்ளது, முஸ்னத் அஹ்மத் கிரந்தத்தில் பதியப்பட்டுள்ள இந் நபிமொழியின் வேறோர் அறிவிப்பில் **"கெட்ட ஷைத்தானும் ஒரு மனிதனின் பொறாமை உணர்வும் கண்திருஷ்டி ஏற்படும்போது இணைந்து கொள்கின்றன"** எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) ஆதாரபூர்வமான ஹதீஸ் எனக் கூறியுள்ளதுடன் இதனை வலுப்படுத்தும் வேறு பல அறிவிப்புகளும் உள்ளன.

(1) யாரினால் கண் திருஷ்டி ஏற்பட்டது என்பதை அறிந்திருத்தல்.
இந்நிலையில் அவரைக் குளிக்கும் படி கூறி, அவர் குளித்த நீரை அல்லது அவர் பாவித்த அவரது உடல் பட்ட ஒரு பொருளை எடுத்து அதனைக் கலந்து கண் திருஷ்டி ஏற்பட்டவர் குளித்தல்.
(2) யாரினால் கண்திருஷ்டி ஏற்பட்டது எனத் தெரியாதிருத்தல்.

இந்நிலையில் துஆக் கேட்பது, ஓதிப் பார்ப்பது, உடலிலுள்ள அசுத்தமான இரத்தத்தை வெளியேற்றுவது என்பன மூலம் சுகம் பெற முயற்சிக்கலாம்.

**சூனியத்தின்[1] காரணமாக நோய் ஏற்பட்டிருந்தால் அல்லாஹ்வின் நாட்டம் இருப்பின் பின்வரும் வழிகளில் ஒன்றின் மூலம் வைத்தியம் செய்து குணம் பெறலாம்:** (1) சூனியம் செய்யப்பட்டுள்ள இடம் அறியப்பட்டிருத்தல்.

அந்நிலையில் அப்பொருள் கைக்குக் கிடைத்தால் ஸூரா அந்நாஸ், அல் பலக் இரண்டையும் ஓதி அதன் முடிச்சுக்களை அவிழ்த்து, அதனை நெருப்பில் எரித்து விடல். (2) இஸ்லாமிய முறையிலான ஓதிப் பார்த்தல் (மந்திரித்தல்).

இது குறிப்பாக குர்ஆன் ஆயத்துகளைக் கொண்டே செய்யப்படும், ஸூரா அந்நாஸ், அல் பலக், பகரா ஆகிய ஸூராக்களையும் வேறுசில துஆக்களையும் ஓதுவது. (இதன் விபரம் இங்கு கூறப்படும்).

(3) சூனியத்தை முறித்தல்: இது இரண்டு வகைப்படும்: **1- தடுக்கப்பட்ட** ஹராமான வகை. அதாவது சூனியத்தின் மூலம் சூனியத்தை முறித்தல், மேலும், அதனை முறிப்பதற்காக சூனியக்காரர்களிடம் செல்லல். **2- அனுமதிக்கப்பட்ட** ஹலாலான வகை. அதாவது இலந்தை மரத்தின் ஏழு இலைகளை எடுத்து, இரண்டு கற்களுக்கிடையில் வைத்து அவைகளைத் தட்டிப் பொடியாக்கி, அதில் அல் காபிரூன், அல் இக்லாஸ், அல் பலக், அந்நாஸ் மூன்று முறை ஓதி, அதன்பின் அதனைத் தண்ணீரில் கலந்து குடிப்பதுடன் அந்நீரால் குளிப்பது. அல்லாஹ்வின் நாட்டத்தின்படி சுகம் கிடைக்கும் வரை இதனைத் திரும்பத் திரும்ப செய்தல். (நூல்: முஸன்னப் அப்துர் ரஸ்ஸாக்).

(4) சூனியத்தை உடம்பிலிருந்து வெளியேற்றல், அது வயிற்றினுள் இருப்பின் வயிற்றுப் போக்கிற்கான மருந்துகளைப் பாவித்தல், வேறு உறுப்புகளில் இருப்பின் இரத்தத்தை இழுத்து வெளியேற்றல்[2].

**ஓதிப் பார்ப்பதற்கான நிபந்தனைகள் :**

1- அல்லாஹ்வின் திருநாமங்களையும், அவனது பண்புகளையும் கூறி ஓதுதல்.
2- அரபு மொழி அல்லது கருத்து விளங்கும் ஒரு மொழியிலாக இருத்தல்.
3- ஓதப்படும் வசனங்கள் தானாகப் பலன் தரமாட்டாது என்றும் சுகம் தருபவன் அல்லாஹ் ஒருவன் மாத்திரமே என்றும் உறுதியான நம்பிக்கை கொள்ளல்.

**(மந்திரிப்பவர்) ஓதிப்பார்ப்பவருக்கான நிபந்தனைகள்:**

---

[1] **சூனியம்:** சூனியம் என்பது சில மந்திரங்களை உச்சரிப்பது அல்லது சில முடிச்சுகளை இடுவது போன்றவற்றால் சூனியம் செய்யப்படுபவரின் உடல், உள்ளம், புத்தி ஆகிய ஏதேனும் ஒன்றில் நேரடியாகத் தாக்கத்தை ஏற்படுத்துவதாகும். சூனியம் உண்மையானதே. அது மாயை அல்ல. உயிராபத்து, நோய், கணவன் மனைவி உடலுறவில் ஈடுபடமுடியாமை, அவர்களுக்கிடையில் பிரிவை ஏற்படுத்தல் போன்ற பலவித பாதிப்புகள் சூனியத்தின் மூலம் ஏற்படலாம். மேலும், சூனியம் செய்யும் விதங்களில் இணைவைத்தல், இறைநிராகரிப்பு ஆகிய விதங்களும் பெரும் பாவமாகக் கருதப்படும் விதங்களும் உண்டு.

[2] நபியவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்: “நீங்கள் நோய்களுக்குக் கையாளும் சிகிச்சை முறைகளில் சிறந்தது இரத்தத்தை இழுத்து வெளியேற்றுவதாகும். “(இது இரத்த ஓட்டத்தை அதிகரிப்பதற்காகச் செய்யப்படும் ஒரு சிகிச்சை முறை). இந்த சிகிச்சை முறையின் மூலம் அல்லாஹ் உடலுறுப்புகள் சம்பந்தப்பட்ட பல நோய்களையும், புற்று நோய், சூனியம், கண்திருஷ்டியினால் ஏற்படும் பல நோய்கள் போன்றவற்றை நீக்கி சுகம் கொடுத்துள்ளான். நிதர்சனமான பல உண்மைச் சம்பவங்கள் இதற்கு ஆதாரமாக உள்ளன.

1- அவர் முஸ்லிமாகவும், இறையச்சமுள்ள நல்ல மனிதராகவும் இருப்பது விரும்பத்தக்கது. அவர் எந்தளவு இறையச்சம் கூடியவராக உள்ளாரோ அந்தளவு அவரது ஓதலின் பலனும் பலமானதாக அமையும்.

2- ஓதிப்பார்க்கும் நேரத்தில உண்மையான உள்ளத்துடன் மனமும் நாவும் ஒரு சேர அல்லாஹ்வின் பால் கவனம் செலுத்தல்.

ஒருவர் தன்னைத் தானே ஓதிப்பார்த்துக் கொள்வது மிகச் சிறந்தது, ஏனெனில், வேறு ஒருவர் ஓதிப்பார்க்கும் பொழுது பெரும்பாலும் அவரது உள்ளம் வேறு விடயங்களில் கவனம் செலுத்த வாய்ப்புள்ளது, அதுமட்டுமல்ல, ஒருவரது தேவையையும் நிர்ப்பந்த நிலையையும் அவர் உணருமளவு மற்றவர்கள் உணரமாட்டார்கள். இக்கட்டான நிர்ப்பந்த நிலையில் உள்ளவர்கள் அழைத்தால் விடையளிப்பதாக அல்லாஹ் வாக்களித்துள்ளான்.

**ஓதிப்பார்க்கப்படுபவருக்கான (நோயாளி) நிபந்தனைகள்:**

1- முஃமினான ஒரு நல்ல மனிதராக அவர் இருப்பது விரும்பத்தக்கது. ஈமானின் அளவிற்கு ஏற்பவே பலன் அதிகரிக்கும். வல்ல அல்லாஹ் பின் வருமாறு கூறியுள்ளான்: *விசுவாசிகளுக்கு சுகத்தை ஏற்படுத்துவதாகவும், அருளாகவும் உள்ளவற்றை நாம் குர்ஆனிலிருந்து இறக்கிவைக்கின்றோம், அக்கிரமக்காரர்களுக்கு இது நஷ்டத்தையே தவிர (வேறொன்றையும்) அதிகமாக்கமாட்டாது.*

2- தனக்கு சுகம் தரும்படி அல்லாஹ்விடம் உண்மையான மனதுடன் அடைக்கலம் தேடல்.

3- சுகம் கிடைக்கவேண்டும் என அவசரப்படக்கூடாது. ஏனெனில், ஓதிப்பார்ப்பதென்பது பிரார்த்தனையாகும். துஆ அங்கீகரிக்கப்பட வேண்டும் என அவசரப்படும்போது சிலவேளை அது அங்கீகரிக்கப்படாமல் போகலாம், நபியவர்கள் பின் வருமாறு கூறியுள்ளார்கள்: *உங்களில் ஒருவர் "நான் துஆச் செய்தும் அங்கீகரிக்கப்படவில்லையே" எனக் கூறி அவசரப்டாமல் இருக்கும் வரை அவரது துஆ அங்கீகரிக்கப்பட வாய்ப்புண்டு". (புஹாரி, முஸ்லிம்).*

**ஓதிப்பார்ப்பதின் முறைகள் பல உண்டு:** 1) எதையேனும் ஓதி இலேசான உமிழ் நீருடன் ஊதுவது. 2) ஊதாமல் ஓதுவது மாத்திரம். 3) விரலால் உமிழ் நீரைத் தொட்டு, அவ்விரலால் மண்ணைத் தொட்டு அதனால் வலி உள்ள இடத்தைத் தடவுவது. 4) வலியுள்ள இடத்தைத் தடவியவாறு ஓதுவது.

**ஒரு நோயாளியை ஓதிப்பார்ப்பதற்காக ஓதப்படும் அல் குர்ஆன் வசனங்களும், நபிமொழிகளும்:** ஸூராபாத்திஹா, ஆயத்துல் குர்ஸீ, ஸூராபகராவின் கடைசி இரு வசனங்கள், அல் காபிரூன், அல் இக்லாஸ், அல் பலக், அந்நாஸ் ஆகிய ஸூராக்கள். மேலும்: [1] ﴿فَسَيَكْفِيكَهُمُ ٱللَّهُ وَهُوَ ٱلسَّمِيعُ ٱلْعَلِيمُ﴾

﴿ٱللَّهُ لَآ إِلَٰهَ إِلَّا هُوَ ٱلْحَىُّ ٱلْقَيُّومُ ۚ لَا تَأْخُذُهُۥ سِنَةٌ وَلَا نَوْمٌ ۚ لَّهُۥ مَا فِى ٱلسَّمَٰوَٰتِ وَمَا فِى ٱلْأَرْضِ ۗ مَن ذَا ٱلَّذِى يَشْفَعُ عِندَهُۥٓ إِلَّا بِإِذْنِهِۦ ۚ يَعْلَمُ مَا بَيْنَ أَيْدِيهِمْ وَمَا خَلْفَهُمْ ۖ وَلَا يُحِيطُونَ بِشَىْءٍ مِّنْ عِلْمِهِۦٓ إِلَّا بِمَا شَآءَ ۚ وَسِعَ كُرْسِيُّهُ ٱلسَّمَٰوَٰتِ وَٱلْأَرْضَ ۖ وَلَا يَـُٔودُهُۥ حِفْظُهُمَا ۚ وَهُوَ ٱلْعَلِىُّ ٱلْعَظِيمُ﴾ [2]

﴿ءَامَنَ ٱلرَّسُولُ بِمَآ أُنزِلَ إِلَيْهِ مِن رَّبِّهِۦ وَٱلْمُؤْمِنُونَ ۚ كُلٌّ ءَامَنَ بِٱللَّهِ وَمَلَٰٓئِكَتِهِۦ وَكُتُبِهِۦ وَرُسُلِهِۦ لَا نُفَرِّقُ بَيْنَ أَحَدٍ مِّن رُّسُلِهِۦ ۚ وَقَالُوا۟ سَمِعْنَا وَأَطَعْنَا ۖ غُفْرَانَكَ رَبَّنَا وَإِلَيْكَ ٱلْمَصِيرُ ﴿٢٨٥﴾ لَا يُكَلِّفُ ٱللَّهُ نَفْسًا إِلَّا وُسْعَهَا ۚ لَهَا مَا كَسَبَتْ وَعَلَيْهَا مَا ٱكْتَسَبَتْ ۗ رَبَّنَا لَا تُؤَاخِذْنَآ إِن نَّسِينَآ أَوْ أَخْطَأْنَا ۚ رَبَّنَا وَلَا تَحْمِلْ عَلَيْنَآ إِصْرًا كَمَا

---

[1] (பஸயக்பீகஹுமுள்ளாஹு வஹுவஸ்ஸமீஉல் அலீம்)

[2] (அல்லாஹு லாஇலாஹ இல்லாஹுவல் ஹையுல் கையூம், லாதஃகுதுஹு ஸினதுன் வலாநவ்ம், லஹு மாபிஸ்ஸமாவாதி வமாபில்அர்ழ், மன்தல்லதீ யஷ்பஉ இன்தஹு இல்லா பிஇத்னிஹ், யஃலமு மாபைன அய்தீஹிம் வமாகல்பஹும் வலாயுஹீதூன பிஷைஇன் மின்இல்மிஹீ இல்லா பிமாசாஅ வஸிஅ குர்ஸிய்யுஹுஸ் ஸமாவாதி வல்அர்ழ வலாயஊதுஹு ஹிப்ழுஹுமா வஹுவல் அலிய்யுல் அளீம்)

حَمَلْتَهُۥ عَلَى ٱلَّذِينَ مِن قَبْلِنَا ۚ رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا مَا لَا طَاقَةَ لَنَا بِهِۦ ۖ وَٱعْفُ عَنَّا وَٱغْفِرْ لَنَا وَٱرْحَمْنَآ ۚ أَنتَ مَوْلَىٰنَا
1 فَٱنصُرْنَا عَلَى ٱلْقَوْمِ ٱلْكَٰفِرِينَ ﴾
﴿ وَأَوْحَيْنَآ إِلَىٰ مُوسَىٰٓ أَنْ أَلْقِ عَصَاكَ ۖ فَإِذَا هِىَ تَلْقَفُ مَا يَأْفِكُونَ ﴿١١٧﴾ فَوَقَعَ ٱلْحَقُّ وَبَطَلَ مَا كَانُوا۟ يَعْمَلُونَ ﴿١١٨﴾
2 فَغُلِبُوا۟ هُنَالِكَ وَٱنقَلَبُوا۟ صَٰغِرِينَ ﴾
3 ﴿ أَمْ يَحْسُدُونَ ٱلنَّاسَ عَلَىٰ مَآ ءَاتَىٰهُمُ ٱللَّهُ مِن فَضْلِهِۦ ﴾
4 ﴿ وَإِذَا مَرِضْتُ فَهُوَ يَشْفِينِ ﴾
5 ﴿ وَيَشْفِ صُدُورَ قَوْمٍ مُّؤْمِنِينَ ﴾
﴿ قَالُوا۟ يَٰمُوسَىٰٓ إِمَّآ أَن تُلْقِىَ وَإِمَّآ أَن نَّكُونَ أَوَّلَ مَنْ أَلْقَىٰ ﴿٦٥﴾ قَالَ بَلْ أَلْقُوا۟ ۖ فَإِذَا حِبَالُهُمْ وَعِصِيُّهُمْ يُخَيَّلُ إِلَيْهِ مِن
سِحْرِهِمْ أَنَّهَا تَسْعَىٰ ﴿٦٦﴾ فَأَوْجَسَ فِى نَفْسِهِۦ خِيفَةً مُّوسَىٰ ﴿٦٧﴾ قُلْنَا لَا تَخَفْ إِنَّكَ أَنتَ ٱلْأَعْلَىٰ ﴿٦٨﴾ وَأَلْقِ مَا فِى
6 يَمِينِكَ تَلْقَفْ مَا صَنَعُوٓا۟ ۖ إِنَّمَا صَنَعُوا۟ كَيْدُ سَٰحِرٍ ۖ وَلَا يُفْلِحُ ٱلسَّاحِرُ حَيْثُ أَتَىٰ ﴾
7 ﴿ وَنُنَزِّلُ مِنَ ٱلْقُرْءَانِ مَا هُوَ شِفَآءٌ وَرَحْمَةٌ لِّلْمُؤْمِنِينَ ۙ وَلَا يَزِيدُ ٱلظَّٰلِمِينَ إِلَّا خَسَارًا ﴾
8 ﴿ قُلْ هُوَ لِلَّذِينَ ءَامَنُوا۟ هُدًى وَشِفَآءٌ ﴾
9 ﴿ لَوْ أَنزَلْنَا هَٰذَا ٱلْقُرْءَانَ عَلَىٰ جَبَلٍ لَّرَأَيْتَهُۥ خَٰشِعًا مُّتَصَدِّعًا مِّنْ خَشْيَةِ ٱللَّهِ ﴾
10 ﴿ فَٱرْجِعِ ٱلْبَصَرَ هَلْ تَرَىٰ مِن فُطُورٍ ﴾
11 ﴿ وَإِن يَكَادُ ٱلَّذِينَ كَفَرُوا۟ لَيُزْلِقُونَكَ بِأَبْصَٰرِهِمْ لَمَّا سَمِعُوا۟ ٱلذِّكْرَ وَيَقُولُونَ إِنَّهُۥ لَمَجْنُونٌ ﴾
12 ﴿ يَٰقَوْمَنَآ أَجِيبُوا۟ دَاعِىَ ٱللَّهِ وَءَامِنُوا۟ بِهِۦ يَغْفِرْ لَكُم مِّن ذُنُوبِكُمْ وَيُجِرْكُم مِّنْ عَذَابٍ أَلِيمٍ ﴾
13 ﴿ ثُمَّ أَنزَلَ ٱللَّهُ سَكِينَتَهُۥ عَلَىٰ رَسُولِهِۦ وَعَلَى ٱلْمُؤْمِنِينَ ﴾
1 ﴿ فَأَنزَلَ ٱللَّهُ سَكِينَتَهُۥ عَلَيْهِ وَأَيَّدَهُۥ بِجُنُودٍ لَّمْ تَرَوْهَا ﴾

---

1 (ஆமனர் ரஸூலு பிமா உன்தில இலைஹி மிர்ரப்பிஹீ வல்முஃமினூன், குல்லுன் ஆமன பில்லாஹி வமலாஇகதிஹீ வகுதுபிஹீ வருஸூலிஹீ லாநுபர்ரிகு பைனஅஹதின் மிர்ருஸ்லிஹ், வகாலூ ஸமிஃனா வஅதஃனா குப்ரானக ரப்பனா வஇலைகல் மஸீர், லாயுகல்லிபுல்லாஹு நப்ஸன் இல்லா வுஸ்அஹா, லஹா மாகஸபத் வஅலைஹா மக்தஸபத், ரப்பனா லாதுஆகித்னா இன்னஸீனா அவ்அக்தஃனா ரப்பனா வலா தஹ்மில் அலைனா இஸ்ரன் கமாஹமல்தஹு அலல்லதீன மின் கப்லினா, ரப்பனா வலாதுஹம்மில்னா மாலாதாகதலனா பிஹ், வஃபுஅன்னா வஃபிர்லனா வர்ஹம்னா அன்த மவ்லானா பன்ஸூர்னா அலல்கொவ்மில் காபிரீன்)

2 (வஅவ்ஹைனா இலா மூஸா அன் அல்கி அஸாக், பஇதா ஹிய தல்கபு மாயஃபிகூன், பவகஅல் ஹக்கு வபதல மாகானூ யஃமலூன், பஃகுலிபூ ஹுனாலிக வன்கலபூ ஸாகிரீன்)

3 (அம் யஹ்ஸுதூனன்னாஸ அலாமா ஆதாஹுமுள்ளாஹு மின் பழ்லிஹ்)

4 (வஇதா மரிழ்து பஹுவ யச்பீன்)

5 (வயச்பி ஸுதூர கொவ்மின் முஃமினீன்)

6 (காலூ யாமூஸா இம்மா அன் துல்கிய அஇம்மா அன்னகூன அவ்வல மன்அல்கா, கால பல் அல்கூ பஇதா ஹிபாலுஹும் வஇஸிய்யுஹும் யுஹய்யலு இலய்ஹி மின் ஸிஹ்ரிஹிம் அன்னஹா தஸ்ஆ, பஅவ்ஜஸ பீநப்ஸிஹீ கீஃபதன் மூஸா, குல்னா லாதகப் இன்னக அன்தல் அஃலா, வஅல்கி மாபீயமீனிக தல்கப் மா ஸனஊ, இன்னமா ஜனஊ கய்து ஸாஹிர், வலா யுப்லிஹுஸ் ஸாஹிரு ஹைஸு அதா)

7 (வநுனத்திலு மினல் குர்ஆனி மாஹுவ ஷிபாஉன் வரஹ்மதுன் லில் முஃமினீன வலா யதீதுல் ளாலிமீன இல்லா கஸாரா)

8 (குல் ஹுவ லில்லதீன ஆமனூ ஹுதன் வசிபாஃ)

9 (லவ் அன்தல்னா ஹாதல் குர்ஆன அலா ஜபலின் லரஅய்தஹு காசிஅன் முதஸத்திஅன் மின் கஷ்யதில்லாஹ்)

10 (பர்ஜிஇல் பஸர ஹல் தரா மின் புதூர்)

11 (வஇன் யகாதுல்லதீன கபரூ லயுத்லிகூனக பிஅப்ஸாரிஹிம் லம்மா ஸமிஉஸ்திக்ர வயகூலூன இன்னஹு லமஜ்னூன்)

12 (யா கவ்மனா அஜீபூ தாஇயல்லாஹி வஆமினூபிஹீ யஃபிர் லகும் மின் துனூபிகும் வயுஜிர்கும் மின் அதாபின் அலீம்)

13 (ஸும்ம அன்தலல்லாஹு ஸகீனதஹு அலா ரஸூலிஹீ வஅலல் முஃமினீன்)

2 ﴿فَأَنزَلَ ٱللَّهُ سَكِينَتَهُۥ عَلَىٰ رَسُولِهِۦ وَعَلَى ٱلْمُؤْمِنِينَ وَأَلْزَمَهُمْ كَلِمَةَ ٱلتَّقْوَىٰ﴾

﴿لَّقَدْ رَضِىَ ٱللَّهُ عَنِ ٱلْمُؤْمِنِينَ إِذْ يُبَايِعُونَكَ تَحْتَ ٱلشَّجَرَةِ فَعَلِمَ مَا فِى قُلُوبِهِمْ فَأَنزَلَ ٱلسَّكِينَةَ عَلَيْهِمْ وَأَثَٰبَهُمْ
3 فَتْحًا قَرِيبًا﴾

4 ﴿هُوَ ٱلَّذِىٓ أَنزَلَ ٱلسَّكِينَةَ فِى قُلُوبِ ٱلْمُؤْمِنِينَ لِيَزْدَادُوٓا۟ إِيمَٰنًا مَّعَ إِيمَٰنِهِمْ﴾

**ஹதீஸ்களில் கூறப்பட்டுள்ளவைகள்:**

**(அஸ்அலுள்ளாஹல் அளீம் ரப்பல் அர்ஷில் அளீம் அன் யஷ்பியக)** 7 விடுத்தம். **(பொருள்:** கன்னியமான அர்ஷின் இரட்சகனாகிய அல்லாஹ்விடத்தில் உன்னைக் குணப்படுத்துமாறு கேட்டுக் கொள்கின்றேன்.) / **(உஈதுக பிகலிமாதில்லாஹித் தாம்மதி மின் குல்லி ஷைத்தானின் வஹாம்மதின் வமின் குல்லி அய்னின் லாம்மதின்)** 3 விடுத்தம். **(பொருள் :** அல்லாஹ்வின் பரிபூரணமான வார்த்தைகளைக் கொண்டு ஷைத்தானின் தீங்கை விட்டும் மற்றும் விஷ ஜந்துக்கள் கண்ணூறு போன்றவற்றின் கெடுதிகளை விட்டும் உன்னை பாதுகாக்குமாறு அல்லாஹ்விடம் வேண்டுகிறேன்.) **(அல்லாஹும்ம ரப்பன்னாஸி அத்ஹிபில் ப.'.ஸ, இஷ்பி அன்தஷ் ஷாபீ லா ஷிபாஅ இல்லா ஷிபாஉக், ஷிபாஅன் லா யுகாதிரு ஸகமா)** 3 விடுத்தம். **(பொருள்:** இறைவா! மனிதர்களின் இரட்சகனே! நோயை நீக்குவாயாக, குணப்படுத்துவாயாக, நீயே நோய் நிவாரணமளிப்பவன், உனது நோய் நிவாரணியைத் தவிர வேறு நிவாரணி கிடையாது. நோயை விட்டுவைக்காத குணத்தை ஏற்படுத்துவாயாக.) **(அல்லாஹும்மத்ஹிப் அன்ஹு ஹர்ரஹா வபர்தஹா வவஸபஹா)** ஒரு விடுத்தம். **(பொருள்:** இறைவா! அதன் உஷ்ணத்தையும், அதன் குளிரையும் அதன் கஷ்டங்களையும் அவனை விட்டும் அகற்றுவாயாக.) **(ஹஸ்பியல்லாஹு லாஇலாஹ இல்லாஹு அலைஹி தவக்கல்து வஹுவ ரப்புல் அர்ஷில் அளீம்)** 7 விடுத்தம். **(பொருள்:** அல்லாஹ்வே எனக்குப் போதுமானவன், வணக்கத்திற்குரிய நாயன் அவனைத்தவிர வேறு யாருமில்லை, அவன் மீதே நம்பிக்கை வைத்தேன், அவன் கன்னியமான அர்ஷின் இரட்சகனாகும்.) **(பிஸ்மில்லாஹி உர்கீக, மின் குல்லி தாஇன் யு.'.தீக வமின் ஷர்ரி குல்லி நப்ஸின் அவ் அய்னின் ஹாஸிதின் அல்லாஹு யஷ்பீக், பிஸ்மில்லாஹி உர்கீக)** 3 விடுத்தம். **(பொருள்:** அல்லாஹ்வின் நாமத்தைக் கொண்டு உனக்கு ஓதிப்பார்க்கின்றேன், உனக்கு நோவினை தரும் அனைத்து நோய்களை விட்டும், ஒவ்வொரு ஆத்மாவின் கெடுதிகளை விட்டும், பொறாமைக்காரனின் கண்ணூரின் கெடுதிகளைவிட்டும் அல்லாஹ் உம்மைக் குணப்படுத்துவானாக. அல்லாஹ்வின் நாமத்தைக் கொண்டு உனக்கு ஓதிப்பார்க்கின்றேன்.) **நோவு உள்ள இடத்தில் கையை வைத்து பின்வருவனவற்றை ஓதவும்: (பிஸ்மில்லாஹ்)** 3 விடுத்தம். **(பொருள்:** அல்லாஹ்வின் திருநாமம் கொண்டு (ஓதுகிறேன்). **(அஊதுபில்லாஹி வகுத்ரதிஹி மின் ஷர்ரி மா அஜிது வஉஹாதிரு)** 7 விடுத்தம். **(பொருள்:** அல்லாஹ்வின் மதிப்பைக் கொண்டும், அவனது சக்தியைக் கொண்டும் நான் அவதிப்படும் தீங்குகளை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகின்றேன்.)

---

[1] (பஅன்தலல்லாஹு ஸகீனதஹு அலைஹி வஅய்யதஹு பிஜுனூதின் லம் தரவ்ஹா, பஅன்தலல்லாஹு ஸகீனதஹு அலா ரஸூலிஹீ வஅலல)

[2] (மு.'.மினீன வஅன்தலஹும் கலிமதத் தக்வா, லகத் ரலியல்லாஹு அனில)

[3] (மு.'.மினீன இத் யுபாயிஊனக தஹ்தஷ் ஷஜரதி பஅலிம மாபீ குலூபிஹிம் பஅன்தலல்லாஹு ஸகீனதஹு அலைஹிம் வஅஸாபஹும் பத்ஹன் கரீபா)

[4] (ஹுவல்லதீ அன்தலஸ் ஸகீனத பீகுலூபில் மு.'.மினீன லியஸ்தாதூ ஈமானன் மஅ ஈமானிஹிம்)

சில முக்கிய குறிப்புகள்:

❶ ஒருவரின் கண்ணூரின் மூலம் பாதிப்பு ஏற்பட்டால் அவரது சிறு நீரைக் குடித்தால் சுகம் கிடைக்கும் என்றும், அவர் இறந்து விட்டால் அந்த கண் திருஷ்டி முறிந்து போய்விடும் என்றும் பல ஆதாரமற்ற செய்திகள் உள்ளன. அவற்றை நம்பக் கூடாது.

❷ கண் திருஷ்டி ஏற்படாமலிருக்க தோல் போன்றவற்றால் செய்யப்பட்ட தாயத்துகளையும், மாலை, காப்பு என்பனவற்றையும் கட்டுவது அல்லது அணிவது கூடாது, நபியவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்: "ஒருவர் எதையேனும் ஒன்றைத் தொங்க விட்டுக் கொண்டால் அவர் அதனளவிலேயே ஒப்படைக்கப்படுவார்" (நூல்: திர்மிதீ). ஆனால், அல் குர்ஆன் ஆயத்துகள் எழுதப்பட்ட தாயத்துகள் விடயத்தில் உலமாக்களிடம் கருத்து வேறுபாடு உண்டு. எனினும் அதனையும் அணியாமல் இருப்பதே சிறந்தது.

❸ (தபாரகல்லாஹ்), (மாஷா அல்லாஹ்) என எழுதுவது, வாள், கத்தி, கண் போன்றவற்றை வரைந்து வைப்பது, குர்ஆன் பிரதியை வாகனத்தில் வைத்துக் கொள்வது, குர்ஆன் வசனங்களை எழுதி வீட்டில் தொங்க விடுவது..... இதுபோன்ற செயல்களால் கண் திருஷ்டியைத் தடுத்துவிட முடியாது. மாறாக இது போன்ற வேலைகள் தடுக்கப்பட்ட தாயத்து வகைகளில் சேர்ந்துவிட வாய்ப்புண்டு.

❹ஒரு நோயாளி சுகம் பெறுவதற்கான தனது முயற்சிக்குப் பலன் கிடைக்கும் என உறுதியான நம்பிக்கையுடன் இருக்க வேண்டும். சுகம் கிடைப்பது தாமதமாகின்றதே என கவலைப்படக்கூடாது. ஒருவரிடம் அவருக்கு சுகம் கிடைக்க வேண்டுமாயின் மாத்திரைகளை நீண்ட காலம் பாவிக்க வேண்டும் எனக் கூறப்பட்டால் அவர் அதற்காகக் கவலைப்படமாட்டார். அதேநேரம், ஓதல் மூலம் வைத்தியம் செய்யும் போது கொஞ்ச காலம் தாமதம் ஏற்படும் போதே அவர் பொறுமையிழந்து போவதை நாம் காண்கின்றோம். ஓதிப்பார்ப்பதன் மூலம் சுகம் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் அதன் ஒரு எழுத்திற்கு ஒரு நன்மை ஒரு நன்மைக்கு பத்து மடங்காக நன்மைகள் என கிடைக்கின்றனவே.

துஆ இறைஞ்சுவதும், பாவ மன்னிப்புக் கேட்பதும் ஒரு நோயாளியின் கடமையாகும். அத்துடன் நிறைய தர்மங்களையும் செய்ய வேண்டும். ஏனெனில் தான தர்மங்கள் செய்வது சுகம் கிடைப்பதற்கான வழிகளில் ஒன்றாகும்.

❺ கூட்டாகச் சேர்ந்து ஓதுவது நபிவழிக்கு மாற்றமானதாகும்,. அதனால் ஏற்படும் பலனும் பலவீனமானதாகவே இருக்கும். ஒலிப்பதிவு நாடாக்களை இயக்கிவிட்டு தாம் ஓதாமல் இருப்பதும் இவ்வாறே. ஒலிப்பதிவில் அதனைக் கேட்பதற்கு நன்மை உண்டு. ஆனாலும், ஒரு அமலுக்காக நிய்யத் வைப்பது (அதை மனதால் நினைப்பது) இதில் நடப்பதில்லை. ஓதிப்பார்ப்பவர் நிய்யத்துடன் ஓதுவது நிபந்தனையாகும்.

ஓதிப்பார்த்து வைத்தியம் செய்யும் போது சுகம் கிடைக்கும் வரை திரும்பத் திரும்ப ஓதுவது ஸுன்னத்தாகும். ஆனால், அப்படி ஓதுவதால் நோயாளிக்குக் களைப்பும், கஷ்டமும் ஏற்படும் என்றிருந்தால் சடைவு ஏற்படாமலிருப்பதற்காக அவர் அதனைக் குறைத்துக் கொள்வார். ஆனால், தகுந்த ஆதாரமின்றி ஓர் எண்ணிக்கையைக் குறித்து துஆக்களையும் ஆயத்துகளையும் ஓதுவது கூடாது.

❻ மந்திரிக்கும் ஒருவர் குர்ஆன் மூலம் ஓதிப்பார்க்காமல் சூனிய வழிகளைக் கையாள்கின்றார் என்பதை அறிந்துகொள்ள சில அடையாளங்கள் உள்ளன. எனவே, அவர் மார்க்கப்பற்றுள்ளவர் போன்று பாசாங்கு பண்ணுவதைப் பார்த்து நாம் ஏமாந்துவிடக் கூடாது. இத்தகையோர் குர்ஆனின் மூலம் ஓதலை ஆரம்பித்து எமக்குத் தெரியாமல் அப்படியே சூனிய வசனங்களை முணுமுணுக்கத் தொடங்கி விடுவர். மேலும், மற்றவர்களை ஏமாற்றும் நோக்கில் பள்ளியுடன் தொடர்பாயிருப்பர், அத்துடன் எம்முன் நிறைய திக்ருகளிலும் ஈடுபடுவர். இது போன்ற நிலைகளைக் கண்டு நாம் ஏமாந்து விடாமல் இருக்க வேண்டும்.



**சூனியம், கண்கட்டி வித்தை ஆகியவற்றைச் செய்வோரின் அடையாளங்கள் சில:**

✷ தன்னிடம் வரும் நோயாளியிடம் அவரது பெயரை அல்லது அவரது தாயாரின் பெயரைக் கேட்பார்கள். உண்மையில் நோயாளியின் பெயரைத் தெரிந்திருப்பதும், தெரியாமலிருப்பதும் அவருக்கு சிகிச்சை செய்வதில் எவ்வித மாற்றத்தையும் ஏற்படுத்தப் போவதில்லை. ✷ நோயாளியின் உள்ளங்கி அல்லது வேறு ஏதேனும் ஒரு உடையைத் தரும்படி கூறுவார்கள். ✷ ஜின்களுக்கு அறுத்துப் பலியிடவேண்டும் எனக்கூறி குறித்த விதத்திலான மிருகம் ஒன்றைக் கொண்டு வருமாறு கூறுவர். சில வேளை அதன் இரத்தத்தை நோயாளியின் உடம்பிலும் தேய்ப்பார்கள். ✷அர்த்தம் புரியாத, உண்மையில் அதற்கு அர்த்தமேயில்லாத எழுத்து போன்ற வடிவங்களை எழுதிக் கொடுப்பார்கள். ✷ சதுர வடிவிலான கட்டங்களில் சில எழுத்துக்களும் இலக்கங்களும் உள்ள காகிதத்தை நோயாளியிடம் கொடுப்பார்கள். ✷ இருண்ட அறையொன்றில் வேறு யாருடனும் தொடர்பில்லாமல் குறிப்பிட்ட காலம் தனித்திருக்கச் சொல்வார்கள். ✷ குறித்த காலத்திற்கு தண்ணீர் பாவிக்கக் கூடாது என நோயாளியைக் கட்டாயப்படுத்துவார்கள். ✷ நிலத்தைத் தோண்டிப் புதைக்கும் படி எதையேனும் ஒன்றைக் கொடுப்பர்கள். அல்லது ஒரு கடதாசித் துண்டைக் கொடுத்து, அதனை எரித்து, அதன் மூலம் புகை பிடிக்கும்படி கூறுவர்.✷யாருக்கும் தெரியாத நோயாளியின் ரகசியங்களையும், அவர் சொல்வதற்கு முன் அவரவது ஊர் பெயர் பற்றிய விபரங்களையும் தெரிவிப்பர். ✷ நோயாளி நேரடியாக அல்லது தொலைபேசி, கடிதம் மூலம் தொடர்புகொண்ட மாத்திரத்தில் அவரது நோயை அடையாளம் காண்பர்.

❼ ஜின்கள் மனித உடலில் புகுந்து அவனில் கலப்பது சாத்தியமானது என்பதே ஸுன்னத் வல்ஜமாஅத்தினரின் கொள்கையாகும். பின்வரும் இறை வசனத்தை அதற்கு ஆதாரமாகக் கொள்ளலாம்: “வட்டியை உண்பவர்கள் ஷைத்தான் தீண்டியதால் யாரை அவன் நினைவிழக்கச் செய்கின்றானோ அத்தகையவன் எழும்புவது போலன்றி (மறுமையில்) எழும்ப மாட்டார்கள்.”

அல்குர்ஆன் விரிவுரையாளர்கள் அனைவரும் இவ்வசனத்தில் வரும் \அல் மஸ்ஸு| எனும் வார்த்தை ஜின் பிடிப்பதால் ஒருவருக்கு ஏற்படும் பைத்தியம் போன்ற நிலமையையே குறிக்கின்றது என ஏக மனதாகக் கூறியுள்ளனர்.

**முடிவுரை : சூனியம் :-** சூனியம் என்பது உண்மையாகும். அது பாதிப்பை ஏற்படுத்தும் என்பது அல்குர்ஆனின் மூலமும் ஸுன்னாவின் மூலமும் நிறுவப்பட்ட ஒரு விடயமாகும். அது ஹராமானதும் பெரும்பாவங்களில் ஒன்றுமாகும். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அழிவை ஏற்படுத்தும் ஏழு பாவங்களை நீங்கள் தவிர்ந்து கொள்ளுங்கள். நபித் தோழர்கள் அவை எவை என வினவியதற்கு நபியவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்விற்கு இணைவைப்பதும் சூனியம் செய்வதும் ......., (புகாரி, முஸ்லிம்). மேலும் அல்லாஹ் கூறுகின்றான்: “யார் இதனை விலைக்கு வாங்குகின்றாரோ அவருக்கு மறுமையில் எந்தப் பங்கும் இல்லை என்பதை அவர்கள் உறுதியாக அறிந்து வைத்துள்ளனர்.” அது இரு வகைப்படும். (1) முடிச்சுகளும், மந்திரங்களும். சூனியம் செய்யப்படுபவனுக்கு தீங்கை ஏற்படுத்துவதற்காக சூனியக்காரன் ஷைத்தான்களின் உதவியைப் பெறுவான். (2) சூனியம் செய்யப்பட்டவனின் உடம்பில், புத்தியில், சிந்தனையில், ஆசையில் தாக்கத்தை ஏற்படுத்தும் சில மருந்துகள். அதன் மூலம் சூனியம் மாறிவிட்டது, சென்றுவிட்டது, அல்லது அழிந்து விட்டது போன்றவற்றைக் கூறி சூனியம் செய்யப்பட்டவனை நம்ப வைத்துவிடுவான். இதில் முதலாவது முறையை மேற்கொள்வது ஷிர்க் எனும் இணையை ஏற்படுத்தக்கூடியது. ஏனெனில் சூனியக்காரன் இறைவனை மறுக்கும் வரை ஷைத்தான்கள் அவனுக்கு உதவி செய்வதில்லை. இரண்டாவது நன்மைகளை அழித்து நாசப்படுத்தும் பெரும்பாவத்தைச் சார்ந்ததாகும். அனைத்து விடயங்களும் அல்லாஹ்வின் விதியின் பிரகாரமே நடைபெறுகின்றன.

# பிரார்த்தனை புரிதல்

படைப்பினர் அனைவரும் அல்லாஹ்வின் பால் தேவையுள்ளவர்களே. ஆனால், வல்ல அல்லாஹ் தனது அடியார்களின் பால் முற்றும் முழுதாகவே தேவையற்றவன். வல்ல அல்லாஹ் அவனது அடியார்கள் அவனிடம் பிரார்த்தனை புரிவதைக் கட்டாயப்படுத்தியுள்ளான். இது பற்றி அவன் திருமறையில் பின்வருமாறு கூறுகின்றான்: *“நீங்கள் என்னை அழைத்துப் பிரார்த்தனை புரியுங்கள், நான் நிச்சயமாக உங்களு(டைய பிரார்த்தனை) க்கு பதிலளிப்பேன். நிச்சயமாக (என்னிடம் பிரார்த்தனை புரிந்து) என்னை வணங்குவதை விட்டும் பெருமை அடிப்பவர்கள் இழிவடைந்த நிலையில் நரகம் புகுவார்கள்.''* மேலும், நபியவர்கள் ***“எவரேனும் அல்லாஹ்விடம் (பிரார்த்தித்து தனது தேவைகளைக்) கேட்காவிட்டால் அவன் அவரின் மீது கோபமடைவான்”*** எனக் கூறியுள்ளார்கள். இது மட்டுமல்ல, அல்லாஹ் தனது அடியார்கள் அவனிடம் தமது தேவைகளைக் கேட்பதால் மகிழ்ச்சியடைகின்றான். ஒரு தேவைக்காக திருப்பித் திருப்பி துஆ இறைஞ்சுபவர்களை அவன் விரும்புவதுடன் அவர்களை தன்னிடம் நெருக்கமாக்கிக் கொள்கின்றான்.

நபித் தோழர்கள் இந்த உண்மையை விளங்கியிருந்தார்கள். அதனாலேயே அவர்கள் தமது தேவை சிறியதாக இருந்தாலும் அதனை அல்லாஹ்விடம் கேட்டார்கள். அத்துடன், அவனது படைப்புகளில் எவரிடமும் தமது தேவைகளை அவர்கள் முன்வைக்கவுமில்லை. *“எனது அடியார்கள் என்னைப் பற்றிக் கேட்டால் நான் நிச்சயமாக சமீபமாயுள்ளேன் எனக் கூறுவீராக''* என்ற இறை வசனத்திற்கேற்ப அவர்கள் அல்லாஹ்வுடன் வைத்திருந்த தொடர்பும், அவர்களுக்கும் அவனுக்கும் இடையிலான தொடர்புமே இதற்குக் காரணமாகும்.

துஆவிற்கு இறைவனிடம் மகத்தான ஓர் இடமுண்டு. அது அல்லாஹ்விடம் மிகவும் மதிப்புள்ளதும் கண்ணியமானதுமாகும். சிலவேளை அது அவனது ஏற்பாடு மாறுவதற்கே காரணமாகிவிடுகின்றது. ஏற்றுக் கொள்ளப்படுவதற்கான காரணங்கள் சகலதும் இருப்பதுடன், தடைகள் இல்லாத பட்சத்தில் சந்தேகமின்றி ஒரு முஸ்லிமின் துஆ அங்கீகரிக்கப்படுகின்றது. இதனடிப்படையில், பின்வரும் நபிமொழியில் கூறப்பட்டுள்ள விடயங்களில் ஒன்று கட்டாயம் துஆவில் ஈடுபட்டவருக்குக் கிடைத்தே தீரும்: “ஒரு முஸ்லிம் பாவமான விடயத்தையோ, இரத்த உறவை முறிப்பதையோ அல்லாத ஒரு துஆவைக் கேட்டால் அல்லாஹ் மூன்று விடயங்களில் ஒன்றை அவனுக்குக் கொடுத்தே தீருவான். ஒன்றில் அவனது துஆவை (இவ்வுலகில்) நறைவேற்றி வைப்பான், அல்லது அந்த துஆவின் நன்மையைப் சேமித்து வைத்து மறுமையில் அவனுக்கு நற்கூலியாகக் கொடுப்பான், அல்லது அவன் கேட்டதற்குப் பதிலாக (அவனுக்கு வரவிருந்த) ஓர் கெடுதியை நீக்கி விடுவான்.” இதைக் கேட்ட நபித்தோழர்கள் “அப்படியாயின் நாம் அதிகமாக துஆக் கேட்போம்" என்றனர். அதற்கு நபியவர்கள் “அல்லாஹ்விடம் (கொடுப்பதற்கு) மிக அதிகமாக உள்ளது" என்றார்கள். (நூல்: அஹ்மத், திர்மிதி).

**துஆ இரண்டு வகைப்படும்: (1)** வணக்க வடிவில் உள்ளது: நோன்பு, தொழுகை போன்றன. **(2)** தேவையை முன் வைத்து பிரார்த்தனையாகவே கேட்பது.

**எதனைச் செய்வது ஏற்றமானது என்ற அடிப்படையில் நல்லமல்களுக்கு இடையிலான தர வித்தியாசங்கள்:** குர்ஆன் ஓதுவது, திக்ர் செய்வது. துஆக் கேட்பது என்பனவற்றில் எது மிகவும் ஏற்றமானது என நாம் நோக்கும் போது பொதுவாக குர்ஆன் ஓதுவது மிகவும் ஏற்றமானதும், அதற்கடுத்து திக்ர் செய்வதும், அதற்கடுத்து துஆக் கேட்பதுமாகும். ஆனாலும் சில சந்தர்ப்பங்களில் இத்தரவரிசையில் மாற்றம் ஏற்படலாம். ஏனெனில், அரபா மைதானத்தில் கூடுபவர்கள் அன்று அவ்விடத்தில் குர்ஆன் ஓதுவதை விட துஆக் கேட்பதில் ஈடுபடுவதே சிறந்தது. மேலும் ஐங்காலத் தொழுகைகளின் பின் குறித்த திக்ருகளை ஓதுவது குர்ஆன் ஓதுவதை விடவும் சிறந்தது.

**துஆ ஏற்றுக்கொள்ளப்படுவதற்கான காரணங்கள்:** இவைகளில் வெளிப்படையானவை, அந்தரங்கமானவை என இரண்டு வகைக் காரணங்கள் இருக்கின்றன:

❶ **வெளிப்படையான காரணங்கள் சில:** தொழுதல், தர்மம் கொடுத்தல் போன்ற நல்லமல்களைச் செய்துவிட்டு துஆக்கேட்டல், துஆ கேட்கும் போது பின்வரும் ஒழுக்கங்களையும், சீராக அதனை முன்வைக்கும் வழிகளையும் பேணவேண்டும். கிப்லாவை முன்னோக்குதல், கைகளை உயர்த்துதல், அல்லாஹ்வை முறையாகப் புகழ்தல், நபியவர்கள் மீது ஆரம்பத்திலும், நடுவிலும் இறுதியிலும் ஸலவாத்துச் சொல்லல், தனது பாவங்களை ஏற்றுக் கொள்ளல், அல்லாஹ் அளித்த அருள்களுக்கு நன்றிசெலுத்தல் போன்றவை. ஆரம்பத்தில் அல்லாஹ்வைப் புகழும்போது துஆவில் முன்வைக்கும் அம்சத்திற்குப் பொருத்தமான அவனது திருப்பெயர்கள் பண்புகளை உபயோகிக்க வேண்டும். சுவர்க்கத்தைக் கேட்கும் போது அவனது அருளின் பொருட்டால் கேட்க வேண்டும். ஒரு அநியாயக்காரனுக்கு எதிராக துஆக் கேட்கும் போது அருளாளன், கிருபையாளன் போன்ற பண்புகளைக் கூறாமல் அடக்கி ஆள்பவன் போன்ற பண்புகளைக் கூற வேண்டும்.

மேலும், நபிமொழிகளில் துஆ ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு வாய்ப்புள்ள நேரங்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ள நேரங்களைப் பயன்படுத்துவதும் வெளிப்படையான காரணங்களில் உள்ளதாகும். அவை அதிகமாக இருக்கின்றன. ஒவ்வொரு நாளும் அல்லாஹ் கீழ் வானத்திற்கு இறங்கும் நேரமாகிய இரவின் மூன்றாம் பகுதியாகிய இறுதி நேரம் (ஸஹர் நேரம்), பாங்கிற்கும் இகாமத்திற்கும் இடைப்பட்ட நேரம், வுழூச் செய்த பின், ஸுஜூதில், அத்தஹிய்யாத்தில் ஸலாம் கொடுக்க முன், தொழுகை முடிந்த பின், சேவல் கூவும் போது, பிரயாணத்தில் இருக்கும் போது போன்றவை அவற்றில் சிலவாகும். மேலும், அநீதி இழைக்கப்பட்டவனின் துஆவும், பெற்றோர் பிள்ளைகளுக்காகக் கேட்கும் துஆவும், தனது சகோதரனுக்காக அவன் இல்லாத இடத்தில் ஒரு முஸ்லிம் கேட்கும் துஆவும், எதிரியுடன் யுத்தத்தில் ஈடுபடும் போது கேட்கும் துஆவும் அங்கீகரிக்கப்பட மிகவும் வாய்ப்புள்ளவையாகும். இதே போன்று வாரத்தில் ஜும்ஆத் தினம் அதிலும் குறிப்பாக அன்றைய பகலின் கடைசிப் பகுதி, மாதங்களில் ரமழான் மாதம் (முக்கியமாக நோன்பு துறக்கும் போதும் ஸஹர் நேரத்திலும்), லைலதுல் கத்ர் இரவு, அரபா தினத்தன்று கேட்கப்படுபவையும், பொதுவாக பள்ளிகளில், க.்.பா உள்ள இடத்தில் அதிலும் குறிப்பாக் ஹஜருல் அஸ்வத் கல்லுக்கும் க.்.பாவின் வாசலுக்கும் இடையிலுள்ள \முல்தஸம்| எனும் இடத்திலும், மகாமு இப்ராஹீம் இடத்திலும், சபா மர்வா மலைகள் மீதும், ஹஜ்ஜுடைய காலத்தில் அரபா, மினா, முஸ்தலிபா ஆகிய இடங்களிலும், ஸம்ஸம் நீர் அருந்தும் போதும் இப்படி முக்கியமான இடங்கள், சந்தர்ப்பங்களில் கேட்கப்படும் துஆவும் அங்கீகரிக்கப்பட வாய்ப்புக் கூடியவையாகும்.

❷ **உள்ரங்கமான காரணங்கள் சில:** துஆக் கேட்கமுன் முறையாக உண்மையான தவ்பாவைச் செய்து கொள்ளல். முறையின்றி அநியாயமாகப் பெறப்பட்ட பொருட்களை உரியவர்களிடம் கையளித்துவிடல். உணவு, குடிப்பு, உடை, இருப்பிடம் என்பனவற்றை ஹலாலானதாக ஆக்கிக்கொள்ளல். நன்மைகளை அதிகமாகச் செய்வதுடன் பாவங்களைத் தவிர்த்து, மனோ இச்சைகளையும், சந்தேகத்திற்குரிய அம்சங்களையும் தவிர்த்து ஒதுங்கியிருத்தல். மேலும், துஆக் கேட்கும் போது அதில் உள்ளத்தால் பத்சாதப்பட்டுக் கேட்பதுடன், அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்து அவனிடமே அடைக்கலம் தேடி சகல காரியங்களையும் ஒப்படைத்து துஆ ஏற்றுக் கொள்ளப்படும் என்ற உறுதியுடன் கெஞ்சிக் கெஞ்சி, திருப்பித் திருப்பிக் கேட்டல்.

**துஆ ஏற்றுக்கொள்ளப்படுவதற்குத் தடையாக உள்ள அம்சங்கள்:** சில வேளை ஒருவர் துஆக் கேட்டும் அது ஏற்றுக்கொள்ளப்படாமலோ அல்லது நிறைவேறுவது தாமதமாகிக் கொண்டோ போகலாம், அற்குப் பல காரணங்கள் உள்ளன, அவற்றில் சில பின்வருமாறு:

✷ அல்லாஹ்வுடன் அவன் அல்லாதோரையும் சேர்த்து தேவைகளைக் கேட்டல்.

✷ துஆவில் தேவையற்ற விளக்கங்களைக் கூறல். (உதாரணமாக: நரகத்தை விட்டும் பாதுகாப்புத் தேடுவதாகப் பிரார்த்திப்பது மாத்திரம் போதுமாகயிருக்க அதன் சூட்டையும், இருளையும், நெருக்கடியையும் விட்டும் என விபரம் சொல்லல்.)

✷ ஒரு முஸ்லிம் தனக்கோ அல்லது பிறருக்கோ எதிராக அநியாயமாக துஆக் கேட்டலும், பாவம் அல்லது உறவை முறிப்பதைக் கேட்டலும். மேலும், தனது தேவையை அல்லாஹ் நாடினால் தரும்படி கூறல். (உதாரணமாக "யா அல்லாஹ் நீ நாடினால் மன்னிப்பாயாக" எனக் கேட்டல்).

✷ துஆ ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமென அவசரப்படல்.

✷ துஆவில் உள்ளத்தின் கவனத்தைச் செலுத்தாமல் வேறு சிந்தனைகளுடன் துஆக் கேட்டல். மேலும், அல்லாஹ்வின் முன்னிலையில் ஒழுக்கங்களைப் பேணாமல் துஆவில் ஈடுபடல். ஒரு முறை தொழுதுகொண்டிருந்த ஒருவர் நபியவர்கள் மீது ஸலவாத்துச் சொல்லாமல் துஆ இறைஞ்சுவதை நபியவர்கள் கேட்டார்கள். உடனே நபியவர்கள்: "இவர் அவசரப்பட்டுவிட்டார்" எனக் கூறினார்கள். இந்த ஸஹாபிக்கு அல்லது வேறு ஒருவருக்கு நபியவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: ***"உங்களில் ஒருவர் தொழுதால் முதலில் அல்லாஹ்வைப் புகழ்ந்து, அதன்பின் நபியின் மீது ஸலவாத்துச் சொல்லியதன் பின்பு தான் நினைத்ததைப் பிரார்த்தனை செய்யட்டும்."*** (நூல்: அபூ தாவூத், திர்மிதி).

✷மாற்ற முடியாது என அல்லாஹ்வால் தீர்மானிக்கப்பட்ட ஒன்றைக் கேட்டல், (உலகில் காலா காலமாக நீடூழி காலம் வாழவேண்டும் என துஆச் செய்வதைப் போன்று.)

✷ துஆவில் எதுகை மோனை (ஸஜ்உ) வடிவிலான அழகிய வசனங்களைச் சிரமப்பட்டு அமைத்தல். வல்ல அல்லாஹ் பின்வருமாறு கூறியுள்ளான்: "***உங்கள் இரட்சகனை மிக்க பணிவாகவும் (தாழ்ந்த குரலில்) மெதுவாகவும் (பிரார்த்தித்து) அழையுங்கள், நிச்சயமாக அவன் வரம்பு மீறுவோரை நேசிக்கமாட்டான்***". இப்னு அப்பாஸ் (ரலி) கூறுகின்றார்கள் "***துஆக் கேட்கும் போது பதக்கட்டு முறையை நீ தவிர்ந்துகொள், ஏனெனில், நபியவர்களையும் அவர்களது தோழர்களையும் அதனைத் தவிர்ந்து கொள்பவர்களாவே நான் கண்டுள்ளேன்***" (புஹாரி).

✷ அளவிற்கு அதிகமாக சப்தத்தை உயர்த்துதல். வல்ல அல்லாஹ் பின் வருமாறு கூறியுள்ளான்: "*(நபியே) நீர் உம்முடைய துஆவில் அளவுகடந்து சப்தமிடவும் வேண்டாம், அதில் மிகத் தாழ்த்தவும் வேண்டாம், இவ்விரண்டிற்கிடையே (நடுத்தரமான) வழியை நீர் தேடிக் கொள்வீராக*" இவ்வசனத்தைப் பற்றிக் கூறிய ஆயிஷா (ரலி) அவர்கள் இது துஆவின் விடயத்தில் இறக்கப்பட்டது எனக் கூறியுள்ளார்கள்.

**துஆக் கேட்பவர் பின்வரும் வரிசை முறைப்படி அதனை அமைத்துக் கொள்வது விரும்பத்தக்கது:** 1) அல்லாஹ்வைப் புகழ்தல், 2) நபியவர்கள் மீது ஸலவாத்துச் சொல்லல். 3) பாவத்தை ஏற்றுக் கொண்டு தவ்பாச் செய்தல்.
4) அல்லாஹ்வின் அருள்களுக்காக நன்றி செலுத்தல். 5) தனது தேவைகளை முன் வைத்துக் கேட்டல், (இதில் கருத்துச் செறிவுமிக்க பல விடயங்களை உள்ளடக்கிய சுருக்கமான துஆக்களையும், நபியவர்களும் ஆரம்பகால நல்லடியார்களும் ஓதிய ஆதாரபூர்வமான துஆக்களையும் ஓத வேண்டும்). 6)கடைசியாக ஸலவாத்துடன் துஆவை முடித்தல்.

# பாடமிடப்படவேண்டிய முக்கிய சில துஆக்கள்

| துஆவின் சந்தர்ப்பம் | நபியவர்கள் கூறிய துஆ | பொருள் |
|---|---|---|
| தூங்குவதற்கு முன்பும் எழுந்த பின்பும் | தூங்கமுன் (பிஸ்மிகல்லாஹும்ம அமூது வஅஹ்யா) தூங்கி எழுந்தவுடன் (அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா ப.்.தமா அமாதனா வஇலைஹின் நுசூர்) | இறைவா! உன் பெயர் கொண்டே தூங்கி விழிக்கின்றேன். என்னைத் தூங்கவைத்து விழிப்புறச் செய்த அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும். எழுப்புதல் அவன் பக்கமாகும். |
| தூக்கத்தில் திடுக்கிட்டு விழித்தால் | (அஊது பிகலிமாதில்லாஹித் தாம்மாதி மின் க.்.ழபிஹி வமின் ஷர்ரி இபாதிஹி வமின் ஹமதாதிஷ் ஷயாதீனி வஅன் யஹ்ழுரூனி) | அல்லாஹ்வின் பரிபூரணமான வார்த்தைகளைக் கொண்டு அவனது கோபத்தை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன். இன்னும் அவனது அடியார்களின் தீங்குகள் மற்றும் ஷைத்தான்களின் ஊஷலாட்டங்கள் இன்னும் (ஷைத்தான்) என்னிடத்தில் சமுகமாகுவதை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன். |
| தூங்குபவர் கனவு கண்டால் | உங்களில் ஒருவர் தான் விரும்பும் சந்தோஷமான ஒரு கனவைக் கண்டால் அது அல்லாஹ்விடமிருந்து வந்ததே, எனவே அதற்காக அல்லாஹ்வைப் புகழ்ந்து, அக்கனவை மற்றவர்களிடம் சொல்லவும். தான் வெறுக்கும் கெட்ட கனவைக் கண்டால் அது ஷைத்தானிடமிருந்து வந்ததே, அதனுடைய கெடுதியை விட்டும் (அல்லாஹ்விடம்) பாதுகாப்புத் தேடவும், மேலும் அதை யாரிடமும் சொல்லாமலிருக்கவும், அப்படிச் செய்தால் அவருக்கு அதன் மூலம் கெடுதி ஏற்படாது. | |
| வீட்டிலிருந்து வெளியாகுதல் | (அல்லாஹும்ம இன்னீ அஊது பிக அன் அழில்ல அவ் உழல்ல அவ் அதில்ல அவ் உதல்ல அவ் அள்லிம அவ் உள்லம அவ் அஜ்ஹல அவ் யுஜ்ஹல அலய்ய | யாஅல்லாஹ் நான் வழிகெடுவது, நான் வழிகெடுக்கப்படுவது, தவறுவது, தவறிலாக்கப்படுவது, யாருக்கும் அநியாயம் செய்வது, எனக்கு அநியாயம் செய்யப்படுவது அல்லது நான் அறிவீனமாக நடப்பது இன்னும் நான் அறிவீனமாக நடாத்தப்படுவது ஆகிய அனைத்தை விட்டும் உன்னிடத்தில் பாதுகாப்புத் தேடுகிறேன். |
| பள்ளியினுள் நுழைதல் | வலது காலை முற்படுத்தி பின்வரும் துஆவை ஓதவும் (பிஸ்மில்லாஹ் வஸ்ஸலாமு அலா ரஸூலில்லாஹ் அல்லாஹும்ம.்.பிர்லீ துனூபீ வப்தஹ்லீ அப்வாப ரஹ்மதிக) | (பிஸ்மில்லாஹ்) அல்லாஹ்வின் தூதர் மீது ஸலாம் உண்டாவதாக, யாஅல்லாஹ்! என் பாவங்களை மன்னிப்பாயாக, உனது ரஹ்மத் எனும் அருள்களின் வாசல்களைத் திறந்து தருவாயாக. |
| பள்ளியிலிருந்து வெளியாகுதல் | பள்ளியிலிருந்து வெளியாகுபவர் இடக்காலை முன்வைத்து கீழ்க்கண்டவாறு ஓதவும் (பிஸ்மில்லாஹ் வஸ்ஸலாமு அலா ரஸூலில்லாஹ் அல்லாஹும்ம.்.பிர்லீ துனூபீ வப்தஹ்லீ அப்வாப பழ்லிக்) | (பிஸ்மில்லாஹ்) அல்லாஹ்வின் தூதர் மீது ஸலாம் உண்டாவதாக, யாஅல்லாஹ்! என் பாவங்களை மன்னிப்பாயாக, உனது கொடைகளின் வாயில்களைத் திறந்து தருவாயாக. |
| புதிதாகத் திருமணம் செய்தவருக்கு வாழ்த்துக் கூறல் | (பாரகல்லாஹு லக வபாரக அலைக வஜமஅ பைனகுமா பீ கைர்) | அல்லாஹ் உங்களுக்கு அருள் புரிவானாக, உங்கள் மீது அவனது அருளைச் சொறிவானாக, உங்கள் இருவரையும் நல்ல விடயங்களில் ஒன்று சேர்த்து வைப்பானாக, |
| சேவல் கூவுவதை அல்லது கழுதை கத்துவதைக் கேட்டால் | "கழுதை கத்துவதை நீங்கள் கேட்டால் ஷைத்தானை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுங்கள் ,ஏனெனில், ஷைத்தானைக் கண்டே அது சப்தமிடுகின்றது. சேவல் கூவுவதைக் கேட்டால் அல்லாஹ்விடம் அவனது அருளைக் கேளுங்கள், ஏனெனில் அது மலக்கை (வானவரை)க் கண்டதாலேயே கூவுகின்றது". "இரவு நேரத்தில் நாய் குரைப்பதையும், கழுதை சப்தமிடுவதையும் கேட்டால் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுங்கள்" | |

| | | |
|---|---|---|
| அல்லாஹ்விற்காக உங்களை விரும்புவதாக ஒருவர் உங்களிடம் சொன்னால் | அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஒரு மனிதர் நபியவர்களிடம் இருக்கும் போது இன்னுமொருவர் அவ்விடத்தால் சென்றார், அப்பொழுது இவர் "இறைத்தூதரே நான் அவரை நேசிக்கின்றேன்" எனக் கூறினார், உடனே நபியவர்கள் "அவரிடம் அதைக் கூறினீரா?" எனக் கேட்டார்கள். அவர் இல்லை எனச் சொல்ல நபியவர்கள்: "அவரிடம் கூறுவீராக" என்றார்கள், உடனே இவர் அவரிடம் போய் "நான் அல்லாஹ்விற்காக உம்மை நேசிக்கிறேன்" என்றார். அதற்கு அவர் "நீர் யாருக்காக என்னை நேசிக்கிறீரோ அவன் உம்மை விரும்புவானாக" எனக் கூறினார். | |
| முஸ்லிமான உன் சகோதரன் தும்மினால் | உங்களில் ஒருவர் தும்மினால் (அல்ஹம்துலில்லாஹ்)எனக் கூறவும். அதற்கு அவருடைய சகோதரர் அல்லது அருகில் இருப்பவர் (யர்ஹமுகல்லாஹ்) எனக்கூறவும். அவர் அப்படிச் சொன்னதும் தும்மியவர் (யஹ்தீகுமுல்லாஹு வயுஸ்லிஹு பாலகும்)எனக்கூறவும். மேலும் ஒரு காபிர் தும்மிவிட்டு (அல்ஹம்துலில்லாஹ்)எனச் சொன்னால் நீர் (யர்ஹமுகல்லாஹ்) எனக்கூறாமல் (யஹ்தீகுமுல்லாஹ்)என்று மாத்திரம் சொல்லவும். | அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும். அல்லாஹ் உங்களுக்கு ரஹ்மத் செய்வானாக. அல்லாஹ் உங்களுக்கு நேர்வழி காட்டுவானாக மேலும் உங்கள் கருமங்களைச் சீர்செய்வானாக. |
| கஷ்டம் ஏற்பட்ட பொழுது | (லாஇலாஹ இல்லல்லாஹுல் அளீமுல் ஹலீம், லாஇலாஹ இல்லல்லாஹு ரப்புல் அர்ஷில் அளீம், லாஇலாஹ இல்லல்லாஹு ரப்புஸ்ஸமாவாதி வரப்புல் அர்ழி வரப்புல் அர்ஷில் கரீம்) (அல்லாஹு அல்லாஹு ரப்பீ லா உஷ்ரிகு பிஹீ ஷைஆ) (யாஹய்யு யாகய்யூம் பிரஹ்மதிக அஸ்தகீஸ்) (ஸுப்ஹானல்லாஹில் அளீம்) | சகிப்புத் தன்மை உள்ள கன்னியமான அல்லாஹ்வைத் தவிர வணக்கத்துக்குரிய இறைவன் வேறு யாருமில்லை. மகத்தான அர்ஷின் ரப்பாகிய அல்லாஹ்வைத்தவிர வேறு இறைவனில்லை. அவன் வானங்களின் இரட்சகன் பூமியின் இரட்சகன். கன்னியமான அர்ஷின் இரட்சகன் அல்லாஹ் எனது நாயன். அவனுக்கு யாதொன்றையும் இணையாக்கமாட்டேன். ஜீவிப்பவனே! நிலைத்து நிற்பவனே! உன் அருளின் மூலம் உன்னிடம் உதவி தேடுகிறேன். மகத்தான அல்லாஹ்வைத் துதிக்கின்றேன். |
| எதிரிகளுக்கு எதிராக | (அல்லாஹும்ம முன்ஜிரியஸ் ஸஹாப், முன்திலல் கிதாப், ஸரீஅல் ஹிஸாப், இஹ்திமில் அஹ்தாப், அல்லாஹும்மஹ்திம்ஹும் வதல்தில்ஹும்) | மேகங்களை நகர்த்துபவனே, வேதத்தை இறக்கியவனே! கூடிய கெதியில் விசாரணை செய்பவனே, எதிரிப்படைகளைத் தோற்கடிப்பாயாக, இறைவா! அவர்களைத் தோல்வியுறச் செய்து ஆட்டம் காணச் செய்வாயாக. |
| இரவு தூக்கத்திலிருந்து திடீரென விழித்தால் | இரவில் யாராவது திடீரென விழித்து "லாஇலாக இல்லல்லாஹு வஹ்தஹு லா சரீக லஹு , லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி சைஇன் கதீர், அல்ஹம்து லில்லாஹி வஸுப்ஹானல்லாஹி வலாஇலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் வலா ஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹ்" எனக் கூறி விட்டு "அல்லாஹும்ம.்.பிர்லீ" எனக் கூறினால் அல்லது பிரார்த்தித்தால் அவருக்கு விடையளிக்கப்படும். அவன் வுழூச் செய்து தொழுதால் அதை அங்கீகரிக்கப்படும். | |
| ஒரு காரியத்தை நிறைவேற்றுவதில் சிரமம் ஏற்படும் போது | அல்லாஹும்ம லா ஸஹ்ல இல்லா மா ஜஅல்தஹு ஸஹ்லா, வஅன்த தஜ்அலுல் ஹஸ்ன இதா ஷி.்.த ஸஹ்லா) | யாஅல்லாஹ்! நீ இலேசாக்கியதைத் தவிர இலேசு கிடையாது. கஷ்டங்களையும் நீ நாடினால் இலேசாக்கி விடுவாய். |

| | | |
|---|---|---|
| கடனை நிறைவேற்றும் வாய்ப்புப் பெற | (அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மினல் ஹம்மி வல்ஹஸன், வல்அஜ்ஸி வல்கஸல், வல்ஜுப்னி வல்பு.்.குல், வழலஇத்தய்னி வக.்.லபதிர் ரிஜால்) | யா அல்லாஹ்! துன்பம் துயரத்திலிருந்தும், கவலைகளிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். இயலாமை, சோம்பல் கோழைத்தனம், உலோபித்தனம், கடன் மிகைத்தல் மனிதர்களின் ஆதிக்கம் என்பவற்றிருந்தும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். |
| மல சல கூடத்திற்கு செல்லல் | (அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மினல் குபு.்.புஸி வல் க.்.பாஇஸ்) | இறைவா! ஆண் ஷைத்தான்கள் மற்றும் பெண் ஷைத்தான்களின் (கெடுதிகளை) விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். |
| மல சல கூடத்திலிருந்து வெளியேறும் போது | (குப்ரானக்) | உன்னிடம் பாவ மன்னிப்புக் கேட்கிறேன் |
| தொழுகையில் வீண் சந்தேகங்கள் ஏற்படும் போது | அப்படி சந்தேகத்தை ஏற்படுத்துவது \ கு.்.ன்ஸுப்' எனும் ஷைத்தானாகும், அதனை உணர்ந்தால் அவனை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடி, இடது புறமாக மூன்று முறை இலேசாகத் துப்பிக் கொள்ளவும். | |
| ஸுஜூதின் நிலையில் | (அல்லாஹும்ம.்.பிர்லீ தன்பீ குல்லஹு திக்கஹு வஜில்லஹு வஅவ்வலஹு வஆகிரஹு வஅலானியதஹு வஸிர்ரஹு, ஸுப்ஹானக ரப்பீ வபிஹம்திக, அல்லாஹும்ம.்.பிர்லீ, அல்லாஹும்ம இன்னீ அஊது பிரிழாக மின் ஸக.்.திக வபிமுஆபாதிக மின் உகூபதிக வஅஊதுபிக மின்க லாஉஹ்ஸீ ஸனாஅன் அலைக அன்த கமா அஸ்னைத அலா நப்ஸிக்) | இறைவா! எனது சிறிய, பெரிய, முந்திய, பிந்திய, பகிரங்கமான, இரகசியமான அனைத்துப் பாவங்களையும் மன்னிப்பாயாக. யா அல்லாஹ்! உன்னைத் துதிக்கின்றேன், உன்னைப் புகழ்கின்றேன். இறைவா! எனது பாவத்தை மன்னிப்பாயாக. யா அல்லாஹ்! உனது பொறுத்தத்தின் மூலம் உனது கோபத்தை விட்டும், மேலும் உனது மன்னிப்பின் மூலம் உனது தண்டனையை விட்டும், உன் மூலம் உன்னை விட்டும் நான் பாதுகாப்புத் தேடுகின்றேன். நீ உன்னைப் புகழ்ந்தது போன்று நான் உன்னை புகழ்வதை மட்டிட முடியாது. |
| ஸஜ்தா செய்வதற்கான ஆயத்தை ஓதி ஸுஜூது செய்யும் போது | (அல்லாஹும்ம லக ஸஜத்து வபிக ஆமன்து வலக அஸ்லம்து ஸஜத வஜ்ஹிய லில்லதீ க.்.லகஹு வஸவ்வரஹு வஷக்க ஸம்அஹு வபஸரஹு தபாரகல்லாஹு அஹ்ஸனல் க.்.ாலிகீன்) | யா அல்லாஹ்! உனக்காகவே சிரம் பணிந்தேன், உன்னையே நம்பிக்கை வைத்தேன், உனக்காகவே தலை சாய்த்தேன், எனது முகம் அதனைப் படைத்து உருவமைத்து அதில் பார்வையையும், கேள்வியையும் பிளந்து வைத்தானே அவனுக்கு சிரம் பணிந்து விட்டது. படைப்பவர்களில் அழகானவனாகிய அல்லாஹ் உயர்ந்து விட்டான். |
| தொழுகையின் ஆரம்பத்தில் (இஹ்ராம் தக்பீருக்கும் பாத்திஹாவுக்கும் இடையில்) | அல்லாஹும்ம பாஇத் பைனீ வபைன க.்.தாயாய கமா பாஅத்த பைனல் மஷ்ரிகி வல்ம.்.ரிப், அல்லாஹும்ம நக்கினீ மின் க.்.தாயாய கமா யுனக்கஸ் ஸவ்புல் அப்யழு மினத்தனஸ், அல்லாஹும்ம.்.ஸில்னீ பில்மாஇ வஸ்ஸல்ஜி வல்பரத்) | இறைவா! கிழக்குக்கும், மேற்குக்கும் எவ்வாறு தூரத்தை ஏற்படுத்தினாயோ அவ்வாறு எனக்கும், எனது தவறுகளுக்குமிடையிலும் தூரத்தை ஏற்படுத்துவாயாக. வெண்மையான ஆடை எவ்வாறு அழுக்குகளிலிருந்து தூய்மையாக்கப்படுமோ அவ்வாறே எனது பாவங்களை விட்டும் என்னை தூய்மையாக்குவாயாக. என்னை நீரைக் கொண்டும் பனிக்கட்டிகளைக் கொண்டும் அழுக்ககற்றி விடுவாயாக. |
| தொழுகையின் இறுதியில் (அத்தஹிய்யாத்தில்) | (அல்லாஹும்ம இன்னீ ளலம்து நப்ஸீ ளுல்மன் கஸீரன் வலா ய.்.பிருத் துனூப இல்லா அன்த ப.்.பிர்லீ ம.்.பிரதன் மின் இன்திக வர்ஹம்னீ இன்னக அன்தல் க.்.பூருர் ரஹீம்) | இறைவா! நான் அதிகமாக எனக்கே அநியாயம் செய்து விட்டேன். பாவங்களை மன்னிப்பவன் உன்னைத் தவிர வேறு யாருமில்லை. உன்னிடமிருந்து பாவ மன்னிப்பை எனக்கு அருள்வாயாக. எனக்குக் கிருபையும் செய்வாயாக. நிச்சயமாக நீதான் பாவங்களை மன்னித்து அதிகம் கிருபை செய்யக்கூடியவனாகும். |

| | | |
|---|---|---|
| தொழுது முடிந்த பின் | (அல்லாஹும்ம அஇன்னீ அலா திக்ரிக வசுக்ரிக வஹுஸ்னி இபாததிக அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மினல் குப்ரி வல்பக்ரி வஅதாபில் கப்ர்) | யா அல்லாஹ்! உன்னை ஞாபகிப்பதற்கும், உனக்கு நன்றி செலுத்துவதற்கும், உன்னை அழகிய முறையில் வணங்குவதற்கும் எனக்கு உதவி செய்வாயாக. யா அல்லாஹ்! இறை நிராகரிப்பு, ஏழ்மை மற்றும் கப்ருடைய வேதனை ஆகியவைகளை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். |
| யாராவது உதவி செய்தால் | ஒருவருக்கு யாரின் மூலமாவது உதவி கிடைத்து, உதவியவருக்கு அவர் (ஜஸாகல்லாஹு கைரா) எனச் சொன்னால் அது முழுமையாக அவரைப் பாராட்டியதாக ஆகிவிடும், இதற்குப் பதிலாக அவரும் (ஜஸாகல்லாஹு கைரா) எனக் கூறுவார். | அல்லாஹ் உங்களுக்கு நற்கூலி வழங்குவானாக. |
| மழை பொழிவதைக் கண்டால் | இரண்டு அல்லது மூன்று முறை (அல்லாஹும்ம ஸைய்யிபன் நாபிஆ) (அல்லாஹ்வின் அருளால் எமக்கு மழை கிடைத்துள்ளது) எனச் சொல்லிவிட்டு தேவையான துஆக்களைக் கேட்பது நல்லது. ஏனெனில் மழை பொழியும்போது துஆ ஏற்றுக் கொள்ளப்படும். | இறைவா! பிரயோசனமான மழையாக இதனை ஆக்கிவிடுவாயாக |
| கடுமையாகக் காற்று வீசும் போது | (அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக கைரஹா வகைர மாபீஹா வகைர மா உர்ஸிலத் பிஹ், வஅஊது பிக மின் ஷர்ரிஹா வஷர்ரி மாபீஹா வஷர்ரி மா உர்ஸிலத் பிஹ்) | யா அல்லாஹ்! இதன் நலவுகளையும், இதிலுள்ள நலவுகளையும், அது எதனைக் கொண்டு அனுப்பப்பட்டதோ அதன் நலவுகளையும் நான் உன்னிடம் கேட்கின்றேன். அதே போன்று அதன் கெடுதிகளையும் அதிலுள்ள கெடுதிகளையும் அது எதனைக் கொண்டு அனுப்பப்பட்டுள்ளதோ அதன் கெடுதிகளை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். |
| தலைப் பிறையைக் கண்டால் | (அல்லாஹும்ம அஹில்லஹு அலைனா பில் யும்னி வல்ஈமான், வஸ்ஸலாமதி வல் இஸ்லாம், ஹிலால கைரின் வருஷ்தின் ரப்பீ வரப்புகல்லாஹ்) | அபிவிருத்தி நம்பிக்கை சாந்தி சமாதானம் ஆகியவைகளைக் கொண்டு நிறம்பிய நிலையில் இத்தலைப் பிறையை எங்களில் ஆக்கிவிடுவாயாக. இது நலவுக்கும் நேர்வழிக்குரிய தலைப்பிறை. எனது இரட்சகனும் உனது இரட்சகனும் அல்லாஹ்வே. |
| பயணம் போகும் ஒருவரை வழியனுப்பும் போது | (அஸ்தவ்திஉல்லாஹ தீனக வஅமானதக வகவாதீம அமலிக்) | உனது மார்க்கத்தையும், உனது அமானிதத்தையும் உனது கிரியைகளின் முடிவுகளையும் அல்லாஹ்விடத்தில் பாதுகாப்பாக வைக்கிறேன். |
| வழியனுப்புபவரைப் பார்த்து பிரயாணி | (அஸ்தவ்திஉகுமுல் லாஹல்லதீ லாதழீஉ வதாஇஉஹ்) | எவனிடத்தல் அடைக்கலம் வைத்தால் அடைக்கலம் வீணாக மாட்டாதோ அவ்வாறான அல்லாஹ்விடத்தில் உங்களைப் பாதுகாப்பாக விட்டுச் செல்கின்றேன். |
| தான் விரும்பும் அல்லது வெறுக்கும் ஒரு விடயத்தைக் கண்டால் | நபி (ஸல்) அவர்கள் தான் விரும்பும் ஒரு விடயத்தைக் கண்டால் "அல்ஹம்து லில்லாஹ் அல்லதீ பிநிஃமதிஹி ததிம்முஸ் ஸாலிஹாத்" எனக் கூறுவார்கள். தான் வெறுக்கும் ஒரு விடயத்தைக் கண்டால் " அல்ஹம்து லில்லாஹி அலா குல்லி ஹால்" எனக் கூறுவார்கள். | |

## பிரயாணத்தின் துஆ

(அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர் ஸுப்ஹானல்லதீ ஸக்கரலனா ஹாதா வமாகுன்னா லஹு முக்ரினீன், வஇன்னா இலா ரப்பினா லமுன்கலிபூன், அல்லாஹும்ம இன்னா நஸ்அலுக பீ ஸபரினா ஹாதா அல்பிர்ர வத்தக்வா வமினல் அமலி மாதர்ழா, அல்லாஹும்ம ஹவ்வின் அலைனா ஸபரனா ஹாதா வத்வி அன்னா பு.்.தஹு, அல்லாஹும்ம அன்தஸ்ஸாஹிபு பிஸ் ஸபரி வல்கலீபது பில் அஹ்ல், அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மின் வ.்.ஸாஇஸ்ஸபரி வகஆபதில் மன்ளரி வஸூஇல் முன்கலபி பில்மாலி வல்அஹ்ல்)

மேலும் திரும்பி வந்தபின் மேலுள்ளவைகளை ஓதுவதுடன் இதனையும் சேர்த்துக் கொள்வார் (ஆயிபூன தாஇபூன ஆபிதூன லிரப்பினா ஹாமிதூன்)

நாமோ சக்தியற்ற நலையில் எமக்கு இதனை வசப்படுத்தித் தந்த அல்லாஹ்வைத் துதிக்கின்றேன். நாம் எமது இரட்சகனிடத்தில் மீண்டும் செல்வோம். யா அல்லாஹ்! இப்பிரயாணத்தில் நலவுகளையும், பயபக்தியையும் உன்னிடத்தில் கேட்கின்றோம். அமல்களில் நீ பொருந்திக் கொள்ளக் கூடியவைகளைக் கேட்கின்றோம். யா அல்லாஹ்! எமது பிரயாணத்தை இலேசாக்கி, தூரத்தைச் சுருக்கி விடுவாயாக. யா அல்லாஹ்! நீயே பிரயாணத்தில் எனது தோழன், குடும்பத்தில் பிரதிநிதி. யா அல்லாஹ்! பிரயாணத்தின் கஷ்டங்கள், மற்றும் மோசமான காட்சிகள், சொத்திலும் குடும்பத்திலும் தீய முடிவுகளை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். **(திரும்பி வந்த பின் மேலுள்ளவற்றுடன்)** அல்லாஹ்வைப் புகழ்ந்த நிலையிலும் அவனை வணங்கியவர்களாகவும் மன்னிப்பு வேண்டியவர்களாகவும் மீண்டு வருகின்றோம்.

## படுக்கைக்குச் செல்லும் போது

(அல்லாஹும்ம அஸ்லம்து நப்ஸீ இலைக், வபவ்வழ்து அம்ரீ இலைக், வஅல்ஜ.்.து ளஹ்ரீ இலைக், ரஹ்பதன் வரக்.்.பதன் இலைக், லா மல்ஜஅ வலா மன்ஜா மின்க இல்லா இலைக, ஆமன்து பிகிதாபிகல்லதீ அன்தல்த வபினபிய்யிகல்லதீ அர்ஸல்த) (அல்ஹம்துலில்லாஹில்லதீ அத்அமனா வஸகானா வகபானா வஆவானா பகம் மிம்மன் லாகாபியலஹு வலா மு.்.வீ) (அல்லாஹும்ம கினீ அதாபக யவ்ம தப்அஸு இபாதக்) ஸுப்ஹானகல்லாஹும்ம ரப்பீ பிக வழ.்.து ஜன்பீ வபிக அர்பஉஹு இன் அம்ஸக்த நப்ஸீ ப.்.பிர்லஹா வஇன் அர்ஸல்தஹா பஹ்பள்ஹா பிமா தஹ்பளு பிஹீ இபாதகஸ் ஸாலிஹீன்)

இரு கைகளிலும் ஊதி, ஸூரா அல்பலக், அந்நாஸ் ஆகியவற்றை ஓதி, இரு கைகளாலும் உடம்பைத் தடவுவார். ஒவ்வொரு இரவும் ஸூரா அலிப் லாம் மீம் ஸஜ்தா, தபாரகல்லதீ (அல்முல்க்) இரண்டையும் ஓத வேண்டும்.

யா அல்லாஹ்! எனது ஆத்மாவை உனக்கு ஒப்படைத்து விட்டேன், எனது கருமங்களை உனக்குச் சாட்டிவிட்டேன், எனது முதுகை உன் பக்கம் சாய்த்து விட்டேன். உனது (தண்டனையைப்) பயந்த நிலையிலும், உனது (அருளை) ஆசை வைத்த நிலையிலும் நான் இருக்கின்றேன். உன் (தண்டனையை) விட்டும் ஒதுங்கும் தளமோ, பாதுகாப்புப் பெறும் தளமோ உன்னளவிலே அன்றி வேறில்லை. நீ இறக்கிய வேதத்தையும், நீ தூதராக அனுப்பிய நபியையும் நான் ஈமான் கொண்டேன். எமக்கு உணவளித்து பாணமளித்து எமக்குப் பாதுகாப்பும் தந்து எமக்கு இடமளித்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். எத்தனையோ பேர் பாதுகாப்பாளரின்றி, உதவியாளரின்றி இருக்கின்றனர். உனது அடியார்களை நீ எழுப்பும் நாளில் உன் தண்டனையை விட்டும் என்னைப் பாதுகாப்பாயாக. எனது இரட்சகனாகிய அல்லாஹ்வைத் துதிக்கின்றேன். உன் உதவி கொண்டு என் விலாவை நான் வைத்தேன், உன் உதவி கொண்டு அதனை உயர்த்துகின்றேன். எனது ஆத்மாவை நீ கைப்பற்றி விட்டால் (தூக்கம் சென்ற பின்) அதனை மன்னிப்பாயாக நீ அதனை விட்டு விட்டால் (விழிப்பின் பின்) உனது நல்லடியார்களைப் பாதுகாப்பது போன்று அதனையும் பாதுகாப்பாயாக.

| | | |
|---|---|---|
| தொழுகைக்காக வெளியாகிச் செல்லும் போது | (அல்லாஹும்மஜ்அல் பீ கல்பீ நூரா, வபீலிஸானீ நூரா, வபீ ஸம்ஈ நூரா, வபீ பஸரீ நூரா, வமின் பவ்கீ நூரா, வமின் தஹ்தீ நூரா, வஅன் யமீனீ நூரா, வஅன் ஷிமாலீ நூரா, வமின் அமாமீ நூரா, வமின் க.்.ல்பீ நூரா, வஜ்அல் பீநப்ஸீ நூரா, வஅ.்.ளிம்லீ நூரா,வஅள்ளிம் லீ நூரா, வஜ்அல் லீ நூரா, வஜ்அல்னீ நூரா, அல்லாஹும்ம.்.தினீ நூரா, வஜ்அல் பீ அஸபீ நூரா, வபீ லஹ்மீ நூரா, வபீ தமீ நூரா, வபீ ச.்.ரீ நூரா, வபீ பசரீ நூரா) | இறைவா! எனது உள்ளத்தில் பிரகாசத்தை தந்துவிடு. எனது நாவிலும், எனது கேள்வியிலும், எனது பார்வையிலும், எனக்கு மேலாலும், எனக்கு கீழாலும், எனது வலதாலும், எனது இடதாலும், என் முன்னாலும், என் பின்னாலும் பிரகாசத்தை ஏற்படுத்தி விடு. எனது ஆத்மாவிலும் பிரகாசத்தைத் தருவாயாக. எனக்கு பிரகாசத்தை அதிகப்படுத்துவாயாக. எனக்கு பிரகாசத்தைத் தந்து என்னையும் பிரகாசமாக ஆக்குவாயாக. எனது நரம்பிலும், தசையிலும், இரத்தத்திலும், முடியிலும், மேனியிலும் பிரகாசத்தை தந்தருள்வாயாக. |
| இஸ்திகாராவின் துஆ (பர்ளன்றி இரு ரக்அத்கள் நபில் தொழுதுவிட்டு இந்த துஆவை ஓதவும்) | (அல்லாஹும்ம இன்னீ அஸ்தகீருக பிஇல்மிக வஅஸ்தக்திருக பிகுத்ரதிக வஅஸ்அலுக மின் பழ்லிக் பஇன்னக தக்திரு வலாஅக்திர், வத.்.லமு வலா அ.்.லமு வஅன்த அல்லாமுல் குயூப், அல்லாஹும்ம இன் குன்த த.்.லமு (தான் செய்ய நினைக்கும் விடயத்தை நினைத்து) அன்ன ஹாதல் அம்ர கைருன்லீ பீதீனீ வமஆசீ வஆகிபதி அம்ரீ பக்துர்ஹுலீ வயஸ்ஸிர்ஹுலீ ஸும்ம பாரிக்லீ பீஹ், வஇன் குன்த த.்.லமு அன்ன ஹாதல் அம்ர ஷர்ருன்லீ பீதீனீ வமஆசீ வஆகிபதி அம்ரீ பஸ்ரிப்ஹு அன்னீ வஸ்ரிப்னீ அன்ஹு வக்துர்லியல் கைர ஹைஸுகான ஸும்ம ரழ்ழினீ பிஹ்) | இறைவா! உனது அறிவைக் கொண்டு உன்னிடத்தில் நலவைத் தேடுகிறேன். உனது சக்தியைக் கொண்டு உன்னிடத்தில் பலத்தை வேண்டுகின்றேன். நீ சக்தியுடையவன், நான் சக்தியற்றவன். நீ அறிந்தவன், நான் அறியாதவன், நீ மறைவானவற்றை மிக அறிந்தவன். இறைவா இக்கருமம் எனது மார்க்கத்திலும், எனது வாழ்க்கையிலும், எனது முடிவிலும் சிறந்ததாக இருப்பின் அதனை எனக்கு ஏற்பாடு செய்துவிடு பின்னர் எனக்கு அதில் அபிவிருத்தியை ஏற்படுத்துவாயாக. இக்கருமம் எனது மார்க்கத்திலும் எனது வாழ்க்கையிலும் எனது முடிவிலும் இம்மையிலும் மறுமையிலும் கெட்டதாக இருப்பின் அதனை என்னை விட்டும் திருப்பிவிடு, எனக்கு நலவை ஏற்பாடு செய்வாயாக, பின்னர் அதனைப் பொருந்திக் கொள்ளச் செய்வாயாக. |
| மய்யித்துக்காகப் பிரார்த்தித்தல் | **அல்லாஹும்ம.்.பிர்லஹு வர்ஹம்ஹு, வஆபிஹி வ.்.பு அன்ஹு வஅக்ரிம் நுத்லஹு வவஸ்ஸி.்.முத்கலஹு வக்ஸில்ஹு பில் மாஇ வஸ்ஸல்ஜி வல்பரத், வனக்கிஹி மினல் கதாயா கமா நக்கைத்தஸ் ஸௌவ்பல் அப்யல மினத் தனஸ், வஅப்தில்ஹு தாரன் கைரன் மின் தாரிஹி வஅஹ்லன் கைரன் மின் அஹ்லிஹி வதவ்ஜன் கைரன் மின் தவ்ஜிஹி வஅத்கில்ஹுல் ஜன்னத வஅஇத்ஹு மின் அதாபில் கப்ரி வமின் அதாபின்னார்.** | யா அல்லாஹ்! இவருக்குப் பிழை பொருத்து ரஹ்மத்துச் செய்வாயாக! உன்னிடத்தில் வந்திறங்கியுள்ள அந்த விருந்தாளியைக் கண்ணியப்படுத்துவாயாக! அவர் நுழைந்திருக்கும் இடத்தை விசாலமாக்குவாயாக. தண்ணீராலும் பணிக்கட்டியாலும் அவரைக் கழுவுவாயாக! வெள்ளைத் துணியை அசுத்தத்தை விட்டும் துப்பரவு செய்வது போல் பாவங்களை விட்டும் அவரைத் துப்பரவு செய்வாயாக. அவருக்கு அவர் இருந்த வீட்டை விடச் சிறந்த ஒரு வீட்டைக் கொடுப்பாயாக. அவரது குடும்பத்தை விடச் சிறந்த ஒரு குடும்பத்தைக் கொடுப்பாயாக! அவரது மனைவி (கணவனை) விடச் சிறந்த மனைவியை (கணவனை)க் கொடுப்பாயாக! அவரை சுவர்க்கத்தில் நுழையவைப்பாயாக. அவரை கப்ருடைய தண்டனையை விட்டும், நரகத்தின் தண்டனையை விட்டும் பாதுகாப்பாயாக! |

## இலாபகரமான வியாபாரம்

வல்ல அல்லாஹ் எல்லா சிருஷ்டிகளையும் விட மனிதனை சிறப்புமிக்கவனாக ஆக்கியுள்ளான், அவனுக்கு நாவைப் படைத்து பேசும் ஆற்றலை விசேடமாகக் கொடுத்துள்ளான். நாவு என்பது நலவு கெடுதி இரண்டிற்கும் பாவிக்கமுடியுமான ஒரு உறுப்பாகும், எனவே யார் அதனை நல்ல விடயத்தில் பயன்படுத்துகின்றாரோ அவருக்கு இவ்வுலகில் சந்தோஷத்தையும் சுவர்க்கத்தில் உயர்ந்த அந்தஸ்துகளையும் அது ஈட்டிக் கொடுக்கும், மாறாக யார் அதனை தீயவழியில் பயன்படுத்துகின்றாரோ அவருக்கு ஈருலகிலும் அது அழிவுகளைக் கொண்டுவந்து சேர்த்துவிடும். நேரத்தின் மூலம் பயன்பெறுவதற்கான சிறந்த முறை அதனை குர்ஆன் ஓதவதிலும், அல்லாஹ்வை திக்ரு செய்வதிலும் கழிப்பதாகும்.

அல்லாஹ்வை திக்ர் செய்வதன் சிறப்புப் பற்றி பல ஹதீஸ்கள் வந்துள்ளன, அவற்றில் சில பின்வருமாறு:

✷ "உங்கள் அமல்களில் மிகச்சிறந்ததும், உங்கள் இறைவனிடம் மிகத் தூய்மையானதும், உங்கள் அந்தஸ்துகளை மிக உயர்த்தக்கூடியதும், தங்கம் வெள்ளியை செலவு செய்வதை விட சிறப்பானதும், நீங்கள் உங்கள் விரோதியை (யுத்த களத்தில்) சந்தித்து உங்கள் கழுத்தை அவர்களும் அவர்களின் கழுத்தை நீங்களும் வெட்டுவதை விடவும் சிறந்ததுமான ஒன்றை சொல்லித்தரட்டுமா?" என நபியவர்கள் கேட்டபோது "ஆம் சொல்லித்தாருங்கள் நாயகமே!" என ஸஹாபாக்கள் கூறவே, நபியவர்கள் "அல்லாஹ்வை திக்ர் செய்வதாகும்" எனக் கூறினார்கள். (நூல்: திர்மிதி).

✷இறைவனை ஞாபகப்படுத்துபவனும், அவனை ஞாபகப்படுத்தாதவனும் உயிருள்ளவனையும், உயிரற்றவனையும் போன்றாகும். (புகாரி).

✷ அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: "எனது அடியான் என்னைப் பற்றி எண்ணும் விதத்திற்கேற்பவே நான் (அவனை எண்ணும் விடயத்தில்) நடந்துகொள்வேன். அவன் தனது மனதில் என்னை ஞாபகம் செய்தால் நானும் எனது மனதில் அவனை ஞாபகிப்பேன், என்னை அவன் ஒரு கூட்டத்தில் நினைவு கூர்ந்தால் அதைவிட சிறந்த கூட்டத்தில் நான் அவனை நினைவு கூர்வேன், அவன் என்பால் ஒரு சாண் நெருங்கி வந்தால் நான் அவன் பால் ஒரு முழம் நெருங்குவேன்" (புகாரி).

✷ \\முபர்ரிதூன்கள்' முந்திச் சென்றுவிட்டார்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறியதும் ஸஹாபாக்கள் "யார் அவர்கள்?" எனக் கேட்டார்கள். அதற்கு நபியவர்கள் \\அல்லாஹ்வை திக்ர் செய்யக்கூடிய ஆண்களும், பெண்களும்" எனப் பதிலளித்தார்கள். (முஸ்லிம்).

✷ நபியவர்கள் தனது தோழர் ஒருவருக்கு பின்வருமாறு உபதேசித்தார்கள்: "அல்லாஹ்வை எந்நேரமும் திக்ர் செய்வதன் மூலம் உன் நாவு தொடர்ந்தும் ஈரலிப்பானதாக இருக்கட்டும்"

### கூலிகள் பன்மடங்காகுதல்:

குர்ஆன் ஓதுவதற்கு கூலிகள் பன்மடங்காக்கப்படுவது போன்று ஏனைய நற்கருமங்களின் கூலிகளும் உளநம்பிக்கை, மனத்தூய்மை, அல்லாஹ்வின் மீது அன்பு வைத்தல் எனபனவற்றின் அளவிற்கு ஏற்ப பன்மடங்காக வழங்கக்கப்படுகின்றன. அதேபோன்று நாவினால் திக்ர் செய்வது மாத்திரமன்றி உள்ளத்தால் இறைவனை ஞாபகம் செய்வதற்கும் கூலிகள் இரட்டிப்பாக்கப்படுகின்றன.

இந்நிலை முழுமையானதாக ஏற்படும் போது அல்லாஹ் அவ்வடியானது பாவங்களை முழுமையாக மன்னித்து, கூலியையும் முழுமையாகக்

கொடுக்கின்றான். மேலும், இது முழுமையற்றதாக ஆகும் போது மேற்கூறப்பட்ட மற்ற விடயங்களும் முழுமையற்றதாகவே கிடைக்கும்.

**அல்லாஹ்வை திக்ர் செய்வதன் மூலம் ஏற்படும் பிரயோசனங்கள்:**

✷ அல்லாஹ்வின் அன்பையும் அவன் பால் நெருக்கத்தையும் உண்டுபண்ணும். இன்னும் அவனைப் பற்றிய கண்ணியத்தையும், அவன் என்னை கண்காணிக்கின்றான் என்ற எண்ணத்தையும் தோற்றுவிக்கும், மனிதன் திருந்தி அவன் பக்கம் மீள்வதற்கும், அவனை வழிப்பட்டு அமல் புரிவதற்கும் உதவியாய் இருக்கும். ✷ கவலைகளை நீக்கி சந்தோஷத்தையும் உளத் தூய்மை, தைரியம் போன்ற நற்குணங்களையும் உருவாக்கும். ✷ உள்ளத்தில் ஒருவித வெறுமை நிலை உண்டு, அதனை திக்ரின் மூலம் மாத்திரமே நிரப்ப முடியும். ✷ திக்ரின் மூலம் உள்ளத்தில் உள்ள நோய்கள் அகன்று அது சுத்தமடைவதுடன் வேறு எதனாலும் பெறமுடியாத ஓர் இன்பத்தையும் உள்ளம் உணர்கின்றது. மாறாக அல்லாஹ்வின் ஞாபகத்தை விட்டும் மறந்திருப்பது உளநோய்க்கான அறிகுறியாகும். ✷ ஒருவன் ஏதேனும் ஒரு பொருளை விரும்பி விட்டால் அதனை அதிகம் ஞாபகப்படுத்துவதைப் போன்று திக்ரின் மூலம் அல்லாஹ்வின் மீதுள்ள அளவுகடந்த அன்பு வெளிப்படுகின்றது. மேலும், திக்ர் செய்தல் குறைவாக இருப்பது நயவஞ்சகத் தன்மையின் அடையாளமாகும். ✷ ஒரு அடியான் தனது செழிப்பான காலத்தில் அல்லாஹ்வை நினைவு கூர்ந்தால் அவனுக்குக் கஷ்:டம் ஏற்படும் போது அல்லாஹ் அவனை நினைவு கூருவான். ✷ அல்லாஹ்வின் வேதனையை விட்டும் பாதுகாப்புப் பெறுவதற்கான காரணமாகவும் \ஸகீனத்| எனும் மன நிம்மதியும், அமைதியான சூழலும் உருவாவதற்கும் அல்லாஹ்வின் அன்பும், வானவர்களின் பாவமன்னிப்புத் தேடலும் கிடைப்பதற்கு உதவியாகவும் அது அமைந்திருக்கின்றது. ✷ புறம் பேசுதல், கோள் சொல்லல், பொய், வீண் பேச்சு போன்ற தடுக்கப்பட்ட காரியங்களில் நாவு ஈடுபடாது திக்ரு பாதுகாக்கின்றது. ✷ திக்ர் செய்வது வணக்க வழிபாடுகளில் மகச் சிறந்ததும் நாவுக்கு மிக இலேசான அமலுமாகும். மேலும், செய்யப்படும் திக்ருகளின் அளவு சுவர்க்கத்தில் மரங்கள் நடப்படுகின்றன. ✷ திக்ர் உலகத்திலும் மண்ணறையிலும் மறுமையிலும் அதனைச் செய்தவருக்கு பிரகாசமளிக்கின்றது. இன்னும் அவனுக்கு உள்ளத்தில் இன்பத்தையும் முகத்தில் அழகையும் கௌரவத்தையும் ஏற்படுத்துகின்றது. ✷ திக்ரின் மூலம் அல்லாஹ்வின் பாவமன்னிப்பும் வானவர்களின் துஆவும் கிடைக்கின்றது, இன்னும், அல்லாஹ் திக்ர் செய்பவர்களைப் பற்றி வானவர்களிடம் பெருமை பாராட்டுகின்றான். ✷ அமல் செய்யக்கூடியவர்களில் மிகச் சிறந்தவர் அல்லாஹ்வை அதிகம் திக்ர் செய்பவராகும். நோன்பாளிகளில் மிகச் சிறந்தவர் நோன்பிருக்கும் நிலையில் அதிகம் திக்ர் செய்பவராகும். ✷ திக்ர் கஷ்டங்களை இலகுபடுத்தும், அத்துடன் வசதிவாய்ப்பை உருவாக்கி உடம்பைப் பலப்படுத்தும்.

குறிப்பு: இப்னு தைமியா (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: “மீனுக்குத் தண்ணீரைப் போன்று உள்ளத்திற்கு திக்ர் அவசியமாகும், தண்ணீரை விட்டும் வெளியானால் மீனின் நிலை என்னவாகும்?"

# நாளாந்தம் ஓதவேண்டிய காலை மாலை துஆக்கள்

| துஆக்களும் ஓதல்களும் | | நேரமும் எண்ணிக்கையும் | சிறப்பும் பலனும் |
|---|---|---|---|
| ஆயதுல் குர்ஸிய்[1] | | பர்ளான தொழுகைகளுக்கு ப்பின் காலையும் மாலையும் ஒரு தடவை | ஷைத்தான் நெருங்க மாட்டான், சுவர்க்கம் நுழையக் காரணம் |
| ஸூரதுல் பகராவின் கடைசி இரு வசனங்கள்[1] | | மாலை அல்லது தூங்க முன் ஒரு தடவை | அனைத்து ஆபத்துகளை விட்டும் பாதுகாப்பு |
| இஹ்லாஸ், பலக் , அந்நாஸ் ஆகிய ஸூராக்கள் | | காலை மாலை 3 தடவைகள் | அனைத்திற்கும் போதுமானது |
| அல்லாஹ்வின் பெயர் கொண்டு நான் (ஆரம்பிக்கின்றேன்.) அவனது பெயருடன் பூமியிலோ, வானத்திலோ எப்பொருளும் கெடுதி செய்திட முடியாது. அவன் யாவற்றையும் சேட்பவனும், அறிந்தவனும் ஆவான். | (பிஸ்மில்லாஹில்லதீ லாயழுர்ரு மஅஸ்மிஹீ ஷைஉன் பில்அர்ழி வலாபிஸ்ஸமாஇ வஹுவஸ் ஸமீஉல் அளீம்) | காலை மாலை 3 தடவைகள் | திடீர் ஆபத்துகளோ ஏனைய ஆபத்துகளோ ஏற்படாது |
| அல்லாஹ்வின் பூரணமான வார்த்தைகளைக் கொண்டு அவன்படைத்த அனைத்துப் படைப்புக்களின் தீமைகளை விட்டும் நான் பாதுகாப்புத் தேடுகின்றேன். | (அஊது பிகலிமாதில்லாஹித் தாம்மாதி மின்ஷர்ரி மாகலக்) | மாலை 3 தடவைகள், ஓரிடத்தில் தங்குவதற்குப் போய்ச் சேரும் போது | ஓதப்படும் இடங்களில் கெடுதியை விட்டும் பாதுகாப்பு |
| அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்தவனாக அவன் பெயர் சொல்லி (வெளியாகின்றேன்.) நன்மைகளைச் செய்வதற்கோ பாவங்களைத் தவிர்ந்து கொள்ளவோ அல்லாஹ்வின் உதவியின்றி எந்தச் சக்தியும் இல்லை. | (பிஸ்மில்லாஹி தவக்கல்து அலல்லாஹ், லாஹவ்ல வலாகுவ்வத இல்லா பில்லாஹ்) | வீட்டிலிருந்து வெளியேறும் போது | திரும்பி வரும் வரை இறைவனின் பாதுகாப்பு |
| அல்லாஹ் எனக்குப் போதுமானவன். அவன் மீதே நான் பொறுப்புச் சாட்டுகின்றேன். அவன் கன்னியமான அர்ஷின் நாயனாவான். | (ஹஸ்பியல்லாஹு லாஇலாஹ இல்லாஹு அலைஹி தவக்கல்து வஹுவ ரப்புல் அர்ஷில் அளீம்) | காலை மாலை 7 தடவைகள் | ஈருலகக் கவலை களை அல்லாஹ் போக்கு கின்றான் |
| நான் அல்லாஹ்வை நாயனாகவும், இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மது (ஸல்) அவர்களை நபியாகவும், தூதராகவும் ஏற்றுக்கொண்டேன். | (ரழீது பில்லாஹி ரப்பன் வபில் இஸ்லாமி தீனன் வபிமுஹம்மதின் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம நபிய்யன் வரஸூலா) | காலை மாலை 3 தடவைகள் | ஓதியவனைத் திருப்திப் படுத்துவது அல்லாஹ்வின் பொறுப்பு |

[1] இஇஅதனை ஓதுவதற்காகவும், இதன் விளக்கத்தைப் பெறவும் 189 ஆம் பக்கங்களைப் பார்க்கஇஅ

| | | | |
|---|---|---|---|
| யா அல்லாஹ் உன்னைக் கொண்டே நாம் காலைப் பொழுதை அடைந்தோம், உன்னைக் கொண்டே மாலைப் பொழுதையும் அடைந்தோம், மேலும் உன்னைக் கொண்டே நாம் உயிர் வாழ்கின்றோம். உன்னைக் கொண்டே நாம் மரணமாவோம். மேலும், நாம் எழுப்பப்பட்டு ஒன்று சேர்க்கப்படுவதும் உன்பக்கமே. | (அல்லாஹும்ம பிக அஸ்பஹ்னா வபிக அம்ஸைனா வபிக நஹ்யா வபிக நமூது வஇலைகந் நுஷூர்) (மாலையில்) (அல்லாஹும்ம பிக அம்ஸைனா வபிக அஸ்பஹ்னா வபிக நஹ்யா வபிக நமூது வஇலைகல் மஸீர்) | காலை மாலை 3 தடவைகள் | ஓதும்படி ஆர்வமூட்டப் பட்டுள்ளது |
| நாம் இஸ்லாம் மார்க்கத்தையும், ஏகத்துவக் கலிமாவையும் எங்கள் நபி முஹம்மது (ஸல்) அவர்களது மார்க்கத்தையும், மேலும் எங்கள் தந்தை இப்றாஹீம் (அலை) அவர்களுடைய மார்க்கத்தையும் ஏற்றவர்களாக காலை நேரத்தை அடைந்தோம். அவர் (இப்றாஹீம் (அலை)) உண்மையான மார்க்கத்தின் பால் சாய்ந்தவராகம், இறைவனுக்குக் கீழ்படிந்தவராகவும் இருந்தார். அவர் இணை வைப்பவர்களில் ஒருவராக இருக்கவில்லை. | (அஸ்பஹ்னா அலா பித்ரதில் இஸ்லாம், வகலிமதில் இக்லாஸ், வதீனி நபிய்யினா முஹம்மதின் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், வமில்லதி அபீனா இப்றாஹீம அலைஹிஸ்ஸலாம ஹனீபன் முஸ்லிமன் வமாகான மினல் முஷ்ரிகீன்) | காலையில் ஒரு தடவை | நபியவர்கள் ஓதிவந்துள்ளார்கள் |
| யாஅல்லாஹ்! இந்தக் காலைப் பொழுதில் என்மீதோ அல்லது உன்படைப்புக்களில் ஒருவர் மீதோ நீ அருட்கொடை புரிந்திருந்தால் அது உன்னிடமிருந்து கிடைத்ததாகும். நீ தனித்தவன், உனக்கு யாதொரு இணையுமில்லை, புகழ் அனைத்தும் உனக்கே, எல்லா நன்றியும் உனக்குரியதாகும். | (அல்லாஹும்ம மாஅஸ்பஹபீ மின் நி'.மதின் அவ்பிஅஹதின் மின் கல்கிக், பமின்க வஹ்தக லாஷரீகலக், பலகல் ஹம்து வலகஷ் ஷுக்ர்) (மாலையில்) (அல்லாஹும்ம மா அம்ஸாபீ மின் நி'.மதின் அவ் பிஅஹதின்........) | காலை மாலை 1 தடவை | இரவு பகலிற்கான நன்றியை நிறைவேற்றிய தற்குச் சமன் |
| நீயே வணக்கத்துக்குரிய ஏக இறைவன். உன்னைத்தவிர வணக்கத்துக்குரிய நாயன் வேறில்லை. முஹம்மது நபி (ஸல்) உனது அடியாரும், உனது தூதருமாவார்கள் என்பதற்கு உன்னையும் உனது அர்ஷை சுமக்கும் மலக்குகளையும், மற்றும் இதர மலக்குகளையும், உன்னுடைய எல்லாப் படைப்பினங்களையும் சாட்சியாக வைத்தவனாக காலைப் பொழுதை அடைந்தேன். (மாலையில்.......... மாலைப் பொழுதை அடைந்தேன்) | (அல்லாஹும்ம இன்னீ அஸ்பஹ்து உஷ்ஹிதுக வஉஷ்ஹிது ஹமலத அர்ஷிக வமலாஇகதக வஜமீஅ கல்கிக பிஅன்னக அன்தல்லாஹு லாஇலாஹ இல்லாஅன்த வஅன்ன முஹம்மதன் அப்துக வரஸூலுக்) (மாலையில்) (அல்லாஹும்ம இன்னீ அம்ஸைது உஷ்ஹிதுக வஉஷ்ஹிது....) | காலை மாலை 4 தடவை கள் | நரகத்தை விட்டும் விடுதலை |

| | | | |
|---|---|---|---|
| யா அல்லாஹ்! வானங்களையும், பூமியையும் படைத்தவனே! மறைவானவை வெளிப்படையானவை அனைத்தையும் அறிந்தவனே! ஒவ்வொரு பொருளுடையவும் இரட்சகனாகவும், உரிமையாளனாகவும் இருக்கின்றவனே! வணக்கத்துக்குரிய நாயன் உன்னைத்தவிர வேறில்லை என நான் சாட்சி சொல்கின்றேன். எனது உள்ளத்தின் தீமையை விட்டும், ஷைத்தானின் தீமையை விட்டும், அவனுக்கு இணைவைப்பதை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகின்றேன். நான் எனக்குத் தீமை செய்வதை விட்டும் அல்லது அத்தீங்கை வேறொருவருக்குச் செய்வதை விட்டும் நான் பாதுகாப்புத் தேடுகின்றேன். | (அல்லாஹும்ம பாதிரஸ்ஸமாவாதி வல்அர்ழி ஆலிமல்கைபி வஷ்ஷஹாததி, ரப்ப குல்லி ஷைஇன் வமலீகஹு, அஷ்ஹது அன் லாஇலாஹ இல்லாஅன்த, அஊதுபிக மின்ஷர்ரி நப்ஸீ வமின் ஷர்ரிச் ஷைதானி வஷிர்கிஹீ வஅன் அக்தரிப அலா நப்ஸீ ஸூஅன் அவ் அஜுர்ரஹு இலா முஸ்லிம்) | காலை மாலை மற்றும் தூங்கும் போது 1 தடவை | ஷைத்தானுடைய வீண் சந்தேகங்களை விட்டும் பாதுகாப்பு |
| யாஅல்லாஹ்! துன்பம் துயரத்திலிருந்தும், கவலைகளிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகின்றேன். இயலாமை, சோம்பல் என்பவற்றிற்கும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகின்றேன். மேலும், கோழைத்தனம், கஞ்சத்தனம்,கடன் மிகைத்தல், மனிதர்களின் ஆதிக்கம் ஆகியவற்றிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகின்றேன். | (அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மினல் ஹம்மி வல்ஹஸனி, வஅஊதுபிக மினல் அஜ்ஸி வல்கஸல், வஅஊதுபிக மினல் ஜுப்னி வல்பு.்.க்ல், வஅஊதுபிக மின் கலபதித் தைனி வகஹ்ரிர் ரிஜால்) | காலை மாலை 1 தடவை | கவலைகள் நீங்கவும் கடன் நிறைவேறவும் |
| யாஅல்லாஹ்! நீயே, எனது இரட்சகன். உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை. நீ என்னைப் படைத்தாய். நான் உன் அடிமை. மேலும், முடியுமானவரை நான் உனக்களித்த உடன்படிக்கையிலும், வாக்கிலும் நான் நிலைத்திருக்கின்றேன். நான் செய்தவற்றில் தீமையானவற்றிலிருந்து உன்னிடம் பாதுகாப்புத் தேடுகின்றேன். நீ என் மீது சொரிந்த அருளை ஏற்றுக்கொள்கின்றேன். என்னை மன்னித்து அருள்புரிவாயாக. பாவங்களை மன்னிப்பவன் உன்னைத்தவிர வேறுயாருமில்லை. | (அல்லாஹும்ம அன்த ரப்பீ லாஇலாஹ இல்லாஅன்த கலக்தனீ வஅனஅப்துக வஅன அலா அஹ்திக வவ.்.திக மஸ்தத.்.து, அஊதுபிக மின்ஷர்ரி மாஸன.்.து அபூஉலக பினி.்.மதிக அலய்ய வஅபூஉ லக பிதன்பீ ப.்.பிர்லீ பஇன்னஹு லாய.்.பிருத் துனூப இல்லா அன்த) | காலை மாலை 1 தடவை | ஒருவர் பகலில் பூரண நம்பிக்கையுடன் ஓதி அப்பகலிலேயே அல்லது இரவில் ஓதி அதே இரவிலேயே மரணித்தால் அவர் சுவர்க்கவாதி யாவார் |
| உயிர் ஜீவியே! தன்னில் நிலைத்து நிற்பவனே! உனது அருளின் பொருட்டால் உன்னிடம் உதவி தேடுகின்றேன். என் கருமங்கள் அனைத்தையும் சீராக்கி விடுவாயாக. ஒரு நொடிப்பொழுதும் கூட என்னை என் பொறுப்பில் விட்டுவிடாதே. | (யாஹய்யு யாகய்யூம் பிரஹ்மதிக அஸ்தகீஸ், அஸ்லிஹ்லீ ஷ.்.னீ குல்லஹு, வலாதகில்னீ இலாநப்ஸீ தர்பத ஐன்) | காலை மாலை 1 தடவை | நபியவர்கள் தனது மகள் பாத்திமா (ரலி) அவர்களுக்கு ஓதுமாறு உபதேசித்தது |

| | | | |
|---|---|---|---|
| யா அல்லாஹ்! எனது உடலிலும், எனது கேள்வியிலும், எனது பார்வையிலும் எனக்கு சுகத்தைத் தருவாயாக. வணக்கத்துக்குரிய நாயன் உன்னைத் தவிர வேறில்லை. யா அல்லாஹ்! இறை நிராகரிப்பை விட்டும் வறுமையை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகின்றேன். மேலும், கப்ருடைய வேதனையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். | (அல்லாஹும்ம ஆபினீ பீ ஸம்ஈ, அல்லாஹும்ம ஆபினீ பீ பஸரீ, அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மினல்குப்ரி வல்பக்ர், அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மின் அதாபில் கப்ரி லாஇலாஹ இல்லா அன்த்) | காலை மாலை 3 தடவைகள் | நபியவர்கள் ஓதியுள்ளார்கள் |
| வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சி அதிகாரம் அனைத்தும் அவனுக்குரியது. புகழனைத்தும் அவனுக்கே. அவன் அனைத்தின் மீதும் சக்தியுடையவன். | (லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு லஹுல்முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலாகுல்லி ஷைஇன் கஃதீர்) | காலை மாலை 10 தடவைகள் | ஓர் அடிமையை உரிமையிட்டதற்கு சமன், 10 நன்மைகள் எழுதப்படும், 10 பாவங்கள் மன்னிக்கப்படும், 10 அந்தஸ்துகள் உயர்த்தப்படும், ஷைத்தானை விட்டும் பாதுகாப்புக்கிடைக்கும் |
| அல்லாஹ்வின் படைப்பினங்களின் எண்ணிக்கையளவிற்கும், அவனது திருப்தியளவிற்கும், அவனது அர்ஷின் சுமையளவிற்கும், அவனது வார்த்தைகளின் மையளவிற்கும் நான் அவனைப் புகழ்வதுடன் தூய்மைப் படுத்துகின்றேன். | (ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹீ அதத கல்கிஹீ வரிழா நப்ஸிஹீ வதினத அர்ஷிஹீ வமிதாத கலிமாதிஹ்) | காலை 3 தடவைகள் | காலை முதல் பகல் வரை இறைவனை திக்ர் செய்வதை விட சிறப்பு |

# அதிகமான நன்மைகளை ஈட்டித்தரும் சொற்களும், நன்மைகளும்.

| | நன்மைக்குரிய சொற்களும், செயல்களும், பொருளும் | அவற்றிற்கு ஹதீஸில் வந்துள்ள கூலிகள், சிறப்புகள் |
|---|---|---|
| 1 | *(லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு லஹுல்முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலாகுல்லி ஷைஇன் க.்தீர்)* **வணக்கத்துக்குரிய நாயன் அல்லாஹ்வைத் தவிர யாரும் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை கிடையாது. அவனுக்கே ஆட்சி, அவனுக்கே புகழ். அவன் சகல வஸ்துக்கள் மீதும் சக்தி பெற்றவன்.** | யார் இதனைத் தினமும் 100 விடுத்தம் ஓதிவருவாரோ அவர் 10 அடிமைகளை உரிமையிட்டவர் போலாவார். மேலும், அவருக்கு 100 நன்மைகள் எழுதப்பட்டு 100 பாவங்கள் மன்னிக்கப்படும். அது அன்றைய தினம் மாலை வரை அவருக்கு ஷைத்தானை விட்டும் பாதுகாப்பாகவும் அமையும். இவர் கூறியதை விட அதிகமாக ஒருவர் கூறினாலே அன்றி அவருடைய சிறப்பை அடைந்து கொள்ளமுடியாது. |
| 2 | (ஸுப்ஹானல்லாஹில் அளீம் வபிஹம்திஹீ) | யார் இதனைக் கூறுகின்றாரோ அவருக்கு சுவர்க்கத்தில் ஒரு பேரீச்சமரம் நட்டப்படும். |
| 3 | (ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹீ) **இன்னும்** (ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹீ ஸுப்ஹானல்லாஹில் அளீம்) | யார் ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹீ என்று காலையிலும், மாலையிலும் 100 விடுத்தம் ஓதிவருவாரோ கியாமத் நாளில் இவரைப்போன்று அல்லது இவரைவிட அதிகம் கூறியவரைத் தவிர யாரும் இவரை நன்மையால் முந்தமுடியாது. அவரது பாவங்கள் கடல் நுரையளவு இருந்தாலும் மன்னிக்கப்படும். நாவுக்கு மிக இலேசானதும், மீஸான் தராசில் பாரமானதும், ரஹ்மானுக்கு மிக விருப்பமானதும் (ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹீ ஸுப்ஹானல்லாஹில் அளீம்) என்ற இரு கலிமாக்களுமாகும். |
| 4 | (லாஹவ்ல வலாகுவ்வத இல்லா பில்லாஹ்) | உமக்கு சுவர்க்கத்தின் பொக்கிஷங்களில் ஒன்றை அறியத்தரட்டுமா? என வினவியபோது, ஆம் என்றேன். அப்போது நபியவர்கள் இந்த திக்ரைக் கூறினார்கள். |
| 5 | **சுவனத்தைக் கேட்டலும் நரகத்தை விட்டும் பாதுகாப்புக் கோரலும்** | யாராவது அல்லாஹ்விடம் சுவனத்தை 3 முறை கேட்டால் "அல்லாஹ்வே அவனை சுவர்க்கத்தில் நுழைவித்துவிடு" என சுவனம் சொல்லும். அதே போன்று யாராவது நரகை விட்டும் 3 விடுத்தம் பாதுகாப்புக் கோரினால் "இறைவா இவனை நரகை விட்டும் பாதுகாத்து விடு" என நரகம் சொல்லும். |
| 6 | **கப்பாரதுல் மஜ்லிஸ்** | ஒரு சபையில் உட்கார்ந்து அதில் சப்தம் அதிகரித்து விட்டால் யார் அச்சபையை விட்டு எழுந்துசெல்ல முன் இந்த துஆவை ஓதுவாராகில் அச்சபையில் அவரால் நிகழ்ந்த தவறுகள் மன்னிக்கப்படுகின்றன. |
| 7 | **கஹ்ப் ஸூராவின் ஆரம்ப 10 வசனங்களின் சிறப்பு** | யார் கஹ்ப் ஸூராவின் ஆரம்ப 10 வசனங்களைப் பாடமிடுகின்றாரோ அவர் தஜ்ஜாலை விட்டும் பாதுகாக்கப்படுவார். |
| 8 | **நபி (ஸல்) மீது ஸலவாத் சொல்லல்** | யார் என் மீது ஒருமுறை ஸலவாத் கூறுகிறாரோ அவர் மீது அல்லாஹ் 10 விடுத்தங்கள் ஸலவாத் கூறுகின்றான். மேலும் 10 பாவங்கள் மன்னிக்கப்பட்டு 10 பதவிகள் உயர்த்தப்படுகின்றன. (மற்றுமோர் அறிவிப்பில்) 10 நன்மைகள் எழுதப்படுகின்றன. |
| 9 | **குர்ஆனின் சில ஸூராக்களையும் வசனங்களை ஓதுவதின் சிறப்பு** | யாராவது இரவிலும், பகலிலும் குர்ஆனில் 50 வசனங்களை ஓதினால் அவர் மறதியாளர்களில் நின்றும் எழுதப்படமாட்டார். யார் 100 வசனங்களை ஓதுகிறாரோ அவர் வணக்கவாளர்களில் நின்றும் எழுதப்படுவார். யார் 200 வசனங்களை ஓதுகிறாரோ குர்ஆன் அவருக்கெதிராக மறுமை நாளில் வாதிடமாட்டாது. யார் 500 வசனங்களை ஓதுகிறாரோ அவருக்குக் கூலியாக ஒரு குவியல் (நன்மை) வழங்கப்படும். (குல்ஹுவல்லாஹ்) ஸூரா குர்ஆனில் 1.்.3 க்குச் சமனாகும். |
| 10 | **அதான் கூறுபவர்களின் கூலி** | அதான் கூறுபவரின் சப்தத்தைக் கேட்கும் ஜின்கள், மனிதர்கள், மற்றும் அனைத்தும் அவருக்காக மறுமையில் சாட்சி சொல்வார்கள். முஅத்தின்கள் மறுமையில் கழுத்துகள் நீண்டவர்களாக இருப்பார்கள். |

| | | |
|---|---|---|
| 11 | அதானுக்குப் பதில் சொல்வதும் அதற்குப் பின்னர் துஆக் கேட்பதும் | யார் அதான் சொல்லி முடிந்தபின் (அல்லாஹும்ம ரப்ப ஹாதிஹித் தஃவதித் தாம்மஹ், வஸ்ஸலாதில் காஇமஹ், ஆதி முஹம்மதனில் வஸீலத வல்பழீலஹ், வப்அஸ்ஹு மகாமன் மஹ்மூதனில்லதீ வஅத்தஹ்) என்று துஆக் கேட்பாரோ அவருக்கு நபிகளாரின் சிபாரிசு கடமையாகிவிட்டது. (இந்தப் பூரணமான அழைப்பினதும், நிலை நாட்டப்படும் தொழுகையினதும் இரட்சகனே! முஹம்மது நபி (ஸல்) அவர்களுக்கு வஸீலா என்ற பதவியையும், சிறப்பையும் கொடுத்து நீ வாக்களித்த புகழப்பட்ட இடத்தையும் வழங்குவாயாக.) |
| 12 | வுழூவைப் பூரணமாகச் செய்தல் | யார் வுழூவைப் பூரணமாகச் செய்கின்றாரோ அவரது பாவங்கள் அவரது உடம்பிலிருந்து வெளியாகிவிடுகின்றன. அவரது நகங்களுக்குக் கீழால் இருந்து கூட பாவங்கள் வெளியாகிவிடுகின்றன. |
| 13 | வுழூவிற்குப் பின்னர் ஓதும் துஆ | யார் வுழூவைப் பூரணமாகவும், அழகாகவும் செய்து பின்னர் (அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹு வஅன்ன முஹம்மதன் அப்துல்லாஹி வரஸூலுஹ்) (வணக்கத்துக்குரிய நாயன் அல்லாஹ்வைத் தவிர யாரும் இல்லை. முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியானும் தூதருமாவார்) என்று கூறுகின்றாரோ அவருக்காக சுவனத்தின் 8 கதவுகளும் திறக்கப்பட்டு அவர் நாடியதால் அதில் நுழைவார். |
| 14 | வுழூவிற்குப் பின்னர் இரண்டு ரக்அத்கள் தொழுதல் | எந்த முஸ்லிம் அழகிய முறையில் வுழூச் செய்த பின்னர் இரு ரக்அத்கள் ஒழுங்காகத் தொழுகின்றாரோ அவருக்கு சுவர்க்கம் கடமையாகிவிடும். |
| 15 | மஸ்ஜித்களுக்கு அதிகமாக நடந்து செல்லல் | யார் ஜமாஅத் நடைபெறும் மஸ்ஜிதுக்குச் செல்கின்றாரோ அவரது ஒரு எட்டு ஒரு பாவத்தை அழிக்கின்றது. அடுத்த எட்டுக்காக ஒரு நன்மை எழுதப்படுகின்றது. இவ்வாறே செல்லும்போதும், திரும்பிவரும்போதும் நன்மைகள் வழங்கப்பட்டு பாவங்கள் அழிக்கப்படுகின்றன. |
| 16 | நேரகாலத்துடன் ஜும்ஆத் தொழுகைக்காகச் செல்லல் | யார் ஜும்ஆத் தினத்தன்று குளித்து நேரகாலத்துடன் வாகனத்தில் ஏறாது நடந்து சென்று இமாமுக்கு சமீபத்தில் உட்கார்ந்து வீணான பேச்சுக்களில் ஈடுபடாமல் இமாம் சொல்வதை செவிதாழ்த்திக் கேட்கின்றாரோ அவரது ஒவ்வொரு எட்டுக்கும் பதிலாக ஒருவருடம் நோன்பு நோற்று, நின்று வணங்கிய நன்மை வழங்கப்படும். ஒருமனிதர் குளித்து, முடியுமான அளவு துப்பரவாகி, எண்ணெய்யிட்டு, மணம் பூசி வீட்டிலிருந்து வெளியே வந்து (பள்ளிவாசலுக்குச் சென்று) இருவருக்கு மத்தியில் பிரித்துக்கொண்டு கடந்து செல்லாமல் போய் நின்று அவனுக்கு எழுதப்பட்ட அளவு தொழுதுவிட்டு இமாம் கூறுவதைக் காது தாழ்த்திக் கேட்பாராயின் அந்த வாரத்திற்கும் அடுத்த வாரத்திற்கும் இடையிலான பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடும். |
| 17 | இஹ்ராம் தக்பீரை எத்திக்கொள்ளல் | யார் இஹ்ராம் தக்பீரின் போதே ஜமாஅத்துடன் சேர்ந்து 40 நாட்கள் அல்லாஹ்வுக்காகத் தொழுகின்றாரோ அவருக்கு இரு உரிமைச் சீட்டுகள் எழுதப்படுகின்றன. (1) நரகத்தை விட்டும் விடுதலை. (2) நயவஞ்சகத்தை விட்டும் விடுதலை. |
| 18 | ஜமாஅத்துடன் பர்ளான தொழுகையை நிறைவேற்றல் | ஜமாஅத்துடன் தொழுவது தனித்துத் தொழுவதைவிட 27 மடங்கு சிறப்பில் கூடியதாகும். |
| 19 | இஷா, பஜ்ர் தொழுகைகளை ஜமாஅத்துடன் நிறைவேற்றல் | யார் இஷாத் தொழுகையை ஜமாஅத்துடன் தொழுகின்றாரோ அவர் பாதியிரவு நின்று வணங்கியவர் போன்றாவார். யார் ஸுப்ஹுத் தொழுகையையும் ஜமாஅத்துடன் தொழுகின்றாரோ அவர் இரவு முழுவதும் நின்று வணங்கியவர் போன்றாவார். |
| 20 | முதல் வரிசையில் தொழுவது | அதான் சொல்வதிலும், முதல் வரிசையில் நின்று தொழுவதிலும் இருக்கும் நன்மைகளை மனிதர்கள் அறிவார்களானால், பின்பு சீட்டுப்போட்டுத்தான் அதைப் பெற்றுக்கொள்ள முடியும் என்றிருந்தாலும் அதற்காகச் சீட்டுப்போட்டுக்கொள்வார்கள். |
| 21 | வழமையான ஸுன்னத்தான தொழுகைகளைப் பேணுவதன் சிறப்பு | யாராவது ஒருவர் இரவிலும், பகலிலும் 12 ரக்அத்கள் தொழுதுவருவாராயின் அவருக்கு சுவர்க்கத்தில் ஒரு வீடு கட்டப்படும். (அவை, பஜ்ருக்கு முன் 2, ளுஹருக்கு முன் 4, பின் 2, மஃறிபுக்குப் பின் 2, இஷாவுக்குப் பின் 2 என்பனவாகும்.) |

| | | |
|---|---|---|
| 22 | நபில் தொழுகைகளை அதிகமாகத் தொழுவதும் அதை மறைத்துக் கொள்வதும் | நீ அதிகமாகத் தொழுவாயாக. ஏனெனில் நீ அல்லாஹ்வுக்காகச் செய்யக்கூடிய ஒவ்வொரு ஸுஜூதுக்கும் அல்லாஹ் உனக்கு ஒரு பதவியை உயர்த்தி ஒரு பாவத்தை மன்னித்துவிடுகிறான். |
| 23 | பஜ்ருடைய (முந்திய) ஸுன்னத்தும், பஜ்ர் தொழுகையும் | பஜ்ருடைய முந்திய 2 ரக்அத்களும் இவ்வுலகம், இவ்வுலகிலுள்ள பொருட்கள் அனைத்தைவிடவும் சிறந்ததாகும். யாராவது ஸுபஹ் தொழுதுவிட்டால் அவன் அல்லாஹ்வின் பொறுப்பிலாகிவிடுகின்றான். |
| 24 | ளுஹாத் தொழுகை | உங்களில் ஒவ்வொருவரும் அவரது மூட்டுக்களுக்காக ஸதகாக் கொடுப்பது அவசியமாகும். (ஸுப்ஹானல்லாஹ்) என்பது ஸதகாவாகும். (அல்ஹம்துலில்லாஹ்) என்பதும் ஸதகாவாகும். (லாஇலாஹ இல்லல்லாஹ்) என்பதும் ஸதகாவாகும். (அல்லாஹு அக்பர்) என்பதும் ஸதகாவாகும். தீமையைத் தடுப்பதும் ஸதகாவாகும். இவை அனைத்துக்கும் பதிலாக ளுஹா நேரத்தில் 2 ரக்அத்கள் தொழுவது போதுமானதாகும். |
| 25 | தொழுமிடத்தில் இருந்து அல்லாஹ்வை திக்ரு செய்தல் | உங்களில் ஒருவர் வுழூ முறியாத நிலையில் தொழுமிடத்தில் உட்கார்ந்திருக்கும் காலமெல்லாம் வானவர்கள் உங்களுக்காகப் பிரார்த்தனை புரிகின்றனர். இறைவா! இவரது பாவத்தை மன்னிப்பாயாக, இவருக்குக் கருணை காட்டுவாயாக என்று பிரார்த்திக்கின்றனர். |
| 26 | பஜ்ர் தொழுகையை ஜமாஅத்துடன் தொழுதுவிட்டு சூரியன் உதிக்கும் வரை அல்லாஹ்வை திக்ர் செய்து விட்டு 2 ரக்அத்கள் தொழுதல் | யாராவது ஜமாஅத்துடன் பஜ்ர் தொழுகையைத் தொழுதுவிட்டு பின்னர் சூரியன் உதிக்கும் வரை அல்லாஹ்வை திக்ர் செய்துவிட்டு அதன்பின் 2 ரக்அத்கள் தொழுதால் அவருக்கு பூரணமான ஹஜ், உம்ராச் செய்த நன்மை கிடைக்கும். |
| 27 | இரவில் விழித்து மனைவியையும் எழுப்பி இருவருமாகத் தொழுகையில் ஈடுபடுதல் | யார் இரவில் விழித்து தனது மனைவியையும் விழிப்பூட்டி இருவருமாக 2 ரக்அத்கள் தொழுகின்றாரோ அவ்விருவரும் அல்லாஹ்வை அதிகம் திக்ர் செய்த ஆண்கள், பெண்களில் நின்றும் எழுதப்படுவார்கள். |
| 28 | இரவுத்தொழுகை தொழவேண்டுமென உறுதிகொண்ட பின்னர் தூக்கம் மிகைத்தல் | இரவில் தொழவேண்டுமென நினைத்தும் அவருக்கு தூக்கம் மிகைத்தால் அல்லாஹ் அவருக்கு அன்று தொழுத கூலியை வழங்கிவிடுகின்றான். அவனது தூக்கம் அவனுக்கு ஸதகாவாக அமைந்து விடுகின்றது. |
| 29 | சந்தைக்குச் சென்றவர் | லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு லஹுல்முல்கு வலஹுல் ஹம்து யுஹ்யீ வயுமீது வஹுவ ஹய்யுன் லா யமூது பியதிகில் கைரு வஹுவ அலாகுல்லி ஷைஇன் க.்தீர். என்று சந்தைக்கு நுழைந்த ஒருவர் சொலன்னால் அவருக்கு பத்து இலட்சம் நன்மைகள் எழுதப்பட்டு 10 இலட்சம் பாவங்கள் மன்னிக்கப்படும். மேலும் அவருக்கு 10 இலட்சம் அந்தஸ்துக்களும் உயர்த்தப்படும். |
| 30 | ஒவ்வொரு பர்ள் தொழுகையின் பின்பு (ஸுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ், அல்லாஹு அக்பர்) என்று 33 தடவையும், (லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு.........) என ஒரு தடவையும் ஓதுதல் | யாராவது தொழுகைக்குப் பின்னர் (ஸுப்ஹானல்லாஹ்) 33 (அல்ஹம்துலில்லாஹ்) 33 (அல்லாஹு அக்பர்) 33 கூறிவிட்டு 100ஐப் பூர்த்தியாக்க (லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு லஹுல்முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலாகுல்லி ஷைஇன் க.்தீர் எனக் கூறினால் அவரது பாவங்கள் கடல் நுரையளவு இருந்தாலும் அவை அனைத்தும் மன்னிக்கப்படும். |
| 31 | பர்ளான தொழுகைக்குப்பின் ஆயதுல் குர்ஸி ஓதுதல் | யார் பர்ளான தொழுகைக்குப் பின்னர் (ஆயதுல் குர்ஸி) ஐ ஓதுகின்றாரோ அவர் சுவனம் நுழைவதற்கு மரணமே அன்றி வேறு தடை கிடையாது. |
| 32 | நோயாளியிடம் நோய் விசாரிக்கச் செல்லல் | யாராவது ஒரு முஸ்லிம் காலையில் நோய் விசாரிக்கச் செல்வாராயின் மாலை வரை எழுபதாயிரம் (70,000) வானவர்கள் அவனுக்காக பாவமன்னிப்புத் தேடுகின்றனர். மாலையில் நோய் விசாரிக்கச் செல்வாராயின் 70,000 வானவர்கள் காலை வரை அவனுக்காகப் பாவமன்னிப்புத் தேடுகின்றனர். அவனுக்கு சுவனத்தில் பறிக்கப்பட்ட பழங்கள் உள்ளன. |

| | | |
|---|---|---|
| 33 | சோதனைகளுக்கு உட்படுத்தப்பட்டவர்களைக் காணும் போது | யாராவது சோதனைக்கு உட்படுத்தப்பட்ட ஒருவரைக் கண்டு "அல்ஹம்து லில்லாஹில்லதீ ஆபானீ மிம்மப்தலாக பிஹி வபள்ளலனீ அலா கஸீரின் மிம்மா கலக தப்ளீலா" என்று சொன்னால் அவனுக்கு அச்சோதனை ஏற்படாது. |
| 34 | சோதனையில் சிக்குண்டவர்களுக்கு ஆறுதல் கூறுதல் | யார் சோதனையில் சிக்குண்ட ஒருவருக்கு ஆறுதல் கூறுகின்றாரோ அல்லாஹ் அவருக்கு அவருடைய கூலிபோன்று கூலி வழங்குகின்றான். யாரொரு முஸ்லிம் தனது சகோதரனின் துக்கத்துக்கு ஆறுதல் கூறுகின்றானோ அவனுக்கு அல்லாஹ் சங்கை எனும் ஆபரணத்தை அணிவிக்கின்றான். |
| 35 | ஜனாஸாத் தொழுகையில் கலந்து பின்னர் கப்று வரையில் சென்று அடக்கம் செய்வதிலும் கலந்துகொள்ளல் | யார் ஒரு ஜனாஸாவை தொழும் வரை துயர்கின்றாரோ, அவருக்கு ஒரு கீராத் நன்மையுண்டு, யார் அடக்கம் செய்யும் வரை துயர்கின்றாரோ அவருக்கு 2 கீராத் நன்மையுண்டு. 2 கீராத்கள் என்றால் என்ன என்று வினவப்பட்டபோது அது பிரமாண்டமான 2 மலைகளைப் போன்றதாகும் என நபிகளார் கூறினார்கள். "நாம் பல கீராத் நன்மைகளில் கவனக் குறைவாக இருந்து விட்டோம்" என இப்னு உமர்(ரலி) கூறினார்கள். |
| 36 | அல்லாஹ்வுக்காகப் பள்ளிவாசல்களைக் கட்டுவது அல்லது அதில் பங்குகொள்வது | யார் அல்லாஹ்வுக்காக ஒரு பள்ளிவாசலைக் கட்டுகிறாரோ அது குருவிக்கூட்டின் அளவாக இருந்தாலும் சரி அல்லாஹ் அவருக்கு சுவனத்தில் ஒரு வீட்டைக் கட்டுவான். |
| 37 | செலவளித்தல் | ஒவ்வொரு நாள் காலையிலும் இரு வானவர்கள் இறங்கி ஒருவர் "யாஅல்லாஹ்! செலவு செய்பவர்களுக்கு பரகத்தை (அபிவிருத்தியை) வழங்குவாயாக." மற்றவர் "யாஅல்லாஹ்! யார் உலோபித்தனம் காட்டுவாரோ அவருக்கு அழிவைக் கொடுப்பாயாக" எனப் பிரார்த்திக்கின்றனர். |
| 38 | தர்மம் செய்தல் | தர்மம் செய்வதன் மூலம் சொத்து குறைவதில்லை. மன்னிப்பின் மூலம் அடியான் கண்ணியத்தையே கூட்டிக்கொள்கின்றான். யார் தாழ்மையாக நடக்கின்றானோ அவனை அல்லாஹ் உயர்த்துகின்றான். ஒரு திர்ஹம் ஒரு இலட்சம் திர்ஹங்களை முந்திவிட்டது. அல்லாஹ்வின் தூதரே! அது எவ்வாறு எனத் தோழர்கள் வினவினர். ஒரு மனிதனிடம் 2 திர்ஹங்கள் இருக்கின்றன. அதில் ஒன்றை அவன் தர்மம் செய்கின்றான். இன்னொருவனிடம் அதிகமான செல்வமுண்டு. அவன் அதில் ஒரு சிறிய பகுதியாகிய ஒரு இலட்சத்தை தர்மம் செய்கிறான். என நபிகளார் கூறினார்கள். எந்த ஒரு முஸ்லிமாவது ஒரு மரத்தை நட்டி அல்லது ஒரு பயிரைப் பயிரிட்டு பின்பு அதை ஒரு பறவையோ அல்லது ஒரு மனிதனோ, மிருகமோ சாப்பிட்டால் அது அவனுக்கு ஸதகாவாக அமையும். |
| 39 | வட்டியை எதிர்பார்க்காமல் கடன் கொடுத்தல் | யாரொரு முஸ்லிம் அடுத்த முஸ்லிமுக்கு இரு விடுத்தம் கடன் வழங்குகின்றானோ அத்தொகையை ஒரு முறை அவன் தர்மம் செய்ததைப் போன்றாகும். |
| 40 | வறியவர்களின் தாமதத்தைப் பொறுத்துக் கொள்ளல். | யாராவது ஒரு வறியவனுக்கு அவகாசம் கொடுத்தால் அவனுடைய தவணை வரும்வரை அவனுக்கு ஒவ்வொரு நாளைக்கும் பதிலாக ஒரு ஸதகா செய்த நன்மை கிடைக்கும். மேலும் கடனுக்குரிய நேரம் வந்த பின் மேலும் அவகாசம் வழங்கினால் அவனுக்கு இரு மடங்கு ஸதகாச் செய்த நன்மை கிடைக்கும். |
| 41 | அல்லாஹ்வின் பாதையில் ஒருநாள் நோன்பு நோற்றல் | யார் அல்லாஹ்வின் பாதையில் ஒரு நாள் நோன்பு நோற்கின்றாரோ அவனது முகத்தை அல்லாஹ் நரகத்தை விட்டும் எழுபது வருட தொலைதூரம் தூரமாக்கிவிடுகிறான். |
| 42 | ஒவ்வொரு மாதமும் 3 நாட்கள், அறபா, ஆஷூரா தினங்களில் நோன்பு நோற்றல் | ஒவ்வொரு மாதமும் 3 நாட்கள் நோன்பு நோற்பது காலம் முழுவதும் நோன்பு நோற்பதற்குச் சமனாகும். அறபா தின நோன்பைப் பற்றிக் கேட்கப்பட்டபோது அது சென்ற வருடம் மற்றும் அடுத்த வருடத்தின் பாவங்களுக்கு குற்றப் பரிகாரமாகும். ஆஷூராத்தின நோன்பைப் பற்றிக் கேட்கப்பட்டபோது அது சென்ற வருடத்தின் பாவங்களுக்கு குற்றப்பரிகாரமாகும் என நபிகளார் கூறினார்கள். |
| 43 | ஷவ்வால் மாதத்தில் 6 | யார் ரமழானில் நோன்பு நோற்று பின்னர் ஷவ்வால் |

| | | |
|---|---|---|
| | தினங்கள் நோன்பு நோற்றல் | மாதத்தில் 6 நோன்புகள் நோற்கின்றாரோ அது காலம் முழுவதும் நோன்பு நோற்றது போன்றாகும். |
| 44 | தராவீஹ் தொழுகையை இமாம் தொழுது முடியும் வரை ஜமாஅத்துடன் தொழுதல் | இமாம் தொழுதுமுடியும் வரையில் ஒருவர் இமாமுடன் இரவுத் தொழுகை (தராவீஹ்) தொழுதால் அவருக்கு இரவு முழுவதும் நின்று வணங்கிய நன்மை எழுதப்படுகின்றது. |
| 45 | ரமழான் மாதத்தில் உம்ராச் செய்தல் | ரமழான் மாத்தில் உம்ராச் செய்வது ஒரு ஹஜ்ஜுக்குச் சமனாகும். அல்லது என்னுடன் ஒரு ஹஜ் செய்வதற்கு சமனாகும். (நபிமொழி). மேலும் பைதுல்லாஹ்வை (ஏழு விடுத்தம்) தவாபு செய்துவிட்டு இரண்டு ரக்அத் தொழுதால் ஓர் அடிமையை உரிமையிட்டவரைப் போன்றாவார். |
| 46 | ஏற்றுக்கொள் ளப்பட்ட ஹஜ் | யார் அல்லாஹ்வுக்காக ஹஜ் செய்து அதில் தாம்பத்திய உறவில் ஈடுபடாது தீய வார்த்தைகளையும், தீய செயல்களையும் தவிர்த்துக்கொள்வாராயின் அவர் அன்று பிறந்த குழந்தை போன்று (பாவமற்ற நிலையில்) திரும்புகிறார். ஏற்றுக்கொள்ளப்பட்ட ஹஜ்ஜுக்கு சுவர்க்கத்தைத் தவிர வேறு கூலி கிடையாது. |
| 47 | துல் ஹஜ் மாத ஆரம்ப 10 நாட்களில் நல்லமல் புரிதல் | துல் ஹஜ் ஆரம்ப 10 நாட்களில் நல்லமல் புரிவதைப்போன்று அல்லாஹ்வுக்கு மிக விருப்பமான நல்லமல் எதுவும் கிடையாது. ஜிஹாதை விடவும் அது சிறந்ததா எனக் கேட்கப்பட்டபோது "ஆம்" அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாத் புரிவது கூட அதற்குச் சமனாகமாட்டாது. ஆனால் தனது ஆத்மாவுடனும், பொருளுடனும் (ஜிஹாதுக்காக) வெளிச்சென்று மீண்டும் திரும்பிவராமல் ஷஹீதானவரைத் தவிர. |
| 48 | உழ்ஹிய்யா | நபித்தோழர்கள் நபிகளாரிடத்தில் உழ்ஹிய்யா பற்றி விளக்கம் கேட்டனர்.அதற்கு நபியவர்கள், இது உங்கள் தகப்பன் இப்றாஹீம்(அலை) அவர்களின் வழிமுறை எனக் கூறினார்கள். அதற்கவர்கள் அதில் நமக்கு என்ன கூலியிருக்கிறது என வினவினர். அதற்கு நபியவர்கள் "ஒவ்வொரு முடிக்கும் ஒரு நன்மையுண்டு, அவ்வாறெனில் கம்பளிக்கு (செம்மறியாட்டின் உரோமம்) எவ்வாறு என வினவினர். கம்பளியின் ஒவ்வொரு முடிக்கும் ஒரு நன்மையுண்டு" என நபிகளார் கூறினார்கள். |
| 49 | ஒரு அறிவாளிக் குரிய கூலியும் சிறப்பும் | ஒரு 'ஆபித்' வணக்கவாளியை விட ஒரு 'ஆலிம்' அறிவாளியின் சிறப்பு உங்களில் மிகத் தாழ்ந்த வரைவிட எனது சிறப்பைப் போன்றதாகும். நிச்சயமாக வானவர்களும், வானங்கள் பூமியில் இருப்பவர்களும், தனது பொந்தில் இருக்கக்கூடிய எறும்பு உட்பட இன்னும் கடலிலுள்ள மீன்கள் கூட மக்களுக்கு நற்கருமங்களைக் கற்றுக் கொடுக்கக்கூடியவர்களுக்காகப் பிழை பொறுக்கத் தேடுகின்றார்கள். |
| 50 | அல்லாஹ்வின் பாதையில் மரணிப்பதை அவனிடத்தில் உண்மையாக வேண்டுதல் | யார் உண்மையான உள்ளத்துடன் அல்லாஹ்வின் பாதையில் மரணிக்க வேண்டுமென அவனிடத்தில் வேண்டுகிறாரோ அல்லாஹ் அவரை சுஹதாக்கள் இருக்குமிடத்தில் சேர்த்துவைப்பான். அவர் தனது விரிப்பில் மரணித்தாலும் சரியே. |
| 51 | அல்லாஹ்வின் பயத்தால் அழுவதும், அவன் பாதையில் காவல்புரிவதும் | இரண்டு கண்களை நரகம் தீண்டமாட்டாது. (1)<br>அல்லாஹ்வின் பயத்தால் அழுத கண். (2)<br>அல்லாஹ்வின் பாதையில் காவல் புரிவதற்காக இரவில் விழித்திருந்த கண். |
| 52 | ஒத்தடம் போடுவது, மந்திரிக்குமாறு வேண்டுவது, துற்குறிபார்ப்பது போன்றவற்றைத் தவிர்த்தல் | முந்திய சமூகத்தினரை நபி(ஸல்) அவர்களுக்குக் கனவில் காட்டப்பட்டது. அவர்கள் தமது உம்மத்தைக் கண்டார்கள். அதில் 70,000 பேர் கேள்வியோ தண்டனையோ இல்லாமல் சுவர்க்கம் நுழைகின்றனர். அவர்கள் நெருப்பால் ஒத்தடம் போடாதவர்கள், மந்திரிக்கும்படி வேண்டாதவர்கள், துற்குறி பார்க்காதவர்கள், எல்லா விடயங்களிலும் அவர்களின் இரட்சகன் மீதே நம்பிக்கை வைத்தவர்கள். |
| 53 | சிறு பிள்ளைகளை | எந்த முஸ்லிமின் 3 குழந்தைகள் பருவ வயதை |

| | | |
|---|---|---|
| | இழந்தவருக்குரிய கூலி | அடையாத நிலையில் மரணித்ததோ அல்லாஹ் அவரை சுவர்க்கம் நுழையவைப்பான். |
| 54 | பார்வையை இழந்து பொறுமை செய்தவர் | நிச்சயமாக அல்லாஹ் கூறுகின்றான்: "நான் எனது அடியானின் இரு கண்களினதும் பார்வையை இழக்கச்செய்து சோதிக்கும்போது அவன் பொறுமை செய்தால் அவை இரண்டுக்கும் பதிலாக சுவர்க்கத்தைக் கூலியாக வழங்கிவிடுவேன்." |
| 55 | அல்லாஹ்வுக்காக எதனையும் விடுவது | எதையும் நீ அல்லாஹ்வைப் பயந்ததற்காக விட்டுவிட்டால் அல்லாஹ் உனக்கு அதைவிட சிறந்த ஒன்றைத் தந்துவிடுவான். |
| 56 | அபத்தையும், நாவையும் பாதுகாத்தல் | யார் தனது இரு தாடைகளுக்கு இடையில் இருப்பதையும், தனது இரு கால்களுக்கு இடையில் இருப்பதையும் பாதுகாப்பதாகப் பொறுப்பு நிற்கின்றாரோ நான் அவனுக்கு சுவர்க்கத்துக்கு பிணை நிற்கின்றேன். அவ்விரண்டும் நாவும், அபமுமாகும். |
| 57 | வீட்டுக்கு நுழையும் போதும் சாப்பிடும் போதும் பிஸ்மி சொல்லல் | ஒரு மனிதன் தனது வீட்டுக்கு நுழையும் போதும், சாப்பிடும்போதும் அல்லாஹ்வை ஞாபகப்படுத்தினால் ஷைத்தான் தனது கூட்டத்தை நோக்கி உங்களுக்கு இங்கு தங்குவதற்கு இடமோ, உண்ணுவதற்கு உணவோ கிடையாது எனக் கூறுகின்றான். அதே நேரம் ஒருவன் வீட்டில் நுழையும் போதும், சாப்பிடும் போதும் அல்லாஹ்வை திக்ர் செய்யவில்லையானால் ஷைத்தான் தனது கூட்டத்தை நோக்கி உங்களுக்கு இங்கு தங்குவதற்கு இடமும், உண்ணுவதற்கு உணவும் கிடைத்துவிட்டது எனக் கூறுகின்றான். |
| 58 | உண்ணுதல், குடித்தல், புத்தாடை அணிதல் ஆகியவற்றின் பின் பிரார்த்தித்தல் | யாராவது ஓர் உணவைச் சாப்பிட்டபின் (அல்ஹம்து லில்லாஹில்லதீ அத்அமனீ ஹாதா வரதகனீஹி மின் கைரி ஹவ்லின் மின்னீ வலா குவ்வஹ்) (எனக்கு இதை உணவாக அளித்த, எனது எந்தச் சக்தியுமின்றி எனக்கு றிஸ்களித்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்) என்று கூறினால் அவரது முந்திய பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. யாராவது புத்தாடை அணிந்த பின் (அல்ஹம்து லில்லாஹில்லதீ கஸானீ ஹாதா வரதகனீஹி மின் கைரி ஹவ்லின் மின்னீ வலா குவ்வஹ்) (எனக்கு இதை அணியத் தந்த, எனது எந்தச் சக்தியுமின்றி எனக்கு றிஸ்களித்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்) என்று கூறுவார். |
| 59 | யாராவது தனது வேலைப் பளுவை குறைக்க நாடினால் | பாத்திமா (ரலி) அவர்கள் நபிகளாரிடம் தமது வேலைக்காக ஒரு பணியாளனைத் தருமாறு வேண்டினார்கள். அப்போது அவருக்கும், அலி (ரலி) அவர்களுக்கும் நபிகளார் பின்வருமாறு கூறினார்கள். "நீங்கள் இருவரும் கேட்டதை விட மிகச் சிறந்த ஒன்றை உங்களுக்கு கற்றுத்தரட்டுமா? நீங்களிருவரும் உங்கள் படுக்கைக்குச் செல்ல நாடினால் ஸுப்ஹானல்லாஹ் 33, அல்ஹம்துலில்லாஹ் 33, அல்லாஹு அக்பர் 34 விடுத்தம் கூறுங்கள். அது ஒரு பணியாளனைவிட உங்கள் இருவருக்கும் சிறந்ததாகும். |
| 60 | தாம்பத்திய உறவுக்கு முன்னர் துஆ ஓதுதல் | உங்களில் ஒருவர் தனது மனைவியுடன் உறவு கொள்ள விரும்பி பிஸ்மில்லாஹ், அல்லாஹும்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான வஜன்னிபிஷ் ஷைத்தான மா ரதக்தனா என்று ஓதினால் அச்சமயம் கருத்தரித்து விட்டால் ஷைத்தான் ஒருபோதும் அப்பிள்ளைக்குத் தீங்கு செய்யமாட்டான். |
| 61 | மனைவி கணவனைத் திருப்திப்படுத்தல் | ஒரு பெண் ஐங்காலத் தொழுகைகளைத் தொழுது அவளுக்குக் கடமையான நோன்பையும் நோற்று தனது அபத்தையும் பாதுகாத்து தனது கணவனுக்குக் கட்டுப்பட்டு நடந்தால் "சுவன வாயில்களில் நீ விரும்பிய வாசலினால் நுழைவாயாக" என அவளுக்குக் கூறப்படும். |
| 62 | பெற்றோருக்கு நன்மை செய்வதும் குடும்பத்தை சேர்ந்து நடத்தல் | இறைவனின் பொருத்தம் பெற்றோரின் பொருத்தத்தில் இருக்கின்றது." "யார் தனது ரிஸ்க் விஸ்தீரனமாக்கப்பட வேண்டுமென்றும் தனது வாழ்நாள் அதிகரிக்கப்பட வேண்டுமென்றும் விரும்புகின்றாரோ அவர் தனது இனபந்துக்களை சேர்ந்து நடக்கட்டும். |
| 63 | அநாதைகளைப் | நானும், அநாதையைப் பராமரிப்பவனும் சுவர்க்கத்தில் இவ்வாறு |

| | | |
|---|---|---|
| | பராமரித்தல் | இருப்போம் என நபிகளார் தனது ஆள்காட்டி விரலையும், நடுவிரலையும் சேர்த்துக் காட்டினார்கள். |
| 64 | நற்குணம் | நிச்சயமாக ஒரு முஃமின் தனது நற்குணத்தின் காரணமாக நின்று வணங்கும் நோன்பாளியின் பதவியை அடைந்துகொள்வான். தனது குணத்தை அழகுபடுத்திக்கொண்டவனுக்கு சுவனத்தின் உயர் பதவியில் ஒரு மாளிகைக்கு நபிகளார் பொறுப்பு நின்றுள்ளார்கள். |
| 65 | படைப்பினங்களுக்கு இரக்கம், அன்பு காட்டுதல் | அல்லாஹ் தனது அடியார்களில் இரக்கம் காட்டுவதெல்லாம் இரக்க சிந்தனையுள்ளவர்களுக்குத்தான். பூமியிலுள்ளவர்களுக்கு இரக்கம் காட்டுங்கள், வானத்திலுள்ளவன் உங்களுக்கு இரக்கம் காட்டுவான். |
| 66 | முஸ்லிம்களுக்கு நலவை நாடுதல் | உங்களில் ஒருவர் தனக்கு விரும்புவதை தனது சகோதரனுக்கு விரும்பும் வரை பூரண முஸ்லிமாகமாட்டான். |
| 67 | வெட்கம் | வெட்கம் நலவைத் தவிர வேறெதையும் கொண்டுவரமாட்டாது. வெட்கம் ஈமானில் உள்ளதாகும். நான்கு விடயங்கள் ரஸூல்மார்களின் வழிமுறைகளில் உள்ளவையாகும். அவை: வெட்கம், மணம்பூசுதல், பல் துலக்குதல் (மிஸ்வாக்), திருமணமுடித்தல். |
| 68 | ஸலாத்தை ஆரம்பமாகச் சொல்லல் | ஒரு மனிதன் நபிகளாரிடம் வந்து "அஸ்ஸலாமு அலைக்கும்" என்றார். அதற்கு நபிகளார் பத்து என்றார்கள். பின்னர் இன்னொருவர் வந்து "அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹ்" என்றார். அதற்கு நபிகளார் இருபது என்றார்கள். பின்னர் இன்னொருவர் வந்து "அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹ்" என்றார். அதற்கு நபிகளார் முப்பது என்றார்கள். (அதாவது நன்மைகள்). |
| 69 | சந்திக்கும் போது கைலாகு செய்தல் | இரு முஸ்லிம்கள் சந்தித்து முஸாபஹாச் செய்துகொள்ளும்போது அவ்விருவரும் பிரிவதற்கு முன்னர் இருவரினதும் பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடுகின்றன. |
| 70 | தனது சகோதரனின் மானத்தைப் பாதுகாத்தல் | யார் தனது சகோதரனின் மானத்தைப் பாதுகாப்பதற்காகப் பேசுகின்றாரோ அவனை விட்டும் அல்லாஹ் மறுமைநாளில் நரகநெருப்பைத் தட்டிவிடுகின்றான். |
| 71 | நல்லவர்களை விரும்புவதும் அவர்களுடன் சகவாசம் கொள்வதும் | நீ யாரை விரும்புகிறாயோ அவருடன் (மறுமையில்) இருப்பாய். அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள். நபித்தோழர்கள் இதைக்கொண்டு சந்தோஷம் அடைந்ததுபோன்று வேறு எதிலும் சந்தோஷமடையவில்லை. |
| 72 | அல்லாஹ்வுக்காக அன்புகொள்வோர் | அல்லாஹ் கூறுகின்றான் ”எனக்காக ஒருவருக்கொருவர் அன்புகொள்வோருக்கு ஒளியினாலான மிம்பர் மேடைகள் உண்டு. அவர்களைப் பார்த்து நபிமார்களும், சுஹதாக்களும் ஆசைகொள்வார்கள். |
| 73 | முஸ்லிம் சகோதரனுக்காகப் பிரார்த்தித்தல் | யார் தனது சகோதரனுக்காக தனிமையில் அவர் அறியாத விதத்தில் துஆக் கேட்கின்றாரோ அவருக்குச் சாட்டப்பட்ட வானவர் ஆமீன் (உனக்கும் அவ்வாறு கிடைக்கட்டும் எனக் கூறுவார். |
| 74 | முஃமினான ஆண், பெண்களுக்காகப் பாவமன்னிப்புக் கேட்டல் | யார் முஃமினான ஆண்களுக்கும், பெண்களுக்கும் பாவமன்னிப்பு வேண்டுகின்றாரோ அவனுக்கு அல்லாஹ் ஒவ்வொரு ஆண், பெண்களின் அளவு நன்மைகளை எழுதுகின்றான். |
| 75 | நோவினை ஏற்படுத்தும் பொருட்களை பாதையை விட்டும் அகற்றுதல் | மக்களுக்கு நோவினை ஏற்படுத்தும் ஒரு மரத்தை வெட்டிய ஒரு மனிதன் சுவனத்தில் நடமாடுவதைக் கண்டேன். |
| 76 | பொய்யையும், தர்க்கம் புரிவதையும் தவிர்த்தல் | யார் உண்மையில் இருப்பது உறுதியான நிலையிலும் தர்க்கம் புரிவதை விட்டுவிடுகிறாரோ அவருக்கு சுவனத்தின் ஒரு பகுதியில் ஒரு வீட்டை எடுத்துக் கொடுக்க நான் பொறுப்பு நிற்பேன். யார் பரிகாசத்துக்காகவும் பொய்சொல்வதை விட்டும் தவிர்ந்து கொள்கின்றாரோ அவருக்கு சுவனத்தின் நடுப்பகுதியில் ஒரு வீட்டை |

| | | |
|---|---|---|
| | | எடுத்துக்கொடுக்க நான் பொறுப்பு நிற்பேன். |
| 77 | கோபத்தை அடக்குதல் | யார் கோபத்தை அடக்குகிறாரோ மறுமைநாளில் படைப்பினங்களுக்கு மத்தியில் அல்லாஹ் அவரை அழைத்து அவர் நாடிய கன்னிப்பெண்களை எடுத்துக்கொள்ள சந்தர்ப்பமளிப்பான். |
| 78 | ஒருவரைப் புகழ்வது அல்லது இகழ்வது | (மரணித்திருக்கும்) ஒருவரை நீங்கள் நல்லவர் எனக் கருதினால் அவருக்கு சுவனம் கடமையாகிவிடும். மாறாக அவரை கெட்டவர் எனக் கருதினால் அவருக்கு நரகம் கடமையாகிவிடும். நீங்கள் இப்பூமியில் அல்லாஹ்வின் சாட்சியாளர்களாகும். |
| 79 | ஒரு முஸ்லிமின் கஷ்டத்தை நிவர்த்தி செய்தலும் அவனது குறையை மறைத்தலும் உதவி செய்தலும் | யாராவது ஒரு மு.்.மினின் உலகக் கஷ்டங்களில் ஒரு கஷ்டத்தை நிவர்த்தி செய்தால் அல்லாஹ் இவனது மறுமையின் கஷ்டங்களில் ஒன்றை நீக்கிவிடுகின்றான். யாராவது ஒரு ஏழையின் கஷ்டத்தை இலகுபடுத்தினால் அல்லாஹ் அவனுக்கு இம்மையிலும், மறுமையிலும் இலகுபடுத்துவான். யார் ஒரு முஸ்லிமின் குறையை மறைக்கிறானோ அல்லாஹ் அவனது குறைகளை இம்மையிலும், மறுமையிலும் மறைத்து விடுகின்றான். ஓர் அடியான் தனது சகோதரனுக்கு உதவிசெய்யும் காலமெல்லாம் அல்லாஹ் அவனுக்கு உதவிசெய்கின்றான். |
| 80 | மறுமையை முதன்மைப்படுத் தல் | யாருடைய கவலையாக மறுமை ஆகிவிடுகின்றதோ அல்லாஹ் அவனது உள்ளத்தில் போதும் என்ற மனத்தை ஏற்படுத்திவிடுவான். மேலும் அவனை விட்டும் பிரிந்து சென்றவைகளை ஒன்று சேர்த்துவிடுவான், இவ்வுலகம் தாழ்ந்த நிலையில் அவனிடம் வந்தடையும். |
| 81 | நீதிபதி நீதம் செலுத்துதல், வாலிபர்களின் ஒழுக்கம், பள்ளிவாசலுடன் தொடர்பாக இருத்தல், அல்லாஹ்வுக்காக அன்பு வைத்தல். | அல்லாஹ்வின் நிழலைத்தவிர எந்தொரு நிழலும் இல்லாத அந்நாளில் அல்லாஹ் ஏழு கூட்டத்தினருக்கு நிழல் வழங்குகின்றான். (1) நீதமான அரசன் (2) அல்லாஹ்வின் வணக்கத்தில் வளர்ந்த ஒரு வாலிபன் (3) பள்ளிவாசலோடு உள்ளம் தொடர்புள்ள மனிதன் (4) அல்லாஹ்வுக்காக நேசம்கொண்டு அதற்காகவே ஒன்றுசேர்ந்து அதனடிப்படையிலேயே பிரிந்து சென்ற இரு சகோதரர்கள். (5) அழகும், அந்தஸ்துமுள்ள ஒருபெண் தன்னை (பாவத்துக்காக) அழைத்தபோது "நான் அல்லாஹ்வைப் பயப்படுகின்றேன்" என்று கூறிய மனிதன். (6) தனது வலக்கரம் கொடுப்பதை இடக்கரம் அறியாவண்ணம் மறைமுகமாக நன்கொடை செய்த மனிதன் (7) தனிமையில் அல்லாஹ்வை நினைத்து தனது இரு கண்களாலும் கண்ணீர் வடித்தவன். |
| 82 | இஸ்தி.்.பார் | யார் இஸ்தி.்.பார் செய்வதைப் பற்றிக் கொள்கின்றார்களோ எல்லா நெருக்கடிகள், கவலைகளிலிருந்து நிவாரணத்தை அளித்து அவர் நினைக்காத விதத்தில் அவனுக்கு ரிஸ்க் அளிப்பான். |

# தடுக்கப்பட்ட சில விடயங்கள்

| | தடுக்கப்பட்ட விடயம் | நபிமொழி ஆதாரம் |
|---|---|---|
| 01 | அடுத்தவர்களை நோக்கமாகக் கொண்டு நல்லமல்கள் செய்வது | வல்ல அல்லாஹ் கூறுகின்றான்: நான் இணைவைக்கப்படுவதை விட்டும் மிகவும் தேவையற்றவன், எவரேனும் ஒரு நல்லமலைச் செய்து அதில் என்னுடன் வேறொருவரை இணைத்துக் கொண்டால் அவனது இணைவைத்தலுடன் அவனை நான் விட்டுவிடுவேன். |
| 02 | உள்ரங்கம் கெட்டு வெளிரங்கம் சீராயிருத்தல் | நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் : நான் சில கூட்டத்தினர்களை அறிவேன். அவர்கள் நாளை மறுமையில் திஹாமாவில் காணப்படும் வெந்நிற மலைகளைப் போன்ற நன்மைகளுடன் வருவார்கள். அல்லாஹ் அவற்றை பரத்தப்பட்ட புழுதியைப் போன்றதாக ஆக்கிவிடுவான். அப்பொழுது ஸவ்பான் (ரழி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதரே அவர்கள் எப்படிப்பட்டவர்கள் எனக் கூறி அவர்களை எங்களுக்குத் தெளிவுபடுத்துவீர்களாக. இல்லையெனில் நாங்கள் அறியாமலே அவர்களில் நின்றும் ஆகிவிடுவோம். அப்பொழுது நபியவர்கள் கூறினார்கள் : அவர்கள் உங்கள் சகோதரர்கள். உங்களைப் போன்றவர்கள். நீங்கள் இரவில் நின்று வணங்குவதைப் போன்று நின்று வணங்குவார்கள். ஆனால் அவர்கள் தனிமையில் தடுக்கப்பட்டவற்றைச் செய்ய சந்தர்ப்பம் அமைந்தால் அவற்றைச் செய்து விடுவார்கள். |
| 03 | பெருமை | யாருடைய உள்ளத்தில் அணுவளவேனும் பெருமை இருக்கின்றதோ அவர் சுவர்க்கம் புக மாட்டார், பெருமை என்பது உண்மையை மறுப்பதும், மற்றவர்களை இழிவாகப் பார்ப்பதுமாகும். |
| 04 | ஆடைகளைக் கரண்டைக்குக் கீழால் அணிதல் | அனுமதிக்கப்பட்ட அளவை விட ஆடைகளைத் தொங்கவிடுவது வேட்டி போன்றவற்றிலும், மேலாடை, தலைப்பாகை என்பவற்றிலும் இருக்கின்றது. “யார் பெருமக்காக இவற்றில் ஒன்றை தொங்க அணிகின்றாரோ அவரை அல்லாஹ் மறுமையில் பார்க்கமாட்டான். |
| 05 | பொறாமை | பொறாமை கொள்வதை உங்களுக்கு நான் எச்சரிக்கிறேன். நெருப்பு விறகை எரிப்பதைப் போன்று பொறாமை நன்மைகளை அழித்துவிடும். |
| 06 | வட்டி | வட்டி சாப்பிடுபவனையும் அதனை சாப்பிடக் கொடுப்பவனையும், நபியவர்கள் சபித்துள்ளார்கள். “ஒருவன் தெரிந்து கொண்டே வட்டியினால் கிடைத்த ஒரு வெள்ளிக் காசை (அதனளவு) சாப்பிடுவது 36 தடவை விபச்சாரம் செய்வதை விடவும் கொடியதாகும்”. |
| 07 | மது அருந்துதல் | வழமையாக மது அருந்துபவனும், சூனியத்தை நம்புபவனும், குடும்ப உறவைப் பிரிந்து நடப்பவனும் சுவர்க்கம் நுழைய மாட்டான். யார் மதுபானம் அருந்துகின்றானோ அவனது எந்தத் தொழுகையும் 40 நாட்களுக்கு அங்கீகரிக்கப்படமாட்டாது. |
| 08 | பொய் | மக்களை சிரிக்க வைப்பதற்காகப் பொய் பேசக் கூடியவனுக்கு கேடு உண்டாவதாக என மூன்று தடவைகள் நபியவர்கள் கூறினார்கள். |
| 09 | மற்றவரின் குறைகளைத் துருவி ஆராய்தல் | ஒரு கூட்டம் விரும்பாத நிலையில் அல்லது அவர்கள் தவிர்க்க விரும்பும் நிலையில் அவர்களது பேச்சை யாராவது (இரகசிமாகச்) செவிமடுத்தால் மறுமை நாளில் அவனுடைய காதில் ஈயம் உருக்கி ஊற்றப்படும். |
| 10 | உருவம் அமைத்தல் | மறுமை நாளில் மனிதர்களில் அதிகம் வேதனை செய்யப்படுபவர்கள் உருவம் அமைத்தவர்களாகும். நாயும், உருவப்படமும் உள்ள வீட்டில் மலக்குகள் நுழைய மாட்டார்கள். |
| 11 | கோள் சொல்லுதல் | கோள் சொல்பவன் சுவர்க்கம் நுழைய மாட்டான். கோள் என்பது மக்கள் மத்தியில் பிரச்சினையை ஏற்படுத்துவதற்காக ஒருவரது பேச்சை மற்றவரிடம் கூறுவதாகும். |

| | | |
|---|---|---|
| 12 | புறம் பேசுதல் | புறம் பேசுதல் என்றால் என்ன என உங்களுக்குத் தெரியுமா? என்று நபியவர்கள் கேட்ட பொழுது அல்லாஹ்வும் அவனது தூதருமே அறிவார்கள் என ஸஹாபாக்கள் கூறினார்கள். அப்பொழுது நபியவர்கள் "உனது சகோதரன் விரும்பாத விதத்தில் அவனைப் பற்றி (அவன் இல்லாத இடத்தில்) பேசுவதாகும்" என்றார்கள். "நான் கூறும் விடயம் அவனிடம் இருந்தாலும் அது புறமாகுமா?" எனக் கேட்கப்பட்டபோது "நீர் கூறும் விடயம் அவனிடமிருந்தால் அவனைப்பற்றி நீர் புறம் பேசியவர் ஆவீர். அது அவனிடத்தில் இல்லாவிட்டால் அவன் மீது அபாண்டம் சுமத்தி விட்டவர் ஆவீர்" எனப் பதிலளித்தார்கள். |
| 13 | சபித்தல் | ஒரு மு..மினை சபிப்பது அவனைக் கொலை செய்வது போன்றாகும் , காற்றை நீங்கள் சபிக்க வேண்டாம். ஏனெனில் கட்டளையிடப்பட்டதாகும். சாபத்துக்குத் தகுதி இல்லாத ஒன்றை யாராவது சபித்தால் அச்சாபம் அவனுக்கே வந்து சேரும். |
| 14 | இரகசியத்தை வெளிப்படுத்தல் | தனது மனைவியுடன் உடலுறவு கொண்டு விட்டு அவளுடைய இரகசியத்தை வெளிப்படுத்தும் ஒரு மனிதன் மறுமை நாளில் அல்லாஹ்விடம் மனிதர்களிலே மிகக் கெட்டவனாவான். |
| 15 | மோசமான வார்த்தைப் பிரயோகம், இழிச்செயல் | அல்லாஹ்விடத்தில் மிக மோசமானவன் எவனுடைய கெட்ட பேச்சையும், செயலையும் பயந்து மக்கள் அவனை விட்டுவிடுகின்றார்களோ அவனாவான். மனிதனின் பாவங்களில் அதிகமானவையும் அவனது நாவாலே ஏற்படுகின்றது. |
| 16 | ஒரு முஸ்லிமை காபிர் என சந்தேகித்தல் | எவரேனும் தனது சகோதர முஸ்லிமைப் பார்த்து "காபிர்" என விளித்தால் அவ்விருவரில் ஒருவர் அதை சுமந்து கொள்வார். சொல்லப்பட்டவர் காபிராக இருந்தால் அது அவரைச் சாரும், அப்படி அவர் காபிராக இல்லாவிட்டால் சொன்னவர் மீதே அது திரும்பிவிடும். |
| 17 | உண்மையான தந்தையை மறைத்து வேறொவரின் மகன் என தன்னைக் கூறிக்கொள்ளல் | ஒருவன் தெரிந்துகொண்டே தனது தகப்பன் அல்லாத வேறு ஒருவரை தகப்பன் என வாதிட்டால் அவன் மீது சுவர்க்கம் ஹராமாகிவிடும். எவரேனும் தனது தகப்பனைப் புறக்கணிப்பது குப்ர் ஆகும். |
| 18 | ஒரு முஸ்லிமைப் பயமுறுத்தல் | ஒரு முஸ்லிம் அடுத்த முஸ்லிமைப் பயமுறுத்துவது ஹராமாகும். யாராவது தனது சகோதரனை ஆயுதத்தைக் காட்டி அச்சுறுத்தினால் அவர் அந்த ஆயுதத்தை விட்டுவிடும் வரை மலக்குமார் அவனை சபித்துக் கொண்டிருப்பர். |
| 19 | இஸ்லாமிய நாட்டில் பாதுகாப்பிற்கு உத்தரவாதம் கொடுக்கப்பட்டவனைக் கொலை செய்தல் | உறுதிமொழி கொடுக்கப்பட்ட ஒரு உயிரைக் கொலைசெய்பவனுக்கு சுவர்க்கத்தின் வாடை கூடக் கிடைக்கமாட்டாது. சுவனத்தின் நறுமனம் நூறு வருட தொலை தூரத்திற்கு வீசும். |
| 20 | அல்லாஹ்வின் நேசர்களை எதிர்த்தல் | நிச்சயமாக அல்லாஹ் பின்வருமாறு கூறியுள்ளான்: யார் எனது ஒரு நேசரை (அல்லாஹ்வை முற்றிலும் அஞ்சி நடக்கும் விசுவாசியை) விரோதிக்கின்றானோ அவனுக்கு எதிராக நிச்சயம் நான் யுத்தப் பிரகடனம் செய்துள்ளேன். |
| 21 | நயவஞ்சகனையும் பாவியையும் தலைவனாக நியமித்தல் | நயவஞ்சகனைப் பார்த்து தலைவன் என்று நீங்கள் கூறாதீர்கள், ஏனெனில், அவ்வாறு அவன் தலைவனாகினால் உங்கள் இறைவனை நீங்கள் கோபமூட்டிவிடுவீர்கள். |
| 22 | தனது பொறுப்பின் கீழுள்ளவர்களுக்கு துரோகம் செய்தல் | அல்லாஹ் ஒரு அடியானிடம் ஒரு பொறுப்பை ஒப்படைத்து, (சரியாகப் பொறுப்பை நிறைவேற்றாமல்) அதற்கு அவன் துரோகம் செய்த நிலையில் மரணித்தால் சுவர்க்கத்தை அவன் மீது அல்லாஹ் ஹராமாக்கிவிடுகின்றான். |

| | | |
|---|---|---|
| 23 | அறிவின்றி மார்க்கத் தீர்ப்பு வழங்கல் | யாருக்காவது அறிவின்றி தீர்ப்பு வழங்கப்பட்டால் அதன் பாவம் அத்தீர்ப்பை வழங்கியவரையே சாரும். |
| 24 | கவனயீனமாக ஜும்ஆவை விடல் அல்லது அஸ்ரை விடல் | எவரேனும் தகுந்த காரணமின்றி மூன்று ஜும்ஆக்களை விட்டால் அல்லாஹ் அவனது உள்ளத்தை மூடி முத்திரை இட்டுவிடுவான். யார் அஸ்ர் தொழுகையை விடுகின்றாரோ அவருடைய அமல்கள் அழிந்து விடுகின்றன. |
| 25 | தொழுகையை நிறைவேற்றுவதில் கவனயீனமாக இருத்தல் | "எம்மையும் காபிர்களையும் பிரித்தறிவதற்கான வித்தியாசம் தொழுகையாகும். யார் அதனை விடுகின்றானோ அவன் காபிராகிவிடுவான்" "ஒரு மனிதனுக்கும் இணை வைத்தலுக்கும் இடையில் தொழுகையை விடுவதே உள்ளது". |
| 26 | தொழுபவருக்கு முன்னால் நடந்து செல்லல் | தொழுபவருக்கு முன்னால் நடந்து செல்லக் கூடியவர் அதன் பாவத்தை (சரியாக) அறிந்திருந்தால் அப்படிக் கடந்து செல்வதை விட நாற்பது வருடங்கள் அவர் அதே இடத்தில் நின்றுகொண்டிருப்பது மேலானதாகும். |
| 27 | தொழுபவர்களுக்கு தொந்தரவும் நோவினையும் செய்தல் | யாராவது (பச்சையாக) வெங்காயம், வெள்ளைப் பூடு, லீக்ஸ் போன்றவற்றைச் சாப்பிட்டால் அவர் நிச்சயமாக எமது பள்ளியை நெருங்க வேண்டாம், மனிதர்கள் நோவினை பெறக்கூடியவைகளைக் கொண்டு மலக்குகளும் நோவினை பெறுகின்றனர். |
| 28 | காணியை அபகரித்தல் | எவரேனும் மற்றவரது நிலத்திலிருந்து ஒரு சாண் அளவு அநியாயமாக எடுத்துக் கொண்டால் மறுமை நாளில் அல்லாஹ் ஏழு பூமிகளிலிருந்து அதை அவனுக்கு மாலையாக அணிவிப்பான். |
| 29 | அல்லாஹ்விற்கு வெறுப்பை ஏற்படுத்தும் பேச்சு | நிச்சயமாக ஒரு அடியான் கவனயீனத்தால் அல்லாஹ்வுக்கு வெறுப்பை ஏற்படுத்தக்கூடிய வார்த்தையை பேசிவிடுவதால் எழுபது வருடங்கள் (விழும் தூர) ஆழத்தில் நரகில் விழுகின்றான். |
| 30 | அல்லாஹ்வின் திக்ர் அன்றி அதிகம் பேசுதல் | நீங்கள் அல்லாஹ்வின் திக்ர் அன்றி அதிகம் பேச வேண்டாம். ஏனெனில அல்லாஹ்வின் திக்ர் அன்றி அதிகம் பேசுவது வன்நெஞ்சத்தை ஏற்படுத்தும். |
| 31 | அவசியமின்றி அதிகம் பேசுதல் | உங்களில் எனக்கு மிகவும் வெறுப்பானவர்களும், மறுமையில் என்னை விட்டும் மிகத் தூரமானவர்களாக இருப்பவர்களும் யாரெனில் அவசியமின்றி அதிகம் பேசுபவர்களாகும். |
| 32 | அல்லாஹ்வை ஞாபகிப்பதை மறந்திருத்தல் | ஒரு கூட்டம் ஒரு சபையில் உட்கார்ந்து அல்லாஹ்வை ஞாபகித்து அவர்களுடை நபியின் மீது ஸலவாத் சொல்மால் பிரிந்து செல்வார்களாயின் அவர்ககளுக்கு ஒரு குற்றத் பதியப்படும். அல்லாஹ் நாடினால் மன்னிப்பான். மேலும் அவன் நாடினால் தண்டிப்பான். |
| 33 | ஒரு முஸ்லிம் சோதிக்கப்படும் போர் மகிழ்ச்சியை வெளிப்படுத்தல் | உனது சகோதரனின் சோதனையில் நீ சந்தோசத்தை வெளிப்படுத்தாதே. அல்லாஹ் அவனுக்கு அருள்புரிந்து உன்னைச் சோதிப்பான். யாராவது ஒரு பாவத்தைக் கொண்டு தனது சகோதரனை இழிவுபடுத்தினால் அவன் அப்பாவத்தைச் செய்யும்வரை மரணிக்கமாட்டான். |
| 34 | முஸ்லிம்களை வெறுத்து ஒதுக்கி நடத்தல் | ஒரு மு.்.மின் தனது சகோதர முஸ்லிமை மூன்று நாட்களுக்கு மேல் வெறுத்திருப்பதற்கு அனுமதியில்லை. எவரேனும் அவ்வாறு வெறுத்து அதே நிலையில் மரணித்தால் அவன் நரகம் புகுவான். . |
| 35 | பாவங்களைப் பகிரங்கமாகச் செய்தல் | என்னுடைய உம்மத்தினர்களில் பாவங்களைப் பகிரங்கமாகச் செய்பவர்களைத் தவிர அனைவரும் மன்னிப்பு வழங்கப்படக்கூடியவர்கள். |
| 36 | துர்க்குணம் | நிச்சயமாக துர்க்குணம் வினாக்கிரி தேனைக் கெடச் |

| | | |
|---|---|---|
| | | செய்வது போன்று நல்அமல்களைக் கெடுத்துவிடும். |
| 37 | அன்பளிப்பு வழங்கிவிட்டுத் திருப்பி எடுப்பவன் | தான் கொடுத்த அன்பளிப்பைத் திருப்பி எடுப்பவன் தானே வாந்தி எடுத்துவிட்டு அதனை மீண்டும் சாப்பிடும் நாயைப் போலாவான். ஒன்றைக் கொடுத்துவிட்டு அதனைத் திருப்பி எடுப்பது ஹலாலாக மாட்டாது. |
| 38 | அயல் வீட்டாருக்கு அநீதி இழைத்தல் | 10 பெண்களுடன் விபச்சாரம் புரிவது அயல் வீட்டுப் பெண்மணியுடன் விபச்சாரம் குரிவதைவிட இலகுவானது. 10 வீடகளில் திருடுவது ஓர் அயல் வீட்டில் திருடுவதை விட இலகுவானது. |
| 39 | தடுக்கப்பட்ட வற்றைப் பார்த்தல் | ஆதமுடைய மகனுக்கு விபச்சாரத்தின் பங்கு எழுதப்பட்டுவிட்டது, சந்தேகமின்றி அவன் அதை அடைந்தே தீருவான், அவனுடைய இரண்டு கண்களின் விபச்சாரம் பார்ப்பதாகும், காதுகளின் விபச்சாரம் கேட்பதாகும், நாவின் விபச்சாரம் பேச்சாகும், கையின் விபச்சாரம் தொடுவதாகும், ஒருவனது உள்ளம் (பாவத்தை) விரும்புகின்றது, அதன் பின் அவனது அபம் அதனை உண்மைப்படுத்துகின்றது அல்லது பொய்ப்பிக்கின்றது. |
| 40 | தொட அனுமதியில்லாத ஒரு பெண்ணைத் தொடுதல் | இரும்பு ஊசியினால் ஒருவர் தனது தலையில் குத்திக் கொள்வது தனக்கு ஹலாலாகாத ஒரு பெண்ணைத் தொடுவதை விட சியந்தது. நான் பெண்களுடன் கைலாகு செய்ய மாட்டேன். |
| 41 | “ஷிகார்” முறையிலான திருமணம் | நபியவர்கள் திருமணத்தில் ஷிகார் முறையைத் தடுத்தார்கள், “ஷிகார்” என்பது ஒருவர் அடுத்தவர் அவரது மகளை தனக்குத் திருமணம் செய்து வைக்கவேண்டும் என்ற நிபந்தனையடிப்படையில் இரண்டு நிகாஹிற்கும் மஹர் இன்றி தனது மகளை அவருக்கு மணமுடித்துக் கொடுப்பதாகும். |
| 42 | ஒப்பாரி வைத்தல் | மரணித்த ஒருவருக்காக ஒப்பாரி வைத்து அழப்பட்டால் அதனால் மறுமையில் அவனுக்கு வேதனை கொடுக்கப்படும், நபியவர்கள் ஒப்பாரி வைக்கும் பெண்ணையும், அதனை செவிமடுப்பவளையும் சபித்துள்ளார்கள். |
| 43 | அல்லாஹ் அல்லாததைக் கொண்டு சத்தியம் செய்தல் | யாராகிலும் அல்லாஹ் அல்லாததைக் கொண்டு சத்தியம் செய்தால் அவன் காபிராகிவிட்டான், அல்லது இணைவைத்து விட்டான். எவருக்கேனும் சத்தியம் செய்யவேண்டியிருந்தால் அவர் அல்லாஹ்வைக் கொண்டு சத்தியம் செய்யவும், அல்லது வாய்மூடி இருக்கவும். யாராவது அமானித்தைக் கொண்டு சத்தியம் செய்தால் அவர் எங்களைச் சார்ந்தவர் அல்லர். |
| 44 | பொய்ச் சத்தியம் | யாராவது அநியாயமான முறையில் மற்ற முஸ்லிமின் சொத்தை அபகரிப்பதற்காகப் பொய்ச் சத்தியம் செய்தால் மறுமை நாளில் அவனுடன் அல்லாஹ் கோபம் அடைந்த நிலையில் இறைவனைச் சந்திப்பான். |
| 45 | வியாபாரத்தில் சத்தியம் செய்தல் | “வியாபாரத்தில் அதிகம் சத்தியம் செய்வதை உங்களுக்கு நான் எச்சரிக்கிறேன், நிச்சயமாக அது பணத்தை ஈட்டித் தரும், ஆனால் அது அழிந்துவிடும்" “சத்தியம் செய்வதன் மூலம் பொருளை விற்று விடலாம். ஆனால் அது பரகத்தை இல்லாமல் செய்துவிடும்”. |
| 46 | காபிர்களுக்கு ஒப்பாகுதல் | யார் ஒரு கூட்டத்திற்கு ஒப்பாகின்றாரோ அவர் அக்கூட்டத்தைச் சார்ந்தவராவார், மற்றவர்களுக்கு ஒப்பாகக்கூடியவன் எம்மைச் சார்ந்தவனல்ல. |
| 47 | கப்ருகள் மீது | கப்ருக்கு சுண்ணா போன்றதைப் பூசுவதையும் அதன் மீது |

| | | |
|---|---|---|
| | கட்டிடம் எழுப்புதல் | கட்டுவதையும் அதன் மேல் உட்காருவதையும் நபி(ஸல்) அவர்கள் தடுத்துள்ளார்கள். |
| 48 | சதிசெய்தலும், நம்பிக்கைத் துரோகம் செய்வதும் | அல்லாஹ் மறுமை நாளில் முழு மனித சமூகத்தையும் ஒன்று சேர்க்கும் நேரத்தில் சதி செய்த ஒவ்வொருவருக்கும் ஒரு கொடி உயர்த்தப்பட்டு, இது இன்னவர் செய்த சதி எனக் கூறப்படும். |
| 49 | கப்ரின் மீது உட்காருதல் | உங்களில் ஒருவர் கப்ருக்கு மேல் உட்காருவதை விட நெருப்பின் மீது உட்கார்ந்து அது அவனுடைய ஆடைகளையும், உடம்பையும் எரித்து விடுவது சிறந்ததாகும். |
| 50 | உள்ளே நுழையும் போது மற்றவர்கள் எழுந்து நிற்பதை விரும்புதல் | யார் தனக்கு மற்றவர்கள் எழுந்து நிற்பதை விரும்புகின்றாரோ அவர் நரகில் தனக்கொரு இடத்தை ஒதுக்கிக் கொள்ளட்டும். |
| 51 | தேவையின்றி கேட்டு வாங்குவது | ஒரு அடியான் பிச்சை கேட்கத் ஆரம்பித்தால் அல்லாஹ் அவன் மீது வறுமையின் வாசலைத் திறந்து விடுவான் எனக் கூறினார்கள். ஆதிகம் சேர்க்க வேண்டும் என்பற்காக யாராவது கேட்டு வாங்கினால் அவர் நெருப்பு கங்கியையே கேட்கின்றார். எனவே அதிகரித்துக் கொள்ளட்டும். அல்லது குறைத்துக் கொள்ளட்டும். |
| 52 | வியாபாரத்தில் மற்றவரை ஏமாற்றும் நோக்கில் ஒரு பொருளின் விலையை அதிகரித்தல் | ஒரு நகரவாசி கிராமவாசிக்கு விற்பதைத் தடுத்த நபியவர்கள் அடுத்த சகோதரன் செய்துமுடித்த வியாபாரத்திற்கு எதிராக நீங்கள் வியாபாரம் செய்ய வேண்டாம் எனவும், வாங்கும் நோக்கம் இல்லாமல் (பொருளின்) விலையை அதிகரிக்க வேண்டாம் எனவும் கூறியுள்ளார்கள். |
| 53 | காணாமற்போன பொருளை பள்ளியினுள் தேடுதல் | ஒருவர் தவறிப் போன பொருளை பள்ளியினுள் தேடுவதைக் கண்டால் “அப் பொருளை அல்லாஹ் உனக்குத் திருப்பித்தராமல் இருப்பானாக" எனக் கூறவும், ஏனெனில் பள்ளிகள் இதற்காகக் கட்டப்படவில்லை. |
| 54 | ஷைத்தானுக்கு ஏசுதல் | நீங்கள் ஷைத்தானுக்கு ஏச வேண்டாம். அவனுடைய கெடுதியை விட்டும் பாதுகாப்புத் தேடிக்கொள்ளுங்கள். ஸவ்பான் (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள்: ஒரு சந்தர்ப்பத்தில் நான் நபி (ஸல்) அவர்களுடைய வாகனத்தில் பின்னால் ஏறிச்சென்றேன். அப்போர் அவ்வாகனம் இடறியது. நான் ‘ஷைத்தான் இழிவாகட்டும்’ எனக் கூறினேன். அப்போது நபியவர்கள் கூறினார்கள்: நீர் அவ்வாறு சொல்ல வேண்டாம். நீர் அவ்வாறு சொன்னால் அவன் ஒரு வீடு போல் பெரியவனாகி என்னுடைய சக்தியைக் கொண்டு என்று சொல்கின்றான். மாறாக நீர் பிஸ்மில்லாஹ் என்று கூறுவீராக. அப்போது அவன் ஒரு ஈயைப் போன்று சிறியவனாகி விடுகின்றான். |
| 55 | காய்ச்சலுக்கு ஏசுதல் | நீர் காய்ச்சலுக்கு ஏச வேண்டாம். ஏனெனில் அது துரு நீக்கி இரும்பில் இருக்கும் கறையை நீக்குவது போன்று பாவங்களை நீக்கி விடுகின்றது. |
| 56 | பாவங்களைப் பரப்புவதும் வழிகேட்டின் பால் அழைத்தலும் | யாராவது வழிகேட்டின் பால் அழைத்தால் அவனைப் பின்பற்றுபவர்களின் பாவங்களின் அளவு அவனுக்கும் கிடைக்கும், அது (இவனுக்கு வலங்கப்படுவதால்) அவர்களது பாவங்களில் ஒன்றையும் குறைத்துவிட மாட்டாது. |
| 57 | பானங்களை அருந்தும் விடயத்தில் தடுக்கப்பட்ட அம்சங்கள் | நீர்ப் பையின் வாயில் தமது வாயை வைத்துக் குடிப்பதையும், நின்ற நிலையில் குடிப்பதையும் பானத்தில் ஊதுவதையும் நபியவர்கள் தடுத்துள்ளார்கள். |
| 58 | தங்கம் வெள்ளிப் பாத்திரங்களில் அருந்துவது | நீங்கள் தங்கம் வெள்ளிப் பாத்திரங்களில் அருந்த வேண்டாம். பட்டாடைகளை அணிய வேண்டாம். ஏனெனில் அவை உலகத்திலே காபிர்களுக்கும் மறுமையில் |

| | | |
|---|---|---|
| | | உங்களுக்குமுள்ளதாகும். |
| 59 | இடது கையால் அருந்துதல் | உங்களில் யாரும் இடது கையால் உண்ணவோ, குடிக்கவோ வேண்டாம். நிச்சயமாக ஷைத்தானே இடது கையால் உண்பவனும், குடிப்பவனுமாகும். |
| 60 | குடும்பத்தைப் பிரிந்து நடத்தல் | குடும்பத்தைப் பிரிந்து நடப்பவன் சுவர்க்கம் நுழையமாட்டான். |
| 61 | நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்து சொல்லாமலிருத்தல் | "எனது பெயர் கூறப்பட்டு என் மீது ஸலவாத் சொல்லாதவன் இழிவடைந்து போகட்டும்" "எவனிருக்கும் இடத்தில் என் பெயர் கூறப்பட்டும் என் மீது ஸலவாத் சொல்லவில்லையோ அவன் கஞ்சனாவான்". |
| 62 | நாய்களை வீடுகளில் வைத்திருத்தல் | வேட்டைக்காகவோ, அல்லது தனது பாதுகாப்பிற்காகவோ அன்றி எவரேனும் நாய்களை வைத்துக் கொண்டிருந்தால் அவரது நன்மைகளிலிருந்து நாளாந்தம் இரண்டு \கீராத்\| அளவு குறைந்து போகும். |
| 63 | மிருகங்களுக்கு நோவினை செய்தல் | "பூனையொன்றை இறக்கும் வரை அடைத்து வைத்ததன் காரணமாக ஒரு பெண் வேதனை செய்யப்பட்டு நரகில் நுழைந்து விட்டாள்" "உயிருள்ள எந்த ஒன்றையும் (குறிவைத்துப் பழகுவதற்கான) இலக்குகளாக நீங்கள் ஆக்கிக்கொள்ள வேண்டாம்." |
| 64 | ஓசை எழுப்பும் மணிகளை மிருகங்கள் மீது கட்டிவிடல் | மணி அல்லது நாயுடன் பயணம் செய்யும் கூட்டத்துடன் மலக்குமார்கள் சேரமாட்டார்கள், மணிகள் ஷைத்தானின் இசைக் கருவிகளாகும். |
| 65 | பாவிகளுக்கு அருள்கள் வழங்கப்பட்டால் | பாவம் செய்யும் ஒருவனுக்கு உலகில் அவன் விரும்பும் அருள்களை அல்லாஹ் வழங்குவதை நீங்கள் காண்பீர்களாயின் அது அவனை விட்டுப்பிடிப்பதாகும் என நபியவர்கள் சொல்லி விட்டு பின்வரும் வசனத்தை ஓதினார்கள். அவர்கள் எதை உபதேசம் செய்யப்படுகின்றதோ அதை அவர்கள் புறக்கனித்த பொழுது அவர்களுக்கு நாம் எல்லாவற்றின் வாயல்களையும் திறந்து கொடுத்தோம். அவர்களுக்கு வழங்கப்பட்டவற்றைக் கொண்டு அவர்கள் மகிழ்ச்சி அடைந்து கொண்டிருந்த போது நாம் அவர்களைத் திடீரெனப் பிடித்தோம். |
| 66 | இவ்வுலகத்தையே தனது நோக்கமாகக் கொள்ளல் | யாருடைய இலக்கு உலகத்தையே அடைய வேண்டும் என்பதாக இருக்கின்றதோ அல்லாஹ் வறுமையை அவன் கண்முன்னேயே வைத்து விடுவான். அவனுக்கு பல பிரச்சினைகளையும் கொடுத்து விடுகின்றான், (அவன் எவ்வளவு முயற்சி செய்தாலும்) இவ்வுலகிலிருந்து அவனுக்கு ஏற்பாடு செய்யப்பட்ட அளவு மாத்திரமே அவனை வந்தடையும். |

# முடிவற்ற நிரந்தரப் பயணம்

**சுவர்க்கம் அல்லது நரகத்தை நோக்கிய உனது பாதை**

:''"விசுவாசிகளே! அல்லாஹ்வை நீங்கள் பயந்து கொள்ளுங்கள், ஒவ்வொரு ஆத்மாவும் நாளை (மறுமை)க்காக தான் எதனை முன்கூட்டியே செய்து வைத்துள்ளது என்பதைப் பார்த்துக் கொள்ளட்டும்".

- **மண்ணறை:** அது மறுமை வாழ்விற்கான பயணத்தின் முதற்கட்டம். இறை மறுப்பாளர்களுக்கும், நயவஞ்சகர்களுக்கும் அது ஒரு நெருப்புக் குழியாகவும், இறைவிசுவாசிகளுக்கு பூஞ்சோலையாகவும் இருக்கும். குறித்த சில பாவங்களுக்காக கப்ரில் வேதனை செய்யப்படும் என்ற விடயம் ஹதீஸ்களில் கூறப்பட்டுள்ளது. அவற்றில் சில பின்வருமாறு:
சிறுநீர் கழித்த பின் முறையாகச் சுத்தம் செய்யாமலிருத்தல், கோள் சொல்லல், யுத்தத்தில் கைப்பற்றப்பட்ட பொருளில் மோசடி செய்தல், பொய் பேசுதல், தொழாமல் தூங்குதல், அல்குர்ஆன் விடயத்தில் பாராமுகமாக நடத்தல், விபச்சாரம், ஓரினச் சேர்க்கை, வட்டி, கடனை திருப்பிச் செலுத்தாமல் இருத்தல், இன்னும் பல.
பின் வரும் விடயங்கள் கப்ரின் வேதனையை விட்டும் ஒருவனைப் பாதுகாக்கும்: தூய எண்ணத்துடன் அல்லாஹ்விற்கு என்றே செய்யப்பட்ட நல்லமல், கப்ரின் வேதனையை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுதல், ஸூரதுல் முல்கை ஒவ்வொரு இரவும் ஓதிவருதல், இன்னும் பல..
அதன் வேதனையை விட்டும் பின்வருவோர் பாதுகாக்கப்படுவர்:
உயிர்த்தியாகி (ஷஹீத்), எல்லைப்புரக் காவலில் ஈடுபட்டுள்ள போர்வீரன், ஜும்ஆத் தினத்தன்று மரணமானவர், வயிற்று நோயினால் மரணமானவர், இன்னும் பலர்..

- **':''"ஸூர்'' எனும் ஊதுகுழலில் மறுமை நாளிற்காக ஊதப்படுதல்:** ஸூர் என்பது பிரமாண்டமான ஒரு குழலாகும், இஸ்ராபீல் எனும் வானவர் ஊதுவதற்கான இறைக் கட்டளையை எதிர்பார்த்து தற்போது அதில் வாயை வைத்தவண்ணமுள்ளார்.

- **படைப்புகள் திடுக்கிட்டு அழிந்து விடுவதற்காக ஊதுதல்:** வல்ல அல்லாஹ் பின்வருமாறு இதனைப் பற்றிக் கூறியுள்ளான் :''"ஸூர்" (குழல்) ஊதப்படும் நாளில் அல்லாஹ் (காப்பாற்ற) நாடியவர்களைத் தவிர வானங்களில் உள்ளவர்களும், பூமியில் உள்ளவர்களும் திடுக்கிட்டு விடுவார்கள். அதன் போது இப்பிரபஞ்சம் முழுவதும் அழிந்து பாழாகிவிடும். அதன்பின் 40 வருடங்கள் கழிந்து மறுமைக்காகப் படைப்புகள் எழுப்பப்படுவதற்காக ஊதுகுழல் ஊதப்படும். இதனை அல்லாஹ் இவ்வாறு கூறுகின்றான்: பிறகு அதில் மறுமுறை ஊதப்படும், அப்போது அவர்கள் (இறை கட்டளையை எதிர்)பார்த்தவர்களாக (யாவரும் உயிர் பெற்று) எழுந்து நிற்பார்கள்.

- **உயிரினங்கள் மறுமையில் எழுப்பப்படல்:** பின்பு அல்லாஹ் ஓர் மழையைப் பொழிவிப்பான், மழையினால் புற்பூண்டுகள் மேலெழுந்து நிற்பது போல் உடல்கள் உயிர்பெற்று எழுந்து நிற்கும். உயிரினங்கள் இவ்வுலகில் மரணித்து மண்ணோடு மண்ணாகிப் போனாலும் "குயிலலகு என்பு" எனும் முதுகந்தண்டு முள்ளின் கீழ்ப்பகுதி நுணியிலுள்ள சிறிய எலும்பு அழியாமல் அப்படியே இருக்கும், அந்த எலும்பிலிருந்து மீண்டும் உயிர்பெற்று மறுமையில் அவை எழும்பும். புதியதொரு படைப்பாக மறுமையில் எழும். இவ்வுயிரினங்கள் மீண்டும் மரணிக்க மாட்டாது. அவர்கள் அங்கு வெறும் கால்களுடன் நிர்வாணமாக எழுப்பப்படுவர். அங்கு மனிதர்களின் கண்களுக்கு மலக்குமார்களும் ஜின்களும் தென்படுவர், உலகில் அவர்கள் செய்த அமல்களுக்கேற்ப அவர்கள் மறுமையில் எழுப்பப்படுவர்.

**விசாரனைக்காக ஒன்று திரட்டப்படல்:** வல்ல அல்லாஹ் விசாரனைக்காக சகல படைப்பினங்களையும் ஒன்று திரட்டுவான். அவர்கள் போதை பிடித்தவர்களைப் போன்று பயந்து திடுக்கத்துடன் இருப்பார்கள். அன்றைய நாள் 50 ஆயிரம் வருடங்களின் அளவைக் கொண்ட மிக நீண்ட நாளாக இருக்கும். அதனுடன் ஒப்பிடுகையில் இவ்வுலக வாழ்வு சொற்ப நேரமாகவே தோன்றும். அங்கு சூரியன் தலைக்கு மேல் ஒரு மைல் தூரத்தில் கொண்டுவந்து வைக்கப்படும். அப்போது மனிதர்கள் அவரவர்களின் அமல்களுக்கு ஏற்ப வியர்வையில் மூழ்குவார்கள். இவ்வுலகில் பலவீனமாயிருந்தவர்களும், அவர்கள் மீது அதிகாரம் செலுத்தி பெருமையாக நடந்து கொண்டவர்களும் அன்றைய நாளில் தர்க்கித்துக் கொள்வார்கள். காபிர் அவனை வழிகெடுத்த ஷைத்தானுக்கும் இங்கு குப்ரில் அவனுக்கு துணையாயிருந்தவர்களுக்கும் எதிராக வழக்காடுவான். அவர்களுக்கிடையில் சிலர் சிலரை சபித்துக் கொள்வார்கள். தனக்குத் தானே அநீதம் இழைத்துக் கொண்டவர்கள் கைசேதப்படுவார்கள்.
மேலும், அங்கு எழுபதாயிரம் சங்கிலிகளால் நரகை இழுத்துக் கொண்டு வரப்படும். அதன் ஒவ்வொரு சங்கிலியையும் எழுபதாயிரம் மலக்குமார்கள் இழுத்து வருவார்கள். நரகத்தை காபிர் காணும்போது எதையேனும் தெண்டமாகக் கொடுத்தாவது தன்னை அதிலிருந்து விடுவித்துக் கொள்ள அல்லது தான் வெறும் மண்ணாக ஆகிவிட ஆசைப்படுவான்.
பாவிகளைப் பொருத்தமட்டில் தனது சொத்திற்கு ஸகாத் கொடுக்காமல் இருந்தவனுடைய சொத்து நெருப்புத் தகடுகளாக மாற்றப்பட்டு அதன் மூலம் அவனுக்கு சூடு போடப்படும், மேலும் இவ்வுலகில் பெருமையடித்துத் திரிந்தவர்கள் எறும்பு போன்ற சிறிய உருவத்தில் எழுப்பப்படுவார்கள், அநியாயமாக சொத்துகளைப் பறித்தெடுப்பது, மோசடி செய்து பணம் சம்பாதிப்பது, நம்பிக்கைத் துரோகம் செய்வது போன்ற பாவங்களைச் செய்தவர்களது குற்றங்கள் மக்கள் முன் நிரூபிக்கப்பட்டு மறுமையில் அவமானப்படுத்தப்படுவர்.
களவு எடுத்தவன் தான் களவெடுத்த பொருளை சுமந்துகொண்டு வருவான். அதேபோன்று இங்கு இரகசியமாகச் செய்யப்பட்டவைகள் மறுமையில் பகிரங்கமாகும், ஆனால் இறையச்சத்துடன் வாழ்ந்த நல்லடியார்களைப் பொருத்தமட்டில் மறுமை அவர்களைத் திடுக்கத்தில் ஆழ்த்த மாட்டாது, மாறாக, ளுஹர் தொழுகையொன்றைத் தொழும் நேரத்தைப் போன்று வேகமாக அது கழிந்துவிடும்.

**(அஷ்ஷபாஅதுல் உள்மா) மகத்தான விஷேட சிபாரிசு:** விசாரனைக்காகப் படைப்பினங்கள் ஒன்று சேர்க்கப்படும் நாளில் படைப்பனங்களுக்கு கஷ்டங்கள் நீங்கவும், விசாரனை இலகுவாகவும் எமது நபி (ஸல்) அவர்களுக்கு மாத்திரம் சந்தர்ப்பம் வழங்கப்படும் சிபாரிசே இதுவாகும்.

**பொதுவான சிபாரிசு:** இது எமது நபிக்கும், ஏனையோருக்கும் பொதுவானதாகும். இது விசுவாசிகளை நரகிலிருந்து வெளிப்படுத்தவும், அவர்களின் அந்தஸ்துக்களை உயர்த்தவும் செய்யப்படும் சிபாரிசாகும்.

**விசாரனை:** மனிதர்கள் தமது இறைவன் முன் அணியணியாக நிறுத்தப்படுவார்கள், அப்போது அவன் இவ்வுலகில் அவர்கள் செய்த அமல்களை எடுத்துக் காட்டி அவைகளைப் பற்றி விசாரனை செய்வான். வாழ் நாள், வாலிபப்பருவம், சொத்து, சுகம், அறிவு, இறைவனுடன் செய்து கொண்ட உடன்படிக்கை, கேள்வி, பார்வை, உள்ளம் இவை எல்லாவற்றைப் பற்றியும் விசாரிக்கப்படும்.
காபிர் (அல்லாஹ்வை நிராகரித்தவன்) முனாபிக் (குப்ரை உள்ளத்தில் மறைத்துக்கொண்டு வெளியில் முஃமினாக நடித்தவன்) ஆகிய இரு சாராரும் அவர்கள் கண்டிக்கப்படவும் அவர்களுக்கு எதிரான குற்றம் நிரூபிக்கப்படவும்

படைப்பினங்களின் முன்னிலையிலேயே விசாரிக்கப்படுவர். அவர்களுக்கு எதிராக ஏனைய மக்கள், பூமி, பகல் இரவுகள், சொத்துகள், மலக்குகள், அவர்களது உறுப்புகள் என்பன சாட்சிகளாக கொண்டு வரப்படும். அவர்களது குற்றங்கள் நிரூபிக்கப்பட்டு அவர்கள் அவற்றை ஏற்றுக் கொள்வதற்காகவே இவ்வாறு செய்யப்படும்.
இறைவிசுவாசியைப் பொருத்தமட்டில் அல்லாஹ் அவனைத் தனிமையாக வைத்து விசாரித்து அவனது பாவங்களை ஏற்கும்படி செய்வான். அதற்கு மேல் அவனுக்குத் தப்பவே முடியாது என அறிந்த அல்லாஹ் அந்த மு∴மினிடம் "உலகில் இப்பாவங்களை நான் மறைத்ததைப் போல் இன்று அவைகளை உனக்கு மன்னித்துவிட்டேன்" எனக் கூறுவான்.
மேலும் முதலாவதாக விசாரிக்கப்படுபவர்கள் முஹம்மத் (ஸல்) அவர்களின் உம்மத்தாகும். அமல்களில் முதலாவதாக விசாரிக்கப்படுவது தொழுகையாகும். முதலாவதாகத் தீர்ப்பு வழங்கப்படுவது கொலைகளைப் பற்றியாகும்.

---

▸**அமல்களின் பதிவேடுகள் வழங்கப்படுதல்:** பின்பு அமல்களின் பதிவேடுகள் காற்றில் பறந்து வர அதற்குரியவர்கள் அவற்றை எடுத்துக் கொள்வர். அது சிறிய, பெரிய அனைத்து அமல்களையும் ஒன்றுவிடாமல் பதிந்து வைத்துள்ள ஏடாகும். மு∴மின் அதனை வலது கையால் எடுப்பான், காபிரும் நயவஞ்சகனும் தமது முதுகின் பின்னால் இடது கையால் எடுப்பர்.

---

▸**அமல்களை நிறுக்கும் தராசு:** அதன்பின் படைப்பினங்களுக்குக் கூலி கொடுப்பதற்காக அவர்களின் அமல்கள் இரண்டு தட்டுகளைக் கொண்ட உண்மையான ஒரு தராசினால் நிறுக்கப்படும்.
ஷரீஆவில் காட்டப்பட்டுள்ள அதற்கு நேர்பட்ட அல்லாஹ்விற்கு என தூய எண்ணத்துடன் செய்யப்பட்ட அமல்கள் அத்தராசைக் கனப்படுத்திப் பாரமாக்கும் அந்த நல்லமல்களில் சில பின்வருமாறு: (லாஇலாஹ இல்லல்லாஹ்) என்ற கலிமா, நற்குணம், (அல்ஹம்து லில்லாஹ்) (ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹீ ஸுப்ஹானல்லாஹில் அளீம்) என்பன போன்றவற்றைக் கொண்டு அல்லாஹ்வை திக்ரு செய்தல்.
மறுமையில் மனிதர்கள் தாம் செய்த நன்மை தீமைகளுக்கு ஏற்ப கூலியைப் பெற்றுக் கொள்வார்கள்.

---

▸ **நீர்த் தடாகம் (அல் ஹவ்லுல் கவ்ஸர்):** அதன்பின் மு∴மின்கள் நபியவர்களின் நீர்த் தடாகத்திற்கு வருவார்கள். அதில் நீர் அருந்தும் ஒருவருக்கு அதன் பின் ஒரு போதும் தாகம் ஏற்படமாட்டாது. ஒவ்வொரு நபிக்கும் ஒரு தடாகம் உண்டு. முஹம்மத் நபியவர்களின் தடாகமே அவற்றில் மிகப் பெரியதாகும். அதன் நீர் பாலை விட வெண்மையாகவும், தேனைவிட இனிப்பானதாகவும், கஸ்தூரியை விட நறுமனமுள்ளதாகவும் இருக்கும். தங்கம் வெள்ளியினாலான அதன் கிண்ணங்கள் நட்சத்திரங்களின் எண்ணிக்கையளவு அதிகமானதாக இருக்கும். அத்தடாகத்தின் நீளம் ஜோர்தான் நாட்டிலுள்ள "அயலா" எனும் இடத்திலிருந்து "ஏடன்" நகர் வரையுமுள்ள தூரத்தைப் போன்றாகும். அதற்கான நீர் "கவ்ஸர்" எனும் ஆற்றிலிருந்து வந்து சேரும்.

---

▸ **உண்மையான இறைவிசுவாசிகள் சோதிக்கப்படல்:** மஹ்ஷரின் கடைசி நாளில் காபிர்கள் தாம் வணங்கிக் கொண்டிருந்த தெய்வங்களைப் பின் தொடர்ந்து செல்வார்கள். அவை அவர்களை ஆடு மாடு ஒட்டகங்களைப் போன்று கூட்டம் கூட்டமாக அப்படியே நரகில் கொண்டு போய்ச் சேர்த்து விடும். காபிர்கள் நடந்தவர்களாக அல்லது முகம் குப்புற விழுந்தவர்களாக நரகில் நுழைவார்கள்.
இறுதியில் உண்மையான இறை விசுவாசிகளும், நயவஞ்சகர்களும் மாத்திரமே எஞ்சியிருப்பார்கள். அப்பொழுது வல்ல அல்லாஹ் அவர்களிடம் வந்து "எதனை எதிர்பார்த்திருக்கின்றீர்கள்"? எனக் கேட்பான். அதற்கு அவர்கள் "எமது இறைவனை எதிர் பார்த்திருக்கின்றோம்" எனக் கூறுவார்கள். அப்பொழுது அல்லாஹ் அவனது கெண்டைக் காலை வெளிப்படுத்தியதும் அவர்கள் அவனை இனங்கண்டு

நயவஞ்சகர்களைத் தவிர ஏனையோர் சிரம் பணிந்து ஸுஜூதில் விழுவார்கள். இதனையே அல்லாஹ் அல்குர்ஆனில் பின்வருமாறு கூறுகின்றான்: "கெண்டைக் காலை விட்டு (திரை) அகற்றப்படும் நாளில் அவர்கள் சிரம் பணிவதன் பால் அழைக்கப்படுவார்கள். ஆனால் அவர்கள் சிரம்பணிய சக்தி பெறமாட்டார்கள். பின்பு அவர்கள் அவனைத் துயர்ந்து செல்வார்கள். அப்போது "ஸிராத்" எனும் பாலம் போடப்படும். அந்நேரம் அல்லாஹ் அவர்களுக்கு ஒரு வெளிச்சத்தைக் கொடுப்பான். அதில் நயவஞ்சகர்களின் வெளிச்சம் அணைந்துவிடும்."

---

**"அஸ்ஸிராத்" எனும் பாலம்:** இது நரகின் மேலால் போடப்பட்டுள்ள ஓர் பாலமாகும். உண்மை விசுவாசிகள் அதனைக் கடந்து சுவனத்திற்குச் செல்வார்கள். இப்பாலத்தைப் பற்றி நபியவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்: "அது கால்கள் வழுக்கி விழும் இடமாகும். மனிதர்களைக் கவ்விப்பிடித்து இழுப்பதற்காக அதில் "ஸஃதான்" எனும் முள் மரத்தின் முட்களைப் போன்ற இரும்புக் கொக்கிகள் தொங்கிக் கொண்டிருக்கும். அப்பாலம் தலை முடியை விட மெல்லியதும், வாளைவிடக் கூர்மையானதுமாகும்" (ஆதாரம்: முஸ்லிம்).

இதனைக் கடக்கும் போது அவரவரின் அமல்களுக்கு ஏற்ப முஃமின்களுக்கு வெளிச்சம் கொடுக்கப்படும். அதில் மிகவும் கூடிய வெளிச்சம் மலைகளைப் போன்றும், மிகவும் குறைந்தது ஒருவரது காலின் பெருவிரலின் நுணியளவும் இருக்கும்.

இதன் ஒளியில் அவரவரின் அமல்களுக்கு ஏற்ப அப்பாபலத்தைக் கடந்து செல்வார்கள். முஃமின்களில் சிலர் கண்ணிமைக்கும் நேரத்திலும், சிலர் மின்னலைப் போன்றும், சிலர் காற்றைப் போன்றும், சிலர் பறவைகள் போன்றும், இன்னும் சிலர் வேகமாகச் செல்லும் குதிரை, ஒட்டகங்கள் போன்றும் கடந்துவிடுவர்.

"சிலர் எவ்வித ஆபத்துமின்றித் தப்பிச் செல்வர். வேறு சிலர் சதைகள் கிழிக்கப்பட்டு, காயப்பட்ட நிலையில் தப்பிவிடுவார்கள். வேறு சிலரோ நரகில் அடித்து விழுத்தாட்டப்படுவார்கள்." -நபிமொழி- (ஆதாரம்: புஹாரி,முஸ்லிம்).

நயவஞ்சகர்களுக்கு எந்தொரு வெளிச்சமும் கிடைக்காது. அவர்கள் திரும்பி வருவார்கள். பின்பு அவர்களுக்கும், முஃமின்களுக்குமிடையில் திரையாக ஒரு மதில் ஏற்படுத்தப்படும். அதன்பின் அப்பாலத்தைக் கடக்க முயற்சிக்கும் அவர்கள் நரகத்தில் ஒருவர் பின் ஒருவராக விழுவார்கள்.

---

**நரகம்:** அதில் காபிர்கள் முதலில் நுழைவார்கள். அதன்பின் முஃமின்களில் பாவிகளும் அவர்களின்பின் நயவஞ்சகர்களும் நுழைவர். மனிதரில் ஒவ்வொரு 1000 த்திலும் 999 பேர் நரகம் நுழைவர். நரகத்திற்கு ஏழு வாசல்கள் உள்ளன. அதன் நெருப்பு இவ்வுலக நெருப்பை விட 70 மடங்கு அதிகம் கடுமையானதாகும். அதில் நுழையும் காபிரின் உடம்பு வேதனையை அனுபவிப்பதற்காக அது பிரமாண்டமாக மாறும். அவனது இரு தோள் புயங்களுக்குமிடையிலான தூரம் மூன்று நாட்கள் நடந்து செல்லும் தூர அளவும், அவனது பல் உஹது மலையளவுமாக இருக்கும். அவனது தோல் கனத்து தடிப்பானதாக மாறும். வேதனையை அனுபவிப்பதற்காக அது மீண்டும் மீண்டும் மாற்றப்படும்.

நரவாசிகளின் குடிப்பு குடல்களையெல்லாம் துண்டாக்கிவிடும் அளவு கடும் சூடான நீராகும். அவர்களுக்கு உணவாகக் கிடைப்பது நரகத்துக் கள்ளி மரமும், நரகவாசிகளின் உடலிலிருந்து வடியும் சீழும் ஊணமுமாயிருக்கும். நரகில் மிகக் குறைந்த வேதனையுள்ளவனின் நிலை எப்படி எனில் அவனது இரண்டு பாதங்களின் கீழும் நரக நெருப்பின் இரு தனல் கட்டிகள் வைக்கப்படும், அதன் சூட்டினால் அவனது மூளை கொதிக்கும். நரகிலே தோல்கள் பழுக்கும் வரை வேதனை கொடுக்கப்படும். மேலும், ஈயம் உருக்கி ஊற்றப்படுதல், நெருப்பின் சூட்டினால் முகம் பொசுக்கப்படுதல், நெருப்பில் இழுத்துச் செல்லப்படுதல், சங்கிலிகள், விலங்குகள் போன்றவற்றால் கட்டப்படுதல் ஆகிய வேதனைகளும் உள்ளன.

நரகம் மிகவும் ஆழமானதாகும். நரகக்குழியில் அன்று பிறந்த ஒருவனை வீசப்பட்டால் அவன் அதன் அடிப்பகுதியைச் சென்றடைவதற்கு 70 வருடங்கள் செல்லும். கற்களும், காபிர்களும் அதன் எரிகொல்லிகளாகும். அதன் காற்று சுட்டுப் பொசுக்கும் நெருப்பைப் போன்றது. அதன் நிழல் கருத்த புகையாகும். அதன் உடை நெருப்பாகும், அது அதில் வீசப்படும் அனைத்தையும் ஒன்று விடாமல் சுட்டெரித்துவிடும், கோபாவேசத்தோடு சப்தத்துடன் அது எரியும், அதன் சூட்டினால் தோல்கள் பொசுங்கிவிடுவதுடன் அதன் உஷ்ணம் எலும்புகள் வரை போய் இதயங்களையும் தொட்டுவிடும்.

▶ **சுவனத்திற்கும், நரகத்திற்கும் இடையிலுள்ள பாலம் (கன்தரா):** வேதனை முடிந்து நரகிலிருந்து வெளியேற்றப்படும் மு.்.மின்கள் சுவனத்திற்கும் நரகத்திற்கும் இடையில் ஒரு பாலத்தில் தடுத்து வைக்கப்படுவர். அவ்விடத்தில் இவ்வுலகிலே அவர்கள் மத்தியில் நடந்த அநியாயங்களுக்காகப் பழிவாங்கப்படும், அப்பாவங்களிலிருந்து அவர்கள் தூய்மையாக்கப்பட்ட பின் சுவனத்தில் நுழைய அவர்களுக்கு அனுமதி வழங்கப்படும். “முஹம்மதின் உயிர் யாரின் கைவசம் இருக்கின்றதோ அவன்மீது ஆணையாக அவர்களில் ஒருவர் இவ்வுலகில் அவரது வீட்டை அடையாளம் கண்டு செல்வதை விட மிகச் சரியாக சுவனத்தில் அவருக்கான வீட்டை அடையாலம் கண்டு சென்றடைவார்."-நபிமொழி- (ஆதாரம்: புஹாரி)

▶ **சுவர்க்கம்:** அது இறை விசுவாசிகளின் தங்குமிடம், அது தங்கம் வெள்ளியினால் அமைக்கப்பட்டது, அதன் சுவர்களின் பூச்சு கஸ்தூரியாகும், அதன் நிலத்திலுள்ள சிறு கற்கள் முத்தும் மரகதமுமாகும், அதன் மண் குங்குமமாகும், அதற்கு எட்டு வாயில்கள் உள்ளன, ஒவ்வொரு வாயிலின் அகலமும் மூன்று நாட்கள் நடக்கும் தூர அளவாகும், அப்படியிருந்தும் அதன் ஒவ்வொரு வாசலிலும் சன நெரிசலாகவே இருக்கும், அதில் வித்தியாசமான 100 அந்தஸ்துகள் (படித்தரங்கல்) உள்ளன, அவைகளில் ஒன்றிற்கும், அடுத்ததற்கும் இடையில் வானம் பூமிக்கு இடையிலுள்ள இடைவெளி வித்தியாசம் இருக்கும், சுவர்க்கங்களில் மிகவும் உயர்ந்தது “பிர்தவ்ஸ்" ஆகும், அதிலிருந்தே சுவர்க்கத்து ஆறுகள் ஊற்றெடுக்கின்றன, அதன் கூரை அல்லாஹ்வின் அர்ஷ் ஆகும்.
சுவர்க்கத்து ஆறுகள்: அவை பாலாறு, மதுவாறு, தேனாறு, (பொதுவான) நீராறு என பல வகைப்படும். அவை கிடங்குகள் இன்றி நிலத்தின் மேற்பரப்பின் மீதே ஓடிக்கொண்டிருக்கும். ஒரு மு.்.மின் அவன் நினைத்த திசைகளில் அந்த ஆறுகளைத் திருப்பி விடலாம். சுவனத்தின் உணவு நிலையானது, கைக்கு எட்டிய தூரத்தில் இருக்கும் அதனை அவன் நினைத்த விதத்தில் உண்ணலாம். அங்கு குடைந்தெடுக்கப்பட்ட ஒரே முத்திலான கூடாரம் உண்டு, அதன் அகலம் 60 மைல்கள் நடக்கும் தூரமாகும், அதன் ஒவ்வொரு மூளையிலும் மனைவிமார் இருப்பார்கள். சுவனத்தில் நுழையும் ஆண்கள் இமை முடிகள் கருமையான, அழகான, மிக இளவயது வாலிபர்களாக இருப்பர், அவர்களது உடைகளும், வாலிபமும் அழியாமல் தொடர்ந்திருக்கும். அங்கு மலம், சிறுநீர், அருவருக்கத்தக்கவை எதுவுமே கிடையாது. அவர்களது சீப்புகள் தங்கத்திலானவை. வியர்வை கஸ்தூரியாகும்.
சுவனத்துப் பெண்கள் அழகான கன்னிப் பெண்களாவர், அனைவரும் ஒரே வயதிலிருப்பர், தமது கணவன்மாருடன் அன்புடன் நடந்து கொள்வர். இந்த சுவனத்தில் முதலாவதாக நுழைபவர்கள் நபி முஹம்மத் (ஸல்) அவர்களும், ஏனைய நபிமார்களுமாகும். சுவனத்தில் மிகக்குறைந்த அளவு இடம் வழங்கப்படுபவருக்கு அவர் ஆசைப்படும் அளவைவிட 10 மடங்கு பெரிய இடம் வழங்கப்படும். சுவனவாதிகளுக்குப் பணிவிடை செய்வதற்காக என்றுமே இளம்பராயம் மாறாத சிறு பிள்ளைகள் இருப்பர், சுவனத்தில் அவர்கள் அங்குமிங்கும் ஓடித்திரிந்து நடமாடுவது அள்ளிவீசப்பட்ட முத்துக்களைக் காண்பது போலிருக்கும். சுவனத்து இன்பங்களில் மிகப் பெரியது அல்லாஹ்வின் தரிசனமும், அவனது திருப்பொருத்தமும், என்றும் நிலையாக சுவனத்தில் வாழ்வதுமாகும்.

# உள்ளடக்கம்

# வுழூச் செய்யும் முறை



வுழூ இன்றி தொழுகை நிறைவேரமாட்டாது. (தஹூர) எனும் சுத்தப்படுத்த முடியுமான பரிசுத்த நீரின் மூலம் மாத்திரமே வுழூச் செய்ய முடியும். அது (அடிப்படையில் எவ்வித மாற்றமுமடையாத கிணற்று, ஆற்று, கடல் போன்ற நீராகும).
குறிப்பு: அசுத்தமான பொருளொன்று குறைவான நீரில்படுவது கொண்டு அசுத்தமாகிவிடும். ஆனால் (சுமார் 210 லீற்றர்அளவை விட) அதிகமான நீர் அதன் நிறம் அல்லது சுவை அல்லது வாடை மாற்றமடைவது கொண்டே அசுத்தமாகும்.



(பிஸ்மி) கூறி வுழூவை ஆரம்பிக்கவேண்டும், ஒவ்வொரு முறை வுழூச் செய்யும் போதும் இரண்டு மணிக்கட்டுகளையும் கழுவுவது ஸுன்னத்தாகும். இரவில் தூங்கி எழுந்த பின் மூன்று முறை அவற்றைக் கழுவுவது முக்கிய ஸுன்னத்தாகும் .
குறிப்பு: ஒவ்வொரு உறுப்பையும் மூன்று முறைகளுக்கு மேல் கழுவுவது மக்ரூஹ் ஆகும்.



அதன் பின் ஒருமுறை வாயைக் கொப்பளிப்பது கடமையாகும். மூன்று முறை கொப்பளிப்பது மிகச் சிறந்ததாகும்.
குறிப்பு: (1)வாயினுள் நீரை அனுப்பி வெளியேற்றிவிடாமல் நீரை அலசுவது அவசியமாகும். (2)வாய்கொப்பளிக்கும்போது பல் துலக்கிக் கொள்வது (மிஸ்வாக்செய்வது) ஸுன்னத்தாகும்.



அதன் பின் ஒருமுறை நாசிக்கு நீர் செலுத்துவது கடமையாகும். மூன்று முறை செய்வது மிகச் சிறந்ததாகும்.
குறிப்பு: நாசிக்கு நீரை அனுப்பி உடனே வெளியேற்றிவிடாமல் மூச்சின் மூலம் நீரை உள்ளே இழுத்து வெளியேற்றுவது அவசியமாகும்.



அதன் பின் ஒருமுறை முகத்தைக் கழுவுவது கடமையாகும். மூன்று முறை கழுவுவது மிகச் சிறந்ததாகும். அகலத்தால் இரண்டு காதுகளுக்கும் இடைப்பட்ட பகுதியையும், நீளத்தால் தலையின் முன் பகுதியில் சாதாரணமாக சகலருக்கும முடி முளைக்கும் இடத்திலிருந்து நாடிக்குழி வரையும் உள்ள முழுப் பகுதியையும் கழுவவேண்டும்.
குறிப்பு: தாடி அடர்த்தியாக இருக்குமானால் அதனைக் குடைந்து கழுவுவது ஸுன்னத்தாகும், அது அடர்த்தியாக இல்லாவிட்டால் அதனைக் குடைந்து கழுவுவது கடமையாகும்.



அதன் பின் ஒருமுறை விரல்களின் நுணியிலிருந்து முழங்கையுட்பட்ட பகுதிவரை இரண்டு கைகளையும் கழுவுவது கடமையாகும். மூன்று முறை கழுவுவது மிகச் சிறந்ததாகும்.
குறிப்பு: இடது கரத்துக்கு முன் வலது கரத்தை (முதலில்) கழுவுவது ஸுன்னத்தாகும்.



அதன் பின் தலையின் முழுப் பகுதியையும் நீரால் தடவுவதுடன் இரு ஆள்காட்டி விரல்களின் மூலம் காதுகளின் உற்பகுதியையும், பெருவிரல்களின் மூலம் வெளிப்பகுதியையும் தடவுவது கடமையாகும். இதனை ஒருமுறை மாத்திரமே செய்யவேண்டும்..
குறிப்பு:1.முகத்தின் மேற்பகுதியிலிருந்து பிடரி வரையுள்ள தலைப்பகுதியை நீரால் தடவுவதே கடமையாகும்.
2.தலைப்பகுதிக்கு மேலதிகமாகத் தொங்கும் முடியைத் தடவுவது அவசியமாகமாட்டாது. 3.தலையில் முடி அறவே இல்லாவிட்டால் அதன் மேற்பரப்பை முழுமையாக மஸ்ஹு செய்யவேண்டும். 4. தலைமுடிக்கும் காதுக்கும் இடையிலுள்ள வெறும் தோல் பகுதியையும் மஸ்ஹு செய்வது அவசியம்.



அதன் பின் கரண்டைக்கால் உட்பட இரு கால்களையும் ஒருமுறை கழுவுவது கடமையாகும். மூன்று முறை கழுவுவது மிகச் சிறந்ததாகும்.

## முக்கிய குறிப்புகள்:

- வுழுவின் உறுப்புக்கள் நான்கு.
1. வாய்கொப்பளித்து, நாசிக்கு நீர் செலுத்தி முகம் கழுவுதல். 2. இரு கைகளையும் கழுவுதல்.
3. தலையையும், காதுகளையும் மஸ்ஹு செய்தல். 4.கரண்டைக்கால் உட்பட கால்களைக் கழுவுதல்.
(மேற்கூறப்பட்ட ஒழுங்கிலேயே உறுப்புக்களைக் கழுவுவது அவசியமாகும்.)
- தொடர்ச்சியாக உறுப்புகளைக் கழுவ வேண்டும். ஓர் உறுப்பைக் கழுவி அது காயுமளவு நீண்ட நேரம் தாமதித்து அடுத்த உறுப்பைக் கழுவக் கூடாது.
- வுழூச்செய்து முடிந்ததும் أشهد أن لا إله إلا الله وحده لاشريك له وأشهد أن محمدا عبده ورسوله என ஓதவும்.

# தொழுகையை நிறைவேற்றும் முறை



முதலில் (அல்லாஹு அக்பர) எனக்கூறி தொழுகையை ஆரம்பிக்க வேண்டும், இமாம் இத்தக்பீரையும், தொழுகையின் ஏனைய தக்பீர்களையும் ம:'.மும்களுக்குக் கேட்பதற்காக சப்தமிட்டுக் கூறுவார். ஏனையோர் இதனை மெதுவாகவே கூறுவர். ஆரம்பத் தக்பீரைக் கூற ஆரம்பிக்கும் போது விரல்களைச் சேர்த்த நிலையில் இரு கைகளையும் இரு தோள்புயங்களுக்கும் நேராக உயர்த்துவார். மேலும், இமாம் இத்தக்பீரைக் கூறிமுடிந்த பின்பே ம:'.மூமாகத் தொழுபவர் கூறுவார்.

குறிப்பு : (ளுஹர், அஸர் போன்ற) இரகசிய தொழுகை உட்பட எல்லாத் தொழுகைகளிலும் கட்டாயம் ஓத வேண்டிய ஓதல்கள் அனைத்தையும் ஒருவர் தனக்குக் கேட்கும் அளவான சப்தத்தில் ஓதுவது கட்டாயமாகும். ரகசியமாக ஓதுவதில் மிகக் குறைந்த அளவு அவருக்கு மாத்திரம் கேட்குமளவு ஓதுவதாகும்.



வலது கையினால் இடது கையின் மணிக்கட்டை அல்லது மணிக்கட்டு முல்லைப் பிடித்து, ஸுஜூது செய்யும் இடத்தைப் பார்த்தவாறு இரண்டு கைகளையும் நெஞ்சின் கீழ் பகுதியில் வைப்பார். அதன்பின் ஹதீஸ்களிலுள்ள தொழுகையின் ஆரம்பத்தில் ஓதுவதற்குரிய துஆக்களில் சிலதை ஓதுவார். உதாரணமாக: (سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ تَبَارَكَ اسْمُكَ وَتَعَالَى جَدُّكَ وَلَا إِلَهَ غَيْرُكَ) அதன் பின் அஊது, பிஸ்மி சொல்வார், மேற்கூறப்பட்டவைகளை சப்தத்தை உயர்த்தாமலேயே ஓதுவார். பின்பு ஸூரதுல் பாத்திஹாவை ஓதுவார். இமாம் சப்தமிட்டு ஓதும் ரக்அத்துகளில் ம:'.மூம் எதனையும் ஓதவேண்டிய கட்டாயம் கிடையாது. அவற்றை இமாம் பொறுப்பேற்றுக் கொள்வார். இமாம் நிலையில் மௌனமாகயிருக்கும் நேரத்திலும், இமாம் சப்தமில்லாமல் ஓதும் ரக்அத்திலும் ம:'.மூம் பாதிஹாவை ஓதிக்கொள்வது விரும்பத்தக்கது. அதையடுத்து குர்ஆனில் எதனையேனும் ஓதுவார். இமாம், ஸுப்ஹுத் தொழுகையிலும் ம:'.ரிப், இஷாவின் முதல் இரு ரக்அத்துகளிலும் சப்தமிட்டு ஓதுவார். இவை தவிர்ந்த ஏனையவைகளில் இரகசியமாக ஓதுவார்.

குறிப்பு : குர்ஆனின் ஸூராக்களை வரிசைத் தொடரின் படி ஓதுவது விரும்பத்தக்கது. மாற்றி ஓதுவது மக்ரூஹ் ஆகும், மேலும், ஒரு ஸூராவின் வசனங்களை அல்லது வசனத்தின் சொற்களை வரிசைத் தொடருக்கு மாற்றமாக மாற்றி ஓதுவது ஹராமாகும்.



பின்பு (அல்லாஹு அக்பர) எனக்கூறி இரு கைகளையும் உயர்த்தியபின் ருகூஉ செய்வார். கைவிரல்களைப் பிரித்து முழங்கால்களில் கைகளை வைத்து தனது முதுகும் தலையும் ஒரே நேராக இருக்கும் விதத்தில் ருகூஉக்குச் சென்று سبحان ربي العظيم என மும்முறை கூறுவார். இந்த ருக்னில் சேர்வது மூலம் ஒரு ரக்அத்தை அடைந்துகொள்ளலாம்.

குறிப்பு : الله أكبر என்றும் سمع الله لمن حمده என்றும் அந்தந்த இடங்களுக்குச் செல்லும்போதே கூறவேண்டும். மாறாக முன்போ, பின்போ அவற்றைக் கூறுவது கூடாது. வேண்டுமென்றே அவ்வாறு தவறிழைத்தால் தொழுகை முறிந்துவிடும்.



பின்பு தலையை உயர்த்தியவாறு (سمع الله لمن حمده) எனக் கூறி கையை உயர்த்திவிட்டு நிலையில் நின்று ربنا ولك الحمد حمدا كثيرا طيبا مباركا فيه ملء السموات وملء الأرض وملء ماشئت من شيئ بعد என ஓதுவார்.

குறிப்பு : பூரணமாக நிலைக்கு வந்த பின்பே ربنا ولك الحمد என்ற துஆவை ஓதவேண்டும். (நிலைக்கு வரும்போதே ஓதக்கூடாது.)



பின்பு (அல்லாஹு அக்பர்) எனக்கூறியவாறு ஸுஜூதுக்குச் செல்வார். அதில் கைகளை விலாவுடனோ, கால்களை வயிற்றுடனோ சேர்த்தாமலும், கைகளைத் தோல்புயத்துக்கு நேராகவும், கை விரல்களும், கால் விரல்களின் உற்பகுதியும் கிப்லாவை முன்னோக்கியதாகவும் வைக்க வேண்டும். பின்பு سبحان ربي الأعلى என மும்முறை கூற வேண்டும்.

குறிப்பு : ஏழு உறுப்புகளின் மூலம் ஸுஜூது செய்வது கடமையாகும். அவை: கால் விரல்களின் உற்பகுதி, முழங்கால்கள், உள்ளங்கைகள், நெற்றியுடன் மூக்கு. தக்க காரணமின்றி குறிப்பிட்ட உறுப்புகளில் சிலதை வேண்டுமென்றே விட்டால் தொழுகை நிறைவேறாது.

பின்பு (அல்லாஹு அக்பர) எனக்கூறியவாறு உட்காருவார். உட்காருவதில் இரு முறைகள் உள்ளன. 1) இடது பாதத்தை விரித்து அதில் அமர்ந்து வலது காலை அதன் விரல்கள் கிப்லாவை நோக்கியிருக்கும் நிலையில் நட்டி வைத்தல். 2) விரல்கள் கிப்லாவை நோக்கியுள்ள நிலையில் இரண்டு பாதங்களையும் நேராக நட்டிவைத்து குதிக்கால்களின் மீது அமர்தல். அதில் رب اغفرلي என மும்முறை ஓதவேண்டும். மேலதிகமாக وارحمني واجبرني وارفعني وارزقني وانصرني واهدني وعافني واعف عني என ஓதலாம். பின்பு முதலாவது போன்றே இரண்டாவது ஸுஜூது செய்வார். பின்பு காலின் முற்பகுதியை ஊன்றியவாறு (அல்லாஹு அக்பர்) எனக் கூறிக்கொண்டு இரண்டாம் ரக்அத்துக்குச் செல்வார். முதல் ரக்அத் போன்றே இரண்டாம் ரக்அத்தையும் தொழுவார்.

குறிப்பு : இரண்டாம் ரக்அத்துக்கு பூரணமாகச் செல்ல முன் பாத்திஹா ஸூரத்தை ஓத ஆரம்பித்தால் நேராக நிலையில் நின்ற பின் அதனை மீண்டும் ஓதவேண்டும். இல்லாவிட்டால் தொழுகை நிறைவேறாது.



இரண்டு ரக்அத்துகள் முடியும்போது முதலாவது அத்தஹிய்யாத்திற்காக இடது பாதத்தை விரித்து அதில் அமர்ந்து வலக் காலை நேராக நட்டி வைத்தவாறு உட்காருவார். இந்த அமர்வின் போது இடக்கையை இடது தொடையின் மீதும், வலக் கையை வலது தொடையின் மீதும் வைத்துக் கொள்வார், இந்நிலையில் வலது கையின் சிறு விரலையும் அதற்கு அடுத்துள்ள விரலையும் மடித்து, நடுவிரல் பெருவிரல் ஆகியவற்றின் நுனிகளைச் சேர்த்து வளையம் போன்று வைத்து ஆற்காட்டி விரலால் சைக்கினை செய்தவராக

التحيات لله والصلوات والطيبات السلام عليك أيها النبي وبركاته السلام علينا وعلى وعلى عباد الله الصالحين أشهد أن لا إله إلا الله وأشهد أن محمدا عبده ورسوله

என்ற துஆவை ஓதிவிட்டு, மூன்று அல்லது நான்கு ரக்அத்துகளுடைய தொழுகையாயின் ,ரு கைகளையும் உயர்த்தியவராக "அல்லாஹு அக்பர் எனக்கூறியவாறு எழுந்து முன்பு சொல்லப்பட்ட முறையில் எஞ்சியதைத் தொழுது முடிப்பார், ஆனால் அவர் அதில் சப்தமின்றி பாதிஹாவை மாத்திரம் ஓதுவார்.



அதன் பின் கடைசி அத்தஹிய்யாத்திற்காக (தவர்ருக்) எனும் முறையில் உட்காருவார். இதற்கு ஆதாரபூர்வமான பல வடிவங்கள் உள்ளன.

(1) இடது கால் பாதத்தை விரித்து அதனை தனது வலது கெண்டைக்காலின் கீழால் வெளிப்படுத்தி வலது காலை நட்டி வைத்து பிற்தட்டினை நிலத்தில் வைத்து அமர்தல்.

(2) இடது கால் பாதத்தை விரித்து அதனை தனது வலது கெண்டைக்காலின் கீழால் வெளிப்படுத்தி வலது காலை நட்டி வைக்காமல் நிலத்தில் விரித்து வைத்து அமர்தல்.

(3) இடது பாதத்தை விரித்து அதனை வலது கெண்டைக்காலுக்கும் தொடைக்கும் இடையால் வெளிப்படுத்தி பிற்தட்டை நிலத்தில் வைத்து அமர்தல்.

இரு அத்தஹிய்யாத்துகள் உள்ள தொழுகைகளில் இறுதி அத்தஹிய்யாத்திலே தவிர இம்முறைகளில் உட்காரமாட்டார். பின்பு முதல் அத்தஹிய்யாத்தில் التحيات لله. என ஆரம்பித்து ஓதியவற்றை ஓதியபின்

اللهم صل على محمد وعلى آل محمد كما صليت على إبراهيم وعلى آل إبراهيم إنك حميد مجيد اللهم بارك على محمد وعلى آل محمد كما باركت على إبراهيم وعلى آل إبراهيم إنك حميد مجيد .

என்று ஓதிவிட்டு أعوذ بالله من عذاب النار وعذاب القبر وفتنة المحيا والممات وفتنة المسيح الدجال போன்ற ஹதீஸ்களில் இடம்பெற்றுள்ள துஆக்களை ஓதுவது ஸுன்னத்தாகும்.




பின்பு முதலில் வலப்பக்கமாகவும் அடுத்து இடப்பக்கமாகத் தலையைத்திருப்பி السلام عليكم ورحمة الله என்று கூறுவார். ஸலாம் கொடுத்த பின் அவ்விடத்திலேயே அமர்ந்து ஹதீஸ்களில் வந்த துஆக்களையும் திக்ருகளையும் ஓதுவார்.



# அறிவு படிப்பது நடைமுறை வாழ்வில் அதனை செயல்படுத்தவே

வாழ்க்கையில் அதனை செயல் படுத்தாமல் அறிவைப் படிப்பது அல்லாஹ்வினாலும் அவனது தூதராலும் முஃமின்களாலும் கண்டிக்கப்படும் ஒரு விடயமாகும,

• இதுபற்றி வல்ல அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான் "விசுவாசிகளே , நீங்கள் செய் யாதவற்றை ஏன் கூறுகின்றீர்கள் , நீங்கள் செய்யாதவற்றை (பிறருக்கு செய்யும்படி) கூ றுவது அல்லாஹ்விடம் பெரும் வெறுப்பான செயலாகும் " .

• நபித் தோழர் அபூ ஹுரைரா ( ரலி) அவர்கள் பின்வருமாறு சொல்கின்றார்கள்" நடைமுறையில் அமுல் செய்யப்படாத அறிவு அல்லாஹ்வின் பாதையில் செலவிடப்படாத பொக்கி'த்தைப் போன்றதாகும்" .

• அல் புழைல் எனும் நல்லடியார் கூறுகிறார" ஒரு படித்த ஆலிம் தான் படித்த படி நடக் காத வரை அவர் படிக்காத பாமரனாகவே கணிக்கப்படுவார்"

• மாலிக் இப்னு தீனார் (ரலி) கூறுகிறார்கள்" சிலர் ஒரு எழுத்தையேனும் பிழைவிடாத அளவு நன்றாகப் படித்திருப்பர் , ஆனால் அவர்களின் செயல்பாடுகள் அனைத்துமே பிழையானதாக இருக்கும்"

அன்பிற்குரிய இஸ்லாமிய சகோதர சகோதரிகளே ,
வல்ல அல்லாஹ்வின் உதவியால் பயனுள்ள இச்சிறு நூலை நீங்கள் வாசித்து முடித்து விட்டீர்கள் , இனி மீதமிருப்பது இவ்வாசிப்பின் பயன்பாட்டை நீங்கள் அடைவதே , அது என்னவெனில் இந்நூலிலுள்ள விடயங்களை வாழ்க்கையில் அமுல் படுத்தி அதன் படி நீங் கள் அமல் செய்வதாகும் .

• இந்நூலில் சில குர்ஆன் ஆயத்துகளின் விளக்கத்தைப் படித்திருப்பீர்கள் , நீங்கள் படித் த அந்த இறை வசனங்களின்படி வாழ்கையில் நடந்துகொள்ள ஆர்வமாயிருந்து கொள் ளுங்கள் , ஏனெனில் நபித்தோழர்கள் இறைதூதரிடமிருந்து பத்து வசனங்களைப் பாடமிட் டால் அவற்றில் உள்ளவற்றை விளங்கி அதனை அமுல் படுத்தாமல் அடுத்த பத்து வசனங்களைப் பாடமிடமாட்டார்கள் , அதனாலேயே அவர்கள்" நாம் அறிவையும் நடைமுறை அமலையும் ஒரே நேரத்தில் படித்துக் கொண்டோம்" எனக் கூறினார்கள் , புனித இஸ்லாமும் இதனையே வலியுறுத்துகின்றது , இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள்" அதனை ஓதவேண்டிய முறைப்படி அவர்கள் அதனை ஓதுவார்கள்" என்ற இறை வசணத் திற்கு விளக்கம் சொல்லும் போது" அதனை அவர்கள் சரியாகப் பின்பற்றுவார்கள்" எனக் கூறியுள்ளார்கள் , மேலும், அல் புழைல் (ரலி) அவர்கள் இக்கருத்தை பின்வருமாறு சொன்னார்கள்" நிச்சயமாக அல் குர்ஆன் அருளப்பட்டது அது வாழ்வில் அமுல் படுத்தப் படவேயாகும் , ஆனால் , மனிதர் அதனை ஓதுவதை மாத்திரம் அமலாக ஆக்கிக் கொண் டு விட்டனர்"

• இந்நூலில் நபிகளாரின் சில சுன்னாக்களை நீங்கற் படித்திருப்பீர்கள் , அவற்றை தாமதிக் காது நடைமுறைப் படுத்துங்கள் , ஏனெனில் , இஸ்லாமிய உம்மத்தின் நல்லடியார்கள் கீழே பதியப்பட்டுள்ள நபிமொழிக்குக் கட்டுப்பட்டதாலும் அடுத்து வரும் இறை வசணத் தில் சுட்டிக்காட்டப்பட்டுள்ள அல்லாஹ்வின் தண்டனையைப் பயந்ததாலும் எதையேனும் ஒன்றைப் படித்து விட்டால் அதனை அமுல் படுத்துவதிலும் மற்றவர்களை அதன் பால் அழைப்பதிலும் போட்டியிட்டுக் கொள்வார்கள்" உங்களுக்கு எதையேனும் ஓர் கட் டளையை நான் (செய்யும்படி) ஏவினால் அதில் முடியுமானதை செய்யுங்கள் , மேலும் எதையேனும் (செய்ய வேண்டாம்) எனத் தடுத்தால் அதனைத் தவிர்த்து விட்டு விடுங்கள் "-நபிமொழி- (ஆதாரம் புஹாரி, முஸ்லிம்)"ஆகவே , (நம் தூதராகிய) அவருடைய கட் டளைக்கு மாறு செய்பவர்கள் தங்களுக்கு ஏதேனும் துன்பம் பிடித்து விடுவதையோ அல் லது துன்புருத்தும் வேதனை ஏற்படுவதையோ பயந்து கொள்ளவும்" (சூரா அந்நூர் 63)
இதற்கு முன்மாதிரியாயிருக்கும் பின் வரும்விடயங்களைக் கவனியுங்கள் ,

• "எவரேனும் ஒரு நாளைக்கு 12 ரக்அத்துகள் (சுன்னத்) தொழுதால் அவற்றிற்காக அவருக்கு சுவனத்தில் ஒரு வீடு கட்டப்படும்"

இந்த நபிமொழியை அறிவிக்கும் நபிகளாரின் மனைவி உம்மு ஹபீபா (ரலி) அவர்கள்" நபியவர்கள் இதனைச் சொன்னதைக் கேட்டதிலிருந்து நான் அவற்றை விடவேயில்லை" எனக் கூறுகின்றார்கள் .